ஹேமா ஆனந்ததீர்த்தன்



இந்தக் கதையைப் படிப்பவர்கள் சில பக்கங்களைப் படித்ததுமே இது ஒரு ஆபாசப் படைப்பு என்று முடிவு கட்டி விடக்கூடும். அப்படி முடிவு கட்டிய பிறகு ஒரு சாரார் சீ என்ற வெறுப்புடன் இதைத் தூக்கி எறிவார்கள். இன்னொரு சாரார் நன்றாக ஆற அமர உட்கார்ந்து கொண்டு, நாக்கில் ஜலம் ஊற, கிளு கிளுப்பூட்டக் கூடிய உணர்ச்சிகளின் எழுச்சிக்காக இதை அதிக ஆர்வத்துடன் படிக்கக் கூடும். எனது இந்த வேண்டுகோள் முதல் சாராருக்காகத்தான்.

தயவு செய்து அவசரப்பட்டு முடிவுகட்டி படிக்காமல் இருந்து விடாதீர்கள். இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப் பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும்கவர்ச்சி நோக்கோடு எழுதப் பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப் புணர்ச்சியோடும், கருணை

உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது. இந்தக் கதையில்வரும் சதீஷைப் போன்றவர்கள் அதிகம் பேர் இல்லாமல் இருக்கலாம். பார்வை இழந்தோர், பேச இயலாதோர், காதுகேளாதவர், கை கால்கள் விளங்காதோர் இன்னும் மற்ற உடல் ஊனமுற்றோர் போல சதீஷும் ஒருஅங்கஹீனன்தான். நமது பச்சாதாபத்துக்கும், பரிவுக்கும் உரியவன். சொல்லப்போனால் மற்ற ஊனமுற்றோரைவிட சதீஷ் அதிகமான பரிதாபத்துக்குரியவன். மற்றவர்களைப் போல அவன் தன் ஊனத்தை வெளியில் சொல்லிக் கொள்ளமுடியாது. பகிரங்கப்படுத்திக் கொள்ள முடியாது. எவ்வளவு பேர் அப்படி இருக்கிறார்கள் என்று சென்ஸஸ் எடுத்துக் கணக்குக் காட்டமுடியாது. அவனைப் போன்றவர்கள் ஒரு பத்துப் பேருக்காவது இந்தக்கதையைப் படித்து ஒரு ஆறுதல், ஒரு சமாதானம் ஏற்பட்டால் எனக்கு மகிழ்ச்சி.

ஒன்று மட்டும் சொல்லி கொள்ள விரும்புகிறேன். இதுவரையி நான் எழுதிய எந்தக் கதையிலும், நா விலும் காணாத ஒரு அலாதி மனத்திரு தியை இந்த நாவல் எனக்கு அளி துள்ளது. வாசகர்களிலும் பெரும்பாலே ருக்கு அத்தகைய திருப்தி, இதை படித்து முடித்ததும் ஏற்படும் என் நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

இனி கதையைப் படியுங்கள்.



ஜுலை—13 (திங்கட்கிழமை)

கடைசி கோப்பைப் பார்வையிட்டு, தன் உத்தரவுகளை அதில் எழுதி கையெழுத்தும் போட்டு, கோப்பைத் தூக்கி மேஜையின் வலப்புறக்கோடியில் இருந்த 'ட்ரே'யில் தூக்கி எறிந்தான் சதீஷ். அது 'ட்ரே'யில் விழாமல் அதைத் தாண்டிக் கொண்டு போய்க் கீழே விழுந்தது. ஆனால் அவன் அதைப் பொருட்படுத்தாமல் ஒரு பெருமூச்சு விட்டவாறு இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிப் பிணைத்தபடி சோம்பல் முறித்தான்.



இடுப்பொடிய வேலை. அப்படி வேலை செய்ததிலே ஒரு திருப்தி. கடமையைச் செவ்வனே செய்து விட்டதனால் மட்டும் ஏற்பட்ட திருப்தி இல்லை அது. அவ்வாறு கடும் உழைப்பு உழைக்கும் தினங்களில் அவன் அதற்கு ஈடு செய்வதுபோல வேலை முடிந்ததும் உல்லாசமாகப் பொழுது போக்குவதில் தனி உற்சாகம் காட்டுவது வழக்கம். எவ்வளவுக்கெவ்வளவு உழைப்பு கடுமையாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதன் பிறகு ஈடுபடுகின்ற கேளிக்கைகளில் மனதிற்கு மகிழ்ச்சி அதிகம் என்பது அவனது அனுபவம்.

கேளிக்கைகள் என்றால் சதீஷைப் பொறுத்த மட்டில் சிலரை போல குடி, காபரே, டிஸ்கோ என்பதெல்லாம் கிடையாது. சிகரெட் பழக்கம் கூட இல்லாதவன் அவன். எனவே அவனுடைய உல்லாசமெல்லாம் மனைவி ரேகாவை அழைத்துக் கொண்டு சினிமா, அல்லது நல்ல நாடகம் ஏதாவது இருந்தால், நாடகம் பார்க்க வேண்டியது, பிறகு நல்ல ஹோட்டல் ஒன்றுக்குப் போய் ஸ்பெஷல் டின்னர் (இரண்டு ஸ்வீட்டுகளோடு) சாப்பிட வேண்டியது, அன்று இரவு ரேகாவுடன் எவ்வளவு நேரம் கண் விழித்திருந்து எப்படியெப்படியெல்லாம் ஒருவருக்கொருவர் இன்பத்தைக் கொடுத்தும், கொண்டும் ஆனந்தத்தில் திளைக்க முடிகிறதோ திளைக்க வேண்டியது —இது தான்.

எதிரே சுவற்றில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் மணி நாலரையைக் காட்டியது.

இனிமேல் வேலை ஒன்றும் இல்லை. அலுவலக நேரம் முடிய இன்னும் பதினைந்து நிமிடங்கள் இருந்தன. அவன் விரும்பினால் இப்பொழுதே போகலாம். அவனைக் கேட்பதற்கு அந்தக் காரியாலயத்தில் யாரும் இல்லை. மற்றவர்களைக் கேட்பதற்குத்தான் அவன் இருக்கிறான். அந்த காரியாலயத்தில் நம்பர் ஒன் அவன். ஆனால் என்றைக்குமே அவன் தன்னுடைய அந்த அந்தஸ்தைப் பயன்படுத்திக் கொண்டு அவ்வாறு வேலை நேரம் முடிவதற்கு முன்பு காரியாலயத்தை விட்டுப் போனது கிடையாது. தானே அவ்வாறு செய்தால் மற்றவர்களைத் தட்டிக் கேட்கத் தனக்கு மனச்சாட்சி இடம் கொடுக்காது என்று நினைத்தான். காலையில் காரியாலயத்திற்கு வருவதிலும், மாலையில் காரியாலயத்தை விட்டுச் செல்வதிலும் நிமிடம்

## அபராதம்

மதுரை சமய நல்லூருக்கருகில் உள்ள புதுப்பட்டி என்ற கிராமத்தில் சிகரெட், பீடி எதுவும் கடைகளில் விற்கக்கூடாது. மீறி விற்பனை செய்தால் ஊர்க் கட்டுப்பாட்டை மீறியதின் பேரில் பஞ்சாயத்துக் கூடி தண்டனை வழங்கப்படும்.

—அபராஜிதன்

தவறுமல் நேரத்தைக் கடைப்பிடித்து வந்தான்.

தொலைபேசியின் ஒலி வாங்கியைக் கையில் எடுத்துக் கொண்டு பஸ்ஸரை அழுத்தினுன்.

"யெஸ் பாஸ்" என்று குரல் கொடுத்தாள் ஆபரேட்டர் மிஸ் ஸாரா தாமஸ்.

"வீட்டுக்குப் போடம்மா, ஸாரா"

"இதோ, ஒன் மினிட்"

ஒரு நிமிடத்திற்குள்ளாகவே பஸ்ஸர் ஒலித்தது.

சதீஷ் ஒலி வாங்கியை எடுத்துக் காதில் வைத்தபடியே, "எஸ்?" என்ருன்.

"பாஸ், மிஸஸ் ஆன் தி லைன்" என்று ஸாரா தெரிவித்தாள்.

"ரேகா!"

"என்னங்க?"

"என்னம்மா பண்ணிண்டிருக்கே?"

"ஊர் வம்பு"

"யாரோட?"

"யாரோடயும் இல்லே.டேப்புல ஊர்வம்பு நாடகம் போட்டுக் கேட்டுண்டிருக்கேன்"

"இன்னிக்கு ஆஃபீசுல வேலை நெட்டி வாங்கிடுத்து ரேகா"

"சரிதான். அப்ப ராத்திரி எனக்கு நெட்டி வாங்கிடும்" என்று கூறிச் சிரித்தாள் ரேகா.

"ஏய் என்ன இப்படிப் பேசறே? அங்க பக்கத்துல யாரும் இல்லியா?"

"ஊஹூம்"

"எங்கே போனுங்க எல்லாரும்?"

"அப்பா ரூம்ல படிச்சுகிட்டிருக்காரு. அம்மா எதிர் வீட்டுப் பாட்டியோட பேசிட்டு வரேன்னு போயிருக்கார்."

"பசங்க?"

"பெரியவன் இன்னும் காலேஜ்லேந்து வரல்லே. சின்னவன் ஸ்கூல்லேந்து வந்து டிபன் சாப்பிட்டுட்டு எங்கியோ வெளியே விளையாடப் போயிட்டான்."

"சரி நான் இன்னொரு அரை மணி நேரத்துல வந்துடறேன். இன்னிக்கு எதாவது பிக்சருக்குப் போவோம். டிபன் என்ன பண்ணியிருக்கா அம்மா?"

"பூரிசோளே. திரட்டுப் பால் வேற கிண்டியிருக்கு."

"பலே, பலே... ராத்திரி சாப்பாடு வெளியே எங்காவது சாப்பிட்டுக்கலாம். அம்மாகிட்ட சொல்லிடு."

"சரி வெச்சுடட்டுமா?"

"ஓ. கே."

இரண்டு முனைகளிலும் ஒலி வாங்கிகள் டக் டக்கென்று வைக்கப்பட்டன.

சதீஷ் அழைப்பு மணியை இரண்டு முறை அழுத்தினுன்.

அடுத்த நிமிடம் அவனுடைய காரியதரிசி ராஜி உள்ளே நுழைந்தாள்.

பெயர் தான் கர்னாடகமான பெயரே தவிர ராஜி முழுக்க முழுக்க 'மாடர்ன் கர்ல்'. பாப் செய்யப்பட்ட தலைமுடி. லிப்ஸ்டிக். வலது கையில் கைகடிகாரம்.இடது கை வழவழவென்று வளையல் கிளையல் ஏதுமில்லாமல் மொட்டையாக இருக்கும். நகங்களில் நகப் பூச்சு. குத்த வருவது போல நீள நீளமாக வளர்த்துக் கொண்டிருக்கும் நகங்கள். வெயில் காலமானுலும், குளிர் காலமானுலும் எப்போதும் ஸ்லீவ்லெஸ் ரவிக்கைகள் தான்.சில நாட்கள் பஞ்சாபிப் பெண்ணைப் போல சல்வார், கமீஸ், துப்பட்டா அணிந்து வருவாள். சில நாட்களில் ஜீன்ஸும், டைட் பனியனும்

சீனுவில் ஒருவருக்கு மூன்ருவது குழந்தை பிறந்தால் அவருடைய மாத வருமானத்தில் 10 சதவிகிதம் குறைக்கப்படும்.

—சௌந்தரமைந்தன்

போட்டுக் கொண்டு வருவாள். வாயில் எப்பொழுதும் சுவிங்கம் ஒன்றைப் போட்டு மென்று கொண்டே இருப்பாள். வெளியே போகும் போது கூலிங் கிளாஸ் அணிந்து கொண்டுதான் போவாள்.

ராஜிக்கு வயது முப்பது. ஐந்தரையடி உயரம் இருப்பாள். இரட்டை நாடி என்று சொல்லும்படி இல்லாவிட்டாலும் பருமனான தேகம் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் அந்தப் பருமன் அவள் அழகைக் குறைக்கும்படியாக இல்லாமல், நல்ல சதைப் பற்றோடு கூடிய ஆரோக்கியமான உடம்பு என்று சொல்லும்படிதான் அமைந்திருந்தது. ஒரு லைட் ப்ரௌன் நிறம். எப்பொழுதும் சிரித்த முகம். ராஜிக்குக் கல்யாணம் ஆகி இரண்டு பெண் குழந்தைகள் இருந்தார்கள். அவள் கணவன் அவளைத் தள்ளி வைத்து விட்டானோ அல்லது அவளே அவனை விட்டு விட்டு வந்து விட்டாளோ தெரியவில்லை. ஆகக்கூடி அவள் இப்போது கணவனோடு இல்லை. பிறந்த வீட்டில்தான் தன் இரு குழந்தைகளோடும் இருக்கிறாள்.

"என்ன ராஜி, நான் போகலாமில்லையா? ஒண்ணும் வேலையில்லியே எனக்கு?" என்று சதீஷ் கேட்டான்.

"எஸ் ஸார்.. என்றாள்" ராஜி

இது தினமும் இவர்களிடையே நடைபெறும் 'ரொடீன்' உரையாடல்.

"உட்கார் ராஜி" என்றான் சதீஷ். இன்று என்னமோ அவனுக்கு அவளோடு பேச வேண்டுமென்று தோன்றியது.

ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தவாறே ராஜி உட்கார்ந்து கொண்டாள்.

"இன்னிக்கி எங்கிட்ட ரொம்ப வேலை வாங்கிட்டே ராஜி" என்றான் சிரித்துக் கொண்டே.

"நீங்கதான் சார் அநாவசியமா 'ஸ்ட்ரெய்ன்' பண்ணிக்கிறிங்க? எல்லா வேலையையும் இன்னிக்கே முடிக்கணும்னு ஏதாவது கட்டாயமா? பாதி வேலையை நாளைக்கே தள்ளிப் போட்டா என்ன? யார் உங்களை எக்ஸ்ப்ளநேஷன் கேக்கப் போறாங்க?"

"அப்படியில்லே ராஜி. அன்னிக்கன்னிக்கு வேலையை அன்னன்னிக்கே

## போக்கிரி ராஜா



படத்தின் இயக்குனர் எஸ். பி. முத்துராமன் கூறுகிறார்.

ரஜினியின் போக்கிரி நடிப்பு அற்புதம். சண்டைக் காட்சிகளில் முற்றிலும் புதுமையான முறையில் சண்டை போட்டிருக்கிறார். சிறந்த முறையில் நடனமும் ஆடி இருக்கிறார். இவருக்கு ஈடு கொடுத்து ராதிகா காதலியாக நடித்திருக்கிறார். ராதிகாவின் சண்டை காட்சி ரசிகர்களுக்கு விருந்தாகும். ஸ்ரீதேவி அடக்கமாக நடித்திருக்கிறார். அவருடைய அழகும், ஆடை அலங்காரங்களும் அவரை மேலும் உயர்த்திக்காட்டப் போகின்றன. மறைந்துவிட்ட முத்துராமன் வில்லன் வேடம் ஏற்றிருக்கிறார். அனைவரும் விரும்புமாறு தன் வில்லத்தனத்தை செய்திருக்கிறார். பஞ்சு அருணாசலம் நகைச்சுவையோடு வசனங்கள் எழுதி உள்ளார். ஒளிப்பதிவு பாபு. பாடல்-சண்டை காட்சிகளில் தம் திறமையை முழுமையாக காட்டியிருக்கிறார். எடிட்டர் விட்டல் படத்தை தொய்வில்லாமல் தொகுத்திருக்கிறார். எம். எஸ். விஸ்வநாதனின் பாடல்கள் ரசிகர்கள் மத்தியில் பரபரப்பை ஏற்படுத்தி இருக்கிறது. கவிஞர் கண்ணதாசனின் தத்துவ-காதல் பாட்டுக்கள் என்றைக்கும் அவரை நம் நினைவில் நிலைநிறுத்தச் செய்யும். கங்கை அமரனுடைய பாடல்கள் கேட்போரை பாடுமாறு செய்யப்போகின்றன. இது ஒரு ஏ. வி. எம். தயாரிப்பு. பெரிய செட்டுகள் போடப்பட்டும் இயற்கை காட்சிகள் நிறைந்த இடங்களில் படமாக்கப்பட்டும் அதிகமான பணச்செலவில் தயாரிக்கப்பட்ட தரமான படம்.

முடிச்சுட்டா ஒரு திருப்தி. இல்லேன்னு எனக்கு ராத்திரி தூக்கம் வராது. அதுவுமில்லாம வேலையை சேர்த்து வெச்சுகிட்டா நாளைக்கு அதை நான்தானே செய்யணும்?"

"ஆமா சேர்த்து வைக்கறதுக்கு நாளைக்கு என்ன வேலை இருக்கப் போறது? நாளைக்குப்பூரா வேலையில்லாம பொழுது போகாம திண்டாடுவிங்க. இல்லேன்னு என்னைக் கூட்டி வெச்சுகிட்டு அரட்டையடிச்சு என் வேலையையும் கெடுப்பிங்க" என்று கூறி ராஜி கலகலவென்று சிரித்தாள்.

"ஐ எம் சாரி ராஜி. இன்னிக்கு நீ உண்மையைச் சொல்லிட்டே. இவ்வளவு நாளா நான் அதைப்பத்தி நினைச்சுப் பார்க்கவே இல்லே. என்னோடை பேசிண்டிருக்கிறதுல உனக்கும் இஷ்டம் இருக்கும்னு நானு நினைச்சுண்டு......"

"ஐயையோ உங்ககிட்ட ரொம்ப ஜாக்கிரதையாப் பேசணும் போலிருக்கே. உங்க கூடப் பேசறதுல எனக்கு இஷ்டமில்லேன்னு யார் சொன்னு? சும்மா விளையாட்டுக்கு ஏதாவது சொன்னு கூட அதை சீரியஸா எடுத்துண்டு... மிஸஸ் சதீஷ் எப்படித் தான் உங்களை வெச்சிண்டு சமாளிக்கிறுங்களோ?"— மறுபடியும் அந்த போதை யூட்டும் சிரிப்பு.

"ரேகாவும் இப்படியே தான் சொல்லுவா அடிக்கடி" என்று சதீஷும் சிரித்துக் கொண்டே சொன்னுன்.

"எப்படி?"

"ஆபீசுல உங்க பி. ஏ., டெலிபோன் ஆபரேட்டர், மத்தவங்கள்ளாம் எப்படித்தான் உங்களை வெச்சு சமாளிக்கருங்களோ அப்படின்னு."

"அப்படின்னு நீங்க வீட்லயும் சில சமயங்கள்ல இந்த மாதிரித்தான் வேணுமுன்னே அவங்களை சீண்டுவிங்க போலிருக்கு, இல்லே?" என்று கொஞ்சலாகக் கேட்டபடியே ராஜி மேஜையின் மீது தன் உடலைச் சாய்த்த வண்ணம் சதீஷை ஏறிட்டு நோக்கினுள்.

சதீஷின் பார்வை மேஜையின் மேல் நசுங்கியபடி, ரவிக்கையிலிருந்து வெளியே பிதுங்கிக் கொண்டிருந்த அவளது லைட் பிரௌன் நிற மார்புகளின் மீது படிந்தது. உடனே அவன் மனம் ரேகாவையும், ராஜியையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தொடங்கியது. ரேகா சகல வகைகளிலும் ராஜியைவிட அழகி தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனுல் இந்த ஒரு விஷயத்தில்-மார்பகத்தின் செழுமை, திரட்சி இவைகளில்—முதல் மார்க் ராஜிக்குத்தான் என்று அவனுக்குத் தோன்றியது.

சதீஷ் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டான். ஆனுலும் லேசாக ஒரு புன்னகை அவன் உதடுகளில் விரிவதை அவனுல் மறைக்க முடியவில்லை.

"ஏன் சிரிக்கிறீங்க?"

"ஒரு நண்பர் எனக்கு இருக்கார். விசித்திரமான மனுஷன். அவரைப் பற்றி ஞாபகம் வந்தது."

"திடீரென்று அவர் ஞாபகம் வரக்காரணம்?"

"அவர் என்ன செய்வார் தெரியுமா? ஜவுளிக் கடைக்குப்போவார். புடவைகள் எல்லாம் எடுத்துப் போடச் சொல்லிப் பார்ப்பார். அரைமணி நேரம் அலசி அலசிப் பார்த்துவிட்டு கடைசியாக ஒன்றும் திருப்தியில்லாமல் உதட்டைப் பிதுக்குவார். ஏன் ஒண்ணும் பிடிக்கல்லையா என்று கடைக்காரன் கேட்டால், மூணு புடவைகளை எடுத்துக் காட்டி இதோட பார்டர், அதோட தலைப்பு,அதோ அதனோடை உடல்-மூணும் சேர்ந்து இருந்தா நல்லா இருக்கும் என்பார். ஆர்டர் குடுத்து செஞ்சாத்தான் உண்டு என்று கூறி கடைக்காரன் சிரிப்பான்"

"அதுக்கென்ன இப்ப? அவர் ஞாபகம் எப்படி வந்தது இப்ப?" என்று நிஜமாகவே ஒன்றும் புரியாமல் கேட்டாள் ராஜி.

"சொன்னு கோபிச்சுக்க மாட்டியே?"

"இல்லே."

"உன்னையும் ரேகாவையும் பத்தி சேர்ந்தாப்பல நினைக்கறப்ப எனக்கு அப்படித்தான் தோணும். உன்னோட சில 'பாடி பார்ட்ஸ்' அவளுக்கும், அவளோட சில 'ஃபீசர்ஸ்' உனக்கும் இருந்துட்டா நீங்க ரெண்டு பேருமே அற்புதமான அழகிகளா இருப்பீங்கன்னு எனக்கு தோணறது" என்றான்.

"எந்தெந்த பார்ட்ஸ்?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

"அதை நான் சொல்லக்கூடாது. நீ ரேகாவைப் பார்த்திருக்கே. ஆம்பிளை மனசு எப்படிங்கறது உனக்குத் தெரியும். நீயே புரிஞ்சுக்கலாம்... புரியலியா?"

"புரியுது, புரியது" என்று கன்னம் சிவக்கக் கூறியபடி ராஜி மேஜையிலிருந்து நிமிர்ந்து கொண்டாள். புடவைத் தலைப்பை இழுத்து விட்டுக் கொண்டாள்.

"தாங்க்ஸ்" என்றான் சதீஷ்.

"எதுக்காக இப்ப தாங்க்ஸ்?" ஆச்சரியத்துடன் ராஜி கேட்டாள்.

"நான் சொன்னதைக் கேட்டுக் கோபிக்காம இருந்ததுக்காக?"

"நீங்க சொன்னது எனக்குக் கோபம் இல்லாட்டாலும் பொறாமையா யிருக்கு, உங்க மிஸஸ் மேலே."

"ஏன்?"

"எங்கிட்ட நீங்க 'அட்மைர்' பண்றதைக் காட்டிலும், உங்க மிஸஸ் கிட்ட நீங்க பெருமைப்பட்டுக்கற அம்சங்கள் ஜாஸ்திங்கறது எனக்கு நல்லாத் தெரியும். அதனாலேதான் பொறாமை."

"நிஜமாவே சொல்றியா அல்லது விளையாட்டுக்கா?"

"நிஜமாத்தான் சொல்றேன்."

"அப்ப இதை ரேகா கிட்ட சொல்லலாமா? சொன்னா அவளுக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும்."

"இருக்காது."

"ஏன்?"

"இந்த மாதிரி விஷயத்தை யெல்லாம் நீங்க எங்கிட்ட தங்கு தடையில்லாம பேசறதை அவங்க ரசிக்க மாட்டாங்க."

"நடந்ததை அப்படியே சொல்லுவேனா? கொஞ்சம் கூட்டி கொஞ்சம் குறைச்சுத் தானே சொல்வேன்."

"சரியான பேர்வழிதான் நீங்க"

"மைகாட். உங்ககூட பேசிகிட்டிருந்ததுல டைம் ஆனதே தெரியல்லே. மணி 4-50 ஆயிடுச்சே. அஞ்சு நிமிஷம் லேட். நான் வரட்டுமா?" என்று சதீஷ் எழுந்தான்.

"குட்நைட். ஹேப்பி ட்ரீம்ஸ்" என்று சிரித்தாள் ராஜி.

"உன்னை எங்காவது ட்ராப் பண்ணணுமா?"

"தாங்க்ஸ். வேண்டாம். நீங்க போங்க" என்றாள்.

சதீஷ் எழுந்து மேஜையைச் சுற்றி வந்து ராஜியின் கன்னத்தை லேசாக ஒரு கிள்ளு கிள்ளி, "குட்நைட் பேபி" என்று கூறி விடை பெற்றான்.

(தொடரும்)

### முத்தமழை பொழிகிறது

செவ்விந்தியர்கள் முத்தமளித்து கொள்வதில்லை.

எஸ்கிமோ மக்கள், மங்கோலியர்கள் ஆகியோருக்கு முத்தமிடவே தெரியாது.

சீனாவில் முத்தம் மிக அபூர்வம்.

ஜப்பானியர்கள் முத்தமிடுவதை அநாகரிகமாக கருதுகின்றனர்.

துருக்கியில் மனைவிமார்கள், கணவனை முத்தமிட்டு வரவேற்பார்கள். ஆனால் அவர்கள் முத்தமிடுவது தாடியில்.

### சம்மதமா?

பெங்குவின் பறவை தன் காதலனை எப்படித் தேர்ந்தெடுக்கிறது தெரியுமா? ஆண் பறவை ஒரு சின்னக் கூழாங் கல்லை எடுத்துப் பெண்ணின் காலடியில் வைக்குமாம். பெண் பெங்குவின் அதை எடுத்தால் சம்மதம் என்று அர்த்த மாம்.

—த. சத்தியநாராயணன்

"அண்ட ரெண்டும் கிடுகிடென
சுழன்று மீறி
ஆக்கரித்து இருவிழியும் பொறி பறக்க
கொண்டலடி போல் அதட்டி
உக்கர மீது
கொக்கரித்து மந்திரிமார் சூழ்ந்து
நிற்க
தண்டுடனே கதை, வாளும்,
சூலம் ஏந்தி
தக்கதொரு சேனைகளும் பரவி நிற்க
விண்டலமும், மண்டலமும் பூர்த்தி
செய்ய
வீரன் கடோர் கஜன் தான்
வருகின்றேனே"ன்னு
கர்ஜிப்பான்...

இப்படி... ஏராளமான விஷயங்கள்... ஒரு கூத்துன்னு அரசர் மகளை, மந்திரி குமாரன் நேசிப்பான்—தகராறு வரும். முடிவிலே சந்தோஷமா முடியும்— இதான் கூத்தினுடைய சாராம்சம். வடிவம் பெருத நாவலுங்க 'ஜெபசுந்தரி', 'விஜயசுந்தரி திருமணம்' கூட கூத்தா நடிப்போம்...

சித்திரையிலேருந்து ஆடி வரைக்கும் ஓய்வேயிருக்காது. வழக்கமா 'பாரதம்', 'திரௌபதி மாலையிடல்', 'அபிமன்யு சண்டை', 'கர்ணமோட்சம்', 'பதினெட்டாம் போர்' நடத்துவோம்...



ஒரு கூத்துக்கு வருமானம் 300 ரூபான்னு... அதுவே ஜாஸ்தி... கதாநாயகனுக்கு 15 ரூ., பஃபூன் 14 ரூபா வாங்குவான்... இதை நம்பியே ஏராளமான பேரு குடும்பம் நடக்கும்! அந்த காலம் மலையேறிப் போச்சு! இப்ப என்னடா செய்யறதுன்னு ஆயிடுச்சு?

பொண்ணு வேஷம்னு காரை லோகநாதன், கொசப்பாளையம் ராயர், சித்தரசூர் சின்னையன். பனமலைபேட்டை கே.பி.அருணாசலம் (கூத்து வாத்தியார்) சித்தர்சூர்சிவம், துத்திபட்டு டி. ரங்கநாதன் இவங்கெல்லாம் இந்தப் பக்கம் பிரபலமான கூத்து வாத்தியாருங்க! இப்பதான் சினிமா வந்திச்சு! காரியத்தை கெடுத்தது!

சினிமாவில ஆபாசம்! கூத்துல அப்படியில்ல... தெய்வத்தையும், காதலையும், வீரத்தையும் வளர்த்தோம்! கூத்தை காப்பாத்தலன்னு நாடு உருப்படாது... ஆமாம் சொல்லிட்டேன்.

கூத்திலேயே "அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்—பெற்றாள் தமியள்மூத் தற்று" வள்ளுவர் கருத்தை எளிமையா 'பெரிய வீட்டுல பொண்ணு பிறந்தா, கேக்காமலேயே கிழவியாகிவிடுவா'ன்பேன்! ஓஹோன்னு சிரிப்பாங்க! கடமை, கண்ணியம், கட்டுப்பாடுன்னு பேரறிஞர் அண்ணா சொன்ன மாதிரி, 'சுதி, மதி, கெதி, ஆடல், பாடல், சங்கீதம்' எல்லாம் தெரியவேணும்பேன்! இன்னொன்னும் சொல்வேன். 'படிக்கத் தெரியாதவன் பௌண்டன் பேனா மாட்டிக்கலாம்—ஆனா எழுதடான்னா இங்க் ஆயிடுச்சுன்னு சொல்லுவானும்பேன்! ஏக கைதட்டல் கிடைக்கும்...

எல்லாம் நல்லதுக்குன்னு செய்தோம்! தலைமுறையே மாறிப்போச்சே! கூத்தை யாரு காப்பாத்தறது! படிக்கத் தெரியாதவங்க வேற ஜாஸ்தி கூத்தாட வந்துட்டாங்க... இப்பநான் பாரதம் சொல்லி பொழைக்க வேண்டியதாயிடுச்சு... சினிமா, டிராமாக்கு சங்கமிருக்கு! கூத்துக்குதான் ஒண்ணுமில்லே!

வேட்டவலம் கண்ணனுக்கு 2-வது மனைவி. மூன்றரை வயதில் ஒரு பையன்— கூத்தைவிட்டு இப்போது 'நெசவுத்தொழில்' செய்தே ஜீவனம் செய்கிறார்! தெருக்கூத்தை காப்பாற்ற வேண்டியது அவசியம்! மிக அவசியம்!

—ஏ.சி. அழகப்பன்.

ஹேமா ஆனந்த்தீர்த்தன்

# ரேகா சதீஷ் ராஜி



2

காரில் வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது சதீஷின் மனம் ராஜியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது.

அ:திசயமான பெண்!

அவளிடம் என்ன வேண்டு மானாலும் கூச்சமில்லாமல் பேசலாம். தவருக எடுத்துக் கொள்ளவே மாட் டாள். அவளும் தயக்கமில்லாமல் அவ னிடம் செக்ஸ் பற்றிய விஷயங்களைக்கூட விவாதிப்பாள். அவளுடைய சொந்த விவகாரம் பற்றித்தான் இதுவரையில் அவளாகவும் சொல்லவில்லை. அவனுக வும் கேட்கவில்லை.

சில சமயங்களில் எதையாவது கடிதங்களைப்பற்றியோ, ஸ்டேட்மெண்டு களைப்பற்றியோ அவளோடு கலந்தா லோசிக்கும்போது அவனுக்குப் பக்கத் தில் வந்து நின்று கொண்டுவிடுவாள். அப்படி நிற்கும்போது, அவளது தொடை அவனது வலது தோளில் உரசும்படியாகத்தான் நிற்பாள். வேண்டு மென்றே அப்படிச் செய்கிருளா அல்லது அவனையறியாமலே அப்படி நிகழ்கிறதா என்று அவனுல் தீர்மானிக்க முடியவில்லை, மிருதுவான ஸ்பரிசமும் அவளது உடலிலிருந்து வீசும் அற்புதமான பர்ஃப்யூமின் மணமும் சேர்ந்து அந்த அனுபவம் அவனுக்கு மிகவும் சுகத்தைத் தரும்.

இதுபோன்ற சின்னச் சின்ன சுகங்களைப் பிறபெண்களிடமிருந்து அடைவது தன் மனைவி ரேகாவுக்கு துரோகம் செய்வதாகாது என்பது அவன் எண்ணம். எனவே ராஜியி[ன்] அந்த அருகாமை எவ்வளவு நே[ரம்] நீடிக்க முடியுமோ அவ்வளவுக்கு அவன் முயற்சிப்பான். ஏதாவது சந்தேகங் களையோ, விளக்கங்களையோ கேட்டுக் கொண்டே இருப்பான். சிறிது நே[ரம்] நின்ற பிறகு அவள் மேஜைமீது இரு முழங்கைகளையும் ஊன்றியபடி குனிந்து நிற்பாள். அப்படி அவள் நிற்கும்போது அவனுக்கு இன்னும் அதிக மகிழ்ச்சி ஏற்படும். ஏனென்ருல் இப்போது அவ ளது ஸீட் பிரௌன் நிறத்து வயிற்றுப் பகுதியும், அழகான தொப்புளும், ரவிக்கையின் இறுக்கத்தை எடுத்துக் காட்டும் புடைத்த மார்புப் பிரதேசமும் அவன் பார்வையில் பட்டுக் கொண்டிருக் கும். அவள் ஸ்டேட்மெண்டைப் பார்த்து ஏதோ சொல்லிக் கொண்டிருப்பாள். ஆனுல் அவன் கவனமெல்லாம் அங்கே

இல்லாமல் ராஜியின் உடலழகிலேயே லயித்திருக்கும். அதனால் அவள் சொன்னது புரியாமல், "என்ன சொன்னே?" என்று கேட்பான்.

"சரியாப் போச்சு. எங்கே, உங்க கவனமெல்லாம் வீட்டுக்குப் போயிடுச்சா!" என்று சிரித்தபடியே கேட்பாள்.

தன் கவனம் எங்கே இருந்திருக்கும் என்பது அவளுக்குத் தெரியாமலா இருந்திருக்கும் என்று வியந்து கொண்டே, "ராஜி, இந்த ஸ்டேட்மெண்டை விட அதிசயமானதும், அழகானதும் ஆன எத்தனையோ விஷயங்கள் இல்லையா இந்த உலகத்துல?" என்று கேட்பான்.

"உங்களுக்கு மூட் இல்லே இன்னிக்கு. நான் அப்புறமா வரேன்" என்று அவள் போகப் புறப்படுவாள்.

உடனே அவன், அவள் கையைப் பற்றியபடி, "இரு ராஜி, இதை முடிச்சுட்டுப் போயிடு" என்பான்.

அவள் அவனைப் பார்த்து முறுவலிப்பாள். அவன் அவள் கையைப் பிடித்தபடியே இருப்பான் சிலவிநாடிகள். அவள் வயிற்றுப் பகுதியைத் தொட வேண்டும் போல அவனுக்கு ஒரு வெறி தோன்றும். கஷ்டப்பட்டு அடக்கிக் கொள்வான். பெண்களை நம்ப முடியாது. அவர்களாக மேலே வந்து விழுவார்கள். ஆனால் நாமாக தொட்டாலோ, உராய்ந்தாலோ புருவத்தை உயர்த்தி முறைப்பார்கள். ஆகவே கையைப்பிடிப்பது, கன்னத்தில் தட்டுவது அல்லது லேசாகக் கிள்ளுவது இதற்கு மேல் அவன் துணிந்ததில்லை.

சில சமயங்களில் அவனுக்கு ராஜியின் மீது ஆத்திரம் கூட வரும்.

எத்தனை நாளைக்கு இப்படியே பேச்சு, சிரிப்பு, உரசல் என்பதோடு நிற்பாள்? ஒரு நாளாவது துணிந்து தன் விருப்பத்தை வெளியிடமாட்டாளோ? கணவனை விட்டுத் தனியாக வாழ்பவள் தானே? ஆண்சுகம் இல்லாமல் இப்படியே எத்தனை காலம் ஓட்டுவாள்?

என்றெல்லாம் குமுறுவான், தனக்குள்ளாகவே.

ஆனால் உடனே சமாதானம் செய்து கொள்வான்.

சே, நான் நினைப்பது தவறு. அவளுக்கு அந்த மாதிரியான எண்ணமே இருக்காது. களங்கமில்லாமல் என்னோடு நெருங்கிப் பழகுகிறாள். என் உள்ளமும் நிர்மலமானது என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். அப்படியில்லை என்பது அவளுக்குத் தெரிந்து விட்டால், உடனே ஒதுங்கி விடுவாள். கணவனை விட்டுப்பிரிந்திருப்பதனாலேயே கண்ணில் பட்ட ஆணின் பின்னாலெல்லாம் ஓடவேண்டும் என்று ஏதாவது கட்டாயமா என்ன?

என்று நினைத்துக் கொள்வான்.

மறு நிமிடமே வேறு மாதிரி யோசனைகள் தோன்றும்.

அப்படியே அவளுக்கு என் மீது நாட்டம் இருந்தாலும் பெண்ணான அவள் எப்படி முதலடி எடுத்து வைப்பாள்? ஆணான நான்தான் 'இனிஷியேடிவ்' எடுக்க வேண்டும். ஆனால் எனக்கும் ராஜியை முழுவதுமாக அடைய வேண்டும் என்கிற விருப்பம் இல்லையே? ரேகாவுக்கு துரோகம் செய்ய என்னால் முடியாதே? நான் விரும்புவதெல்லாம் ராஜியோடு இன்னும் சுதந்திரமாக விளையாட வேண்டும் என்பதுதான்.

இன்னும் சுதந்திரமாக என்றால் என்ன லிமிட்? எங்கே நிறுத்த வேண்டும்? அணைத்து முத்தமிட்டால் போதுமா? அந்தக் கட்டம் வந்து விட்டால், அத்துடன் நிறுத்த முடியுமா?

சதீஷ் வாய் விட்டுச் சிரித்தான். தன் எண்ணங்கள் தறி கெட்டு ஓடுவதாக அவனுக்குத் தோன்றியது.

இதற்கு ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

அதற்குள்ளாக தான் தன் வீட்டு வாசலுக்கு வந்து விட்டதை உணர்ந்ததும் காரை நிறுத்தி விட்டு, இறங்கி வாசற்படிகளை அணுகினான்.

வாசலிலிருந்த அழைப்பு மணியை அழுத்தவே தேவை இல்லாமல் ரேகா வந்து கதவைத் திறந்தாள். கார் வந்த சத்தத்தைக் கேட்டு வந்திருக்கிறாள்.

"எண்ணெய் தேய்ச்சுக் குளிச்சியா?" என்று மனைவியைக் கேட்டபடியே சதீஷ் உள்ளே நுழைந்தான்.

எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் நாட்களில் எண்ணெய் தேய்த்துக் கொ...

வதற்கு முன்பாகக் காதுகளிலிருந்தும் மூக்கிலிருந்தும் கழற்றிவைக்கும் வைரத் தோடுகள், வைரமூக்குத்தி இவைகளை சாயங்காலம் விளக்கேற்றுவதற்கு முன்னுல்தான் மறுபடியும் போட்டுக்கொள்வது அவள் வழக்கம். அவள் அவ்வாறு காது, மூக்கு இவைகளில் ஒன்றும் இல்லாமலும், சீயக்காய் போட்டு நன்கு எண்ணெப் பசை போகத் தேய்த்துவிடப்பட்ட கூந்தல் பொச பொசவென்று கருமை நிறம் சிறிது குறைந்து உயர்ந்து நிற்கவும் தோற்றம் அளிப்பது சதீஷுக்கு ரொம்பவும் பிடிக்கும். அதற்குக் காரணம் வேறென்றுமில்லை. அது ஒரு அபூர்வமான தோற்றம் என்பதுதான்.

"ஆமா. பதினைஞ்சு நாளாச்சு, எண்ணெ தேய்ச்சிண்டு. கண்ணெல்லாம் ஒரே எரிச்சலாயிருந்தது. தேச்சிண்டேன்" என்று அவனுக்கு பதில் கூறிக் கொண்டே கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு அவன் பின்னுலேயே வந்தாள்.

இருவரும் அவர்களுடைய படுக்கையறைக்குள் நுழைந்தனர்.

"வேலை இடுப்பொடிச்சுடுத்து ரேகா" என்று சொல்லியபடி கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டு முதலில் பூட்சுகளைக் கழற்றத் தொடங்கினுன்.

"அதான் ஃபோன்லியே சொன்னிங்களே? இந்த மாதிரி இடுப்பொடிய வேலை இருக்கறது உங்க ஆபீசுலெ ரொம்ப அதிசயம் இல்லையா?"

"ஆமா. ஆனு இப்ப இப்ப அடிக்கடி இந்த மாதிரி ஹெவி வொர்க் வர்றது ஜாஸ்தியாயிடுத்து... அதிருக்கட்டும். நீ என்ன இப்படியே ஒண்ணும் ரெடி பண்ணிக்காம நின்னுண்டிருக்கே? வெளியே போகணும்னு சொன்னேனே?" என்று கேட்கும்போது சட்டை, பனியன், பாண்ட் எல்லாவற்றையும் அவிழ்த்து விட்டு வெறும் ஜட்டியோடு நின்ருன்.

"என்ன அவசரம்? இப்பத்தானே மணி அஞ்சேகால் ஆறது. நான் பத்து நிமிஷத்துல ரெடியாயிடுவேன். உங்களுக்கு டிபன் கொண்டு வரட்டுமா?"

"ஊம்."

"நீங்க டிபன் சாப்பிட்டு முடிக்கறதுக்குள்ளே நான் ரெடியாயிடுவேன்."

"என் லுங்கி எங்கே?"

"இங்கதான் எங்கியாவது இருக்

நகர்த்தி அவனது லுங்கியைத் தேடலானுள்.

அவள் அப்படித் தேடிக் கொண்டிருக்கும் போது சதீஷ் அவள் எதிர்பாராதபடி பின்னுலிருந்து வந்து அவளைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

"ஐயோ ராமா. விடுங்கோ. இப்ப என்ன வந்தது? என்னமோ பத்துநாளா பிரிஞ்சிருந்தா மாதிரி" என்று கொஞ்சலாக சிணுங்கினுள் ரேகா.

"இந்த அப்பியரன்சுலே உன்னை பாத்து பதினைஞ்சு நாளாச்சே. இப்ப நீ போய் மூஞ்சிய அலம்பிண்டு தோடு, மூக்குத்தியெல்லாம் போட்டுண்டு வந்துட்டியின்னு நீ வேற ரேகா ஆயிடுவே. அதனுலே தான். ஐ டோன்ட் வான்ட் டு லூஸ் திஸ் ரேகா" என்றுகூறி அவள் புறங்கழுத்திலும், கன்னத்திலும் தன் உதடுகளைப் பதித்தான்.



"உங்க டேஸ்டே அலாதி" என்று சிரித்தாள் ரேகா.

"வெரைட்டி இஸ் தி ஸ்பைஸ் ஆஃப் லைஃப். வெரைட்டிக்காக பல பொண்களைத் தேடிண்டு போகணும். கறது இல்லே. ஒரே பொண்கிட்டயே



எவ்வளவோ வெரைட்டி இருக்கு. நமக்கு இமேஜினேஷன் இருக்கணும் அவ்வளவு தான்." என்று சதீஷ் அவளைத் தன் பக்கமாகத் திருப்பி அவளது மற்றொரு கன்னத்திலும் தன் உதடுகளை வைத்து உரசினான்.

"சரி போறும். பாக்கியை ராத்திரிக்கு வெச்சுக்குங்கோ" என்று ரேகா தன்னை விடுவித்துக் கொண்டாள்.

சதீஷைச் சில விநாடிகள் பார்த்தாள். குறிப்பாக அவன் ஜட்டியணிந்திருந்த உடல் பகுதியைப் பார்த்து முறுவலித்தாள்.

"ஏன் சிரிக்கறே?" என்று கேட்டு சதீஷ் குனிந்து பார்த்துக் கொண்டான்.

"ஒண்ணுமில்லே" என்று கூறி மேலும் சிரித்தாள்.

"சொல்றியா இல்லியா" என்று மேலும் அவளை நெருங்கினான்.

"சொல்றேன். சொல்றேன். மறுபடியும் ஆரம்பிச்சுடாதிங்கோ" என்று தன் இரண்டு கைகளையும் மார்புவரை உயர்த்தி கேடயமாக்கி, தன்னை அவனிடமிருந்து காத்துக் கொள்பவள் போல அபிநயித்தாள்.

"சொல்லு அப்போ."

"இன்னமே நீங்க இந்த ஜட்டி போட்டுக்கக் கூடாது. சாதாரண முழங்கால் வரைக்கும் வர்ற, மல் அண்டர்வேர் போட்டுக்கணும்."

"ஏன் இதுக்கென்ன!"

"வேண்டாம். நாற்பது வயசுக்கப்புறம் ஒரு மனுஷனாலே சில காரியங்கள் செய்யமுடியாதுன்னு சாவி எழுதியிருந்தார். அதுல ஒண்ணு டைட்ஸ் போட்டுக்க முடியாதுங்கறது. உங்களுக்கு நாற்பத்திரண்டாயிடுத்து, இன்னமே இது வேண்டாம்" என்று சிரித்தாள்.

சதீஷும் சிரித்தபடியே லுங்கி அணிந்து கொண்டு, "சரி சீக்கிரம் டிபன் கொண்டு வா" என்றான்.

ரேகா அந்த அறையைவிட்டு அகன்றதும் சதீஷ் இரண்டு மூன்று தலையணைகளை ஒன்றன் மீது ஒன்றாக வைத்து அதன் மீது சாய்ந்தபடி கால்களை நீட்டிப் படுத்துக் கொண்டான். கைகளைத் தூக்கித் தலைக்கு மேலே ஒன்றோடு ஒன்றைப் பின்ன வைத்துக் கொண்டான்.

தனக்கு வயது நாற்பத்திரண்டு என்பதை ரேகா ஞாபகப் படுத்தி விட்டாள்.

அவள் தன்னைவிட ஏழு வயது சின்னவள். முப்பத்தைந்து வயதுப் பெண். முப்பத்து ஐந்து வயதானவளைப் பெண் என்று சொல்லலாமா? பொருத்தமாக இல்லை. "பொம்பளை" என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் "பொம்பளை" என்பது இலக்கண சுத்தமாக இல்லையே? பெண்பிள்ளை என்று அதை இலக்கண சுத்தமாகச் சொன்னால் ஏதோ நாலாவது வகுப்புப் படிக்கும் சிறுமியைப்போல் தான் தோன்றுகிறது. ஸ்திரீ என்று தமிழாக இல்லை. யுவதியும் பொருந்தாது. எப்படியோ போகட்டும். வார்த்தைகளைப் பற்றிய ஆராய்ச்சி எதற்காக?

முப்பத்தைந்து வயதானாலும், பதினெட்டு வயதிலும், பதினாறு வயதிலும் இரண்டு பையன்களைப் பெற்றவளானாலும், ரேகா தோற்றத்தில் இருபத்தேழு, இருபத்தெட்டு வயதுப் பெண் போலத்தான் இருக்கிறாள்.

பாபு (அவர்களது இரண்டாவது பையன்) பிறந்த பிறகு அவர்களுக்கு வேறு குழந்தை இல்லை. அதற்குக் காரணம் பாபு அவன் தாயின் வயிற்றில் இருக்கும் போதே, சதீஷ் குடும்பக்கட்டுப்பாடு பிரச்சாரத்தால் இழுக்கப்பட்டு அறுவை சிகிச்சை செய்து கொண்டு விட்டதுதான். இல்லாவிட்டால் இந் நேரத்திற்கு அவர்களுக்கு எவ்வளவு குழந்தைகள் இருந்திருக்குமோ? ஒரு ஏழெட்டுக்குக் குறைவிருந்திருக்காது. ஏனென்றால் அவர்கள் இரண்டு பேருடைய குடும்பங்களிலும் அப்படித்தான் ராசி. சதீஷுடன் கூடப் பிறந்தவர்கள் எட்டுபேர். ரேகாவுக்கு சகோதர, சகோதரிகள் ஏழுபேர்.

ரேகாவின் இளமைத் தோற்றத்திற்கு சதீஷின் இந்த அறுவைச்சிகிச்சைதான் காரணம் என்பது சதீஷுக்கு அந்த ஆபரேஷனைச் செய்த அவர்கள் குடும்ப டாக்டரின் அபிப்ராயம்.

அந்த டாக்டரின் பெயர் குடும்ப ராவ். அவர் அடிக்கடி சொல்லுகிற வார்த்தைகள் அவனுக்கு மனப்பாடம் ஆகி விட்டிருந்தன.

"சதீஷ் கங்க்ராட்ஸ் மை டியர் யங்மேன். ரேகா எப்படி யூத்ஃபுல்லா, ஹெல்தியா இருக்கா பாத்தியா? இதுக்குக்காரணம், அவ ரெண்டுக்கு மேல குழந்தை பெத்துக்காதது ஒண்ணு. இன்னொண்ணு......" என்று தயங்கு

வார்.

"சொல்லுங்க டாக்டர், ஏன் தயங்கறிங்க?"

"இன்னெண்ணு முழுத் திருப்தி யான தாம்பத்ய வாழ்க்கை — ஐ மீன் ஃபுல்லி ஸாடிஸ் ஃபைட் ஸெக்ஸுவல் லைஃப்."

சதீஷ் அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் ஒரு அசட்டுச் சிரிப்பு சிரிப் பான்.

"ரியலி ஐ எம் நாட் ஜோக்கிங். அப்படி முழுத் திருப்திக்குக் காரணம், நீ 'வஸக்டமி' ஆபரேஷன் செஞ்சுண்டது தான்."

"அப்படியா சொல்றிங்க? அந்த ஆபரேஷன் செஞ்சுக்காம இருந்திருந்தா எங்க தாம்பத்ய உறவுல இப்ப இருக்கற திருப்தி இருந்திருக்காதா?"

"டெஃபனிட்டா இருந்திருக் காது. ஏன்னு கேக்கறியா? இப்ப நீங்க அதுல ஈடுபடறப்ப கர்ப்பம் நின்னுடுமோங்கற பயம் கொஞ்சம் கூட இல்லாம, தைரியமா, நிம்மதியா, முழுமனசோட கலந்துக் கறிங்க. அதனுல மனசுல எந்த விதமான இன்ஹிபிஷனும் இல்லெ. ஸோ, எஞ் ஜாய்மெண்ட் இஸ் ஃபுல் அண்ட் பர்ஃபக்ட்." என்று விவரிப்பார்.

அறுவை சிகிச்சை செய்து கொள்வது என்று தீர்மானித்த பிறகும் கூட சதீஷுக்கும் ரேகாவுக்கும் ஒருபயம் இருக்கத்தான் இருந்தது. அது அறுவைச் சிகிச்சையின் போது ஏதாவது தவறு நடந்து அவனுடைய ஆண்மைச் சக்தி போய் விடுமோ என்பது தான்.

அவர்களுடைய அந்த பயத் தைப் போக்க குடும்பராவ் மிகவும் பிர யாசை எடுத்துக் கொண்டு அவனுக்கு க்ஷேயங்களை விளக்கி நம்பிக்கையை ஊட்ட வேண்டியதாயிற்று.

சிகிச்சை நடந்து ஒரு வருஷம் வரையில் அந்த பயம் அடிக்கடி தோன்றிக் கொண்டே இருந்தது. ஆனல் அப்படி பயப்படுவதற்கு ஏதும் ஆதாரம் இல்லை என்று உடனுக்குடன் நிருபணம் ஆகிக் கொண்டிருந்ததால் நாளடைவில் அறவே அந்த அச்சம் முழுவதுமாக மறைந்து விட்டது.

ரேகாவின் இளமைத் தோற்றத் திற்கும், ஆரோக்கியத்திற்கும்... தான் அவளுக்கு அளித்து வரும் உடலின்பமே காரணம் என்பதை டாக்டர் அவ்வாறு அடித்துச் சொல்லும் போது சதீஷுக்கு மிகவும் பெருமையாகவும், கர்வமாகவும் இருக்கும்.

கதவைத் திறந்து கொண்டு ரேகா கையில் பலகாரத்தட்டுடன் உள்ளே நுழைந்ததும் சதீஷ் தன்னு டைய இன்ப நினைவுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு கொஞ்சம் தன்னை நிமிர்த்திக்கொண்டு உட்கார்ந்தான்.

(தொடரும்)



"அவரு நாடகத்திலே நடிச்சே... அந்த வீட்டைக் கட்டினுர்!"

"அவ்வளவு 'காசா' கிடைச் சுது?"

"நீங்க வேற... அவ்வளவு 'கல்'லு கிடைச்சுது?"



"நேத்து நாடகத்துல நான் கர்ணனுக நடிச்சு பணத்தை வாரிக் கொடுத்தது உண்மை தான்...... அதுக்குனு இப்ப வந்து திடீர்னு பத்து ரூபாய் கடன் கேட்டால் எப்படி...?"

! ! ! ! !

—வி.பார்த்தசாரதி



**''தாயில்லாமல் நானில்லை''**

**தாய்: 1 சேய்: 34**

## ஆசிரியர் ஒதுக்கீ



**ஊ**ரிலிருந்து வந்தேன். அந்தப் பெண்வடிவமெடுத்த பெரும் புயல் எனக்காக காத்துக் கொண்டிந்தது. நாடு நகரங்களை அழிக்காத நல்ல புயல் இது. ''தேன் முள்ளுகள்'' என்ற அந்த அம்மாளின் கவிதைப் புத்தகம் ஏற்கனவே நான் பார்த்ததுதான். ரோகிணி என்று பெயர் போடப்பட்டிருந்தது. ஆண் தான் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். எல்லோருக்கும் புடவைக்குள் ஒளிந்து கொண்டால்தானே எழுத வருகிறது. எனக்கும்கூட இப்போதுதான் தெரிகிறது இது. பகலில் தெரிகிற பாவை நட்சத்திரம் என்று. இவர்கள் அடிக்கடி அருந்ததியை காட்டிக் கொண்டிருந்தால், சூடுபோடுவதற்காக பூமிக்கு விரைந்து வந்திருக்கிற ரோகிணி இது!

மகாகவி பாரதியை இவர்கள் மலையாளத்தில் பண்ணியிருக்கிறுர்கள். இவர்களைப்பற்றி 'தமிழில் ஒரு கமலா தாஸ்' என்று ஒருவர் எழுதியிருக்கிறுர். என்னைக் கேட்காவிட்டாலும் 'கமலா தாஸ் ஒரு மலையாள ரோகிணி' என்றுதான் சொல்வேன். வேலிகள் இல்லாத வெளிச்ச உலகம் இவர் உலகம். போலித்தனங்களை பொசுக்குகிற அக்னிப் பறவை இவர்.

முற்போக்கு என்று பேசுகிற பலருக்கு மூக்கு மாத்திரம்தான் முற்போக்காக இருக்கிறது. மானிட விடுதலை என்பார்கள். மழை நாளில் வெள்ளம் புரண்டு குடிசைகள் நொறுங்கி அழுக்குத் தேமல்களாக ஊர்வலம் போகும். இந்த மானிட கரிச்சான் குஞ்சுகள் அந்தப் பக்கமே வரமாட்டார்கள். இவர்கள் ஈரமில்லாதவர்கள். இங்கே ஒரு கவிதாயினி, ஈரத்தோடு இடது சாரித்தனம் பேசுகிறுர். நீலம் பூத்த இவரது வார்த்தைகளிலிருந்து சிவப்பு சிந்திக் கொண்டிருக்கிறது. இருந்தும் இவர் அம்மனை நம்புகிறுர். எங்கள் பாரதிக்கு இவளே பெண் வடிவம்! இவரது கவிதைகளை பத்திரப்படுத்தாத வீடுகள் அஸ்தி வாரத்தில் ஆட்டம் காணுகிற பஞ்சு மிட்டாய்கள். தேன் முள்ளுகளை வாசித்து விடாதீர்கள். அறிவு வந்து விட போகிறது; வேகம் வந்துவிடப்போகிற



வெகு காலத்திற்கு முன்ன இங்கிலாந்தில் இந்தியர்களும், நாய்களு இனி வரக்கூடாது என்று உணவு விடுதிகளுக்கு முன்பாக பலகை தொங்குமாம். உள்ளாட்சித் தேர்தலில் அரிஜனங்களுக்கும் பெண்களுக்கும் இடம் ஒதுக்கி உத்தரவு வந்ததும் மேலே கண்ட வாசகம் தான் வந்து உறுத்திற்று. இன்னமும் பெண்கள் நமது இரக்கத்திற்குரியவர்கள் என்ற நிலையிலே தான் இருக்கிறுர்கள். பெண்கள் மூன்று நாள் தீண்டப்படாதவர்கள். அரிஜனங்கள் எப்போதும் தீண்டப்படாதவர்கள். மூன்று நாள் கழிந்தால் முழுக்காட்டி பெண்களை சேர்த்துக்கொள்கிறோம். நாளைக்கு மூன்று தரம் குளித்தாலும் அரிஜனனைச் சேர்த்துக் கொள்ள மாட்டோம். இதுதான் நமது சமூக நீதி. அரிஜனங்களுக்கு இடம் ஒதுக்குவதில் புரட்சித்தலைவர் ஆப்ரஹாம் லிங்கன் மாதிரி நடந்து கொண்டிருக்கிறுர். பெண்களுக்கு ஒதுக்கியது தான் நிரம்பப் களுக்குப் பிடிக்கவில்லை. பொழுது விடி தால் அவர்கள் ஆட்சி முடிந்து போகிறது. பாரத பிரதமராக பெண்ணை ஏற்றுக் கொண்டார்கள்.

பஞ்சாயத்துத் தலைவர்கள் பெண்களை ஏற்றுக்கொள்ள மறுக்கிறுர்கள். இது மூர்க்கத்தனமான முதலாளித்துவம். இது எகிறிக் கொண்டு திரிகிற ஏகபோகம். சிலர் வழக்கு மன்றத்திற்குப் போகலாம். புரட்சித்தலைவர் செய்த இந்த புனிதப்பணிக்காக வரலாறு அவரை வாழ்த்தும்.

---

கே. ரவீந்திரன் அவர்களால் பேரறிஞர் அண்ணு அறக்கட்டளை அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. முகவரி: 34, நெல்சன் மாணிக்கம் சாலை, சென்னை-600 029.

# ரேகா சதீஷ் ராஜ்

3



## ஹேமா ஆனந்ததீர்த்தன்

ரேகா அவன் தொடைகளின் மீது ஒரு டவலைப் போர்த்தி அதன் மீது பலகாரத் தட்டை வைத்தாள்.

ஒரு சின்ன கிண்ணம் நிறைய திரட்டுப் பால். இன்னொரு கிண்ணத்தில் சோளே. மூன்று பூரிகள். இரண்டு ஸ்பூன்கள்.

"நீ சாப்பிட்டாச்சா?" என்று கேட்டபடியே ஒரு ஸ்பூனை எடுத்து, திரட்டுப் பால் கிண்ணத்தில் குத்தி, ஸ்பூன் நிறைய திரட்டுப் பாலை வழித்து எடுத்து வாயில் போட்டுக்கொண்டான்.

"நான் மூணு மணிக்கே சாப்பிட்டாச்சு" என்றாள் ரேகா.

"திரட்டுப் பால் ஃபஸ்ட் கிளாஸா இருக்கே. அப்படியே நாக்குலெ ஒட்டிக்கிறது. நீயும் கொஞ்சம் சாப்பிடேன் என்றேடை" என்று ஸ்பூனை அவள் வாயருகில் கொண்டு போனான். அதில் நிறைய திரட்டுப் பால் இருந்தது.

"நீங்க சாப்பிடுங்க. நான் நிறைய சாப்பிட்டாச்சு" என்றாள்.

"பரவாயில்லே சாப்பிடு" என்று வற்புறுத்தி அவளைச் சாப்பிட வைத்தான்.

"எங்கே போலாம்?" என்று கேட்டான் சதீஷ், வாயில் பூரித் துண்டையும் சோளேயையும் இட்டு சுவைத்தபடி.

"இங்லீஷா, ஹிந்தியா, தமிழா?"

"எது வேணு, உன் இஷ்டம்."

"சக்ரா போலாமா? ரொம்ப நல்லா இருக்காம்." என்றாள் ரேகா.

"எங்கே அது?"

"ஸ்டார்ல. ஸ்மிதா பட்டீல் ரொம்ப நன்னு ஆக்ட் பண்ணிருக்காளாம்."

"A பிலிமா!"

"ஆமா."

"அப்ப போவோம்." என்றான் சதீஷ் சிரித்தபடி.

"A பில்முங்குக்கறதுக்காக வராதிங்கோ. ஸ்மிதா பட்டீலோட ஆக்டிங்குக்காக வாங்கோ. ஊர்வசி பட்டம் வாங்கின ஆக்ட்ரெஸ். சுகாசினிக்கு கொடுக்காம இவளுக்குக் கொடுத்துட்டான்னு பேப்பர்லயெல்லாம் 'கான்ட்ரவர்சி' அடிபட்டதே?"

"தெரியும், தெரியும். எந்தப் பத்திரிகையிலெ பாத்தியின்னாலும் தொடைக்கு மேல புடவையை வழிச் சுண்டு, புடவைத் தலைப்பு தோள்லேருந்து நழுவி விழுந்துண்டு, சொம்புல தண்ணி மொண்டு மொண்டு குளிச்சிண்டிருக்காப்பலெ படம் போட்டிருக்கானே, அது தானே?"

"அதே தான். அப்படி படம் எங்கே இருந்தாலும் உங்க கண்ணுலேந்து தப்பாதே?" என்று ரேகா சிரித்தாள்'

"என்னைச் சொல்லாதே. பத்திரிக்கைக்காரங்களுக்கு அந்த பிலிம்ல வேற ஸ்டில்லே கிடைக்கல்லியா? சொல்லி வெச்சாப்பலெ எல்லாரும் ஏன் அந்த ஸ்டில்லையே போடறான்? வேற யாரோ ஒருத்தன் காராபூந்தியா அவன் பேரென்ன?"

"குல்பூஷண் கர்பந்தா"

"அந்த கர்பந்தாவோட ஸ்டில்லெப் போடறது தானே?"

"பத்திரிகைக்காரரும் எல்லாரும் ஆம்பளைங்க தானே? அதுதான் அப்படி."

"சரி நீ போ. கெட் ரெடி க்விக்" என்று கூறி இடது கையால் அவள் தொடையில் ஒரு தட்டுத் தட்டினான்.

ரேகா வெளியேறினாள். அவள் போகும் போது அவளது பின்புற அசைவுகள் அவனுக்கு மீண்டும் ராஜியை நினைவுக்குக் கொண்டு வந்தன.

ராஜி எப்பொழுதும் உயர்ந்த குதிங்கால் ஷூக்களையே அணிவதால் அவள் நடக்கும் போது அவளின் பின் புற மேடுகளின் குலுக்கல்கள் கண் கொள்ளாக்காட்சியாக இருக்கும். ரேகாவுக்கு அப்படி இல்லை. ஆனாலும் ராஜியினுடையது ஒரு வகை அழகு என்றால், ரேகாவினுடையது இன்னொரு வகை அழகு.

இதைப் பற்றி நினைக்கும் போ அவனுக்கு, தான் பத்து வருடங்களுக் முன் பம்பாயிலிருந்த போது தினமு காரியாலயம் செல்லும் போது கண் கொண்டிருந்த காட்சி நினைவுக் வந்தது.

வி. டி. ஸ்டேஷனில் இறங் பஜார் கேட் சாலை வழியாக நடந் ஃபோர்ட் ஏரியாவுக்குப் போக வேண டும்.ரயிலிலிருந்து இறங்கி ப்ளாட்பாரத் லும் சாலையிலும் நடக்கும் போது அ னுக்கு முன்னாலும்,பின்னாலும்,இருபக்க களிலும் ஒரே மனித மந்தை ஆ பெண் வித்தியாசம் பா முடியாது. பார்த்துக் கொண்டிருந்தா நடக்க முடியாது. எல்லாரும் எல்லான யும் இடித்துக் கொண்டும்,உரசிக் கொ



புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். நடித்த படங்களில்
உங்களுக்குப் பிடித்த படம் எது? ஏன்?
ஒருபக்க அளவிற்கு எழுதி அனுப்புங்கள்.
சிறந்த கட்டுரைக்கு மூன்று பரிசுகள் காத்திருக்கின்றன!
முடிவு தேதி: 10-3-82.



டும் நடக்க வேண்டியதுதான். வேறு விதியில்லாமல் உராய்பவர்கள் பத்துப் பேர் என்றால் வேண்டுமென்றே உராய்ப வர்கள் நூறு பேர் இருப்பார்கள்.

இவ்வளவு பெண்களா வேலைக் குப் போகிறார்கள் என்று வியந்து கொண்டே சதீஷ் நடப்பான். அவன் முன்னால் நடந்து சென்று கொண்டிருக் கும் பல வகைப் பெண்களின் பின்ன ழகை அல்லது கோரத்தைப் பார்த்துக் கொண்டே நடப்பான். புடவையிலும், ஸ்கர்ட்டிலும், சல்வாரிலும், ஜீன்ஸிலும் டைட் பைஜாமாவிலும் விதவிதமான உடைகளில் மறைந்து கொண்டு, ஆடி அசைந்தும், துள்ளிக் குதித்துக் கொண் டும் இன்னும் பலவிதமான நாட்டிய போஸ்களைக் காட்டிக் கொண்டும் நடந்து போகும் ஒவ்வொரு பெண்ணும் ஒரு விந்தையாக அவனுக்குத் தோன்றும். அநேகமாக ஒரு குறிப்பிட்ட ரயிலில் குறிப்பிட்ட நபர்களே தினமும் பயணம் செய்வார்களாதலால் பலரை அவனுக்கு அடையாளம் தெரியும். அதில் விசேடம் என்னவென்றால் ஒவ்வொருத்தியின் பின் புறத்தைப் பார்த்தே இவள் இன்னார் என்று கண்டு கொள்ளும் அளவுக்கு அவனுக்கு அவர்களுடைய 'அனாடமி' பழகிப் போய்விட்டது.

அதையெல்லாம் இப்போது நினைத்தபோது சதீஷுக்குச் சிரிப்பு வந் தது.

அவன் சிரிப்பதைப் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்த ரேகா, "என்ன நீங்களே சிரிச்சுக்கறீங்க?" என்று கேட்டாள்.

அவள் கையில் காப்பி டபரா தம்ளர் இருந்தது. முகத்தைப் பளிச் சென்று அலம்பித்துடைத்துக் கொண்டு வந்திருக்கிறாள் என்பது முகத்தின் பள பளப்பிலிருந்தும், அவளிடமிருந்து மிதந்து வந்த சோப்பின் மணத்திலிருந்தும் தெரிந்தது. தலைக் கூந்தலையும் வாசனை எண்ணெ தடவி வாரி அழகா கொண்டை போட்டிருந்தாள்.

டபரா டம்ளரை அவ மிருந்து வாங்கிக் கொண்ட சதீஷ் படியும் அந்த பம்பாய்க் காட்சிகளி நினைவால் சிரித்தான்.

"என்ன சொல்லுங்களே நானும் ரசிக்கிறேன்" என்று கேட்டா ரேகா.

சதீஷ் தன் சிரிப்புக்குக் காரண தைச் சொன்னான்.

"உங்களுக்கு வேற நினைப் கிடையாதா? எப்பவும் இதே தானா?" என்று ரேகாவும் சிரித்தாள்.

"சரி காப்பி குடிச்சுட்டு நீங் போய் மூஞ்சி அலம்பிண்டு வாங்கோ நான் அதுக்குள்ளே டிரஸ் மாத்திண்டு றேன்" என்றாள்.

"அது முடியாது"

எது முடியாது?"

"நான் மூஞ்சியலம்பிக்க போறப்ப நீ டிரஸ் மாத்திக்கறதுங்கறது இப்பவே அதைச் செய். நான் பார் கணும்."

"போதும். யாராவது கேட் கூட சிரிப்பா. இன்னும் ரெண்டு வருஷ போனா உமேஷுக்கு கல்யாணம் பண்ண னும். நீங்க இன்னும் நேத்திக்கித்தா கல்யாணமானவர் மாதிரி கூத்த யுங்கோ. பார்க்காத விஷயமாய் ருந்தா, பார்க்கணும்கற ஆசை இரு கும் தான். என்னைப் பார்த்துப் பார்த் அலுத்துப் போகலையோ உங்களுக்கு?"

இப்படிக் கேட்டாளே ஒழிய சதீஷ் எழுந்து போவதற்காகக் காத் ராமல் தன் புடவையையும், ரவிக்கை யும் அவிழ்த்தெறிந்து விட்டு உ பாவாடை, பிராவோடு கப்போர்டை

திறந்து உடுத்திக்கொள்ள வேண்டிய புடவை, பிளவுசைத் தேடலானாள்.

"எந்தப் புடவை உடுத்துக்கட்டும்?" என்று அவனைக் கேட்டாள்.

அவன் அவள் முதுகுப் புறத்தைத் தான் பார்க்க முடிந்தது.

கருகருவென்ற அழகான வட்ட வடிவமான தலைக்கொண்டை.

அதற்குக் கீழே சந்தன வண்ணக் கழுத்து, தோள்கள், முதுகு, இடுப்பு.

முதுகின் அரைக்கால் பகுதியை மட்டுமே மறைத்துக் கொண்டு உடலைக் ... யபடி இருந்த வெள்ளை வெளேரென்ற பிராவின் பட்டைகள்.

இடுப்பிலிருந்து முழங்காலுக்குச் சிறிது கீழே வரை அவள் உடலைத் தழுவியிருந்த பளபளவென்ற கறுப்பு ...டின் உள்பாவாடை.

சந்தன நிறக்கால்கள்.

சதீஷ் காப்பிக் கோப்பையை அப்படியே வைத்துவிட்டு எழுந்துபோய் ரேகாவைப் பின்னாலிருந்தபடியே அணைத்தவாறு புறங்கழுத்தில் உதடுகளைப் பதித்து பற்களால் லேசாகக் கடித்தான்.

"அடடா, இதென்ன பெரிய தொந்தரவாப் போச்சு. இன்னிக்கென்ன உங்களுக்கு ஏதாவது வெறிகிறி பிடிச்சுடுத்தா?" என்று கேட்டபடியே அவன் கைகளை விடுவித்தாள்.

ஆனால் சதீஷ் அவள் தோள்களைப் பற்றி அவளைத் தன் பக்கமாகத் திருப்பி அவள் உதடுகளை நோக்கிக் குனிந்தான்.

ரேகா அவனை அதற்கு அனுமதிக்காமல் அவன் வாயைத் தன் கையால் பொத்தினாள்.

"வேண்டாம் என் பவுடரெல்லாம் கலைஞ்சு போகும். அதுவுமில்லாம உமேஷோ, பாபுவோ யாராவது திடீர்னு உள்ளே வந்துடுவா. கதவு திறந்தே இருக்கு" என்றாள்.

அதன் பிறகுதான் சதீஷ் அவளை விட்டு விட்டுத் திரும்பினான். காப்பி அப்படியே ஆறிக் கொண்டிருப்பது அப்போதுதான் அவன் கவனத்தைக் கவர்ந்தது. அதை எடுத்து ஒரே முழுங்கில் குடித்து விட்டு முகம் அலம்பிக் கொண்டு வருவதற்காக வெளியேறினான்.

அவன் திரும்பி வரும்போது ரேகா கருநீல வண்ண ஃபாரன் நைலக்ஸ் சேலையும், அதே வண்ணத்தில் டு பை டு சோளியும் அணிந்து கொண்டு, காதுகளிலும் மூக்கிலும் தோடு, மூக்குத்தி போட்டுக் கொண்டு, தலையில் மல்லிகைப் பூ செண்டு சூடி தயாராக இருந்தாள்.

"யூ லுக் சார்மிங், ரேகா" என்றான்.

"இருக்கட்டும். வாய் வார்த்தையோட நிறுத்திக்குங்க. மறுபடியும் ஏதாவது குறும்பு பண்ணாதீங்கோ. அப்புறம் சினிமா சினிமாதான்." என்று ரேகா சிரித்தாள்.

"அதுவும் நல்லது தான்" என்று கூறி சதீஷ் சிரித்தான்.

ரேகாவுக்கு அவன் என்ன சொல்லுகிறானென்று புரியவில்லை.

"எதுவும் நல்லது தான்?

"அவசரவசரமா அரைகுறையா இப்ப ஒண்ணும் பண்ணாம, ஆசையை சேர்த்து வெச்சு, அக்குமுலேட் பண்ணி ராத்திரி ரிலீஸ் பண்ணினா அதோட சுகமே அலாதிதான்" என்று கூறி அசடு வழிந்தான்.

"நீங்க சொல்றது கரெக்ட். நான் அதையே வெச்சு ஒண்ணு சொல்

## புலவர் அன்பு விடும் சவால்!

### மறுக்கிறவர்கள் மறுக்க-சும்மா இருப்பவர்கள் இருக்க!

வெற்றிலை இல்லாமல் விழாவா? வெற்றி தருகின்ற வெற்றிலை இல்லாமல் தமிழ் நாட்டில் வைபவங்கள் இல்லை. தட்டத்தை விட்டு தாவி நிற்கிற வெற்றிலை தமிழர் வாழ்வில் இரண்டறக் கலந்தது. இருந்தும் இந்த பச்சையாய் இருந்து இச்சைக்குரிய சிவப்பாய் மாறுகிற வெற்றிலை பற்றி பழந்தமிழ் இலக்கியத்தில் பேசப்படவே இல்லை என்கிறார் புலவர் அன்பு—மறுப்பவர்கள் மறுக்கலாம்! சும்மா இருப்பவர்கள் இருக்கலாம்!

றேன், கேக்கறிங்களா?" என்று கேட்டு ரேகா முறுவலித்தாள். அவள் குறும்புத் தனமாக ஏதோ கேட்கப் போகிருள் என்பது அவள் முக பாவத்திலிருந்தே அவனுக்குத் தெரிந்தது.

"சொல்லு."

"அந்த ஆசையை ராத்திரி வரையிலும் அடக்கி வெச்சுக்கறதைக் காட்டிலும் ஒரு பத்து நாளைக்கு அடக்கி வெச்சுண்டா பதினேராவது நாள் கட்டு அவுத்து விடறப்ப இன்னும் அதிகமான குஷியிருக்குமே?" என்ருள்.

"அது ரொம்பப் பேராசை. அதிக ஆசை அதிக நஷ்டம்கற மாதிரி ஆயிடும். ஆசைங்கறது சின்ன நெருப்பு. ஊதி ஊதி அதை நல்லா எரியப் பண்ணனும்.



டைரக்டர் ஏன் உதவியாளரின் கையிலுள்ள நகத்தைக் கடிக்கிருர்?

அவர் கையிலுள்ள நகத்தை ஏற்கனவே கடித்து தீர்த்துட்டாராம்!




"யாரது தூக்கத்தை கெடுத்து உசுப்பறது?"...

"நான் தான்...... பிசாசு!"...

"நல்ல காலம்... என் மனைவிதான் உசுப்பருளோன்னு பயந்திட்டேன்!"

—கூனியூர் குருபாலன்

பெரிய புயல் காத்து அடிச்சா அது அணைஞ்சே போயிடும்."

"பலே, இந்த விஷயம் பத்திப் பேசின போதும். உங்களுக்கு கற்பனை, கவிதை எல்லாம் பிறந்துடும்."

"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இந்நோய்'ன்னு திருவள்ளுவர் சொல்லியிருக்கார். அதுக்கு மேல போன மலர் வாடிப் போயிடும்."

"பேஷ். இலக்கியச் சொற்பொழிவு கெட்டது போங்கோ" என்று கலகலவென்று வெண்கல மணியோசை போலச் சிரித்தாள் ரேகா.

பேச்சோடு பேச்சாக சதீஷின் டிரெஸ் முடிந்து விட்டிருந்தது. பொடிக் கலர் கார்டுராய் பாண்ட்டும் க்ரீம் கலர் டெரிகாட் அரை ஸ்லாக்கும் அணிந்து கொண்டான். ஸ்லாக்கின் மேல் பொத்தான்கள் இரண்டைப் போடாமல் விட்டிருந்தான். அந்த இடுக்கின் வழியாக அவன் மார்பின் அடர்த்தியான ரோமக் கற்றைகள் வெளியே அங்கங்கே தலை காட்டிக் கொண்டிருந்தன.

ரேகா கப்போர்டிலிருந்து ஏதோ ஒரு ஸ்ப்ரே பெர்ஃப்யூமை எடுத்து வந்து அவன் சட்டையின் மீதும், கழுத்திலும் பீய்ச்சினுள்.

தன் கணவன் ஆணழகன் என்ற பெருமை ரேகாவுக்கு நிறைய இருந்தது. அவளைவிட அவன் அரையடி உயரம் கூட இருப்பான். அவளைப் போலவே நல்ல எலுமிச்சம்பழ- சந்தனக் கலவை நிறம். உருண்டையான முகம். தினமும் முகக்ஷவரம் செய்து செய்து அதில் ஏறியிருந்த ஒரு ஆண்மைப் பசுமை. அடர்த்தியான டோபா வைத்தது போன்ற கிராப்பு. அதை அலட்சியமாக வாரி விட்டிருக்கும் தன்மை. நல்ல கட்டுமஸ்தான உடல். மெல்லிய உதடுகள். சிரிக்கும் போது பளிச்சிடும் அழகிய பல்வரிசை. பிரௌன் நிறக் கண்கள். அகன்ற நெற்றி.

சதீஷை அப்படியே கட்டி அணைத்து அந்தப் பசுமையேறிய கன்னங்களில் தன் உதடுகளை வைத்து அழுத்திக் கொண்டேயிருக்கவேண்டும் போல அவளுக்குத்தோன்றியது. கஷ்டப்பட்டுத் தன் ஆவலை அடக்கிக் கொண்டாள். புறப்படும் வேளையில் மறுபடியும் சதீஷுக்கு வெறியை மூட்டிவிட அவள் பயந்தாள்.

(தொடரும்)

# ரேகா-சதீஷ்-ராஜி

## 4.



ஹேமா ஆனந்ததீர்த்தன்

ஊர் பார்க்கில் காரை நிறுத்தி விட்டு இருவரும் இறங்கி டிக்கட் கௌண்டரை நோக்கி நடக்கும் போது எதிரே ராஜி புன்முறுவலுடன் நிற்பதைக் கண்டு சதீஷ் ஆச்சரியமடைந்தான்.

அவள் இப்போது புடவை கட்டியிருக்கவில்லை. ஜீன்ஸும், பனியனும் அணிந்திருந்தாள். இரட்டைப் பின்னல். இருபத்திரண்டு, இருபத்து மூன்று வயதுப் பெண்ணின் தோற்றம்.

"ராஜி, வாட் எ ப்ளஸண்ட் ஸர்ப்ரைஸ்" என்முன்.

"எனக்கும்தான்."

சதீஷ் ரேகாவையும் ராஜியையும் ஒருவருக்கொருவரை அறிமுகம் செய்து வைத்தான்.

"உன்னோடே வேற யாராவது வந்திருக்காங்களா ராஜி?"

"நோ. ஐ எம் அலோன்."

"டிக்கட் வாங்கிட்டியா?"

"இன்னும் இல்லே. இப்பதான் வந்தேன். உங்க காரைப் பார்த்ததும் இங்கியே நின்னுட்டேன்."

"சரி, நீங்க ரெண்டு பேரும் பேசிண்டிருங்க- நான் டிக்கட் வாங்கிண்டு வந்துடறேன்" என்று கூறி சதீஷ் டிக்கட் வாங்கச் சென்முன்.

ராஜியும் ரேகாவும் என்ன பேசுவதென்று தெரியாமல் சில நிமிடங்கள் மௌனமாகவே இருந்தனர்.

"இவரோட ஆபீசுல வேலை செய்யறியா?" என்று ரேகா பேச்சை ஆரம்பித்தாள்.

"நான்தான் அவரோட பி. ஏ. நான் உங்களைப் பார்த்திருக்கேன், நீங்க ரெண்டு மூணு தடவை உங்க ஹஸ்பண்டை மீட் பண்றதுக்காக ஆபீசுக்கு வந்திருந்திங்களே அப்போ. ஆனா நீங்க என்னைப் பார்த்திருக்க மாட்டிங்க."

"அப்படியா? அவர் சொன்னதே இல்லே." என்முள் ரேகா.

"வீட்டு விஷயங்கள் சில சமயங்கள்ல ஆபீசுல பேசுவாரே? ஆபீஸ் விஷயங்கள் வீட்ல பேசமாட்டாரா?" என்று கேட்டு ராஜி சிரித்தாள்.

ரேகாவுக்கு என்னவோ போலிருந்தது.

"அப்ப என்னைப் பத்தி உங்கிட்ட பேசியிருக்காரா?" என்று ரேகா கேட்டாள்.

"ஓ, இன்னிக்கு கூட உங்களைப் பத்தி பேசிக்கிட்டிருந்தோம்."

"என்ன பேசினிங்க?"

ராஜிக்கு தர்மசங்கடமாய்ப் போய்விட்டது. சதீஷ் தன் உடலையும் ரேகாவின் உடலையும் ஒப்பிட்டுப் பேசியதை எப்படி ரேகாவிடம் சொல்வது? அவள் அதைத் தவறாகத்தான் புரிந்து கொள்வாள்.

"உங்களைப் பத்தி அவருக்கு ரொம்பப் பெருமை. உங்க அழகைப் பத்திதான் சொல்லிண்டிருந்தார். நான் நினைச்சேன், அவர் 'எக்ஸாஜரேட்' பண்றரோன்னு. இப்ப உங்களை நல்லா இவ்வளவு கிட்டத்திலேருந்து பார்த்ததுக்கப்புறம்தான் அவர் சொன்னது எவ்வளவு கரெக்ட்னு தெரியுது. வாஸ்தவத்திலேயே நீங்க ரொம்ப அழகா இருக்கிங்க. சதீஷுக்கு ஏத்த ஜோடி நீங்க. போத் ஆஃப் யூ ஆர் ரியலி வெரி ஃபார்சுனேட்" என்றாள்.

ரேகாவுக்கு அவள் அவ்வாறு தங்களைப் புகழ்ந்து பேசியது பிடித்திருந்தாலும், சதீஷ் ராஜியோடு தன்னைப் பற்றிப் பேசவேண்டிய சந்தர்ப்பம் என்ன என்று தெரியாமல் குழம்பினாள். அதைக் கேட்டால், தான் ஏதோ அவர்கள் மேல் சந்தேகப்பட்டுக் குடைவதாக நினைத்துக் கொண்டு விடுவாளோ என்கிற பயம் தோன்றவே, பேசாமல் இருந்து விட்டாள். பிறகு சதீஷைக் கேட்டுக்கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டாள்.

"தாங்க்ஸ்" என்று மட்டும் கூறிவிட்டு பேச்சை சொந்த விஷயங்களிலிருந்து பொது விஷயங்களுக்குத் திருப்பி விட்டாள்.

ஸ்மிதா பட்டீலுக்கு ஊர்வசிப் பட்டம் கிடைத்ததைப் பற்றியும், சுகாசினிக்கு அது ஏன் கிடைக்காமல் போய்விட்டது என்பது பற்றியும், கமலஹாசனின் ஹிந்திப் படப்பிரவேசம் பற்றியும் இப்படி சினிமா விஷயமாகப் பேச்சு திரும்பி விட்டது.

சதீஷ் டிக்கட்டுகளுடன் திரும்பி வந்ததும் மூவரும் தியேட்டருக்குள் நுழைந்து, பால்கனிக்குச் சென்று சீட் நம்பர்களைத் தேடினர்.

யார் யார் எங்கே உட்காரலாம் என்று யோசிக்காமலே அப்படியப்




படியே உட்கார்ந்ததில் சதீஷ் நடுவிலும், அவன் இரண்டு பக்கங்களிலும் ரேகாவும், ராஜியும் உட்காரும்படி ஆகி விட்டது.

ரேகா என்ன நினைத்துக் கொள்வாளோ என்று சதீஷுக்கு யோசனையாக இருந்தது. ராஜி சதீஷுக்குப்பக்கத்தில் உட்கார்ந்தது ரேகாவுக்குப் பிடிக்கவில்லைதான். ஆனால் அவளை எழுந்து வந்து தன்பக்கத்தில் உட்காரச் சொல்லி சொன்னால் சதீஷ், ராஜி இருவருமே தன்னை மரியாதை தெரியாதவள் என்றோ, கட்டுப் பெட்டி என்றோ நினைத்து விடுவார்களோ என்கிற பயம் அவளுக்கு இருந்ததால் பேசாமல் இருந்து விட்டாள். ஆனால் ராஜி தங்கள் உல்




லாசத்திற்குத் தடையாக தங்கள் இடையே வந்துவிட்டது போல அவளுக்குத் தோன்றியது.

சதீஷ் ராஜியுடன் இரண்டு வார்த்தை, ரேகாவுடன் இரண்டு வார்த்தை என்று மாறி மாறிப் பேசிக் கொண்டிருந்தான்.

இரு புறமும் இரண்டு அழகிய இளம் பெண்கள் உட்கார்ந்திருக்க அவர்களுக்கிடையிலே அமர்ந்து கொண்டு இருட்டில் சினிமா பார்ப்பதும், அவர்களுடன் பேசுவதும் எந்த ஆணுக்கும் ஒரு பரவசமூட்டும் அனுபவம் தான். சதீஷ் மட்டும் அதற்கு விலக்காக முடியுமா?

படம் ஆரம்பித்து திரையில் ஓடிக் கொண்டிருந்தது.

சதீஷின் மனத்தில் ராஜியைப் பற்றிய எண்ண ஓட்டம்.

அவள் எப்படி இன்றைக்கே இந்தப் படத்திற்கே வந்தாள்? தான் வருவது தெரிந்தே வந்திருப்பாளா? இருக்க முடியாதே. தான் தொலைபேசியில் ரேகாவுடன் பேசியதை ஒட்டுக் கேட்டிருந்தாலும் கூட, தான் சினிமாவுக்குப் போவது தெரிந்திருக்குமே ஒழிய இந்தப் படத்திற்கு வருவேன் என்று எப்படித் தெரியும்? ரேகாவுடன் வீட்டில் கலந்து பேசிய பிறகுதானே இந்தப்

படத்திற்கு வருவதென்று முடிவாயிற்று? இது தற்செயலாக நிகழ்ந்தது தான். ப்யூர் கொயின்ஸிடன்ஸ்! ஆனாலும் இந்தக் கொயின்ஸிடன்ஸுக்கும் ஏதாவது அர்த்தம் இருக்குமோ? ராஜி என் வாழ்க்கையில் ஏதாவது முக்கிய பங்கு பெற வேண்டிய சந்தர்ப்பம் வருமோ? அப்படியானால் அது என்னவாக இருக்கும்?

சே, இப்படியெல்லாம், தான் நினைப்பதற்கே அர்த்தமில்லை.

ராஜிக்கு தன் வாழ்க்கையில் ஏதோ ஒரு முக்கிய பங்கு இருக்க வேண்டுமென்ற தன் அடி மனத்தின் ஆசையின் விளைவுகளே இந்த தனது எண்ணங்கள்.

அந்த ஆசையைக் களைந்தெறிந்து விட்டால் இந்த தற்செயல் சம்பவங்களுக்கெல்லாம் ஒரு அர்த்தமும் இருப்பதாகக் கற்பனை ஓடாது.

பம்பாய் குடிசை வாழ்ப்பகுதி மக்களின் வாழ்க்கை தத்ரூபமாகத் திரையில் காட்சியளித்துக் கொண்டிருந்தது.

பம்பாய் சென்ட்ரல் ஸ்டேஷனை அடுத்து இருந்த ஒரு கட்டிடத்தில் சதீஷ், ரேகா, குழந்தைகள் வசித்து வந்தனர்.

அவர்கள் ஃப்ளாட்டுக்கு எதிர் ஃப்ளாட்டில் சௌரிராஜன் என்பவர் வசித்து வந்தார். அவர் ஒரு விநோதப் பிராணி.

ஆம். விநோதப் பிராணிதான் அவர். மனிதர் என்று அவரைச் சொல்ல முடியாது.

கல்யாணமாகி இரண்டு குழந்தைகளும் அவருக்கு இருந்தன. இரண்டும் பெண் குழந்தைகள். மனைவியும், குழந்தைகளும் லட்சணமாக திருஷ்டி படும் போல இருப்பார்கள். அதனால் தான் திருஷ்டியே பட்டு விட்டதோ என்னமோ. அவர்கள் அந்தப் பிராணியிடம் சிக்கி அப்படி ஒரு சித்திரவதைக்குள்ளானார்கள்.

சௌரிராஜனுக்கு பெரிய கம்பெனி ஒன்றில் பெரிய அதிகாரி வேலை. அந்த காலத்திலேயே இரண்டாயிரத்தைந்நூறுக்கு மேல் சம்பளம். அவரும் ஆள் பார்ப்பதற்கு சுந்தர புருஷனாகத் தான் இருந்தார்.

வேறென்ன வேண்டும்? கண் நிறைந்தவனாகவும், கை நிறைய சம்பாதிப்பவனாகவும் இருக்கிறானே என்று வேறொன்றைப் பற்றியும் யோசியாமல் தம் பெண்ணை அவனுக்குக் கொடுத்து விட்டார்கள் அவளைப் பெற்றவர்கள். பெரிய மனிதர் வீட்டுப் பெண் அவள். நான்கு சகோதரர்களுக்கிடையில் ஒரே சகோதரி.

வனஜா என்று பெயர் அந்தப் பெண்ணுக்கு. அவள் தன் துயரத்தையெல்லாம் கண்ணீர் வடித்தபடியே ரேகாவிடம் சொல்வாள். அதுவும் எப்படி? அவர்கள் வீட்டு ஜன்னலருகில் ரேகா போய் நின்று கொள்ள வேண்டும். அவளும் ஜன்னலருகில் வந்து வீட்டுக்குள்ளேயே நின்றபடி தன் துன்பங்களைக் கொட்டுவாள். வீட்டை விட்டு வெளியே வர முடியாது. காலையில் ஆபீசுக்குப் போகும் போது சௌரிராஜன் வீட்டைப் பூட்டிக் கொண்டு போய் விடுவான். சாயங்காலம் குழந்தைகள் பள்ளியிலிருந்து வீடு திரும்பினாலும் கூட வீட்டுக்குள் செல்ல முடியாது. அப்பன்காரன் என்கிற அந்த மிருகம் ஆபீசிலிருந்து திரும்பி வரும் வரை எங்காவது விளையாடிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு தான் வீட்டுக்குள் வர முடியும்.

கெட்ட பழக்கங்கள் என்று சொல்வதானால் இரண்டே இரண்டு தான் அவரிடம் இருந்தவை. ஒன்று குடி. இன்னொன்று கூத்தி. மற்றபடி சிகரெட், புகையிலை, ரேஸ், சீட்டு என்று வேறு எதுவும் கிடையாது. என்ன பிராப்த கர்மமோ என்னவோ குடி, கூத்தி இரண்டுமே அவருக்கு குடிசைகளிலிருந்து கிடைப்பதில்தான் நாட்டம். அவருக்கிருந்த பொருள் வசதியில் நல்ல அயல் நாட்டு மதுவகைகளாக வாங்கிக் குடிக்கலாம். ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் போய் விஸ்கியும், ஜின்னும், ரம்மும், ஷேம்பேனும் அருந்தலாம். மலபார் ஹில்ஸிலும், பெத்தர்ரோடிலும், ஆபரா ஹவுஸிலும் வசிக்கும் ஐநூறு ரூபாய், ஆயிரம் ரூபாய் ரேட் உள்ள 'கால்கேர்ல்ஸ்'களை அணுக முடியா விட்டாலும் குறைந்த பட்சம் கிராண்ட் ரோடிலும், ஃபோராஸ் ரோடிலுமுள்ள கொஞ்சம் ஹைகிளாஸ் விலைப் பெண்களையாவது நாடிப் போகலாம். ஆனால் அவருக்கோ அவைகளில் நாட்டமில்லை.

பம்பாயிலுள்ள எல்லா குடிசைப்பகுதிகளிலும் சுற்றித்திரிவார். அங்கே கிடைக்கும் கள்ளச் சாராயமும், சுத்தம் என்பது என்னவென்று தெரியாத சேரிப் பெண்களும் தான் அவருக்கு மிகவும்விருப்பமான(து)வர்கள்.உண்மையான 'கிக்' வேண்டுமென்றால் இந்த சேரியில் தயாரிக்கப்படும் மதுவிலும்,

இந்த சேரி வாழ் பெண்களிலும்தான் அது கிடைக்கும் என்று சொல்வாராம். பகட்டாக பங்களாக்களிலும், ஃப்ளாட்டு களிலும் வாழும் பெண்கள் எல்லாம் வெறும் வண்ணம் தீட்டிய பொம்மைகள் —Painted Dolls— அவர்களை வைத்துக் கொண்டு வேண்டுமானல் விளையாட லாம். வேறென்றும் செய்ய முடியாது என்பாராம். விஸ்கி, ஜின், ஷேம்பேன் இவைகளெல்லாம் வெறும் மருந்துகள். நோயாளிகள் குடிக்க வேண்டியவை. மது என்ருல் அமிர்தம். அப்படி மது என்ற பெயருக்கு ஏற்றவை இந்த குடிசைகளில் கிடைக்கும் போதைப் பொருள்கள்தான் என்பது அவர் அபிப்ராயம்.

சதீஷும் அவரும் அதிகமாகப் பேசிக்கொண்டதில்லை. அவரைப் பற்றி அவன் அறிந்த விவரங்களெல்லாம் ரேகாவும், மற்றவர்களும் அவனுக்குச் சொன்னதுதான்.

வீட்டுச் செலவுக்கென்று இரு நூருே முந்நூருே பணம் வனஜாவின் கையில் கொடுப்பாராம். அது எப்படிப் போதும் என்று கேட்டால் போதுமோ போதாதோ அதில்தான் சமாளிக்க வேண்டுமென்று சொல்லுவாராம். இந்த அழகில் திடீரென்று நினைத்துக்கொண்டு இன்னிக்கு பால் பாயசம் வை என்பா ராம். இன்னொரு நாள் கோதுமை அல்வா வேண்டும் என்பாராம். வனஜா ஏதா வது எதிர்த்துப் பேசிஞல் கோபம் வந்து விடுமாம். எங்கே அடிக்கிருேம் என்பது கூடத் தெரியாமல் கண்ணை மூடிக் கொண்டு கையில் கிடைக்கிற வஸ்து வால் (அது குடையாக இருந்தாலும் சரி, விசிறியாக இருந்தாலும் சரி, செருப்பாக இருந்தாலும் சரி) அடித்து நொறுக்கி விடுவாராம்.

இதில் வேடிக்கை என்னவென் ருல் (வேதனையாக இருந்தாலும் கூட வேடிக்கை என்று கூருமல் இருக்க முடிய வில்லை) இந்த மனிதருக்கு கடவுள் பக்தி வேறு. காலையில் கிட்டத் தட்ட ஒருமணி நேரம் பூஜை அமர்க்களப்படும். அஷ் டோத்திர நாமாவளி அர்ச்சனையும், ஸ்தோத்ரங்களும், மணியடித்து தீபா ராதனை காட்டி, நைவேத்யங்கள் படைத்து. தியானத்தில் மூழ்கி, நெற்றி யில் விபூதி, குங்குமம், சந்தனம் எல்லாம் துலங்க பக்த சிரோன் மணியாகக்காட்சி யளிப்பார். அவர் பூஜிக்கிற அந்த சாயி பாபாவும், கிருஷ்ணனும், ராமனும், சின்ம யானந்த சுவாமிகளும் அவருக்கு ஏன்

> உலகிலேயே தனி மனிதருக்கான கௌரவப் பட்டங்களை அதிக எண் ணிக்கையில் பெற்றவர் 1929-ஆம் ஆண்டு முதல் 1933-ஆம் ஆண்டு வரை அமெரிக்காவின் ஜனுதிபதியாக இருந்த 'ஹெர்பர்ட் சி ஹூவர்' என்பவர். அவருக்கு இதுவரை வழங்கப்பட்ட கௌரவப் பட்டங்கள் 89!
>
> —ஆணையூர். இஸ்மாயில்

நல்ல புத்தியைக் கொடுத்து அந்தக் குடும் பத்தில் மகிழ்ச்சி நிலவச் செய்ய வில்லையோ தெரியவில்லை,

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த அந்தப் பெண் வனஜா ஒரு நாள் எப்படியோ, யாருடைய உதவியையோ பெற்று, பூட்டை உடைத்து கதவைத் திறக்கச் சொல்லி வெளியே வந்து பெண்களின் பள்ளிகளுக்குச் சென்று அவர்களையும் அழைத்துக் கொண்டு பிறந்தகம் சென்று விட்டாள்.

சௌரிராஜன் அந்த வீட்டில் தனியாக வசிக்கலானுர். பிறந்தகம் போய் விட்ட மனைவியைப் பற்றியோ குழந்தைகளைப் பற்றியோ சிறிதும் கவலை யில்லாமல் காலத்தை ஓட்டிக் கொண்டி டிருந்தார்,

வனஜா அந்த வீட்டை விட்டுச் சென்று பத்து நாட்களாகி யிருக்கும். இரண்டு மூன்று நாட்களாக அந்த வீட்டின் கதவு திறக்கவே இல்லை. யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட்ட தாகவும் தெரியவில்லை.

நான்காவது நாள் பக்கத்து வீட்டுக்காரர்கள் அந்த வீட்டிலிருந்து ஏதோ முனகல் சப்தம் வருவதாகச் சொல்லி, போலீசுக்குத் தெரிவித்து, போலீஸ் வந்து கதவை உடைத்து உள்ளே போய்ப் பார்த்ததில் சௌரி ராஜன் தரையில் அலங்கோலமாக விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். முகமெல்லாம் வீங்கிப் போய் ரத்தக்கறை படிந்திருந்தது. பாதி உயிர். மனுஷனுக்கு சுயநினைவில்லை. பரிசோதித்துப் பார்த் ததில் முன்பற்கள் இரண்டு உடைந்து போயிருந்ததோடு கீழ்தாடை கோணல் மாணலாகத் திருகப்பட்டு முகமே விகார மடைந்திருந்தது.

வீட்டிலுள்ள டேப் ரிகார்டர், வாட்ச், அவருடைய பர்ஸ், விலையுயர்ந்த உடைகள் எல்லாம் அப்படியே இருந்தன.

யாரோ அவரை நையப்புடைப்பதற்காகவே உள்ளே வந்து, தன் காரியத்தை முடித்து விட்டுப் போயிருப்பதாகத் தெரிந்தது. வந்தவர்கள் (ஒருவருக்கு மேற்பட்டவர்களாகத் தான் இருக்க வேண்டும்) அவரைக் கொல்ல வேண்டுமென்ற எண்ணத்துடன் கூட வந்ததாகத் தெரியவில்லை. நன்ருக உதைத்து அவர் முகத்தை விகாரப்படுத்த வேண்டுமென்பதற்காகவே வந்திருக்க வேண்டுமென்பது தெளிவாகத் தெரிந்தது.

உடனே அவரை அப்புறப்படுத்தி ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்ருர்கள். இரண்டுமாதத்திற்கு மேல் ஆஸ்பத்திரியில் படுத்து கிகிச்சை பெற்று, ப்ளாஸ்டிக் சர்ஜரியெல்லாம் செய்து ஒரு மாதிரியாகப் பிழைத்தெழுந்து முகத்தையும் பழைய முகமாக இல்லாவிட்டாலும் ஓரளவுக்குப் பார்க்கச் சகிக்கிற முகமாகச் செய்து கொண்டு வெளியே வந்தார்.

அவர் ஆஸ்பத்திரியில் இருந்த போதாகட்டும், வெளியே வந்த பிற்பாடாகட்டும் அவருடைய மனைவியோ, குழந்தைகளோ, புக்ககத்திலிருந்து வேறு யாருமோ அவரை வந்து பார்க்கவில்லையாம். அவருடைய அண்ணு -யாரோ ஒருத்தர் பெங்களூரிலிருப்பவர் மட்டும் வந்து பார்த்து விட்டுப் போனுராம்.






போலீசார் அவரை விசாரித்ததில் அவர் தம்மை அடித்தவர்கள், தாம் தூங்கிக் கொண்டிருந்தபோது வந்து தன் கண்களைக் கட்டி விட்டுத் தன்னைத் தாக்கியதால் அவர்கள் யார் என்று தனக்குத் தெரியாதென்றும், தன்னை அடிக்கும் போது அவர்கள் ஒன்றுமே பேசவில்லையென்றும் அதனுல் அவர்கள் எதற்காகத் தன்னை அடித்தார்கள் என்பது கூட தனக்குத் தெரியாதென்றும் கூறி விட்டாராம்.

அவருடைய மனைவி வீட்டார் தான் ஆள் வைத்து அவரை அடித்து விட்டார்கள் என்று சிலரும், வீட்டுக்கு வேலை செய்ய வந்து கொண்டிருந்த வேலைக்காரப் பெண்ணிடம் பலாத்காரம் செய்ய முயற்சித்ததாகவும் அவளைச் சேர்ந்தவர்கள் தான் வந்து அடித்து விட்டதாக இன்னும் சிலரும் அவர் அடிக்கடி போகும் சேரிகளில் பெண்கள் விஷயமாக அவருக்கும் சில மில் தொழிலாளிகளுக்கும் தகராறு என்றும் அந்தத் தொழிலாளிகள் தான் அவரை அடித்ததென்றும் பலவாருகக்கதைகள் பிறந்தன.

உண்மை என்னவென்பது கடைசி வரையில் தெரியவில்லை.

ஆனுல் ஒரு விஷயம் எல்லோரும் ஒன்று போலச் சொன்னுர்கள். அந்த மனிதர் அந்தச் சம்பவத்திற்குப் பிறகு எந்தச் சேரிப்பக்கமும் தலைவைத்துக் கூடப்படுப்பதில்லை என்று.

பம்பாயை விட்டு வந்த பிறகு மறுபடியும் அவரைச் சந்திக்கும்படி நேரிடவில்லை.

இப்பொழுது படத்தில் சேரி வாழ்க்கையையும் அம்மா, லூகா, அன்னு இவர்களின் கதையையும் பார்க்கும் போது சதீஷுக்கு அந்த சௌரிராஜனின் ஞாபகம் வந்தது.

“சௌரிராஜன் ஞாபகம் வருது” என்ருன் ரேகாவிடம்.

ரேகா அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

ராஜியின் கணவன் ஒரு சமயம் இந்த சௌரிராஜனைப் போல இருப்பானே என்று சதீஷுக்குத் தோன்றியது.

ஒரு நாள் அவளிடம் விவரமாக அவள் கணவனைப் பற்றிக் கேட்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டான்.

(தொடரும்)

# 5 ரேகா-சதீஷ்-ராஜி

ஹேமா ஆனந்ததீர்த்தன்

பிரமாதமாக விளம்பரப்படுத்தப்பட்டிருந்த ஸ்மிதா பட்டீல் குளிக்கும் காட்சி திரையில் தோன்றிய போது தியேட்டரில் ஆங்காங்கே லேசான சிரிப்புச் சப்தமும், சலசலப்பும் கேட்டதே ஒழிய விசில் அடிப்பதோ ஓய், ஊய் என்ற கூச்சல்களோ கேட்கவில்லை.

"இவ்வளவு சாவகாசமாக டெடெய்ல்டாக இந்தக் காட்சியைக் காட்டினாலும் நம்ப ஆடியன்ஸ் அதை எவ்வளவு சாதாரணமா கொயட்டா ரிஸீவ் பண்ணுங்க பாத்திங்களா?" என்று ராஜி கேட்டாள்.

"எனக்கும் அதேதான் தோணித்து. சினிமா பார்க்கறவங்க, பத்திரிகை படிக்கறவங்க இவங்கல்லாம் இப்ப பழைய கட்டுப் பெட்டித்தனம், ஹிப்பாக்ரஸி இதையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா விட்டுட்டாங்க. ரியலிஸ்டிக் காட்சிகளை ஆபாசம்னு நினைக்கறதில்லே!" என்றான் சதீஷ்.



"அதுக்குக் காரணம் ரியலிஸ்டிக்னு சொல்லி இந்த ஒரு காட்சியை மட்டும் காட்டாம, படம் பூராவும் நடக்கற எல்லாமே இயற்கையா நடக்கற சம்பவங்களா இருக்கறதுதான். பழைய படங்கள்லெயெல்லாம் என்ன பண்ணுவாங்க? 90% காட்சிகள் வாழ்க்கையோட ஒட்டாத அசம்பாவிதமான, அதீத கற்பனைக் காட்சிகளாக் காட்டிட்டு ஒண்ணு ரெண்டு காட்சிகள் இந்த மாதிரி ரியலிஸ்டிக்னு சொல்லிக் காமிக்கறப்ப, அது ஆபாசமாத்தான் இருக்கும்" என்ருள்.

"நீ சொல்றது ரொம்ப சரி" என்ருன் சதீஷ்.

படம் முடிந்து மூவரும் வெளியே வந்த போது, "நீயும் எங்க கூட வர்றியா ராஜி? சுவாகத் ஹோட்டலுக்கு டின்னருக்குப் போரேரும். வை டோன்ட் யூ ஜாயின் அஸ்?" என்று கேட்டான் சதீஷ்.

திருப்பதி தேவஸ்தானத்தில் ஜூன் முதல் வாரத்தில் ஒரு விநோதமான காணிக்கை செலுத்தப் பட்டதாம். அது ஒரு உலோகம். பெயர்: பிளாட்டினம். எடை 841 கிராம். மதிப்பு: சுமார் 2 லட்சத்து 50 ஆயிரமாம்.



கர்நாடகத்திலிருந்து முதன் முறையாக வடகிழக்கு இமயமலையிலுள்ள கொலெய் என்ற 5400 மீட்டர் உயரமுள்ள சிகரத்தை மூன்று நபர்கள் கடந்துள்ளனர். இவர்களை டாக்டர் வெங்கடேஷ் என்பவர் வழி நடத்திச் சென்ருர்.

—இல. இளங்கோவன்

"இல்லே. நேரமாயிடும். அப்பா கோபிச்சுப்பார். நா வரேன். தாங்க்யூ" என்று இருவரிடமும் விடை பெற்றுக் கொண்டு நகர்ந்தாள் ராஜி.

காரில் ஏறி உட்கார்ந்து கொண்டு கார் சினிமாக் கும்பலைத் தாண்டி மௌண்ட் ரோடில் ஓடத் தொடங்கியதும், "என்ன ரேகா, பிக்சர் எப்படி இருந்தது?" என்று சதீஷ் கேட்டான்.

"உங்களுக்குப் பிடிச்சதா?" என்று அவள் திருப்பிக் கேட்டாள்.

"யெஸ். வித்தியாசமான படம் இருக்கே. அதுவே மனசுக்கு திருப்தியயிருக்கு"

"சேரிலெ இருக்கற பொண்களெல்லாம் இந்த அம்மாவைப் போல தான் இருப்பாங்கன்னு காட்டற மாதிரி இல்லேயோ?"

"அப்படி இல்லே. அந்த மாதிரியானவாளும் இருக்காங்கறதை தான் டைரக்டர் சொல்லருர்."

"என்னைக் கேட்டா அந்த மாதிரி இருக்கறவா சேரிப் பெண்களை காட்டிலும் மிடில் க்ளாஸ்லெயும், அப்பர் க்ளாஸ்லெயும்தான் ஜாஸ்தி இருக்கா. இப்ப இந்த ராஜி வந்தாளே இவ நல்லவளா, நான் கேக்கறேன்?"

சதீஷ் சிரித்தான்.

"ஏன் சிரிக்கறேள்? ப... சொல்லுங்கோ."

"உண்மையில் எனக்குத் தெரியாது ரேகா."

"உங்களுக்குத் தெரியாம இருக்கலாம். ஆனு அவளைப் பார்க்கறப்பவே எனக்குத் தெரிஞ்சு போச்சு. அவ நல்லவளா இருக்க முடியாதுன்னு."

"இது அபாண்டம்."

"என் எதிர்க்கவே உங்க கூட அவ்வளவு இழையருளே. நீங்க ரெண்டு பேரும் தனியா இருக்கறப்ப இன்னும் என்ன செய்ய மாட்டா?"

"தினமும்தான் நாங்க ரெண்டு பேரும் தனியா எவ்வளவோ நேரம் இருக்கோம். இதுவரையிலெ தப்பா ஒண்ணும் அவ நடந்துண்டதில்லே. உங்கிட்ட உண்மையைச் சொல்றேனே. எனக்காவது சில சமயங்கள்லெ மனசு கொஞ்சம் சஞ்சலப்பட்டதுண்டு. ஆனு அவ மனசுல விகல்பம் ... னதாத் தெரியலே."

"நீங்க அவ மனசுலெ பூந்து பாத்திங்களாக்கும்!"

"நீ மாத்திரம் அவ மனசுல பூந்து பார்த்தியா இப்ப?"

"தேவையில்லே. பெண்ணோட மனசு இன்னொரு பெண்ணுக்குத் தெரியும்."

"சரி இப்ப அவளைப் பத்தி என்ன பேச்சு? வேற எதாவது பேசுவோம்."

சிறிது நேரம் இருவரும் ஒன்றும்

பேசவில்லை. கார் ஓடிக்கொண்டிருந்தது. அவர்களிடையே மௌனம் நிலவியது.

"ஆனு ஒரு விஷயம். ராஜிக்கு கூச்சம் கிடையாது. எந்த விஷயமாயிருந் தாலும் ஃப்ரீயா பேசுவா" என்று மறு படியும் சதீஷே பேச்சைத் தொடங் கினுன்.

"எந்த விஷயம்னுலும் — புரி யல்லியே?"

"செக்ஸ் பத்தின்னு வெச்சுக்க யேன்"

"செக்ஸ் பத்தி உங்களோடு அவ பேச வேண்டிய தேவை?"

"அதுவா? அது அகஸ்மாத்தா ஒரு நாள் அப்படி நேர்ந்தது. என் ஃப்ரெண்டு கதை நாவலெல்லாம் எழு தருனே வினயா வாசுதேவன்கற பேர்ல. அவன் ஒரு நாள் எங்க ஆபீசுக்கு வந்திருந்தான். அப்ப ராஜி என்னண்டை டிக்டேஷன் எடுத் துண்டிருந்தா.அவன் எழுதற கதையெல் லாம் உனக்குத்தான் தெரியுமே. முழுக்க முழுக்க எல்லாம் செக்ஸ்தான். பச்சை பச்சையா எழுதுவான். அவனுக்கு ராஜியையும் அவளை அவனுக்கும் இன்ட்ரட்யூஸ் பண்ணி வெச்சேன்.

'உங்க கதைகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும்'னு ராஜி அவன்கிட்ட சொன்னுள்.

'ஆச்சரியமாயிருக்கே, என் கதைகள் எல்லாம் ஆபாசம்னு எல்லாரும் திட்டரு. நீங்க என் கதைகள் பிடிச்சிருக் குங்கறிங்களே. ஒரு லேடியே அப்படிச் சொல்றது எனக்கு ரொம்ப பெருமை யாவும் சந்தோஷமாவும் இருக்கு' அப்படின்னு வாசுதேவன் சொன்னுன்.

'செக்ஸ் ஆண்டவன் மக்களுக் குக் கொடுத்த ஒரு வரப்பிரசாதம்னு நான் நினைக்கிறேன். அதை ஆபாசம்னு நினைக்கறது ஆண்டவனை அவமதிக்கற தாகும். ஆபாசம் செக்ஸுல இல்லே. அதைப் பாக்கறவங்களோட கண்ணேட் டத்துல இருக்கு. வலம்புரிஜான் ஒரு இடத்துல எழுதியிருந்தார் — காகிதம் இருக்கு. அதைக் கழுதை பார்த்தால் கடிச்சுத் தின்னும். கவிஞன் பார்த்தால் கவிதை எழுதுவான் அப்படின்னு. அந்த மாதிரிதான் செக்ஸும்.இந்த விஷயத்துல நம்ம தமிழ்நாட்டிலெதான் அதிகமான



ஹிப்பாக்ரஸி இருக்கு. இதைப் பத்தி எழுதறதோ, பேசறதோ தப்புங்கற பிரசாரம் அர்த்தமில்லாதது. மத்த இடங் கள்லே பாருங்க. மராட்டிலெ டெண்டுல் கர் எப்படிப்பட்ட சப்ஜெக்டையெல்லாம் ஹேண்டில் பண்ணியிருக்கார்? சகாராம் பைண்டர், வல்சர்ஸ் மாதிரி நாவலை தமிழ்நாட்டிலெ யாராவது எழுதி நல்ல பேர் வாங்கிட முடியுமா? நேத்துதான் எங்கியோ படிச்சேன். நரேந்திர பால் சிங்குங்கற பஞ்சாபி எழுத்தாளருக்கு 1976ல் பா முல்லஹஸா ஹோஷியார்ங் கற நாவலுக்கு சாகித்ய அகாடமி ப்ரைஸ் கிடைச்சிருக்கு. அந்த நாவலோட சப்

ஜெக்ட் என்ன தெரியுமா? ஹோமோ செக்ஸுவாலிடி.' அப்படின்னு ஒரு லெக்சரே அடிச்சான்.

'நீங்க நிறைய விஷயம் தெரிஞ்சு வெச்சிருக்கிங்களே! இப்ப நீங்க சொன்னிங்களே ஹோமோ செக்ஸுவாலிடின்னு. அதுக்கு என்ன தமிழ்ப் பதம்னு கூட நமக்கெல்லாம் தெரியாது.' அப்படின்னு வாசுதேவன் அவளைப் பாராட்டிறான்.

'ஹோமோ செக்ஸுவாலிடிக்கும், லெஸ்பியனிசத்துக்கும் எல்லாம் போவானேன்? செக்ஸ்ங்கறதுக்கே ஒரு சுலபமான சாதாரண வழக்குல உள்ள பதம் எங்கே இருக்கு சொல்லுங்கோ? என்னமோ பால் உணர்வு, மோர் உணர்வுன்னு பண்டித பாஷையிலெ அல்ல பேச வேண்டியிருக்கு?' என்று கூறிச் சிரித்தாள் ராஜி.

"ரெண்டு பேரும் பேசறது சுவாரஸ்யமாயிருந்தது. நான் கேட்டுண்டே இருந்தேன். இன்னும் என்னென்னமோ பேசினா. எனக்கு எல்லாம் இப்ப ஞாபகமில்லே.

"ஆங். இன்னொண்ணு கூட ராஜி சொன்னளே. யாரோ சூர்யேந்திர வர்மான்னு ஒரு ஹிந்தி டிராமாடிஸ்டாம். அவர் சூர்ய கீ அந்திம் கிரண்சே சூர்ய கீ பஹ்லீ கிரண் தக்னு ஒரு நாடகம்எழுதியிருக்காராம். அந்த நாடகத்தோட சென்டிரல் ஐடியா, ஆண்மைச் சக்தியை இழந்து போன ஒரு ராஜாவைப்பத்தி. அந்த வம்சத்துல ஒரு பழக்கமாம். ஒரு ராஜாவுக்கு அப்படியாயிட்டா, வம்சம் அதோட முடிஞ்சுடாம ஒரு வாரிசு வேணுங்கறதுக்காக அவளோட ராணி, தான் இஷ்டப்படற யாரோட வேணுமா படுத்துண்டு குழந்தை பெத்துக்கலாமாம். இந்த டிராமா டில்லிலெ அமோகமா நடந்துண்டிருக்காம்."

சதீஷ் இதைச் சொல்லி முடி-க்கும் போது கார் சுவாகத் ஹோட்டலுக்குள் நுழைந்து கார் பார்க்கில் சென்று நின்றது.

இருவரும் இறங்கி ஏ.ஸி. டைனிங் ரூமுக்குச் சென்றனர்.

இரண்டு சாப்பாட்டுக்கு ஆர்டர் கொடுத்து விட்டு, "என்ன ஸ்வீட்?" என்று சதீஷ் விசாரித்தான்.

"சம் சம்" என்று சிப்பந்தி சொன்னதும், "என்ன ரேகா, சாயங்காலம் திரட்டுப்பால் ஆச்சு.இப்ப சம் சம் போதுமா, இல்லே வேற ஏதாவது சொல்லட்டுமா?" என்று சதீஷ் கேட்டான்.

"ராஜ்போக் கொண்டு வ[ரட்]டுமா? என்று சிப்பந்தியே உற்சாகத்தோடு கேட்டான். சதீஷ் நல்ல டிப்ஸ் கொடுப்பான் என்பது அவனுக்குத் தெரியும்.

"ஜமாய் ராஜா" என்று சதீஷ் சொன்னதும் சர்வர் போய்விட்டான்.

"இப்ப ராஜபோகம் சாப்பிடுவோம். வீட்டுக்குப் போனதும் இந்திர போகம் அனுபவிப்போம்" என்று ரேகாவின் காதில் கிசுகிசுத்தான் சதீஷ்.

"எனக்கென்னமோ ரொம்ப டயர்டா இருக்கு.வீட்டுக்குப் போனதும் நான் பேசாம படுத்துக்கப் போறேன். நீங்களும் பேசாமப் படுத்துக்குங்க" என்றாள்.

"உனக்கு டயர்டா இருந்தா நீ பேசாமப் படுத்துக்கோ. நீ ஒண்ணும் பண்ணவேண்டாம். பண்ணவேண்டியதையெல்லாம் நான் பார்த்துக்கறேன்" என்று கூறிச் சிரித்தான் சதீஷ்.

"அதுல என்ன பிரயோஜனம்? நீங்களே தானே சொல்லியிருக்கிறீ[ங்]க

கர்நாடக காங்கிரஸ் (ஐ) ராஜீவ் காந்தியின் அரசியல் பிரவேசத்தை முன்னிட்டு பதிவு செய்த பாடலை (கேஸட்டில்) வெளியிட்டனர். இப்பாடல்— ஹிந்தியில் நேருவின் குடும்பத்தைப் பற்றி எழுதி உள்ளனர். இப்பாடலை எழுதியவர் பிரபல பின்னணி பாடகர்பி.பி.ஸ்ரீனிவாஸ்.இசை:எம்.ரங்காராவ். இப்பாடலை பாடியவர் புகழ் பெற்ற பாடகர் முகம்மது கபூர். தற்போது இந்த கேஸட்கள் அரசியல் வட்டாரங்களில் பரபரப்புடன் விற்பனையாகின்றன.

—இல.இளங்கோவன்



கலிபோர்னியாவிலுள்ள ஸ்டீவ் சக்கோல் என்ற 24 வயது எஞ்சினியர் ஒரு புது உலக சாதனையை ஏற்படுத்தி உள்ளார். இவர் 32 மணிநேரத்தில் 52,003 தோப்புக்கரணம் போட்டு முந்தைய சாதனையையும் மிஞ்சி இருக்கிறார். பத்து வருடத்துக்கு முன் கேப்டன் அமெரிக்கா ஜோன்ஸ் என்பவர் 51,001 தோப்புக்கரணத்தை 76 மணி நேரத்தில் போட்டுள்ளார். ஸ்டீவ் அதையும் மிஞ்சி உலக சாதனையை ஏற்படுத்தி விட்டார்.

—இல.இளங்கோவன்



நான் மரக்கட்டை மாதிரி இருந்தா உங்களுக்கு உற்சாகம் வடிஞ்சு போயிடும், நானும் ஆக்டிவ் கோ ஆபரேஷன் குடுத்தாத்தான் குஷின்னு?''

"நீ மரக்கட்டை மாதிரி இருந்து பாரேன். முடியறதான்னு. மரக்கட்டைக்கும் உசுர் வர்ற மாதிரி பண்ற வித்தை ஐயாவுக்குத் தெரியும்'' என்றான்.

அதற்கு அவள் ஏதும் பதில் சொல்வதற்குள் சர்வர் இரண்டு தட்டுக்களைக் கொண்டு வந்து அவர்கள் முன் வைத்தான்.

சாப்பிடத் தொடங்கினார்கள்.

"இந்த ராஜியைப் பத்தி நீங்க என்கிட்ட சொன்னதேயில்லையே?''

"மறுபடியும் ராஜியைப் பத்தியா?''

"சொல்லுங்கோ. ஏன் அவளைப் பத்தி நீங்க இது வரையில் சொன்னதே இல்லே?''

"இதென்ன வேடிக்கையா இருக்கே? அவளைப் பத்தி நான் எதுக்காக திடீர்னு உங்கிட்ட சொல்லணும்? அதுக்கு ஏதாவது சந்தர்ப்பம் இருந்திருக்க வேண்டாமா?''

"என்னைப் பத்தி அவளோட பேசறதுக்கு மாத்திரம் சந்தர்ப்பம் இருந்ததாக்கும்? இன்னிக்குகூட ஆபீசுல என்னைப் பத்தி அவளோட பேசிண்டிருந்தேளாமே? என்ன பேசினேள்?''

"அதைச் சொல்லிட்டாளா? என்ன பேசினோம்கறதையும் சொல்லலியா?''

"அவ என்னமோ சொன்னா. நீங்க சொல்லுங்களேன்.''

"ரெண்டுபேர் சொல்றதையும் கம்பேர் பண்ணிப் பார்க்கப் போறியா?''

"அப்படித்தான் இருக்கட்டுமே. அதிலென்ன தப்பு?''

"தப்பு ஒண்ணுமில்லே. சொல்றேன்'' என்று கூறி சதீஷ் தனக்கும், ராஜிக்கும் இடையே நடந்த சம்பாஷணையை அப்படியே எடுத்துக் கூறினான்.

"அப்ப அணு அணுவா அவளோட 'பாடி'யெ நீங்க என் உடம்போட கம்பேர் பண்ணியிருக்கிங்க? அதோட மட்டுமல்ல, அதைப்பத்தி அவளோடயே பேசற அளவுக்கு உங்களுக்குள்ள சலுகை இருக்குன்னு அர்த்தமாறது'

"இல்லேன்னு நான் சொல்லலியே? ஆனா அவ உடம்பை நான் கண்ணாலெதான் ரசிச்சிருக்கேங்கறதை நீ நம்பு ரேகா. ரெண்டு பேரும் சலுகையோட பேசிக்கறோம்கறதை நான் மறுக்கல்லியே. ஆனா பேச்சோடு சரி. அதுக்கு மேல போகல்லே.''

"பேச்சு ரொம்ப நாளைக்கு பேச்சோட நிக்காது. பேச்சுல ஆரம்பிக்கறது கடைசில 'பெட்'ல போய் முடியும். அப்படியில்லாட்டாலும், ஒரு பெண்ணுக்கு தன்னோட புருஷன் இன்னொரு பெண்ணோட ரொம்ப இழைஞ்சு, இழைஞ்சு பேசறது கூடப் பிடிக்காது.''

"நீ இப்படிச் சொல்றப்ப ராஜி கற்புங்கறதைப் பத்தி ஒரு நாள் சொன்னது ஞாபகம் வறது.''

"கற்பைப் பத்திப் பேசறதுக்கு சரியான ஆள் அவதான்!''

"உனக்கு அவ மேல ரொம்ப ப்ரிஜுடிஸ் வந்துடுத்து.''

"இருக்கட்டும். அவ என்ன சொன்னா. பெண்களுக்கு கற்புங்கறது அவசியமில்லேன்னு சொன்னாளா?''

"அப்படி இல்லே. இதைப் பத்தி அவ ரொம்ப 'திங்க்' பண்ணி யிருக்காங்கறது தெரியறது. ஒருவனுக்கு ஒருத்திங்கறதுல அர்த்தமே இல்லை யாம்..."

"ஒருத்தனுக்கு நாலு பொம்பளை இருக்கணுமாமா? இல்லே, ஒருத்திக்கு நாலு புருஷன் இருக்கணுமாமா?", என்று ரேகா இடையில் குறுக்கிட்டாள்.

சொல்றதை முழுக்கக் கேளு. உலகத்துல ஜனத்தொகையில சுமாரா பாதி பேர் ஆண்களாகவும், பாதி பேர் பெண்களாகவும் அமைஞ்சுட்டதுனாலேதான் இப்படி ஒருத்தனுக்கு ஒருத்திங்கற ஏற்பாடு உண்டாச்சாம். அப்படியில்லாம, ஸப்போஸ், பெண்கள் முக்கால் பாகமும், ஆண்கள் கால் பாகமும் இருந்திருந்தா ஒருத்தனுக்கு மூணு பொண்டாட்டிங்கற மாதிரி வந்திருக்குமாம். அரேபியாவுல அப்படி பெண்கள்,ஜனத்தொகையில ஜாஸ்தியா இருந்ததுனாலதான் நபிகள் நாயகம் அந்த மாதிரி ஒரு முஸ்லிம் ஆண், நாலு முஸ்லிம் பெண்களைக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு அனுமதிச்சாராம்."

"இதுக்கும் கற்புக்கும் என்ன சம்பந்தம்?" என்று ரேகா குழம்பினாற் போலக் கேட்டாள்.

"அவ சொல்றது என்னன்னா கற்புன்னு ஒரு வார்த்தையைக் கண்டு பிடிச்சு அது பெண்கள் ஜாக்கிரதையாக் காப்பாத்திக்க வேண்டிய சொத்துன்னெல்லாம் வெச்சது ஆண்கள் தங்கள் சுயநலத்துக்காக செஞ்சதுங்கறா. உண்மையிலே அது பெண்களின் சொத்தல்ல. ஆண்களின் சொத்துதான். தனக்குன்னு ஏற்பட்ட பெண்ணை தான் மட்டுமே அனுபவிக்கணும் வேற யாரும் அவளை அனுபவிச்சுடக் கூடாதுங்கற சுயநலத்துல ஏற்படுத்தின தத்துவம் தான் கற்புங்கறது ராஜியுடைய அபிப்ராயம்."

"பெண்ணுக்கு மாத்திரம் அந்த சுயநலம் இருந்திருக்காதா? தன் புருஷன் யார் கிட்ட வேணுமானா போகட்டும்கற பரநலத்தில அவ இருந்தாளாமா?"

"பெண்ணுக்கும் அந்த சுய நலம் இருந்திருக்கலாம். ஆனா அவளால என்ன செய்ய முடியும்? எல்லா அதிகாரமும் ஆணின் கையில் தானே இருந்திருக்கு? ஆண்வெச்சது தானே சட்டமா இருந்திருக்கு? அதனாலே ஒரு பெண் அந்நிய புருஷன் ஒருத்தன் கிட்ட போயிட்டான்னா அது ஒண்ணும் பாவம் இல்லெ. கடவுள் அதுக்காக அவளை தண்டிக்கக் கூட மாட்டார். அப்படிங்கறா ராஜி".

"அவளுக்கு கல்யாணமாயிடுத்தா இல்லியா?".

"கல்யாணமாயி ரெண்டு பெண் குழந்தைகளும் இருக்காம்."

"அவ அப்ப தான் இஷ்டப் பட்டவனோடதான் போயிண்டிருக்காளாமா?"

"அது எனக்குத் தெரியாது. ஆனா அவ புருஷனோட இல்லே. தனியாத்தான் இருக்கா. அதாவது அவளோட பேரண்ட்ஸோட இருக்கா"

"ஏன்? புருஷன் அடிச்சுத் துரத்திட்டானா?"

"அதுவும் எனக்குத் தெரியாது."

"அப்படித்தான் இருக்கும். இப்படிப் பேசறவ என்னதான் செய்ய மாட்டா? அப்படிப்பட்டவளை எந்தப் புருஷன் சேர்த்துப்பான்?"

"நீ எல்லாம் தெரிஞ்சா மாதிரி பேசறே. என்னாலே அவளைப் பத்தி அப்படி நினைக்க முடியலே. கணவன் நடத்தை சரியாயில்லாம இருந்து இவளே அவனை விட்டுட்டும் வந்திருக்கலாமில்லியா?"

"இவ நடத்தை சரியாயிருந்தா தானே, கணவன் நடத்தையைப் பத்தி பேசறதுக்கு இவளுக்கு யோக்யதை இருக்கும்?"

"சரி போதும் ராஜியைப்பத்திப் பேசினது. அவ எப்படிப்பட்டவளானா நமக்கு என்ன? ராஜ்போக் ரொம்ப நல்லா இருக்கு பார். சாப்பிட்டியா" என்று சதீஷ் மறுபடியும் ராஜியைப் பற்றிய பேச்சுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தான்.

"நீங்க அவளை ஜாஸ்தி பக்கத்துல சேர்க்காதிங்க. அவ்வளவு தான் நான் சொல்வேன்" என்று ரேகா சொன்னாள்.

சதீஷ் அதற்கு பதிலளித்தால் பேச்சு மேலும் வளரும் என்பதால் மௌனமாக சாப்பாட்டில் கவனத்தைச் செலுத்தினான்.

(தொடரும்)

# ரேகா. சதீஷ். ராஜி

## 6



ஹேமா ஆனந்ததீர்த்தன்

ரேகா. சதீஷ் இருவரும் வீடு வந்து சேரும் போது மணி பத்தே கால் ஆகி விட்டிருந்தது. அவன் பெற்றோர் களும், பாபுவும் தூங்கி விட்டிருந்தார்கள். உமேஷ் மட்டும் அவன் அறையில் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தான். ட்ரான்சிஸ்டர் மட்டும் மெதுவான குரலில் எதையோ பாடிக் கொண்டிருந்தது.

இருவரும் படுக்கையறைக்குள் நுழைந்தனர். சதீஷ் தன் உடையைக் கழற்றி விட்டு வெறும் லுங்கியைக் கட்டிக் கொண்டான். ரேகா புடவை, பிளவுஸ், பெட்டி கோட், பிரா எல்லாவற்றையும் கழட்டி விட்டு பான்டிஸ் போட்டுக் கொண்டு மெல்லிசான நைட்கவுன் ஒன்றை அணிந்து கொண்டு வந்து அவன் அருகில் அமர்ந்தாள்.

"சாப்பாடு ரொம்ப ஹெவியாப் போச்சு" என்றாள் ரேகா.

"திணர்றதா?"

"ஊம்" என்று கூறி படுத்துக் கொண்டாள்.

"பாத்ரூமுக்குப் போயிட்டு வர்லியா?" என்று கேட்டபடியே தடவிக் கொடுத்தான்.

ரேகாவின் உடம்பு சிலிர்த்தது.

"நீங்க போயிட்டு வாங்க. நான் அப்புறமா போய்க்கிறேன்."

"வேண்டாம் போயிட்டு வந்துடு. அப்புறம் நீ நல்ல சரியான சமயத்துல பாத்ரூமுக்குப் போறேன்னு புறப்படுவே. எனக்கு எரிச்சலா வரும்."

"இல்லே எல்லாம் முடிஞ்சதுக் கப்புறமே போறேன். போறுமா?" என்று சிரித்தாள் ரேகா.

சதீஷ் எழுந்து அறையோடு சேர்ந்திருந்த பாத்ரூமுக்குள் நுழைந்தான்.

ரேகா புரண்டு படுத்தாள். கட்டிலை அடுத்தாற் போல் இருந்த டீபாயில் இருந்த புத்தகங்களிலிருந்து ஒன்றை உருவிப் படிக்கத் தொடங்கினாள்.

பாத்ரூமிலிருந்து திரும்பி வந்த சதீஷ், "புஸ்தகம் படிக்க ஆரம்பிச்சுட்டியா? மணி பத்தரையாகப் போறது. இப்பென்ன படிப்பு?" என்றான்.

"இதோ ஒரு பத்து நிமிஷம்"

சதீஷ் அவளருகே வந்து படுத்துக் கொண்டு அவளை அணைத்துக் கொண்டான்.

அணைத்த அவன் கையை எடுத்துத் தன் மார்புகளின் மத்தியிலே வைத்து அழுத்திக்கொண்டாள். கையை விடாமல் பிடித்துக் கொண்டே இருந்தாள். விட்டு விட்டால் அது ஒரு இடத்தில் நிலைத்து நிற்காமல் அவள் உடல் முழுவதையும் பரபரப்பாக எதையோ தேடுவது போல இயங்கத் தொடங்கி

விடும் என்று அவளுக்குத் தெரியும். அப்படி அவன் சேஷ்டை செய்யத் தொடங்கி விட்டால் அவளுக்குப் படிக்க முடியாது.

படிப்பில் அவளுக்கு அவ்வளவு ஆர்வம் என்பதனால் அல்ல அவள் அப்படிச் செய்வது. வேண்டுமென்றே தாமதம் செய்து சதீஷ் பொறுமை யிழந்து அவளை அடையத் தவிப்பதைப் பார்க்க, அனுபவிக்க அவளுக்கு ரொம்பப் பிடிக்கும். அது அவளுக்கு ஒரு விளையாட்டு.

"பத்து நிமிஷம் ஆயிடுத்து ரேகா" என்று கூறி தன் காலால் அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

"இதோ ஆச்சு"

"நான் லைட்டை அணைக்கப் போறேன்."

"என்ன இது? என்ன அவச ரம்? விடியறதுக்கு இன்னும் எட்டு மணி நேரம் இருக்கு" என்று சொன்னபடியே அவனது கையை மார்புகளின் மத்தியி லிருந்து இழுத்து தன் கன்னத்தில் வைத்து அழுத்திக் கொண்டாள். அவன் அந்தக் கையை மெதுவாக சரித்து அவள் உதடுகளைத் தடவிக் கொடுத்துக் கிள் ளத் தொடங்கினான்.

அதற்கு மேலும் ரேகாவால் தாங்க முடியாமற் போகவே புத்தகத்தை டீபாயின் மீது விட்டெறிந்து விட்டு அங் கிருந்தபடியே கட்டிலுக்குக் கீழே தொங் கிய ஸ்விட்சை அமுக்கி விளக்கை அணைத்தாள். பிறகு சதீஷின் பக்கம் திரும்பி வேகமுடன் அவனை அணைத்துக் கொண்டாள். முகத்தோடு முகம் ஒன்றி யது.

அவனது லுங்கியை அவள் அவிழ்த்து கால்கள் வழியே வெளியே இழுத்து சுருட்டி கட்டிலின் ஒரு ஓரத் தில் வீசியெறிந்தாள். பிறகு அவன் கையைப் பிடித்து இழுத்து தனது பான்டீஸ் மீது வைத்தாள். அவள் செய் கையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட சதீஷ் பான்டீஸைக் கழற்றினான்.

"கவுன் இருந்துட்டுப் போகட் டுமா?" என்று கேட்டான்.

"என்னத்துக்கு?" என்றாள்.

சதீஷ் அதையும் கழற்றினான்.

தத்தம் உடையைத் தாமே கழற்றுவதைவிட ஒருவர் உடையை மற்றவர் கழற்றுவதில் அதிக சுகம் இருப் பதை அனுபவத்தில் கண்டவர்கள் அவர்கள்.

"என்னமோ சும்மா படுத்துக் கப் போறேன்னியே?" என்று சதீஷ் அவளைச் சீண்டினான்.

அவள் வெட்கப்படுவது போல அவனது மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

கைகளும், கால்களும், உதடு களும் பரபரப்புடன், வெறியுடன் வேகத் துடன் இயங்கின.

"ஊம்" என்று சதீஷை தன் மேலே இழுத்து விட்டுக் கொள்பவள் போல ரேகா மல்லாந்து படுத்தபடி அவனை இழுத்தாள்.

"இன்னிக்கு என்னன்னு தெரி யலெ ரேகா. இப்படியிருக்கே" என்று சதீஷ் அவள் இழுப்புக்கு இணங்காமல் அவள் கையை இழுத்துத் தன் இடுப்பு மீது வைத்துக் கொண்டான்.

அவள் கை அவன் இடுப்பி லிருந்து நழுவி, அடி வயிறு, இன்னும் இன்னும் கீழே என்று சஞ்சரித்தது.

முதலில் அவளுக்கு சிரிப்பு தான் வந்தது.

மெல்லிசாகச் சிரித்துக் கொண்டே 'ஏன் இப்படி இருக்கு?' என்றாள்.

"அது தான் எனக்கும் ஆச்சரிய மாயிருக்கு."

"ஒரு நாள் கூட இப்படி இருந் ததில்லையே?"

"சும்மா படுத்துக்கப் போறேன்னு எந்த வேளையிலெ சொன்னியோ. சும்மா படுத்துக்கும்படியே ஆயிடுத்து."

"சே. நான் விளையாட்டுக்கு உங்களை சீண்டறதுக்காக சொன்னேன். நிஜமாகவே அப்படி நினைச்சா சொன் னேன்? உங்களுக்குத் தெரியாதா?" ரேகாவின் குரல் கம்மத் தொடங்கியது.

"சீ அசடே, ஏன் அழறே? இப்ப அழறுப்பல என்ன ஆயிடுத்து? பார்ப்போம். அவசரப்பட்டு நாமளா விபரீதமா எதையாவது ஏன் நினைச்சிக் கணும்?"

"இன்னிக்கு ஆபீசுல வேலை ஜாஸ்தின்னு சொன்னீங்களே, அதனாலெ இருக்குமோ? ரொம்ப உடம்பு களைச்சுப் போயிருக்கறதுனாலெ அதுக்கு ரெஸ்ட்

வேண்டியிருக்கலாம்.''

''எத்தனையோ நாள் இந்த மாதிரி வேலே ஜாஸ்தியாயிருந்தப்ப இப்படி ஆனதில்லியே? பார்க்கப் போனு இது ஒரு என்டர்டெய்ன்மென்ட்தானே? ரிலேக்சேஷன் தானே?''

''இன்னிக்கு பேசாம கவலேப் படாம படுத்துத் தூங்குங்க. நாளேக்கு சரியாயிடும்'' என்று சதீஷை இறுக அணேத்து அவன் கன்னத்தோடு தன் கன்னத்தை ஒட்ட வைத்துக் கொண்டாள். அப்படியே சில நிமிடங்கள் மௌனமாகக் கழிந்தன.

''உனக்கு ரொம்ப ஏமாத்தமா இருக்கா ரேகா?''

''என்னே விட எனக்கு உங்களே நிணேச்சாத்தான் பாவமாயிருக்கு... நீங்க தான் ரொம்ப ஆசையாயிருந்திங்க.''

''தூக்கம் கூட வராதே.''

''எல்லாம் வரும். இதைப் பத்தியே நிணேச்சுண்டிருந்தாத்தான் தூக்கம் வராது. ஃபர்கெட் அபவ்ட் இட்.''

''ரொம்பச் சுலபமா சொல்லிட்டியே ரேகா. முடியற காரியமா இது?''

''நீங்க இப்படிப் போட்டு மனசை அலட்டிண்டா எனக்கு கஷ்டமா இருக்கு. நான் இங்கே உங்க பக்கத்துலே இல்லேன்னு நிணேச்சுண்டு தூங்குங்க.''

''நீ மறுபடியும் இந்த மாதிரி எதையாவது பேசி வைக்காதே ரேகா. இன்னிக்கு உன் நாக்குலெ சனி உக்காண்டு உன்னே என்னென்னவோ பேச வைக்கறது. சும்மா படுத்துக்கப் போறேன்னு நீ விளையாட்டுக்குச் சொன்னலும் அது இப்படி விணேயாயிட்டுது. இப்ப என் பக்கத்துல நீ இல்லேன்னு நிணேச்சுக்கச் சொல்றே. அதே மாதிரி இல்லாம போயிடப் போறே?''

''ரொம்ப நன்னருக்கு. என் நாக்குல சனி உக்காண்டிருக்கறது இருக்கட்டும். உங்க மனசுல என்ன பிசாசு உக்காண்டு உங்களே இப்படி பலஹீனப்படுத்திடுத்து? ஒரே சூபர்ஸ்—டிஷஸா போயிட்டிங்களே திடீர்னு?''

''நாளேக்கு சரியாப் போயிடும் கறியா?''

''கண்டிப்பா நாளேக்கு என்ன? இன்னிக்கே கூட சரியாயிடலாம். நீங்க சவுண்டா ஒரு தூக்கம் போட்டு ரிஃப்ரெஷ் ஆயி எழுந்திருங்கோ. எப்ப முழிச்சிண்டாலும் சரி. விடியற்காலேயிலெ முடிச்சுண்டாலும் கூட பரவாயில்லே. லெட் அஸ் ட்ரை அகெய்ன் ஓ. கே.?'' என்று கேட்டு அவனேக் கட்டியணேத்து நீண்டதொரு முத்தத்தை வழங்கி விட்டு சிறிது





"உன் பக்கத்து வீட்டுக்காரியோட மாமியார் ஊருக்குப் போயிட்டாங்கன்னு நீ ஏன் ரொம்ப வருத்தப்படறே?"

"அவங்க ரெண்டு பேரும் போடற சண்டையை வேடிக்கை பார்த்துட்டிருந்தா எனக்கு நேரம் போறதே தெரியாது. இனிமே என்ன பண்றது? ரொம்ப போரடிக்குமே"...

—மரிய ஜோசப்

விலகி திரும்பிப் படுத்துக் கொண்டாள்.

பத்து நிமிடங்கள் கூடக்கழிந்திருக்காது.

"ரேகா" என்று கூப்பிட்டு அவள் இடுப்பின் மீது கைவைத்தான்.

"என்ன?" என்று கேட்டபடியே ரேகா திரும்பினாள்.

அவன் தயாராகி விட்டானோ என்ற ஒரு ஆவல், அவள் மனத்தில்.

"அந்த ஆபரேஷன் பண்ணிண்டேனே, அதனாலெ ஏதாவது கோளாறு இப்ப வந்திருக்குமோ?" என்று அவன் கேட்டதும் அவளுக்கு பொசுக்கென்று ஏமாற்றமாகப் போய்விட்டது.

அவன் நிலையில் மாறுதல் ஏதுமில்லை.

"ஆமா, நீங்க ஒண்ணு. பதினைஞ்சு வருஷம்ஆச்சு ஆபரேஷன் பண்ணிண்டு. இத்தனை நாளா ஒண்ணும் இல்லாம இப்ப ஏன் இப்படி ஆகணும்? அதெல்லாம் ஒண்ணும் இருக்காது."

"எதுக்கும் நாளைக்கு குடும்ப டாக்டரை கன்ஸல்ட் பண்ணிட்டா தேவலைன்னு தோணறது."

"எதுக்கும் அவசரப் படாதிங்கோ. ரெண்டு நாள் பார்ப்போமே. தானே சரியாயிட்டாலும் ஆயிடலாம். என்னதான் குடும்ப டாக்டர்னாலும் இதுக்குப் போய் கன்ஸல்ட் பண்ணு அவமானமில்லையா?"

"சரி. சொல்றபடியே ஆகட்டும்."

"உங்களுக்கு ஆபீஸ் விஷயமா ஏதாவது கவலை இருக்கா?"

"இல்லியே, ஏன்?"

"இல்லே, இன்னிக்கு வந்த கல்கண்டுலெ போட்டிருந்தான்—அதிகமாக சிகரெட் குடிக்கறவங்களுக்கு, அதிகமாக டிரிங்க்ஸ் எடுத்துக்கறவங்களுக்கு, ஜாஸ்தி தூக்க மாத்திரை சாப்பிடறவங்களுக்கு, ரொம்ப கவலைப் படறவங்களுக்கு இவங்களுக்கெல்லாம் இந்த மாதிரி ஆறதுக்கு சான்ஸ் உண்டாம். சிகரெட், ட்ரிங்க்ஸ், ஸ்லீபிங் பில்ஸ் இதெல்லாம் பழக்கம் கிடையாது. அதனாலெ கவலை ஏதாவது இருக்குமோன்னு கேட்டேன்."

"அது ரொம்பத் தீவிரமான கவலையாயிருந்தா, தீர்க்க முடியாத கவலையாயிருந்தா அப்படி ஆகலாம். சாதாரண கவலைக்கெல்லாம் அப்படி ஆறதா இருந்தா ஆம்பளைகள்லெ நூத்துக்கு எழுபத்தைஞ்சு பேர் இம்பொடென்டா இருக்கணும். கவலையில்லாத மனுஷன் யார் இருக்கான்?"

"இம்பொடென்ட் கிம்பொடென்ட்னெல்லாம் ஏன் பெரிய வார்த்தைகளைச் சொல்றிங்க? அப்புறம் அதுவே மனசைப் பாதிச்சு, இல்லாததைக்கூட வருத்தி வெச்சுடும்."

"கல்கண்டுலெ அப்படிப்பட்ட கண்டிஷனுக்கு ஏதாவது மருந்து கூட சொல்லியிருப்பானே? சொல்லியிருக்கானா?"

"ஊம், ஏதோ போட்டிருந்தது. நான் அக்கறையோட படிக்கலெ. இப்ப எடுத்துப் பார்க்கலாமா?"

"பாரு"

ரேகா எழுந்திருக்காமலே ஸ்விட்சைப் போட்டு டீபாயில் தேடினாள். தேடிய கல்கண்டு இதழ் கிடைத்தது. அதை எடுத்துப் புரட்டிப்பார்த்து, "இதப் பாருங்க. இது இப்பத் தான் என் கண்ணிலெ பட்டுது. வேற எங்கியோ இன்னும் என்னமோ போட்டிருந்தான்" என்று கூறி ஒரு பகுதியை விரலால் சுட்டிக் காட்டியபடி சதீஷிடம் கொடுத்தாள்.

சதீஷ் அதை மெதுவான குரலில் படித்தான்...

"கத்திரிக்காய் கூடத் தமிழ் மூலிகைகளில் சிறப்பு இடத்தைப் பெற்றிருக்கிறது. இதனைச் சித்தர்கள் மிகுந்த மரியாதையுடன் பத்தியக் கறி என்று அழைத்துள்ளார்கள். இது உடலுக்குச் சூட்டினைத் தந்து வலிமையைத் தரக்கூடியது. தாது பலம் பெருகும். பித்தம், கபம் ஆகிய வற்றைத் தணித்து வாயுவை வெளி யேற்றும் தன்மையும் இதற்கு இருக் கிறது. புதுமணத் தம்பதிகளுக்கு இல்லறச் சோர்வை நீக்கி நாட்டம் கொள்ளச் செய்யும் தன்மையும் இதற்கு உண்டு"

படித்து முடித்து விட்டு ஒரு வறண்ட சிரிப்பு சிரித்தான்.

"கத்திரிக்காய்க்கு இப்படி ஒரு சக்தி இருக்குன்னு இப்பத்தான் தெரியுது. எனக்கு பதினெட்டு வயசாயிருந்தப்ப ஒரு சொறி மாதிரி உடம்பு பூரா வந்து பதினஞ்சு இருபது நாளைக்கு ரொம்பக் கஷ்டப்பட்டுட்டேன். அப்ப இதே குடும்பராவ் தான் வைத்தியம் பண்ணி சொஸ்தம் பண்ணினார். அப்ப அவர் சொன்னார், இனிமே சாப்பாட்டுல கத்திரிக்காயை சேர்த்துக்காதேன்னு. அன்னிக்கி விட்டவன் தான். இன்னி வரையிலும் கத்திரிக்காயைத் தொடல்லே."

"எதுல்லயும் அப்படி ஒரு எக்ஸ்ட்ரீமா இருக்கக்கூடாது. நாளை யிலேர்ந்து வாரத்துக்கு ரெண்டு நாள் கத்தரிக்காய் சேர்த்துக்குங்க."

"அம்மா கேட்டா, என்னடா திடீர்னு கத்திரிக்காய் சாப்பிட ஆரம்பிச் சிட்டேன்னு? என்ன சொல்றது?"

"என்னத்தையாவது சொல்றது. அதைப்பத்தி என்ன பெரிய கவலை? அதை எங்கிட்ட விட்டுடுங்கோ, நான் சமாளிச்சுக்கறேன்."

"வேற என்னமோ போட்டி ருக்கான்னு சொன்னியே எங்கே?" என்று கேட்டு சதீஷ் பக்கங்களைப் புரட்டினான்.

"இங்கே கொண்டாங்கோ, நான் எடுத்துத் தரேன்" என்றாள் ரேகா.

"எனக்கே கிடைச்சுடுத்து. இது தானே" என்று கூறி இன்னொரு பக்கத்திலிருந்து படிக்க ஆரம்பித்தான்.

"தாது பலமின்றி சுக்கிலம் நீர்த்துப் போய் அதன் காரணமாக இல்லற வாழ்வில் சோர்வு கண்ட வர்கள் கத்திரிக்காய், உருளைக் கிழங்கு, முருங்கைக்காய், வெங்காயம் போன்றவற்றை உணவுடன் சேர்த்து அன்றாடம் உண்டு வர வேண்டும். சுக்கிலம் பலம் பெறும்."

"உருளைக்கிழங்கு, வெங்காயம் நீங்க நிறைய சாப்பிட்டுண்டுதானே இருக்கிங்க? முருங்கைக்காய் வேணு ஜாஸ்தி சாப்பிடறதில்லே."

"இதுல போட்டிருக்கற மாதிரி யெல்லாம் எனக்கு ஒண்ணும் தாதுபலம், தாதுபலம் எல்லாம் இல்லாமப் போயி டல்லே. மை கண்டிஷன் இஸ் க்வைட் டிஃபரென்ட்னு நினைக்கறேன்."

"உங்க கண்டிஷன் இஸ் க்வைட் ஆல்ரைட். யூ நீட் ரெஸ்ட் ஃபர் டுடே. தட்ஸ் ஆல்" என்று கூறி ரேகா விளக்கை அணைத்தாள்.

"இப்படியே வா படுத்துத் தூங்கறது? கவுன் போட்டுக்கலையா?" என்று ரேகாவைக் கேட்டபடி சதீஷ் தன் லுங்கியை கால் விரல்களினாலேயே இழுத்து, மாட்டிக் கொண்டான். ரேகா வும் எழுந்திருந்து பான்டீஸைப் போட் டுக் கொண்டு, கவுனையும் மாட்டிக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

(தொடரும்)

"அப்பா நானும் சுதாவும் ஒரே மார்க்குப்பா"...

"எவ்வளவு மார்க்கு"......

"அதான் சொன்னேனே ஒரே மார்க்குன்னு"...

—பவித்ரா



# மாதவி ஒரு அன்லக்கி

## பைரவி பதில்கள்





* மாதவமணி, சென்னை-8

மணியார்டர் பாரத்தில் ரூபாய் 100/- எனக்குறித்தேன். அந்த இரண்டு சைபர்களுக்குள்ளும்— தொலை தூரத்து கிராமத்திலிருக்கும் எனது தாயின் அன்பு விழிகள் எனக்குத் தெரிந்தன....இது போல் நீங்கள் அனுப்பி-உங்களுக்கு ஏதாவது தெரிந்ததா...?

உங்களுக்கு அனுப்புவதற்கு அம்மா இருக்கிறார்கள். நான் அவர்களை அனுப்பி விட்டல்லவா சம்பாதிக்க ஆரம்பித்தேன்!

* ராமலிங்கம், குனியமுத்தூர்.

எனது காதலி மின்னல் பூப்பறித்து அவளுடைய கண்களில் சூடிக் கொண்டாள். அவள் சூடிய மலர்கள் வாடாமலர்களாய் என் நெஞ்சைப் பறிக்கின்றன... எனது வலியைப் போக்க வழி சொல்வீர்களா...?

பூக்களைத்தான் பறிப்பார்களென்று கேள்விப்பட்டிருக்கிறேன். பூக்களுக்கும் கைகள் முளைத்தால் அவைகள் நகம் வெட்டுவதற்கு கத்திரிக்கோல்களுக்கு எங்கே போகும்? ஜன்னல் பூவோடு சல்லாபிப்பதற்கே நேரமில்லை. அதற்குள் நீர் மின்னல் பூவிற்குப் போய் விட்டீரே!

* எஸ்.தேன்மொழி, தேனாம்பேட்டை.

"எத்தனை செல்வங்கள் வந்தாலுமே எத்தனை இன்பங்கள் தந்தாலுமே அத்தனையும் ஒரு தாயாகுமா...? அம்மா... அம்மா... எனக்கது நீயாகுமா...?" என்று தொடங்கும் பாடலைக் கேட்டதுண்டா...?

மனிதனைப் பின்னுக்குத் தள்ளி விடுகிற எத்தனையோ பாடல்கள் வானமெல்லாம் நிறைந்திருக்கின்றன. கடந்து போன காலத்தை முன்னுக்குத் தள்ளிக்கொண்டு வந்து நமது கண்களை ஈரப்படுத்திவிடுகிற அந்த அற்புதமான பாடல் என் நெஞ்சிலேயே உறைந்து கிடக்கிறது.

* பழனிவேல், கோயம்புத்தூர்-4.

சிவந்த பழங்களைக் கொத்தி கொத்தித்தான், பச்சைக்கிளிகளின் மூக்குகள் சிவப்பாயிருக்கின்றன...! சிவந்த மலர்களைச் சூடியும் கூட இளம் பெண்களின் கூந்தல் ஏன் கருப்பாகவே இருக்கிறது...?

மூக்கு மட்டும் சிவப்பாக இருக்கிறபோது பக்கத்திலிருக்கிற உடல் மட்டும் ஏன் பச்சையாக இருக்கிறது? என்பதற்கு முதலில் பதில் சொல்லுங்கள். பிறகு நான் சிவந்த மலர்கள் சூடியவர்களுக்கு கூந்தல் ஏன் சிவக்கவில்லை... வெள்ளை மலர்களைச் சூடியவர்களுக்கு ஏன் வெளுக்கவில்லை என்பதைச் சொல்லுகிறேன்.

* ஆர். பழனிசாமி, ராமசெட்டிபாளையம்,

'உடம்பைப் பத்திரமாக கவனித்துக் கொள்ளுங்கள்' என்று வெளியூர் புறப்படும்போதெல்லாம், என் மனைவி... கவனப்படுத்தி என்னிடம் சொல்கிறாள். இதில் ஏதாவது ஆழ்ந்த அர்த்தம் இருப்பதாக உங்களுக்குத் தெரிகிறதா...?

ஆழ்ந்து பார்க்க வேண்டிய அவசியம் என்ன வேண்டியிருக்கிறது? மேலாகப் பார்த்தாலே தெரிகிறதே! எதற்கும் எங்கு சென்றாலும் அவர்களையும் ஒருபெட்டியில் வைத்து கொண்டு போய் விடுங்களேன்.. அறிவுரைக்கு அவசியமிருக்காது.

* நெல்லைகாதர், தேனாம்பேட்டை,

நபிகள் நாயகத்தின் வாழ்க்கையில் தங்களைக் கவர்ந்த அம்சம்?

'என் மகன் எப்போது பார்த்தாலும் இனிப்பு சாப்பிடுகிறான். அவனுக்கு நீங்கள் அறிவுரை சொல்லவேண்டும்' என்று ஒரு தாயார் நபிகளிடத்திலே முறையிட்டார். உடனே நபிகள் ஆறு







யால் முடியாததில்லை மெய்ப்பித்திருக்கின்றனர்.

வீட்டுக்குள்ளேயே அத்யாவசியக் காய்கறி கீரைகளை விளைக்க யோசனையும் கூறி விதைகளையும், உரங்களையும் கூட விற்கிறார்கள். விமானமாய் பறக்கும் விலைவாசிக் காலத்தில் சகாயமாய்ப் பெற்றுக் கொள்ள சரியான வழிதான்!

பூக்களுக்கு மத்தியிலே ஆங்காங்கே சில பூவையர்... வண்ணக் கலவைகளும் வெள்ளைத்தாள்களும், நீண்ட தூரிகைகளுமாக... அதே GLADIOLI VERBENA, ASTER, PETUNIA செடிகளின் புன்சிரிப்புப் பூக்கள் விழிக் காமிராவில் படமெடுத்து வெள்ளைத் தாள்களில் வடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

பூச் செடிகளைச் சுற்றி அந்தப் பூமேனிப் பெண்கள் அந்தப் பூவையரைச் சுற்றி சில பொன் வண்டுக்கூட்டம்... ஓவியக் கலைக்கல்லூரி மாணவிகளுக்கு மலர்க்கண்காட்சி அரிய பயிற்சிக் கூடம்!

இயற்கையின் அதிசயத்தில்—

இறைவனின் தரிசனத்தைக் கண்ட இன்பத்துள்ளல்! ●

புகைப்படங்கள்: ஜெயமாலிகா

*இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.*

**—ஹேமா ஆனந்ததீர்த்தன்**

# ரேகா-சதீஷ்-ராணி



ஹேமா ஆனந்ததீர்த்தன்

ஜூலை 14 (செவ்வாய் கிழமை) திடீரென்று கண் முழித்துக் கொண்ட சதீஷ் டீபாயின் மீது கழற்றி வைத்திருந்த தனது கைக்கடிகாரத்தை எடுத்து மணி பார்த்தான். மணி மூன்று. ஆங்கில சம்பிரதாயப்படி அடுத்த நாள் பிறந்து விட்டது.

ரேகா மல்லாந்து படுத்தவாறு ஆழ்ந்த நித்திரையிலிருந்தாள். ஜன்னல் வழியாக தெரு விளக்கின் வெளிச்சமோ அல்லது நிலா வெளிச்சமோ அறைக்குள் வந்து கட்டிலின் மீது விழுந்து கொண்டிருந்தது.

ரேகாவின் வட்ட வடிவமான அழகிய முகம் மனோகரமான காட்சியாக இருந்தது. அளவில் சிறியவைகளானாலும் கவிழ்த்த கிண்ணங்களைப் போல உறுதியாகவும், அமைப்பாகவும் இருந்த மார்பகங்கள் அவள் விடும் மூச்சுக்கு ஏற்ப உயர்ந்தும் தாழ்ந்தும் இயங்கிய போது லேசான நைட் கவுனின் ஊடே ஐஸ்க்ரீமின் மீது வைத்த செர்ரிப் பழங்கள் போல அவளின் முலைக்காம்புகள் கண்களைப் பறித்தன.

சதீஷின் கை அவைகளை நோக்கி முன்னேறியது. ஆனால் அடுத்த

விருடியே கையைப் பின்னுக்கிழுத்துக் கொண்டான். அவளை எழுப்ப அவனுக்கு தைரியம் வரவில்லை. எழுப்பி அவளைத் திருப்திப்படுத்த முடியுமாயிருந்தால் பரவாயில்லை. அப்படியில்லாமல் அநாவசியமாக அவளுள் நம்பிக்கையை எழுப்பி ஏமாற்றமடையச் செய்ய வேண்டி வந்து விட்டால் அது அவளை விட அவனுக்குப் பெரிய அதிர்ச்சியாகி விடும்.

பத்து நாட்களுக்கு முன் இதே மாதிரி ஒரு அவஸ்தை அவனுக்கு ஏற்பட்டதை இப்போது நினைவு படுத்திக் கொண்டான். ஆனால் அப்போதிருந்த மனநிலைக்கும் இப்போது இருக்கும் மன...க்கும் எவ்வளவு வேறுபாடு?

இதே மாதிரிதான் அன்றைக்கும் விடியற்காலையில் மூன்று மணிக்கு அவனுக்கு முழிப்பு ஏற்பட்டு விட்டது. பிறகு தூக்கம் வரவில்லை. ரேகா இன்று போலவே அன்றும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் தூக்கத்தைக் கெடுத்து அவளை எழுப்பவும் அவனுக்குத் தயக்கமாக இருந்தது. அவளை எழுப்பியே ஆக வேண்டுமென்ற தேவையும் அவனுக்கு இருந்தது. காரணம் முதல் நாளிரவு அவன் வழக்கமான அந்த இன்பச் செயலைத் தவறவிட்டு விட்டான். காரணம் அவன் தகப்பனாருக்கு திடீரென்று உடல்நிலை சரியில்லாமற்போனதுதான். பத்தரை மணி சுமாருக்கு, சதீஷும் ரேகாவும் படுக்கப் போகும் சமயத்துக்குச் சரியாக அவன் தாயார் வந்து அவர்கள் அறைக் கதவைத் தட்டினாள். கதவைத் திறந்து என்னவென்று விசாரித்த போது அவன் தகப்பனார் நெஞ்சுவலி என்று அவஸ்தைப்படுவதாகச் சொன்னாள். உடனே டாக்டருக்கு போன் செய்து ...வர் வந்து பார்த்து, அப்பொழுதே ...ஜி எடுத்து, கடைக்குப் போய் மருந்துகள் வாங்கி வந்து கொடுத்து அவர் வலி குறைந்து தூங்குவதற்கு பன்னிரண்டு மணிக்கு மேலாகி விட்டிருந்தது. அதன் பிறகுதான் அவனும் ரேகாவும் படுக்கச் சென்றனர். படுத்த போதிலும் நிம்மதி இருக்கவில்லை. எந்த விநாடியிலும் மறுபடியும் கதவு தட்டப்பட்டு தகப்பனாரின் நிலை பற்றி ஏதாவது செய்தி வரக்கூடும் என்கிற கவலை இருந்தது. மேலும் தகப்பனாரின் நிலை அப்படி இருக்கும் போது, தான் மனைவியுடன் சுகம் அனுபவிப்பது தவறாகும் என்கிற மனச்சாட்சியின் உறுத்தலும் இருந்தது. ரேகாவின் மனநிலை எப்படி இருந்ததோ? ஆனால் அவளும் சதீஷின் மனநிலையைப் புரிந்து கொண்டு அதற்கு மதிப்புக் கொடுத்து அவனைச் சோதனைக்காளாக்காமல் 'பேசாமல்' இருந்து விட்டாள்.

மூன்று மணிக்கு விழித்தெழுந்த சதீஷுக்கு முன் இரவு இருந்த வைராக்கியம் இருக்கவில்லை. அதுவரையில் அவன் தகப்பனாரின் உடல்நிலை பற்றி கவலைக்கிடமான செய்தி எதுவும் வராததால் அவரது நெஞ்சுவலி வெறும் வாயு உபத்திரவத்தினால் ஏற்பட்டதாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. மனத்தில் நிம்மதி பிறந்தது. உடல், முன்னிரவு தவற விட்ட சுகத்திற்காகத் தவிக்கத் தொடங்கியது.

கல்யாணமாகும் போது அவனுக்கு வயது இருபத்து மூன்று. ரேகாவுக்குப் பதினாறு. அன்றிலிருந்து கடந்த பத்தொன்பது வருடங்களாக அவன் அவளை ஒரு நாள் கூட 'விட்டிருந்ததில்லை.' அதாவது பிரசவத்திற்காக அவள் தாய்வீடு போயிருந்த சமயங்கள், மாதம் மூன்று நாட்கள் அவள் 'காஷுவல் லீவ்' எடுக்கும் சமயம் இவை தவிர. ஆனால் அதில் ஒரு விசேடம் என்னவென்றால் ஒருநாள்கூட அவள் விருப்பமில்லாமல் அவன் அவளைக் கட்டாயப் படுத்தியது கிடையாது.

எனவே அன்று விடியற்காலையில் தயங்கினான். அவளுக்கு விருப்பம் இருக்குமோ இருக்காதோ என்ற சந்தேகம் அவனுக்கு இருந்தது. கடைசியில், அகஸ்மாத்தாக தூக்கத்தில் புரள்வது போலப் புரண்டு அவளைக் கட்டியணைத்து, எழுப்பிவிட்டான். அவளிடமிருந்து கிடைத்த 'ரெஸ்பான்ஸ்' உற்சாக மூட்டுவதாக இருக்கவே, அவனுக்கு மகிழ்ச்சி. பிறகு தடையென்ன?

ஆனால் இன்றோ?

வேண்டாம் சோதனை என்று நினைத்து திரும்பிப் படுத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் தூங்கிப்போய் விட்டான்.

ரேகா திடீரென்று விழித்துக் கொண்டாள். ஸ்விட்சை அழுத்தி விளக்கு வெளிச்சத்தில் மணியைப் பார்த்தாள். சுவரில் இருந்த கடிகாரம் நான்கு மணி என்று காட்டியது.

விளக்கை அணைத்து விட்டு சதீஷின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் முதுகைத்தான் பார்க்க முடிந்தது.

விளக்கைப் போட்ட போது கூட அவன் எழுந்திருக்காததால் நன்ருகத் தூங்குகிருன் என்று தெரிந்தது.

எழுப்புவதா, வேண்டாமா என்ற பிரச்சினை அவளுக்கும் எழுந்தது. நீங்க எப்ப முழிச்சிண்டாலும் சரி, லெட் அஸ் ட்ரை அகெய்ன் என்று அவள் சொல்லியிருந்தது உண்மை. அவனுக்கு நம்பிக்கையூட்டுவதற்காக அவ்வாறு அவள் சொல்லியிருந்த போதிலும் அவளுக்கு நம்பிக்கையிருக்கவில்லை. பயமாக இருந்தது.

அவனாக எழுந்திருந்து தன்னை எழுப்பியிருந்தால் பரவாயில்லை. வெற்றியானுலும் தோல்வியானுலும் பொறுப்பு அவனுடையதாகி விடும். இப்போது தான் எழுப்பி, ஒரு சமயம் மறுபடியும் அவனுடைய இயலாமை வெளிப்படு மாருல் அவனை அவமானப் படுத்தியது போலாகி விடும். அல்லது தனக்கு அடக்கம் இல்லை என்று அவன் நினைத்துக் கொண்டு விடக்கூடும்.

பயப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று தனக்குத் தானே தைரியம் சொல்லிக் கொள்வதற்கு அவள் முயன்றும் அவளுக்கு உள்ளூர ஏதோ பயம் அரிக்கத் தொடங்கி விட்டது.

நாற்பத்திரண்டு வயது தானே ஆகிறது சதீஷுக்கு? இந்த வயதில் கூட இப்படி ஆகி விடுமா? சே, இருக்காது.

அவளுக்கு தன் சொந்த ஊரான கோயமுத்தூரில் வெங்குட்டு மாமா என்பவரின் ஞாபகம் வந்தது. அவருக்கு அறுபத்திரண்டாவது வ... குழந்தை பிறந்தது. மூன்ருவது மனைவி. அவளுக்கு வயது நாற்பதுதான். அந்தக்



குழந்தை அவருக்குப் பதின்மூன்ருவது. இதைப் பற்றி கேலியாக மற்றவர்கள் பேசிக் கொள்வதை ரேகா கேட்டிருக்கிருள். அது மட்டுமல்ல. அவரைப் பற்றி இன்னென்றும் கூடச் சொல்வார்கள். வெங்குட்டு மாமா கோயமுத்தூரில் பிரபல வக்கீல். நல்ல சம்பாத்யம். உல்லாச புருஷர். வீட்டில் மனைவி போதாதென்று ஊரில் இரண்டு மூன்று வைப்பாட்டிகள் வேறு இருந்தார்களாம். அவருக்கு ராத்திரி பத்து மணி வரை ஒருத்தி வீட்டிலும், அதன் பிறகு ஒரு மணி வரை இன்னெருத்தி வீட்டிலும், ஒரு மணிக்கு மேல் — வீட்டில் அல்லது மூணுவது வைப்பாட்டியின் வீட்டிலும் ச[illegible]பாராம். 'இந்த வயசில் இவரால் [illegible]ன பண்ண முடியும்? சும்மா துணைக்குப் பக்கத்துல படுக்க வெச்சுண்டு இருந்துட்டு வருவாராயிருக்கும்' என்று கிண்டலாகச் சொல்லிக் கொண்டிருந்தவர்களெல்லாம்கூட அறுபத்திரண்டாம் வயசில் அவருக்குப் பிள்ளை பிறந்ததும் அதிசயித்து வேறு விதமாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள் 'ஆம்பளைக்கென்ன, வயசுன்னு உண்டா? சாகறவரைக்கும் அவங்களுக்கு அது இருந்துகிட்டேதான் இருக்கும்' என்று வயதான சில மாமிகள் பேசுவதை ரேகா கேட்டிருக்கிருள்.

அப்படியிருக்க சதீஷுக்கு நாற்பத்திரண்டு வயதில் எப்படி அப்படி ஆக முடியும்?

அவனுக்கு ஒன்றுமில்லாமல் பழையபடி ஆகி எல்லாம் நல்லபடியாக ஆக வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. அவள் இஷ்ட தெய்வம் ஆஞ்சநேயர். ஆனல் ஆஞ்சநேயரிடம் இந்த விஷயத்தைப் பற்றிப் பிரார்த்தித்துக் கொள்வது [illegible]பாக இருக்குமா என்ற சந்தேகமும் [illegible]வே அவள் மனத்தில் உதித்தது. ஆஞ்சநேயர் பிரம்மச்சாரி என்று சொல்வார்கள். அவரை பூஜிக்கும் போது கூட நல்ல தூய்மையோடிருக்கவேண்டும் என்றும், காம சம்பந்தமான எண்ணங்கள் மனத்தில் தோன்றுவதுகூட அவருக்கு சினத்தை உண்டாக்கும் என்றும் சொல்லக் கேட்டிருக்கிருள். அப்படிப்பட்ட தெய்வத்திடம் எனக்குப் புருஷ சுகத்தைக் கொடு என்று கேட்டால், அதற்கு அர்த்தம் தனக்கு அவனுல் கிடைக்கக் கூடிய சுகம் கிடைக்கச் செய்!... என்பதுதானே? அவள் மனம் குழம்பியது.

அவர்கள் குலதெய்வம் சோளிங்கபுரம் நரசிம்ம சுவாமி. குலதெய்வத்திடம் மானசீகமாக வேண்டிக் கொண்டாள். சதீஷுக்கு குறை ஒன்றும் இல்லாமல் இருந்தால் இரண்டு பேரும் உன் சன்னிதிக்கு வந்து பன்னிரண்டு நாள் சேவை செய்கிருேம் என்று. அதோடுகூட வெள்ளியில் என்று நினைக்கத் தொடங்கியவளுக்கு அந்த நிலையிலும் சிரிப்பு வந்தது. கை, கால், காது, கண் என்கிற உறுப்புகளில் ஏதாவது ஊனம் இருந்தால் அதைப் போல வெள்ளியில் செய்து போடுகிறேன் என்று வேண்டிக்கொள்வார்கள். சதீஷ் விஷயத்தில் எப்படி வேண்டிக் கொள்வது? கடையில் போய் என்ன கேட்பது? ஒன்றும் தோன்ருமல் ஒரு மனித உருவத்தையே (ஆணின் உருவம் தான்) வெள்ளியில் செய்து போடுகிறேன் என்று வேண்டிக் கொண்டாள்.

அப்படியே பலவற்றையும் நினைத்தபடி ரேகா தூங்கிப் போய் விட்டாள்.

மறுபடியும் அவள் விழித்துக் கொண்ட போது நன்ருக விடிந்து விட்டிருந்தது. மணியைப் பார்த்தாள். ஆறே முக்கால்.

சதீஷ் இன்னும் எழுந்திருக்கவில்லை. தூங்கிக் கொண்டிருந்த அவன் முகத்தைச் சில விநாடிகள் ஏக்கத்துடன் பார்த்தாள். எவ்வளவு ஆண்மைபொங்கி வழிகிற முகம்!

சதீஷ் மல்லாந்தபடி படுத்திருந்தான். அவனது பரந்த மார்பு, வலிமை நிறைந்த தோள்கள், ஒட்டிய வயிறு, என்று ஒவ்வொரு உடல் பகுதியிலும் ஆண்மையின் பொலிவுதான் அவளுக்குக் காணப்பட்டது.

அப்படியிருக்க நேற்றைய இரவின் தோல்விக்கு என்ன காரணமாக இருக்க முடியும்?

சில விநாடிகள் அவனது தூங்கும் வடிவத்தையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு ஒரு நீண்ட பெருமூச்சுடன் எழுந்து, நைட் கவுனை அவிழ்த்தெறிந்து விட்டு ஒரு புடவையைக் கட்டிக் கொண்டாள். பிளவுஸையும் போட்டுக் கொண்டு பாத்ரூமுக்குள் நுழைந்து கொண்டாள்.

சுமார் பதினைந்து நிமிடங்கள் கழித்து அவள் வெளியே வந்த போது சதீஷ் கட்டிலில் எழுந்து உட்கார்ந்திருந்தான். கால்களைத் தரையில் பதிய வைத்தபடி தலையைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.



கன்னியிவள் 'கண்கள்
கயலெனும் மீன்களல்ல...
காளையரைச் சுண்டியிழுக்கும்
தூண்டில் முட்கள்!

—"ஓம்சக்தி"யில் மேனகா.

ரேகா அவனருகில் வந்து நின்று கொண்டு அவன் தலைமுடியில் தன் விரல்களை நுழைத்து லேசாக அதை சிலுப்பி விட்டபடி, "உடம்புக்கு ஒண்ணும் இல்லையே? எழுந்து பல் தேய்க்கறேளா? காப்பி கொண்டு வரேன்" என்று கேட்டாள்.

சதீஷ் தலையை நிமிர்த்தி அவளது வயிற்றின் மீது சாய்ந்து கொண்டான். அவன் கை அவளது 'பட்டக்ஸை'ச் சுற்றி வந்து இடையைப் பற்றிக் கொண்டது.

"எழுந்திருங்கோ. பி சீயர் ஃபுல்" என்று அவன் கன்னத்தில் மிருதுவாகத் தட்டிக் கொடுத்து விட்டு, தன்னை அவன் அணைப்பிலிருந்து மெதுவாக விடுவித்துக் கொண்டு அறையை விட்டு வெளியேறினாள்.

பல் தேய்த்து முகம் கழுவிக் கொண்டு மீண்டும் கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்ட சதீஷ் கைக்குக் கிடைத்த ஒரு வாரப்பத்திரிகையை எடுத்து பக்கங்களைப் புரட்டினான். அதிலிருந்த ஒரு விளம்பரம் அவன் கவனத்தை ஈர்த்தது. படித்தான்.

மதன ரத்ன குளிகை

"இந்தக் குளிகையை தேவையான நாட்களில் உபயோகப்படுத்தி உடலில் ஏற்படும் பலஹீனத்தை மாற்றி, விரைவில் தளர்ச்சியாவதைப் போக்கி உடல் பலமும், ஊக்க சக்தியும் பெறலாம். சாப்பிட்ட இரண்டு மணி நேரத்தில் குணம் கிடைப்பதாக உபயோகித்தவர்கள் கூறுகிறார்கள். ஆசையிருந்தும் செயல்படுத்த முடியாத நிலையில் இருப்பவர்களுக்கு நிவாரணமளிக்கிறது. நீங்களும் இதன் குணத்தைப் பெற விரும்பினால் இன்றே வாங்கி உபயோகப்படுத்திப் பாருங்கள். 15 குளிகை கொண்ட புட்டி 1-க்கு ரூ.15.00. தபால் செலவு தனி. தேவைக்கு எழுதவும். வி.பி.பி. உண்டு."

கணக்கற்ற முறைகள் படித்த பத்திரிகை இது. இதுவரை இந்த விளம்பரம் அவன் கண்களில் பட்டதில்லை. இதுவரை இந்த விளம்பரம் இந்தப் பத்திரிகையில் வராமலா இருந்திருக்கும்? கண்டிப்பாக வந்திருக்கும். ஒவ்வொரு இதழிலும் வந்திருக்கக் கூடும். அப்படியிருக்க இன்று ஏன் இது அவன் கண்களில் பட வேண்டும்? அதுவும் எழுந்திருந்ததும் எழுந்திருக்காததுமாக. காலை

வேலையில்? அதன் தேவை அவனுக்கு ஏற்பட்டு விட்டது என்று அர்த்தமா?

இந்த விளம்பரங்களையெல்லாம் எவ்வளவு தூரம் நம்ப முடியும்? எல்லாம் மோசடிகளாக இருக்கும்.

என்று கசப்புணர்ச்சியுடன் இன்னும் சில பக்கங்களைப் புரட்டினான். மீண்டும் ஒரு விளம்பரம். அதையும் படிக்கத் தூண்டியது அவன் மனநிலை. வேண்டா விருப்பத்தோடுதான் படித்தான்.

ஆண்மை குறைவுக்கு சிகிச்சை

"என் அருமை வாலிப நண்பர்களே,

இப்பவும் தங்கள் திரேகம் மிகவும் இளைத்து நாடி நரம்புகள் தளர்ச்சியடைந்து, இல்லற வாழ்க்கையில் சக்தி இழந்து வயோதிகர்களைப் போல் காணப்படுகிறீர்களா? இதற்குக் காரணம் என்ன?

நீங்கள் வாலிபத்திலே தெரியாமல் செய்கிற தவறுகளினால் இப்போது உங்கள் உடல் உஷ்ண மிகுதியால் கண் எரிச்சல், முகம் ஒட்டிப் போதல், பார்வைக் குறைவு, கை கால் அசதி, கெட்ட கனவு மூலம் சக்தி வெளியாதல், சிறுநீரில் சக்தி வெளியாதல், உறுப்புகள் தளர்ச்சியடைதல், தலைவலி, வயிற்றில் வலி, மலச்சிக்கல், இடுப்பு, முதுகு, நடுதண்டில் வலி, கை கால் மூட்டுக்களில் வலி, நரம்புகளில் ஓய்ச்சல், பயம், வெட்கம் இவைகள் ஏற்பட்டு இவைகளைப் பிறரிடமோ, பெற்றோர்களிடமோ சொல்ல வெட்கப்பட்டுக் கொண்டு மணவாழ்க்கைக்கு முன் கஷ்டப்படுகிறார்கள் ஒரு சிலர், மணமான பின் இல்லற வாழ்க்கையில் இன்பம் பெற முடியாமல் கஷ்டப்படுகிறார்கள் மற்றும் பலர். இம்மாதிரியான ஆண்மை குறைவு வியாதியஸ்தர்களுக்கு நாங்கள் சிகிச்சை அளிக்கிறோம். பாதிக்கப்பட்டவர்கள் தேவையான சிகிச்சை பெறலாம். ஒரு மாத சிகிச்சைக்கு ஸ்பெஷல் செட் 1-க்கு ரூ.30. No1. ஸ்பெஷல் செட் 1-க்கு ரூ. 50. V.P.P. உண்டு. தேவைக்கு எழுதவும்."

அதற்கு மேல் அந்தப் பத்திரிகைகளின் பக்கங்களைப் புரட்டத் துணிச்சல் இல்லாமல் அதை தரையில் வீசி எறிந்தான். மேலும் பக்கங்களைப் புரட்டினால் ஒவ்வொரு பக்கத்திலும் இதே போன்ற விளம்பரங்கள் இருந்து தன்னைக் கேலி செய்வது போல இருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது.

இந்த விளம்பரங்களில் கூறப்பட்டிருப்பது போன்ற எந்த விதமான குறைகளும் தனக்கு இல்லையே? அவைகளில் கூறப்பட்டிருப்பது போல், தான் வாலிபத்தில் தெரியாமலோ தெரிந்தோ எந்த விதமான தவறுகளையும் செய்ததில்லையே?

வாலிபத்தில் தவறு செய்வதற்கு வாய்ப்பில்லாமல் சிறுவயதிலேயே அவனுக்கு ரேகாவுடன் கல்யாணம் நடந்து விட்டது. இருபத்து மூன்று என்பது அப்படி ஒன்றும் சிறுவயது என்று சொல்ல முடியாதுதான். தவறு செய்பவர்களாயிருந்தால் பதினெட்டு வயதிலே கூட செய்ய முடியும். ஆனால் சதீஷ் அப்படி பிஞ்சிலே பழுத்தவனாக இருக்கவில்லை. மேலும் ரேகா ஒரு வகையில் கல்யாணத்திற்கு முன்பே அவனுக்கு வேறு வகையில் தூரத்து உறவினளாக இருந்தாள். அவர்கள் ஒருவரையொருவர் மணம் செய்து கொள்ளப் போவதும் உறவினர்களிடையே நிச்சயமாகி ரேகா சதீஷுடன் ஒரு உரிமையோடு பழகி வந்தாள்.

அவ்வாறு உரிமையோடு பழகி வந்த போதிலும் இருவருமே அத்துமீறி நடந்ததில்லை. அதற்காக தொட்டாலும் ஏதாவது ஒட்டிக் கொண்டுவிடும் என்கிற மாதிரியாகவும் கட்டுப்பெட்டி கர்நாடகங்களாகவும் இருக்கவில்லை.

தொடுவது, தடவுவது, கிள்ளுவது, உராய்வது, லேசாக அணைப்பது இதுபோன்ற சில்லறை விளையாட்டுக்கள் அவர்களிடையே நடந்து கொண்டுதான் இருந்தன. ஒரு வகையில் இதுவே அவனை வேறு பெண்களிடம் நாட்டம் கொள்ளாமல் தடுத்திருக்கவும் கூடும்.

அந்த காலகட்டத்தில் அவனுக்கு கல்யாணமும் நிச்சயமாகி முகூர்த்தத்திற்கு இன்னும் இரண்டு மாதங்கள் இருந்தபோதுதான் அவனை அதிர்ச்சியடையச் செய்யுமாறு அது நிகழ்ந்தது.

தொடர்ந்தாற் போல இரண்டு மூன்று நாட்கள் கனவுகள் ஏதோ காண்பதும், கனவிலேயே இந்த விளம்பரங்களில் விவரித்திருக்கிறாற் போல சக்தி விரயமாவதும் நிகழ்ந்தது. கனவு காண்



அட்டையில்
அம்பிகா

கிற பொழுதில் சுகமாக இருந்த போதி லும் விழித்தெழுந்தவுடன் அவனுக்கு அதிர்ச்சியாக இருக்கும். அவ்வாறு நேர்வது பலவீனத்தின் அறிகுறி என்றும், நாளை மறுநாள் கல்யாணமான பிறகு மனைவியைத் திருப்திப்படுத்த முடியாத நிலை தோன்ற வாய்ப்பிருக்கிறதென்றும் அவனது நண்பர்கள் சிலர் அவனை பயமுறுத்திவிட்டார்கள். இதுபோன்ற சில விளம்பரங்களும் அவன் அனுபவித்த நிலையை மிக்வும் பயங்கரமான தாகக் காட்டி, பின் விளைவுகள் இல்லற வாழ்க்கைக்குக் குந்தகம் உண்டாகும் என அச்சுறுத்தின. எனவே யாருக்கும் தெரியாமல் ஒரு ஆயுர்வேத வைத்தியரிடம் சென்று தனது நிலைமையை விளக்கி அவர் கொடுத்த ஐம்பது குளிகைகளை வாங்கிக் கொண்டு வந்து தேனில் குழைத்துச் சாப்பிட்டான்.

கல்யாணமான பிறகு அனுபவத்தில் தன் பயங்களுக்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்பது தெரிந்ததும், மேற்கொண்டு அந்த குளிகைகளைப்பற்றி அறவே மறந்து விட்டான்.

அதன் பிறகு இப்பொழுது தான் மீண்டும் பத்தொன்பது வருடங்களுக்குப் பிறகு அவனுக்கு இது போன்ற விளம்பரம், மருந்து இவைகளின் தேவை பற்றிய எண்ணம் எழுந்திருக்கிறது.

ரேகாவிடம் கூட அவன் இந்தச் சம்பவத்தைப் பற்றிச் சொன்னதில்லை. கல்யாணத்திற்கு முன் நடந்தது என்பதால் அவளுக்கு அதைப்பற்றிச் சொல்ல வேண்டிய தேவை இல்லை என எண்ணித்தான் அவன் அவ்வாறு அதை அவளிடம் தெரிவிக்காமல் இருந்தான்.

காப்பி டபரா டம்ளருடன் உள்ளே நுழைந்த ரேகா வாரப் பத்திரிகை கீழே கிடப்பதைக் கண்டு, "ஏன் இது இப்படி தரையில் கிடக்கிறது?" என்று கேட்டபடியே அதை இடது கையால் எடுத்தாள்.

காப்பி டபராவை கணவன் கையில் கொடுத்துவிட்டு அந்தப் பத்திரிகையை எடுத்து டீபாயின் மீது வைக்கப் போனாள்.

"நான்தான் அதைக் கீழே தூக்கி எறிஞ்சேன்."

"ஏன்?"

"சும்மா இப்படி புரட்டிப் பார்த்தேன். என்னமோ அட்வர்டைஸ்மெண்ட்ஸ் கண்ணுல பட்டுது. பிடிக்கலெ தூக்கி எறிஞ்சேன்."

"அப்படி என்ன அட்வர்டைஸ்மெண்ட்?"

"என்னமோ மதன ரத்ன குளிகையாம், தங்கபஸ்பமாம்..."

"சிட்டுக் குருவி லேகியம்?"

"ஊம். அதுவும்தான்."

"அதையெல்லாம் எதுக்கு பாக்கறீங்க? ஐ டெல் யூ. உங்களுக்கு ஒரு டிஃபெக்டும் இருக்காது. இன்னிக்கி ராத்திரி பாருங்க. யூ வில் ஆக்ட் லைக் எ bull" என்று கூறி ரேகா சிரித்தாள்.

நம்பிக்கையில்லாமல் சதீஷும் வறண்ட சிரிப்பொன்றை உதிர்த்தான்.

"நிஜமாத்தான். அதுக்கு வேண்டிய மருந்து என் கிட்ட இருக்கு. நீங்க கவலைப்படாம உங்க வேலையைப் பாருங்க. இதைப் பத்தியே யோசனை பண்ணாதிங்க. ராத்திரி எல்லாம் சரியாப் போயிடும்." என்று மிகுந்த உற்சாகத்துடன் ரேகா சொன்னாள்.

"அப்ப அந்த மருந்தை நேத்திக்கே ஏன் கொடுக்கலே?"

"அதான் சொன்னேனே. நேத்திக்கி உங்களுக்கு ரெஸ்ட் வேண்டியிருந்தது. அதனாலெதான்."

"இன்னிக்கு விடிகாலையிலாவது நீ எழுந்ததும் என்னையும் எழுப்பி அந்த மருந்தைக் கொடுத்திருக்கலாமே"

"நான் எழுந்திருக்கறப்பவே ரொம்ப லேட்டாயிடுத்து. நீங்க அசந்து தூங்கிண்டிருந்தேள். அதனாலெதான் எழுப்பலெ... சரி, நான் போறேன். சமையலுள்ளுலெ உங்க அம்மாவுக்கு ஹெல்ப் பண்ணணும்" என்று கூறிவிட்டு, அவன் திரும்பித் தந்த காலி டபரா டம்ளரை எடுத்துக் கொண்டு வெளியேறினாள். சதீஷ் ஷேவ் செய்து கொள்ளலாமென்று எழுந்தான்.

(தொடரும்)

# 8

# ரேகா... சதீஷ்... ராஜ்

ஹேமா ஆனந்ததீர்த்தன்

காரில் ஆபீசுக்குச் சென்று கொண்டிருந்த போது சதீஷின் மனத்தில் ஏதோ ஒரு நெருடல். ஏதோ ஒரு பயம். ஏதோ ஒரு நம்பிக்கை. எல்லாம் கலந்த ஒரு நமைச்சல். பரீட்சை ரிஸல்டுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் ஒரு மாணவனின் நிலை. கெட்டிக்கார மாணவனுக இருந்தாலும் பரவாயில்லை. படுமட்டமான மாணவனுக இருந்தாலும் பரவாயில்லை. இருவருக்குமே ரிஸல்டைப்பற்றிய கவலை இல்லை. அது தெரிந்ததுதான். ரிஸல்ட் இருவர் விஷயத்திலும் வெவ்வேறு என்பது தான் வித்தியாசம். நடுவாந்தரத்தில் இருக்கும் மாணவனின் பாடு தான் திண்டாட்டம். அந்த நிலையில் தான் சதீஷ் இருந்தான்.

ஆபீஸ் நெருங்க நெருங்க சதீஷுக்கு ராஜியைப் பற்றிய நினைவு வரத் தொடங்கியது. அவளோடு இன்று ஜாக்கிரதையாகப் பேச வேண்டுமென்று நினைத்துக் கொண்டான். ரேகாவுக்கு அவள் பேரில் நல்ல அபிப்ராயம் விழவில்லை. இதை தன் பேச்சில் காட்டிவிடக்கூடாது. கூடுமானவரை ரேகாவைப் பற்றிய பேச்சே வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டே ஆபீஸை அடைந்தான்.

மேஜை முன்னுல் போய் உட்கார்ந்ததும் வழக்கம் போல மேஜை இழுப்பிலிருந்து ஒரு சின்ன நோட்டுப் புத்தகத்தை எடுத்து ஆண்டவன் துணை, விநாயகர் துணை, முருகன் துணை என்று எழுதி, நோட்டுப் புத்தகத்தை மூடி வைத்தான். எவ்வளவோ வருடங்களாக இந்த வழக்கத்தை அவன் கைக்கொண்டிருந்தான். இயந்திரம் போல அந்த வேலை தினம் தவருமல் நடந்து விடும் (லீவு நாட்களைத் தவிர.)

ஆனுல் அன்று அதை எழுதும் போது, இயந்திர கதியில் எழுதாமல் அவன் மனம் உருவமற்ற ஆண்டவனையும், படங்களிலும் கோவில்களிலும் பார்த்துப் பழக்கப்பட்ட விநாயகரின் உருவத்தையும், முருகனின் உருவத்தையும் நினைத்து வேண்டிக் கொண்டது.

"எனக்கு ஏற்பட்டுள்ள இந்த சோதனை நேற்ருேடு முடிந்து விட்டதாக இருக்கட்டும். இன்றைக்கோ இனிமேலோ தொடர வேண்டாம். என்னுல் அதைத் தாங்கிக் கொள்ள முடியாது" என்று பிரார்த்தித்துக் கொண்டான்.

பியூன் உள்ளே நுழைந்து சில ஆங்கிலப் பத்திரிகைகளை மேஜை மீது வைத்து விட்டுப் போனுன். அந்தக் காரியாலயத்தில் பல பத்திரிகை க்ளப்கள் நடந்து வந்தன. பத்துப் பதினைந்து அங்கத்தினர்கள் சேர்ந்து ஒரு க்ளப். மாதம் பத்து ரூபாய் சந்தா. எல்லாப் பத்திரிகைகளையும் வாங்கி அங்கத்தினர்களுக்குள் சர்குலேட் செய்து கொண்டு வாசிப்பார்கள். அப்படிப்பட்ட

ஒரு க்ளப்பில் சதீஷும் அங்கத்தினனாக இருந்தான். அந்த கிளப் ஆர்கனைஸர் தான் அந்தப் பத்திரிகைகளை அனுப்பி யிருந்தான்.

அசுவாரஸ்யமாக அவைகளில் ஏதோ ஒன்றை இழுத்துப் புரட்டிப் பார்க்கத் தொடங்கினான். பத்திரிகையின் பெயர் Fashion. பெண்களுக்கான பத்திரிகை. ஒரு பக்கத்தில் சிவப்பு மையால் யாரோ ஒரு பகுதியை சைட் லைன் போட்டுக் குறித்திருந்தார்கள். அதனால் அது சதீஷின் கவனத்தைக் கவர்ந்தது. தலைப்பு Male Sexuality என்றிருந்தது.

அது செக்ஸ் சம்பந்தமான ஒரு க்விஸ்.

சதீஷ் அதைப் படித்தான்.

Men will continue to have erection.
(a) till their 60th year
(b) till their 70th year
(c) throughout their life time.

விடைகள் வேறு பக்கத்தில் கொடுக்கப்பட்டிருந்தன. ஆர்வத்துடன் அந்தப் பக்கத்தைப் புரட்டி விடையைப் பார்த்தான்.

விடை (c) என்றிருந்தது. கூடவே, unless for other reasons like diabetes, emotional disturbances or physical injuries caused due to accidents etc. their potency has been affected என்று போட்டிருந்தது.

சதீஷுக்கு ஏனோ இதைப் படித்ததும் வெகு உற்சாகமாக இருந்தது. அவன் நினைத்திருந்த விடை (a) வயது மட்டும் என்பதுதான், வி (b) யாக இருந்திருந்தால்கூட அவனுக் ரொம்ப மகிழ்ச்சியாக இருந்திருக்கு (c) விடையாக இருக்குமென்று அவ கொஞ்சம்கூட எதிர்பார்த்திருக்கவில்

ஆனால்—

அந்த விடை சரியானத இருக்குமானால் தனக்கு 42வது வயதி ஏன் இப்படி?

அதில் சொல்லப்பட்டிருப்ப போல ஏதாவது ஒரு காரணத்தினால் த உடலில் பாதிப்பு ஏற்பட்டிருக்குமோ தனக்கு விபத்து ஏதும் நேரிடவி அதன் காரணமாக உடலில் காயமோ அடியோ ஏதும் படவில்லை. அப்ப யானால் டயபிடீஸ் இருக்குமோ? இல்ல விட்டால் மனக்கவலை ஏதாவ தன்னையே அறியாமல் தன் மனத்தை குடைந்து கொண்டிருக்கிறதோ? ே இருக்காது.

டயபிடீஸ் இருக்கிறதா என் வேண்டுமானால் டெஸ்ட் செய்து பார் துக் கொள்ளலாம். ஆனால் டயபிடீ இருப்பவர்களுக்கெல்லாமா இப்படி ஆ விடும்?

அக்கவுண்டண்ட் வரததே கனுக்கு டயபிடீஸ் தான். இருபது வருட மாக அவருக்கு அந்த கம்ப்ளெய்ண் இருப்பதாகச் சொல்லுகிறார். மனுஷனுக் ஐம்பது வயதாகிறது. போன மாசம்தான் ஆறாவது குழந்தையைப் பெற்றாள் அவ மனைவி.



இந்தப் பத்திரிகையில் போட்டிருப்பது சுத்தப் பேத்தல் என்று நினைத்தபடியே அதை வீசி எறிந்தான்.

''குட் மார்னிங் சார்'' என்று கூறியபடியே கதவை பாதி திறந்து கொண்டு ராஜி அவன் உத்தரவை எதிர்பார்த்தபடி நின்ருள்.

சல்வார்—கமீஸ்— துப்பட்டாவில் விளங்கினுள் ராஜி. வெள்ளையில் சின்ன சின்ன நீலப்பூக்கள் போட்ட துணி. இரட்டைப்பின்னல்.

''யெஸ், கம் இன் ராஜி''

உள்ளே வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

''நேத்து நானும், ரேகாவும் ரொம்ப நேரம் உன்னைப் பத்தியே பேசிண்டிருந்தோம்'' என்ருன் சதீஷ். உடனே அவ்வாறு சொன்னதற்காக தன்னைத்தானே நொந்து கொண்டான். ராஜியோடு ரேகாவைப் பற்றி அதிகம் பேசக் கூடாது என்று ஆபீசுக்கு வரும் போது நினைத்துக் கொண்டு வந்ததை மறந்துவிட்டு எடுத்த எடுப்பிலேயே ரேகாவைப் பற்றிய பேச்சை ஆரம்பித்து விட்டோமே என்று வருந்தினுன்.

''அப்படியா? என்னைப் பத்தி அவ்வளவு பேசறதுக்கு என்ன இருக்கு?'' என்ருள் ராஜி சிரித்தபடியே.

''எப்படியோ பேச்சு உன்னுடைய செக்ஸ் ஐடியாஸ் பத்தி திரும்பிடுத்து. அன்னிக்கி நீ வினயா வாசுதேவனேடை பேசிண்டிருந்தது எனக்கு ஞாபகம் இருந்தது. சொன்னேன்.''

''அவங்க அதையெல்லாம் ரஸிச்சிருக்க மாட்டாங்களே? ரஸிக்கறது இருக்கட்டும், ஒத்துட்டிருக்க கூட மாட்டாங்களே?''

''ஊம்.''

''என்னை அவங்களுக்கு பிடிச்சிருக்கா?''

''ஏன், பிடிக்காம என்ன?''

''கேள்விக்கு பதில் கேள்வி கேக்காதீங்க, டைரக்டா பதில் சொல்லுங்க.''

''ரொம்ப தர்ம சங்கடமான கேள்வி.''

''அப்ப அவங்களுக்கு என்னைப் பிடிக்கல்லேன்னு தான் அர்த்தம்.''

''அப்படி இல்லே. அவளுக்கு உன்னைப்பற்றி இன்னும் நிறைய தெரிஞ்சுக்கணும்னு ஆசை. எனக்கே உன்னை பத்தி ஜாஸ்தி ஒண்ணும் தெரியாதே. அவளுக்கு நான் என்னத்தை சொல்றது?''

''என்னைப் பத்தி என்ன தெரிஞ்சிக்கணும்னு ஆசைப்பட்டாங்க?''

''உன் ஹஸ்பண்டைப் பத்தி, நீ ஏன் அவரை விட்டுட்டு வந்துட்டேங்கறதைப் பத்தி.''

''ஐஸீ'' என்று கூறிய ராஜியின் முகம் ஒரு மாதிரியாகக் களையிழந்துவிட்டதை சதீஷால் கவனிக்காமலிருக்க முடியவில்லை.

''நீ கோபிச்சுக்காம இருந்தா நான் ஒண்ணு சொல்லட்டுமா?''

''சொல்லுங்களேன்.''

''நேத்து சினிமா பார்த்துண்டிருந்தப்ப எனக்கு பம்பாய்ல, நான் இருந்தப்ப எனக்குத் தெரிஞ்ச ஒருத்தரோட ஞாபகம் வந்தது.''

''ஊம்.''

''அவர் பேர் சௌரிராஜன். அவரோட மனைவி அவரை விட்டுட்டுப் பிறந்த வீட்டுக்குப் போயிட்டா. உன் ஹஸ்பண்டும் அந்த சௌரிராஜனைப் போல இருப்பாரோன்னு எனக்கு ஒரு சந்தேகம் வந்தது.''

''அந்த சௌரிராஜன் எப்பேர்ப்பட்டவர், என்ன செஞ்சார்ங்கறதையெல்லாம் சொன்னுத்தானே?''

''சொல்றேன். ஆனு நீ வருத்தப் படக்கூடாது. முன்பின் தெரியாத உன் ஹஸ்பண்டைப் பத்தி நான் இவ்வளவு கேவலமா நினைச்சுட்டேனென்று கோபப் படக்கூடாது. ஏன்னு அந்த சௌரிராஜன் அவ்வளவு கேவலமானவன்.''

''சொல்லுங்கோ. உங்க மேலே எனக்குக் கோபமோ, வருத்தமோ எதுவுமே வராது. நீங்க என்னை எப்படி நினைக்கிறேளோ எனக்குத் தெரியாது. ஆனு நான் உங்களை என்னேட பெஸ்ட் ஃப்ரெண்டா நினைச்சுண்டிருக்கேன்''

சதீஷ், சௌரிராஜன் கதையை விரிவாகக் கூறி முடித்தான். முடித்து விட்டு ராஜியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான்.

''நிச்சயமாக என் ஹஸ்பண்ட் சௌரிராஜனைப் போல் அல்ல'' என்ருள்.

"ஐ எம் வெரி ஸாரி"

"யூ நீட் நாட் பி. அவர் சௌரி ராஜனைப் போல அல்லன்னு சொன்னேனே ஒழிய அவர் நல்லவர்னோ, சாதுன்னோ, ஏதுமறியாத அப்பாவின்னோ நான் சொல்லலையே? சௌரிராஜன் ஒரு விதத்துல அவன் மனைவியைக் கொடுமைப்படுத்தினான். என் ஹஸ்பண்ட் இன்னொரு விதத்துல என்னைக் கொடுமைப் படுத்தினான்."

கொடுமைப்படுத்தினான் என்று கணவனை ஒருமையில் அவள் பேசியதைக் கேட்டு சதீஷ் திடுக்கிட்டான். கணவனை மட்டும் அல்லாமல் சௌரி ராஜனையும் அவள் ஒருமையிலேயே பேசினாள்.

சாதாரணமாக கணவனை இந்த மாதிரி அலட்சியமாகவும், அவமரியாதையாகவும் பேசும் பெண்களை சதீஷுக்குப் பிடிக்காது. தன் வீட்டு வேலைக்காரி கூட அவள் புருஷனைக் குறித்துப் பேசும் போது 'அது வந்துச்சு, சொல்லிச்சு, சொன்னா கேக்க மாட்டேங்குது' என்று அஃறிணையில் பேசுவதைக் கண்டித்து அவர் வந்தாரு, சொன்னாரு, சொன்னா கேக்க மாட்டேங்கறாரு என்று பேச வைத்தவன் அவன். எவ்வளவு தான் கணவன் கெட்டவனாக இருந்தாலும், அவனை மனைவி மரியாதைக் குறைவாகப் பேசுவது அநாகரிகம் என்பது அவன் எண்ணம்.

தன்னுடைய அந்த எண்ணத்தை அவனால் வெளிப்படுத்தாமல் இருக்க முடியவில்லை.

"எக்ஸ்யூஸ் மீ ராஜி, உன் கணவர் எவ்வளவுதான் கெட்டவரா இருந்தாலும் அவரை அவன் இவன்னு மரியாதைக் குறைவா பேசறது நல்லா யில்லே" என்றான்.

"என் புருஷன்கற ஒரே காரணத்துக்காகவா?"

"ஆமா."

"கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்... இல்லியா?" என்று கேலிச் சிரிப்போடு ராஜி கேட்டாள்.

"ஏன், அதை நீ ஒத்துக்கலியா?"

"அதை ஒத்துண்டிருந்தா நான் இப்படித் தனியா வந்திருக்க வேண்டிய அவசியமே நேர்ந்திருக்காது."

"அதை ஏன் நீ ஒத்துக்கக் கூடாது?"

"எதுக்காக ஒத்துக்கணும்? அப்படிச் சொல்றவா யாரு? என்னென்னிக்கும் பெண்களைத் தங்களோட அடிமைகளா வெச்சிண்டிருக்க நினைக்கறவா பிரசாரம் பண்ணின பழமொழி அது. வேதவாக்கியம் ஒண்ணும் இல்லே."

"நீ விமன்ஸ் லிப் மூவ்மெண்டைச் சேர்ந்தவ போலிருக்கு."

"நான் விமன்ஸ் லிப் மூவ்மெண்டையும் சேர்ந்தவளில்லே. பெண்ணுங்கறவளுக்கும் ஒரு மனசு, ஆசை, வெறுப்புங்கறதெல்லாம் உண்டு. அதுக்கு மதிப்புக் கொடுத்து நடந்துக்கற புருஷனுக்குத்தான் அவளும் மரியாதை கொடுக்கணும்னு நம்பறவ. பெண்களை ஒரு ப்ராபர்ட்டியாக நினைக்கற ஆம்பளைகளை பெண்கள் எதுக்காக மதிக்கணும்?"

ராஜியின் பேச்சில் சூடேறியிருந்தது.

சதீஷ் அவளுக்கு ஒன்றும் பதில் சொல்லாமல் அவள் மேலே பேசுவதற்காகக் காத்திருந்தான்.

"என் புருஷன் என்னை எப்படி நடத்தினான்கறதை நீங்க தெரிஞ்சுண்டா நான் மரியாதைக் குறைவா பேசறதா நீங்க நினைக்கவே மாட்டீங்க."

"சொல்லு."

"நான் எதைச் சொல்றது, எதை விடறதுன்னு எனக்குத் தெரியலே. விஷயமெல்லாம் ரொம்ப டெலிகேட்

வயது வந்தவர்களுக்காக 'செக்ஸ் ஷாப்ஸ்' என்று கூறப்படும் ஆபாசப் புத்தகம் மற்றும் ஆபாச சினிமாக்கள் காட்டும் கடைகள் அமெரிக்காவில் உள்ளன.

இதிலே கூட்டம் கிடையாது. வெளி நாட்டிலிருந்து வருபவர்களே இந்தக் கடைகளுக்குச் சென்று அங்கு காட்டப்படும் சினிமாவைப் பார்க்கின்றனர்.

—தேனி முருகேசன்

டானது. இதுவரையிலும் நான் எங்க பேரன்ட்ஸ்கிட்டக் கூட சொன்னதில்லே.''

''உனக்கு இஷ்டமில்லாட்டாலோ, வெளியே சொல்ல முடியாத விஷயங்களாயிருந்தாலோ, சொல்லணும்கற கட்டாயமில்லே.''

''இஷ்டமில்லாம இல்லே. ஆன்டி காண்ட் ரேரி யார் கிட்டயாவது மனசு திறந்து என் துக்கத்தையெல்லாம் கொட்டிடணும்னுதான் எனக்குத் தவிக்கறது. கூச்சம் தான் தடுக்கறது. செக்ஸ் பத்தி உங்க கூட கூச்சமில்லாம எவ்வளவோ பேசியிருக்கேன் தான். ஆனு சொந்த விஷயம்னு வரும் போது...''

''எங்கிட்ட சொல்ல வேண்டாம். ரேகா கிட்ட வேணு சொல்லு. ரேகாவை வரவழைக்கிறேன். இல்லாட்டா நம்ம வீட்டுக்கு வா.''

''நோ, நோ. வேண்டாம். உங்களோட பேசறதே மேல். அவங்களோட பேசறதுக்கு எனக்கு இன்னும் கூச்சம் ஜாஸ்தியாயிடும்.''

சதீஷுக்கு ஒரு சந்தேகம் முளைவிட்டது. தன்னைப் போல ராஜியின் கணவனுக்கும் ஏதாவது ஆகி விட்டிருக்குமோ? சே, இருக்காது. அப்படியிருந்தால் அவனைக் கொடுமைக்காரன்னு ஏன் சொல்ரு? அவன் மேல் பரிதாபம் அல்லவா ஏற்பட்டிருக்க வேண்டும்?

''சரி எங்கிட்டயே சொல்லலாம்னு தோணிரு சொல்லு. நீ என்ன சொன்னுலும் இது என்னுேடயே இருக்கும். ரேகாவுக்கு கூட சொல்ல மாட்டேன்.''

ராஜி சிறிது நேரம் தயங்கினுள்.

சதீஷும் அவள் மனத்தை திடப்படுத்திக் கொள்வதற்கு அவகாசம் கொடுத்து, மௌனமாக மேஜை மீதிருந்த பத்திரிகைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு புரட்டத் தொடங்கினுன்.

''என்னைப் பத்தி நீங்க இது வரையிலும் என்ன கேள்விப்பட்டிருப்பிங்களோ எனக்குத் தெரியாது. அது எதுவாவேனு இருந்துட்டுப் போகட்டும். இப்ப என் வாயாலேயே கேட்டுக்குங்க.

''எனக்கு கல்யாணமானது என் இருபத்தி மூணுவது வயசுல. அடுத்த வருஷமே கல்யாணி பிறந்தா. அடுத்த இரண்டு வருஷத்துக்கெல்லாம் கீதா பிறந்தா, இப்ப அவங்களுக்கு ஆறு வயசு. நாலு வயசு ஆறது.

''கீதாவுக்கு ரெண்டு வயசாயிருக்கப்ப நான் அவரை விட்டுட்டு எங்க பேரன்ட்ஸோட வந்துட்டேன். இந்த ரெண்டு வருஷமா தனியாத்தான் இருக்கேன் என்றுலும் என் குழந்தைகளாலும் என் பேரன்ட்ஸுக்கு சுமை வேண்டாங்கறதுக்காகத்தான் இந்த வேலையிலெ வந்து சேர்ந்தேன்.

''எனக்கு கோர்வையா கதை சொல்ற மாதிரி சொல்லத் தெரியலெ. அப்படியப்படியே மனசுக்கு வந்ததை சொல்லிடறேன். சில சமயங்கள்ல கொஞ்சம் க்ரூடாவே சொல்ல வேண்டியிருந்தாலும், என்னைப் புரிஞ்சிண்டு மன்னிச்சிடுங்க.

''கல்யாணமாயி இரண்டு மூணு வாரம் சாதாரணமாத்தான் இருந்தது. எனக்கு ஒண்ணும் விபரீதமாத் தோணலே. சந்தோஷமாவேதான் கழிஞ்சது. அப்புறம்தான் கொஞ்சம் கொஞ்சமா எனக்கு ஒரு அசமாதானம் தோண ஆரம்பிச்சுது. எனக்கும் என் புருஷனுக்கும் சரிப்பட்டு வராதோங்கற பீதி தோண ஆரம்பிச்சுது.

''எங்க ரெண்டு பேருக்கும் 'செக்ஸுவல் இன்கம்பாடிபிலிடி' இருக்கறதை கொஞ்சம் கொஞ்சமா உணர ஆரம்பித்தேன்.

''யார் மேல குத்தம் சொல்றது? அவருக்கே (அவரை அவர் என்றே மனசு நினைத்த, வாய் பேசிய காலம் அது) அந்த உணர்ச்சி ஜாஸ்தியோ அல்லது எனக்கே குறைச்சலோ தெரியாது. அவருக்கு ஈடுகொடுக்க என்னுலே முடியலேங்கறது மாத்திரம் தெளிவாத் தெரிஞ்சுது.

''அவருக்கு நான், அதாவது என் உடல், தினமும் தேவையாயிருந்தது. அதுவும் ஒரு முறை இருந்தால் போதாது. இரண்டு தடவை. சில நாட்களில் மூன்று தடவைகூட வேண்டியிருந்தது. எனக்கோ இரண்டு மூன்று நாளுக்கு ஒரு தடவை இருந்தால் போதும் போலத் தோன்றியது.

''இயற்கையின் அமைப்பு அப்படி இருந்தால் அதை நாம குறை கூறமுடியாதுதான். ஆனு நம்ம உடம்பை அது போற போக்குல விட்டுடாம கட்டி ஆளத் தெரியணும். அதுவும் நம்ம உடம்பு ஈடுபடற ஒரு காரியத்துலெ

இன்னொரு உடம்பும் பாதிக்கப் படற போது அந்த மற்ற உடலுக்குடையவ ருக்கு அது வேண்டியிருக்கா இல்லையா என்கிற அனுசரணை இருக்கணும். நான் எவ்வளவோ அட்ஜஸ்ட் பண்ணிக்கப் பார்த்தேன். ஆனா முடியலே. என் உடம்புலே இல்லாத சக்தியை நான் எப்படிக் கொண்டு வந்துக்க முடியும்? ஓரளவுக்குத் தான் அது சாத்தியம். ஆனால் அவர் உடம்புலே இருந்த அபரிமிதமான சக்தியை அவர் கட்டுப் படுத்திக்கக் கொஞ்சம் கூட தயாரா யில்லே.

"வெட்கத்தை விட்டு உங்க கிட்ட எல்லாத்தையும் சொல்றதுன்னு ஆரம்பிச்சாச்சு. இனி மறைச்சு வைப் பானேன்? எல்லாத்தையும் சொல்லிட றேன். சில நாட்கள்லெ சந்தர்ப்பம் கிடைக்கறபோது பகல் வேளைகளில் கூட படுக்கையறைக்கு அழைப்பார்.

"அவருடைய இஷ்டத்துக்கு நான் இணங்காட்டா அந்த ஆத்திரத் துல வேற எதையாவது நொண்டிச் சாக்கை வைத்து கத்தி ஆர்ப்பாட்டம் செய்வார்.

"என்னுடைய இஷ்டப் பிரகாரம் அவர் நடந்துக்கலையேங்கறதுக்காக நானும் கத்தி ஆர்ப்பாட்டம் செய்ய எனக்குச் சுதந்திரம் இருக்கலே. எனக் கென்ன 90% பெண்களுக்கு அந்தச் சுதந்திரம் இந்த இண்டியாவுலே இல்லே.

"எட்டாம் மாசம் முடியும் மட்டும் என்னை பிரசவத்துக்காக பிறந்த வீட்டுக்கு அனுப்ப சம்மதிக்கலே. அதைப் பத்திப் பரவாயில்லே. ஆனா அந்த நிலையிலும் எனக்கு கடைசிநாள் வரை யிலும் அவரிடமிருந்து விடுதலை கிடை யாது.

"இதுல ஒரு வேடிக்கை சொல்ல மறந்துட்டேனே. ஒரு சமயம் அவருக்கு ஆபீசுல ஏதோ தொந்தரவு. தொந்தர வென்ன ஏதோ தப்பு செஞ்சு அது கண்டு பிடிக்கப்பட்டு வேலையே போயி டும் போல ஒரு ஸ்டேஜ். ஏழெட்டு நாள் பைத்தியம் பிடிச்சவர் மாதிரி இருந்தார். என்னைத் திரும்பிக் கூடப் பார்க்கலே. அப்படியிருந்தப்பத்தான் நானா அவரை நெருங்கினேன். எனக்கும் வேண்டியிருந்தது. அவருக்கும் கவலை யைப் போக்கி ஒரு ஆறுதலாயிருக்கு மேன்னு நினைச்சுத்தான் அப்படி செஞ் சேன். ஆனா அவருக்கு வேண்டியிருக் கலே. சுள்ளுன்னு எரிஞ்சு விழுந்தார்.

"பொம்பளைக்கு அடக்கம் வேணும். நாலு நாள் உன்னாலெ கண்ட்ரோல் பண் ணிக்க முடியலே, நீ என்ன ஜன்மம்?" அப்படி இப்படின்னு பேசினார். எப்படி இருக்கு? எனக்கு, சீ இவனும் ஒரு மனுஷனான்னு தோணிப் போச்சு.

"கல்யாணி பிறந்து நாப்பது நாள் கூட ஆகல்லே. என்னைக் கூட்டிண்டு வந்துட்டார். எனக்கு அவ ஒருத்தியே போதும், இன்னொரு குழந்தை வேண் டாம்னு இருந்தது. அதுக்கு அவர் ஒத்துக்கலே. 'நீங்க ஆபரேஷன் பண் ணிக்கறதுக்கு இஷ்டமில்லேன்னா, நான் பண்ணிக்கிறேன்'னு சொன்னேன். 'நானும் பண்ணிக்க மாட்டேன், நீயும் பண்ணிக்கக் கூடாது' ன்னுட்டார்.

"குழந்தை கல்யாணி அவரோட சுகபோக வாழ்க்கைக்கு இடைஞ்சலா இருந்தா. அதனாலெ குழந்தையை எப்ப வும் கரிச்சுக் கொட்ட ஆரம்பிச்சார். எனக்கு மனசுக்கு ரொம்பவும் கஷ்ட மாயிருந்தது. 'இப்படி இருக்கற நீங்க இன்னொரு குழந்தைக்கு ஏன் ஆசைப் படறிங்க? ரெண்டு குழந்தைகளாச் சுன்னா உங்க இன்பத்துக்கு இன்னும் இடைஞ்சல் தானே? என் உடம்பும் இன்னும் தளர்ந்து போயிடும்'னேன். கேட்கலே. 'எனக்கு ஒரு ஆண் குழந்தை வேணும்'னார்.

(தொடரும்)



ஹரோல்ட் பிரின்ஸ் டீயிக்கான இடைவேளையின் போது தன் பெயருக்கு ஏற்றுற் போல், மஹாராணியோடுதான் டீ அருந்துவது வழக்கம்.

மஹார்ராணி—குயின் விக்டோரியா.

பிரின்ஸ் பார்ப்பது தச்சுத் தொழில். இவர் பணியாற்றும் இடம் 'வைட்' தீவில், பிரேடிங் நகரில் உள்ள ஆஸ்பர்ன் ஸ்மித் மியூசியம்.

விக்டோரியாவின் மெழுகுச்சிலை அருகே அமர்ந்திருப்பவர் தான், அற்புதமாய் அதை உருவாக்கிய சிற்பி ஹரோல்ட் பிரின்ஸ்.





குட்டைக் கால்களையும், நீண்ட உடலையும் உடைய 'டாஷ்சன்ட்' இனத்தைச் சேர்ந்த இந்தக் குட்டை நாய் எரிந்து கொண்டிருக்கும் இரும்பு வளையங்களைக் கொண்ட நீண்ட கூண்டை ஒரு நாளைக்கு இரண்டு முறை தாவிப் புகுந்து கடக்கிறது.

தென் ஆப்பிரிக்காவில், கேப்டவுன் நகரில் நடைபெறும் சர்க்கஸ் ஒன்றில் பல ஆண்டுகளாக இந்த நெருப்பு வளையங்களைப் பாய்ந்து கடக்கும் பணியைச் செய்து கொண்டிருக்கும் இந்நாய் ஒரு முறைகூட தவறியது கிடையாது.

அதிக பால் கறக்கும் கால் நடைகளுக்கு உரிமையாளர்களான இவர்களுக்கு, பாதுகாப்பான மிகப் பெரிய பண்ணையும் இருக்கிறது.

போதிய நேர மேய்ச்சல் இல்லாததால் பசுக்கள் கறக்கும் பாலின் அளவு குறைந்து விட்டது.

இரவு நேரங்களிலும் பசுக்கள் வயிறு நிறைய மேய வசதி செய்து கொடுத்தார்கள்.

எப்படி?

'கௌபெல்ஸ்' போன்ற அமைப்புடைய பிளாஸ்டிக் கண்ணாடியிலான விளக்குகளை மாலையில் பசுக்களின் கழுத்தில் கட்டி விட்டார்கள்.

இந்த விளக்குகளில் உள்ள மிகவும் சக்தி வாய்ந்த சிறிய பேட்டரிகள், பல நாட்கள் விளக்கு எரிய மின்சாரம் தரும் ஆற்றல் உள்ளவை.

இந்த விளக்குகள் கட்டப்பட்ட பசுக்கள், விளக்கு வெளிச்சத்தில் போதிய அளவு மேய்ந்து விட்டு ஓய்வு எடுத்துக் கொள்கின்றன.

இந்த விளக்கின் ஒளியால் இரவு நேரங்களில் மாடுகளைத் தேடிக் கண்டு பிடிப்பதும் சுலபமாக இருக்கின்றது.



*இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.*

**—ஹேமா ஆனந்ததீர்த்தன்**



# ரேகா-சதீஷ்-ராஜி

*ஹேமா ஆனந்ததீர்த்தன்*

ஆண் குழந்தை பிறக்கலே. கீதா தான் பிறந்தாள். கல்யாணமான புதுசுல அவருக்கிருந்த வெறியும் வேகமும் போகப் போக குறைஞ்சிடும்னு நான் நினைச்சிருந்தது போல நடக்கலே. கல்யாணமான முதல் வாரத்துல எப்படி நடந்துண்டாரோ அப்படியே கீதா பி... துக்கப்புறமும் நடந்துண்டார்."

"இப்படி அவர் நடந்துண்டதுனலெ எனக்கு அளவுக்கு மீறினல் அமிர்தமும் விஷம்ங்கருப்பலெ செக்ஸுன்னலெ ஒரு அலர்ஜி மாதிரி ஆயிடுத்து.

"இதனலெயெல்லாம் ஒருத்தி கணவனை விட்டுப் பிரிஞ்சுப் போயிடுவாளான்னு நீங்க கேட்கலாம். அது ...ரக்ட். இதையெல்லாம் நான் பொறுத்...ண்டுதான் இருந்தேன்? ஆனால் நான் பொறுத்துக்க முடியாத காரியங்கள் அப்புறம் நடக்க ஆரம்பிச்சுது."

"என் ஹஸ்பண்ட் என் ...டத்தையைச் சந்தேகிக்க ஆரம்பிச்சார். நான் அவரோட எக்ஸெஸிவ் செக்ஸுக்கு சரியானபடி ரெஸ்பான்ஸ் குடுக்காததுக்குக் காரணம் எனக்கு அவர் பேரில் பிரியம் இல்லாதது தான்னும், நான் வேறு யாரையோ விரும்பறதாகவும் ஒரு சம்சயப் பேய் அவர் மனசுல பூந்துண்டது.ஏன் இங்கே நின்னே, ஏன் அங்கே போனே, ஏன் அவனோட பேசினே என்றெல்லாம் ஆட்சேபிக்க ஆரம்பித்தார். என் மச்சினிக்கு பாட்டு சொல்லிக் கொடுக்க வந்துண்டிருந்த ஒரு வித்வானுக்கும், எனக்கும் சம்பந்தம் கற்பிக்கப் பார்த்தார்.

"இத்தனையையும் இவர் என் மேல் உள்ள அன்பால, நான் அவரைத் தவிர வேறு யாரையும் காதலிச்சுடக் கூடாதுங்கற எண்ணத்துனலெ செஞ்சிருந்தா அதைப் புரிஞ்சுக்கலாம். அவர் அந்த எண்ணத்துல இல்லேங்கறது சீக்கிரமே புரிஞ்சப்பதான் நான் கொதிச்சுப் போயிட்டேன். என் கற்பைப்பத்தி

அவர் அக்கறைப் படலிலே. நான் அவரோட சொத்து. அதை அவர்தான் அனுபவிக்கலாம். அல்லது அவரோட அனுமதியின் பேரிலே இன்னொருத்தன் அனுபவிக்கலாம். எப்படி? என்னை ஒரு வியாபாரப் பொருளாக்க அவர் பார்த்தப்பத்தான், என்னை வெச்சு தன் வாழ்க்கையில முன்னேறப் பார்த்தப்பத்தான் நான் பொங்கி எழுந்துட்டேன். அவருக்கு ஒரு பிரமோஷன் கிடைக்கணும்கறதுக்காக என்னை லஞ்சமாக் கொடுக்க முயற்சித்தார். அப்பத்தான் 'போடா, பொறுக்கி. நீயும் ஒரு ஆம்பளையா'ன்னு சொல்லிட்டு, சொல்லாம கொள்ளாம ஓடி வந்துட்டேன்."

தன் கதையைக் கூறி நிறுத்தி ஒரு பெருமூச்சு விட்டபடி சதீஷின் அபிப்ராயத்தை எதிர்பார்ப்பவள் போல அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

அவள் செய்தது சரி என்று சொல்வதா தவறு என்று சொல்வதா என்று தெரியாமல் சதீஷ் குழம்பினான். அவன் குழப்பத்தைத் தெரிந்து கொண்டவள் போல ராஜி, "நான் செய்தது ரைட்டா, இல்லையான்னு நான் உங்களைக் கேக்கப் போறதில்லே. அதனாலே நீங்க சங்கடப்படவேண்டாம். நான் செய்தது ரைட்தான்கற நம்பிக்கை எனக்கு இருக்கு. என் மனச்சாட்சிதான் எனக்கு வழிகாட்டி. உங்க கிட்ட சொல்லணும்னு தோணினதால சொன்னேன்" என்றாள்.

"அப்புறம் உன் ஹஸ்பண்ட் உன்னைத் திருப்பி அழைச்சுக்க முயற்சி பண்ணலியா?"

"பண்ணினான், ரெண்டு மூணு தடவை. நான்தான் இணங்கிக் கொடுக்கலெ."

"அவர் மறுபடியும் கல்யாணம்..."

"பண்ணிக்கலேன்னு நினைக்கறேன். பண்ணிண்டாலும் நான் அதை கேர் பண்ணப் போறதில்லே."

"எவ்வளவு நாள் நீ இப்படியே இருக்க முடியும்?"

"இப்படியேன்னா எப்படியே? இஃப் யூ மீன் செக்ஸ் இல்லாமயே நான் வாழ முடியுமாங்கறது உங்க கேள்வியானால், செக்ஸ் இல்லாம நான் வாழ வேண்டிய நிர்ப்பந்தமில்லே. எனக்கு வேண்டிய செக்ஸ் எனக்கு கிடைச்சுண்டிருக்கு. பட், அதை நானே இஷ்டப்பட்டு செலக்ட் பண்ணிக்கிறேன் எனக்கு வேணும்கறப்ப. யாருடைய நிர்ப்பந்தத்துலயும் நான் அதுல ஈடுபடவேண்டியதில்லே. ஐ எம் எ ஃப்ரீ பர்ட்"

"நீ ஏன் அவரை டைவர்ஸ் பண்ணிடக் கூடாது?"

"அது முடியாதே. அதுக்கு தகுந்த காரணம் வேணுமே. அந்த ஆள் ஒரு இம்பொடென்டாவோ என்னை அடிச்சு, உதைச்சு துன்பப்படுத்தறவனாவோ, பைத்தியக்காரனாவோ, இப்படி ஏதாவது இருந்தாகணுமே. அதெல்லாம் ஒண்ணும் இல்லியே?"

"நீ இந்த மாதிரி வ[illegible]கை நடத்தறதனால நாளைக்கு உன் பெண்களோட வாழ்க்கை பாதிக்கப்படாதா?"

"ஐ டோன்ட் திங்க் ஸோ. நான் அவங்களை நல்லாப் படிக்க வைக்கப் போறேன். சாப்பாட்டுக்கோ, துணிமணிக்கோ அவங்க இன்னொருத்தர்



கையை எதிர் பார்க்காம தாங்களாவே ஏதாவது வேலை செஞ்சு சம்பாதிக்க றதுக்கு ஏத்தவங்களா ஆக்கறது என்னோட கடமை. பாக்கியைப் பத்தி நான் கவலைப்படப் போறதில்லே. அவங்க வாழ்க்கையை அவங்களே அமைச்சுக் கட்டும். கல்யாணம் பண்ணிக்கறதும் பண்ணிக்காததும் அவங்க இஷ்டம். பண்ணிக்கணும்னு தோணிஞ யாரைப் பண்ணிக்கணும்கறதும் அவங்களோட இஷ்டம். அதுல குறிக்கிட்டு நான் அவங்களோட சுதந்திரத்தைப் பறிக்க மாட்டேன்."

"நீ இப்படி இருக்கறதைப் பத்தி உன் பேரன்ட்ஸ் ஒண்ணும் சொல்றதில்லையா?"

"மறுபடியும் மறுபடியும் இப்படி இருக்கறது இப்படி இருக்கறதுன்னு நீங்க எதைக் குறிப்பிடறீங்கன்னு எனக்குப் புரிய மாட்டேங்குது. என்னுடைய புருஷனை நான் ஒரு ஃப்ரெண்டாத்தான் எடுத்துண்டேன். அஃப் கோர்ஸ் சாதா



ரண நண்பனைப் போல இல்லாம ஒரு ஆத்மார்த்தமான நண்பனா ட்ரீட் பண்ணினேன். ஆனா அந்த நட்பு நீடிக்கலே. ஒரு நட்பு முறிஞ்சு போறதை இவ்வளவு பிரமாதப்படுத்தி என் வாழ்க்கையிலெ ஏதோ பெரிய துக்கம் நிகழ்ந்துட்டது போல நீங்க பேசறதை நான் அப்ரிஸியேட் பண்ணலே. என் பேரன்ட்ஸும் உங்களைப் போலத்தான் முதல்லெ சொல்லிண்டிருந்தாங்க. அப்புறம் என் வாதத்தை ஏத்துண்டதனாலேயோ, இல்லே என்னோட வாதாடி, பிரயோஜன மில்லேங்கறதனாலேயோ, இப்பல்லாம் ஒண்ணும் பேசறதே இல்லே.''

''நீ ரொம்ப தைரியசாலியான பொண்ணு. அவ்வளவுதான் நான் சொல்லமுடியும்.''

''அசட்டுத் துணிச்சல் அல்லது முட்டாள் தனமான துணிச்சல்னு சொல்றிங்க?'' என்று கேட்டு ராஜி சிரித்தாள்.

''அப்படி சொல்லலே...''

''சொல்லலே. நினைக்கறிங்க.''

''உன்னைப் போல எவ்வளவு பெண்கள் இருப்பாங்கன்னு நினைச்சுப் பார்க்கறேன்.''

''ரொம்பப் பேர் இருக்க மாட்டாங்க. அதைப்பத்தி சந்தேகமே இல்லே. ஆனா இன்னும் நிறையப் பேர் என்னைப் போல வரணும். அப்படி வந்தாத்தான் என் புருஷனைப் போல இருக்கறவங்களோட திமிரும், ஆணவமும் அடங்கும். இல்லேன்னா என்னையும், என்னைப் போல இருக்கற இன்னும் நாலைஞ்சு பேரையும், தறுதலை, ஓடுகாலி, வீணாப் போனவள், கெட்டுப் போனவள், கழிசடை இப்படி பட்டம் கட்டி மூலையிலெ உக்கார வச்சுடுவாங்க.''

''உன் கதையை நீ வினயா வாசுதேவன் கிட்ட சொல்லி ஏதாவது பத்திரிகையிலே எழுதச் சொல்லலாமே?''

''அவர் எழுதுவாருங்கறது சந்தேகம். அவர் எழுதினாலும் அதை யாராவது பப்ளிஷ் பண்ணக்கூடிய துணிச்சலுள்ளவங்க இருக்காங்களாங்கறது அதைவிட சந்தேகம். என் கதையைக் கேக்கறதுக்கு எல்லாரும் தயாராயிருப்பா. சுவாரஸ்யமாயிருக்குமே. அதுவும் ஒரு பெண் துணிஞ்சு ஃப்ரீ செக்ஸ் பத்தி பேசறா, அதை ப்ராக்டீஸ் பண்ணவும் பண்றான்னா படு சுவாரஸ்யமாச்சே கதை கேக்கறதுக்கு மட்டும் இல்லே. என்னோட ஒன் ஆர் டு நைட்ஸ் ஸ்பெண்ட் பண்றதுக்கும் தயாராயிருப்பா. ஆனா என் கதையை பத்திரிகையிலே போட்டுட்டா தமிழ்ப் பண்பு பாரதப்பண்பு எல்லாமே நாசமாயிடும்னு ஒப்பாரிவெப்பாங்க. ஹிப்பாக்ரிட்ஸ் ஆல்'' என்று நெருப்பைக் கக்குவது போல வார்த்தைகளைக் கக்கினாள் ராஜி.

''சரி, ஐ திங்க் இதுக்கு மேல இன்னிக்கு உன் லைஃபைப் பத்திப் பேசினா இன்னும் எரிமலையா வெடிச்சுடுவியோன்னு பயமாயிருக்கு. அதனாலெ இதோட நிறுத்திக்குவோம். ஆபீஸ் விஷயமா ஏதாவது பேசணுமா?'' என்று சதீஷ் அந்தப் பேச்சுக்கு அத்தோடு ஒரு முற்றுப்புள்ளி வைத்தான்.

''ஸாரி ஃபர் ஹேவிங் டேகன் ஸோ மச் ஆஃப் யுவர் டைம். நான் வரேன்'' என்று ராஜியும் அங்கிருந்து அகன்றாள்.

அதன் பிறகு அன்று காரியாலயம் விட்டுச் செல்லும் வரையிலும் அவன் ராஜியை மறுபடியும் சந்திக்கும் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. ராஜி அறையைவிட்டு வெளியேறிய சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் வெளியே போக வேண்டிய ஒரு காரியம் இருந்ததால் போய்விட்டு மாலை காரியாலயம் முடியும் சமயத்தில்தான் திரும்பி வந்தான். திரும்பி வந்து ராஜிக் காக மணியடித்து அழைத்த [illegible]து அவள் தலைவலி என்று அவ[illegible]னி முன்னதாக அனுமதி பெற்றுக் கொண்டு வீட்டிற்குப் போய் விட்டதாகத் தெரிய வந்தது.

வீட்டை நோக்கி காரில் போய்க் கொண்டிருந்த சதீஷ் ராஜியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான்.

கிட்டத்தட்ட இரண்டு வருஷமாகத் தன் கீழ் வேலை செய்யும் ராஜியைப்பற்றி இவ்வளவு நாளாக இத்தனை விஷயங்கள் தான் தெரிந்து கொள்ளாமல் இருந்ததை நினைத்து அவனுக்கே வியப்பாக இருந்தது.

உலகில் மூன்றுவது கண் கொண்ட ஒரே பிராணி 'ஸ்பீனோடையூன்' இது ஒரு பல்லி இனத்தைச் சார்ந்தது. நியூசிலாந்து தீவின் கரையில் உள்ளது.

—சா.ராஜாபாதர்

'எனக்கு வேணுங்கறப்ப செக்ஸ் எனக்குக் கிடைச்சுண்டிருக்கு. நானே செலக்ட் பண்ணிக்கறேன். யாருடைய நிர்ப்பந்தமும் கிடையாது'ன்னு சொன்ளுளே! அப்படியானல் இது வரையில் தன்னை அவள் நெருங்காததற்குக் காரணம் என்னவாயிருக்கும்? தன்னை அவள் செலக்ட் பண்ணவில்லை என்று அர்த்தமா? தன்னை அவளுடைய பெஸ்ட் ஃப்ரெண்ட் என்று சொல்லுகிருளே, அந்த ஃப்ரெண்ட்ஷிப் வேறயா? அவள் யாருடன் செக்ஸ் வைத்துக் கொண்டிருக்கிருள்? ஆபீசில் யாராவதாக இருக்குமோ? இதை எப்படி விசாரிப்பது? எதற்காக விசாரிக்க வேண்டும்? அவள் படிப் போனல் என்ன?

உடனே அவனுக்குத் தன் நிலைமையைப் பற்றிய எண்ணம் எழுந்தது. தன் நிலைமையில் அபிவிருத்தி ஏற்படாவிட்டால்? இந்தச் சமயத்தில் ராஜி தன்னை அணுகிஞல்? இடம் கொடுப்பதா, கொடுக்காமல் இருப்பதா? இடம் கொடுத்து தன் இயலாமை வெளியாகிவிட்டால்? அவமானமில்லையா? இவ்வளவு நாள் தோன்ருத சபலம் இப்போது ஏன் தோன்றித் தொலைக்கிறது? ராஜி கிடைப்பாளோ மாட்டாளோ என்று தெரியாமலிருந்தபோது சபலம் இருக்கவில்லை. இப்போது அவள் அப்படி ஒன்றும் பரிசுத்தமானவள் அல்ல, முயன்ருல் கிடைப்பாள் என்கிற சாத்தியதை தெரியும்போது சபலமும் தலை காட்டுகிறதோ?

ரேகா ஏதோ மருந்து வைத்திருப்பதாகச் சொன்ளுளே, என்னவாக இருக்கும்?

வீட்டையடைந்து, உடைகளைக் கழற்றி லுங்கியணிந்து கொண்ட சதீஷ், ரேகா டிபன் கொண்டு வருவதற்காகக் காத்துக் கொண்டு யோசனையிலாழ்ந்திருந்தான்.

டிபன் தட்டை ஒரு கையிலும், காபி டபரா டம்ளரை மற்ரெரு கையிலும் ஏந்திக் கொண்டு ரேகா உள்ளே நுழைந்தாள். டீபாயை எடுத்துக் கட்டிலினருகே போட்டு அதன் மீது டிபன் தட்டையும், காபி டபரா டம்ளரையும் வைத்தாள்.

ரவா சொஜ்ஜி, உருளைக்கிழங்கு போண்டா டிபன்.

சதீஷ் ஒரு போண்டாவை எடுத்துக் கடித்தான்.




ரேகா கல்கண்டு பத்திரிகையைக் கையிலெடுத்துப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

"திருப்பித் திருப்பி அந்த கல்கண்டுலெ என்னதான் பார்ப்பே?"

"இது புதுசு. இன்னிக்கு வந்தது."

"அப்படியா? ஏதாவது இருக்கா அதுல? நீ புரட்டறதைப் பார்த்தா எனக்கு ஏதோ காமிக்க ஆசைப்படறுப்பலெ இருக்கே?"

"இந்த இஷ்யூவுலயும் ஒரு மருந்து போட்டிருக்கு. ஏன் திருப்பித் திருப்பி இதைப் பத்தியே எழுதருங்கன்னு தெரியலெ."

"என்ன போட்டிருக்கு, படி போன்."

ரேகா படித்தாள்:

ஆண்மைக் குறைவு உள்ள வாலிபர்கள், பெரிய பெரிய விளம்பரங்களைச் செய்து கொண்டு, ஓட்டல்களில் வைத்தியம் பார்க்கும் மனிதர்களிடம் போகவேண்டாம். ஆண்மைக் குறைவை நிவர்த்தி செய்யச் சித்த வைத்தியம் சொல்லும் ஒரு லேகியத்தை அவரவர்களே செய்து சாப்பிடலாம். அது இதுதான். 100 கிராம் சீருக்கற்கண்டு, 100 கிராம் பேரீச்சம்பழம், 100 கிராம் திராட்சைப்பழம், 100 கிராம் நெல்லிவற்றல் ஆகிய எல்லாவற்றையும் ஒன்ருக வைத்து நிறைய நெய் விட்டு அரைத்து வைத்துக் கொண்டு தினசரி சுண்டைக்காய் அளவு சாப்பிட்டு வந்தால் ஆண்மைக் குறைவு மறைந்துவிடும்.



தெரியாம செஞ்சிட்டேன் மன்னிக்கணும்—நான
அறியாத புள்ளேன்னு எண்ணிக்கணும்.
கல்யாணம் நீ என்னைப் பண்ணிக்கணும்—நாம
ஊரெல்லாம் விருந்துக்கு சொல்லிக்கணும்.

''நேரம் வந்தாச்சு'' என்கிறார் ராதாவிடம், கார்த்திக்

சதீஷ் ஒன்றும் சொல்லாமல் சொஜ்ஜியை ருசி பார்ப்பதில் மூழ்கியிருந்தான்.

''சுலபமாத்தானே இருக்கு. பண்ணிப் பார்க்கலாமே'' என்றாள் ரேகா.

''அப்ப எனக்கு அதுதான்னு முடிவு கட்டிட்டியா?'' என்று கேட்டான் சதீஷ். அவன் குரலில் இருந்த வேதனை அவளுக்கும் வேதனையைத் தந்தது.

''இல்லில்லே. இது சாப்பிடறதுலெ கெடுதல் ஒண்ணும் இல்லியே.''

''நீ வேற என்னமோ மருந்து வெச்சிருக்கேன்னியே?''

ரேகா பதில் சொல்லாமல் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டாள்.

''என்ன சிரிக்கறே?''

''அது மருந்தல்ல. வைத்தியம் ஃபிஸியோ தெரபி.'' என்று கூறி சிரித்தாள்.

அதைப் புரிந்து கொண்டு சதீஷும் சிரித்தான். ஆனால் அவன் நெஞ்சில் லேசாக ஏங்கோ ஒரு மூலையில் வலித்தது.

''இன்னிக்கு ராத்திரி ட்ரை பண்ணிப் பார்க்கலாம்'' என்று கூறி மறுபடியும் சிரித்தாள்.

''சரி இப்ப எங்கே போகலாம்?''

''பீச்சுக்குப் போகலாம்.''

''ஓ.கே.''

(தொடரும்)

# ரேகா 10 சதீஷ் ராஜி

மெரீனாவில் கண்ணகி சிலைக்கு எதிரில் காரை நிறுத்தி விட்டு இருவரும் இறங்கி மணலில் சிறிது தூரம் நடந்து சென்று உட்கார்ந்து கொண்டனர்.

பதினைந்து நிமிடங்கள் இருவரும் ஒன்றுமே பேசவில்லை.

ஆழ்ந்த யோசனை எதிலோ இருவரும் மூழ்கியிருப்பது போலத் தோன்றியது.

“என்ன மௌனமா உட்கார்ந்துண்டிருக்கே? என்ன யோசனை?” என்று சதீஷ்தான் பேச்சை ஆரம்பித்தான்.

“யோசனை ஒண்ணும் இல்லே. பேசறதுக்கு என்ன இருக்கு? பேசறதுக்காகவா இங்கே வர்றோம். ஃப்ரெஷ் ஏருக்காகத்தானே? அதை என்ஜாய் பண்ணிண்டிருக்கேன்.”

“பொய். நீ எதையோ யோசனை பண்றேங்கறதெ உன் முகமே சொல்றதே.”

“அப்ப நான் என்ன யோசனை பண்ணிண்டிருக்கேங்கறதையும் என் முகமே சொல்லட்டுமே” என்று கூறி ரேகா சிரித்தாள்.

ரேகா அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சதீஷின் கவனம் வேறு எங்கோ சென்றது. அவன் கவனம் சென்ற திசையை ரேகாவும் கவனித்தாள்.

“உங்க ஆபீஸ் ராஜிதானே?”

“ஊம்.”

“கூடப் போறது யாரு?”

“அவனைத் தெரியாது உனக்கு?”

“தெரியாதே.”

“அவன்தான் என் ஃப்ரெண்டு. எழுத்தாளன் வினயா வாசுதேவன்.”

“அவனுக்கும் அவளுக்கும் என்ன...”

“அதைத்தான் நானும் யோசிக்கிறேன். அவங்க ரெண்டு பேரையும்

ஹேமா ஆனந்ததீர்த்தன்

அறிமுகம் பண்ணி வெச்சதே நான் தான். இன்னிக்கு கூட அவனைப் பத்தி அவகிட்ட பேசிண்டிருந்தேன். ரெண்டு பேரும் எப்ப இவ்வளவு நெருங்கினவாளா ஆனுன்னு தெரியல்லே. அவனும் சொல்லல்லே, அவளும் சொல்லல்லே.''

''அன்னிக்கு சினிமாவுக்கு என்னமோ தனியா வந்துட்டா. ஒருத்தரும் ஜோடி கிடைக்கலே போலிருக்கு. இன்னிக்கு இவன் கிடைச்சிருக்கான். இவனுக்கு உங்க வயசு இருக்குமா?'',

''என்னைவிட மூணு வயசு பெரியவன்.''

''அப்ப நாப்பத்தஞ்சு?''

''ஊம்.''

''பிடிக்கறதுதான் பிடிச்சா. இன்னும் சின்னவனு தன் வயசுக்குப் பொருத்தமானவனு பிடிச்சிருக்கக் கூடாதோ?''

''அவளைப்பத்தி உடனே நீ அப்படி முடிவு கட்டிடாதே. அவளுக்கு அவனோட கதைகள்னு ரொம்பப் பிடிக்



கும். அதனுலெ ரெண்டு பேரும் ஃப்ரெண்ட்ஷிப்பா இருக்கலாம். வேறெண்ணும் இல்லாமலிருக்கலாம். எதையும் தெரியாம சொல்லக்கூடாது.''

''நீங்க எப்பவும் அவளுக்கு பரிஞ்சுதான் பேசறிங்க. அவன் எப்படி? நல்லவனு? அவன் தாடியையும், மூஞ்சியையும் பார்த்தா அவன் நல்ல வனுத் தோணல்லே. அவனுக்கு கல்யாணம் ஆயிருக்கா?''

''நல்லவனுயிருக்கறதுக்கும், கல்யாணம் ஆச்சா இல்லையாங்கறதுக்கும் ஒண்ணும் சம்பந்தமில்லையே.''

''அதுசரி. அதுவுமில்லாம கதை எழுதறவர், பாட்டு பாடறவா, டிராமாவுல, சினிமாவுல நடிக்கறவா, மொத்தத்துல கலைஞர்களாயிருக்கற யாருமே இந்த மாதிரி விஷயத்துல கொஞ்சம் அப்படியிப்படித்தான் இருப்பாங்க.''

''அப்படி இப்படின்னு?''

''ஒழுக்கம் குறைவாத்தான் இருக்கும்.''

''எதை வெச்சு அப்படி சொல்றே?''

''எங்கியோ படிச்சதுதான். அவங்களுக்கெல்லாம் ரொம்ப ஆர்டிஸ்டிக் மைன்ட். கற்பனையிலெயே வாழறவா. அதுனுலெ அழகை ஆராதிக்கறவா அனுபவிக்கணும்கற ஆசை தானு வர்றது.''

''அப்ப கலைஞர்களா இல்லாதவாள்ளாம் ரொம்ப ஒழுங்கானவங்களா? நான் என்ன நினைக்கறேன்னு, கலைஞர்களுக்கு சந்தர்ப்பம் ஜாஸ்தி. பெண்கள் மேலே விழுந்துபோய் அவாளை மொய்ச்சுக்கறு. வெல்லத்தை ஈ மொய்க்கிற மாதிரி. அப்புறம் ஆம்பளையாயிருக்கறவன் வேண்டாம்னு சொல்வான்?''

''இருக்கலாம். அது போகட்டும். நான் கேட்ட கேள்விக்கு நீங்க பதில் சொல்லலையே. அந்த வினயா வாசுதேவனுக்கு கல்யாணம் ஆயிருக்கா இல்லியா?''

''ஆயிருக்கு ஆயிருக்கு. குழந்தைகள்கூட இருக்கு. எவ்வளவு என்னன்னு எனக்கு சரியாத் தெரியாது.''

''இவாள்ளாம் கல்யாணம் என்னத்துக்கு பண்ணிக்கருளோ? ஒரு பொண்ணோட வயித்தெரிச்சலைக் கொட்டிக்க.''

சதீஷ் அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவன் எண்ணமெல்லாம் ராஜியும், வினயா வாசுதேவனும் எப்படி, எப்பொழுதிலிருந்து இவ்வளவு நெருக்கமானுர்கள் என்பதைப்பற்றியே யோசித்துக் கொண்டிருந்தது. கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களாக தினந்தோறும் சந்தித்து, பேசி, அருகருகே இருந்து பழகும்... தனக்கும் ராஜிக்கும் ஏற்படாத நெருக்கம் அவர்கள் இருவருக்கும் எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? அவனிடம் ஏதாவது வசிய சக்தி இருக்குமோ? அல்லது பெண்களைக் கவருவதற்கு ஏதாவது தனி 'நேக்' தெரிந்து வைத்திருப்பானே? நாளைக்கு ராஜியை இதுபற்றி விசாரிக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டான். வினயா வாசுதேவனின் பேரில் அவனையறியாமலே சதீஷுக்கு ஒரு பொருமை உணர்வு உள்ளத்தில் முளைவிட்டது. பண்பில்லாமல் பச்சை பச்சையாக எழுதுபவர்களை பெண்கள் வெறுக்கத்தானே செய்ய வேண்டும்? இங்கே நேர் மாருக இருக்கிறதே? இதிலிருந்தே ராஜியின் உள்ளம் எவ்வளவு தூரம் நல்ல பண்புகளிலிருந்து விலகிப் போய் விட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம் என அவன் எண்ணினுன்.

''நீ இங்கியே உக்காந்திருக்கியா? நான் போய் அவங்களைப் பார்த்

துப் பேசிட்டு வரேன்'' என்று ரேகாவைக் கேட்டான்.

''ஒண்ணும் வேண்டாம். பேசாம உக்காந்திருங்கோ'' என்று அவனை அடக்கி விட்டாள் ரேகா.

''உன்னை ஒண்ணு கேக்கணும்னு எனக்குத் தோணறது ரேகா'' என்று சதீஷ் கேட்டபோது அவன் குரல் அவனுக்கே புதிதாக இருந்தது.

''என்ன?''

''சப்போஸ், இப்ப எனக்கு நேத்து ஆனமாதிரி இன்னமே எப்பவுமே அப்படித்தான்னு ஆயிடுத்துன்னு வெச்சுக்கோ. நீ என்ன பண்ணுவே?''

''இது என்ன பைத்தியகாரத் தனமான கேள்வி? அப்படியெல்லாம் ஒண்ணும் ஆகாது.''

''ஆகாது சரி. நீயும் நம்பறே. நானும் நம்பறேன். இருந்தாலும், ஒரு வேளை நாம எதிர்பார்க்காதபடி துரதிர்ஷ்டவசமா அப்படி எதாவது ஆயிடுத்துன்னு?''

''நீங்க என்ன பண்ணுவேள்?''

''நான்தான் ஒண்ணும் பண்ண முடியாதே'' என்று சதீஷ் சிரித்தான்

ரேகாவின் கன்னத்தில் செம்மை படர்ந்தது.

''எனக்கு இந்த பேச்சே பிடிக்கலே.''

''பிரச்னையிலேர்ந்து அப்படி நழுவினா பிரச்னை தீர்ந்துடுமா?''

''நமக்கு குடுத்து வெச்சது அவ்வளவுதான்னு மனத்தைச் சமாதானப்படுத்திண்டு மீதி நாளை ஓட்ட வேண்டியதுதான்.''

''ரொம்ப சுலபமா சொல்லிட்டியே. மீதிநாள்னா என்ன ஒரு வருஷமா ரெண்டு வருஷமா? இப்பத்தான் உனக்கு முப்பத்தைஞ்சு. குறைஞ்சது இன்னும் பதினைஞ்சு வருஷம் பல்லைக் கடிச்சுண்டு இருப்பியா?''

''வேற வழி?''

''வழி இல்லாமயா இருக்கு. எத்தனையோ வழி இருக்கு.''

''என்ன பேத்தறேள்? இங்கே உக்காந்தது போதும். வாங்க வீட்டுக்குப் போலாம். இல்லாட்டா நீங்க இப்படியே அசட்டுப் பிசட்டுன்னு ஏதாவது பேசிண்டே இருப்பேள்.''

''கோபிச்சுக்காதே ரேகா. நெருப்புன்னு சொன்னா வாய் வெந்துடுமா என்ன?''

''பின்னே என்ன? என்னையும் அந்த உங்க ராஜி மாதிரி நினைச்சுண்டேளா?''

''என் ராஜி இல்லையே அவ.''

''எழுந்திருங்கோ போலாம்.''

---

*இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.*

**—ஹேமா ஆனந்ததீர்த்தன்**

---

சதீஷுக்கு மனதிற்குத் திருப்தியாயிருந்தது. ரேகாவைப்பற்றி நினைக்கப் பெருமையாயிருந்தது. உண்மையிலேயே ஒரு சோதனை என்று வந்தால் அதில் ரேகா தேறுவாளோ, விழுந்து விடுவாளோ. எப்படியோ இப்போது அவள் இவ்வளவு உறுதியோடு பேசியது அவனுக்கு மிகவும் ஆறுதலாயிருந்தது.

ரேகாவின் இடத்தில் ராஜி இருந்திருந்தால் அவள் என்ன பதில் சொல்லியிருப்பாள்?

''உங்களுக்கு இந்தக் குறை ஏற்பட்டதற்குப் பதிலாக எனக்கு இது போல ஒரு குறை ஏற்பட்டிருந்தால் நீங்கள் என்னைத் தள்ளி வைத்துவிட்டு, ரெண்டாம் கல்யாணம் செய்து கொண்டிருப்பீர்கள் இல்லையா? அதே மாதிரி நானும் ஏன் செய்யக்கூடாது?'' என்று கேட்டிருப்பாளோ?

சொல்ல முடியாது. ராஜியை தான் முழுதும் புரிந்து கொண்டதாகச் சொல்ல முடியாது. ஒவ்வொரு சமயத்தில் அவள் சொல்வது ஏற்கக்கூடியது இல்லை போல் தோன்றினாலும், ஒவ்வொரு சமயங்களில் அவள் சொல்வதிலும் ஒரு நியாயம் இருப்பது போலவும், அவள் எண்ணங்களில் ஒரு புரட்சிக்கனல் வீசுவது போலவும், அவள் இன்னும் ஒரு ஐம்பது, அறுபது வருடங்களுக்குப் பின் பிறந்திருக்க வேண்டியவளோ என்றும் எல்லாம் அவனுக்குத் தோன்றியது.

மௌனமாக எழுந்திருந்து ரேகாவை பின் தொடர்ந்து சென்றான்.

இருவரும் சென்று காரில் ஏறி அமர்ந்து கொண்டதும் கார் மைலாப்பூரை நோக்கி ஓடத் தொடங்கியது.

சாப்பிட்டு விட்டு வந்து ரேகாவின் வருகைக்காகக் காத்தபடி சதீஷ் படுக்கையறையில் உலவிக் கொண்டிருந்தான். வெள்ளை பைஜாமாவும், வெள்ளை ஜிப்பாவும் அணிந்து கொண்டிருந்தான். ரேகா வருவதற்கு ஏன் இவ்வளவு தாமதப்படுத்துகிறாள் என்று அலுத்துக் கொண்டபடியே கட்டிலில் சாய்ந்து கொண்டான். பக்கத்திலிருந்த டீபாயிலிருந்து புத்தகங்களில் ஒன்றை உருவிப் பார்த்தான்.

ஹெய்ன்ஸ் கோன்ஸாலிக் என்கிற ஜெர்மன் எழுத்தாளர் எழுதிய "சம்மர் வித் டானிகா" என்கிற புத்தகம். ரேகா எவ்வளவு விதவிதமான புத்தகங்களைப் படிக்கிறாள் என்று ஆச்சரியப் பட்டுக் கொண்டே பக்கங்களைப் புரட்டினான். ஒருவரி அவன் கண்களில் பட்டு கவனத்தை இழுத்தது.

"......................................",

சிரித்தபடியே புத்தகத்தை மூடி தூர வைத்தான். சர்வ சகஜமாக கொஞ்சம்கூட தயக்கமில்லாமல் இப்படியெல்லாம் எழுதுகிறார்களே. வினயா வாசுதேவன் இந்த மாதிரி புத்தகங்களைப் பார்த்து காப்பியடித்து எழுதுவானோ? அதனால்தான் அவ்வளவு பச்சை பச்சையாக எழுதுகிறானோ என்று தோன்றியது.

இருக்காது. தனக்கு அவன் மேல் ஏதோ ஒருவகையான பொறாமை ஏற்பட்டுவிட்டதால் அவனைப்பற்றி இந்த மாதிரியெல்லாம் எண்ணத் தோன்றுகிறது என்று அடுத்த நிமிடம் நினைத்துக் கொண்டான்.

கதவைத் திறந்து கொண்டு ரேகா உள்ளே நுழைந்தாள். அவளோடு 'கும்' மென்று ஒரு நறுமணமும் அறைக்குள் பிரவேசித்தது.

"சோப் போட்டு மூஞ்சி அலம்பிண்டியா?"

"ஊம்."

"சினிமா போயிட்டு வந்தா தானே ஏர்கண்டிஷன் சரியாவே போடறதில்லேன்னு தியேட்டர்காரனைத் திட்டிண்டே மூஞ்சியலம்பிக்கற வழக்கம். இன்னிக்கு பீச்ல நல்ல காத்துல உக்கார்ந்துண்டிருந்துட்டுத்தானே வந்தோம்?"

நஸ்ருதின் மாடியில் இருந்தார். கீழே ஏதோ வேலையிலிருந்த அவர் மனைவி 'தடால்'என்ற சப்தத்தை கேட்டு "என்ன சப்தம்?" என்றார்.

"ஒன்றுமில்லை என் சட்டை கீழே விழுந்து விட்டது" என்றார் நஸ்ருதின்.

"சட்டை விழுந்தால் இவ்வளவு சத்தம் கேட்குமா?" என்று கேட்டார் மனைவி!

"சட்டைக்குள் நான் இருந்தேன்" என்று அமைதியாய்ச் சொன்னார் நஸ்ருதின்.

—தங்கவயல் இன்பன்

"இன்னிக்கி ஸ்பெஷல். உங்க வைத்தியத்துக்கு இதெல்லாம் ஸெட்-அப்" என்று சிரித்தபடியே கூறினாள்

கப்போர்டிலிருந்து வாசனை ஊதுவத்திகள் பத்துப் பன்னிரண்டை எடுத்துக் கொளுத்தி ஊதுவத்தி ஸ்டாண்டில் சொருகி கட்டிலுக்கருகில் டீபாயின் மேல் வைத்தாள்.

பவுடர் பூசிக் கொண்டாள். பர்ஃப்யூம் தெளித்துக் கொண்டாள். படுக்கையின் மீதும் தாராளமாகத் தெளித்தாள். தலைநிறைய மல்லிகைப் பூவைச் சூடிக் கொண்டாள்.

கதவையும், ஜன்னல்களையும் சாத்திவிட்டு இரவு விளக்கை மட்டும் விட்டுவிட்டு மற்ற விளக்குகளை அணைத்தாள்.

புடவை, பெட்டிகோட், ப்ளவுஸ், பிரா என்று ஒவ்வொன்றாக அவிழ்த்து நாற்காலியின் மீது எறிந்துவிட்டு சதீஷை நெருங்கினாள்.

கையைப் பிடித்து அவனை எழுப்பி நிற்க வைத்தாள். இறுக அணைத்துக் கொண்டு வெறி பிடித்தவள் போல அவன் முகமெங்கும் ஒரு இருபது முத்தங்களைச் சொரிந்தாள்.

ஆடையற்ற இரு உடல்களும் சில நிமிடங்கள் நின்ற நிலையிலேயே பின்னிக் கொண்டன.

அவள் கைகள் அவன் உடலை உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் வருடின. கைகளால் வருடின பகுதிகளையெல்லாம் உதடுகள் ஸ்பரிசித்தன. உரசின. கடித்தன.

தான் அவனுக்குச் செய்ததையெல்லாம் அவன் தனக்குச் செய்யுமாறு செய்தாள். நிலைக் கண்ணாடியின் முன் நின்று தங்களின் அந்த நிர்வாண சௌந்தர்யத்தைக் கண்டார்கள்.

சில நிமிடங்களுக்குப் பின் இருவரும் படுக்கையில் வந்து படுத்துக் கொண்டனர்.

ரேகா தனக்குத் தெரிந்த தந்திரங்களையெல்லாம் பிரயோகித்தாள். சதீஷும் ஒத்துழைத்தான்.

ஆனாலும் ஒன்றும் பிரயோஜனப் படவில்லை.

உறங்கிக்கிடந்த அவன் ஆண்மை விழித்தெழ மறுத்து விட்டது.

"ஐ எம் வெரி ஸாரி சதீஷ். என் வைத்தியம் பலிக்கவில்லை" என்று அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் உடல் குலுங்கியது. மார்பு சுட்டபோது, அவள் கண்ணீர் பெருக்குகிறாள் என்பதை அவன் உணர்ந்து கொண்டான்.

"இட் இஸ் ஆல்ரைட்" என்று அவளிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு எழுந்து சென்று பைஜாமா, ஜிப்பாவை அணிந்து கொண்டு வந்து படுத்தான்.

ரேகா வெகு நேரம் அப்படியே படுத்திருந்தாள்.

சதீஷ் எழுந்து சென்று அவள் பாவாடையையும், ப்ளவுஸையும் கொண்டு வந்து அவளிடம் கொடுத்து, "இதைப் போட்டுக்கோ" என்றான்.

ரேகா எழுந்து அவைகளைப் போட்டுக் கொண்டு ஒன்றும் பேசாமல் படுத்துக் கொண்டாள். சதீஷ் மூன்றாவது தடவையாக எழுந்து பாத்ரூம் போய்விட்டு வந்து இரவு விளக்கையும் அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டான்.

இருவரும் ஒருவரோடொருவர் பேசாவிட்டாலும் தத்தம் மனதோடு வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)



நந்தவனப் புஷ்பங்கள்
நெஞ்சுக்குள் கற்பனைகள்
சிந்துபாடும் நதிஅலைகள்
சொர்க்கத்தின் வழித்துணைகள் ...
—ராதிகா, பிரதாப்
படம்: "கைகேயி"

# ரேகா - சதீஷ் - ராஜ்




ஹேமா ஆனந்ததீர்த்தன்

ஜூலை, 15 (புதன்கிழமை)

சதீஷ் எழுந்ததும் பக்கத்தில் ரேகா படுக்கையில் இல்லை என்பதைப் பார்த்தான். டீபாயிலிருந்து கைக்கடி காரத்தை எடுத்துப் பார்த்தான். மணி ஏழரை ஆகி விட்டிருந்தது.

படுக்கையை விட்டு எழுந்திருக்கவும் பிடிக்கவில்லை. படுக்கையிலேயே படுத்திருக்கவும் பிடிக்கவில்லை. இன்னார் மேல் என்றில்லாமல், இன்ன தன் மேல் என்றில்லாமல் பொதுவாக ஒரு வெறுப்புணர்ச்சி அவன் உள்ளத்தில் நிறைந்திருந்தது.

முந்திய இரண்டு இரவுகளின் தோல்வி அவனை வெகுவாகப் பாதித்து இருந்ததை அவன் உணர்ந்தான். இதன் எதிர்கால விளைவுகளை எண்ணிப் பார்க்கவும் அவனுக்குத் துணிச்சல் வரவில்லை. ஏதோ ஒரு காரிருள் சூழ்ந்த கானகத்திற்குள் இரவில் பிரவேசிக்கப் போகிறவனின் மனநிலையை ஒத்திருந்தது அவன் மனநிலை.

தனக்கு ஏதோ ஆகிவிட்டது, தன் ஆண்மை என்ன காரணத்தினாலோ பறி போய் விட்டது, தான் இனி எதற்கும் பயனற்றவன், எல்லோருடைய கேலிக்கும், கிண்டலுக்கும் ஆளாகி அவமானப்பட்டு, நெஞ்சுடைந்து, நடைப்பிணமாய் வளைய வரவேண்டியவன் என்றெல்லாம் பயங்கரமான எதிர்காலம் அவன் கற்பனையில் தோன்றத் தொடங்கியது.

'நமக்குக் குடுத்து வெச்சது அவ்வளவுதான்னு நினைச்சுண்டு மீதி நாளைக் கடத்த வேண்டியதுதான்' என்று நேற்று கடற்கரையில் ரேகா சொன்னாள். பத்தொன்பது வருடங்கள்! இந்தப் பத்தொன்பது வருடங்கள் தானா தனக்குக் கொடுத்து வைத்தவை? பத்தொன்பது வருடங்கள் என்பது அப்படியொன்றும் குறுகிய காலம் இல்லை

இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.

—ஹேமா ஆனந்ததீர்த்தன்

தான். ஆனால் அந்த நீண்ட காலம் எப்படி ஓடி விட்டது. எவ்வளவு விரைவாக ஓடிவிட்டது? பத்தொன்பது நாட்கள் போல ஓடி விட்டதே!

அந்த முதல் இரவு இப்போது அவனது ஞாபகத்திற்கு வந்தது.

அவனையும் ரேகாவையும் தனி யறைக்குள் அனுப்புவதற்கு முன்னால் அவனது அத்தையின் கணவர் அவனைத் தனியே அழைத்து, "உன் தலகாணிக் குக் கீழே பழைய லுங்கி ஒண்ணு மடிச்சு வெச்சிருக்கேன். இந்த சரிகை வேட் டியை அவிழ்த்து தூர வெச்சுட்டு அந்த லுங்கியைக் கட்டிக்கோ. உடனே கட்டிக் கணும்கறதில்லே. எல்லாம் முடிஞ்சதுக் கப்பறம் தூங்கப் போறப்ப. ராத்திரி முழுக்க 'நேக்ட்'டாவா இருக்கப் போறிங்க?" என்று கூறி சிரித்தார்.

அதே மாதிரி ரேகாவின் தலை யணையின் கீழும் ஒரு பழம் புடவையை மடித்து வைத்திருந்தார்கள். ராத்திரி முழுக்க தன் அத்தையின் கணவர் சொன்னது போல ஆடையேயின்றியும் இருக்க முடியாது. பட்டுப் புடவை உடுத்திக் கொண்டும் இருக்க முடியாது என்பதை உணர்ந்து பெரியவர்கள் அந்த ஏற்பாட்டைச் செய்திருந்தார்கள்.

எவ்வளவு 'பிராக்டிகலாக' இருந்திருக்கிறார்கள் நமது பெரியவர்கள் என்று நினைத்த போது அந்த நிலையிலும் சதீஷுக்கு சிரிப்பு வரும் போல இருந்தது.

அதே அத்தையின் கணவர் தனது விவாகத்தின் மூன்றாவது நாள் இன்னொரு வார்த்தை சொன்னார். தான் அன்று நண்பர்களுடன் வாலிபால் விளை யாட்டு விளையாடிவிட்டு வீட்டுக்குத் தாமதமாக வந்தான். "ஏன் லேட்டு?" என்று அவர் கேட்டார். அவன் சொன் னான். "உனக்குத்தான் இப்ப இங்கே வீட்லயே வாலிபால் விளையாட்டு தினமும் விளையாட வேண்டியிருக்கே, அப்புறம் க்ரவுண்ட்ல வேற போய் என் னத்துக்கு விளையாடணும்?" என்று எல் லார் எதிரிலும் அவர் சொன்னதும் எல் லாரும் சிரித்து விட்டார்கள்.

தானும் ரேகாவும் இந்தப் பத்தொன் பது வருடங்களில் எப்படியெப்படியெல் லாம் இந்த அற்புதமான இயற்கையின் கொடுப்பினையை அனுபவித்து ஆனந் தித்திருக்கிறோம் என்பதை எண்ணிப் பார்த்தால் அந்த நினைவே ஒரு இன்பம். அதையெல்லாம் வெட்கத்தை விட்டு எழுதுவதானால் ஒரு ஐந்நூறு பக்கப் புத்தகமாக எழுதலாம். இப்படி நினைத் மறு விநாடியே இனி இந்த இன்பங்களை யெல்லாம் தான் அனுபவிக்க முடியா என்ற எண்ணம் தோன்றியதும் தன்னு டைய இழப்பு எவ்வளவு மகத்தான என்று தோன்றி அவன் நெஞ்சை பிசைவது போலிருந்தது.

படுக்கையில் படுத்துக்கொண்டே இருந்தால் இந்த எண்ணங்களிலிருந் தப்புவிக்க முடியாது என்று தோன்றி தால், சட்டென்று படுக்கையை விட் எழுந்து கொண்டான்.

பாத்ரூமை நோக்கிச் செல்லு போது டெலிபோன் அவன் கண்களி பட்டது. தொலைபேசியில் டாக்டர் குடு ராவை அழைத்து ஆத்திரம் தீ திட்டவேண்டும் என்று அவனுக்கு தோன்றியது.

"டாக்டர், உங்களை நம்பி நான் மோசம் போய் விட்டேனே. இப்போ நீங்கள் எனக்கு என்ன பதில் சொல்ல போகிறீர்கள்? என்னுடைய இழப்புக் நீங்கள் தான் பொறுப்பு. இதற்கு நீங்கள் எப்படி எனக்கு ஈடு செய்யப் போகிறீ கள். லட்சம் ரூபாய் நீங்கள் கொட்டிக்



கொடுத்தாலும் நான் இழந்ததை இனிப் பெறமுடியுமா? நான் அப்போதே எவ்வளவு முட்டிக் கொண்டேன், இந்த ஆபரேஷன் எனக்கு வேண்டாமென்று. நீங்கள் கேட்டீர்களா? என்னை இப்படி ஒரு நரகத்தில் தள்ளிவிட்டீர்களே. என் வாழ்க்கை மட்டுமல்லாமல் ரேகாவின் வாழ்க்கையுமல்லவா இனி நரகமாகப் போய்விடும்? உங்கள் பதில் என்ன டாக்டர்?'' என்று அவரைக்கேட்க வேண்டுமென்று தோன்றியது.

ஒலி வாங்கியைக் கையிலெடுத்து வைத்தபடி எண்களைச் சுழற்றினான். மறுமுனையில் மணி அடித்தது. அங்கே ஒலி வாங்கியை எடுக்கும் சப்தம் கேட்டதுமே சதீஷ் இணைப்பைத் துண்டித்துவிட்டான்.

'டெலிபோனில் பேச வேண்டாம். நேரில் பார்த்துப் பேசிக் கொள்ளலாம்' என்று அவன் எண்ணம் மாறிவிட்டது.

பாத்ரூமுக்குள் சென்று அவன் தன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வெளியே வந்தபோது ரேகா கையில் காப்பி டபரா தம்ளருடன் அவனுக்காகக் காத்தபடி உட்கார்ந்திருந்தாள்.

சதீஷ் அவளோடு ஒன்றும் பேசாமல், அவள் முகத்தைக் கூட நிமிர்ந்து பார்க்காமல், மௌனமாக டபரா டம்ளரை வாங்கிக் கொண்டு காப்பியை ஆற்றத் தொடங்கினான்.



தொலைபேசி மணியடித்தது.

ரேகா சென்று அதைக் கவனித்தாள்.

'சதீஷ், உங்களைத்தான் சேர்மன் கூப்பிடறாரு. பாம்பேலேர்ந்து' என்றாள், ஒலிவாங்கியை அவன் பக்கமாக நீட்டியபடி.

சதீஷ் காப்பியை அப்படியே வைத்துவிட்டு பரபரப்புடன் எழுந்து வந்து தொலைபேசியில் பேசினான்.

அவன் அவசரமாக பம்பாய்க்கு வரவேண்டுமென்று சேர்மன் விரும்பினார். அவன் அன்று மாலை விமானத்திலேயே புறப்பட்டு வருவதாக அவரிடம் சொன்னான்.

பேசி முடித்துவிட்டு மறுபடியும் காப்பி சாப்பிடச் சென்றான்.

"எவ்வளவு நாளாகும் திரும்பி வர்றதுக்கு?" என்று கேட்டாள் ரேகா.

"தெரியலே. மூணு, நாலு நாள் ஆகலாம். ஒரு வாரம் மேக்ஸிமம்."

"இன்னிக்கு ராத்திரியே புறப்படணுமா?"

"ஏன்?"

"நாளைக்கு காலையிலெ பிளேன்ல போனா போறாதா?"

"ஏன் இன்னிக்கு ராத்திரி நான் போறதுல உனக்கென்ன கஷ்டம்?"

"எனக்கொண்ணும் கஷ்டமில்லே. ரெண்டு ராத்திரி இந்த மாதிரி ஆயிடுச்சே. அப்படியே நீங்க போகணுமான்னுதான். இன்னிக்கு ராத்திரி இருந்துட்டு நாளைக்குக் காலையிலெ போலாமேன்னு எனக்குத் தோணறது."

"ரெண்டு நாள் பட்ட அவமானம் போறாது, மூணாவது நாளும் அவமானப் பட்டுட்டுப் போங்கோங்கறியா?"

சதீஷின் வார்த்தைகள் ஒரு பிடி நெருப்பை வாரி அவள் முகத்தில் எறிந்தாற்போல இருந்தன.

"ஏன் இப்படி கோபிச்சுக்கறேள்? இதுல அவமானம் என்ன வந்தது?"

"அவமானமில்லாம பின்ன என்ன பெருமையா?" என்று சதீஷ் பெரிய குரலெடுத்துக் கத்தினான்.

"கத்தாதிங்கோ ப்ளீஸ். விஷயம் நமக்குள்ள இருக்கற வரையிலும் அவமானம் எங்கேயிருந்து வரும்? நான் வேற நீங்க வேறயா?"

"அவமானம்தான். அவமானம்தான். பொறுக்க முடியாத அவமானம். நீ வேற என்னை மேல மேல குத்தாதே. போ. போய் உன் வேலையைக் கவனி" என்று எரிந்து விழுந்தான்.

"போறேன். ஆனா உங்க நன்மையை உத்தேசிச்சு ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போறேன். என்கிட்ட எவ்வளவு வேணா எரிஞ்சு விழுங்கோ. பரவாயில்லே. நான் சகிச்சுக்கறேன். ஆனா இந்த மாதிரி வீட்ல வேற யார் மேலயாவதோ, ஆபீசுலயோ எரிஞ்சு விழுந்திங்கன்னா அவங்களுக்கு சந்தேகம் தட்டும். ஏன்னா அது உங்க சுபாவத்துக்கு கொஞ்சம்கூட பொருந்தல்லே. அதனாலெ உங்களுக்கு ஏதோ பெரிய மனக் கவலைன்னோ, உடம்புக்கு ஏதாவதுன்னோ நினைச்சுண்டு குடைவா. பதில் சொல்றதுக்குள்ள ரொம்ப சங்கடமாப் போயிடும். ப்ளீஸ்" என்று சொல்லும்போதே ரேகாவின் கண்களில் நீர் நிறைந்து விட்டது.

அதுவரையில் ஒரு நாள் கூட சதீஷ் அவளை எதற்காகவும் அவ்வாறு கோபித்துக் கொண்டது கிடையாது.

"சரி போ. தாங்க்யூ ஃபர் யுவர் அட்வைஸ்."

ரேகா மேற்கொண்டு அங்கே நிற்காமல் கண்களைத் துடைத்துக் கொண்டு வெளியேறினாள்.

அவள் அறையை விட்டு வெளிச்சென்று விட்டாள் என்றதும் சதீஷ் இரு கைகளாலும் தன் முகத்தை மூடிக் கொண்டு ஒரு பெருமூச்சு விட்டான். அவன் கைகளும் கண்ணீரால் நனைந்தன. ரேகாவை, தான் அவ்வாறு கோபித்துக் கொண்டது தவறு என்று அவன் உள்ளம் வருந்தியது.

முக க்ஷவரம் செய்து கொள்வதற்காக அவன் கண்ணாடியின் முன் சென்று அமர்ந்து கொண்டான். சோப்பைக் கரைத்து முகத்திலே தடவி

---

பிரான்சில் தமிழ்ப்பற்றின் காரணமாக ஆண்கள் கண்ணகி, மாதவி, ஜானகி என்ற பெயர்களை வைத்துக் கொண்டுள்ளனர்.

—வ. தேனப்பன்

நுரையைக் கிளப்பியபோது ரேகா மறுபடியும் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள்.

"நீங்க கோபிச்சுண்டாலும் எனக்கு மனசு கேக்கலெ. எனக்குத் தோணினதைச் சொல்லுறேன். கேக்கறதும் கேக்காததும் உங்க இஷ்டம்" என்றாள்.

"ஐ எம் ஸாரி ரேகா. ரொம்ப அநாகரிகமா நான் நடந்துண்டுட்டேன். ப்ளீஸ் எக்ஸ்யூஸ் மீ" என்று அவள் இரு கைகளையும் பிடித்துக் கொண்டான்.

"பரவாயில்லே உங்க மனசு எனக்குத் தெரியாதா? அது போகட்டும், நான் சொல்ல வந்ததைச் சொல்லட்டுமா?"

"சொல்லு ரேகா."

"எப்படியும் பம்பாய்க்குப் போறிங்க. அங்கே நல்ல டாக்டர்ஸ் இருப்பா. விசாரிச்சு யாராவது ஸ்பெஷலிஸ்டை கன்ஸல்ட் பண்ணிப் பாருங்க. தேவைன்னுபட்டா சைகியாட்ரிஸ்ட் யாரையாவது பார்த்தாலும் பார்க்கலாம்."

"காலையிலே குடும்பராவுக்கு ஃபோன் பண்ணலாம்னு டயல் கூட பண்ணிட்டேன். அப்புறம் வேண்டாம்னு தோணித்து. கட் பண்ணிட்டேன்."

"நல்ல காரியம் செஞ்சிங்க. இங்கே யாருக்கும் தெரிய வேண்டாம். குடும்பராவ் ஓட்டை வாய். சமாசாரம் வெளியே வந்துடும். வேண்டவே வேண்டாம்."

"நான் பாம்பேலேர்ந்து தினமும் எஸ்.டி.டி. கால் போட்டு உனக்கு டெவலப்மெண்ட்ஸ் பத்தி சொல்றேன்."

"செய்ங்கோ."

"யாராவது ஜோசியனை கன்ஸல்ட் பண்ணக்கூடத் தேவலையோன்னு தோணறது."

"வேண்டாம் வேண்டாம். ஜோசியன் என்ன சொல்லப் போறான். போறாத காலம்பான். ஏதாவது சாந்தி பண்ணணும்பான். அதெல்லாம் அநாவசிய பப்ளிசிடி."

"நீ சொல்றதும் கரெக்ட்தான். தண்ணிலெ முழுகறவன் கைக்கு எது கிடைக்கறதுன்னு தவிக்கருப்பலெ நானும் தவிக்கறேன்" என்று கூறி சதீஷ் சிரிக்க முயன்றான்.

"முக்கியமா நீங்க தைரியமா இருக்கணும். உங்களுக்கு ஒண்ணும் சீரியஸ் ட்ரபுள் இல்லேன்னு நீங்க முழு மனசோட நம்பணும். இல்லாட்டா, கவலையே உங்க கண்டிஷனை இன்னும் மோசமாக்கிடறதுக்கு சான்ஸ் உண்டு"

"நீயே சைகியாட்ரிஸ்ட் மாதிரி பேசறே."

"எங்கியோ படிச்ச ஞாபகம். ஜஸ்ட் லைக் எனி அதர் பேஷண்ட், இந்த விஷயத்துலயும் நீங்க எவ்வளவு தூரம் டாக்டரோட ஒத்துழைக்கறிங்களோ அவ்வளவுக்குஉங்களுக்கு சீக்கிரம் குணமாயிடும்."

சதீஷ் அவளுக்கு ஒன்றும் பதில் சொல்லாமல் க்ஷவரம் செய்து கொள்வதில் கவனத்தைச் செலுத்தினான்.

ஊருக்கு வெளியே புதைக்கப் பட்ட சடலத்தை மூன்று ஆண்டு களுக்குப் பிறகு தோண்டி எடுத்து ஊர்வலமாக நகரத்துக்குள் கொண்டு வந்து அமர்க்களமாக அரச மரியாதை யுடன் புதைத்தனர். இந்தச் சடலம் தான் வால்டேர்.

—ஜோலி. பரஞ்ஜோதி

"நான் போகட்டுமா?"

"ஊம்."

"சாயங்காலம் ஆபீசுலேர்ந்து வீட்டுக்கு வந்துட்டுத்தானே ஏர் போர்ட்டுக்குப் போவிங்க?"

"ஆமா. ஏழு மணிக்குத்தானே பிளேன்."

"சரி. நான் உங்களுக்கு வேண்டியதையெல்லாம் எடுத்து வைக்கிறேன்" என்று கூறிவிட்டு ரேகா போய்விட்டாள்.

ஆபீசில் நுழைந்த சதீஷ் பம்பாய்க்கு எடுத்துச்செல்ல வேண்டிய கோப்புகளை தயார்ப்படுத்துவதற்காக மணியடித்து ராஜியை அழைத்தான்.

"குட்மார்னிங் சார்" என்று கூறியபடியே ராஜி உள்ளே நுழைந்தாள்.

எலுமிச்சம்பழ நிறத்தில் கடாவ் வாயில் புடவை உடுத்தியிருந்தாள்.



புல்லாங்குழலிலொரு புதுராகம்—என்
கல்யாண சேதியை அது பாடும்...
மெல்லநெஞ்சில் ஆசைகள் அலைமோதும்—கண்ணன்
மோகனப் புன்னகையே வழிகாட்டும்...

—'தாய் மூகாம்பிகை' படத்தில் அருந்ததி.

அதே நிறத்தில் ஸ்லீவ் லெஸ் ரவிக்கை.

சதீஷ் தனக்கு வேண்டிய கோப்புகள் பற்றிக் கூறினுன். தயாரிக்க வேண்டிய சில ஸ்டேட்மெண்டுகளைப் பற்றியும் சொன்ஞன்.

''யெஸ் சார். ஒரு மணிக்குள் எல்லாத்தையும் ரெடி பண்ணிடறேன்'' என்ருள்.

கூறிவிட்டு வெளியே சென்று விட்டாள்.

சதீஷ் மேஜை மேல் மடித்து வைக்கப்பட்டிருந்த எகனுமிக் டைம்ஸ், பிஸினஸ் ஸ்டாண்டர்ட், ஃபைனுன்சியல் எக்ஸ்பிரஸ் எல்லாவற்றையும் இழுத்து அருகில் வைத்துக்கொண்டு, பிரிக்காமலே பார்வையை அவைகளின் மீது ஓட்டினுன்.

பதினைந்து நிமிடங்களுக்குள்ளாக ராஜி மறுபடியும் அறைக்குள் புகுந்தாள். அவள் இரண்டு கைகளிலும் ஒரு பெரிய ஸ்டேட்மெண்டைப் பிடித்துக் கொண்டு வந்திருந்தாள்.

அதை சதீஷின் மேஜை மீது வைத்துவிட்டு ஏதோ சொன்ஞள். சந்தேகம் கேட்டாள். சில நிமிடங்களுக்குப் பிறகு எழுந்து வந்து அவனருகில் வழக்கம் போல அவனை உராய்ந்தபடி நின்றுகொண்டு ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

''ஐ ஸே ராஜி. ஸ்டாப் திஸ் ஹேபிட் ஃப்ரம் டுடே. என் பக்கத்தில வந்து நிக்காதே இனிமே. இட் இஸ் வெரி பேட். என்னுலெ இதை பொறுத்துக்க முடியாது. நானும் வேண்டாம் வேண்டாம்னு பொறுத்துப் பொறுத்துப் பார்த்தா நீ லிமிட்டுக்கு மீறிப்போறே. இப்ப யாராவது உள்ளே வந்து பார்த்தா என்னைப் பத்தியும் உன்னைப் பத்தியும் என்ன நினைப்பாங்க? கோ அண்ட் எஸிட் தேர்.'' என்று படபடவென்று ஆவேசம் வந்தவன் போல சதீஷ் பொரிந்து தள்ளியதும் ராஜி அதிர்ந்து போய் விட்டாள்.

"ஸாரி ஸார். நான் தப்பான எண்ணத்தோட செய்யலெ."

"தப்போ ரைட்டோ, ஐ டோண்ட் லைக் இட். அவ்வளவுதான்."

"எக்ஸ்யூஸ் மீ சார். இனிமே இப்படி நேராம பார்த்துக்கறேன்."

"தட்ஸ் ஆல் ரைட். யூ கேன் கோ அவுட் நௌ" என்று அவன் கூறியதும் ராஜி, மேற்கொண்டு ஒன்றும் பேசாமல் வெளியே சென்ருள்.

ராஜி அதிர்ந்ததைவிட சதீஷே செய்லை நினைத்து அதிர்ந்து போய் விட்டிருந்தான். தனக்கு என்ன ஆகி விட்டது என்று அவனுக்கு விளங்க வில்லை. காலையில் ரேகா தன்னை எச்சரித்திருந்தும் கூட அதை மறந்து இவ்வாறு ராஜியிடம் ஏன் கத்தி விட்டோம் என்று தன்னையே நொந்து கொண்டான்.

ராஜி தன் மீது உராய்ந்தபடி நிற்பதை எவ்வளவு மகிழ்ச்சியோடு அவன் இதுவரையில் ஏற்றுக் கொண்டிருந்திருக்கிருன்? அது மட்டுமா? ஏன் அவள் அத்துடன் நின்று விடுகிருள், மேற்கொண்டு இன்னும் கொஞ்சம் நெருக்கமாக எதையாவது செய்யக் கூடாதா என்றெல்லாம் ஏங்கியிருக்கிருனே?

தன்னுடைய இயலாமை, பெண்களின் மீதே தனக்கு ஒரு வெறுப்பை வளர்த்து விட்டு விட்டது போலும் என்று அவனுக்குத் தோன்றியது.

அல்லது, ராஜி வினயா வாசுதேவனின் கூட அவ்வளவு நெருக்கமாகப் பழகியது அவனது பொறுமையைக் கிளப்பி விட்டுவிட்டதோ? அவள் எந்த ஆணுடனும் நெருங்கிப் பழகுவதை ஆட்சேபிக்க தனக்கு என்ன உரிமை இருக்கிறது?

எந்த ஆணுடனும் அவள் நெருங்குவதை விட தனக்குத் தெரிந்த, தன் நண்பனுன ஒருவனுடன் அவள் இழைவதுதான் அவனுல் சகிக்க முடியாமற் போய் விட்டதுஎன்று அவன் நினைத்துக் கொண்டான். இன்னும் அவள் சொன்னபடி அவளோடு பழகி அவள் வேண்டும்போது அவளுக்கு செக்ஸ் இன்பத்தை அளிக்கும் ஆண்களின் பட்டியலில் தனது ஆபீசில் தன் கீழ் வேலை செய்பவர்கள் யாராவது இருக்கிருர்கள் என்று தெரிந்தால் அவன் ஆத்திரம் இன்னும் அதிகமாகி விடும் என்று அவனுக்குத் தோன்றியது.

யோசித்துப் பார்க்கும் போது அவனுக்கு, தான் ஒரு முரண்பாடுகள் நிறைந்த மனிதனே என்று தோன்றியது. எப்போது தனக்கு இனி பெண்களால் உபயோகம் இல்லை என்று ஆகி விட்டதோ, அதன் காரணமாக அவர்கள் மேல் ஒரு வெறுப்புத் தோன்ற ஆரம்பித்து விட்டதோ, அப்புறம் அவர்கள் யாரோடு எப்படிப்போனுல் என்ன என்று விட்டுவிட வேண்டியது தானே? அதை இப்படி பொருமைப்பட்டுப் புழுங்க வேண்டிய தேவை என்ன? அதற்குக் காரணம் தன் உடலிலும், மனத்திலும் இன்னும் இச்சை இருப்பதுதான். இச்சையும் இயலாமையும் சேர்ந்து இருப்பதன் விளைவுதான் இந்த வெறுப்பு. இச்சையே இல்லாமற் போய் விட்டால் இந்த வேதனைகள் ஒன்றும் இருக்காது.

சதீஷ் சிரித்துக் கொண்டான். எங்கெங்கோ தத்துவ விசாரங்களில் தன் மனம் அலைபாயும் விந்தையை நினைத்துத்தான் அவனுக்குச் சிரிப்பு வந்தது.

மறுபடியும் ராஜியைக் கூப்பிட்டு மன்னிப்பு கேட்டுக் கொள்ள வேண்டுமா வேண்டாமா என்று அவன் மனத்தில் ஒரு சிறு போராட்டம் நடந்தது. கடைசியில் வேண்டாம். பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று தீர்மானம் செய்து கொண்டு ஆபீஸ் வேலைகளில் கவனத்தைச் செலுத்த முனைந்தான்.

(தொடரும்)

## சஞ்சய் காந்தியும் படமாகிருர்

பிரபல இயக்குனர், படத் தயாரிப்பாளர் ரமேஷ் குப்தா, சஞ்சய் காந்தியின் வாழ்க்கை வரலாற்றை ஒரு திரைக்காவியமாக உருவாக்க முடிவு செய்துள்ளார். இத்திரைப்படத்தைத் தயாரிக்க, பிரபல நட்சத்திரங்கள் மிகக் குறைந்த ஊதியத்திற்கு நடித்துத் தர உறுதியளித்ததாகவும் அவர் கூறியுள்ளார்.

—சித்தோடு சிவம்

பரிசு பெற்ற ஆறுபேர்களுக்கும்
ஏ.வி.எம். நிறுவனம் ஆளுக்கொரு
ஹெல்ட்ரான் டிரான்சிஸ்டர் வழங்குகிறது.

1

சி.லோகநாதன்,
குளமங்கலம் தெற்கு (அஞ்சல்)
(வழி)கீரமங்கலம்-614624,
ஆலங்குடி (தாலுக்கா)
புதுக்கோட்டை மாவட்டம்.





**ரஜினிகாந்த்:** ரஜினிகாந்திடம் நடிப் பாற்றல் உண்டு என்பதை இவர் இதில் ஏற்ற ராஜாபாத்திரம் நிரூபித்து விட்டது. பல இடங்களில் இவரது முத்திரை ஆழ விழுந்திருக்கிறது.

**ராதிகா:** போக்கிரி ராஜாவுக்கு ஏற்ற ராணியாய் ராதிகா வெளுத்து வாங்கி விட்டார். சும்மா சொல்லக் கூடாது. இவர் குரலும், மொழியும் அலாதி.

**ஸ்ரீதேவி:** ஸ்ரீதேவி—குறும்புக்காரி! ரஜினிக்கு காபி கொடுத்துவிட்டு "காபி விலை ஒரு ரூபாய்தான். அதை நான் போட்டதால் நூறு ரூபாய்" என்று 'திருப்பி கொடுப்பது' போன்ற இடங் களில் பலே ஜோர்.

**முத்துராமன்:** நவரசத்திலகம் முத்து ராமனா இவர்? நம்ப முடியவில்லையே! ஏற்ற பாத்திரத்தை என்ன அருமை யாய்ச் செய்திருக்கிறார்!

**ஒய்.ஜி.மகேந்திரன்:** இந்தப் படத்தின் நடிப்புக்கு இவர் கோமாளிராஜா! எப் போதாவது சில புத்திசாலித் தனங்களை செய்கிற அழகே தனி! 50% அசடு வழிவதிலும், 50% நகைச்சுவையிலும். படு பிரமாதம்!

**மனோரமா:** மனோரமா! நகைச்சுவை மகாராணியா இவர்? வெடிச் சிரிப்புகளை

12

# ரேகா-சதீஷ்-ராஜ்

தேமா ஆனந்ததீர்த்தன்

இரண்டு வருடங்களுக்கு முன், தான் பார்த்திருந்த சௌரிராஜனுக்கும் இப்போது தன் முன் நிற்கும் சௌரி ராஜனுக்கும் இவ்வளவு வித்தியாசமா? இருவரும் ஒருவரே என்று நம்பவே முடியவில்லை அவனுல்.

முகமெல்லாம் தடித்து,உதடுகள் பெருத்து நிகு நிகு வென்று தொழுநோய் நன்ருகப் பற்றிக்கொண்ட சௌரிராஜன்.

அணிந்திருந்த பாண்ட்டும் சட்டையும் அழுக்கேறி அங்கங்கே கிழிசல்களும் காணப்பட்டன.

மாதம் இரண்டாயிரதைந்நூறுக்கு மேல் சம்பாதித்துக் கொண்டிருந்த சௌரிராஜனுக்கு இந்த நிலை எப்படி ஏற்பட்டது? அதுவும் இந்த இரண்டு வருஷங்களுக்குள்?

சினிமாவிலும், நாடகத்திலும் வருவது போல இது என்ன க்ளைமாக்ஸ்? ரத்தக்கண்ணீர் ராதாவை நினைவூட்டியது சௌரிராஜனின் தோற்றம்.

---

*இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனுல் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. சீக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.*

*—தேமா ஆனந்ததீர்த்தன்*

---

பம்பாய் சாந்தா க்ரூஸ் விமான நிலையத்தில், விமானத்திலிருந்து இறங்கி வெளியே வந்து டாக்ஸிக்காகக் காத்து நின்ருன் சதீஷ்.

"சாப், டாக்ஸி சாஹியே?" என்ற குரல் கேட்டுத் திரும்பியவன் தன்னுடன் பேசியவனைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய்விட்டான். அவன் திடுக்கிட்டது போலவே அவனேடு பேசிய அந்த ஆளும் திகைப்படைந்து விட்டான்.

"நீங்களா சார்?"

"நீங்களா? சௌரிராஜனு?"

"ஆமாம்."

சௌரிராஜன் அடைந்தது ஆச்சரியம். சதீஷோ அதிர்ச்சியே அடைந்தான். காரணம், சௌரிராஜனின் தோற்றம்.

இருவருக்குமே கூச்சம். தான் நன்ருக இருந்தபோது பார்த்திருந்த சதீஷ் இப்போது இந்த நிலையில் தன்னைப் பார்த்து விட்டானே என்று சௌரிராஜனுக்கு. நல்ல அந்தஸ்தில் இருந்த ஒருவர் (எவ்வளவுதான் மனிதத் தன்மை இல்லாத மிருகமாக நடந்து கொண்டவராய் இருந்த போதிலும்) இவ்வளவு கேவலமான நிலைக்கு வந்துவிட்டாரே என்று சதீஷுக்கு.

மேற்கொண்டு என்ன பேசுவதென்று தெரியாமல் இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபடி நின்றனர்.

கடைசியில் சௌரிராஜனே தான் பேசினுர்.

"சௌக்கியமாயிருக்கீங்களா? வீட்ல மிஸஸ், பசங்க, பேரண்ட்ஸ் எல்லாரும் சௌக்கியமா?"

"ஊம். நீங்க ஏன் இப்படி?"

"எல்லாம் தலைவிதி. செஞ்ச பாவம். அனுபவிக்கறேன். தெய்வம் நின்று கொல்லும்னு வசனம் சொல்லுவா. ஆனா என் விஷயத்துல அந்த தெய்வம் வெய்ட் பண்ணத் தயாராயில்லே. ஹி இஸ் நாட் பிரிபேர்ட் டு டேக் சான்ஸஸ். அதனாலே இப்பவே கை மேலயே பலனைக் கொடுத்துடுத்து" என்று சிரித்தார்.

சிரிப்பு விகாரமாக இருந்தது.



"இருந்தாலும், இவ்வளவு பயங்கரமான அவஸ்தையிலெ...."

"எல்லாம் சொல்றேன். நீங்க எங்கே போகணும்? முதல்ல உங்களுக்கு டாக்ஸி பிடிச்சுக் குடுத்துட்டு நானும் உங்களோடயே வர்றேன். உங்களுக்கு ஆட்சேபணை இல்லேன்னு என் கதை முழுக்க சொல்றேன்."

"நான் தார்தேவ் போகணும். எங்க ரெஸ்ட் ஹவுஸ் அங்கே இருக்கு."

"சரி. இங்கேயே ஒரு நிமிஷம் நில்லுங்கோ. நான் டாக்ஸி பிடிச்சுண்டு வந்துடறேன். டாக்ஸிக்காரங்க எல்லாரும் எனக்குத் தெரிஞ்சவங்கதான்." என்று சொல்லி விட்டு சௌரிராஜன் கூட்டத்தில் மறைந்தார்.

சதீஷுக்கு தன் நிலையையும் சௌரிராஜன் நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தோன்றியது. தானும் இழத்தற்கரிய ஒன்றை இழந்து விட்டு நிற்கிறோம். சௌரிராஜனும் பலவற்றை இழந்து விட்டு நிற்கிறார். ஆனால் அவரோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது தன்னுடைய இழப்பு மிகவும் அற்பமானது என்று அவனுக்குத் தோன்றியது. அடுத்த விநாடியே, சௌரிராஜன் செய்த குற்றங்களுக்கு, அக்கிரமங்களுக்கு தண்டனையனுபவிக்



கிறார். தான் என்ன பாவத்திற்காக இந்த தண்டனையை அனுபவிக்க வேண்டும் என்ற கேள்வி எழுந்தது அவன் மனத்தில். தனக்குத் தெரிந்து, தான் யாருக்கும் எந்தக் கெடுதலும் இது வரையில் செய்ததில்லையே? ஒருவன், தான் செய்த பாவங்களுக்கு தண்டனையை அனுபவித்தே தீருவான் என்ற நம்பிக்கையை ஏற்பதா வேண்டாமா என்ற குழப்பம் சதீஷுக்கு ஏற்பட்டது. சௌரிராஜன் விஷயத்தில் அது உண்மையாயிருக்கலாம். ஆனால் தன் விஷயத்தில் அது உண்மையில்லை என்பது நிச்சயம். அதெப்படி? உண்மை என்றால் அது எல்லோருக்கும் ஒரு போல இருக்க வேண்டாமோ? சௌரிராஜனைப் போலவும், தன்னைப் போலவும் இல்லாமல் மூன்றாவது ரகம் சிலரும் இருக்கிறார்கள். செய்த குற்றங்களுக்கும் அக்கிரமங்களுக்கும் எந்த தண்டனையையும் அனுபவிக்காமல் மேலும் மேலும் சுகத்தையும், சௌகரியங்களையும் அனுபவிப்பார்கள் — என்பதையும் சதீஷ் அப்போது நினைத்துக் கொண்டான்.

மேற்கொண்டு சதீஷின் எண்ணங்கள் உருவாவதற்குள்ளாக சௌரிராஜன் ஒரு டாக்ஸியைக் கொண்டு வந்து நிறுத்தினார். முன் சீட்டில் டிரைவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அவர் இறங்கி பின்பக்கக் கதவைத் திறந்து சதீஷ் ஏறுவதற்கு வழிவிட்டு நின்று கொண்டார்.

சதீஷ் ஏறி அமர்ந்ததும், அவரும் பின் சீட்டிலேயே ஏறி அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, "சாலோஜி" என்று டாக்ஸிக்காரனிடம் சொன்னார்.

சௌரிராஜன் மீது சதீஷுக்கு பரிதாபம் தோன்றிய போதிலும் அவர் தன் பக்கத்தில் உட்காராமல் முன் ஸீட்டிலேயே உட்கார்ந்திருந்தால் தேவலை என்று தோன்றியது. பம்பாயில் இருந்த போது, தானும் அவரும் ஒருவரையொருவர் அவ்வப்போது பார்த்துக் கொண்டதைத் தவிர ஒரு புன்னகை கூடப் பரிமாறிக் கொண்டதில்லை. பேச்சு அறவே கிடையாது. அப்படிப் பட்டவரோடு இப்போது இந்த நிலையில் இவ்வளவு நெருக்கமாக இருக்க வேண்டி வந்ததன் விந்தையை அவன் எண்ணிப்பார்த்தான். அன்று தியேட்டரில் சக்ர படம் பார்த்த போது சௌரிராஜன் நினைவு வந்ததே, அப்போது அவன் நினைத்திருப்பானா இவ்வளவு சீக்கிரம் அவரை இங்கே இந்த நிலையில் பார்ப்போம் என்று? Truth is stranger than fiction என்பது எவ்வளவு உண்மை?

டாக்ஸி ஏர் போர்ட்டை விட்டு வெளிப்பட்டு மெயின் சாலையை அடைந்து ஓடத் தொடங்கியது.

சதீஷ் சௌரிராஜனின் கதையைக் கேட்கத் தயாராயிருப்பதாக அறிவிப்பவன் போல அவரது முகத்தைப் பார்த்தான்.

"நீங்களெல்லாம் பாம்பே விட்டுப் போய் ஆறு மாசத்துக்கெல்லாம் என்னோட கஷ்டகாலம் ஆரம்பமாயிட்டுது. முதல்லெ என் வேலை போச்சு. அதுக்கு ரெண்டு காரணம். ஆபீஸ் பணத்தை கையாடியிருந்தேன். அது ஆடிட்டப்போ வெளி வந்துடுத்து. தொகை பெரிய தொகை. என்னால அதை திருப்பிக் கொடுத்து தப்பிச்சுக்க முடியலே. ரெண்டாவது அதே சமயத்துல எனக்கு இந்த வியாதி வந்துடுத்து. இந்த காரணத்தையும் வெச்சி என்னை டிஸ்மிஸ் பண்ணிட்டா.

"நான் கையாடியிருந்த தொகையைப் பிடிச்சுண்டு எனக்கு சேர வேண்டிய பிராவிடண்ட் பண்டு பணத்தை எனக்குக் கொடுத்தா. கிராசுவிடி பணம் கொடுக்க முடியாதுன்னுட்டா.மிஸ்காண்டக்ட்னு சொல்லி ஏதோ ரெகுலேஷன்ஸையெல்லாம் காட்டி அது இல்லேன்னுட்டா. எனக்கு கையிலெ கிடைச்ச தொகை ரொம்ப அல்பமானது.

"அந்த அல்பத் தொகைக்கும் ஜீவனாம்சம் வேணும்னு கேட்டு என் பொண்டாட்டி என் மேல கேஸ் போட்டுட்டா. அந்த கேஸ் அல்லாம நான் எங்க கம்பெனிமேல என்னை டிஸ்மிஸ் பண்ணது தப்புன்னும், எனக்குச் சேர வேண்டிய கிராசுடியைக் கொடுக்கணும்னும் க்ளெய்ம் பண்ணி ரெண்டு கேஸ் போட்டேன். அந்தக் கேஸ், இந்தக் கேஸ் எல்லாத்துக்குமா பணம் தண்ணீரா செலவழிஞ்சுது.

"அதோட வைத்தியச் செலவு வேற. என் மூஞ்சியப் பாத்து எனக்கு என்ன வியாதிங்கறதெத் தெரிஞ்சுண்டிருப்பேள். ஆனா அது மட்டுமல்ல. என் உடம்புலெ இன்னும் எவ்வளவோ வியாதிகள். டாக்டர்களுக்கு வாரிவாரிக் கொடுத்தேன். என் பர்ஸ் காலியானது தான் மிச்சம். என் வியாதிகள் சொஸ்தமாகல்லே.

"என் கேஸ்கள் எல்லாமே எனக்கு பாதகமாகத்தான் தீர்ப்பாச்சு. பெரிய தொகை என் மனைவிக்குக் கொடுக்க வேண்டியதாச்சு.

"அப்புறம் என்ன பண்ணுவேன்? சோத்துக்கே தாளம் போட வேண்டிய நிலை வந்துட்டுது.

"எப்படியோ வயித்தைக் கழுவிண்டிருக்கேன். டாக்ஸி பிடிச்சுக் கொடுக்கறதுங்கறது சும்மா கண் துடைப்பு. என்னோட முக்கிய தொழில் இப்போ... ஐ எம் எ ப்ளடி பிம்ப்" என்று கூறி நிறுத்தினார்.

"ச்சொச்சொ...வாட் எ பிடி? கேட்கறதுக்கு மனசுக்கு ரொம்ப கஷ்டமா இருக்கு" என்றான் சதீஷ்.

சௌரிராஜன் ஒன்றும் பதில் சொல்லாமல் சாலையையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்னைப் பார்த்ததாகவோ, என் நிலைமை இப்படி இருக்கோன்னோ, உங்காத்துல சொல்ல வேண்டாம். நானே உங்களை கவனிக்காம முதல்ல பேசிட்டதுனால அப்புறம் கழட்டிண்டு போகணும்னு தோணல்லே. நீங்கதான் கறதை கவனிச்சிருந்தேன்னு உங்களை நெருங்கியே இருக்கமாட்டேன். என்னைப் பார்த்தா கஷ்டமா இருக்குன்னேன். என்னைப் பார்த்து அப்படியெல்லாம் பரிதாபப் படாதிங்கோ. ச்சீன்னு காறித் துப்புங்கோ. ஐ டிஸர்வ் தட் ஒன்லி" என்றார்.

"ஜாகை எங்கே?"

"ஜாகை ஏது? ஏர்.போர்ட்லயோ எங்கியாவது படுத்துத் தூங்குவேன். இல்லாட்டா ரயில்வே ஸ்டேஷன். அதுவுமில்லாட்டா ப்ளாட்பாரம்" என்று விரக்தியாகச் சிரித்தார்.

அவருக்கு ஏதாவது பண உதவி செய்யலாமா என்று சதீஷுக்குத் தோன்றியது. மறுபடியும் தானாக அப்படிச் செய்வதைக் காட்டிலும் அவராகக் கேட்டால் அப்போது பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்து அந்த எண்ணத்தை அப்படியே அமுக்கி விட்டான்.

"வேற ஏதாவது டீஸண்டான வேலை பார்த்துக்கப்படாதோ?"

"டீஸண்டான வேலையா? யார் குடுப்பான்? டீஸன்டான ஆசாமியாயிருந்தாத் தானே

உலகில் திருட்டு போன்ற குற்றங்களுக்கு பெயர் போன நகரம் எது தெரியுமா? பாரீஸ் என்று பிரான்சு நாட்டு இன்சூரன்சு சங்க தகவல் நிலையம் தெரிவிக்கிறது. இதற்கு அடுத்தபடியாக முன்னணியில் நிற்கும் நகரங்கள் லாஸ் ஏஞ்சல்ஸ், நியூயார்க் நகரங்களாகும் என்று இச்சங்கம் தெரிவிக்கிறது

—த். சத்தியநாராயணன்

அந்த மாதிரி வேலை கிடைக்கிறதுக்கு? நீங்கதான் என்னமோ பெரிய மனசோட பக்கத்துல உக்கார வெச்சிப் பேசிண்டிருக்கிங்க. மத்தவனல்லாம் வெறி நாயைக் கல்லால அடிக்கறாப்பல அல்ல என்னை யும் அடிக்க வரான்?" என்றார்.

இவ்வாறு பேசிக் கொண்டே சதீஷ் இறங்க வேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்து விட்டார்கள்.

"இன்னும் நாலு நாள் இருப்பிங்களா?" என்று சௌரிராஜன் கேட்டார்.

"இருப்பேன்."

"நான் மறுபடியும் உங்களை வந்து பார்க்கறேன்."

"இப்போ எங்கே போறிங்க?"

"இந்த டாக்ஸிலயே போயிடுவேன். எனக்குத் தெரிஞ்சவன் தான்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

வெகு நேரம் சதீஷ் தன் குறையையும் மறந்து சௌரிராஜனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் தனக்கு பைத்தியமே பிடித்து விட்டிருக்கும். அல்லது, தான் தற்கொலை செய்து கொண்டிருப்பேன் என்று நினைத்துக் கொண்டான்.

மறுபடியும் அவர் வந்து பார்ப்பதாகச் சொல்லியிருந்த போதிலும், அவரை மறுபடியும் பார்க்க வேண்டுமென்ற அவனுக்கு விருப்ப மிருக்கவில்லை. அவர் வராமலே இருந்து விட்டால் தேவலை என்று நினைத்துக் கொண்டான்.



அணைக்க அணைக்க நீ சம்மதி - அமுதம்
அளிக்க அளிக்கத்தான் நிம்மதி
இனிக்க இனிக்கவா மதுமதி — நான்
இறுக்க நெருக்க நீ அனுமதி!

—"நிழல் தேடும் நெஞ்சங்

ராஜீவ்,விஜயசா

ஜூலை 16, வியாழக்கிழமை.

ஆபீசில் மூன்று மணியோடு வேலை முடிந்து விட்டது. இனி மறுபடியும் நாளைக்குத்தான்.

டாக்ஸியில் ரெஸ்ட் ஹவுசுக்குப் புறப்பட்ட சதீஷ் ஆபரா ஹவுஸ் அருகே வரும்போது கார் ஜன்னலூடே ஒரு பெயர்ப் பலகை அவன் கண்களில் பட்டது.

டாக்டர் ஓம் பிரகாஷ் அகர்வால்

செக்ஸ் ஸ்பெஷலிஸ்ட்.

டாக்ஸியை நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டான். தார்தேவ் போவதாகச் சொல்லிவிட்டு பாதி வழியில் இறங்கிக் கொண்டதற்காக டாக்ஸிக்காரன் முணுமுணுத்தான். மீட்டர் காட்டிய தொகைக்கு மேலாக மூன்று ரூபாயைக் கொடுத்து அவனைச் சமாதானப்படுத்தி விட்டு, டாக்டரின் அறைக்குள் நுழைந்தான்.

விசாலமான வரவேற்பறை.

ஏற்கனவே ஏழெட்டுப் பேர் அ
உட்கார்ந்திருந்தார்கள். ஒரு மூலை
ஒரு மேஜை, அதன் மீது ஒரு ப
நிற டெலிபோன், நாற்காலி, ஒரு எ
இவைகள் இருந்தன. நாற்கா
யாரும் இருக்கவில்லை.

உட்கார்ந்திருந்தவர்கள் ே
இன்னும் சில காலி நாற்காலிகள்
தன. அவைகளில் ஒன்றில் போய்
உட்கார்ந்து கொண்டான்.

அப்பொழுதுதான் எதி
பித்தளை போர்டு ஒன்று அவன்
களில் பட்டது. consulting room எ
அதில் போடப்பட்டிருந்தது.

சில நிமிடங்களில் அந்தக் க
திறந்து அங்கிருந்து ஒரு ஆங்கி
இந்தியப் பெண் (அல்லது பார்சி
யாகவும் இருக்கலாம்) வெளியே வ
அந்த மேஜை, நாற்காலியண்
சென்றாள். நாற்காலியில் அமா
கொண்டு அறையைச் சுற்றி
பார்வையை வீசினாள்.

சதீஷைப் பார்த்ததும் அ

கத்தில் ஒரு கேள்விக் குறி; அடுத்த டி ஒரு புன்னகை; அதற்கடுத்த டி தலையை அசைத்து அவனைக் ட்பிட்டாள்.

சதீஷ் எழுந்து போய் அவள் ன்னால் நின்றான்.

"நீங்கள் டாக்டரைப் பார்க் ணுமா?" என்று ஆங்கிலத்தில் கேட் ாள்.

"ஆமாம்."

"அப்பாயிண்ட்மெண்ட் ஃபிக்ஸ் ண்ணிண்டிருக்கிங்களா?"

"இல்லியே."

"அப்ப இன்னிக்குப் பார்க்க ாதே. டுடே ஹி இஸ் வெரி பிஸி."

"எப்ப பார்க்க முடியும்?"

"நாளைக்கு இதே நேரத்துக்கு ர முடியுமா?"

"ஓ எஸ்."

'சரி. நான் நோட் பண்ணிக்க ன். உங்க பேரு?"

சொன்னான்.

விலாசம், உத்தியோகம், வயது ன்று சென்ஸஸுக்குக் கேட்பது போல வ்வொன்றாகக் கேட்டாள்.

அவன் சொன்னதும், "மெட்ராஸி ருந்து வந்திருக்கிறீர்களா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"இதுக்காக வரல்லே. ஆபீஸ் வேலையா வந்தேன். அப்படியே இங்கே ற வழியிலே இந்த போர்டைப் ர்த்தேன். கன்ஸல்ட் பண்ணலாம்னு தாணித்து. உள்ளே நுழைஞ்சேன்" ன்றான்.

"யூ ஆர் லக்கி. டாக்டர் அகர் இஸ் எ பிரில்லியண்ட் ஸ்பெஷ . இந்தியர்விலேயே இந்த ஃபீல்டுலெ இவரைப் போல புகழ் வாய்ந்தவர்கள் அஞ்சு ஆறு பேர் தான் இருக்காங்கோ" என்றாள்.

சதீஷுக்கு ஆறுதலாக இருந்தது. தான் ஏதோ ஒரு 'க்வாக்'கிடம் வந்து மாட்டிக் கொள்ளவில்லை என்ற திருப்தி ஏற்பட்டது.

"தாங்க்யூ" என்றான்.

"வாட் இஸ் யுவர் ட்ரபுள்?" என்று அவள் கேட்டதும் அவனுக்கு தர்ம சங்கடமாகப் போய் விட்டது.

"அதையும் சொல்லணுமா?"

"யெஸ்."

"டாக்டரிடம் சொன்னால் போதாதா?"

"டெடெய்ல்ஸ் அவர்கிட்ட சொல்லுங்க. என்ன ட்ரபுள்ங்கறதை இண்டிகேட் பண்ணு போதும்" என்றாள்.

"உங்ககிட்ட எப்படி நான் சொல்றது" என்று தயங்கினான் சதீஷ்.

"இஸ் இட் எனி வெனிரியல் டிஸீஸ்?" என்று அவளே கேட்டாள், அவன் கூச்சத்தைப் போக்குவதற்காக.

"நோ."

"தென்?"

"என் மனைவியோடு உறவு வைத்துக் கொள்ள முடியாம எனக்கு ஒரு......"

"ஆல் ரைட் ஐ அண்டர்ஸ்டேண்ட். ஐ எம் ஸாரி" என்று கூறி அவள் ஏதோ குறித்துக் கொண்டாள்.

அவள் என்ன எழுதுகிறாள். என்று அவன் ஆவலோடு பார்த்தான்.

"இனெபிலிடி ஹேவ் செக்ஸ்."

எழுதி முடித்து விட்டு, "நாளைக்கு மாலை நாலு மணிக்கு வந்து விடுங்கள்" என்றாள்.

(தொடரும்)

---

1972-ஆம் ஆண்டு சிறையிலிருந்து தப்பியோடி, ஒரு காரைத் திருடிக் கொண்டு அமெரிக்க-கனடா எல்லையைக் கடந்து சென்று பெரிய பரபரப்பை ஏற்படுத்திய பாங்க் கொள்ளைக்காரன் —13 முறை சிறைக் கம்பிகளை உடைத்தெறிந்து தப்பியவன் தான் 'மேட் டாக் கரோன்' (Mad Dog Caron). கனடா கவர்னர் ஜெனரலின் இலக்கியத்திற்கான உயர்ந்த அவார்டு 'Go Boy' என்ற அவனது நாவலுக்கு கிடைத்துள்ளது.

—'கேரவானி'லிருந்து தில்லை விவேகி.



டாக்டர் குமாரவேலன்

# டாக்டர் பட்டம் திருடப் படுகிறதா?

"டாக்டர் பட்டத்திற்கான (பி. எச். டி.) ஆராய்ச்சிக் கட்டுரைகள் தொடர்பாக பல்கலைக் கழகத்தில் எழுபதிற்கு மேற்பட்ட துறைகள் இருக்கின்றன. ஆனால் அவை செய்யும் பணிகள் பொது மக்களுக்கு எட்டுவதில்லை"—இது கல்வி அமைச்சர் பேசியது.

டாக்டர் பட்டத்திற்கான ஆராய்ச்சி எப்படி நடக்கிறது என்பதைப் பார்க்கும் போது ஒரு திடுக்கிடும் செய்தி!

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த்துறை. அதில் டாக்டர் குமாரவேலன், எம்.ஏ., எம்.லிட், பி.எச்.டி., டிப்.இன். ஃப்ரெஞ்ச்— வரிசையாக நீளும் படிப்புத் தகுதிகள். அமைதியான, அடக்கமான முகத்துடன் இருக்கிறார். அவருக்கு ஒரு பெரிய பாதிப்பு ஏற்பட்டு விட்டதென்று குமுறுகிறார். அப்படிக் குமுறும்போது கூட மெல்ல பேசவும், முகத்தில் கோபம் வராமல் இருக்கவும் அவர் பழகியிருப்பது அதிசயம்தான்!

"1972-ல் நான் டாக்டர் பட்டம் பெற்றேன். அதற்காக சுமார் பத்து ஆண்டுகள் ஆராய்ச்சி செய்து, 'தமிழில் நாடக இலக்கியம்' எனும் ஆராய்ச்சிக் கட்டுரையை சமர்ப்பித்தேன்.

இது தொடர்பாக தனி பிரசுரங்கள், நூலகங்கள், இலங்கை எழுத்தாளர்களிடமிருந்து சேகரித்த விவரங்கள், குறவஞ்சி, நொண்டி, பார்ஸி, சமஸ்கிருதம், ஷேக்ஸ்பியர், பிறமொழி நாடகங்கள் இப் வகை வகையாக அரும்பாடு ப பிரித்து வகைப்படுத்தி கட்டுரை சம பித்து பி.எச்.டி. பட்டம் பெற்றேன்.

சில ஆண்டுகள் கழித்து என மிகப்பெரிய அதிர்ச்சி தருவதாக விவகாரம் நடந்து விட்டது.

மதுரையில் ஒருவர் 'தமிழ் நாட தோற்றமும், வளர்ச்சியும்' என்ற தலை பின் கீழ் ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பித்தார். அதில் நான் சமர்ப்பித் கட்டுரையின் 75 சதவிகிதம் அப்படியே எந்தவித மாற்றமும் இல்லாமல் காப் யடிக்கப் பட்டிருந்தது.

அத்தியாயத் தலைப்புகள், செய் கள், ஆய்வுமுறை பகுப்புகள், நாடக பட்டியல், கிட்டத்தட்ட 2000 நாடக களைப் பற்றிய முழு விவரங்கள் ... இப்ப கூசாமல் அவர் காப்பியடித்திருக்கிறா அப்படி காப்பியடிப்பதிலும் தவறு வே செய்திருக்கிறார். பட்டியலில் தெரிய விவரங்களுக்கு என் ஆராய்ச்சிக்கட்டு யில் நான் வெறும் புள்ளிகள் வைத்திரு தேன். அதை அவசரத்தில் டிட்டே என்று கருதிக் கொண்டு அவர் டிட்டே போட்டு விட, அர்த்தமே அனர்த்தமா வேறு ஆகி விட்டிருந்தது.

காளிதாசனின் சாகுந்தல மொழி பெயர்ப்பைப் பலர் செய்திருக்கிற கள். அதைப் பற்றி 13 பேர்கள் பற்றி பட்டியல் அப்படியே என் கட்டுரையி இருப்பதை எடுத்துப் போட்டுக் கொண் டிருக்கிறார். இது காப்பி அல்லாமல் வே என்ன?

கஸ்தூரிரங்கன்

# ரேகா-சதீஷ்-ராஜி

## 13

சேவநமா ஆனந்ததீர்த்தன்

ரெஸ்ட் ஹவுஸுக்குத் திரும்பி வந்த சதீஷ் அங்கிருந்த தொலைபேசியின் மூலம் ரேகாவுடன் பேசினான். சௌரிராஜனைச் சந்தித்ததைப் பற்றியும் அவருடைய தற்போதைய நிலைமையையும் பற்றிச் சொன்னான். டாக்டர் அகர்வாலிடம் நாளைக்கு அப்பாயிண்ட்மெண்ட் ஃபிக்ஸ் செய்து கொண்டிருப்பதையும் சொன்னான். மறுபடியும் நாளைக்கு டாக்டரைப் பார்த்துவிட்டு வந்த பிறகு அவர் என்ன சொன்னார் என்பதுபற்றி போன் செய்வதாகச் சொன்னான்.

இரவு படுக்கையில் படுத்துக்கொண்ட சதீஷ் மறுநாள் டாக்டர் என்ன சொல்லுவாரோ என்பது பற்றிக் கவலையோடு யோசிக்கலானான். இன்றைக்கே டாக்டரைப் பார்க்க முடிந்திருந்தால் இந்த வேதனை தரும் சஸ்பென்ஸ் இல்லாமலிருக்குமே என்று அவனுக்குத் தோன்றியது. டாக்டர் அகர்வால் அவ்வளவு பெரிய புகழ் வாய்ந்த டாக்டர் என்று அவருடைய லேடி அஸிஸ்டெண்ட் சொல்லுகிறாள். ஆனால் அவரைப் பற்றி,தான் முன்பு பம்பாயில் இருந்தபோது கேள்விப்பட்டது கூட இல்லையே என்று அவனுக்குத் தோன்றியது. கேள்விப்படுவதற்குப் பிரமேயம் இருக்கவில்லை. இதுபோல ஒரு அவஸ்தை அப்பொழுது இருந்திருக்கவில்லை. அதனால்தான் கேள்விப்படவில்லை என்று தனக்குத் தானே சமாதானமும் செய்துகொண்டு தூங்கிவிட்டான்.

ஜூலை 17 (வெள்ளிக்கிழமை)

காலையில் எழுந்திருக்கும்பொழுதே சதீஷுக்கு ஆபீஸ் வேலைகளைப் பற்றிய கவலைகளுக்குப் பதில் அன்று மாலையில் டாக்டர் அகர்வால் தன்னைப் பரிசோதித்துவிட்டு என்ன முடிவு சொல்வாரோ என்கிற கவலையே அதிகமாக இருந்தது.

"ஆண்டவனே, டாக்டர் நல்ல வார்த்தை சொல்லணுமே. ரேகாவிடம் நான் போய் சந்தோஷமாக சொல்லும்படி அவர் ஏதாவது சொல்லணுமே" என்று பிரார்த்தித்துக் கொண்டான்.

ரெஸ்ட் ஹவுஸில் தங்கியிருந்த வேறு சிலரிடம் டாக்டர் அகர்வாலைப்பற்றி கேட்கலாமா என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் மறுவிநாடியே அப்படிக் கேட்காமலிருப்பதே நல்லது என்று நினைத்துக் கொண்டான். டாக்டர் அகர்வாலைப்பற்றி விசாரிப்பவர்களுக்கு இம்மாதிரியான நோய்கள்தான் இருக்க வேண்டுமென்று மற்றவர்கள் யூகித்துவிடுவார்களாததால் அதைப்பற்றிக் கேட்காமலிருப்பதுதான் நல்லது என்று தோன்றியது. ஆஸ்பத்திரியின் தோற்றம், காத்துக் கொண்டிருக்கும் நோயாளிகள் அப்பாயிண்ட்மெண்ட் இவையெல்லாம் அவர் பெரிய டாக்டர்தான் என்பதைச் சந்தேகமில்லாமல் காட்டின.

அன்றும் நல்ல வேளையாக சேர்மன் மூன்று மணிக்கெல்லாம் சதீஷை விட்டு விட்டார்.

உடனே டாக்ஸி பிடித்து மூன்றரை மணிக்கெல்லாம் டாக்டர் அகர்வாலின் கிளினிக்கை வந்தடைந்து விட்டான்.

அவன் உள்ளே நுழைந்ததும் அந்த ஆங்கிலோ இந்தியப் பெண் அவனைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டு ஒரு நாற்காலியில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

அவனைத் தவிர நான்கு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

அந்தப் பெண் அவனிடம் வந்து, "இப்போ உள்ளே இருக்கிற பேஷண்ட் வெளியே வந்ததும் நீங்க உள்ளே போகலாம்" என்று ஆங்கிலத்தில் சொன்னாள்.

"தாங்க் யூ" என்று அவளிடம் சொல்லிவிட்டு சதீஷ் காத்துக் கொண்டிருந்தான்.

சரியாக நான்கு அடித்து ஐந்து நிமிஷத்திற்கு கன்ஸல்டேஷன் அறையின் கதவைத் திறந்து கொண்டு ஒருவர் வெளியே வந்தார். சுமார் ஐம்பது வயதிருக்கும். அவருக்கு என்ன வியாதியாயிருக்கும் என்று நினைத்துக் கொண்டே சதீஷ், தான் போகலாமா என்று அனுமதி கேட்பது போல அந்தப் பெண்ணைப் பார்த்தான்.

"நீங்கள் போகலாம்" என்பது போல அவள் தலையசைத்தாள்.

சதீஷ் கதவைத் தள்ளித் திறந்து கொண்டு உள்ளே நுழையும் போதே ஏர்-கண்டிஷனின் குளுமையும் பரிமளமும் இதமாக இருந்தன. அறை பாதி இருட்டும் பாதி வெளிச்சமுமாக இருந்தது.

"கமான், மை டியர் ஃபிரெண்ட்" என்று அழைத்த டாக்டர் ஒரு சுழல் நாற்காலியில் அமர்ந்திருந்தார். பக்கத்தில் ஒரு மேஜை. இன்னொரு பக்கத்தில் நோயாளி உட்காருவதற்காக நாற்காலி ஒன்று.

டாக்டரைப் பார்த்து வணக்கம் தெரிவித்தபடியே சதீஷ் நாற்காலியில் சென்று அமர்ந்தான்.

டாக்டருக்கு ஐம்பைத்தைந்து வயதுக்கு மேல் இருக்கும் போலிருந்தது. அவரைப் பார்த்ததும் முதலில் பிரதானமாகத் தெரிந்தது அவரது பெரிய தொப்பையும் வழுக்கைத் தலையும்தான். பாண்ட்டும், ஸ்லாக்கும் அணிந்திருந்தார். தங்க பிரேம் மூக்குக் கண்ணாடி. நல்ல ரோஸ் நிறம். புன்னகை பூத்த முகம்.

"ஸோ, யூ ஆர் சதீஷ்?" என்று கேட்டபடியே கையை நீட்டினார்.

சதீஷுக்கு இது புதுமையாக இருந்தது. எந்த டாக்டரும் இந்த மாதிரி நோயாளியை கைகுலுக்கி வரவேற்பதை அவன் கண்டதில்லை.

"யெஸ் டாக்டர்" என்று தன் கையை நீட்டியபடியே உட்கார்ந்தான்.

அவன் கையைக் குலுக்கிய பிறகும், கையை விடாமல் பிடித்துக் கொண்டே, broad smile என்று ஆங்கில நாவல்களில் விவரிப்பார்களே அது போன்ற ஒரு புன்னகையை வீசினார்.

அழகான பல்வரிசை. நிஜமா பற்களாக இருக்குமா அல்லது செட்டா சதீஷால் தீர்மானிக்க முடியவில்லை.

"நான்கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் கூச்சமில்லாமல், ஒன்றையும் மறைக்காமல் நீ பதில் சொல்லவேண்டும். வக்கீல் கிட்டயும் டாக்டர் கிட்டயும் ஒன்றையும் மறைக்கக் கூடாது. ஓ. கே.?" என்று ஆங்கிலத்தில் ஆரம்பித்து ஹிந்தியில் முடித்தார்.

"எஸ் டாக்டர் கேளுங்கள்."

"வாட் எக்ஸாக்ட்லி இஸ் யுவர் ட்ரபுள்?"

சொன்னான்.

"எவ்வளவு நாளா இப்படி இருக்கு?"

"நாலு நாளாச்சு"

"ஒன்லி ஃபோர் டேஸ்! மை காட். அதுக்கா இவ்வளவு வொர்ரி பண்ணிக்கறே?" என்று கூறி அவர் சிரித்ததும் சதீஷுக்கு ரொம்பவும் ஆறுதலாகவும், சமாதானமாகவும் இருந்தது. தான் கவலைப்பட்டதெல்லாம் தேவையில்லாததோ?

"சரி போகட்டும். இந்த மாதிரி ஆகறதுக்கு முன்னாடி எதாவது ஆக்ஸிடெண்ட் ஆச்சா இல்லே என்னமாவது அடிகிடி பட்டதா?"

"இல்லே டாக்டர்."

"இந்த மாதிரி ஆகறதுக்கு முன்னாடி உங்க செக்ஸுவல் ஆக்டிவிடி எப்படி இருந்தது?"

"கேள்வி புரியல்லெ டாக்டர்."

"தட்ஸ் குட். புரியல்லேன்னு கேட்டு புரிஞ்சுண்டு கரெக்டா பதில் சொல்லணும். என் கேள்வி என்னன்னா, உங்களுக்கு இந்த மாதிரி திடுதிப்னு

சடன்னு ஆயிட்டுதா? இல்லே க்ராஜுவலா கொஞ்சம் கொஞ்சமா குறைஞ்சிண்டு வந்து அப்புறம் ஒரேயடியா ஸ்டாப் ஆயிடுத்தா?''

''திடுதிப்னுதான் இப்படி ஆயிடுத்து.''

''வெல். நார்மலா உங்க ஃப்ரீக்வன்ஸி எப்படி?''

சதீஷ் மறுபடியும் முழித்தான்.

''புரியலியா? யூ சீம் டு பி எ பச்சா. எனக்குத் தெரிய வேண்டியது என்னன்னு, உங்க ஹேபிட், ப்ராக்டீஸ் வீக்லி ட்வைஸா, த்ரைஸா? எப்படி?''

''ஆல்மோஸ்ட் டெய்லி டாக்டர்'' என்று கூச்சப்பட்டுக் கொண்டே சொன்னான்.

''ஆ! தட்ஸ் குட்... ஐஸே ஐ எம் எ ப்ளடி இடியட்''

சதீஷ் மறுபடியும் ஒன்றும் புரியாமல் வியப்போடு அவரைப் பார்த்தான்.

''எப்ப நீ நாலு நாள் இப்படி இருக்குன்னு ஓடி வந்தியோ அப்பவே நான் உன் கெபாஸிடியைப் புரிஞ்சுண்டிருக்க வேண்டாமோ? அநாவசியமா ஒரு மடத்தனமான கேள்வியைக் கேட்டுட்டேன். போகட்டும். டஸண்ட் மேட்டர். நௌ டெல் மீ, உனக்கு மேரேஜ் ஆயி எவ்வளவு நாளாச்சு?''

''பத்தொன்பது வருஷமாச்சு.''

''உன் மனைவியோட வயசென்ன?''

''முப்பத்தஞ்சு.''

''இந்த பத்தொன்பது வருஷமா இந்த டெய்லி ரொடீன் நடந்துண்டிருக்கா? பிரேக் இல்லியா?''

''என் மனைவி பிரசவத்துக்காக பிறந்த வீட்டுக்குப் போயிருந்தப்ப, ரெண்டு தடவை, ஒவ்வொரு தடவையும் கிட்டத்தட்ட நாலு மாசம் பிரேக் இருந்தது. மத்தபடி ஒவ்வொரு மாசமும் மூணு நாள்—வென் ஷீ வாஸ் ஹேவிங் ஹர் பீரியட்ஸ்.''

''உன் மனைவியல்லாம வேற பெண்களோட உறவு உண்டா?''

''இல்லே டாக்டர்.''

''பொய் சொல்லாதே.'' என்று டாக்டர் புன்னகைத்தார்.''

''நிச்சயமா இல்லே டாக்டர்.''

''சரி ஐ பிலீவ் யூ. கல்யாணமாகறப்ப உனக்கு இருபத்துமூணு வயசு. கல்யாணத்துக்கு முன்னாடி செக்ஸ் ஏதாவது உண்டா!''

''இல்லே டாக்டர்.''

''குடிக்கறதுண்டா?''

''நோ.''

''டயபிடீஸ் வியாதி இருக்கா?''

''தெரியாது.''

''உங்க அப்பாவுக்கு அல்லது அம்மாவுக்கு?''

''அப்பாவுக்கு இருக்கு. அம்மாவுக்கு இல்லே.''

''அப்ப நீ டெஸ்ட் பண்ணிப் பாத்துண்டுடணும். நான் எழுதித் தர்றேன். யார் கிட்டயாவது டெஸ்ட் பண்ணிண்டு நாளைக்கு எனக்கு ரிஸல்டைக் கொண்டு வந்து காட்டு.''

''யெஸ் டாக்டர்.''

''உன் மனைவி நாலு மாசம் பிறந்த வீட்டுக்குப்போயிருந்தாளே அப்ப நீ என்ன பண்ணினே—ஐ மீன் டிட் யூ ஹேவ் நோ செக்ஸ் அட் ஆல்?''

''இல்லே டாக்டர்.''

''இதை நம்பறது கஷ்டமாயிருக்கே? டெய்லி செக்ஸ் எஞ்ஜாய் பண்ற உன்னாலெ நாலு மாசம் எப்படி சும்மா இருக்க முடியும்?''

சதீஷ் என்ன பதில் சொல்வதென்று தெரியாமல், பேசாமல் இருந்தான்.

''வேற பெண்கள்கிட்ட நீ போகல்லேங்கறதை நான் நம்பறேன். ஆனா... மாஸ்டர் பேஷன்?''

''யெஸ் டாக்டர்.''

''அதுவும் டெய்லியா?''

''இல்லே டாக்டர். மே பி ஒன்ஸ் எ வீக்.''

''ஹோமோ செக்ஸுவல் ஆக்டிவிடீஸ்?''

''இல்லே டாக்டர்.''

''அப்சல்யூட்லி?''

''அப்சல்யூட்லி.''

''உன் மனைவியிடமிருந்து உனக்கு பூரணத் திருப்தி கிடைக்கிறதா?''



மேனகை மீது மையல் கொண்டவன்
கைவிட்டுப் போறுண்டி — இந்த
மே(ல்)னகை மீதா மையல் கொண்டேன்?
கைவிட மாட்டேண்டி...

—ஸ்ரீதர், மதுமதி. படம் "அழியாத குங்குமம்"

"யெஸ்."

"உன் மனைவிகிட்ட ஏதாவது குறையிருக்கா? அதாவது அவள் நிறத்திலியோ, உயரத்திலியோ, எடையிலியோ, அங்க அமைப்பிலியோ-இப்படி இல்லாம இருந்தா தேவலேங்கற மாதிரி குறைப் பட்டுக்கறது உண்டா?"

"ஸீரியஸ்ஸா அப்படி ஒண்ணுமில்லே."

"ஸீரியஸ்ஸா இல்லாம சும்மா காஷுவலா தோணியிருந்தாலும் கூட போறும். அப்படி ஏதாவது உண்டா?"

சதீஷ் கூச்சப்பட்டான்.

"கமான். டோன்ட் பி ஷை. நான் கேக்கற ஒரு கேள்வியாவது அநாவசியமானதில்லே. உன்னைப்பத்திய ரகசியங்களைத் தெரிஞ்சுக்கற வல்கர் க்யூரியாஸிடிலெயும் நான் கேக்கலெ. ஒவ்வொரு கேள்வியின் பதிலும் உன்னுடைய கண்டிஷனுக்கு காரணத்தை வெளிக் கொண்டுவர ஹெல்ப் பண்ணும். சொல்லு."

"அவளோட மார்புகள் இன்னும் கொஞ்சம் பெரிசா இருந்திருக்கலாமேன்னு சில சமயங்கள்ல தோணினதுண்டு."

"மனைவியைத் தவிர வேற பெண்களிடம் போனதில்லேன்னு சொன்னே. அதுக்கு என்ன காரணம்? மனைவிக்கு துரோகம் செய்யக் கூடாதுங்கற எண்ணமா? அல்லது வேறு எந்தப் பெண்ணும் உன்னை அட்ராக்ட் பண்ணினதில்லியா?"

"மனைவிக்கு துரோகம் பண்ணக் கூடாதுங்கற எண்ணம்தான்."

"அப்ப மத்த பெண்கள் உன்னை அட்ராக் பண்ணியிருக்காங்க. ஆனா நீ அந்த டெம்ப்டேஷனை ரெஸிஸ்ட் பண்ணியிருக்கே?"

"யெஸ்."

"அப்படி உன்னை ரொம்ப அட்ராக்ட் பண்ணின பர்டிகுலர் பொண்ணு யாராவது உண்டா?"

"யெஸ்."

"அவளைப் பத்தி கொஞ்சம் டீடெய்ல்டா சொல்லு."

சதீஷ் ராஜியைப் பற்றி விரிவாக எடுத்துச் சொன்னான்.

பிறகு டாக்டர் அவனை ஆடைகளைக் களைந்து விட்டு ஸ்கிரீனுக்குப் பின்னாலிருந்த நீண்ட மேஜையின் மீது படுத்துக் கொள்ளச் சொன்னார். ஏதேதோ ஆயுதங்களைக் கொண்டு என்னென்னமோ சோதனைகள் செய்து பார்த்தார். உள்ளங்காலில் கிச்சு கிச்சு மூட்டுவது போல எதைக் கொண்டோ கீறினார். முழங்காலில் எதைக் கொண்டோ தட்டினார். இன்னும் என்னென்னவோ அவன் கூச்சப்படும் வகையில் செய்து பார்த்தார்.

"டிரெஸ் போட்டுக் கொண்டு வெளியே வா" என்று சொல்லி விட்டு அவர் நாற்காலியில் போய் உட்கார்ந்து கொண்டார்.

சதீஷ் உடையணிந்து கொண்டு அவரெதிரே உட்கார்ந்ததும் அவனிடம் இரண்டு சீட்டுகளைக் கொடுத்தார்.

"இது டயபிடீஸ் டெஸ்டுக்கு. இது எக்ஸ்ரேக்கு. இது ரெண்டின் ரிஸல்டையும் கொண்டு வந்து நாளைக்கு என்னிடம் காட்டு. இப்ப என்னாலே ஒண்ணும் நிச்சயமா சொல்ல முடியல்லே. ரெண்டு மூணு பாஸிபிளிடீஸ் இருக்கு. ஒண்ணு ஃபிஸிகல். ரெண்டு சைகலாஜிகல். மூணாவது இட் மே பி எ கேஸ் ஆஃப் மியர் ஃபெடீக். மூணாவதா இருந்தனா யூ மே பி ஆல்ரைட் ஆடோமேடிகலி ஆஃப்டர் எ ஃப்யூ டேஸ். கவலையே படவேண்டாம். ஃபிஸிகல் டிஃபெக்டா இருக்கறதுக்கு சான்ஸ் இல்லே. அப்படி இருந்தனா க்யூர் கஷ்டம். சைகாலஜிகலா இருக்கலாம். அதுக்கு ரெண்டு ஸ்டெப்ஸ் நான் சஜெஸ்ட் பண்றேன். யூ கோ டு எனி ப்ராஸ்டிட்யூட் அண்ட் ட்ரை. அதாவது உன் "பாடி" உன் மனைவியிடம் ஒரு விதமான அலர்ஜியை டெவலப் பண்ணிண்டிருக்கலாம். அதனாலெ இன்னொரு பெண்ணிடம் முயற்சி பண்ணிப் பார்க்கலாம். அதுவும் பலிக்கலேன்னா, அந்தப் பெண் ராஜியைப் பத்திச் சொன்னியே அவளை எப்படியாவது நீ உன் படுக்கைக்கு அழைச்சுக்க முயற்சி பண்ணணும். அவளோடு நீ வெற்றியடைஞ்சா அதுக்கப்புறம் மனைவியோடும் நார்மலா இருக்க முடியலாம். ஐ கான்ட் காரண்டீ எனி திங்" என்று சொன்னார்.

சதீஷால் டாக்டர் சொன்னவைகளையெல்லாம் நம்பவே முடியவில்லை. இப்படியும் கூட இருக்குமா? அவனுக்கு ஒரே வியப்பாக இருந்தது. கொஞ்சம் நம்பிக்கையும் வந்தது. டாக்டர் தன்னை முட்டாளாக்கப் பார்க்கிறாரோ என்ற ஐயமும் கூடவே எழுந்தது.

"எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது டாக்டர்" என்றான் சதீஷ் தயங்கியபடி.

"என்ன? அவுட் வித் இட்"

"நான் வேஸக்டமி ஆபரேஷன் பண்ணிண்டேன் சில வருஷங்களுக்கு முன்னாலெ. அதனாலெ இப்படி..."

"ரப்பிஷ்." என்று ஒரே வார்த்தையில் அவன் சந்தேகத்தை அவர் போக்கினார். பிறகு—

"ஸோ, வீ மீட் டுமாரோ" என்று கூறி டாக்டர் தலையை ஆட்டினார்.

"நீ எழுந்து போ" என்று அதற்கு அர்த்தம் எனப் புரிந்து கொண்ட சதீஷ் எழுந்தபடியே, "உ[illegible] ஃபீஸ்?" என்று கேட்டான்.

"டோரதியிடம் கொடு" என்றார். அந்தப் பெண்ணின் பெயர் போலிருக்கிறது,

சதீஷ் வந்து டோரதியிடம் போய் நின்று கொண்டான். அவள் ஒரு ரசீதை அவனிடம் நீட்டினாள். அதைப் பார்த்த சதீஷ் அதிர்ந்து போய் விட்டான். நூற்றைம்பது ரூபாய்!

வாயைத் திறக்காமல் ரூபாயை எண்ணிக் கொடுத்துவிட்டு வெளியே வந்தான்.

(தொடரும்)

*இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.*

**—ஹேமா ஆனந்ததீர்த்தன்**

# ரேகா சதீஷ் ராஜ்

**14**

ஹேமா ஆனந்ததீர்த்தன்

எக்ஸ்ரே கிளினிக்கும், ரத்த பரிசோதனை லாபரட்டரியும் அருகிலேயே இருந்தன. அங்கே சென்று எக்ஸ்-ரே படத்திற்கு உட்கார்ந்து விட்டு ரத்தப் பரிசோதனைக்கு ஸாம்பிள் கொடுத்து விட்டு ரெஸ்ட் ஹவுஸுக்குச் சென்றான்.

நூற்றைம்பது ரூபாய் ஃபீஸ் வாங்கிக் கொண்டு கடைசியில் அந்த டாக்டர் சொன்னது என்ன என்பதைப் பற்றி நினைத்துப் பார்த்தபோது சதீஷுக்கு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை. தான் டாக்டரிடம் சென்றதே முட்டாள்தனமோ என்று கூட அவனுக்குத் தோன்றியது. ஒரு மருந்தோ, டானிக்கோ சாப்பிடச் சொல்லி சொல்லவில்லை. பச்சையாகச் சொல்வதானால் "தேவடியா கிட்டப்போ" என்று சொல்லிவிட்டார். அது பலிக்கலேன்னா ராஜிகிட்டப் போகணுமாம். வெற்றி கிட்டினாலும் கிட்டலாமாம். ஒன்றும் காரண்டி இல்லையாம். சே, எல்லாம் ஏமாற்று வித்தை. மோசம் என்று வெறுப்படைந்தான்.

அவர் சுலபமாகச் சொல்லிவிட்டார். 'கோ டு எனி ப்ராஸ்டிட்யூட்' அது அவ்வளவு சுலபமா? பம்பாயில் அதுபோன்ற பெண்களுக்கு ஒன்றும் குறைவில்லைதான். ஆனால் தனக்கு அனுபவமில்லையே? முன்பு, தான் பம்பாயில் இருந்தபோது வேடிக்கைக்காக என்றுகூட அவன் அந்த சிவப்புவிளக்குப் பகுதிகள் பக்கமே கூடப் போனதில்லை. இப்போது எப்படிப் போவது? இங்கே வேண்டாம், சென்னைக்குப் போய்ப் பார்த்துக் கொள்ளலாம் என்றால் சென்னையில் அது போன்ற இடங்கள் இருக்கிறதா? எங்கே என்றெல்லாம் அவனுக்கு ஒன்றும் தெரியாது.

எப்படியும் பம்பாய்க்கு வந்திருக்கிறோம், இங்கேயே அதையும் பார்த்துவிட்டுப் போய் விடுவதுதான் சரி என்று தீர்மானம் உறுதிப்பட்டது அவன் மனத்திலே. வேண்டுமானால் ஆபீஸ் வேலை முடிந்த பிறகும்கூட இரண்டொரு நாள் பம்பாயில் தங்கி விட்டுப் பிறகு திரும்பிப் போகலாம் என்றும் நினைத்துக் கொண்டான்.

ரேகாவுடன் தொலைபேசியில் பேசுவதா வேண்டாமா என்ற பிரச்னை எழுந்தது. தினமும் எஸ்.டி.டி. கால் போட்டு விஷயத்தைத் தெரிவிக்கிறேன் என்று அவளிடம் சொல்லிவிட்டு வந்திருந்தது வாஸ்தவம்தான். ஆனால் அவளிடம் டாக்டர் சொன்ன இந்த பைத்தியக்காரத்தனமான சிகிச்சைகளைப்பற்றி எப்படிச் சொல்வது? அவள் அதைக் கேட்டு எப்படி 'ரியேக்ட்' செய்வாள்? வம்பே வேண்டாமென்று பேசாமலிருந்து விட்டாலோ, அவள் கவலைப்பட்டுப் புழுவாகத் துடித்துப் போவாள். டாக்டர் ஏதாவது நம்பிக்கையில்லாதபடி சொல்லியிருப்பார். அதனால்தான் மனமுடைந்துபோய் விபரீதமாக எதையாவது செய்து கொண்டு விட்டேனோ என்று நினைத்து பயப்பட்டுச் செத்துப் போவாள்.

கடைசியில் ரேகாவுடன் பேசி விடுவதுதான் சரி என்று முடிவு செய்து அவளைத் தொலைபேசியில் அழைத்தான்.

"ரேகாவா?"

"ஆமா. என்னாச்சு? டாக்டரைப் பாத்தீங்களா?"

"கன்ஸல்ட் பண்ணினேன். ஒண்ணும் பயப்பட வேண்டியதில்லே. இன்னும் கொஞ்சநாள்ல தானே சரியாப் போயிடலாம்கறார்."

"மருந்து கிருந்து ஒண்ணும் சாப்பிட வேண்டாமாமா?"

"ஒண்ணும் வேண்டியதில்லையாம்."

"என்னத்துல இப்படியாச்சாம்?"

"அது ஒண்ணும் சரியா சொல்லலே. எக்ஸ்ரேயும், ப்ளட் டெஸ்ட் ரிஸல்டும் எடுத்துண்டு நாளைக்கு வரச் சொல்லியிருக்கார்."

"எப்ப வறிங்க?"

"இன்னும் டிஸைட் ஆகல்லே.



நாளைக்கு மறுபடியும் போன் பண்றேன். வச்சுடட்டுமா?"

"சரி."

"சீரியோ" என்று கூறி ஒலி வாங்கியை வைத்தான்.



ஒரு சுமை இறங்கினாற் போலிருந்தது.

பாம்பே சென்ட்ரல் வரையில் நடந்துபோய் அங்கே இருந்த ஒரு உடுப்பி ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு ப்ளாட்பாரத்தில் நின்றபடி தெருவில் போகும் வாகனங்களையும், ஜனங்களையும் வேடிக்கை பார்த்தபடி நின்று கொண்டிருந்தான்.

திடீரென்று அவனுக்கு சௌரிராஜனின் நினைவு வந்தது. அவர் உதவியிருந்தால் ரெட்லைட் ஏரியாவில் ஏதா

வது ஒரு வீட்டிற்கு சௌகரியமாய்ப் போய் வரலாம் என்று தோன்றியது. இதற்காகவேதான் அவர் பம்பாய்க்கு வந்ததுமே தன்கண்களில் பட்டிருப் பாரோ? முந்தாநாள் அவர் தன்னிட மிருந்து விடைபெற்றுக் கொண்டு போகும்போது மறுபடியும் வந்து சந்திக் கிறேன் என்று சொல்லிச் சென்றார். ஆனால் தனக்கு அப்போது அவரை மறுபடியும் பார்க்காமல் இருந்தால் தேவலை என்று தோன்றியது. ஆனால் இப்போதோ அவர் தன்னை வந்து சந்தித் தால் தேவலை என்று தோன்றியது.

யோசித்துக் கொண்டே ரெஸ்ட் ஹவுஸை நோக்கி நடந்தான்.

தன் நிலைமை எவ்வளவு கேவல மாகப் போய் விட்டது என்பதை எண் ணும் போது அவனுக்கு வாழ்க்கையே வெறுப்பாக இருந்தது. சௌரிராஜனைப் போன்ற ஒரு அயோக்கியனை, மனிதத் தன்மையே இல்லாமல் மிருகத்தைவிட மோசமாகத் தன் மனைவியை நடத்திய வனை, இப்போது, தான் ஒரு நண்பனைப் போல எதிர்பார்த்திருக்க வேண்டியதும், அவனைச் சந்திக்க ஆவல் கொண்டிருப்ப தும், எவ்வளவு கேவலம்? இதுதேவை தானா? தன்னைப் பெரிய யோக்கியன் என்று நினைத்துக் கொண்டிருக்கும் சௌரிராஜனிடம்,தான் இந்த விருப்பத் தைத் தெரிவித்தால் அவர் அதன் பிறகு தன்னைப்பற்றி என்ன நினைப்பார்? 'அடே நீயும் இவ்வளவுதானா? பசுத்தோல் போர்த்திய புலியின் கதையா?' என்று தானே நினைப்பார்?

வேண்டவே வேண்டாம். சௌரிராஜனின் உதவியை நாடவே கூடாது. முன் அனுபவம் இல்லாவிட் டால் என்ன? இதற்கென்ன பெரிய அனுபவம் வேண்டியிருக்கிறது? அந்த சிவப்பு விளக்குப் பகுதிகள் இங்கேதான் பாம்பே சென்ட்ரலுக்குப் பக்கத்தில் இருப் பதாகக் கேள்விப்பட்டிருந்தான். போய்ப் பார்த்தால் என்ன? சௌரிராஜனைப் போன்ற தொழில் செய்யும் யாராவது ஒருத்தன் அந்தப் பகுதியில் அகப்படா மலா போய் விடுவான்? தெரிந்தவன் மூலமாகப் போவதைவிட தெரியாதவன் மூலமாகப் போவதுதான் இந்த விஷயத் தில் நல்லது.

சதீஷின் நடையின் வேகம் குறைந்தது. ரெஸ்ட் ஹவுஸை நோக் கிப் போவதா திரும்பி ஃபோரஸ் ரோடு, ஃபால்க்லண்ட் ரோடு என்று போய் பார்க்கலாமா?

மறுபடியும் பாதையோரமாக சென்று அங்கிருந்த ஒரு கடையின் (கடை மூடியிருந்தது) படிக்கட்டுகளில் உட்கார்ந்து கொண்டு சிந்திக்கத்தொடங் கினான்.

ஒரு வாரத்திற்கு முன் தான் இப்படியொரு நிலைமை தனக்கு ஏற்படும் என்று நினைத்திருப்பானா? என்ன ஆச்சரி யம்!

தன்னைப் போல வேறு யாரா வது இந்தக் காரணத்துக்காக விலைப் பெண்ணை நாடிப் போயிருப்பார்களா? சந்தேகம்தான். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். காசு கொடுத்துக் காரிகை யரின் உடலை அனுபவிக்கப் போகிறவர் கள் எல்லாருமே கொழுப்பெடுத்துப் போய், திமிர் மிஞ்சிப்போய், வெவ்வேறு ருசியை அனுபவிப்பதற்காகப் போகிறவர் களாக இருக்க மாட்டார்கள். சிலருக்கு மனைவி இறந்து போயிருக்கலாம்,அல்லது தீராத நோய் வாய்ப்பட்டு உடலுறவிற்கு லாயக்கற்றவர்களாக இருக்கலாம். இயற் கையின் தூண்டுதலால் உடலில் ஏற்படு கிற உபாதையைத் தீர்த்துக் கொள்ள வேறு வழி இல்லாமல் இருப்பவர்களாயி ருக்கலாம். அவர்கள் மேல் பரிதாபம் கொள்ள வேண்டுமேயல்லாது அவர் களைத் திட்டுவதோ, அலட்சியப்படுத்து வதோ, கேவலப்படுத்துவதோ தவறு என்று அவனுக்குத் தோன்றியது.

இந்த எண்ணம் தோன்றியதும் அவனுக்குக் கூடவே சிரிப்பும் வந்தது. வாலிழந்த நரி மற்ற நரிகளையும் வாலை அறுத்துக் கொள்ளும்படி உபதேசம் செய்ததாக பஞ்சதந்திரக் கதையிலோ, ஈசாப் நீதிக் கதைகளிலோ வருமே அந்த மாதிரி தனக்கு இப்படி ஒரு நிலை ஏற் பட்டதும் விலைப்பெண்ணை நாடிப் போகிற எல்லோரையுமே ஆதரவோடு நினைத்துப் பார்க்கத் தனக்குத் தோன்று கிறதோ?

டாக்டருக்கென்ன, சுலபமாகச் சொல்லிவிட்டார். அவர் பேச்சைக் கேட்டுதான் எவளிடமாவது போய் ஏதாவது வியாதியைப் பெற்றுக்கொண்டு வந்து...விட்டால் என்ற பயம் லேசாக அவன் நெஞ்சில் அரிக்கத் தொடங்கி யது. தலைவலி போய் திருகுவலி வந்தது என்ற கதையாகி விட்டால்?

இதை விட பேசாமல் டாக்டர் சொன்ன அடுத்த 'ஸ்டெப்'பையே முயன்று பார்த்தால்?

ராஜி!

(தொடரும்)

ஹேமா ஆனந்ததீர்த்தன்

# ஸ்ரீதா-சதீஷ்-ராஜி




'இட் இஸ் இம்பாஸிபிள்' என்று தனக்குத்தானே வாய்விட்டு சொல்லிக் கொண்டான். அவளை அன்று நன்ருகக் கோபித்துக் கொண்டு விட்டோம். இனி ஆபீசுக்குத் திரும்பிப் போன பிறகு அவளுடன் பழையபடி சிரித்தும், நெருங்கியும், தொட்டும் பேசக் கூட முடியாது. அப்படியிருக்க, டாக்டர் சொன்னதை எப்படி...? முடியவே முடியாது.

எல்லா விதத்திலும் விதி தனக்கு எதிராகச் சதி செய்வதாக அவனுக்குத் தோன்றியது. இல்லாவிட்டால் அன்றைக்கு ஏன் ராஜியிடம் அவ்வளவு முரட்டுத் தனமாகதான் நடந்து கொண்டிருக்க வேண்டும்?

எப்படியோ அவள், தான் கோபித்துக் கொண்டதை மன்னித்து தன் விருப்பத்துக்கு இணங்குகிருள் என்றே வைத்துக் கொள்வோம். அப்பொழுது எல்லாம் சரியாகி விடும் என்பது என்ன நிச்சயம்? 'ஐ கான்ட் காரண்டீ எனிதிங்'னு டாக்டர் சொல்லியிருக்கிருரே? ராஜியிடம் தன்னுடைய குறையை வெளிப்படுத்தியதாக ஆகிவிடாதோ? அதைவிட வேறு அவமானம் என்ன இருக்கிறது? அது அப்படியே மற்றவர்களுக்கும் தெரிய வந்து விட்டால்? தான் தற்கொலை செய்து கொள்ள வேண்டியதுதான்.

ஒரு பெருமூச்சு விட்ட வண்ணம் எழுந்தான். அவனையறியாமலே அவன் கால்கள் ரெஸ்ட் ஹவுஸை நோக்கி நடந்தன.

ரெஸ்ட் ஹவுஸை அவன் அடைந்த போது வாசலிலேயே அவனைப் பார்த்து முறுவலித்த படி (விகாரமாகத்தான்) சௌரிராஜன் நின்றிருந்தார்.

"வாக் போயிட்டு வர்றீங்களா?" என்று கேட்டபடி அவனை நெருங்கி வந்தார்.

"சாப்பிடப் போனேன். நீங்க வந்து ரொம்ப நேரமாச்சா?"

"பதினைஞ்சு நிமிஷம் இருக்கும்."

"வாங்கோ. உள்ளே போலாம்" என்று அவரையும் இழுத்துக் கொண்டு சதீஷ் தன் அறைக்குச் சென்ருன்.

இருவரும் இருக்கைகளில் அமர்ந்து கொண்டதும் சதீஷ் எதை பேசுவது என்று தெரியாமல், "நீங்க சாப்பிட்டாச்சா!" என்று ஒரு சாதாரணக் கேள்வியைக் கேட்டான்.

"ஊம். ஆச்சுன்னு ஆச்சு. இல்லேன்னு இல்லே எனக்கு அப்படி ஒண்ணும் டைம் பிரகாரம் சாப்பிடணும் கறது இல்லே. முடியறதும் இல்லே. சாயங்காலம் ஏதோ சாப்பிட்டிருக்கேன். அதுவே போதும்" என்றார்.

"உங்களைப் பத்திதான் நினைச்சுண்டே இருந்தேன் வர்றப்ப." என்றான் சதீஷ். அவனையறியாமல் ஏதோ ஒரு சக்தி அவனுக்குள் புகுந்து கொண்டு அவனைப் பேச வைப்பது போல அவனுக்குத் தோன்றியது.

சௌரிராஜன் ஆச்சரியத்தோடு அவன் முகத்தைப் பார்த்தார்.

"உங்க ஹெல்ப் கொஞ்சம் வேண்டியிருக்கு"

"சொல்லுங்கோ."

"விஷயம் ரொம்ப டெலிகேட்டானது."

"இருக்கட்டும்"

"எனக்கும் உங்களுக்கும் மாத்திரம்தான் தெரிஞ்சதா இருக்கணும். வெளியே போகப்படாது."

"சரி."

"நேத்து நீங்க உங்களைப் பத்தியே ரொம்ப வெறுப்பா நீங்க செய்யற தொழிலைப் பத்தி சொன்னேள். நானும் கூட நீங்க வேற ஏதாவது டீஸண்டான வேலை செய்யக்கூடாதான்னு கேட்டேன்."

"ஆமா."

"இப்ப உங்க அந்தத் தொழில் முறை உதவிதான் எனக்கு வேண்டியிருக்கு."

"கூச்சப்படாம சொல்லுங்கோ. உங்களுக்கு என்ன வேணும்னு எனக்குப் புரியல்லே."

"உங்ககிட்ட எப்படி சொல்றதுன்னே எனக்குத் தெரியல்லே. எனக்கே நம்பிக்கையில்லாத ஒரு விஷயமா இருக்கு அது."

"நீங்க ரொம்ப சங்கோசப்படறீங்க. என் மேல நம்பிக்கை வெச்சு சொல்லுங்கோ. என்னாலெ என்ன பண்ண முடியுமோ அதைச் செய்யறேன்."

சதீஷ் எப்படியோ விஷயத்தை ஆரம்பித்து விட்டான். தண்ணீரில் குதித்து விட்டான். நீந்தித்தான் ஆக வேண்டும்.

தன்னுடைய குறையை அவரிடம் சொல்வதா வேண்டாமா என்பது இப்போது அவனுக்குப் பெரிய பிரச்னையாகி விட்டது. அந்தக் குறையைப் போக்கிக் கொள்வதற்காக ஒரு மருந்தாக டாக்டரின் ஆலோசனைப்படிதான் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது என்று சொன்னால் தன் கௌரவம் நிற்கும். ஆனால் தன் குறை பகிரங்கமாகி விடும். தான் காமுகன் அல்ல என்ற கௌரவம் இருக்கும். ஆனால் ஆண்மையில்லாதவன் என்ற குட்டு வெளிப்பட்டு விடும். இந்த உண்மையைச் சொல்லாமலிருந்தாலோ, மனைவியை விட்டுப் பிரிந்து வந்திருக்கும் இந்த இரண்டு மூன்று நாட்களில் கூட, பெண் இன்பம் இல்லாமல் இருக்க முடியாத சதைத் தினவு கொண்ட காமக் கயவன் என்றாகி விடும். எது மேல்? தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதா அல்லது தன்னிலே தோன்றியுள்ள குறை பற்றிய ரகசியத்தைப் பாதுகாத்துக் கொள்வதா?

"நீங்க நாளைக்கு வர முடியுமா? நாளைக்கு இதே நேரத்துக்கு வந்திங்கன்னா சொல்றேன்" என்று மறுநாள் வரை விஷயத்தை ஒத்திப் போட அவன் முடிவு செய்தான்.

"நாளைக்கு நீங்க வரச்சொன்னா வரேன். என்னவோ உங்க மனசுல ஒரு பலமான விஷயம் குடைஞ்சுண்டு இருக்காப்பல எனக்குத் தோணறது. எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமா அதை வெளியே விட்டுடறேளோ அவ்வளவுக்கு நல்லது. ரிலீஃப்."

"இல்லே. நீங்க நாளைக்கே வாங்கோ. நான் கொஞ்சம் டாக்டரை கன்ஸல்ட் பண்ண வேண்டியிருக்கு. அதுக்கப்புறம் சொல்றேன்."

"சரி உங்க இஷ்டம்."

"இப்ப நீங்க என்னைப் பார்க்க வந்தது சும்மாவா இல்லே ஏதாவது..."

"சும்மாத்தான்."

"பண உதவி ஏதாவது வேணுமா? தப்பா நினைச்சுக்காதிங்கோ."

"தப்பா நினைச்சுக்கறதுக்கு இதுல என்ன இருக்கு? கஷ்டப்பட்டுண்டுதான் இருக்கேன். வாயைத் திறந்து கேக்கறதுக்கும் கஷ்டமாயிருக்கு. நீங்களா ஏதாவது செஞ்சா சந்தோஷமா ஏத்துக்கறேன்."

சதீஷ் பர்ஸை எடுத்து அதிலி



இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். றல் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் ர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் றுப்புணர்ச்சியோடே, கருணை உள்ளத்தோடும் எழுதப்பட் ளது.

—[illegible] ஆனந்தீர்த்தன்

ருந்து ஒரு நூறுரூபாய் நோட்டை உருவி அவரிடம் நீட்டினான்.

"வெச்சுக்குங்கோ."

"ரொம்ப சந்தோஷம்."

"ரொம்ப டயர்டா இருக்கு. நான் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கட்டுமா?"

"ஓ.யெஸ். நான் வரேன் அப்போ. நாளைக்கு வந்து பார்க்கறேன்" என்று கூறி சௌரிராஜன் விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

தான் ஒரு சாக்கடையில் நெளியும் புழு போன்ற உணர்வு சதீஷுக்கு ஏற்பட்டது. நாளைக் காலையிலேயே பிளேனில் ஏறி சென்னைக்குச் சென்று விடுவோமா என்று தோன்றத் தொடங்கியது. இல்லாவிட்டால், தான் சாக்கடைப் புழுவாகப் போவது நிச்சயம். இவ்வளவும் எதற்காக? தான் இழந்துவிட்டதை மீண்டும் பெறமுடியும் என்ற நம்பிக்கையினால் தானே? அந்த நம்பிக்கை நிறைவேறாமலும் போகலாம். அப்புறம் மிஞ்சுவது, தான் சாக்கடையில் விழுந்து புரண்டு அந்த நாற்றமடிக்கும் தண்ணீரை உடல் முழுவதும் பூசிக் கொண்டதுதான். ரேகா சொன்னது மாதிரி, "இவ்வளவு நாள் அனுபவிச்சது போதும். நமக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்" என்று ஏன் இருந்து விடக்கூடாது? ஏன் இப்படிப் பறக்க வேண்டும்? பரிதவிக்க வேண்டும்? யாரை ஒரு பன்றியாகப் பாவித்து துச்சமாகப் பார்த்தானோ, அதே பன்றியின் முன்னால், தான் இன்று அந்தப் பன்றியிலும் கடை கெட்ட ஒரு பிராணியாக வாலைக் குழைக்க வேண்டி வந்ததே?

சதீஷ் குப்புறப்படுத்துக் கொண்டு அடிபட்ட சிறுகுழந்தை போல விம்மி விம்மி அழுதான்.

ஜுலை 19 (சனிக்கிழமை)

ஐந்தரை மணிக்கெல்லாம் சதீஷ் விழித்துக் கொண்டு விட்டான். மறுபடியும் தூக்கம் வரும் போல இருக்கவில்லை. எப்படி வரும்? விழித்தெழுந்த உடனேயே அவனது கவலைகளும், தவிப்புகளும் கூட விழித்துக் கொண்டு விட்டனவே!

தனக்கு இப்படி நேர்ந்து ஐந்து நாட்கள் ஓடிவிட்டன. இன்று ஆறாவது தான்.

சௌரிராஜனிடமிருந்தும் அவன் அழைத்துக் கொண்டு போகும் பெண்ணிடமிருந்தும் தப்பித்துக் கொண்டு அப்போதே சென்னைக்குத் திரும்பி விட வேண்டுமென்ற எண்ணம் ஒரு பக்கம் அவனை விரட்டிக் கொண்டே இருந்தாலும் அவ்வாறு செய்யமுடியாதென்பதையும் அவன் உணர்ந்தான். முதலாவது தலைமை ஆபீசுக்குச் சென்று சேர்மனின் அனுமதி பெற வேண்டும். வந்த காரியம் இன்னும் முடிந்திருக்கவில்லை. இரண்டாவது, எக்ஸ்ரே ரிப்போர்ட்டையும் டாக்டர் அகர்வாலிடம் காட்டி அவர் என்ன சொல்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இவையிரண்டுக்கும் மேலாக தன் நிலைமையில் மாறுதல் எதுவும் இல்லாமல் போன மச்சான் திரும்பிவந்த கதையாக மீண்டும் ரேகாவைப் போய் சந்திப்பதற்கே அவனுக்கு அவமானமாக இருந்தது. அந்த மனவேதனையை அவனால் சகித்துக்கொள்ள முடியாது போல இருந்தது. நான்கு நாட்கள் தாமதமானாலும் திரும்பிப் போய் ரேகாவைச் சந்திக்கும்போது பழைய சதீஷாக, அதாவது இந்த ஆறு நாட்களின் சதீஷாக இல்லாமல் அதற்கு முன்பு, பத்தொன்பது வருஷங்களாக இருந்த சதீஷாக—ஆண்மை நிறைந்த சதீஷாக திருப்திப் படுத்தவும், திருப்திப் பெறவும் சக்தி படைத்த சதீஷாகத் திரும்பிப் போக வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது.

சென்னை ஆபீசுக்கு தொலைபேசி அழைப்பு போட்டு ராஜியுடன் பேசலாமா என்ற ஒரு ஆவல் திடீரென்று அவனுக்குத் தோன்றியது. அப்படிப் பேசினால் அவள் என்ன மனநிலையில் இருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். நேரில் பேசுவதைவிட சில சந்தர்ப்பங்களில் தொலைபேசி மூலம் பேசுவதோ, கடிதம் மூலமாக எழுதித் தெரிவிப்பதோ சுலபமாக இருக்கும். அப்படிப் பேசுவதாக இருந்தால் பத்து மணிக்கு மேல்தான் பேசமுடியும். பம்பாய் ஆபீசிலிருந்துதான் பேச வேண்டும். எப்படி சௌகரியப்படுகிறதோ பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்தபடி எழுந்து ஸ்நான அறையை நோக்கிச் சென்றான்.

சாயங்காலம் நாலரை மணிக்கு எக்ஸ்ரே ரிபோர்ட், ரத்தப் பரிசோதனை ரிபோர்ட் இரண்டையும் கையில் வைத்துக் கொண்டு அகர்வாலின் கிளினிக்குக்குள் நுழைந்தான்.

டோரதி புன்னகையால் வர வேற்ருள்.

அவளிடம் சென்று ரிப்போர்ட்டு களைக் கொடுத்தேன்.

"வேண்டாம். நீங்களே வைத் துக் கொண்டிருங்கள். கொஞ்சம் வெய்ட் பண்ணுங்கள், டாக்டர் ஃப்ரீ ஆனதும் உங்களை அனுப்புகிறேன்" என்ருள்.

சதீஷ் நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தபடி அங்கிருந்த பத்திரிகை களைப் புரட்டிக் கொண்டிருந்தான். டெபோனேர், ஃபேஷன், செக்ஸாலஜி, கான்ஃபிடன்ஷல் அட்வைஸர், ஹாட் லவ், மிட்நைட் என்று எல்லாம் செக்ஸ் பற்றிய பத்திரிகைகள் தான். கவர்ச்சிப் படங்கள் நிறைந்தவை. ஆனல் அவைகளையெல்லாம் பார்க் கவோ, படிக்கவோ அவனுக்குப் பிடிக்க வில்லை. வயிற்றுவலிக்காரன் விருந்துச் சாப்பாட்டைக் கண்டால் எப்படி வெறுப் பானே அப்படி அவையெல்லாம் அவனுக்கு வெறுப்பையே ஊட்டின.

நல்ல வேளையாக வெகுநேரம் அவன் காத்திருக்க வேண்டி இருக்க வில்லை. ஐந்து நிமிடங்களுக்குள்ளாகவே டோரதி அவனை அழைத்து, உள்ளே போகும்படி சொன்னுள்.

"குட் ஆஃப்டர்நூன் டாக்டர்" என்று கூறியபடியே உள்ளே நுழைந் தான்.

"ஹலோ மை டியர் சேப், ஆயியே, ஆயியே. ஹேவ் யூ ப்ராட் தி ரிபோர்ட்ஸ்." என்று கூறியபடியே கை குலுக்குவதற்காகக் கையை நீட்டி ஞர். இன்று கருநீல வண்ணப் பாண்ட் டும், க்ரீம் கலரில் ஒரு பனியனும் மட் டுமே டாக்டர் அணிந்து கொண்டிருந் தார்.

சதீஷ் ரிபோர்ட்டுகளை மேஜை மீது வைத்து விட்டு, டாக்டருடன் கைகுலுக்கிஞன்.

"ஸிட் டௌன்" என்று சதீஷிடம் கூறிவிட்டு, அவன் மேஜை மீது வைத்த கவரை எடுத்துப் பார்த்தார்.

"குட். குட். வெரி ஃபைன். மிஸ்டர் 'சதீஷ்' உங்களுக்கு ஒரு குறை யும் இல்லை. ஷுகர் இல்லே. உங்க பெல்விக் நெர்வ்ஸெல்லாம் இன்டாக்டா இருக்கு. யூ நீட் நாட் வர்ரி அபவுட் எனிதிங்." என்ருர்.

"அப்ப ஏன் இப்படி..." என்று சதீஷ் இழுத்தான்.

"என்னப்பா சர்வர் உங்க ஓட்டல் பட்சணங்கள் எல்லாத்திலேயுமே ஓரத் திலே கடிச்ச மாதிரித் தெரியுதே?"

"அதுவா சார். டேஸ்ட் எப்படி இருக்குன்னு எங்க முதலாளியே நேரடியா ஒவ்வொரு பட்சணத்தையும் கடிச்சு சாப்பிட்டுப் பார்த்து திருப்தி பட்டாத்தான் சர்விங்குக்கு அனுப்பு வார்!"

—அ. இராமதாஸ்

"அதுதான் நேத்தே சொன் னேனே? தானே சரியாயிடும். உன்னி டம் ஒரு ரகசியத்தைச் சொல்லட்டுமா? எனக்கும் இதே மாதிரி ஆச்சு, பத்து வருஷத்துக்கு முன்னுடி. அப்போ எனக்கு வயசு நாற்பத்தெட்டு. மூணு வாரம் நான் ஆம்பளையாவே இருக் கல்லே. என்ன சொல்றே? இப்ப இந்த வயசுல அதாவது அம்பத்தெட்டு வயசுல ஒரு ஆண் குதிரை மாதிரி என்னுல செயல்பட முடியறது. என் வைஃப் என்னைத் திட்டுரு. "யூ டர்ட்டி ஓல்ட் மேன். என்னுலெ உன்னோட தாக்குப் பிடிக்க முடியாது. டோன்ட் டரபுள் மீ. வேற எங்கியாவது போ அப்படிங்கரு" என்று கூறி தொப்பை குலுங்க ஹ ஹ ஹ என்று சிரித்தார்.

சதீஷுக்கு இது பெரிய ஆறுத லாக இருந்தது. தைரியம் அவன் மனத்தை நிறைத்தது.

"மருந்து ஒண்ணும் வேண்டியா திலேயா டாக்டர்?"

"நாட் நெஸஸரி. நீ கேக்கறி யேங்கறதுக்காக நான் ஏதையேதையோ ஹார்மோன்லையெல்லாம் எழுதிக் கொடுத்துடலாம். அதனுலெல்லாம் ஒண்ணும் பிரயோஜனமில்லே. யுவர் 'பாடி' நீட்ஸ் ஸம் ரெஸ்ட். அவ்வளவு தான்."

டாக்டர் தம்மைப் பற்றியே சொல்லிக் கொண்டது நிச்சயமாக இருக் குமா? அல்லது தனக்கு தைரியம் ஊட்டு வதற்காக அப்படி பொய் சொல்லியிருப் பாரா? அவரை எப்படிக் கேட்பது?

"என்ன யோசிக்கறே? இன்னும் ஏதாவது கேக்கணும்னு இப்பவே கேட்டுடு. நீ ஒண்ணும் பணம் கொடுக்க வேண்டாம். நேத்து கொடுத்தது போதும். ஆனா நாளைக்கு மறுபடியும் வந்தியானா பணத்தைக் கறந்துடுவேன்" என்று கூறிச் சிரித்தார்.

"நேத்து நீங்க சொன்னிங்களே டாக்டர் அது தேவை தானான்னு ..."

"என்ன சொன்னேன்?"

"பிராஸ் கிட்ட போகச்சொன்னிங்க. அப்புறம் ஆபீசுல என் பி. ஏ. கிட்டப் போகச் சொன்னிங்க."

"ஓ. அதுவா?" என்று கூறி சிரித்தார் டாக்டர். "தேவைதானான்னு நான் என்ன சொல்றது? அது ஒரு ட்ரையல். உனக்கு குணமாகறதை அது ஸ்பீட் அப் பண்ணலாம், இன்னொண்ணும் கூட செய்யலாம். நிறைய 'போர்னொ கிரபி' புஸ்தகங்களைப்படி. ப்ளூபிலிம்ஸ் பார்க்க முடிஞ்சா பாரு. முடியுமானா டேக் எ ட்ரிப் டு காஜுராஹோ. அந்த சிற்பங்களையெல்லாம் பாரு. அப்படிப் பார்க்கறப்ப கூட யாராவது Female Company இருந்தா இன்னும் நல்லது. ரைட்டோ. விஷ் யூ ஆல் தி பெஸ்ட். நெக்ஸ்ட் டைம் நீ என்னை மீட் பண்றப்ப நல்ல நியூஸ் கொண்டுவா" என்று கூறி கையை நீட்டினார்.

"தாங்க் யூ டாக்டர்" என்று கூறி அவர் கையைக் குலுக்கிவிட்டு வெளியே வந்தான்.

புன்னகையாலேயே டோரதியிடம் டாடா சொல்லிவிட்டு கிளினிக்கை விட்டு வெளியே வந்தான்.

சதீஷின் மனத்தில் இப்போது முந்திய சிலநாட்களைப் போன்ற கவலையும் இருட்டும் நிரம்பியிருக்கவில்லை. டாக்டர் அகர்வால் அவனுக்குத் தம் பேச்சாலேயே பெரும் நம்பிக்கையை ஊட்டிவிட்டிருந்தார். அதுவே பெரிய டானிக் போல வேலை செய்திருந்தது. கொஞ்சம் உற்சாகமாகக்கூட அவனால் நடை போட முடிந்தது.

அவனுடைய உற்சாகத்திற்கு டாக்டர் அகர்வால் சொன்னது மட்டும் காரணமல்ல. காலையில் ஆபிசிலிருந்து சென்னை ஆபீசுக்கு தொலைபேசி அழைப்புப் போட்டு ராஜியுடன் பேசியது இன்னொரு காரணம்.

சென்னை ஆபீஸ் இணைப்புக் கிடைத்ததும் ராஜியேதான் பேசினாள். ஏனென்றால் ஆபிசின் பொது எண்ணைச் சுழற்றாமல் அவன் தன் அறையிலுள்ள தனது டைரக்ட் லைன் எண்ணைச் சுழற்றியிருந்தான். காரணமாகத்தான் அப்படி செய்தான். பொதுலைனில் கூப்பிட்டால் டெலிபோன் ஆபரேட்டர் சாரா தாமஸ் மூலமாகத்தான் ராஜியைக் கூப்பிட வேண்டியிருக்கும். அவள் ஒரு வம்புக்காரி. பார்யயிலிருந்து கூட தன்னால் ராஜியோடு பேசாமல் இருக்க முடியவில்லை என்று ஏதாவது கதை கட்டி விடுவாள். ஆபீஸ் காரியமாக, தான் தன் அந்தரங்கக் காரியதரிசியான ராஜியுடன் பேசுவதில் ஒன்றும் தவறில்லை என்றாலும், தான் பேசப்போவது ஆபீஸ் விஷயமில்லை. அந்த சாரா தாமஸ், தான் பேசுவதை ஒட்டுக் கேட்பாள். பிறகு ஒன்றுக்கு இரண்டாக திரித்து விடுவாள். அதனால்தான் அவள் மூலமாகப் பேசுவதைத் தவிர்த்தான்.

(தொடரும்)

---

பிச்சைக்காரன்: சாமி! இந்த ஏழை மேல இரக்கம் காட்டி ஒரு பத்து பைசா போடுங்க.

அவர்: சில்லரை இல்லே! போ, போ!

பிச்சைக்காரன்: நோட்டு இருந்தாலும் கொடுங்க, சில்லரை தருகிறேன்!

அவர்: நோட்டு இல்லே 'செக்' புத்தகம்தான் இருக்கு!

பிச்சைக்காரன்: அதிலயாவது ஒண்ணு கொடுங்க பேங்க்ல என்னோட அக்கவுண்ட்ல போட்டுக்கறேன்!

—சிவ. இராமநாதன்

ஹேமா
ஆனந்ததீர்த்தன்.

இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான் ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.

டெலிபோன் வைத்திருந்த அறையிலிருந்து இருவரும் சதீஷின் அறைக்குச் சென்று சதீஷ் கட்டிலிலும் சௌரிராஜன் ஒரு நாற்காலியிலும் அமர்ந்து கொண்டனர்

எப்படி விஷயத்தை ஆரம்பிப்பது என்று தெரியாமல் சதீஷ் தயங்கினான்.

அவன் தயக்கத்தைப் போக்கும் நோக்கத்தோடு சௌரிராஜன், "உங்களுக்கு என்ன உடம்பு?" என்று கேட்டார்.

"ஒண்ணுமில்லையே? ஏன்?"

"இல்லே. நேத்திக்கி நீங்க டாக்டரை கன்ஸல்ட் பண்ண வேண்டியிருக்குன்னு சொன்னீங்களே, அதனாலே கேட்டேன்."

"டாக்டர் அகர்வால்னு, ஆபரா ஹவுஸ்லெ கேள்விப்பட்டிருக்கீங்களா?"

"தெரியுமே, நல்லா பணம் பிடுங்குவார். ஆனா மனுஷன் கெட்டிக்காரர். கைராசி இருக்கிறதாவும் சொல்றாங்க. என் விஷயத்துலதான் அவர் கைராசி கூடப் பலிக்கல்லே. என் தலை எழுத்து ராசி அவ்வளவு மோசமாயிருக்கு. என்ன பண்றது?" என்று கூறிச் சிரித்தார்.

எப்படி அவரால் இந்த நோயைத் தாங்கிக்கொண்டு சிரித்துப் பேச முடிகிறது என்று சதீஷுக்கு ஆச்சரியமாக இருந்தது. அன்று 'சக்ரா' படம் பார்க்கும்போது சௌரிராஜனின் ஞாபகம் வந்தது. ஆனால் அந்தப் படத்தில் வரும் லூகா போல் இவரும் இப்படியொரு பயங்கர நோயாளியாகியிருப்பார் என்று அன்றைக்கு அவனுக்கு தோன்றவில்லை. ஆனால் இப்பொழுது நினைத்துப் பார்த்தால் அவனுக்கு ஆச்சரியமான, மனிதனால் புரிந்து கொள்ள முடியாத ஒரு அற்புதமாகத் தோன்றியது. நமக்குத் தோன்றும் நினைவுகள் (சில சமயங்களில் கனவுகளைப் போல) எங்கோ, ஏதோ சில உண்மைகளோடு சம்பந்தப்பட்டவைகளாக இருக்கின்றன. ஆனால் நாம்

# ரேகா சதீஷ் ராஜி

16

ஹேமா ஆனந்ததீர்த்தன்

அதை அறிவதில்லை. இப்படி ஏதேதோ யோசனைகளில் அவன் அமிழ்ந்து பேசாமலிருந்தான்.

"நீங்க அவரை கன்ஸல்ட் பண்ணினேளா? என்ன கம்ப்ளெய்ண்ட்?"

சதீஷ் சிறிது தயங்கி விட்டுப் பிறகு தன்னுடைய நிலைமையையும், டாக்டர் அகர்வால் தனக்குக் கூறிய யோசனைகளையும் சொன்னான்.

சௌரிராஜன் அவ்வளவையும் கேட்டுவிட்டு, "டாக்டர் சொல்றது சரியாத்தான் இருக்கும். அவர் சொல்றபடி செஞ்சு பார்த்துட வேண்டியது தானே? ஐ வில் ஹெல்ப் யூ. நல்ல இடமா நான் கூட்டிண்டு போறேன் நீங்க கவலையே படாதிங்கோ" என்றார்.

"டாக்டர் சொல்றது நம்பும்படியாவே இல்லே எனக்கு."

"ஏன்?"

"என் உடலுக்கு ரெஸ்ட் தேவைங்கறார். அதே சமயத்துல என்னை பிராஸ்கிட்டயும், இன்னொருத்திகிட்டயும் போகச் சொல்றார். அப்புறம் ரெஸ்ட் எப்படி கிடைக்கும்?"

"நீங்க அவரைக் கேக்கல்லியா?"

"இல்லே. ரொம்பவும் துருவித் துருவி அவரை க்ராஸ் கொஸ்சன் பண்றமாதிரி கேக்கறதுக்கு எனக்கு என்னமோ போல இருந்தது."

"கேட்டிருக்கணும். ரூபாய் கொடுக்கல்லியா? எனக்குத் தோணறது. அவர் சொன்னதை நீங்க சரியாப் புரிஞ்சுக்கலேன்னு. உங்க 'பாடி'க்கு ரெஸ்ட் தேவையாயிருக்கலாம். அதனாலெ தான் இப்படி ஆகியிருக்கலாம். என் ஃபோர்ஸ்ட் ரெஸ்ட். அதே சமயத்துல உங்களுக்கு தைரியம் வர்றதுக்காகவும், உங்க கண்டிஷன் அப்படியொண்ணும் மோசமானதில்லேங்கறதை ப்ருவ் பண்றதுக்காகவும் இந்த மாதிரி இன்னொருத்தி கிட்ட 'ட்ரை' பண்ணி வெற்றியடைஞ்சா நம்பிக்கை ஏற்படும். இதுல வெற்றி ஏற்படறதுக்கு சான்ஸும் இருக்கு. ஏன்னு. புதுமை. பழகப் பழகப் பாலும் புளிக்கும் ஃபெமிலியாரிடி ப்ரீட்ஸ் கன்டெம்ப்ட் னெல்லாம் சொல்றதில்லியா? அந்த மாதிரி உங்க மனைவியை நீங்க உள்ளம் நிறைய காதலிச்சாலும் உடல் வெரைட்டிக்காக ஏங்கத் தொடங்கியிருக்கலாம். அந்த ஏக்கம் இப்படித் தீர்ந்துடுத்துன்னு அப்புறம் பழையபடி உங்க தாம்பத்யத்துல ருசி ஏற்பட்டுடும். யூ வில் பி ஆல் ரைட். இதுதான் சைகாலஜி."

"அப்படியா சொல்றிங்க?"

"ஆமா. நிச்சயமா எனக்கு அப்படித்தான் படறது."

"இங்கயும் வெற்றி இல்லாம தோல்வியே கிடைச்சுதுன்னா?"

"அப்படி ஏன் நினைக்கணும்? இது ஒரு ட்ரையல்தானே. அப்படி சக்ஸஸ் ஃபுல்லாகல்லேன்னாலும் ஒண்ணும் குடி முழுகிப் போயிடாது. டாக்டர் சொல்லியிருக்காப்பலெ நீங்க பூரண குணமடைஞ்சுடலாம். கொஞ்சம் தாமதமாகலாம். அவ்வளவுதான்."

"இருந்தாலும் இதுல இருக்கற மத்த அபாயங்களை நினைச்சா..."

"ஒரு அபாயமும் இல்லே என்னைப் பார்த்து பயப்படாதிங்கோ. நான் ரெக்லெஸ். ஒருத்தியோடயா நின்னேன்? கணக்கு வழக்கு இல்லாம கண்டவகிட்ட போனேன், வாங்கிண்டேன். அதுவுமல்லாம இதெல்லாம் பூர்வ ஜன்மத்துப் பாவம். வேண்டான்னு விடாது. தேவடியா கிட்டப் போறவன் எல்லாருக்குமா இப்படி வந்துடறது? நூறுபேர் போனா மூணு பேருக்குதான் வருது. அது அவங்க செஞ்ச பாவம். உமக்கு வரணும்னு இருந்தா நீங்க யார் கிட்டயும் போகாமயே கூட வர்றதுக்கு சான்ஸ் உண்டு. ரொம்ப ரேர்தான். ஆனாலும் அப்படிப் பட்ட கேசும் இல்லாம இல்லெ. அதனாலெ ஒண்ணும் பயப்படாம கிளம்பும். நான் சேஃப் ஆன இடமா பாத்து கூட்டிண்டு போறேன்."

"குடிசைகள்லயா?"

"ஏன், குடிசைகள்ல இருக்கற வங்கன்னா டேஞ்ஜர் ஜாஸ்தின்னு நினைக்கறிங்களா? அதுதான் தப்பு. நீங்க எழுந்திருங்கோ. குடிசை வேண்டாம்னா வேண்டாம். ஐ வில் டேக் யூ டு எ வெரி எக்ஸலண்ட் ப்ளேஸ் இன் க்ராண்ட் ரோட்."

சதீஷ் எழுந்தான். முகம் கழுவிக் கொள்வதற்காகக் குளியலறையை நோக்கிச் சென்றான்.

அடுத்து பத்து நிமிடங்களில் அவன் தயாராகி வந்ததும் இருவரும் ஒரு டாக்ஸியிலேறி அமர்ந்து கொண்டனர். சௌரிராஜன் டாக்ஸி டிரைவரிடம் "கிராண்ட் ரோட் சலோ" என்றதும்

டாக்ஸி நகரத் தொடங்கியது.

"பணத்தைப் பற்றிக் கவலையில்லே. கொஞ்சம் கூடவே கொடுக்கவேண்டியிருந்தாலும் பரவாயில்லே. ஆபத்தில்லாத இடமா இருக்கணும்" என்றான் சதீஷ்

"நான்தான் சொல்லிட்டேனே நீங்க துளிகூடப் பயப்பட வேண்டாம். உங்க மிஸஸ் கூடப் படுத்துக்கறப்ப எப்படி, பயமில்லாம இருப்பிங்களோ அப்படி இருக்கலாம்." என்று ஒரு அசட்டுச் சிரிப்போடு சௌரிராஜன் கூறினர்.

சதீஷுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு விடலாமா என்று இருந்தது. தன் மனைவியைப்பற்றி இந்த அயோக்கியன் பிரஸ்தாபித்து சகஜமாகப் பேசுவதைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறதே என்று அவன் உடலெல்லாம் கூசியது. மேலும், இந்த சந்தர்ப்பத்தில் ரேகாவின் ஞாபகம் தனக்கு வராமலிருந்தால் தேவலே என்று அவன் நினைத்தான். சௌரிராஜன் அதைக் கெடுத்து ரேகாவின் நினைவை விதைத்து விட்டார்.

"ரேகா, என்ன மன்னிச்சுடு. இது நான் செஞ்சுக்கற வைத்தியம் தான். அதுவும் எனக்கு குணமாகி பழையபடி நான் உனக்கு புருஷனு இருக்கறதுக்கு லாயக்கா இருக்கணு மேங்கற ஆசையினுலெ செய்யற காரியமே ஒழிய இன்னொருத்தி மேல ஆசைப்பட்டு நான் இந்தக் காரியத்தைச் செய்யலே" என்று மனசுக்குள்ளாகவே ரேகாவுடன் பேசிக் கொண்டான்.

"என்ன யோசனை பண்றிங்க?" என்று சௌரிராஜன் கேட்டார்.

"ஒண்ணுமில்லே. புது அனுபவமாயிருக்கிறதுனுலே... கொஞ்சம் 'எக்ஸைட்டடா' இருக்கு."

"அப்படியெல்லாம் மனசைப் போட்டு குழப்பிக்காதிங்கோ. நார்மலா இருங்கோ. நீங்க செய்யப் போறது ஒண்ணும் அப்நார்மல் காரியமில்லே... நான் அழைச்சுண்டு போற இடம் இருக்கே, அங்கே ஸ்ட்ரிக்ட் டிஸிப்ளின். வாரத்துக்கு ஒருநாள் டாக்டர் வந்து ஹெல்த் செக்கப் பண்ணிட்டு போவார். எவளுக்காவது கொஞ்சம் சந்தேகம் இருந்தாக்கூட உடனே ட்ரீட்மெண்ட் ஆரம்பிச்சுடுவாங்க. மறுபடியும் அவளை டாக்டர் ஆல்ரைட்னு சொல்ற வரைக்கும் தொழில் நடத்த அனுமதிக்க மாட்டாங்க."

"லைசன்ஸ் வாங்கி நடத்தற இடம் தானே?"

"ஆமாமா."

"அப்புறம் அது வேற. நான் உள்ளே இருக்கறப்ப எதாவது ரெய்ட் கிய்ட்ன்னு போலீஸ் வந்து ஏதாவது கலாட்டா பண்ணிருங்கன்னு..."

"அதெல்லாம் ஒண்ணும் ஆகாது. ஆறு ஃபோராஸ் ரோடுலயும், ஃபால்க்லண்ட் ரோடுலயும் இருக்கற மா... ரெட்லைட் போட்டு நம்பர் போட்டு அதெல்லாம் இருக்காது இங்கே. அதனுலெ நீங்க பயப்படவேண்டாம். போலீஸ் கீலீஸ் எல்லாம் அவங்களுக்கு வேண்டியவங்கதான். எல்லாருக்கும் மாசம் முதல் தேதியானு சம்பளம் பட்டுவாடா பண்ற மாதிரி மாமூல் பட்டுவாடா ஆயிடும். கவர்மெண்டு ஆபீசுகள்ளகூட அவ்வளவு கரெக்டா சம்பளம் குடுக்கமாட்டாங்க."

"ரேட்டெல்லாம் எப்படி?"

"நான் உங்களை அழைச்சுண்டு போற இடம் ரொம்ப ஹைக்ளாஸ்."

"நீங்க சொல்றதைப் பார்த்தா பயமாயிருக்கே? எவ்வளவுன்னு சொல்லிடுங்கோ. அப்புறம் அங்கே போய் கையிலெ அவ்வளவு பணமில்லேன்னு அவமானமாப் போயிடும்."

"சீசீ அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. அந்த ரேட்டுக்கு உங்ககிட்ட பணமில்லாமல் போகாது."

"எவ்வளவுன்னுதான் சொல்லுங்களேன்."

"நைட் பூரா இருக்கப் போறேளா?"

"நீங்க என்ன சஜஸ்ட் பண்றேள்?"

"இந்த விஷயத்துலயெல்லாம் ஒவ்வொருத்தர் டேஸ்ட் ஒவ்வொரு மாதிரி. சில பேர் நைட் முழுக்க ஒருத்தியோட ஸ்பெண்ட் பண்ணுவா. சிலபேர் அந்தப்பணத்துக்கு நாலு பொம்பளையெப் பார்த்துடலாமேன்னு ஒவ்வொருத்திகிட்டயா போயிண்டிருப்பா" என்று கூறி சிரித்தார்.

சதீஷால் சிரிக்க முடியாவிட்டாலும் அந்த சந்தர்ப்பத்தில் சிரிக்கத்தான் வேண்டும் என்று ஏதோ ஒரு

அரை குறைச் சிரிப்பைச் சிரித்து வைத்தான்.

"நைட் முழுக்கன்னு முந்நூறு ரூபாய் குடுத்தா போறும். இல்லேன்னு முப்பது ரூபாய் குடுக்கணும்."

"முப்பது ரூபாய் குடுத்தா? எவ்வளவு நேரம்?"

"நேரம் கணக்கில்லே. அவங்களுக்கு ஒரு சிட்டிங்."

"சிட்டிங்கா?" என்று சதீஷ் கேட்டதும் சௌரிராஜன் ஹோஹோவென்று ரசித்துச் சிரித்தார்.

"நீங்க சரியான கத்துக்குட்டிதான். சிட்டிங்னு அவங்க பரிபாஷையிலெ ஒரு தடவைக்கு சொல்றது. போட்டோக்கோ, மாடலிங்குக்கோ உக்கார்றதில்லே" என்று விளக்கியபடியும் சிரித்தார்.

"நைட் முழுக்க எதுக்கு? நான்தான் உங்க கிட்ட சொன்னேனே? நான் இப்படிப் போறதே ஒரு டெஸ்டுக்குதானே?"

"ஸப்போஸிங் டெஸ்டுல வெற்றின்னு வெச்சிக்குங்கோ. அப்புறம் விடுவானேன்? முழுக்க முழுக்க எஞ்ஜாய் பண்ணிட்டு வரவேண்டியதுதானே? இப்படி சொல்றேனேன்னு கோபிச்சுக்காதிங்கோ."

"கோபமில்லே. இருந்தாலும் என் மனசு அதுக்கு ஒத்துக்காது."

"சரி. அப்போ வேண்டாம்' நல்ல மனுஷனை உங்களைக் கெடுக்கறதுக்கு எனக்கும் மனசு இல்லேதான். முப்பது ரூபாய் குடுத்தே ஏற்பாடு பண்ணிக்குவோம் நீங்க வர்ற வரைக்கும் நான் வெளியிலெயே காத்துண்டிருக்கேன்" என்று சதீஷிடம் கூறிவிட்டு டாக்ஸி டிரைவரை உத்தேசித்து, "ஓ பான் கா துகான் கே சாம்னே ரோகோ" என்றார்.

டாக்ஸி நின்றதும் இருவரும் இறங்கினர்

"வாங்க போலாம்." என்று கூறி சதீஷை அழைத்துக் கொண்டு ஒரு மூன்று மாடிக் கட்டிடத்திற்குள் நுழைந்தார் சௌரிராஜன்

"மூணாவது மாடிக்குப் போகணும். விளக்கில்லே. மெதுவாப் பாத்து வாங்கோ" என்று சதீஷின் கையைப் பற்றிக் கொண்டார்

## வயதுக்கு வராத வனிதா



"நன்றாக கார் டிரைவ் பண்ணுவேன். கத்துக்கிட்டு என்ன சார் பண்றது. ஜாம்ஜாம்னு தானே காரை ஓட்டிக்கிட்டு ஸ்டுடியோவுக்குப் போக முடியலியே." என குறைபடுகிறார் வனிதா.

எவ்வளவுதான் நன்றாக கார் ஓட்டினாலும் லைசென்ஸ் எடுக்க அதற்குரிய வயது இன்னும் இவருக்கு வரவில்லையாம்!

— ஆனந்த்

சதீஷுக்கு அருவருப்பாக இருந்தது.

"வேண்டாம் விட்டுடுங்கோ. இந்த வெளிச்சம் போதும். நன்னுத் தெரியறதே" என்று தன் கையை விடுவித்துக் கொண்டான்.

"ஓ ஐ எம் சாரி. நான் உங்களைத் தொட்டிருக்கக்கூடாது" என்ருர் சௌரி.

"இல்லேல்லே. அதுக்காக இல்லே." என்று சதீஷ் மறுத்தான். தன் வெறுப்பை அவருக்கு உணர்த்தி விட்டோமே என்று அவனுக்கு வருத்தமாக இருந்தாலும், அவருடைய ஸ்பரிசத்தைப் பொறுத்துக் கொள்வது அவனுல் முடியாததாக இருந்தது.

"ஆறு பொண்கள் இருக்கா இங்கே. உங்க அதிர்ஷ்டம் யார் ஃப்ரீயா இருக்காங்கோன்னு பார்ப்போம்."

"எல்லாரும் ஹிந்தி பேசறவங்க தானு?"

"எல்லாருக்கும் ஹிந்தி தெரியும். ஆறு ஒருத்தி கூட அதுல ஹிந்திக்காரி இல்லே. ஆறு பேர்ல மூணு பேர் கன்னடக்காரங்க, பெல்காம்லேந்து வந்தவங்க. மராத்தியும் பேசுவாங்க. ரெண்டு பேர் கம்ப்ளீட்டா மராத்திக்காரிங்க. ரத்னகிரிக்காரிங்க. ஒருத்தி தெலுங்குக் காரி,குண்டூர்லேந்து வந்தவ "

"எல்லாரோட பயோடேடாவையும் மனப்பாடம் பண்ணி வெச்சிருக்கிங்க போலிருக்கே?"

சௌரிராஜன் அதை ஒரு பாராட்டாக எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியைக் காட்டிஞர்.

"பெல்காம் பொண்கள்ல கல்பனுன்னு ஒருத்தி இருக்கா. இருபத்திரண்டு வயசுதான் ஆறது. நல்ல கோ ஆபரேஷனும் கொடுப்பா. அவ கிடைச்சா யூ ஆர் லக்கி" என்ருர் சௌரிராஜன்.

நல்ல கோ ஆபரேஷன் என்று அவர் சொல்வதனுல் அவருக்கு சொந்த அனுபவம் இருக்கிறது என்றுதானே அர்த்தம்? அப்படியானுல் இது போன்ற வியாதியஸ்தர்களிடம் கூடவா அந்தப் பெண்கள் தயக்கமில்லாமல் வருவார்கள்? அவளிடம்தான் இப்போது போக வேண்டுமா? சௌரி

## காரணம்

அந்த குடுகுடுப்பாண்டியை
எனக்குப் பிடிக்கவில்லே
காரணம்—
என் வீட்டுக்கு மட்டுமல்லாது
எதிர் வீட்டுக்கும்
பக்கத்து வீட்டுக்குமல்லவா
நல்லது சொல்கிருன்...

—அனிதப்ரியன்

ராஜனேயே தழுவிக் கொண்டது போல் ஒரு அருவருப்பு ஏற்பட்டு சதீஷ் உடம்பு சிலிர்த்தது.

இருக்காது. அந்தப் பெண்களுக்கு மாத்திரம் பயம் இருக்காதா? சௌரிராஜன் சொல்வது பழைய கதையாக இருக்கலாம். அவருக்கு இந்த வியாதி வருவதற்கு முன்னர் அவர் அவளிடம் போயிருக்கலாம்.

அப்படியும் இருக்க முடியாதே! அவர் திருவிளையாடல்களெல்லாம் குடிசைப் பகுதியில் வாழும் பெண்களுடன் தானே! இந்த கல்பனு இங்கே வருவதற்கு முன்பு எங்காவது குடிசைப் பகுதிகளில் இருந்திருப்பாளோ?

சதீஷுக்கு தலே சுற்றியது. சௌரிராஜனேயே கேட்டு விடலாமா? இதையெல்லாம் எப்படி கேட்பது?

இந்த மாதிரி இடத்திற்கு வந்து விட்டு ஆண் ஸ்பரிசமே படாத பெண்தான் வேண்டுமென்று ஆசைப்பட்டால் நடக்கிற காரியமா? சௌரிராஜன் இல்லாவிட்டால் இன்னெரு சௌந்தரராஜன். அதுவும் இல்லாவிட்டால் மற்ரெரு வரதராஜன் தொட்ட ராணிகளாகத்தான் இருப்பார்கள் எல்லோரும்.

சதீஷ் யோசித்துக்கொண்டிருக்கும் போதே சௌரிராஜனும் அவனும் மூன்ருவது மாடிக்கு வந்து ஒரு கதவின் முன் நின்றிருந்தார்கள். சௌரிராஜன் கதவின் மீதிருந்த அழைப்பு மணியை அழுத்திக் கொண்டிருந்தார்.

சில விநாடிகளில் கதவு திறக்கப்பட்டது. கதவைத் திறந்த ஸ்திரீ (ஐம்பத்தைந்து வயதிருக்கும்) சௌரிராஜன் முகத்தைப் பார்த்ததும் மகிழ்ச்சியுடன் "ஆயியே" என்று அழைத்தாள்.

(தொடரும்)






## பார்த்தது:

இலக்கிய சிந்தனை நூல் வெளியீட்டு விழா ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடந்தது. போய் பார்த்தேன்...

எழுத்தாளர் பாலகுமாரன் கல்லூரி மாணவர் மாதிரி சுறுசுறுப்பாய் நடந்து கொண்டிருந்தார். சேதி அறிந்தோம் சந்தோஷம்... என்றதற்கு பதிலாய் ஒரு சின்ன புன்னகை. " 'என்றென்றும் அன்புடன்' கதை ஆரம்பம் எப்படியிருக்கிறது?" பாசத்துடன் ஆவலாய் கேட்டார்... வாசகர்களிடம் நேரடியாய் பகிர்ந்து கொள்கிற மனப்பாங்கு அவருக்கு உரித்தானது...

வாசகர்களின் நேரடி வாழ்க்கைக்கும், தன் எழுத்திற்கும் சிறிதும் இடைவெளி இருக்கக்கூடாது என்று எண்ணுகிறார்...

மேத்தா வந்தார்... இளைய கவிஞர்களுடன் புதுக்கவிதை பற்றி பேசிக் கொண்டிருந்தார்... இனியவன் 'இலக்கிய வீதி' வேலையில் துரிதம் காட்டினார்... அனுராதா ரமணனைச் சுற்றி சில வாசகர்கள்... வைரமுத்துவின் கவிதையைப் பற்றிய விமர்சனங்கள்...

இலக்கிய சர்ச்சைக்கு சரியான விழாவாய் அது அமைந்தது.. சிலர் பேசிக் கொண்டு போனார்கள்... "இதே மாதிரி நிறைய அமைப்பு வரணும்... அப்பதான் இலக்கிய ஆரோக்கியம் கிடைக்கும்..."

மாதம் தவறாமல் இலக்கியப் பணி செய்கிற சிதம்பரம் - லெட்சுமணன் வாழ்த்த வேண்டியவர்கள் தான்!

## கேட்டது:

மதுரை பெண்ணுரிமை இயக்கத்தில் பலர் பேசியதை கேட்க நேர்ந்தது... சிலர் "பெண்களின் இன்றைய நிலைமைக்கு ஆண்கள் தான் முழுக் காரணம்... அது மாறணும்... இல்லையேல் மாற்றுவோம்..." என்றெல்லாம் பேசினார்கள்... பெண்கள் நிலைக்கு ஒரு வகையில் ஆண்களின் காரணமும் உண்டு. ஆனாலும் அவர்களை எதிர்ப்பது மட்டுமே ஒரே வழி என்கிற மாதிரி பேச்சின் தொனி இருந்தது... எனவே மதுரை அமைப்பைச் சேர்ந்த மீனாவை அணுகிக் கேட்டதற்கு கிடைத்த சில பதில்கள்...

"இயக்கம் ஆண்களுக்கெதிரானதல்ல... ஆண்கள் இல்லாமல்— ஒத்துழைக்காமல்— பெண்களுக்கு உரிமை கிடைக்கும் என்று நாம் நம்பவில்லை. பெண்களுக்கு ஆதரவாயும், வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு பாதுகாப்பாயும் இருக்கும்...

சிலநேரம் நொந்தபோது ஆவேசப்படுகிறோம்... ஆபாச எழுத்தையும், படத்தையும் எதிர்க்கிறோம்... ஆண்களை மாதிரி பெண்களும் மதிக்கப்பட வேண்டும் என்று நினைப்பதில் என்ன தவறு?"

அதுசரி... உரிமை கேட்பது சரி...! மேடை போடுவதைவிட கல்வி அறிவு தந்து, புரிந்து கொள்ளுதலைச் செய்ய வேண்டும் அல்லவா? (ஆண்களோடேயே செய்யலாம்.)

## படித்தது:

'வித்யா வித்தியாசமானவள்' என்ற நாவலைப் படித்தேன். இராம. ராகவேந்திரன் எழுதியது. பிரகாஷை வித்யா காதலிக்கிறாள். பிரகாஷ் நடிகையை மணக்க-மனம் வெறுத்துப் போய் பேசாமல் பொறுமையாய் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கிறாள் வித்யா. மாமா சுந்தரம், வித்யாவை மணக்க ஆசைப்படுகிறான். கடைசியில் பிரகாஷ் திருந்த, வித்யா-சுந்தரத்தையே மணந்து கொள்ளச் சொல்கிறான்—இது கதை.

நல்ல செந்தமிழில் கோர்க்கப்பட்ட மல்லிகைச்சரம்.

ராசி. அழகப்பன்

# ரேகா-சதீஷ்-ராஜ்

## 17

"ஒரு புது கிராக்கியைக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். பெரிய ஆபீஸர். முன்னாடி பம்பாயில் இருந்தார். இப்ப கொஞ்ச நாளா மெட்ராஸ்ல இருக்கார். இந்த மாதிரி இடங்களுக்கெல்லாம் சாதாரணமா வரக் கூடியவர் இல்லே. நான்தான் பலவந்தமாக இழுத்துக் கொண்டு வந்திருக்கிறேன்" என்று மளமளவென்று ஹிந்தியில் கூறினார்.

"ஆயியே. நமஸ்தே. பைடியே." என்று அவள் சதீஷை வரவேற்று உட்காரச் சொன்னாள்.

சௌரிராஜன் கூறியபடி அது ஹைகிளாஸ் இடமாகத்தான் இருக்க வேண்டுமென்பதை அந்த வரவேற்பு அறையே காட்டியது. அவர்கள் உட்கார்ந்திருந்த சோபாக்களின் மெத்தைகள் மெத்து மெத்தென்று உடலைக் கவ்விப் பிடித்துக் கொண்டன. கீழே விலை உயர்ந்த கார்பெட். சின்ன அறையாயிருந்தாலும்கூட மேலே இரண்டு மின்விசிறிகள் சுற்றிக் கொண்டிருந்தன. ஸன்மைகா போடப்பட்ட டீபாயின் மேல் ஊதுவத்தி ஸ்டாண்டில் ஒரு கட்டு ஊதுவத்தி கொளுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதிலிருந்து கிளம்பிய நறுமணம் அந்த அறை முழுவதும் கமகமத்துக் கொண்டிருந்தது. எதிரெதிராக இரண்டு சுவர்களிலும் ஆள் உயரத்திற்கு நிலைக்கண்ணாடிகள். ஒரு சுவரில் தங்க வண்ணத்தில் பெரிய வால் க்ளாக். அறையின் ஒரு மூலையில் பெரிய ரெப்ரிஜிரேடர்.

"என்ன குடிக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

சதீஷுக்கு இதெல்லாம் புதுமையாக இருந்தது. இந்த மாதிரி இடங்களில் இப்படியெல்லாம்கூட உபசாரங்கள் நடக்குமா?

"குடிப்பது இருக்கட்டும். யார் இருக்காங்க?" என்று சௌரிராஜன் அவளைக் கேட்டார்.

"எல்லோரும் எங்கேஜ்ட். அதனாலெதான் ஏதாவது சாப்பிடுங்க. பத்து நிமிஷம் சோபனா ஃப்ரீயாயிடுவா."

"கல்பனா இல்லியா?"

"இருக்காளே. கொஞ்சம் லேட்டாகும்."

"பரவாயில்லே. காத்திருக்கோம்."

"அப்ப சும்மா உக்காந்திருக்கற நேரத்துல எதாவது சாப்பிடுங்க."

ஹேமா ஆனந்ததீர்த்தன்

இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.

**ஹேமா ஆனந்ததீர்த்தன்.**



"சரி, நீ எது குடுத்தாலும் சாப்பிடறோம்."

"நீங்களே தான் பதில் சொல்லிட்டிருக்கிங்க. உங்க தோஸ்த் வாயே திறக்காம உக்காந்திருக்காரே?" என்று சிரித்தாள் அவள்.

சதீஷுக்கு கூச்சமாக இருந்தது.

"எனக்கு ஒண்ணும் வேண்டாம்" என்றான்.

"கல்பனாதான் வேணுமாம். வேற ஒண்ணும் வேண்டாமாம்" என்று சௌரிராஜன் ஜோக் அடித்துவிட்டுச் சிரித்தார். அவளும் சிரித்தாள்.

சதீஷுக்கு தன் மேலேயே ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சௌரிராஜன் தன்னை வைத்து ஜோக் அடிப்பதை அவனால் ரசிக்க முடியவில்லை!

அவள் ரெப்ரிஜிரேட்டரைத் திறந்து இரண்டு 'தம்ஸ் அப்' கொண்டு வந்து அவர்கள் முன் வைத்து சாப்பிடச் சொன்னாள்.

கல்பனா என்னும் அந்தப் பெண் வருவதற்கு லேட்டாகும் என்று சொன்னால் என்ன அர்த்தம்? இப்பொழுது அறைக்குள் யாருடனோ இருக்கிறாள் என்றுதானே? அந்த யாரோ போனவுடன் கழுவி விட்டுக் கொண்டோ துடைத்துக் கொண்டோ தன்னிடம் வருவாள். தான் அவளை ஏற்றுக் கொள்ள வேண்டும். நினைக்கும் போதே சதீஷுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. அங்கேயே வாந்தி எடுத்துவிடுவோமோ என்று பயந்தான். அந்த இடத்தை விட்டுப் போய் விட்டால் பரவாயில்லை என்று தோன்றியது.

ஆனால் அப்படிச் செய்வதற்கும் துணிவிருக்கவில்லை.

வந்தது வரட்டும் என்று நினைத்தபடி உட்கார்ந்திருந்தான்.

"சாப்பிடுங்க" என்று அவளும் சௌரிராஜனும் வற்புறுத்தியதால் வேண்டா வெறுப்பாக "தம்ஸ் அப்" பாட்டிலில் பாதியைக் குடித்துவிட்டு மீதியை அப்படியே வைத்துவிட்டான்.

டீபாயின் அடித்தட்டில் புத்தகங்கள், பத்திரிகைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவைகளில் சிலவற்றை எடுத்துப் புரட்டிப் பார்த்தான். எல்லாம் ஹிந்தி, மராத்தி. ஆனால் அவைகளில் உள்ள விஷயம் என்னவாக இருக்குமென்பதை அவைகளின் அட்டைப் படங்களும், உள்ளே இருந்த படங்கள் சிலவும் பகிரங்கமாக்கிக் கொண்டிருந்தன. ஆபாசக் கதைகள் நிறைந்தவை. 'போர்னோகிராபி' புஸ்தகங்களைப் படிக்கச் சொல்லி டாக்டர் அகர்வால் புத்திமதி சொன்னது அவன் ஞாபகத்திற்கு வந்தது. நாளைக்கு ஹார்ன்பிரோட் ப்ளாட்பாரத்துக் கடைகளில் பார்த்தால் ஏதாவது கிடைக்கும். பழைய 'ப்ளேபாய்' பத்திரிகைகளின் பிரதிகள் கூடக் கிடைக்கும். ஞாபகமாக வாங்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

உள்கதவைத் திறந்து கொண்டு ஒருவன் வெளியே வந்தான். ஆஜானுபாகு என்று வர்ணிப்பார்களே அப்படி ராக்ஷஸன் போல உயரமும், பருமனும், தொப்பையும், மூலக்கச்சம் போட்டு உடுத்திய மல்வேஷ்டி. அதற்குக் கீழே அண்டர்வேர் ஒன்றும் போட்டுக் கொண்டிருக்கவில்லை. கறுப்பு ஸ்லிப்பர்ஸ். வெள்ளை வெளேரென்ற முழுக்கை சட்டை. காலர் கிடையாது. கஃப்களில் ரோல்ட் கோல்ட் கஃப்லிங்க்ஸ், சட்டைக்கு மேல் வெள்ளைக்கோட்டு. க்ளோஸ்ட் கோட். ஆனாலும் பொத்தான்களைத் திறந்து விட்டிருந்தான். பொடிக்கலர் தொப்பி. தங்க ஃபிரேம் மூக்குக் கண்ணாடி. வயது நிச்சயமாக ஐம்பத்தைந்தைத் தாண்டியிருக்கும்.

"அச்சா" என்று அந்த ஸ்திரீயிடம் விடைபெற்றுக் கொண்டு அவன் வெளிக்கதவை திறந்து கொண்டு வெளியேறினான்.

மறுபடியும் உள்கதவு திறந்தது. இருபத்தைந்து வயது மதிக்கத் தகுந்த ஒரு பெண் வெளியே வந்தாள். பாவாடையும், பிராவும் மட்டுமே அணிந்



"என்ன டாக்டர் சொல்றீங்க?"
"தும்மினா வேஷ்டி அவுந்துடுதுன்னீங்களே!"
— அ. இராமதாஸ்

திருந்தாள், வெள்ளைநிறத்தில். அவள் உடலின் நிறம் டார்க் பிரௌன்.

சௌரிராஜனைப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள்.

"கைசீ ஹை, சோபனா?" என்று அவர் அவளைக் குசலம் விசாரித்தார்.

"டீக் ஹை" என்றாள்.

சௌரிராஜனைப் பார்த்து, சோபனாவைக் குறிப்பிட்டு அந்த ஸ்திரீ ஏதோ சொன்னாள்.

அவர் "வேண்டாம், கல்பனாவே இருக்கட்டும்" என்றார்.

சோபனாவை தனக்கு ரெகமண்ட் செய்திருப்பாள் என்றும், சௌரிராஜன் அதை வேண்டாமென்று மறுத்து விட்டார் என்றும் புரிந்து கொண்டான் சதீஷ்.

பார்பர் ஷாப்பில் கும்பலாக இருக்கும்போது தன்னுடைய முறை எப்போது வரும் என்று காத்திருக்கும் சந்தர்ப்பம் சதீஷுக்கு நினைவுக்கு வந்தது.

அந்த ஸ்திரீ கோபமாக சௌரிராஜனிடம் ஏதோ சொல்லி விட்டு உள் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள். அப்படி அவள் கோபமாகப் பேசியபோது கல்பனா என்கிற வார்த்தை அதில் அடி பட்டதால் சதீஷுக்கு அவள் என்ன சொன்னாள் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆவல் ஏற்பட்டது.

"என்ன சொல்லிட்டுப் போறா?" என்று சௌரிராஜனைக் கேட்டான்.

சௌரிராஜன் பதில் ஒன்றும் சொல்லாமல் சிரிக்கவே அவன் ஆவல் இன்னும் அதிகரித்தது.

"ஊம்? என்ன சொல்லுங்களேன்?" என்று அவரை வற்புறுத்தினான்.

"கல்பனாவும் அவ கிராக்கியும் ரூமுக்குள்ளே போய் ரொம்ப நேரமாச்சாம். அதனாலே அவளுக்கு சந்தேகம்."

"என்ன சந்தேகம்?"

"எதுக்காக இவ்வளவு நேரம்னு தான்." சதீஷின் அப்பாவித்தனம் சௌரிராஜனுக்கு வேடிக்கையாக இருந்தது. அதனால் அவனுக்கு நேரடியாக உடனே பதில் சொல்லாமல் — சுற்றி வளைத்து கொஞ்சம் விளையாடினார்.

"அதுக்கென்ன பண்றது? எல்



"நீ, நீச்சலடிக்க எங்கே கற்றுக் கொண்டாய்?"

"தண்ணீரிலே சார்"

—லட்சுமி சிவம்

லாரும் ஒரே மாதிரியா இருக்க முடியுமா? சில பேருக்கு சட்டுபுட்டுனு முடிஞ்சுடும். சில பேருக்கு கொஞ்சம் நிதானமாத்தான் இருக்கும்."

"அதுதான் இல்லே. சிலபேர் ஏமாத்தப் பார்ப்பாங்க."

"எனக்குப் புரியல்லே."

"புரியல்லியா? விவரிச்சு சொல்லட்டுமா? ஒவ்வொருத்தன் ஒரு சிட்டிங்குக்குன்னு பேசி பணத்தைக் குடுத்துட்டு உள்ளே போவான். முடிச்சுட்டு வெளியே வரமாட்டான். கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துண்டு இன்னொரு சிட்டிங் முடிச்சுட்டுத்தான் வெளியே வருவான். இந்தக் கிழவி கையிலெ முப்பது ரூபாய் கொடுக்கறதுக்குப் பதிலா உள்ளே இருக்கறவ கையிலெ ஒரு பத்தோ பதினைஞ்சோ குடுத்துட்டா அவ வாயை மூடிண்டுருந்துடறா" என்று சௌரிராஜன் விவரமாகச் சொன்னதும் சதீஷ் ஆச்சரியமடைந்தான்.

"செய்யறதே தப்பான காரியம். அதுல இப்படியெல்லாம் வேற மோசமா?"

"ஆனா சாதாரணமா அந்த மாதிரி நடக்காது. இங்கிருக்கிறவங்க எல்லாருமே அந்த விஷயத்துல ரொம்ப நாணயமா நடந்துக்கற பெண்கள்தான். அதுவும் கல்பனா அந்த மாதிரி தப்புத் தண்டா விஷயத்துக்கெல்லாம் போக மாட்டா. ஆனா வர்ற ஆசாமிங்க எல்லாரும் ஒழுங்கா இருக்கணுமே? சில பேர் ரௌடிங்களா இருப்பான். உள்ளே வெச்சு மிரட்டுவான். பொண்ணு பயந்துடுவா. இணங்கிடுவா."

மேற்கொண்டு சதீஷ் ஏதோ கேட்க நினைத்தான். அதற்குள்ளாக கதவு மறுபடியும் திறந்து கொண்டது.

அந்த ஸ்திரீயும் ஒரு ஆணும் கசாமுசா என்று ஹிந்தியில் ஒருவரை யொருவர் திட்டிக்கொண்டு வெளியே வந்தனர்.

அவர்கள் பின்னுலேயே ஒரு பெண் (சோபனுவைப் போலவே) பாவாடையும், பிராவும் மட்டும் அணிந்து வந்தாள். ஆனுல் சோபனுவைப் போல கறுத்த பிரௌன் நிறமல்லாமல் நல்ல இள மஞ்சளும், ரோஜாவும் கலந்தது போன்ற ஒரு கண்ணைக் கவ்வும் நிறம். பாவாடை வயலட் கலரில். உடலின் சிவப்பு வண்ணப் பின்னணியில் அந்த வயலட் கலர் வெகு அழகாகப் பளபளத்துக் கொண்டிருந்ததோடு, சாடின் துணியாதலால் உடலோடு ஒட்டிக் கொண்டு தொடைகளின் செழுமையையும், திரட்சியையும் எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது. பிரா வெள்ளை நிறம். முதுகுப் பக்கம் கொக்கியைப் போடவில்லை போலிருக்கிறது. அதனுல் மார்பகத்தைக் கவ்விக் கொள்ளாமல் போர்வை மாதிரி தொங்கிக் கொண்டிருந்தது.

சண்டை போட்டுக் கொண்டே வெளியே வந்த அந்த ஆள் சினிமாக்களில் வருகிற ரௌடிகள் மாதிரி லுங்கி கட்டிக் கொண்டு நீலக்கலர் குர்த்தா அணிந்திருந்தான். லுங்கியின் கலரைச் சொல்வது கஷ்டம். கிட்டத்தட்ட இருபது கலர்களில் கட்டங்கள் இருந்தன. இருபது கலரோடு அழுக்கு என்னும் ஒரு கலரையும் சேர்த்துக் கொள்ளலாம் என்று சதீஷ் நினைத்துக் கொண்டான். குர்த்தாவின் கைகளை முழங்கை வரை சுருட்டி விட்டுக் கொண்டிருந்தான். கழுத்தில் ஒரு கைக்குட்டை, லுங்கியிலிருந்து கத்தரித்து எடுத்து தைத்தது போல இருந்தது. பரட்டைத்தலை. கண்கள் சிவந்திருந்தன. இவையெல்லாவற்றையும் விட அவனிடம் பார்ப்பவர்களுக்கு அருவருப்பு ஊட்டிக் கொண்டிருந்த அம்சம் அவனது தோலின் நிறம். வெண்குஷ்டம் தாராளமாக முகம் முழுவதும் பரவியிருந்தது.

இவனு இவ்வளவு நேரம் கல்பனுவுடன் இருந்து விட்டு வந்திருக்கிருன்? அந்தப் பெண்கள் பனுவாகத் தான் இருக்க வேண்டுமென்று சதீஷ் ஊகித்து சௌரிராஜனைப் பார்த்த போது அவன் எண்ணத்தைப் புரிந்து கொண்டவர் போல அவர் 'ஆமாம்' என்று தலையசைத்தார்.

சௌரிராஜன் சொன்ன ஹைக்ளாஸ் இவ்வளவுதானு? இவனைப் போன்றவர்களுடன் படுத்திருந்து விட்டு வரும் கல்பனுவையா அவன் இப்போது போய் அணைத்துக் கொள்ள வேண்டும்?

சௌரிராஜன் மெதுவாக சதீஷின் காதில் கிசுகிசுத்தார். "இவன் இந்தப் பேட்டையில் பெரிய ரௌடி. தாதா என்று தான் இவனைக் கூப்பிடுவாங்க. இவனை விரோதிச்சுகிட்டு யாரும் இங்கே தொழில் நடத்த முடியாது."

அவனுக்கு வயது முப்பத்தைந்துக்குள் தான் இருக்கும் என்று தோன்றியது.

சிறிது நேரம் கத்திவிட்டு அவன் போய்விட்டான்.

"சோபனுவும் இப்ப வந்துடுவா. உங்க ஃப்ரெண்டு என்ன சொல்ருரு? கல்பனுவே வேணுமா, இல்லே சோபனுவையும் பார்க்கிருரா?" என்று அவள் கேட்டாள்.

"என்ன சொல்றிங்க?" என்று சௌரிராஜன் கேள்வியை அவனிடம் திருப்பினுர்.

"இவளே இருக்கட்டும். எனக்கு

# அறிமுகம்

# சிற்பம்

## கையெழுத்துப் பத்திரிகை

மொத்தம் நூற்றி முப்பத்தொன்பது பக்கங்களைக் கொண்ட 'சிற்பம்' இதழின் தீபாவளி மலரைப் பார்க்கும் போது பிரமிப்பாகத்தான் இருக்கிறது. ஒவ்வொரு பக்கத்திலும் நேர்த்தியான ஆர்ட், மிக நுணுக்கமாய் செயல்பட்டிருக்கும் விதம், அழகான கையெழுத்து... அத்தனையும் நிஜமான பாராட்டுக்குரியவை.

எல்லாரும் ஒண்ணுதான்" என்றான்.

"சரி. அவகிட்ட முப்பது ரூபாய் குடுத்துடுங்கோ" என்றார்.

சதீஷ் மூன்று பத்து ரூபாய் நோட்டுக்களை அந்த ஸ்திரீயின் கையில் வைத்தான்.

"ஜாயியே" என்றாள் ஸ்திரீ.

"ஆயியே" என்று கூப்பிட்டாள் கல்பனா.

"போங்கோ. விஷ் யூ தி பெஸ்ட் ஆஃப் லக். நீங்க எல்லாம் முடிஞ்சப்புறம் உங்க இஷ்டப்படி அவளுக்கு ரெண்டோ மூணோ டிப்ஸ் கொடுங்கோ, போறும். வேறொண்ணும் குடுக்க வேண்டியதில்லே. நா இங்கேயே வெய்ட் பண்ணிண்டிருக்கேன்" என்றார் சௌரிராஜன்.

கல்பனாவைத் தொடர்ந்து பின் சென்றான் சதீஷ்.

ஒரு அறைக்குள் சென்று சதீஷும் உள்ளே வந்ததும் கதவைச் சாத்தினாள்.

மின் விசிறியைச் சுழல விட்டாள்.

பிராவைக் கழற்றி எறிந்தாள்.

பாவாடையை அவிழ்த்து வீசினாள்.

பிறந்த மேனியாய் நின்று அவனை நோக்கி முறுவலித்தாள்.

சதீஷ் பிரமை பிடித்தவன் போல நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

"ஆயியே" என்று அழைத்தபடி கட்டிலில் மல்லாக்காகப் படுத்துக் கொண்டாள்.

அப்படியும் சதீஷ் அவளை நோக்கி முன்னேறவில்லை. ஆனால் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தான் தாலி கட்டிய மனைவி ரேகா— பத்தொன்பது வருடங்கள் தன்னோடு வாழ்ந்துவிட்ட ரேகா—அவள் கூட இப்படித் தானாக, ஊக்குதல் இல்லாமல், வேண்டுதல் இல்லாமல் தன் உடைகளைக் களைந்ததில்லை.

இவளோ?

இவ்வளவு மலிவா ஒரு பெண்ணின் உடல்?

ஆம், பெண்ணின் உடல் மலிவு தான்...!

ஆனால் அவள் உள்ளத்தை அடைய வேண்டுமானால் இவ்வளவு சுலபத்தில் அடைந்து விட முடியாது. முப்பது ரூபாய்க்கு அது கிடைக்காது.

சதீஷ் அடி எடுத்து வைத்தான்.

கட்டிலின் அருகில் சென்று நின்றான்.

"என்ன யோசிக்கிறிங்க?" என்றாள்.

"டிரஸ் கழட்டலியா?" என்று கேட்டாள்.

"அப்புறம் டயம் ஆயிடும். அக்கா மறுபடியும் கோபிச்சுக்குவா. திட்டுவா ஜல்தீ கரோ" என்றாள்.

"இல்லாட்டி நான் கழட்டி விடட்டுமா?" என்று கேட்டபடி எழுந்து வந்து சதீஷின் பெல்ட்டின் மீது கை வைத்தாள்.

"நை நை" என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டான் சதீஷ்.

(தொடரும்)

இத்தனைக்கு மிடையே படைப்பு விஷயங்களும் போட்டி போடுகின்றன. கவிதைகளும், கட்டுரைகளும் பிரகாசமான வார்த்தைச் சரங்களாக அமைந்திருக்கின்றன.

பெரியார் மாவட்டம் பங்களாபுதூர் என்கிற கிராமத்தில் வடிக்கப்பட்டு வருகிறது இந்த 'சிற்பம்.' இந்த சிற்பம் வடிக்கும் பணியில் பதின்மூன்று இளைஞர்கள் பங்கேற்று அந்தக் கிராமத்திற்கு பெருமை சேர்த்திருக்கிறார்கள்!

இதழின் ஆசிரியர் பா.மனோகரனுக்கும், ஓவியர் வே.பகவதிராஜுக்கும் ஸ்பெஷல் பாராட்டு என்றாலும் ஆசிரியர் குழுவிற்கும் சேர்த்தே அந்தப் பாராட்டு! தொடரட்டும் சிற்பத்தின் ஆர்வப்பணி. இது காலத்தை வெல்லும் காந்தாரச் சிற்பம்!



# ஜெர்மன் தொழுநோய் மருத்துவ

'நிரிமால்டிஸ்' என்ற பெயரில் சென்னை செனாய் நகரில் தொழுநோய் மருத்துவ மனை ஒன்றுள்ளது. இது ஜெர்மன் நாட்டு மக்களின் நன்கொடையைப் பெற்று ஆரம்பிக்கப்பட்ட ஜெர்மன் தொழுநோய் நிவாரண கழகத்தின் உதவி கொண்டு இயங்கி வருகிறது. இதன் இயக்குனர் திருமதி சிபிலி கெர்ஷன் என்னும் ஜெர்மானிய மாது.

சென்னையின் வட பகுதியில் வாழும் சுமார் 16 லட்சம் மக்களைக் கொண்ட நகர்ப்புறத்தில், குடிசைக் கணக்கெடுப்பு, பள்ளிக் கணக்கெடுப்பு, சுகாதாரக் கல்வி என்று மூன்று முறைகளின் மூலம் சுமார் 20,000க்கு மேற்பட்ட தொழு நோயாளிகளை இம் மருத்துவ மனை கண்டுபிடித்துள்ளது. இதில் 5,000 பேர் பூரணமாக குணமாகி விட்டனர். மீதம் உள்ளோர் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

வட சென்னையில் 22 இடங்களில் வெளிப்புற மருத்துவப் பகுதிகளை இது நிறுவியுள்ளது.

தொழுநோய் பரம்பரை வியாதியல்ல. பரத்தையரால் வரும் வியாதியல்ல. கர்ம வியாதியல்ல. கடவுளின் சாபத்தால் வருவதுமல்ல இது குணப்படுத்த முடியாத ஒன்றுமல்ல... என்று சுகாதாரக் கல்வித் திட்டத்தின் கீழ் பிரச்சாரமும் செய்கிறது.

நோயை குணமாக்குவதோடு விட்டு விடாமல் அவர்கள் மறுவாழ்வு பெறவும் பலதிட்டங்களின் மூலம் உதவுகிறது. வங்கியின் மூலம் கடன் வாங்கி தரவும் முயலுகிறது.

நம்பிக்கை ராஜுக்கு வயது 42. வில்லிவாக்கம் தொழு நோய் காலனியில் வசித்து வருகிறார். இம்மருத்துவ மனையின் மறுவாழ்வுத் திட்டத்தின் கீழ் பயனடைந்தவர் இவர். இவருக்கு 1,000 ரூபாய் வட்டியில்லாத கடனுக தரப்பட்டது. நம்பிக்கைராஜ் பாய் முடையும் தொழிலை மேற்கொண்டார். தொழு நோயால் பாதிக்கப்படாத இவரது மனைவியும் இவருக்கு உறுதுணையாக உள்ளார். தினமும் 15 ரூபாய் சம்பாதிக்கிறார். மாதம் 50 ரூபாய் வீதம் கடனை திரும்ப செலுத்தி வருகிறார்.

பாபுவுக்கு 23 வயதாகிறது. திருமணமாகாதவர். தனது தாயாரோடு அமைந்தகரையில் ஒரு குடிசையில் வாழ்ந்து வருகிறார். நோயால் பாதிக்கப்பட்ட இவர் இம்மருத்துவமனையில் சிகிச்சை பெற்று குணமானார். தனது பழைய சைக்கிள் ரிப்பேரிங் தொழிலை தொடர பாபு விரும்பினார். தேசியமயமாக்கப்பட்ட வங்கி ஒன்றின் மூலம் இவருக்கு 1,500 ரூபாய் கடனுக பெற்றுத் தந்தது இம்மருத்துவமனை. பாபு சந்தோஷமாக தொழில் புரிந்து வருகிறார்.

—இப்படி சுமார் 500க்கு மேற்பட்டவர்கள் இதுவரை பயன் அடைந்திருக்கிறார்கள்.



11

# ரேகா-சதீஷ்-ராஜி

ஹேமா ஆனந்ததீர்த்தன்

## "ஏன்?"

சதீஷ் அவளுக்கு என்ன பதில் சொல்லுவான்? எந்த மொழியில் பதில் சொல்லுவான்?

கண்ணெதிரே அழகுப் பொட்டகமாக, கவர்ச்சிக் குவியலாக நிற்கும் கல்பனா அவன் உடலில் ஏற்படுத்த வேண்டிய விழிப்பை ஏற்படுத்தியிருக்கவில்லையே?

ரேகாவை விட, ராஜியைவிட இவள் இளையவள். அவர்கள் இருவருக்கும் இல்லாத அங்க லட்சணங்கள் இவளுக்கு இருக்கின்றன.

தன்னைத் தவிர வேறு ஆண் தீண்டாதவள் ரேகா. ராஜியைப்பற்றித் தனக்குச் சரியாகத் தெரியாவிட்டாலும் நிச்சயமாக இந்தக் கல்பனாவைப் போலப் பலர் தீண்டிய பாவை அல்ல அவள் இப்படியிருந்தும் அவர்கள் இருவருக்கும் இல்லாத ஈர்ப்பு சக்தி இவளுக்கு இருக்கிறது. காரணம் இவள் வயது. இவள் இளமை.

இவ்வளவையும் அவன் அறிவு தான் அறிந்ததே ஒழிய அவன் உணர்ச்சிகள் அறிய முடியவில்லையே?

பார்வையினால் கிளறப்படாத அவன் உணர்ச்சிகள் ஸ்பரிசத்தினால் கிளறப்படும் என்பது என்ன நிச்சயம்?

அவளைத் தொட்ட பிறகும் அவனில் கிளர்ச்சி ஏதும் இல்லாவிட்டால் எவ்வளவு அவமானம்?

மனைவியிடமே அவமானப்பட சகிக்காத அவன் இந்தப் பெண்ணிடம் வந்து அவமானப்பட நேர்ந்தால் அதைவிட வேறு சித்திரவதை என்ன இருக்க முடியும்?

"என்ன யோசிக்கிறீங்க? எதுக்காக வந்திங்க காசு குடுத்துட்டு?" என்று கேட்டாள் கல்பனா, ஹிந்தியில்.

"ஹிந்தி அச்சா நஹீம் மாலும்."

"வேறு என்ன பாஷை தெரியும்?" என்று அவள் ஹிந்தியில் கேட்டாள். அது அவனுக்குப் புரிந்தது.

"இங்கிலீஷ், தமிழ்."

"அண்டு குண்டு?" என்று கேட்டு சிரித்தாள்.

தமிழை "அண்டு குண்டு" என்று மராட்டிக்காரர்கள் கேலி செய்வது ஞாபகம் வந்து அவனுக்கு எரிச்சல் வந்தது. ஆனால் தன் எரிச்சலை எந்த விதத்திலும் காட்டக் கூடிய நிலையில் அவன் அப்போது இல்லாத

தால் அந்த எரிச்சலை கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டான்.

தான் அவ்வாறு கேலி செய்வதை சதீஷ் ரசிக்கவில்லை என்பதை அவள் புரிந்து கொண்டு விட்டாள் போலிருக்கிறது.

"மாஃப் கீஜியே" என்ருள்.

"நீ உட்கார்" என்று தமிழிலே சொல்லி சைகையும் காட்டினுன்.

"நீங்களும் உட்காருங்கள்" என்று ஹிந்தியில் சொல்லியபடி அவனை இழுத்துக் கட்டிலில் உட்கார வைத்துத் தானும் அவனுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டாள்.

"நீ டிரஸ் போட்டுக்கோ"—சைகையாலேயே பேசினுன்.

"பரவாயில்லை, இப்படியே இருக்கிறேன்" அவளும் சைகையிலேயே பதில் சொன்ருள்.

"நான் இங்கிலீஷ்லெ பேசினு நீ புரிஞ்சுப்பியா?" என்று அவன் ஆங்கிலத்திலேயே கேட்டான்.

"புரிஞ்சுப்பேன். ஆனு பதில் சொல்ல வராது. ஹிந்தியிலேதான் பதில் சொல்லமுடியும்."

"பரவாயில்லே. என்ருலெ அதைப் புரிஞ்சுக்க முடியும்."

"அப்ப பேசிகிட்டிருக்கத்தான் வந்திங்களா?" என்று கேட்டுக் கலகல வென்று சிரித்தாள்.

"ஆமா. அதுக்காகத்தான் வந்தேன்."

"ஆச்சரியம்தான், சாதாரணமா இங்கே பாஷைப் பிரச்னையே வராது, ஏன்னு இங்கே வர்றவங்க பேசவே மாட்டாங்க. இங்கே பேச்செல்லாம் ஒரே பாஷையிலெதான். மௌன பாஷை." என்று கூறி மறுபடியும் சிரித்தாள்.

வார்த்தைக்கு வார்த்தை எப்படி இவளால் இப்படிச் சிரிக்க முடிகிறது?

"என்னைப் போல யாருமே வந்திருக்க மாட்டாங்க, இல்லே?"

"நீங்க என்ன வேலை செய்யறிங்க?"

"ஏன்?"

"ஏதாவது பேப்பர்லே கதை கிதை எழுதறவங்களா?"

"இல்லியே? ஏன் அப்படி கேக்கறே?"

"நல்ல வேளை, நீங்க அப்படிப் பட்டவரா இருந்தா உங்களை உடனே வெளியே அனுப்பிடுவேன்."

"எதுக்காக உனக்கு கதை எழுதறவங்க மேல அவ்வளவு கோபம்?"

"பின்னெ என்னங்க? இங்கே வந்தா வந்த காரியத்தைப் பார்த்துட்டுப் போகவேண்டியதுதானே? ரெண்டு வாட்டி அந்த மாதிரி கதை எழுதறவங்க இங்கே வந்து உயிரை எடுத்துட்டாங்க. ஒருத்தர் கேரளாவிலேர்ந்து வந்தாரு. இன்னொருத்தர் உங்களைப் போல தமிழ் பேசறவரு. என்னைப் பேட்டி கண்டு அவரு என் கதையைப் பத்திரிகையிலெ எழுதணுமாம். என்னென்னெல்லாம் கேக்க ஆரம்பிச்சுட்டாருங்கறிங்க? முதல்ல சாதாரணமா பேரு, ஊரு, வயசுன்னு கேட்டுட்டு அப்புறம் நீ எப்படி இந்தத் தொழிலுக்கு வந்தே, இதுக்கு வர்றதுக்கு முன்னுடி உனக்கு கல்யாணம் ஆயிருந்ததா, இந்தத் தொழில் உனக்குப் பிடிச்சிருக்கா, எவ்வளவு வரும்படி வரும், ஒரு நாளைக்கு எவ்வளவு பேர் வருவாங்க—இப்படி கன்னு பின்னுன்னு கேக்க ஆரம்பிச்சுட்டாரு."

"நான் அப்படியெல்லாம் ஒண்ணும் கேட்க மாட்டேன். நான் பத்திரிகைக்காரன் அல்ல."

"நல்ல வேளை!"

சௌரிராஜன் இவள் தருகிற கோ ஆப்ரேஷனைப் பற்றிப் பேசினுரே, அது சட்டென்று சதீஷுக்கு ஞாபகம் வந்தது. சௌரிராஜனுடன் அவள் படுத்துக் கொண்டிருக்கிருளா என்று கேட்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. அடுத்த விணுடியே அப்படிக் கேட்பது தவறென்றும் பட்டது. கேட்பதானுல் அந்தக் கேள்வியை சௌரிராஜனிடமே கேட்டிருக்க வேண்டும். அவரிடமே கேட்கத் துணிவில்லாத அந்தக் கேள்வியை இவளிடம் எப்படிக் கேட்க முடியும்? அதுவும் அவள் இப்பொழுதுதான் அந்த மாதிரிக் கேள்விகளின் மேல் தனக்குள்ள வெறுப்பை வெளிப்படையாகச் சொல்லியிருக்கும்போது எப்படிக் கேட்க முடியும்?

"பத்திரிகைக்காரங்கதான் அப்படிப் பேசறதுக்காக வருவாங்க.

நீங்க பத்திரிகை ஒண்ணுக்கும் சேர்ந்த வங்க இல்லேன்னு என்னோட என்ன பேசறதுக்கு இருக்குது?'' என்று கல்பனா கேட்டாள்

சதீஷ், தான் சரியான இக்கட்டில் சிக்கிக் கொண்டதை உணர்ந்தான்.

தன் உடைகளைக் களைவதைத் தவிர்ப்பதற்காக ஏதோ ஒரு பொய்யைச் சொல்லப்போக இப்பொழுது அதை ஆதரித்துப் பல பொய்கள் சொல்ல வேண்டி வந்து விட்டதை நினைத்தான். அந்த மாதிரி நினைத்த நேரத்தில் அழகாக நம்பும்படியாக பொய்களை ஜோடித்துச் சொல்லும் கலை அவனுக்குக் கை வந்ததல்ல. எப்படிச் சமாளிப்ப தென்று தெரியாமல் திணறினான். மேலும் பொய் சொல்வதென்பதே அவனுக்குப் பிடிக்காத ஒரு விஷயம். ஆனால் இந்த நிலையில் வேறு விதி இல்லை. எதையாவது பொய்யைச் சொல்லியேதான் ஆகவேண்டும்.



"என்னை இங்கே கூட்டிக் கொண்டு வந்தாரே சௌரிராஜன், அவரை உனக்கு நன்றாகத் தெரியுமா?" என்று கேட்டான். வேறு என்ன பேசுவது என்று தெரியாமல், யோசிக்கும் வேளையில், எதையாவது பேச வேண்டுமே என்பதற்காக அவன் கேட்ட கேள்வி அது.

"அவர் பேரென்ன சொன்னீங்க!"

"சௌரிராஜன்"

"அதுவே எனக்குத் தெரியாது. எங்களுக்கெல்லாம் தெரிந்தது அவர் பேர் 'ராஜு' என்றுதான். ஆனால் அவரை நன்றாகத் தெரியும்" என்றாள்.

"என்னோடு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருப்பதில் உனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லியே?",

"இல்லே. வேலே இல்லாமல் சம்பாதிக்கறதுக்கு ஒரு சான்ஸ் கிடைச்சதேன்னு சந்தோஷம்தான். ஆனால் என்னைப்பத்திப் பேசக்கூடாது."

"என்னைப் பத்திப் பேசலாம் இல்லியா?"

"ஓ. தாராளமா."

"ஆனா, நீ எனக்கு ஒரு வாக்குக் குடுக்கணும்."

"என்ன?"

"நான் இங்கே, மத்தவங்களைப் போல உன்னோட நடந்துக்கல்லேங்கறதையோ, சும்மா பேசிகிட்டிருந்தேன் கறதையோ, என்ன பேசினேன் கறதையோ, நீ யார் கிட்டயும்—முக்கியமா அந்த சௌரிராஜன் கிட்ட—சொல்லக்கூடாது."

"சரி. அதுல என்ன கஷ்டம்?"

"அவரா உங்ககிட்ட எதாவது கேட்டாக்கூட நீ உண்மையைச் சொல்லக்கூடாது."

"சொல்லல்லே."

"நான் இங்கே வந்ததுக்குக் காரணம் என்னை நானே டெஸ்ட் செய்துக்கறதுக்குத்தான்."

"அப்படியா?"

"என்ன டெஸ்டுன்னு நீ கேக்காமயே நானே சொல்றேன். என்னுடைய மனோதிடத்தைத்தான் டெஸ்ட் செய்ய வந்தேன்."

"புரியும்படியா சொல்லுங்களேன்."

"இப்ப நீ இப்படி உடம்புல துணியே இல்லாம இருக்கியே. இதே மாதிரி உன்னைப் பக்கத்துல வெச்சுண்டு பத்து நிமிஷம் பேசணும். ஆனா உன்னைத் தொடக்கூடாது. வேற ஒண்ணும் பண்ணக்கூடாது. அது என்னால முடியுமா? என் மனசை நான் அடக்கி வெச்சுக்க முடியுமாங்கறது தான் டெஸ்ட்."

"எதுக்காக இந்த டெஸ்ட்டு?"

"சும்மாத்தான். எனக்கு இந்த மாதிரி சில எண்ணங்கள் அடிக்கடி தோன்றும். இதெல்லாம் ஒரு யோகாசனப்பயிற்சி மாதிரி. வீட்டிலே என்னிக்காவது எனக்குப் பிடிச்ச நல்ல சமையலா பண்ணியிருப்பாங்க. அன்னிக்கு இலை முன்னாலெ உக்காந்து எல்லாம் பரிமாறனதுக்கப்புறம் 'இன்னிக்கு நான் சாப்பிடப் போறதில்லே, விரதம்' அப்படின்னு சொல்லிட்டு எழுந்துடுவேன். வீட்டிலெ இருக்கறவங்கள்ளாம் பரிதாபப்படுவாங்க, திட்டுவாங்க, கேலி செய்வாங்க. ஒண்ணையும் காதிலெ போட்டுக்க மாட்டேன். மறுநாளைக்கித்தான் சாப்பிடுவேன். அதே மாதிரி சினிமா பார்க்கறதுக்காகப் போய் உக்காருவேன். நாலு நாளைக்கு முன்னாடியே அதுக்கு ரிசர்வ் பண்ணியிருப்பேன். ஹவுஸ் ஃபுல்லா இருக்கும். சினிமா ஆரம்பிக்கறதுக்கு அஞ்சு நிமிஷம் இருக்கறப்ப எழுந்து வெளியே வந்து என் அவுட்பாஸை வெளியே நிக்கற யாருக்காவது குடுத்துட்டு வீட்டுக்குப் போயிடுவேன்."

"வேடிக்கையா இருக்கே. இந்த மாதிரி ஆளை நான் பார்த்ததே இல்லே." என்று கல்பனா முறுவலித்தாள்.

சதீஷுக்கு தன் வார்த்தைகள் தனக்கே வியப்பூட்டுவனவாக இருந்தன. எப்படி அவனுக்கு இந்த மாதிரி ஒரு கற்பனை தோன்றியது என்று அவனாலேயே நம்ப முடியவில்லை. அந்த சமயத்தில் அவனுக்குத் தனது எழுத்தாள நண்பன் வினயா வாசுதேவனின் நினைவு வந்தது. அவன் சதீஷிடம் ஒரு முறை பேச்சு வாக்கில் சொல்லியிருந்தான் 'ஒன்றை நினைத்துக் கொண்டு எழுத உட்காருவேன். எழுதிக் கொண்டே இருக்கும் போதே நான் கனவில்கூட நினைத்திராத ஒரு புது ஐடியா தோன்றும். அதை எழுதி

விடுவேன்' என்று அந்த மாதிரி தனக்கும் திடீரென்று இப்படி ஒரு கற்பனை உதித்தது அதிசயம்தான்.

"யார் கிட்டயாவது இந்த மாதிரி செஞ்சு காட்டறேன்னு பந்தயம் போட்டிருக்கிங்களா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. பந்தயம் போட்டிருந்தா அவனையும் இங்கே கூட்டிண்டு வரணுமே? இது எனக்கு நானே ஏற்படுத்திக்கற ஒரு பந்தயம்னு வேணா வெச்சுக்கலாம்."

"நான் ஒண்ணு சொல்றேன், கேக்கறிங்களா?" என்று கல்பனா சிரித்தபடியே கேட்டாள்.

"என்ன?"

"இப்ப நான் இப்படி இருக்கேன். ஆனா நீங்க முழுக்க முழுக்க டிரஸ் போட்டிருக்கிங்க. அதுல என்ன பிரயோஜனம்? நீங்களும் என்னைப்போல இருக்கணும். நாம ஒருத்தரை ஒருத்தர் தொடணும். அப்பவும் நீங்க மனசைத் தளரவிடாம, சலனப்படாம இருக்க முடியுதான்னு பார்க்கணும். முடியுமா?"

சதீஸுக்கு எதிர் பாராதவிதமாக ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்து விட்டதை அவன் அறிந்து கொண்டான். தன் மானத்தையும் காப்பாற்றிக் கொண்டு, தான் இங்கே வந்த தன் உண்மையான நோக்கத்தையும் நிறைவேற்றிக் கொள்ள ஒரு அருமையான வாய்ப்புக் கிடைத்தது.

அவள் சொல்கிறபடியே தானும் ஆடைகளை அகற்றி விட்டு அவளைத் தொட்டும் அவள் தன்னைத் தொடவும் அனுமதிக்க வேண்டியது. அப்படிச் செய்யும்போது, அதிர்ஷ்டவசமாகத் தன் குறை நீங்கி தான் கல்பனாவை அனுபவிக்க முடியுமென்ற நிலை ஏற்பட்டால் அதுதான் கற்பனை செய்து கொண்ட விரதத்திற்குத் தோல்வி போல் தோன்றினாலும் உண்மையில் அவனுக்கு வெற்றி. அப்படியில்லாமல் துரதிர்ஷ்டம் அவனைத் தொடர்ந்து அவனது சென்ற ஒரு வாரத்திய நிலையில் ஏதும் மாறுதல் இல்லையென்று வந்தால் அது அவனுக்குப் பெரும் தோல்வியென்றாலும் அவன் மானம் போய்விடாது. தான் கற்பனை செய்து கொண்ட விரதத்தில் அவன் மாபெரும் வெற்றியடைந்து விட்டதாக. பெரும் யோகியாக அவனை கல்பனா கருதுவாள். இந்த வயதில் இத்தகைய புலனடக்கமா என்று வியப்படைவாள்.

பூமியில் தெரிக்கும் புதுஎழிலோ — இது
போதையில் பிறந்த மதுக்குடமோ
பிரமனின் படைப்பில் புதுக்கவியோ - இது
சரசக் கலையோ சதைக்கனியோ...

—மாதவி தோற்றம்

"நீதிதேவன் மயக்கம்"

எனவே, எப்படியாகுலும் அவன் வெற்றி— தோல்வி இரண்டு உணர்ச்சிகளோடும் ஆனால் தன் ரகசியத்தைக் காப்பாற்றிக் கொண்ட மகிழ்ச்சியோடும் அங்கிருந்து வெளியேறலாம்.

அவன் சொன்னதற்கு உடனே ஒப்புக்கொண்டு விடாமல் சிறிது பிகு செய்ய வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது.

"ஐயையோ. அது நெருப்புல கையை விட்டா சுடுமா சுடாதான்னு பார்க்கருப்பலெ ஆச்சே."

"அதனாலே என்ன? நீங்க இந்த டெஸ்ட்டை ஒரு பலப்பரீட்சை போல உங்க மனசின் கட்டுப்பாட்டு சக்தியை அளந்து பார்ப்பதற்காகத் தானே செய்யறிங்க? இதொன்னும் விரதமோ, தெய்வத்திற்கு வேண்டுதலோ இல்லையே. தோற்றுப் போனாலும் சுகம் கிடைக்குமே." என்றாள்.

"அது கரெக்ட். இன்னிக்கு நான் என் டெஸ்ட்டுலெ வெற்றியடைஞ்சுட்டா, நாளைக்கு கண்டிப்பா இங்கே வரத்தான் போறேன். உன்னை அனுபவிக்கத்தான் போறேன்"

"அப்ப, பார்த்துடுவமா?"

"ஓ. கே. ஐ எம் ரெடி." என்று சதீஷ் எழுந்து நின்றான்.

கல்பனா அவன் பெல்ட்டை அவிழ்க்கத் தொடங்கினாள்.

(தொடரும்)

## காற்றில் இருந்து மின்சாரம்

தண்ணீர், அனல், அணு ஆகியவற்றால் மின்சாரம் தயாரிக்கப்படுகிறதல்லவா?

இப்போது தரைகை வீசும் காற்றிலிருந்துகூட மின்சாரம் தயாரிக்கப்படுகிறது. இதற்காக உயரமான கம்பத்தில் காற்றாடி அமைக்கப்பட்டு மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது.

காற்றின் வேகம் விநாடிக்கு 60 மீட்டருக்கு அதிகம் இருந்தால் காற்றாடியின் இறக்கைகள் ஒடிந்து விழுந்து விடும். இதைத் தடுக்கும் வகையில் ரஷ்யாவில் உறுதியான காற்றாடிகள் தயாரிக்கப்படுகின்றன. படு வேகமாக வீசும் காற்றைக்கூட இந்தக் காற்றாடிகள் நன்றாக சமாளிக்கின்றன. அதோடு 40 ஆயிரம் கிலோ வாட் மின்சாரத்தை தயாரிக்கும் உற்பத்தித் திறனும் இதற்கு உண்டு.

ரஷ்யாவில் வடக்கு கடற்கரைப் பகுதி, கருங்கடல், காஸ்பியன் கடல், பால்டிக் கடல் பகுதிகளில் காற்று வீசும் சூழ்நிலை அதிகம் உள்ளது. எனவே இந்தப் பகுதியில் புதிய காற்றாடியைப் பயன்படுத்தி மின்சார உற்பத்தியை அதிகரிக்க ரஷ்யா திட்டமிட்டுள்ளது.

தூத்துக்குடி கடலோரப் பகுதியில் காற்றின் சக்தி மணி ஒன்றுக்கு 18 முதல் 106 கி. மீ. விகிதத்தில் வீசுகிறது. இந்தப் பகுதியில் காற்றிலிருந்து மின் சக்தியை உற்பத்தி செய்ய திட்டமிட்டால் என்ன?

—இரணியல் 'கலை'



## தாய் இதழ் விற்பனையாளர் வரிசை

### வி. ஜெயராமன்

கூடலூர் தாய் இதழ் விற்பனையாளர் ஜெயராமனுக்கு இத்துறையில் இருபத்தைந்து ஆண்டுகள் அனுபவம் இருக்கிறது. தனது முக்கியத் தொழிலாக இதையே கொண்டிருக்கிறார். சீரிய வினியோகத்தாலும், நல்ல விளம்பர முறையாலும் தாய் இதழ் விற்பனையை கணிசமான அளவுக்கு உயர்த்தி இருக்கிறார். நகரின் மையப் பகுதியில் கடை உள்ளதும், பகலிரவு இருபோதும் கடை திறந்து இருப்பதும் விற்பனை உயர்வுக்கு ஒரு காரணம் என்கிறார். அயராத உழைப்புக்காரரான இவரோடு கந்தசாமி, செல்வம், ஞானமணி ஆகியோர் பக்கபலமாக இருந்து விற்பனையில் பெரிதும் அக்கறை காட்டி செயல்படுகிறார்கள். பல முக்கிய வாசகர்களிடம் விசாரித்து குறை நிறை பற்றி அலுவலகத்துக்கு அடிக்கடி கடிதமும் எழுதுகிறார். தாய் இதழுக்கு சந்தா சேகரிப்பதிலும் இவரே முன்னிலை வகிக்கிறார். பணி தொடரட்டும். வாழ்க, வளர்க.

ஹேமா ஆனந்ததீர்த்தன்

# ரேகா சதீஷ் ராஜி

## 19

பெல்ட், பாண்ட், ஷர்ட், பனியன் என்று ஒவ்வொன்ருக கல்பனு வால் அவிழ்க்கப்பட்டு அறையின் ஒரு மூலையில் விசிறி எறியப்பட்டன.

ஜட்டி மாத்திரம் பாக்கி இருந்தது.

கல்பனு அவனைக் குனிந்து பார்த்துச் சிரித்தாள்.

அவள் எதற்காகச் சிரிக்கிருள் என்று அவனுக்குச் சந்தேகம் எழுந்தது.

அன்று ரேகா அவனை அந்த நிலையில் பார்த்து விட்டுத் தானே சொன்ருள், நீங்க இனிமே ஜட்டி போடக்கூடாது என்று? இவளும் அப்படி நினைத்துச் சிரிக்கிருளா அல்லது...

"ஏன் சிரிக்கிறே?"

"இது வரையிலும் உங்களுக்கு—அதாவது உங்க விரதத்திற்கு—வெற்றி தான்" என்று கூறி சிரித்தாள்.

சதீஷால் அவள் சிரிப்பைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தன்னுடைய உண்மை நிலையை அவள் தெரிந்து கொண்டு விட்டாளோ, தன்னுடைய விரதம் கிரதம் என்பதெல்லாம் வெறும் புளுகு என்பதைப் புரிந்து கொண்டு விட்டிருப்பாளோ என்று அவனுக்குப் பயம் தோன்றியது.

இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதை தான். ஆனுல் ஆபாசக் கதை யல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.

—ஹேமா ஆனந்ததீர்த்தன்.

"ஆனு உண்மையான டெஸ்ட்டு இனிமேல் தானே இருக்கு" என்று கூறி அவனது ஜட்டியையும் 'லபக்' கென்று இழுத்து முழங்காலுக்குக் கீழ் வரையில் கொண்டு வந்து விட்டாள்.

சதீஷ் ஜட்டியை உதறி எறிந்து விட்டு உள்ளத்தில் தகிக்கும் ஏமாற்றத்தை சகிக்க முடியாதவனுக நின்ருன்.

"தேவலையே, நல்ல மன சுக் கட்டுப்பாடு இருக்கே உங்களுக்கு" என்ருள் கல்பனு.

திடீரென்று சதீஷுக்கு துப்பறியும் சாம்புவின் ஞாபகம் வந்தது. அந்த சாம்புவின் நிலையில் இப்போது, தான் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. குருட்டாம் போக்கில் அந்த சாம்பு அசட்டுத்தனமாக எதையோ செய்ய அதன் மூலம் ஒரு பெரிய திருட்டு அல்லது கொலைக் குற்றத்தின் துப்பு துலங்குவதும் அதற்காக அவன் பாராட்டையும், பரிசுகளையும் பெறுவது போல பல கதைகளை தேவன் எழுதி அந்த அசடை தமிழ் இலக்கியத்தில் ஒரு அமர பாத்திரமாக்கி விட்டிருந்தார்.



டைரக்டர் மகேந்திரனின் சமீப கால தோல்விகள் அவருக்கு மன சஞ்சலம் தந்திருக்க வேண்டும். கவலையை மறக்க மிதம் மிஞ்சி குடிக்கிறாராம். இ. ஓ. பி. கல்சுரல் ஃபெஸ்டிவலில் கலந்து கொள்ளச் சென்றவரின் நிதானம் பிறழ்ந்து போனதாம்.

தன்னுடைய இயலாமைக்கு இன்று மன உறுதி, கட்டுப்பாடு என்கிற பாராட்டு!

உள்ளே தோல்வி, அவமானம், ஏமாற்றம் எல்லாவற்றையும் விழுங்கியபடி வெளியே அவன் பாராட்டை ஏற்றுக் கொள்பவன் போல முறுவலித்தான். அந்தச் சிரிப்பு தன்னைக் காட்டிக் கொடுத்து விடாமலிருக்க வேண்டுமே என்றும் ஒரு சிறு உதறல் அவனை அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

"உங்க வெற்றி என்னுடைய தோல்வி" என்றாள் கல்பனா.

"ஏன்?"

"பின்னே? என்னைப் பார்த்தும், நான் உங்களைத் தொட்டும் நீங்க கொஞ்சம் கூட . மனசை இளக விடலேன்னா அது எனக்குத் தோல்வி தானே?"

"இன்னிக்கு நீ இந்தத் தோல்வியைப் பொறுத்துக்கோ கல்பனா. நாளைக்கு மறுபடியும் வரேன். அப்ப நான் உங்கிட்ட தோத்துப் போறதுக்கு ரெடி" என்று மனமறிந்து ஒரு பொய்யைச் சொன்னான். அப்படி அவளிடம் சொல்லும்போதே, நாளைக்கு, இந்த நேரத்திற்கு நான் சென்னை செல்லும் விமானத்தில் இருக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

"அது முடியாது. இதை நான் ஒரு சவாலாக எடுத்துக்கப் போறேன். பார்த்துடலாம் எனக்காச்சு, உங்களுக்காச்சு. இது எனக்கும் ஒரு புது அனுபவம். என்னமாவது பண்ணி நான் உங்க விரதத்தை பங்கம் பண்ணாம இருக்கப் போறதில்லே" என்று கூறியவள் — ஆவேசம் வந்தவள் போல சதீஷை இறுக அணைத்துக் கொண்டு வெறியுடன் அவன் உதடுகளில் அழுத்தி முத்தமிட்டு .. அழுத்திய உதடுகளை எடுக்க மனமில்லாதவளாக அப்படியே மயங்கிக் கிடந்தாள்.

நீ வெற்றியடைய வேண்டுமென்றுதான் நானும் உள்ளூர விரும்புகிறேன், வேண்டுகிறேன் கல்பனா. உன் வெற்றி உண்மையிலேயே என்னுடைய வெற்றியும்தானே?" என்று சதீஷ் மனசுக்குள்ளேயே நினைத்துக் கொண்டான்.

கல்பனாவின் ஆவேசமும் வெறியும் உதடுகளின் சங்கமத்தோடு தணியவில்லை. ஏனெனில் அவள் எதிர்பார்த்த வெற்றி அவளுக்குக் கிட்டியிருக்கவில்லை. ஆகவே மேலும் மேலும் அவள் தன் சாதுர்யத்தையும், சாகஸத்தையும் காட்டத் தொடங்கினாள்.

சதீஷ் பொம்மை போல் அவள் வெறியாட்டங்களுக்கெல்லாம் தணிந்து போவதைத் தவிர தானாக எந்தச் செயலிலும் ஈடுபட முன் வரவில்லை. அப்படிச் செய்தால், தான் உணர்ச்சி வசப்பட்டு விட்டதாக ஆகிவிடும். அப்படி உணர்ச்சி வசப்பட்டும் மேற்கொண்டு ஈடுபட வேண்டிய களியாட்டத்தில் ஈடுபட முடியாமற் போய் விட்டால் தன் ரகசியம் அம்பலமாகி விடும். எனவே மரக்கட்டை போல இருந்தான்.

"நீங்க இப்படி மரக்கட்டை போலக் கிடந்தால் எப்படி? நீங்களும் ஏதாவது பண்ணினால் தானே?" என்று சிணுங்கினாள்.

"அதெப்படி? அப்புறம் என் விரதம் என்ன ஆவது?"

"இவ்வளவு தூரம் பார்த்தாச்சே போதும்."

"ச்சீ அப்புறம் அது பாதி கிணறு தாண்டின கதைதான். எந்த விதமான சபலத்துக்கும் பணிஞ்சிடாம நான் இங்கேருந்து வெளியே போயிடணும். அப்பத்தான் நான் டெஸ்ட்டுல வெற்றியடைஞ்சதா என் மனசு ஒப்புக் கொள்ளும். மறுபடியும் நாளைக்குக்கூட வேண்டாம். இன்னிக்கே ராத்திரி பத்து மணிக்கு மேல வர்றேன். அப்ப நான் எதுக்கும் தயார்."

எப்படித் தன்னால் இப்படி அடுக்கடுக்காக பொய் சொல்ல முடிகிறது என்று சதீஷுக்கு வியப்பாக இருந்தது. அதே சமயத்தில் தன் நிலைமை இப்படியும் ஆகவேண்டுமா என்ற துக்கமும்

அவனை அரிக்கத் தொடங்கியது.

"நிச்சயமா ராத்திரி வருவிங்களா?"

"வரேன்."

"உங்களுக்கு என்ன வயசு?"

"என்ன திடீர்னு என் வயசைக் கேக்கறே?"

"சொல்லுங்களேன்."

"நாற்பத்திரண்டு."

"உக்கும். பொய்."

"நிச்சயமாத்தான் கல்பனா. ஏன் பொய்ங்கறே?"

"உங்களைப் பார்த்தால் அப்படி இல்லே."

"எவ்வளவு மாதிரி தெரியுது."

"முப்பது, முப்பத்தொண்ணு."

"அப்படியா? எனக்கு ரொம்பப் பெருமையா இருக்குது, நான் அவ்வளவு இளமையாத் தெரியரேன்னு எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?"

"ஆனா நீங்க சொல்றபடி உங்களுக்கு நாற்பத்திரண்டு ஆயிருக்கணும். இன்னும் ஜாஸ்தியாக்கூட இருக்கணும்னு நினைக்கறேன்"

"இதென்ன திடீர்னு இப்படி பல்டியடிக்கிறே? முப்பது மாதிரித் தெரியுதுன்னு இப்பத்தான் சொன்னே."

"கரெக்ட். முப்பது வயசாயிருந்தா இப்படி ஆசையை அடக்கி வெக்க முடியாது. அதனாலெ சொன்னேன்."

"நாற்பத்திரண்டாயிருந்தா மாத்திரம் முடியுமா? நாற்பத்திரண்டுன்னா என்ன கிழவனா?"

"முப்பதுல இருக்கறதைவிட நாற்பத்திரண்டுல ஆசை குறைவாத்தானே இருக்கும்?"

"ஆசையா சக்தியா?"

"ரெண்டும் தான்."

"எனக்கு அது - ரெண்டுமே எப்படி இருக்குங்கறதை மறுபடியும் ராத்திரி வர்ரேனே அப்பக் காட்டறேன்."

கல்பனா இதற்கு ஏதோ பதில் சொல்ல வந்தாள். அதற்குள் வெளியே கதவைத் தட்டும் சப்தமும் "அரீ கல்பனா" என்று எஜமானிக்காரியின் குரலும் கேட்டன.

"க்யா தீதீ?"

"தேர் ஹோ கயீ கல்பனா"

"ஆதீ ஹூம்" என்று கத்தி சொல்லிவிட்டு, சதீஷை நோக்கி, "ரொம்ப நேரமாயிடுச்சின்னு அக்கா சந்தேகப்படறா" என்றாள்.

"சரி நான் போகிறேன்." என்று

---

# ஞானோதயம்

"எப்பா பொம்மை"
என்று அடம்பிடித்த
பிள்ளைக்கு,
இல்லாத காரணத்தால்
ஒருபிடி மண்ணெடுத்து
உருவாக்கிய பொம்மை.

அதை—
அஜந்தா ஓவியங்கள்
பார்த்தால்...
உயிர்பெற்று ஓடி
ஒளிந்து கொள்ளும்!

கலைகள் கூட
நம்நாட்டு
வெள்ளைக்காரத் துரைகளுக்கு
அடிமையாகி விட்ட
காலமிது.

மண்பொம்மையின்
கண்களிலே
கண்ணீர் வழிந்தோடியது!

வாயசைத்து மெதுவாய்ப்
பேசியது:

"முன்னொரு காலத்தில்
நானொரு கோடீஸ்வரன்.
வாழ்ந்த காலத்தில்
வராத ஞானோதயம்
வந்துவிட்டது!

ஏழைப் பிள்ளை
வைத்திருக்கும்
மண்பொம்மையில்
என் எலும்புச்சாரம்
கலந்திருப்பதை
எண்ணும்போது
எத்தனை மகிழ்ச்சி!

இருந்த காலத்தில்
ஈந்து வாழ்ந்திருந்தால்
உலகமே சொர்க்கம்!

ஈந்து வாழ
எனக்கோர் பிறவி
வேண்டும்
இறைவா!"

—கனகராசன்

டி உடைகளை அணிந்து கொள் ற்காக தன் பாண்ட், ஷர்ட் ஆகியவைகள் கிடந்த இடத்தை க்கி நகர்ந்தான்.

"நீங்க போகத்தான் வேணுமா? சரமா?" என்று கல்பனா கேட்டாள்.

"உன் எஜமானி அவசரப் றதா நீ தானே சொன்னே?"

"எனக்கென்னமோ உங்களோட னும் கொஞ்சநேரம் இப்படியே சிக்கிட்டிருக்கணும்னு இருக்கு."

"அதெப்படி முடியும்? உன் மானி கோபிச்சுப்பாளே?"

"இன்னொரு முப்பது ரூபாயைக் துட்டு நீங்க இன்னொரு சிட்டிங் நக்கிங்கன்னு சொல்லிட்டா சரின்னுடு ங்க."

சதீஷ் யோசித்தான்.

"ரூபாய்க்காக யோசிக்காதிங்க. னே வேணுமா குடுத்துடறேன்" று கல்பனா சொன்னதும் சதீஷ் ஏவிட முடியாதபடி ஆச்சரியமடைந் ன்.

"நீயா? எதுக்காக?"

"என்னமோ தெரியல்லே.எனக்கு ங்ககூட இன்னும் கொஞ்ச நேரம் ப்படியே பேசிக்கிட்டிருக்கணும் போல ருக்கு. பணத்துக்காகத்தான் இந்தத் தொழில் செய்யறேன். ஆனாலும் ன்னிக்கு எனக்கு உங்களோட ஒரு து அனுபவம். இன்னும் கொஞ்ச நரம் உங்களோட இப்படியே பேசி ட்டிருந்தா நீங்க திடீர்னு மனசு மாறி ரதமும் வேண்டாம் ஒண்ணும் வண்டாம்னு என்னை அனுபவிக்க டிவு செஞ்சிடுவிங்களோன்னு ஒரு ஆசை."

சதீஷ் அவளுக்கு ஒன்றும் தில் சொல்லாமல் தன் துணிகள் டந்த இடத்திற்குச் சென்று தன் ாண்ட்டை எடுத்து அதன் பையிலி ந்து பர்ஸை எடுத்தான். அதைத் திறந்து முப்பது ரூபாய்களை எடுத்து அவளிடம் நீட்டினான்.

"இந்தா கொண்டு போய் உன் எஜமானியிடம் கொடுத்து விட்டு வா. அவ பேசுறன்னா?"

"சூலாமி" என்று கூறியபடியே அவனிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டாள்.

ஒரு பெரியவர் பிரசவ ஆஸ்பத்திரியில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார். நர்ஸ் வேகமாக ஓடி வந்து, "உங்களுக்குப் பேரன் பிறந்திருக்கிறான்" என்றாள் அவரிடம். பெரியவர் எரிச்சலுடன், "நான் அட்மிட் செய்திருப்பது என் மனைவியை," என்றார்.

—ப்ரியா பாண்டியன்

பாவாடையை மட்டும் உடுத்திக் கொண்டு, பிராவை வெறுமனே மாட்டிக் கொண்டு (கொக்கி போடாமல்) வெளியே போகக் கதவருகில் சென்றாள்.

"நீங்க டிரஸ் போட்டுக்க வேண்டாம். இப்படியே இருங்க. நான் ரெண்டு நிமிஷத்துல வந்துடறேன்" என்று கூறிவிட்டு கதவைத் திறந்து கொண்டு வெளியேறினாள்.

தனிமையில் விடப்பட்ட சதீஷ், தான் சற்றும் எதிர்பாராத விதத்தில் அங்கே காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பதை நினைத்து வியந்தான். இதுவும் ஒரு விதத்தில் நல்லதுதான். வெளியே போனதும் சௌரிராஜனிடம் புளுகலாம். தன்னுடைய இயலாமை மறைந்து விட்டதாகவும், சென்ற சில தினங்களின் குறைக்கு ஈடு செய்வது போல இப்பொழுது தனக்கு சேர்ந்தாற் போல இரண்டு சிட்டிங் இருக்குமளவுக்கு உடம்பில் வலு வந்து விட்டதாக அளக்கலாம்.

கல்பனா உண்மையைச் சொல்லாமல் இருக்கவேண்டும். சொல்ல மாட்டாள் என்ற ஒரு நம்பிக்கையும் அவனுக்கு இருந்தது.

கெட்ட பழக்கங்கள் தனியாக வருவதில்லை என்று சொல்வார்கள். அது எவ்வளவு நிஜம் என்று சதீஷுக்குத் தோன்றியது. விலைப் பெண்ணை நாடி வந்ததுமே, பொய் சொல்லும் பழக்கமும் வந்துவிட்டதே. இனியும் என்ன கெட்ட பழக்கங்கள் தன்னைப் பற்றிக் கொண்டு விடுமோ என்ற பயமும் அவனைப் பிடித்துக் கொண்டது. தான் சொன்ன பொய், தன்னுடைய மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் சொன்னது தான் என்றாலும், அதனால் யாருக்கும் ஒரு கெடுதலும் விளையப் போவதில்லை யென்றாலும்— பொய் பொய்தானே?

மேற்கொண்டு அவன் ஏதும் யோசிப்பதற்குள்ளாக கதவைத் திறந்து கொண்டு கல்பனா உள்ளே வந்தாள்.

வந்ததுமே பாவாடையையும் பிராவையும் கழற்றி எறிந்து விட்டு சிரித்தவாறே அவனருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

"இனிமே எவ்வளவு நேர மானாலும் பரவாயில்லே" என்றாள்.

"ஏன்?"

"ரெண்டாவது சிட்டிங் உடனே முடியுமா? கொஞ்சம் ரெஸ்ட் எடுத்து கிட்டு அப்புறம்தானே முடியும்? அதனாலே எப்பவும் இந்த மாதிரி ரெண்டாவது சிட்டிங் இருக்கறவங்களுக்கு கொஞ்சம் தாராளமா டைம் குடுப் பாங்க."

சதீஷுக்கு இதெல்லாம் புதுமை யாக இருந்தது.

"அப்படின்னா இந்த மாதிரி செகண்ட் சிட்டிங் கேக்கறவங்க சாதாரணமா நிறைய இருப்பாங்களா?"

"இல்லே. ரொம்ப குறைச்சல். இங்கேயே ரெண்டாவது சிட்டிங்குக்குப் பதிலா இன்னொருத்தி கிட்ட போனா புதுசா இருக்குமேன்னு போயிடறவங்க தான் ஜாஸ்தி."

"வெளியே சௌரிராஜன் இருக் காரா, போயிட்டாரா?"

"நான் பார்க்கல்லியே. ஏன்?"

"சும்மாத்தான் கேட்டேன். அவரை இருக்கச் சொல்லியிருந்தேன்."

"அப்ப இருப்பாரு."

"நீ என்னே மன்னிச்சுடு கல்பனா."

பத்துக் கோடிப் பேர்களை ஆராய்ந்த தில் அவர்களில் இரண்டு பேருடைய ரோமம் கூட ஒன்றுபோல் இல்லை. ஒவ் வொரு முடியிலும் உள்ள நுட்பமான கண்ணறைகள் ஒவ்வொருவருக்கும் தனித்தனி விதத்தில் அமைந்துள்ளன. இதனால்தான் ரோமத்தைக் கொண்டு துப்புத் துலக்க முடிகிறது.

—கணியூர் பருக்

"எதுக்கு?"

"நான் உன்னே இப்படி ஏமாற்ற மடையும்படியாச் செய்துட்டேனே அதுக்குத்தான்."

"ராத்திரி மறுபடியும் வர்றேன்னு சொல்றிங்களே. அதுல ஏமாற்ற மடையாம பார்த்துக்குங்க."

"இப்பவே ரெண்டு தடவைன்னு சொல்லிட்டு மறுபடியும் ராத்திரி வேற வந்தா உன் எஜமானி என்ன நினைச்சுப்பா?"

"ஒண்ணும் நினைச்சுக்க மாட் டாங்க. அவங்களுக்கு அதைப் பத்தி என்ன? அவங்களுக்கு பணம் வந்தா போதும்."

"அப்ப சரி. கட்டாயமா வரேன்."

"உங்களுக்கு கல்யாணமா யிருக்கா?"

"ஊம்."

"குழந்தைகள்?"

"குழந்தைகளில்லே. பெரிய பையன்கள் இரண்டு பேர் இருக்காங்க."

கல்பனா ஆச்சரியத்துடன் கண் களை மலர்த்திப் பார்த்தாள்.

"உங்க டெஸ்ட்டுக்கு நீங்க ஏன் இந்த மாதிரி இடத்துக்கு வரணும்?" என்று திடீரென்று கேட்டாள் கல்பனா.

"அப்படின்னா?"

"உங்க மனைவி கிட்டயே டெஸ்ட் பண்ணிப் பார்க்கலாமே?"

"அதுவும் பண்றதுண்டு. இது அதுக்கடுத்த ஸ்டெப். மனைவி பழக்கப் பட்டுப் போயிட்டவளானதால அவ கிட்ட டெஸ்ட் பண்ணி ஜெயிக்கறது சுலபம். ஆனா புதுசா ஒருத்திகிட்ட, அதுவும் உன்னைப் போல சின்ன வயசுக் காரியும், இவ்வளவு அழகாவும் இருக்கறவ கிட்ட டெஸ்ட் பண்ணி ஜெயிக்கறது கஷ்டம் இல்லியா?"

"அதுல நீங்க ஜெயிச்சுட்டீங்க" என்று கூறி அவனை அணைத்து முத்த மிட்டாள்.

"இதுக்கு அடுத்த ஸ்டெப் ஏதாவது உண்டா?" என்று அவள் சிரித்துக் கொண்டே கேட்ட போது சதீஷ் அதிர்ச்சியடைந்தான்.

(தொடரும்)

இன்னும் ஒரு மோசமான சம்பிரதாயம். கணவன், மனைவி இருவரில் கணவன் இறந்ததும் மனைவி வெள்ளை சேலை உடுத்தி, பூவை, பொட்டை இழந்து நிர்க்கதியாய் நிற்க வேண்டும்...

ஏன் அந்தத் தலையெழுத்து?

மனைவி இறந்து போனால் எந்தக் கணவன் சோகமே உருவாக காலமெல்லாம் வாழ்கிறான்... நீதி இருவருக்கும் பொது என்றால் கணவனும் ஒரு ஆடை அணிய வேண்டும்... தான் கடைப்பிடித்து வந்த நல்ல விஷயங்களைத் துறக்க வேண்டும்.. எந்தக் கணவனாவது இதற்குத் தயாரா?

கணக்குப் பார்த்தால் ஆணை விட, பெண் அதிகம் வேலை செய்கிறாள்... பிள்ளை சுமக்கிறாள்... ஆண் இழுத்த இழுப்புக்கு வர பெண் என்ன வெறும் போகப் பொருளா? பிள்ளை பெறும் மெஷினா?

தலையெழுத்தை மாற்றவேணும். பெண் தாலிகட்டிக் கொள்கிற சம்பிரதாயம் மாதிரி ஆணும் கட்டிக்க வேண்டும்... இல்லையேல் பெண்ணுக்கும் தாலி கூடாது...

பேட்டி: ராசி. அழகப்பன்



சொன்ன ‘சண்டிகேஸ்வர நாயனார் கதையை ஏறக்குறைய ஒருமணிநேரம் கேட்டார். அவர் ஆசி வழங்கியது பெரிய செல்வம் கிடைத்த மாதிரி இருக்கிறது எங்களுக்கு.’’

தகவல்: கு. கீதப்பிரியன்.
படம்: பால்ராஜ்.

# ரேகா சதீஷ் ராஜி

குடும்பப் பெண்ணைப் பார்த்துத்
போகணும். ஆனால் அவளுக்குக் க
ணம் ஆகியிருக்க வேண்டும். புரு
இருக்கவேண்டும்.''

''கன்னிப் பெண்ணை
கல்யாணமான பெண் உசத்தியா?''

''ஆமாம். சந்தேகமில்லாம

''அதெப்படி?''



''அடுத்த ஸ்டெப்பா? அப்படியே ஸ்டெப் ஸ்டெப்பா போயிட்டே இருக்கணுமா என்ன?'' என்று கல்பனுவை அவன் கேட்டாலும் அவனுல் உடனே ராஜியை நினைக்காமல் இருக்க முடியவில்லை.

இந்த கல்பனுவும் அப்படி எதையோ தெரிந்து கொண்டே கேட்பது போல அவனுக்குத் தோன்றியது.

''அப்ப இல்லியா?''

''நான் அதைப் பத்தி ஒண்ணும் நினைக்கல்லை இது வரையிலும்.''

''அப்ப நான் உங்களுக்கு சொல்லித் தரட்டுமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்

''சொல்லு''

''ஒரு ஸ்டெப் இல்லே. ரெண்டு ஸ்டெப்கூட என்னுல சொல்ல முடியும்.''

சதீஷுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் ஆச்சரியத்தைக் கண்ட கல்பனு, ''உங்களால ஊகிக்கக் கூட முடியலையா?'' என்று கேட்டாள்.

''இல்லையே'' —மற்றெரு பொய்.

''அடுத்த ஸ்டெப், என்னைப் போன்றவளாக இல்லாமல் ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்த கன்னிப்பெண்ணிடம் உங்கள் மனேதிடத்தைப் பரிசோதிக்க வேண்டும்.''

''ஊம். ரெண்டாவது ஸ்டெப்?''

''ரெண்டாவது ஸ்டெப் கொஞ்சம் வித்தியாசமானது. இங்கேயும் நல்ல

# ஹேமா ஆனந்ததீர்த்தன் — 20

"கன்னிப் பெண் யாருடைய சொத்தும் அல்ல. ஆனால் கல்யாண மானவளோ கணவனின் சொத்து. இன்னொருத்தருடைய பெண்டாட்டி என்றால் எப்பவுமே ஆண்களுக்கு சபலம் ஜாஸ்தி" என்று கூறிச் சிரித்தாள் கல்பனா.



"தேவலையே. நீ இந்தத் தொழிலுக்கு வராமல் மனோதத்துவம் படித்து கல்லூரிப் • பேராசிரியராகவோ, ஸைக்கியாட்ரிஸ்டாகவோ போயிருக்க வேண்டியவள்"

சதீஷ் இப்படி அவளைப் புகழ்ந்ததனாலோ என்னவோ கல்பனாவுக்கு இன்னும் கொஞ்சம் அவனுடன் பேச வேண்டுமென்ற உற்சாகம் ஏற்பட்டது.

"இன்னொண்ணும் கூட எனக்குத் தோணுது" என்றாள்.

"என்ன சொல்லேன்."

"நீங்க என்னை மனோதத்துவம் படிச்சிருக்கணும்னு சொல்றப்ப எனக்கு அந்த யோசனை தோணித்து."

"எந்த யோசனை? ரொம்ப சஸ்பென்ஸ் குடுத்துப் பேசறியே!"

"படிக்காத பொண்ணுகிட்ட கிடைக்கற சுகத்தை விட படிச்ச பொண்ணுகிட்ட ஒரு ஆம்பளைக்கு ஜாஸ்தி சுகம் கிடைக்கும்னு நான் நினைக்கறேன். உண்டா இல்லியா?"

"அதெப்படி உனக்குத் தெரியும்?"

"ஒரு ஊகம்தான். இங்கே என்கிட்ட எவ்வளவோ பேர் வர்றாங்க. ஆனா சாதாரணமா ஒரு மில் தொழிலாளியோ, ஒரு ரயில்வே ஊழியனோ

இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதை தான். ஆனால் ஆபாசக் கதை யல்ல. பொறுப்பில்லாமல் வெறும் கவர்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும், கருணை உள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது.

—ஹேமா ஆனந்ததீர்த்தன்.

# வாரம் ஒரு குடும்பம்





## ஏ.வி. ரமணன் - உமா ரமணன்

நாங்க ரெண்டு பேரும் பாடறது ஒரு த்ரில்தான்னலும்... அதுல நிறைய சங்கடங்கள் இருக்கு. நான் களைச்சு திரும்பறப்ப இவரும் டயர்டா இருப்பார். இந்தாங்க காப்பின்னு ரெடியா நீட்ட முடியாது. நண்பர்கள், சொந்தக்காரங்க திருமணங்களுக்கு சில சமயம் போக முடியறதில்லே. அன்று நிகழ்ச்சி இருக்கும். மூணுமாசம் முன்னாடியே தேதி

எங்கிட்ட வர்றப்ப இருக்கறதைவிட உங்க மாதிரி ஒருத்தர் வர்றப்ப எனக்கு ஜாஸ்தி 'கிக்' கிடைக்குது. அதை வெச்சு ஆம்பளேங்களுக்கும் அதே மாதிரி இருக்கணும்னு நினைக்கறேன்."

"அதெப்படி? இது முழுக்க முழுக்க உடல் சம்பந்தப்பட்ட விஷய மில்லையா? உடலின் ஆரோக்கியம், செழுமை, கவர்ச்சி இவைதான் சுகத்தைத் தரும் சாதனங்களே அல்லாமல் ஒருத்தியின் படிப்பு, படிப்பில்லாமை இதுவா ஆம்பளேக்கு—அதுவும் இந்த உடல் சுகத்தை நாடி வர்ற ஆம்பளேக்கு முக்கியம்?"

"நீங்க சொல்றது கரெக்ட். நான் இதை இல்லேன்னு சொல்லல்லே. படிச்ச பொண்ணு வியாதிக்காரி யாவோ, அவலட்சணமானவளாவோ இருந்தா ஆம்பளேக்கு அவகிட்டேர்ந்து என்ன சுகம் கிடைக்கும்? நல்ல ஆரோக்கியமும் ஏறக்குறைய ஒரே மாதிரி அழகும் உள்ள ரெண்டு பெண்கள் இருந்து அதுல ஒருத்தி படிச்சவளாவும் இன்னொருத்தி படிக்காதவளாவும் இருந்தா இந்த ரெண்டு பேர்ல படிச்சவதான் ஆம்பளேக்கு அதிக சுகத்தைக் கொடுப்பா. ஆனு அந்த ஆம்பளேயும் படிச்சவனு இருக்கணும். அப்பத்தான் நான் சொல்றபடி இருக்கும்."

"எதனுலே இப்படி?"—சதீஷுக்கு அவள் இன்னும் இது பற்றிப் பேசிக் கேட்க வேண்டுமென்ற ஆர்வம் அதிகரித்தது.

"நீங்க சொல்ற மனேதத்துவும் தான் இது. இது வெறும் உடம்பு மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமல்லே. மனசுக்கும் இதுல பெரிய பங்கு இருக்கு."

சதீஷ் அவள் சொன்னதை மனத்தில் வாங்கிக் கொண்டு அதைப் பற்றி யோசிக்கத் தொடங்கினுன்.

சிறு வயதில் அவன் தன் உத்தியோக விஷயமாக பல ஊர்களுக்கும் சுற்றுப்பயணம் செய்து ஹோட்டல்களில் தங்க வேண்டியிருந்தது. அப்பொழுது பல ஊர்களில் ஹோட்டல்களிலும் தெருவின் இருண்ட மூலைகளிலும் சௌரிராஜனைப் போன்ற தரகர்களை அவன் எதிரிட நேர்ந்த

குடுத்துடறதாலே நிகழ்ச்சியை மாத்த முடியாது. கல்யாணத்துக்கும் போக முடியாது. இதனால் கெட்ட பெயர் கூட வருவதுண்டு.சரி .போற சில கல்யாணங்களிலாவது ஹாய்யா ... ஆறுமணிக்குப் போனேம். மத்தவங்களோட பேசினேம்.... சாப்பிட்டோம்னு வர முடியாது... நாங்களே மேடையேறி பாடற மாதிரி அமைஞ்சுடும். ஐந்து மணிக்கே வந்து தயார்படுத்திக்கணும்.

சரி வீட்டிலேதான் கவலைன்னு... பாடப் போற இடத்திலேயும் தொடர் கதையா ஆயிடறதுண்டு. மாசத்துல நாலஞ்சு தடவை டூர் போக வேண்டியிருக்கும். அங்க குடுக்கற ரூம், அழுக்கு மெத்தை, மூட்டைப்பூச்சி, கொசு, பாசி படிந்த பானையில் தண்ணீர், இதர வகையறுக்களின் எரிச்சலுடன் இருக்கும். இவளுக்கு கொஞ்சம் அன் -ஈஸியா இருக்கும். அது இதுபோல சின்ன சின்ன சங்கடங்கள் கூடவே வரும்.

ஒரு தடவை டெல்லியில் மத்திய அமைச்சர் பா ராமச்சந்திரன் தலைமைல ஒரு நிகழ்ச்சி ஏற்பாடாயிருந்தது. முந்தின நாள் புறப்பட்டோம். இராத்திரி 10 மணிக்கு ஏதோ ஒரு குட்டி ஸ்டேஷனில் ரயில் நின்றது. எதுத்தாப்ல இருந்த டீக்கடையில் டீ சாப்பிட்டு விட்டு வந்து படுத்தோம். முழிச்சப்ப மணி ஐந்து. ஏழு மணிக்கு டெல்லிக்குப் போகணும். வெளில பாத்தப்ப இடம் எங்கேயோ பாத்த மாதிரி இருந்தது. உன்னிப்பா பாத்தா அது அந்த டீக்கடையேதான். ராத்திரி 10 மணியிலிருந்து காலை 5 மணி வரை ரயில் நகரவேயில்லை. முன்னாடி போன ரயில் தடம் புரண்டு விட்டதாலே தாமதமாம். மாலை 5.30 மணிக்கு நிகழ்ச்சி ஆரம்பம். அந்த நேரத்தில் நாங்கள் டெல்லிக்கு அருகில் மீண்டும் நின்று கொண்டிருந்தது. எதுவும் செய்ய முடியாத நிலையில் நிக்கற ரயிலில் மனம் மட்டும் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. எப்படியோ விஷயம் அமைச்சர் வரைக்கும் சென்று, மேலும் தடங்கல் ஏற்படாமல் சீக்கிரம் வர ஏற்பாடு செய்யப்பட்டது. 7.15க்கு நேரே மேடைக்குப் போனேம். அழுக்கு பேண்ட், அழுது வடியும் மூஞ்சியுடன் பாடினேம். ரசிகர்களிடம் தாமதத்திற்கு வருத்தம் தெரிவிக்கும் முன், ரயிலினால் எங்கள் வருகை தாமதமானதற்காக அவர்கள் வருந்தியதை என்றும் மறக்க முடியாது. அருமையான ரசிகர்கள்.

பேட்டி: 'சத்யம்—சிவம்'.

---

துண்டு. அவர்களில் பலரும், "சார், வாங்க சார். காலேஜ் கர்ல்ஸ் ஆபீஸ் கர்ல்ஸ் யார் வேணுமானாலும் இருக்காங்க சார்." என்று ஒரு பல்லவியைப் பாடுவதுண்டு. அதன் பொருள் என்ன? அவர்கள் படித்த பெண்கள் என்பதைக் காட்டத்தானே அப்படிச் சொல்லியிருக்க வேண்டும்?

"நீ சொல்றது ரொம்ப கரெக்ட் கல்பனா" என்றான்.

"அப்படியும் இப்படியும் பேசியே நேரத்தைப் போக்கிட்டோம்" என்று கல்பனா சிரித்தாள்.

சதீஷ் கைகடிகாரத்தைப் பார்த்தான்.

"மணி எட்டாயிட்டுதே. அப்ப நான் புறப்படறேன் கல்பனா. போய் சாப்பிட்டுட்டு கொஞ்சம் வேற வேலையிருக்கு. அதையும் பார்த்துட்டு பத்து மணிக்கு மேல எவ்வளவு நேரமானாலும் கண்டிப்பா வரேன்" என்று கூறி எழுந்தான்.

கல்பனா அவனை இழுத்து அணைத்து அழுத்தமாக ஒரு முத்தமிட்டாள்.

"இன்னிக்கு மட்டும் ராத்திரி வராம ஏமாத்தினிங்க, நாளைக்கு நீங்க வந்தாலும் நான் உங்களை ஏத்துக்க மாட்டேன்" என்றாள்.

"நான் சொன்னால் சொன்ன வாக்குத் தவறமாட்டேன் கல்பனா" என்று கூறிவிட்டு தன் உடைகளை எடுத்து அணிந்து கொண்டான்.

ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவள் கையில் திணித்தபடியே "இதை வெச்சுக்கோ. நான் வரட்டுமா?" என்றான்.

அவன் கொடுத்த ரூபாய் நோட்டை வாங்கி தலையணைக்கடியில் வைத்து விட்டு, "உங்க பேரைச் சொல்லலியே?" என்றாள்.

"சதீஷ்"

நிஜமான பேர் தானு?'' என்று சிரித்தாள்.

''உன் பேர் கல்பனுங்கறது நிஜமாஞல் என் பேர் சதீஷ்ங்கறதும் நிஜம் தான்'' என்று கூறிய சதீஷ் 'இன்றைக்கு நான் உன்னிடம் சொன்னவை எல்லாவற்றிலும் இது ஒண்ணு தான் நிஜம்' என்று நினைத்துக் கொண்டான்.

அறையை விட்டு வெளியே வந்து சௌரிராஜனையும் அழைத்துக் கொண்டு அந்த வீட்டை விட்டு வெளியே வந்ததும் சௌரிராஜன், கங்க்ராஜ்லேஷன்ஸ்'' என்ருர், சிரித்துக் கொண்டே.

எதற்காக அவர் தன்னை கங்க்ராஜ்லேட் செய்கிருர் என்பதைப் புரிந்து கொண்ட சதீஷ் 'தாங்க்ஸ்' என்ருன்.

''கல்பனு எப்படி? நான் சொன்னபடி நல்ல கோ ஆபரேஷன் குடுத்ததா இல்லியா?''

''யெஸ். உங்களுக்கும் அவகிட்ட எக்ஸ்பீரியன்ஸ் ஆயிருக்கா?''-ஏற்கனவே கேட்கத் தவறிவிட்ட கேள்வியை இப்போது கேட்டு விட்டான். அவனுக்கு இப்போது துணிச்சல் வந்து விட்டிருந்தது.

''நோ நோ. என்னை எப்படி சேர்த்துக்குவாங்க? இவமட்டும் இல்லே. யாருமே என்னை சேர்த்துக்க மாட்டாங்க. எனக்கு இந்த் வியாதி இருக்கறதுனலெ மாத்திரம் அல்ல. நான் ஒரு 'பிம்ப்' ங்கறதுனலயும் அவங்களுக்கு என்மேல ஒரு அலட்சியம். இவ்வளவுக்கும் நான் எப்படியெல்லாம் இருந்தவன்கறது அவங்களுக்கெல்லாம் தெரியும். அதனலே எனக்கு மத்த 'பிம்ப்'களைக் காட்டிலும் கொஞ்சம் மரியாதை ஜாஸ்தி உண்டு. அதோட சரி. பக்கத்துல சேர்க்க மாட்டாங்க'' என்ருர்.

இதைக் கேட்க சதீஷுக்கு கொஞ்சம் மனசு சமாதானமாக இருந்தது.

''எனக்கு ரொம்ப சந்தோஷம் உங்களைப் பார்க்க முடிஞ்சதுலயும், ஒரு பெரிய விஷயத்துல உங்க கவலே தீர்றதுக்கு ஒரு அளவுக்கு நானும் உதவியாயிருக்க முடிஞ்சதுலயும் எனக்கு திருப்தி. எனக்கு சந்தேகமேயில்லே. யூ வில் பிக்வைட் ஆல் ரைட் வித் யுவர் வைஃப் ஆல்ஸோ'' என்ருர்.

இருவரும் இதற்குள்ளாகக் கீழே இறங்கி, சாலேக்கு வந்து விட்டிருந்தனர்.

''அப்ப, நான் சிலபேரைப் பார்க்க வேண்டியிருக்கு. அப்புறம் பார்க்கலாமா?' என்று சதீஷ் அவரிடமிருந்து கழன்று கொள்ளப் பார்த்தான்.

''சரி. நான் போய்க்கிறேன். நீங்க உங்க வேலேயைப் பாருங்க. நீங்க எப்ப ஊருக்குத் திரும்பப் போறேள்?''

''இன்னும் நாலு நாள் ஆகும்னு நினைக்கிறேன்'' என்று சதீஷ் வேண்டுமென்றே ஒரு பொய்யைச் சொன்ஞன்.

அநேகமாக நாளைக்கு அவனுடைய வேலே முடிந்து விடும். காலேயில் சேர்மன் வீட்டுக்குப் போக வேண்டியிருந்தது. மாலே விமானத்தில் அவன் புறப்பட்டுப் போய் விட முடியும். ஆனல்

அந்த உண்மையை அவரிடம் சொல்ல அவன் விரும்பவில்லை. சொன்னால் நாளைக்கு அவன் புறப்படும் சமயத்தில் வந்து ஒட்டிக் கொண்டு விடுவார் என்ற பயம் அவனுக்கு இருந்தது. ஆகவே நான்கு நாட்களாகும் என்று சொல்லி போக்குக் காட்டி விட்டு திடுதிப்பென்று நாளைக்கே புறப்பட்டுப் போய் விட வேண்டுமென்பது அவனது திட்டம்.

"சரி, அப்போ நீங்க போறதுக்கு முன்னாடி மறுபடியும் சந்திப்போம்" என்று கூறிவிட்டு சௌரிராஜன் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார்.

தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு டாக்ஸியைக் கூப்பிட்டுநிறுத்தி ஏறிக் கொண்டு, "தார்தேவ்" என்று கூறிவிட்டு சாய்ந்து படுத்துக் கொண்டான்.

டாக்ஸி ஓடிக் கொண்டிருந்தது. சதீஷின் மனம் தோல்வியின் அவமானத்தால் அழுது கொண்டிருந்தது.

டாக்டரின் பேச்சைக் கேட்டுதான் இந்தப் பரிசோதனையில் இறங்கி அதிலும் தோல்வியடைந்ததனால் அவன் நம்பிக்கையே தூள் தூளாகச் சிதறிப் போய் விட்டதாக அவன் உணர்ந்தான்.

ஆண்மைச் சக்தி உடலிலே அபரிமிதமாகப் பொங்கி வழிந்து கொண்டிருந்த காலத்தில் ரேகாவைத் தவிர இன்னொரு பெண்ணைத் தீண்டாமலிருந்த தான், அந்த சக்தி தன்னை வஞ்சித்து வேடிக்கை காட்டும் இப்போது இந்த ரெட்லைட் விடுதிக்குப் போக வேண்டி வந்த விதியை நினைத்து அவன் உள்ளம் ரணமாகி விட்டிருந்தது.

இந்தத் தவிப்பு தனக்குத் தேவைதானா? கண் பார்வை இல்லாதவனும் காது கேளாதவனும் கை, கால் ஊனமுற்றவர்களும் தங்கள் குறையை மறந்து வாழ்க்கையை அனுபவிக்க முடியுமானால் தானும் ஏன் அனுபவிக்க முடியாது? பார்க்கப் போனால் கண் பார்வை போன்று இந்த உடலுறவு அவ்வளவு தேவையானதா? இது இல்லாவிட்டால் என்ன வாழ்க்கையே அஸ்தமனமாகி விடுமா? வாழ்க்கையில் சுகம் என்பது இது ஒன்றில்தானா இருக்கிறது? எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா என்று கவி பாடியிருக்கிறான். அந்தக் கோடி இன்பங்களை அனுபவித்தபடி வாழ்க்கையை வாழ்ந்து விட முடியாதா?

ஆனால் இது தன் ஒருவனைப் பற்றிய விஷயம் மட்டும் அல்லவே? இதில் ரேகாவுக்கும் பங்கு இருக்கிறதே? தான் அனுபவிக்க முடியாத சுகத்தை அவளும் அல்லவா அனுபவிக்க முடியாமல் போய் விட்டது? தனக்கு இந்த சுகம் வேண்டாம் என்றுதான் தியாகம் செய்யத் தயாராக இருந்தாலும் அவளையும் அவ்வாறு தியாகம் செய்யும்படி சொல்லத் தனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? உண்மையில் தியாகம் என்ற வார்த்தை தன் விஷயத்தில் பொருந்தாது. தனக்கு வேறு கதியில்லை. ஆனால் ரேகா தியாகம் செய்யத்தான் வேண்டிவரும். அவளுக்கு அந்த மனோதிடம் இருந்தாலும் கூட அவளின் தியாகத்தைக் காணும் ஒவ்வொரு விநாடியும் தன்னுடைய கையாலாகத்தனம் தனக்கு ஞாபகம் வந்து தன்னைச் சித்திரவதை செய்து கொண்டே தானே இருக்கும்?

யோசனை, யோசனை, யோசனை.

கவலை, கவலை, கவலை.

வேதனை, வேதனை, வேதனை.

மிதக்கவும் முடியாமல் முழுங்கவும் முடியாத ஒரு மூச்சுத் திணறல்.

டாக்ஸி ரெஸ்ட்ஹவுஸை நெருங்கியதும் நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டான்.

(தொடரும்)

---



இந்தத் திறந்த வெளி தேன் சேகரிப்புக் கண்காட்சி இருக்கிறது.

அடிமரம், மூங்கில் பிளாச்சுகள், வைக்கோல், களிமண் ஆகியவை கொண்டு 'ட்ரி' ஆர்டிஸ்டுகளால் உருவாக்கப்பட்ட இந்த விசித்திரத் தேன் கூடுகளில் காடுகளிலுள்ள தேனீக்கள் வந்து அடை கட்டுகின்றன.

போஸ்னன் என்ற ஊரின் எல்லையில் உள்ள இக்காட்சியை புராதனக் கலையை மேம்பாடடையச் செய்திருப்பதாக பத்திரிகைகளும், பார்த்தவர்களும் பாராட்டுகிறார்கள்.

திருப்பத்தூர்
திருத்தளியான்

## நீங்கள் இப்படி! பாக்யராஜ் அப்படி!!

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு,

தங்கள் பத்திரிகையை வாரம் தோறும் படிக்கும் வாசகன் நான். நீங்கள் உங்கள் பத்திரிக்கையில் அடிக்கடி பாக்கியராஜை பற்றி எழுதியும் அவர் புகைப் படத்தையும் பிரசுரிக்கிறீர்கள். 'ஆஹா... ஓஹோ... என்று அவரை தூக்குகிறீர்கள். 16-5-82 வானொலியின் இளைய பாரதம் நிகழ்ச்சியில் 'எனது பார்வையில்' என்ற தலைப்பில் பாக்யராஜின் பேட்டியின் போது அவர், ஒரு ஆட்டோ டிரைவர் நாணயமாக ரூ. 10,000 மற்றும் சில நகைகளை போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்ததைப் பற்றி உங்கள் பத்திரிக்கையில் வெளிவந்ததை குறிப்பிட்டார். ஆனுல் அவர் இந்த செய்தி "ஒரு" பத்திரிக்கையில் வந்தது என்று குறிப்பிட்டாரே தவிர 'தாய்' பத்திரிக்கையில் வெளிவந்தது என்று குறிப்பிடவில்லை. நீங்கள் என்னடா என்ருல் அவரைப் பற்றி அதிகமாக எழுதி அவருக்கு நல்ல விளம்பரத்தை கொடுக்கிறீர்கள். அவர் என்னடா என்ருல் உங்கள் பத்திரிக்கையின் பெயரைக் கூட குறிப்பிடவில்லை. ஏன் சார் இப்படி?

—ஸ்ரீதரன்




## ரஜினி இப்படி! ஸ்ரீதேவி அப்படி!

சில மாதங்களுக்கு முன் கல்கண்டு பத்திரிகையில் ஒரு துணுக்கைப் படித்தேன். 'ஜனக்ஜனக் பாயல் பஜே' போன்ற ஒரு கதையை படமாக்க ஸ்ரீதேவி தேடி வருவதாக படித்தேன். எனவே நர்த்தகி என்னும் நடனப்பெண்ணைப் பற்றிய கதை ஒன்றை அவருக்கு அனுப்ப முயற்சித்தேன். ஸ்ரீதேவியின் சரியான விலாசம் தெரியாததினுல் ரஜினிகாந்த் அவர்களுக்கு கதையை அனுப்பி ஸ்ரீதேவியிடம் கதையை சேர்த்து விடுமாறு ஒரு கடிதமும் அனுப்பினேன். பெருந்தன்மையின் இலக்கணமான ரஜினிகாந்த், ஸ்ரீதேவியின் சரியான முகவரி எழுதி கதையை திருப்பி நேரடியாக தொடர்பு கொள்ளுமாறு அறிவுரை வழங்கியிருந்தார். அவ்விதமே பதிவுத் தபாலில் ஸ்ரீதேவிக்கு கதையை அனுப்பினேன். இதுவரை எந்தவித பதிலும் வரவில்லை. ஒரு பிஸியான சூப்பர் ஸ்டார் தனக்கு வந்தகடிதத்திற்கு உடனே பதில் எழுதும் பண்பினை பார்த்து மற்றவர்களும் ஏன் பழகக் கூடாது?

—ஆர்.சரோஜா, கோயம்புத்தூர்.

# இதைத் தெரிந்து கொண்டால் தப்பில்லை!



**டாக்டர். உமாமகேஸ்வரி.**

அறியாமை ஒரு தவறல்ல. அரிஸ்டாட்டில் அறியாமல் இருந்தவர் தான். அவரைத்தான் உலகம் அறிஞர் என்கிறது. அரிஸ்டாட்டில் அறியாமல் இருந்தவரா என்றுதானே கேட்கிறீர் கள்? ஆமாம். அவர் அறியாதவர்தான். ஆண்களைவிட பெண்களுக்குப் பற்கள் அதிகம் என்பதாக அவர் எழுதி வைத் தார். இத்தனைக்கும் அவருக்கு இரண்டு மனைவிகள். ஒருத்திக்காவது எண்ணிப் பார்த்திருக்கலாமே என்று பின்னால் பெர்ட்ரெண்ட் ரஸ்ஸல் வருத்தப்பட் டார்.

ஆகவே அரிஸ்டாட்டில் அறி யாமல் இருந்தது குற்றம் அல்ல. அறிய மனது இல்லாமல் இருந்ததே குற்றம். நீங்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. நீங்கள் இதை அறிய வேண்டும் என் பதற்காகச் சொல்லுகிறேன்.

சிலர் நாம் ஏன் இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று சும்மா இருந்து விடுகிறார்கள். ஒன்றைத் தெரிந்து கொள்ளுவதால் நமக்கு ஒன்றும் குறை வந்து நேராது. நாம் பார்க்கிற தொழி லுக்கோ, வேலைக்கோ அப்பால் ஏதாவது தொழில்களோ, வேலைகளோ நமக்கு தெரிந்திருக்க வேண்டும். இல்லா விட்டால் வாழ்க்கை சுவை இல்லாது போகும்.

திருமதி இந்திரா காந்தி சொல் வதிலே ஒன்று சரிதான். ஒரு வேலையைச் செய்தபிறகு இளைப்பாறுவது என்பதே அதற்கும் தொடர்பில்லாத மற்றொரு வேலையைச் செய்வதுதான்.

பேரறிஞர் பெர்னாட்ஷா அறிவார்ந்த விவகாரங்களைப் பேசிக் கொண்டிருப்பாராம். பேஸ்பால் பற்றிய விமர்சனத்தைக் கேட்டால் எழுந்து சென்று விடுவாராம். இது அவரது பலவீனம் அல்ல; இதுவே அவரது பலம்.

உபவாசம் கூட இப்படித்தான் வந்தது. உண்டு கொண்டே இருக்கி றோம். அதற்கு ஒருநாள் ஒரு மாற்று, சாப்பிடாமல் இருந்து விடுவது. இப்படித் தான் தொடர்ந்து ஒரே வேலையைச் செய்து நம்மை உருக்கிக் கொண்டிருக் காமல் ஒவ்வொருவரும் ஒரு இடைவேளை விட்டாக வேண்டும். இந்த இடைவேளை தான் மனிதனுக்கு இளைப்பாறுதல்.

எழுதிக் கொண்டே இருக்கிறான் ஒருவன். காகிதம், எழுதுகோல் எல்லா வற்றையும் எறிந்து விட்டு ஓய்வாக எங்காவது ஓடிவிட வேண்டும். ஆறு நாட்கள் உலகத்தைப் படைத்த ஆண்டவர்; ஏழாவது நாள் இளைப்பா றியதாக பைபிள் பேசுவதைப் படித்துப் பாருங்கள்.

இளைப்பாறுவது என்பது தூங்கு தல் அல்ல. சோம்பேறித் தனமாக இருப்பது அல்ல. வேறு ஒரு வேலையைச் செய்வது. இது கிரிக்கெட் விளையாடுவ தாகவும் இருக்கலாம். கீரைப் பாத்திக்குத் தண்ணீர் விடுவதாகவும் இருக்கலாம். தொடர்ந்து நாம் உழைக்க, இந்தத் தப்பித்தலே இன்பமான தூண்டுத லாகும். இதைத் தெரிந்து கொண்டால் தப்பில்லை.

# ஹேமா ஆனந்ததீர்த்தன்-21

காலையில் சதீஷ் கண் விழித்து எழுந்த போது கண்கள் இரண்டும் எரிவது போல உணர்ந்தான். காரணம் இரவு முழுவதும் சரியான தூக்கம் இல்லாமல் வெகு நேரம் புரண்டு புரண்டு படுத்து பல்வேறு யோசனைகளில் மூழ்கியிருந்ததுதான்.

மணியைப் பார்த்தான். எட்டரையாகி விட்டிருந்தது. இவ்வளவு தாமதமாக அவன் என்றைக்குமே எழுந்ததில்லை.

இரவில் அவனுக்குத் தோன்றிய சில எண்ணங்களெல்லாம் இப்போது பைத்தியக்காரத்தனமாகத்தோன்றின. இரவுக்கும் இருளுக்கும் எப்பொழுதுமே அதுபோல பைத்தியக்காரத்தனமான யோசனைகளைக் கிளறி விடும் சக்தி உண்டு போலும்.

தன் நிலையில் அபிவிருத்தி ஏற்படாவிட்டால் தற்கொலை செய்து கொள்வதைத்தவிர வேறு வழி இல்லை என்று அவனுக்கு இரவில் தோன்றியிருந்தது.

அதைத் தொடர்ந்து அப்படி தான் தற்கொலை செய்து கொண்டால் அதற்குக் காரணங்கள் பற்றி இல்லாததும் பொல்லாததுமான வதந்திகள் எழக்கூடும் என்ற எண்ணம். ரேகாவின் நடத்தையில் ஏதோ தவறு இருக்க வேண்டும், அதனால்தான் அவமானம் தாங்காமல் தான் தற்கொலை செய்து கொண்டு விட்டதாக, தன் நடத்தை சரி இல்லை— எங்கோ போகாத இடத்திற்குப் போய், வரக்கூடாத வியாதியை வாங்கிக் கொண்டு வந்து விட்டதால் அந்த வேதனையையும், வெட்கத்தையும் தாங்க இயலாமல் தன்னையே அழித்துக் கொண்டு விட்டதாக, காரியாலயத்தில் ஏதோ தில்லு முல்லுகள் செய்து மாட்டிக் கொண்டு அந்த அவமானத்தைத் தவிர்ப்பதற்காக என்று இப்படிப் பலவாறாக வதந்திகள் கிளம்பும். இறந்து போன பிறகு இந்த வதந்திகள் தன்னைப் பாதிக்கா விட்டாலும் ரேகா அவைகளை எப்படித் தாங்கிக் கொள்வாள்? அந்த வதந்திகளை மறுத்து உண்மைக் காரணம் இதுதான் என்பதையும் சொல்ல முடியாமல் நெருப்பில் விழுந்தவள் போலத் துடித்துப் போவாளே. இருந்தும் அவளுக்குச் சுகத்தைக் கொடுக்காமல் செத்தும் அவளை நரகத்தில் தள்ளுவது நியாயமா? தற்கொலை எண்ணம் கோழைத்தனமானது என்று அந்த எண்ணத்தை ஒதுக்கினான்.

ஆனால் மனத்தை நிர்மலமாக வைத்துக் கொள்ள முடிந்திருக்கவில்லை. தற்கொலை எண்ணத்தை விரட்டியடித்தால் இன்னொரு எண்ணம் அங்கே புகுந்து கொண்டது. அது ரேகாவைப் பற்றிய சந்தேகம். ரேகாவால் எவ்வளவு நாளைக்குப் புலனடக்கத்துடன் வாழ முடியும்? சில நாட்கள் அல்லது மாதங்கள் தன் நிலைக்கு இரங்கி பரிதாபப்பட்டு அவளும் தன்னோடு கூட வதைப்படலாம். ஆனால் போகப் போக தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு என்பது போல கணவனும் மனைவியுமானாலும், ஈருடல்

ரேகா·ஸதீஷ்·ராஜி

ஒருயிர் என்றெல்லாம் காவியங்கள் பேசினுலும் ஈருடல் ஈருடல்தான். அவைகளின் தேவைகள் தனித்தனி தான் என்ற நிலை ஏற்படலாம். பொறுக்க முடியாத நிலை வந்து விட்ட பிறகு ரேகா தன்னிடம் கிடைக்காத சுகத்தை வேறு இடத்தில் நாடலாம் அல்லது அதற்குத் துணிச்சல் இல்லாவிட்டால் தன் வாழ்வை முடித்துக் கொள்ளலாம். அப்படி இரண்டில் எது நேரிட்டாலும் அதன் பிறகு—தான் எப்படி நிம்மதியாக வாழ முடியும்?

இப்படி இன்னும் எத்தனையோ யோசனைகள், கவலைகள் அவனைத்தூங்க விடாமல் செய்திருந்தன.

இரவு வெகு நேரம் கழித்து இரண்டு, இரண்டரை மணிக்குப் பிறகு அவன் களைத்துப் போய்த்தூங்கியிருந்திருக்க வேண்டும். அதனுல்தான் எழுந்திருப்பதற்கு இவ்வளவு நேரமாகி விட்டது.

பார்க்கப் போனுல் கல்பனுவிடம் தான் தோல்வியடைந்ததற்கு ஒரு விதத்தில் தன்னுடைய முட்டாள்தனமே காரணமாக இருந்திருக்க வேண்டும் என்று அவனுக்கு இப்போது தோன்றியது. தான் வெற்றியடைய வேண்டும் என்னும் எண்ணத்தை விட தன்னுடைய குறை வெளிப்பட்டு விடக்கூடாதே என்ற கவலையே அவனுக்கு அதிகமாக இருந்தது. அதனுல் டெஸ்ட் என்றும்,மனுேதிடப் பரிசோதனை என்றும் எதையெதையோ கற்பனை செய்து சொல்லி அவளைத் தொடாமல், தன் உள்ளத்திற்கு எந்த வகையிலும் கிளர்ச்சியை ஊட்டிக் கொள்ளாமல் இருந்து விட்டான். அவள் தன்னைத் தொட்டதும், தழுவியதும், முத்தமிட்டதும் வாஸ்தவம்தான். சாதாரணமாக எந்த ஆணுக்கும் அதுவே போதுமானதாக இருக்கும்-உணர்ச்சிகள் வீரிட்டெழ. ஆனுல் அவன் விஷயத்தில் அந்த வீட்டிற்குள் நுழைந்ததிலிருந்தே ஒரு வகையான அருவருப்பு அவன் மனத்தை ஆக்ரமித்துக் கொண்டு விட்டது. சௌரிராஜனைப் போன்ற தொழு நோய்க்காரன் தொட்டவளாக கல்பனு இருப்பாளோ என்ற சந்தேகம், கல்பனு முதல் முதல் அறையை விட்டு வெளியே வந்த போது அவளோடு வந்த அந்த வெண்குஷ்டம் பிடித்த அவளுடைய கிராக்கி, ரேகாவுக்கு துரோகம் செய்கிறுேமோ என்ற எண்ணம் இவைகளெல்லாம் அவன் மனத்தை நிறைத்துக் கொண்டிருந்ததனுலோ என்னவோ அவனுக்கு சாதாரணமான உடலிச்சையே எழாமற்போய் விட்டது.

இப்பொழுது வெளிச்சத்தைப் பார்க்கும் பொழுது அவன் உள்ளத்தில் மீண்டும் நம்பிக்கை துளிர் விடத் தொடங்கியது.

கல்பனு விஷயத்தில் தோல்வி என்றே வைத்துக் கொண்டாலும் அதோடு—தான் நம்பிக்கை இழந்து நிராசையடைய வேண்டிய தேவை இல்லையே? டாக்டர்தான் அடுத்தடுத்துப் பல வழிகள் சொல்லியிருக்கிருரே? போர்னுகிராபி புத்தககங்கள் ப்ளூபிலிம்கள், காஜுராஹோ சிற்பங்கள், ராஜி இவைகௌல்லாம் இருக்கின்றனவே? ஒவ்வொன்ருக அவைகளையும் முயன்று பார்த்து விட வேண்டியது தானே?

டொக், டொக் என்று அறைக் கதவை யாரோ தட்டினுர்கள். எழுந்து சென்று கதவைத் திறந்தான்.

பையன் தேத்தண்ணீர் டிரேயுடன் நின்று கொண்டிருந்தான். சதீஷைக் கண்டதும், "நமஸ்தே சாப்" என்று கூறி விட்டு உள்ளே நுழைந்

## நாங்களும் பதிலளிக்கிறோம்

ஆசிரியர் அவர்களுக்கு,

16-5-82 (என்ற) தேதியில் வெளிவந்த 'தாய்' இதழில் திரு.கஸ்தூரிரங்கன் "இதற்கு என்ன பதில்?" என்ற தலைப்பில் எழுதிய சம்பவத்தைப் படித்தேன். இச்சம்பவத்தை வெளியிட்ட உங்களுக்கு நன்றி.

நான் 25 வயதான ஒரு இளைஞன். சிறு வயதிலிருந்தே இந்த சமுதாயத்தில் இருந்து ஒரு வித்தியாசமான வாழ்க்கையை அமைத்துக்

கொள்ள வேண்டுமென்பதே எனது குறிக்கோளும், ஆசையுமாகும். ஆகவே திரு.கஸ்தூரிரங்கன் அவர்களது கேள்விக்கு நான் பதிலாக இருக்க விரும்புகிறேன். அதாவது, அந்தோணியம்மாளுக்கு சட்டம் தனது கடமையை செய்துவிட்டது. இனி இச்சமுதாயம் என்ன செய்யப் போகிறது? என்று கேட்டிருக்கிருர் என்று நினைக்கிறேன்.

எனது திருமணம் — பிறர்க்கு, 'திருமணம் என்பது இரு உடல்களை இணைப்பதைக் காட்டிலும் இரு உள்ளங்களை இணைப்பதற்கான சம்பவம்' என்று உணர்த்த வேண்டும் என்று ஆசைப் படுகிறேன்.

அந்தோணியம்மாளுடைய முகவரியை 'தாய்' மூலம் அறிவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அவளைச் சந்தித்து என் விருப்பத்தைத் தெரிவித்து கல்யாணம் செய்ய வேண்டும் என்பதே எனது விருப்பம்.

இப்படிக்கு,
அந்தோணி.

உயர்திரு ஆசிரியர் அவர்களுக்கு, வணக்கம்.

நான் கடந்த 8 மாத காலமாக 'தாய்' வார இதழ் படித்து வருகிறேன். ஆனல் இது நாள் வரை தங்களுடன் நான் எந்தவித தொடர்பும் கொண்டதில்லை. ஆனுல் இந்த வாரம் 16.5.82. 'தாய்' இதழில் வெளியாகி உள்ள இதற்கு என்ன பதில் என்ற கஸ்தூரிரங்கனின் கட்டுரையைப்பார்த்து மனம் மிகுந்த வேதனையுடன் இக்கடிதத்தை எழுதுகிறேன். இந்த கட்டுரையைப் படித்தவுடன் என்னை அறியாமல் நான் கண்ணீர் சிந்தி விட்டேன்.

தயவு செய்து பாதிக்கப்பட்ட அந்தோணியம்மாள் வீட்டு விலாசத்தை தெரியப்படுத்த வேண்டுகிறேன்.

—கே. எஸ். ராஜா,
மே/பா. கருணு பிரதர்ஸ்,
கெமிஸ்டா & ட்ரக்கிஸ்ட்ஸ்,
16, ஷில்லா ஹவுஸ்,
(சுயான் பஸ் நிலையம் எதிரில்.)
சுயான் சர்க்கிள்,
பம்பாய்-400022.

---

தான். டிரேயை மேஜை மீது வைத்து விட்டு, "தபீயத் அச்சீ நஹீ சாப்?" என்று கேட்டான்.

"இல்லை இல்லை, டீக் ஹை" என்று கூறியதும் அவன் போய் விட்டான்.

சதீஷ் குளியலறைக்குச் சென்று முகம் கழுவிக் கொண்டு வந்து தேநீர் அருந்த உட்கார்ந்து கொண்டான்.

இரண்டு வாய் அவன் அருந்துவதற்குள் மறுபடியும் அறை வாசலில் டொக், டொக் சப்தம்.

"கோன்?"

"சாப், ஆப்கோ டெலிபோன்" என்ருன் பையன்.

சதீஷ் எழுந்து சென்று டெலிபோன் ரிசீவரைக் காதில் வைத்துக் கொண்டு "சதீஷ் ஹியர்" என்ருன்.

மறுமுனையில் அவனது சேர்மன் தான் பேசினுர்.

அவர் அவசரமாக கான்பூர் போவதாகவும், வர பத்து நாட்கள் ஆகுமென்றும் சதீஷ் சென்னை திரும்பிப் போகலாமென்றும் சொன்ஞர்.

"தாங்க்யூ சார்" என்று சொல்லி ரிஸீவரை, வைத்து விட்டு அறைக்குத் திரும்பினுன்.

சேர்மனின் இந்த ப்ரோக்ராம் நேற்றே தெரிந்திருந்தால் இன்று காலை விமானத்திலேயே தான் சென்னை திரும்பியிருக்கலாம் என்று சதீஷுக்குத் தோன்றியது.

ஆனுல் அந்த எண்ணம் தோன்றிய மறுகணமே சென்னை திரும்புவதில் தனக்கு எந்த விதமான உற்சாகமும் இல்லாதிருப்பதை உணர்ந்தான். ரேகா வீட்டில் இருக்க மாட்டாள். இருந்தாலும் இப்போது தான் இருக்கும் நிலையில் அவளின் நெருக்கம் தனக்கு இதத்தைத் தருவதற்குப் பதில் வேதனையையே அளிக்கக்கூடும்.

ராஜியிடம் அரை குறையாக ஏதோ உளறி வைத்தாய் விட்டது- எப்படி சமாளிப்பது என்ற கவலை வேறு அவனைப் பிடித்துக் கொண்டது.

கல்பனுவிடம் தோல்வியடைந்தது போல ராஜியிடம் தோல்வியடையாமலிருக்க வேண்டுமானுல் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று அவன்

மூளையைக் குழப்பிக் கொண்டு யோசிக்கத் தொடங்கினுன்.

ராஜியிடம் உண்மையை மறைக்காமல் சொல்லிவிட வேண்டும். அப்பொழுதுதான் அவளிடமிருந்து ஒத்துழைப்பைப் பெறமுடியும். ஆனுல் உண்மையை எப்படிச் சொல்வது என்பதுதான் பெரிய பிரச்னே.

இன்றைக்கு முழுவதும் தான் ஃப்ரீ. சீக்கிரம் குளித்து உடையணிந்து கொண்டு முதலில் இண்டியன் ஏர்லைன்ஸ் ஆபீசுக்குப் போய் விமான டிக்கெட்டை ஓ. கே. செய்து கொள்ள வேண்டும். பிறகு ஊர் சுற்றவேண்டும். இப்படி நினைத்துக் கொண்டு சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கினுன்.

இண்டியன் ஏர்லைன்ஸ் ஆபீசில் சீக்கிரம் வேலை முடிந்து விட்டது.

அங்கிருந்து நடந்தே ஹார்ன்பி ரோடுக்கு வந்தான். நடைபாதைப் புத்தகக்கடைகளில் நோட்டம் விட்டான். கவர்ச்சியான அட்டைப் படங்களோடு கூடிய சில புத்தகங்களை எடுத்துப் புரட்டிப் பார்த்தான். முன் அட்டையிலும் புத்தகத்தைப் பற்றியும், ஆசிரியரைப் பற்றியும் எழுதியிருப்பதைப் படித்தான். எல்லாப் புத்தகங்களும் ஒளிவு மறைவில்லாத செக்ஸ் விருந்தை அளிப்பதாகத்தான் சொல்லின. உபயோகப்படுத்திய வார்த்தைகள் தான் வெவ்வேருக இருந்தன.

Sex in every style.

A triumph... erotic show—and-tell... outrageously sexy.

Eva is a prostitute and you will never meet a happier hooker. She starts in the bar and finishes in bed—often six times a day.

The most enthralling and hilanious explosions are the sexual ones which are many.

என்பது போல வாசகங்களைப் படித்து உள்ளே இரண்டொரு பாராக்களைப் படித்துப் பார்த்து கடைசியாக ஹென்ரி மில்லர் எழுதிய 'ட்ராபிக் ஆஃப் கான்ஸர்' 'ட்ராபிக் ஆஃப் காப்ரி கார்ன்' என்ற இரண்டு புத்தகங்கள், ஜாய்ஸ் எல்பர்ட் என்பவள் எழுதிய 'திக்ரேஸி லேடீஸ்' 'திக்ரேஸி லவர்ஸ்' என்கிற இரண்டு புத்தகங்கள், ஹெரால்ட் ராபின்ஸனின் 'அட்வென்சரர்ஸ்'— ஆகிய ஐந்து புத்தகங்களையும் வாங்கிக் கொண்டான். இப்போதைக்கு இது போதும் என்று அவனுக்குத் தோன்றியதற்கு ஒரு காரணம் புத்தகங்களின் விலை. இந்த புத்தகங்களின் விலை நூற்று நாற்பது ருபாய்! ப்ராஸ்டிட்யூட்டிடம் போவதைவிட புத்தகம் வாங்குவது 'காஸ்ட்லி' என்று நினைத்து சிரித்துக் கொண்டான்.

பணத்தைக் கடைக்காரனிடம் கொடுத்தபோது அதைப் பெற்றுக் கொண்ட அவன் சிரித்தபடியே, "ஃபோடோஸ் சாஹியே சாப்?" என்று கேட்டான்.

## ஆணு? பெண்ணு?

—இல. இளங்கோவன்,

வீடே மகிழ்ச்சியில் மூழ்கிக் கிடந்தது. காரணம் இது என்னுடைய முதல் பிரசவம்...

"நிச்சயமா உனக்கு ஆண் குழந்தைதாண்டி பிறக்கும்..."

"எப்படியம்மா சொல்றே...?"

"வயத்தை பார்த்தாலே தெரியலியாடி... அப்புறம் நம்ப குடும்பத்துல எல்லோருக்கும் முதல் குழந்தை ஆணுத்தான் பிறந்திருக்கு..."

"எப்ப வந்த தாயி...?" -வேலைக்காரி வேலம்மா கேட்டபடியே வந்தாள்.

"நேத்து சாயங்காலம் வந்தேன் வேலம்மா..."

"உனக்கு ஆண் குழந்தைதான் தாயி பிறக்கும்..."

"வயிறு பாரு எம்மாம் பெரிசாக்கீது... ஆண் பிள்ளைக்குத்தான் வயிறு இப்படி இருக்கும்..."

"என்னடி சௌக்கியமா?" —கேட்டபடியே வந்தாள் பக்கத்து வீட்டு லட்சுமி. சிறிது நேரம் பேசிவிட்டு போகும்போது, "நிச்சயம் உனக்கு பெண் குழந்தைதான் பிறக்கும்னு எனக்குத் தோணுறது..." மாலை—என் அக்கா வித்யா வந்தவுடன்

"க்யா ஃபோடோஸ்?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் சதீஷ்.

"ஆயியே" என்று சதீஷை அழைத்துக் கொண்டு பக்கத்தில் ஒரு சந்துக்குள் நுழைந்தான்.

மயக்க நிலையில் இருப்பவன் போல சதீஷ் அவனைப் பின் தொடர்ந்து சென்றான்.

ஒரு மறைவான இடம் வந்ததும் அக்கடைக்காரன் தன் சட்டையைத் தூக்கி உள்ளே பனியனில் இருந்த ஒரு பாக்கெட்டில் கையை விட்டு ஒரு கவரை எடுத்துக் கொடுத்தான்.

"தேகியே" என்றான்.

சதீஷ் கவரைத்திறந்து உள்ளே இருந்த புகைப்படங்களை வெளியே எடுத்துப் பார்த்தான். அசந்து போய் விட்டான்!

காஜுராஹோவுக்குப் போக வேண்டிய தேவையே இல்லை — இந்தப் படங்களைப் பார்த்து விட்டால். அங்கே இருப்பவை வெறும் சிற்பங்கள் இந்தப் படங்களிலே சதையும் ரத்தமும் கூடிய உயிருள்ள மனிதர்கள் மன்மத லீலையில் ஈடுபட்டிருந்த போது காமிரா அவர்களைப் பிடித்துப் போட்டிருந்தது.

எவ்வளவு வகை வகையான படங்கள்!

பரத நாட்டிய மங்கை பல போஸ்கள் கொடுப்பது போல படத்திலிருந்த ஆண்களும் பெண்களும் காமக்களியாட்டங்களின் பல போஸ்களை வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர்.

இருபது படங்கள் இருந்தன.

அநேகமாக எல்லாவற்றிலும் ஒரு ஆண் — ஒரு பெண் தான். ஆனால் வெவ்வேறு நபர்கள். ஒரு படத்தில் இருந்தவர்கள் இன்னொரு படத்தில் இல்லை. சில படங்களில் இரண்டு ஆண்கள் ஒரு பெண். இன்னும் சிலவற்றில் இரண்டு பெண்கள்—ஒரு ஆண். ஒரு படத்தில் மட்டும் ஆறு பெண்களோடு ஒரு ஆண்!

தான் வாங்கிய புத்தகங்களின் தினுசிலிருந்தே தனக்கு இந்த மாதிரி புகைப்படங்களில் நாட்டமிருக்குமென்று அந்தக் கடைக்காரன் ஊகித்திருப்பான் போலிருக்கிறது.

"என்ன விலை?" — ஆங்கிலத்தில் கேட்டான்.

"இருநூறு ரூபாய் சார்"— ஹிந்தியில் பதில் சொன்னான்.

"ஐயோடா" என்றான் சதீஷ்.

"என்ன சார் ஒருபடத்துக்குப் பத்து ரூபா தானே சார் ஆவுது? இந்த மாதிரி உனக்கு எங்கியும் கிடைக்காது சார்.எவ்வளவு செலவுதெரியுமா? அசலே ஒருபடத்துக்கு எட்டு ரூபா ஆவுது சார்" என்று கடைக்காரன் மளமளவென்று தமிழில் பேசத் தொடங்கினான். "ஐயோடா" என்ற சதீஷின் ஒரு வார்த்தை அவனைத் தமிழனாகக் காட்டிக் கொடுத்து விட்டது தான் காரணம்.

"வேண்டாம்பா வேண்டாம்" என்று சதீஷ் நகரத் தொடங்கினான்.

ஆனால் அவனுக்கு அரை மனது. ப்ளூ ஃபிலிம் பார்ப்பதற்கு வாய்ப்புக் கிடைக்குமோ கிடைக்காதோ? இந்தப் படங்கள் வெறும் ஸ்டில் படங்களானாலும் ப்ளூபிலிம் செய்யக் கூடிய காரியத்தில் பாதியையாவது அவை செய்கின்றன என்று அவனுக்குத் தோன்றியது. கடைக்காரனுக்கெதிரில் அவைகளை

கன்யாகுமரி மாவட்டம் மார்த்தாண்டம் என்ற ஊரில் உள்ள லக்ஷ்மி தியேட்டரின் கூரை, ஓடுகளால் வேயப்பட்டுள்ளது. இது போல் ஓடு வேய்ந்த திரையரங்கு வேறு எங்கும் உண்டா?

—இரா. கல்யாணசுந்தரம்

ஆணுக்கு இரண்டு வாக்கும், பெண்ணுக்கு ஒரு வாக்கும் விழுந்திருப்பதைச் சொன்னேன்...

"அப்ப அது நிச்சயம் பெண் குழந்தைதாண்டி..."

"எப்படிச் சொல்றே...?"

"நம்ம வீட்லே எது நடக்கும்னு சொல்வாங்களோ அதுக்கு—எதிரிடையா தான் நடக்கும்..."

இப்போது என் மனம் குழம்பியது ஆணுக்கும், பெண்ணுக்கும் சரிசமமான வாக்குகள்... கடைசியில் எல்லோரும் எதிர்பார்த்த அந்தப் பிரசவமும் நடந்தது. பிறந்தது—இரட்டைக் குழந்தைகள்! ஒரு ஆண், ஒரு பெண்.

எல்லோரின் வாக்கும் சரிதான்.



இளையவர் - இனியவர்

பெயர்—ப்ரசன்ன குமார்-கும்பகோணத்தைச் சேர்ந்தவர். 16 வயதில் எழுத ஆரம்பித்தார். இதுவரை 17 நாடகங்கள் எழுதியுள்ளார். குடந்தை அரசினர் கல்லூரியில் படித்த பொழுது காரைக்குடி, தஞ்சை மருத்துவக் கல்லூரி, மாயூரம் கல்லூரிகளில் நடைபெற்ற போட்டிகளில் மாநில அளவில் இவரது நாடகங்கள் தொடர்ந்து நான்கு முறை பரிசு வாங்கியுள்ளன. கல்லூரி முடிந்த அடுத்த நாள் சென்னை வந்து ராபர்ட்-ராஜசேகரனை சந்திக்க தங்களது முதல் படமான 'பாலைவனச் சோலை'யில் வசனம் எழுதும் வாய்ப்பைத் தந்தார்கள். தொடர்ந்து 'கல்யாண காலம்'—இப்பொழுது 'ஆராவமுது சவுண்டு சர்வீஸ்' 'இனி ஒரு பிரிவில்லை' ஆகிய படங்களுக்கு எழுதி வருகிறார். தன்னை சந்தித்த முதல் நாளே தனக்கு வாய்ப்பை நம்பி தந்த ராபர்ட் — ராஜசேகரனை எண்ணி வியக்கிறார்—ராபர்ட்-ராஜசேகரனையே குருவாகவும், வழி காட்டியாகவும் கொண்டிருக்கிறார். 23 வயதான இவர், சினிமா கதையாசிரியர்களில் மிகவும் இளையவர்.

—இ. இராமனுதன்.

ஊன்றிப் பார்ப்பதற்கும் வெட்கம். பார்க்க வேண்டுமென்ற ஆசையும் அதிகமாக இருந்தது.

"வாங்க சார். ஒரு அஞ்சு ரூபாய் குறைச்சுக்குங்க. நம்ம ஆளாயிருக்கிங்க."

"இல்லேப்பா. இதெல்லாம் எனக்கெதுக்கு? வயசானவன் நான். என் ஃப்ரெண்ட் ஒருத்தனுக்கு கல்யாணம். அவனுக்கு ப்ரசண்ட் பண்றதுக்காகத் தான் இந்தப் புஸ்தகமெல்லாம் வாங்கினேன். அதுவே ஜாஸ்தியாப் போச்சு. நூறு ரூபாய்க்கு குடுத்தியானு வாங்கிக்கறேன்."

பேரம் கடைசியில் நூற்று முப்பது ரூபாயில் முடிந்தது. படங்களை வாங்கிக் கொண்டு அங்கிருந்து நகர்ந்த சதீஷுக்கு இன்னொரு ஆசையும் தோன்றியது.

அந்தக் கடைக்காரப் பையனையே விசாரித்தால் ப்ளூ ஃபிலிம் எதாவது பார்க்க சான்ஸ் கிடைக்குமோ என்று தோன்றியது. ஆனால் தயக்கம். தனது அந்தஸ்தை மறந்து அந்தப் பையனிடம் போய் பல்லைக் காட்டுவதா என்று மேலும் அப்படி ஏதாவது அவனிடம் இருந்தால் படங்களைக் காட்டியது போல அவனாகவே அதைப் பற்றியும் சொல்லியிருப்பான். எப்பொழுது ஒன்றும் சொல்லவில்லையோ அப்பொழுது அவனுக்கு அது போல இடம் ஒன்றும் தெரிந்திருக்காது என்று நினைத்துக் கொண்டு அந்த எண்ணத்தைத் தவிர்த்து விட்டு அங்கிருந்து நகர்ந்தான்.

வேறெங்கும் போகாமல் நேராக ரெஸ்ட் ஹவுஸுக்குப் போய் அறையில் கதவைச் சாத்திக் கொண்டு உட்கார்ந்து கொண்டு புகைப்படங்களை ஆற அமரப் பார்க்க வேண்டும். புத்தகங்களில் எதையாவது ஒன்றைப் படிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு டாக்ஸிக்காகக் காத்து நின்றான்.

யாரோ தன் அருகே வந்து நிற்பதையறிந்து தலையைத் திருப்பி நிமிர்ந்து பார்த்தான்.

"ஜய் பகவதீ" என்று கூறி அவன் தலை மீது கை வைத்து ஆசி வழங்கியபடி நின்றிருந்த அந்த உருவத்தைக் கண்டதும் சதீஷுக்கு ஏனோ ஒரு வகை பீதி தோன்றியது.

(தொடரும்)

காஷாயத்துணி. நீண்ட ஒரு கவுன் போல அணிந்து கொண்டிருந்தார். பாதி நரைத்தும் பாதி கறுத்துமிருந்த தாடி, மார்பு வரை நீண்டிருந்தது. அதே நிறத்தில் தலை மயிர் இரு தோள்களின் மீதும் விழுந்து புரண்டு கொண்டிருந்தது. பல வகையான ருத்திராட்ச மாலைகள் பல நீளங்களில் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. நெற்றி நிறைய விபூதிப் பூச்சு. அதன் நடுவில் சந்தனப் பொட்டு — ரூபாய் வடிவில். சந்தனப் பொட்டின் முக்கால் அளவுக்கு குங்குமப் பொட்டு. வலது கையில் ஒரு சூலம். இடது கையில் ஒரு தோல் பை. கால்களில் மரப் பாதுகைகள். கண்களில் ஒரு தீட்சண்ய மான பார்வை. கூர்மையான மூக்கு. ரவீந்திர நாத் தாகூர் அல்லது அரவிந்தரை நினைவூட் டுவது போன்ற தோற்றம் — ஏறக்குறைய ஆனால் மரியாதையோ பக்தியோ தோன்று வதற்குப் பதில் சதீஷுக்கு அவரைக் கண்டதும் இனமறியாத பயம் தோன்றியது.

"க்யா நாம் பேடா, துமாரா?" என்று கேட்டார்.

"எதற்கு?" என்று ஆங்கிலத்தில் கேட்டான்.

"உன்னுடைய நன்மைக்குத்தான், சொல்லு. ஏன் பயப்படுகிறாய்?" என்று அவரும் சுத்தமான ஆங்கிலத்திலேயே பேசியதும் சதீஷுக்குக் கொஞ்சம் பயம் குறைந்தது. இருந்தாலும் முற்றிலும் அது நீங்கி விடவில்லை.

"பயம் ஒன்றுமில்லை. நான் அவசர மாகப் போக வேண்டும்." என்று நகரத் தொடங்கினான்.

இது
முழுக்க
முழுக்க
செக்ஸ்
சம்பந்தப்பட்ட
கதைதான்.
ஆனால்
ஆபாசக்
கதையல்ல.
பொறுப்பில்லாமல்
வெறும்
கவர்ச்சி
நோக்கோடு
எழுதப்பட்ட
கதையல்ல.
மிக்க
சமுதாயப்
பொறுப்புணர்ச்சியோடும்,
கருணை
உள்ளத்தோடும்
எழுதப்பட்டுள்ளது.
—ஹேமா ஆனந்ததீர்த்தன்.

ஹேமா
ஆனந்த
தீர்த்தன்



# ரேகா சதீஷ் ராஜ்



அந்த டப்பாவிலே என்ன இருக்குங்க?
காலிங்க!...

சரி!... அதிலே ஒரு அரைக் கிலோ கொடுங்க!...

—வி. பார்த்தசாரதி

"நில் போகாதே" என்று அவன் தோள் மீது கை வைத்து அழுத்தினார்.

அவரிடமிருந்து விடுவித்துக் கொண்டு போகும் துணிச்சல் ஏனோ அவனுக்கு ஏற்படவில்லை. யாராவது தங்களைக் கவனித்துத் தன் உதவிக்கு வந்தால் தேவலைபோல இருந்தது அவனுக்கு. ஆனால் அவ்வளவு நெரிசல் நிறைந்த அந்தச் சாலையில் ஒருவராவது நின்று அவர்களைக் கவனிக்கவில்லை. தலை தெறிக்க ஏதோ அவர்கள் வீட்டில் நெருப்புப் பிடித்துக் கொண்டு எரிவது போலவும் அதை அணைக்க ஓடுபவர்கள் போலவும் ஓடிக்கொண்டிருந்தார்கள்.

"இங்கே பாருங்களேன். இவர் யாரோ என்னை வழிமடக்கி வம்பு பண்ணுகிறார்" என்று அருகில் செல்பவர்களைக் கூப்பிடுவதற்கும் அவனுக்கு பயமாக இருந்தது.

தன் பயத்திற்கு ஏதும் ஆதாரமில்லாமல் போகக்கூடும். இவர் ஏதோ ஒரு சாதுவாக இருக்கலாம். யாசகம் செய்ய வந்தவராயிருக்கும். கொஞ்சம் அதிகாரத்தோடு அதைச் செய்வார் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டான்.

"உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று அவரைக் கேட்டான்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம் குழந்தாய். உனக்கு வேண்டியதைக் கொடுக்கத்தான் நான் வந்திருக்கிறேன். என் தாய் பகவதியின் கட்டளைப்படி நான் நடக்கவேண்டியவன். இந்தச்சாலையில் இவ்வளவு ஆயிரக்கணக்கானவர் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்கிறார்கள். ஆனால் நான் அவர்களையெல்லாம் விட்டுவிட்டு உன்னை ஏன் நாடி வரவேண்டும்? சொல். ஜகன்மாதாவின் ஆணை அப்படி."

"இவ்வளவு பேர்களிலும் நான் தான் இளிச்சவாயன், ஏமாந்த சோணகிரி என்பதைத் தெரிந்து கொண்டு என்னிடமிருந்து எதையாவது சுரண்ட வந்திருப்பீர்கள்" என்று சொல்லத் தோன்றியது அவனுக்கு. ஆனால் துணிச்சல் வரவில்லை.

"எனக்கு ஒன்றும் வேண்டாம். என்னைப் போகவிடுங்கள். இந்தாருங்கள், இதை வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறி சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்து அவரிடம் நீட்டினான்.

அவர் அதை வாங்கிக் கொண்டு ஹஹ்ஹாஹ் என்று சிரித்தார். அந்தச் சிரிப்பு அவனைக் கேலி செய்வது போலவும் பயமுறுத்துவது போலவும் இருந்தது.

அடுத்த விநாடி அந்த ரூபாயை அவன் சட்டைப் பையிலேயே செருகினார்.

"நீ என்னைத் தப்பாக நினைத்து விட்டாய். நான் பிச்சைக்காரனல்ல. நீ என்னை மட்டும் அவமானப் படுத்தவில்லை. ஜகன்மாதாவான பகவதியையே அவமானப் படுத்துகிறாய். தாய்க்கு மகன் பிச்சையிடுவதை எங்காவது கேட்டிருக்கிறாயா? நீ பிராம்மணன் தான் என்று நினைக்கிறேன். அப்படியானால் உனக்கு உபநயனம் எப்பொழுதோ நடந்திருக்க வேண்டுமே? அப்போது நீ உன் தாயிடத்தில் பிச்சை எடுத்திருப்பாயே —மாத்ரு பிக்ஷை — ஞாபகமில்லையா? உனக்கு ஒரு பெரிய குறை இருக்கிறது. அது உன் முகத்திலேயே எனக்குத் தெரிகிறது. அதைப் போக்குவதற்காகவே நான் வந்திருக்கிறேன். அவள் உனக்கும் தாய். உனக்கு என்ன வேண்டுமென்பது அவளுக்குத் தெரியும். ஆனால் குழந்தை நீ. உனக்கு என்ன வேண்டுமென்று உனக்கே தெரியவில்லை. நான் சொல்வது சரியா இல்லையா? உன்னிடம் ஒரு பெரிய குறை இருக்கிறதா

இல்லையா? சொல். என்னிடமிருந்து எதையும் மறைக்காதே. மறைத்தால் உன் குறை என்றென்றைக்கும் நீங்காமலே போய் விடும். ஏனென்றால் அப்படி மறைப்பது பெரிய அபசாரம்.''

ஏதோ மந்திர சக்தியால் கட்டுண்டவன் போல அவர் வார்த்தைகளால் சதீஷ் கட்டுப்பட்டவனானான்.

''ஆமாம்'' என்றான்.

''அது மறையும் நாள் வெகு தூரத்தில் இல்லை. ஒரு சாபத்தினால் அப்படி நேரிட்டு விட்டது. சாப விமோசனம் இப்போது உனக்குக் கிடைக்க அன்னை அருள் செய்து விட்டாள். என்னோடு வா'' என்று அவனை லேசாகத் தள்ளியபடி நடந்தார்.

ஹிப்னாடிஸம் செய்யப்பட்டவன் போல சதீஷ் அவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அவருடனேயே சென்றான்.

இருவரும் கிராஸ் மைதானத்தை அடையும் வரையில் ஒன்றும் பேசவில்லை.

மைதானத்தின் நட்ட நடுவே, நடைபாதையை விட்டு விலகி சிறிது தூரத்தில், ''இங்கே உட்காரலாம்'' என்று கூறி தானும் உட்கார்ந்து கொண்டு அவனையும் உட்காரும்படி சைகை செய்தார்.

எதிரும் புதிருமாக இருவரும் உட்கார்ந்து கொண்டனர்.

''ஜய் பகவதீ'' என்று கூறி கண்களை மூடியபடி சில விநாடிகள் மௌனமாக இருந்தார்.

''இப்போது சொல், உன் பெயரென்ன?'' என்று கேட்டபடி கண்களைத் திறந்தார்.

''சதீஷ்.''

''சதீஷ் போ -ா, உன் மனத்தை





ஆர். சடக்கு

வதற்காகவே பட்டணம் வந்தவரோ? ஆமாம் சார் போட்டு ஆரம்பித்தார். அதற்கு மேலே...

"என்னுடைய கேர்ல்ஃபிரண்ட்ஸ் களோட 'லவ்' வ்ரோட போக இங்கிலீஷ் படம்தான்...



ரமா

**'A' போஸ்டர்கள்—இச்சுபிச்சுகள்-இங்கிலீஷ் படங்கள் இது இன்றைய இளவட்டங்களின் இன்ப லோகம்! ஆனால் இந்த மூன்று பேர் பார்வையோ மூன்று விதம்!**



வி. இராதா கிருஷ்ணன்.

**மன்னே ஆர். சடக்கு**

இவர் மதருஸுக்கு வந்து மாறிப்போனவராம். கெட்டும் பட்டணம் போ என்றால் இவர் கெடு

...ஆனால் என்ன படிச்சிருந்தாலும் இந்த 'இங்லீபிஸ்ஸு' பாஷையெல்லாம் புரியறது இல்ல... நாகரிகமாக நாலுபேருக்காக நண்பர்கள் கேட்கிறப்போ சொல்லிக்கிற பேச்சு வழக்குக்காக 'எண்டர் தி டிராகனும்'— 'எக்ஸார் ஸிஸ்ட்டு'ம் பார்த்ததா எல்லாருக்கும் சொல்லிக்கிட்டாதானே என்னையும் படிச்சவனாக நினைக்கிறான் மதிக்கிறான். இந்த இழவுக்குத்தான் சார் இங்கிலீஷ் படத்துக்கு இத்தனை காசு"— என்று இரண்டு

---

இப்போது வாட்டிக் கொண்டிருக்கும் துன்பம் என்ன என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் நீ உன் வாயால் அதைச் சொல்ல வேண்டும் என்பது தேவியின் விருப்பம். அப்பொழுதுதான் உனக்கும் பரிகாரம் கிடைக்கும். தந்திரமாக உன் வாயிலிருந்தே விஷயங்களைக் கிரகித்துக் கொள்வதற்காக முயற்சிக்கிறேன் என்று அவநம்பிக்கைப்படாதே. அப்படி உனக்கு ஒரு துளியளவு அவநம்பிக்கையிருந்தாலும் சொல்லிவிடு. உன் குறை என்ன என்பதைச் சொல்லிவிடுகிறேன். ஆனால் அதன் பிறகு உனக்கு அந்தக்குறையைப் போக்கிக் கொள்ள எந்த விதத்திலும் நான் உதவி செய்ய முடியாதவனாகி விடுவேன். சொல், என்மேல் நம்பிக்கை வைத்து உன் மனத்தை அரித்துக் கொண்டிருக்கும் அந்தத் துன்பம் என்னவென்று சொல்"

சதீஷ் யோசித்தான்.

"நீ யோசிப்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அது நியாயம்தான். வெளியில் சொல்லிக் கொள்ள யாரும் கூச்சப்படக் கூடியதுதான். ஆனால் நீ யாரிடம் சொல்லப் போகிறாய்? உன் தாயிடத்தில்தானே? அந்தத் தாய்க்கும் மகனுக்கும் இடையே எந்த ரகசியமும் இருக்க முடியாது. எனவே தயங்காமல் சொல்லிக்கொள், அந்தத் தாயின் பிரதிநிதியான என்னிடம்... ஊம்." என்று குழைவாக

டிக்கெட்டை கிழித்துப் போட்டுவிட்டு வேகமாய் போனுர்.

''ஏன்?''

''திடீர் திடீர் கனவுகள்— காப்பி அடிச்ச டியூன்கள்— கனத்த மழையில் கட்டிப்புரண்டுவிட்டு, பிறகு நனையாமலேயே மரத்தைச் சுற்றி வருகிற புளித்துப் போன முகங்கள்! இவையெல்லாம் பார்த்து மரத்துப்

உச்சரிப்பு—மட்டம் போட்டு விட்டு மாட்னிஷோ போகிறவராம். அதுவும் மவுண்ட்ரோடுக்கு! 'டென்' படம் பார்த்தாராம், அதை பத்துமுறை சொல்லி விட்டார் மேலும் சொன்னுர்..

''விசில் பறக்காது—வம்பு தும்பு இருக்காது—ஆங்கிலப் படம் பார்க்கிற ஆடியன்ஸே தனி! அறிவு— அந்த மொழி-கலாச்சாரம் இதுக்காகத் தான் நான் இங்கிலீஷ்படம் போகி

# இங்கிலீஷ் படம் பார்க்கிற இளசுகள்!

போச்சு சார்.பக்கத்துல உட்காந்திருக் கிறதும் மறந்து போயிடும் சார் ஒரு 'கிக்' இருக்கவேண்டாம். மூன்று மணி நேரம் அழுது தொலைக்கவா அழைச்சிக் கிட்டு வர்ரோம். ஏதோ ஜாலியாக படத்துல ஓடும்போது...'' உச்சகட்டத் தில் ஹீரோவாகவே ஆயிடுவாரோ? சந்தேகம் எழும் போதே அடுத்த பதிலும் வந்தது...

''ஆனுல் அடிதடி காட்சியிலும் காதைத்துளைக்கிற கர்ண கொடூர இசையிலும் காப்பி குடிக்கப் போயிடு வேன் சார்...பக்கத்துல உட்கார்ந் திருக்கிற ஜோடியோடதான்''... என்றுர் அழுத்தமாக!

**ஆதம்பாக்கம் செல்வி. எஸ். ரமா**

பேச்சில் அதிகமாய் ஆங்கில

றேன். என்னை பொறுத்த வரை முன்னே மாதிரி ஆங்கிலப்படம் இப் போது வருவதில்லை. இதில் ரஷ்யன் படங்கள் என்றுல் மட்டும் எனக்கு அலர்ஜி.

'தி கிரேட் டிரெயின் ராபரி' சமீபத்தில் பார்த்த சிறந்த படம். வார்னர் பிரதர்ஸ் படங்களை எப்போ தும் நம்பலாம். 'மெக்கன்னுஸ் கோல்டு' படத்தினை பார்த்த பிறகு தான் ஆங்கிலப்பட ஆசை ஆரம்பித் தது...''—என்கிறுர் ரமா!

**வி.ராதாகிருஷ்ணன் வீட்டில் ஆங்கில மேநாட்டு இசை ஆர்ப் பாட்டமாய் அலறிக் கொண்டி ருந்தது. அவர் சொன்னுர்.**

---

ஆரம்பித்து மிரட்டுவது போல முடித் தார்.

சதீஷ் அதன் பிறகு தயங்க வில்லை. சென்ற ஒரு வாரமாகத் தான் படும் அவஸ்தையை அவரிடம் விவரித் துச் சொன்னுன்.

''கவலைப்படாதே. நான் ஏற் கனவே உன்னிடம் கூறியபடி இது ஒரு சாபத்தினுல் ஏற்பட்ட விளைவு. போன ஜன்மத்திலே உன் தகப்பனுர் உன் தாயார் இறந்த பிறகு இரண்டாவது மணம் செய்து கொண்டார். அப்பொழுது உனக்கு இரண்டும் கெட்டான் வயது. அதனுல் உன் தகப்பனுரோடுதான் படுத்துக் கொள்வேன் என்று பிடிவாதம் பிடித்து உன் சிற்றன்னையின் இன்ப

வாழ்க்கைக்கு முட்டுக்கட்டையாக இருந் தாய். அந்த சமயத்தில் உன் சிற்றன்னை ஆத்திரத்தில் உனக்குக்கொடுத்த சாபம், அந்த ஜன்மத்தில் ஒன்றும் செய்யாமல் இந்த ஜன்மத்தில் பீடிக்கிறது. பரவா யில்லை. சின்றின்ப மோகத்தில் கொடுத்த சாபமாதலால் அதற்கு அவ்வளவாக சக்தி கிடையாது. வெகு சுலபத்தில் விமோசனம் கிடைக்கச் செய்யலாம்.'' என்று கூறியபடி தமது பையைத்திறந்து அதில் எதையோ துழாவத் தொடங் கினுர்.

சதீஷ் மலைத்துப் போய் அவர் என்ன செய்கிறுர் என்று பார்த்துக் கொண்டிருந்தான்.

பையை விட்டுக் கையை எடுக்

''இசைக்காக படம் பார்ப்பேன். சமீபத்தில் 'BLUE LAGOON' பார்த்தேன். குப்பைப் படமாக இருந்தால் கூட பார்த்துவிடுவேன். மொழியில் அமெரிக்கன் இங்கிலீஷ் கொஞ்சம் கஷ்டம். பிரஞ்சு இங்கிலீஷ் அப்படி இல்லை.

சிலர் நினைக்கிற மாதிரி ஆங்கிலப்படம் அக்கரை பச்சையில்லை. அக்கரையில் இருக்கிற நிஜப்பச்சைகள்! [BENJI] 'பெஞ்சி' படத்தில் வருகிற நாய்க்குட்டியை பார்த்துவிட்டு அது மாதிரி வாங்க நாயாய் அலைகிறேன். நிச்சயமாய் கிடைக்காது. ஆனுல் இன்னெருமுறை வந்தால் அந்த படத்தைதான் பார்க்கவேண்டும்.''

—இப்படிச் சொல்லி விட்டு என்னிடமே ஒரு எதிர் கேள்வியை வீசினுர் ராதா!

''ஏன் சார் இதெல்லாம் என்னை கேட்கிறீங்க? ஏதோ படம் பார்க்கிற அந்த நேரத்துக்கு மனசுக்கு நிறைவு. நானென்ன மியூசிக் டைரக்டரோ-கதை ஆசிரியரோ, டைரக்டரோ இல்ல — அப்படியே அப்பட்டமாக அடிக்கறதுக்கு'' என்று ஒரே அடியாய் அடித்துப் போட்டு விட்டுப் போனுர் ராதாகிருஷ்ணன்.

ஆஹா ஆங்கிலப் படங்களும், அதன் ரசிகர்களும் அப்படியோ!

—பேட்டி: கு.கீதப்பிரியன்.

காமலே அவர் சதீஷைப் பார்த்துச் சொன்னுர்: ''நான் பிறந்தது கேரளாவில். பகவதி க்ஷேத்திரமான கொடுங்களூரில். எனவே பகவதியின் மடியில் பிறந்தவன் என்று நான் சொல்லிக் கொள்ளலாம். என் பெற்ருேர்கள் உறவினர்கள். எல்லோருமே பகவதியின் பக்தர்கள். நான் கொடுங்களூரிலும் எர்ணுகுளத்திலும் படித்து பி.ஏ.பட்டம் பெற்றேன். வேலை தேடிக் கொண்டிருந்தேன். அப்போதுதான் எனக்கு தாயின் கட்டளை பிறந்தது. ஒருநாள் கனவில், எல்லோரைப் போல நீயும் வேலை சம்பளம், கல்யாணம், மனைவி, குழந்தைகள் என்று இப்படித்தான் வாழப் போகிருயா? வேண்டாம். இந்த ஊரை விட்டுப்போ. இந்த தேசத்திலுள்ள புண்ய க்ஷேத்திரங்களுக்கெல்லாம் போய் அங்கங்கே உள்ள தெய்வங்களை தரிசனம் செய். உன் ஆத்மீக சக்தி வளரும்.

எங்கும் நிரந்தரமாகத் தங்கி விடாதே. சஞ்சாரம் செய்து கொண்டே இரு. பிறருடைய துயரங்களைத் தீர்க்கும் சக்தி உனக்குத் தானே உண்டாகும். அதை துருபயோகப்படுத்தி பணம் காசு சம்பாதிக்காதே. கிடைக்கும் பணத்தை தர்மம் செய்துவிடு' என்று. உடனே புறப்பட்டு விட்டேன். ரிஷிகேசம், ஹரித்வார், பத்ரிநாத், கேதார்நாத். கங்கோத்ரி,யமுனேத்ரி, அமர்நாத், வைஷ்ணேதேவி என்று எல்லா இடங்களிலும் சுற்றிக் கொண்டே இருக்கிறேன். ரிஷிகேஷத்தில் எனக்கு ஒரு குரு கிடைத்தார். அவருடைய மந்திர, தந்திர சக்திகளையெல்லாம் எனக்குக் கற்றுக் கொடுத்தார். அதன் பயனுக எந்த வியாதியையும் சொஸ்தம் செய்யக் கூடிய சக்தி எனக்குக் கிட்டியது. அவருடைய பெரிய ஆசிரமம் ரிஷிகேசத்தில் இருக்கிறது.

நான் யாரிடமும் வைத்தியச் செலவுக்காக ஒரு பைசா கூட வாங்கக் கூடாதென்பது என் குருநாதரின் கட்டளை. ஆனுல் என் குருநாதர் நடத்தி வரும் ஆசிரமத்திற்கு நன்கொடை வசூலித்து அனுப்புவதை என் கடமையாகக் கொண்டிருக்கிறேன். வைஸம்பாயனுனந்தாசிரமம் என்று நீகூடக் கேள்விப் பட்டிருக்கலாம். நூறு பால விதவைகளை அந்த ஆசிரமம் ஆதரித்துக் காப்பாற்றி வருகிறது. இன்னும் பலரை ஆதரித்து அபயமளிக்கவேண்டுமென்பது குருநாதரின் இச்சை. அதற்கு இடம் போதாது. புதிய கட்டிடம் கட்டவேண்டும். அதற்கு நிதி வசூல் செய்யவேண்டும். உன்னுல் ஆனதை நீ கொடு. இந்தா, இதை வைத்துக் கொள்'' என்று கூறி ஒரு சின்ன பாட்டிலைக் கொடுத்தார். அதில் விபூதி மாதிரி ஏதோ இருந்தது.

சதீஷ் அதைப் பெற்றுக் கொண்டான்.

''இது மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட ஒரு பஸ்மம். காலையில் எழுந்ததும் இதில் ஒரு சிட்டிகையை எடுத்துத் தேனில் குழைத்து சாப்பிடு. இரவில் ஒரு சிட்டிகைப் பாலில் போட்டு சாப்பிடு. பதினைந்தே நாள் சாப்பிட்டால் போதும். உன் இயலாமை மாயமாய் மறைந்து போய் உனக்கு அபரிதமான வீர்யசக்தி உண்டாகும்.'' என்ருர்.

சதீஷ் அந்தப் பாட்டிலை எடுத்து



"நேற்று எங்கள் வீட்டிலே ஒரு திருடன் நுழைஞ்சு ஒரு தவலையைத் திருடிண்டு போய் விட்டான் சார்!"

"அடப் பாவமே..."

"அதோடு போயிருந்தால் பரவாயில்லையே?"

"ஏன் வேறு ஏதாவது திருட்டுப் போய் விட்டதா...?"

"தவலை நிறைய தண்ணீர் வேறு இருந்தது சார்!"

—கல்கத்தா மிக்கி

தனது பாண்ட் பாக்கெட்டில் பத்திரப் படுத்திக் கொண்டான்.

பர்ஸிலிருந்து பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவரிடம் நீட்டினான்.

அவர் அந்த நோட்டைத் தொடாமலே அவனைப் பார்த்து பயங்கர மாகச் சிரித்தார்.

"வேண்டாம். நீயே வெச்சுக்கோ. பணம் உனக்கு அவ்வளவு தேவையாக இருந்தால் நான் வேணுமானால் உனக்குக் கொடுக்கிறேன். எவ்வளவு வேணும்?" என்று கேட்டபடி தமது தோல் பையிலிருந்து பர்ஸை எடுத்துத் திறந்தார். அதில் கத்தை கத்தையாக நோட்டுகள் இருந்ததை சதீஷ் கவனித் தான்.

சதீஷுக்குப் பயமாக இருந்தது.

"எவ்வளவு கொடுக்கணும்னு எதிர் பார்க்கிறீர்கள்?" என்று பயந்த படியே கேட்டான்.

"உனக்கு மாத வருமானம் எவ்வளவு?"

"நாலாயிரம் ரூபாய்" என்று உண்மையைச் சொன்ன சதீஷ் உடனே வருத்தப்பட்டான். அப்படிச் சொல்லி யிருக்கக் கூடாதென்று பிறகுதான் அவனுக்குத் தோன்றியது.

"சரி, நானூறு ரூபாய் கொடு."

"என்னிடத்தில் அவ்வளவு இல்லை."

"பகவதியிடத்தில் பேரம் பேசு கிறாயா? அவளுடைய கோபம் உன்னை என்ன செய்யும் தெரியுமா?" என்று கேட்ட போது அவர் கண்களில் மின்னிய கோபத்தைக் கண்டு சதீஷின் உடல் வியர்க்கத் தொடங்கியது.

"மன்னிக்க வேண்டும். நீங்கள் அட்ரெஸ் குடுத்தால் நான் உங்கள் குரு நாதரின் ஆசிரமத்திற்கே பணத்தை அனுப்பி விடுகிறேன்."

"அதாவது என்னிடத்தில் உனக்கு நம்பிக்கை இல்லை. என்னை மோசக்காரன் என்று நீ சந்தேகப்படு கிறாய். அப்படித்தானே?" என்று சினம் அதிகரிக்கக் கேட்டார்.

"ஐயோ அப்படியெல்லாம் இல்லை. என்னிடம் இப்போது இருக்கும் பணத்தை உங்களிடம் கொடுத்து விடுகிறேன், பாக்கியை உங்க ஆசிரமத் திற்கு அனுப்பி விடுகிறேன்."

"உன்னிடம் இப்போது எவ்வளவு இருக்கிறது?"

"நூற்றைம்பது ரூபாய் இருக் கிறது" என்று எடுத்துக் கொடுத்தான்.

"சரி, நாளைக்கு இதே நேரத் திற்கு இங்கே பாக்கியைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறாயா?"

"சரி."

"சரி போ. நாளைக்கு பாக்கி பணத்துடன் வா. ஒரு விஷயம் ஞாபகம் வெச்சுக்கோ. இந்த பஸ்மத்தை உபயோகிக்கிற நாட்களிலோ, உபயோ கித்து பத்து நாட்களுக்குள்ளாகவோ நீ உன் மனைவியல்லாத வேறு பெண் களை நாடக் கூடாது. நாடினால் உனக்கு தோல்விதான் கிட்டும். ஜாக்கிரதை. ஜய் பகவதி" என்று கூறி அவன் தலை மீது கை வைத்து ஆசீர்வதித்து விட்டு விடுவிடுவென்று சர்ச்கேட் ஸ்டேஷன் இருந்த திசையை நோக்கி நடக்கலானார்.

சதீஷ் செயலிழந்து அவர் செல் வதையே பார்த்தபடி நின்று கொண்டி ருந்தான்.

(தொடரும்)

# காங்கேயம் காளையும்... கண்டாங்கி சேலையும்...

வண்டி ஓடுது ஒய்யாரமா...
சுண்டி இழுக்குது வெகு நேரமா...
கொப்பிக மின்னுது தங்கமயமா...!
காளைக ரெண்டும் காங்கேயமா...?
உருமாலெக் கட்டழகா—என்
உருவந் தெரியும் பொட்டழகா...!

●

தூண்டி போடுற பேச்சுக்காரி
கெண்டை துள்ளுற வீச்சுக்காரி...
உன்னெ கண்டா எனக்கு சுறுசுறுப்பு...
எழநியெ போல குளுகுளுப்பு...!
தெனெ மாவுதா உன் ஒடம்பு
துடியா துடிக்குதென் நரம்பு...!

●

கடிச்சாத்தா ருசிக்கும் பூங்கரும்பு
நெனச்சாலே ருசிக்கும் உங்க குறும்பு...!
தொட்டாத்தா மலரும் புதுஅரும்பு
பாத்தாலே மலரும் காதலரும்பு...!
உருமாலெக் கட்டழகா—என்
உருவந்தெரியும் பொட்டழகா...!

●

பொம்பளெ சிரிச்சா போச்சுதுன்னு
எவனோ சொன்னது வெறும்பேச்சு...!
நீ அடிக்கடி காட்டுற மதுமனசு...
அட்டகாச மூட்டுற புது தினுசு—இப்ப
தாருக்குச்சி என் கையிலிருக்கு...
தடத்துமேலதா கெவனமிருக்கு...!

●

வெடிச்ச பருத்தி செடியிலிருக்கு...
கோடி ஆசை மடியிலிருக்கு—மச்சா
கோடி ஆசை மடியிலிருக்கு...!
நெலா கிளம்பற நேரம் பாத்து
அலுங்காம வர்றே அல்லியா பூத்து
—மச்சா
அலுங்காம வர்றே அல்லியா பூத்து...!

●

கன்னம் இனிக்குமடி கல்கண்டா...
கண்டாங்கி மணக்குமடி பூச்செண்டா...!
இன்னும் எத்தனையோ ஒண்ணு
ரெண்டா
இங்கயே அதையெல்லா எண்ண
வேண்டா...!

●

வண்டி ஓடுது ஒய்யாரமா...
சுண்டி இழுக்குது வெகுநேரமா...
கொப்பிக மின்னுது தங்கமயமா...!
காளைக ரெண்டும் காங்கேயமா...?



# ரேகா சதீஷ் ராஜி

## 23

### ஹேமா ஆனந்ததீர்த்தன்

அந்தச் சாமியார் பார்வையிலிருந்து மறைந்ததும் சதீஷ் கனவு கண்டு விழித்தவன் போன்ற ஒரு நிலையை அடைந்தான். இதுவரையில் நடந்ததெல்லாம் உண்மை என்று நம்புவதற்கே அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. கெட்ட சொப்பனம் ஒன்று கண்டு பயந்து போய் விழித்துக் கொண்டதும் மனத்தை அரிக்கும் ஒரு வேதனை அவனை அரிக்கத் தொடங்கியது.

தான் பம்பாய்க்கு வந்தது முதல் வரிசையாக, ஒன்றன் பின் ஒன்றாக, செய்த முட்டாள்தனமான காரியங்களை அவனால் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

சௌரிராஜனுடன் தொடர்பு கொண்டது, டாக்டர் அக்ர்வாலைப் போய்ப் பார்த்தது, கல்பனாவின் வீட்டிற்குச்சென்றது, புத்தகங்கள் வாங்கியது, புகைப்படங்கள் வாங்கியது, இந்தச் சாமியாரைச் சந்தித்து அவர் கொடுத்த பஸ்மத்தை வாங்கிக் கொண்டது—இவை ஒவ்வொன்றும் படுமுட்டாள்தனமான காரியம் என்று அவனுக்கு இப்போது தோன்றியது.

கூட்டத்தில் சட்டைப்பையில் வைத்திருந்த பணத்தைப் பறி கொடுத்தவனின் மனநிலையில், கனத்த இதயத்துடன் அங்கிருந்து நகர்ந்து சாலையை நோக்கி நடை போட்டான்.

மனம் பாரமாக இருந்தது போலவே, கையிலிருந்த புத்தகங்களும் கனமாக இருந்தன. இந்தப் புத்தகங்களை வீட்டிற்குக் கொண்டு போகாமல் ஆபீசிலேயே வைத்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்துக் கொண்டான். இவைகளில் ஏதாவது ஏற்கனவே ரேகாவிடம் இருக்குமோ என்னமோ என்ற சந்தேகம் இப்பொழுதுதான் அவனுக்குத் தோன்றியது. ரேகா ஒரு புத்தகப் பைத்தியம். மாதம் தோறும் நூறு நூற்றைம்பது ரூபாய்க்கு ஏதாவது புத்தகங்களை வாங்கிக் குவித்துக் கொண்டே இருப்பாள். அவைகளை அவன் புரட்டிப் பார்த்ததுகூடக் கிடையாது. அவனுக்கு அவைகளில் ஆர்வம் இல்லை. அவளாக

இது
முழுக்க
முழுக்க
செக்ஸ்
சம்பந்தப்பட்ட
கதைதான்.
ஆனால்
ஆபாசக்
கதையல்ல.
பொறுப்பில்லாமல்
வெறும்
கவர்ச்சி
நோக்கோடு
எழுதப்பட்ட
கதையல்ல.
மிக்க
சமுதாயப்
பொறுப்புணர்ச்சியோடும்,
கருணை
உள்ளத்தோடும்
எழுதப்பட்டுள்ளது.

ஹேமா
ஆனந்ததீர்த்தன்.

எப்போதர்வது ஏதாவது புத்தகத்திலிருந்து ரசமான பகுதிகளாக எதையாவது படித்துக் காட்டினுல் வேண்டா வெறுப்பாக, அவள் மனம் நோகக் கூடாதே என்பதற்காகக் கேட்டுக் கொள்வான். அவ்வளவுதான்.

புத்தகங்களை வாங்கும்போதே தனக்கு இந்த யோசனை தோன்ருமற் போனதற்காக தன்னையே நொந்து கொண்டான்.

சாலையை அடைந்ததும் காலி டாக்ஸி ஒன்று கிடைக்கவே அதில் ஏறி உட்கார்ந்து கொண்டு,போக வேண்டிய இடத்தைச் சொன்னுன்.

மாலையில் தான் விமானம் ஏறும் வரையில் சௌரிராஜன் கண்ணில் பட்டு விடாமலிருக்க வேண்டுமே என்ற கவலை அவனுக்குத் தோன்றியது. நேற்று தான் சொன்னபடி மறுபடியும் கல்பனுவைத் தேடிச் செல்லாததால் அவள் கோபம் கொண்டு தன் ரகசியத்தை அவரிடம் உடைத்து விட்டிருப்பாளோ என்ற பயமும் கூடவே தோன்றியது.

நாளைக்கு இந்த மைதானத்தில் அந்தச் சாமியாரை மறுபடியும் சந்தித்து பாக்கிப் பணத்தைக் கொடுப்பதாகச் சொன்னது நினைவு வந்ததும், நல்ல வேளையாக நாளை நாம் பம்பாயில் இருக்க மாட்டோம் என்ற சமாதானம் உண்டாயிற்று. ஆனுல் அடுத்த நிமிடமே அந்த சாமியார் எப்போதாவது சென்னைக்கு வந்து தான் அவர் கண்களில் பட்டு விடாமல் இருக்க வேண்டுமே என்றும் பயந்தான்.

'எப்பொழுது பாக்கிப் பணத்தை ரிஷிகேஸுக்கு அனுப்ப வேண்டாம் என்று சொன்னுரோ அதிலிருந்தே தெரிகிறது அவர் ஒரு ஃப்ராட் என்று. சென்னைக்குப் போனதும்—முதல் காரியமாக தனது நண்பரான பி. எம். ஜி.யைக் கூப்பிட்டு அவர் இலாகா மூலமாக ரிஷிகேஸில் வைஸம்பாயனுனந்தாசிரமம் என்று இருக்கிறதா என்பதை விசாரிக்கச் சொல்லவேண்டும். அப்படி ஒன்றும் இல்லையென்று தெரிந்தால் நான் ஏன் இந்தச் சாமியாருக்கு பயப்படவேண்டும்? மறுபடியும் அவர் என் கண்ணில் பட்டால் அவரைப் போலீசில் பிடித்துக் கொடுத்துவிடவேண்டியதுதான்' என்று தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டான்.

டாக்டருக்கு நூற்றைம்பது,



இளமை உள்ளம் ரெண்டு—புது
இன்ப வெள்ளம் கண்டு
உலகை மறந்து பறக்கும்—காதல்
உலகம் அங்கு பிறக்கும்!
—'அலெக்ஸ் பாண்டியன்' படத்தில்
ரஜினி-ராதிகா



ண்ணினது கிடையாது. ஆண்தான் னிஷியேடிவ் எடுத்துக்கணும்னு ணைக்கறவ. அந்த இனிஷியேடிவை த்துக்கறதா வேண்டாமாங்கறதை ட்டும் நான் டிசைட் பண்ணுவேன். ங்க அந்த இனிஷியேடிவ் எடுத் க்கவே இல்லே. ரெண்டாவது, நீங்க ப்படியே இனிஷியேடிவ் எடுத்துண்டி ந்தாலும் நான் இணங்கியிருப்பேனுங் து சந்தேகம். ஏன்னு, யூ ஆர் மை ஸ், உங்ககிட்டேருந்து உத்தியோகத் ல பிரமோஷனேயோ, சலுகைகளேயோ திர்பார்த்துத்தான் நான் உங்க விருப் துக்கு இணங்கினேன்கற மாதிரி ந்துடும். அது எனக்குப் பிடிக்காது. துல அழகு இளமை இவைகளேவிட க்கியமானது மனசுதான்."

"இதையெல்லாம் இப்ப நான் ன்னைக் கேட்கறதுனலயும், இங்கே ன்னைக் கூட்டிட்டு வந்திருக்கறதுனல நான் உன்னை அடைய விரும்ப றேன்னு நீ முடிவு கட்டியிருக்கலாம். ஆனு விஷயம் அது இல்லே ராஜி."

"இன்னிக்கு நீங்க பெரிய புதிரா இருக்கிங்க சார்."

"புதிர் இல்லே ராஜி. நான் ஒரு பிரச்னை. எனக்கே நான் ஒரு பிரச்னை. உன்னிடம் ஒரு பிச்சை கேட்க வந்திருக்கிறேன் ராஜி" என்று கூறிய சதீஷ், அவள் சற்றும் எதிர்பாராத வண்ணம் அவளுடைய மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அவள் இடையைத் தன் கைகளால் சுற்றி வளைத்துக் கொண்டான். அவன் உடல் குலுங்குவதிலிருந்து அவன் அழுகிருன் என்று தெரிந்தது.

ராஜி ஒன்றும் புரியாமல் திக்பிரமை பிடித்தவளாக அவன் தலையை வருடிக் கொடுத்தாள்.

(தொடரும்)

# அம்சவாகினி

கோவிலின் வடக்குப் பிரகாரத்தின் மேற்குக்கோடியில் நர்த்தன நடராசருக்கும், சிவகாமி அம்மையாருக்கும் கோயில் அமைந்துள்ளது. இதன் கிழக்குப்புறம் வில்வமரம் அமைந்துள்ளது. அருகில் காசி விஸ்வநாதருக்கும், விசாலாட்சி அம்மைக்கும் தனித் தனிக் கோயில் உண்டு. இந்தப் பிரகாரத்தின் கிழக்குக் கோடியில் உற்சவமூர்த்தியாக நடராஜரும், சிவகாமியம்மையும் காட்சி அளிக்கின்றனர். சிதம்பரத்தைப் போன்றே இங்கும் ஆனித் திருமஞ்சனத்தின் போதும் ஆருத்திர தரிசனத்தின் போதும் தனி விழாக்கள் நடைபெறுகின்றன.

வேதபுரீஸ்வரர், அம்பிகை ஆகியோரின் அர்த்த மண்டபங்களோடு சேர்ந்தாற்போல் இருபதுகால் மகா மண்டபம் இருக்கிறது. அம்மன் சன்னதிக்கு எதிரில் உள்ள மண்டபத்தூண் ஒன்றில் ஆஞ்சநேயருக்கு சன்னதி அமைந்திருக்கிறது. மேற்கு புறத்தில் வலம் வருகையில் திருக்குளத்திற்கு போகும் வழியைக் காணலாம். குளத்தைச் சுற்றிலும் மணம்மிக்க மலர்கள் நிறைந்த அழகிய நந்தவனம் கண்களுக்கும் மனதிற்கும் இனிமை தருகிறது.

திருக்கோயிலின் ஒரு பகுதியாகத் திகழ்வது அறிவுக் கோயில். அறிவுக் கோயிலை அணி செய்வது நூலகம்: படிப்பதும், கேட்பதும், சிந்திப்பதும், செயல்படுவதும், படிப்படியாக அறிவின் வளர்ச்சியை குறிக்கிறது. அறிவின் வளர்ச்சியில்தான் ஆக்கங்கள் அர்த்தமுள்ளவையாகின்றன.

படிப்பதை விட கேட்பது சிறந்தது.

கேட்பதை விட சிந்திப்பது சிறந்தது.

சிந்திப்பதை விட செயல்படுவது சிறந்தது.

ஆனால் தேர்ந்த அறிவில் சிறந்த அறிஞர்களின் எண்ணக் கோவைகள் எல்லோரையும் சென்றடைய அவர்கள் எழுத்துப் படிக்கப்படுவது ஒன்றுதான் எளிய வழி. அவர்கள் பேசும் பேச்சைக் கேட்கும் வாய்ப்பு பலருக்கு எளிதில் கிட்டாமல் போகலாம். ஆனால் அவர்கள் தம் எழுத்துக்கள் நூல் வடிவம் பெறும் பொழுது பல்லாயிரக்கணக்கான நூலகங்கள் அவற்றைப் பெற்று பல
வாசகர்களின் அறிவுப் பசிக்கு அறு
விருந்தாக அமையும் நல் வ
இருக்கிறது.

பல நூல்களை ஒரே இட
சேர்ப்பதால் அவரவர்கள் ஆர்வத்
உகந்தவாறு அந்த அரும்புகள்
மலர்வதற்கு ஆகாய ஒளியாக
உதவுகிறது. நூலகம் நம் நுண்ணுண
நன்கு புரிந்து அமைக்கப்பட்டிரு
அமைப்பாகும். கதையாக, கட்
யாக, ஆராய்ச்சியாக விஞ்ஞானம்,
ஞானம் இரண்டும் கற்கண்டு கட
கண்ணுக்கும், கருத்துக்கும் மி
பயனளிப்பது நூலகம். ஆண்ட
அறிய அறிவுக் கோயில் திறக்க
வேண்டும். அந்த அறிவுக் கோயி



அழகுச் சிற்பங்களை அனைத்து நூல்
அந்த நூலகத்தில் நுழைந்து அறி
கோயில் தரிசனம் பெற்ற பின்பு
அகக் கோயில் திறந்து ஆண்டவ
தரிசனம் அடையும் வழியை அ
முடியும்.

ஆண்டவனின் திருக்கோ
லேயே அதன் ஒரு பகுதியாக அறி
கோயிலும் அமைந்திருப்பது வேதபு
மிகுந்த பெருமைக்கு மற்றுமோர் சா
கும். மனம் தூய்மைப் பட்டிருக்கும்
நிலையில் அது ஏற்கும் உணர்வும் ஆ
தத்தின் அலங்காரங்களாகவே இருக்
முதல் பிரகாரத்திற்கும், இராஜ கோப
தின் இடைபட்ட மண்டபப் பகுதி
இந்த நூலகம் இடம் பெற்றுள்ள
இலக்கியம், சமயம், அறிவியல் து
களைச் சேர்ந்த சிறந்த நூல்கள் பல்

வெகுநேரம் சதீஷ் அப்படியே ராஜியின் மடியில் முகத்தைப் பதித்தபடி இருந்தான். ராஜியும் அவன் சமாதானமடையட்டும் என்பதற்காகக் காத்திருந்தாள்.

"எக்ஸ்கியூஸ் மீ ராஜி. நான் ஒரு சின்ன குழந்தையைப் போல நடந்துண்டுட்டேன்" என்று கூறியபடி சதீஷ் எழுந்து கண்களைத் துடைத்தபடி அவளருகில் அமர்ந்து கொண்டான்.

ஹேமா ஆனந்த தீர்த்தன்

# ரேகா சதீஷ் ராஜி 27

"இவ்வளவு 'அகனி' உங்களுக்கு எதனாலேன்னு தெரியாமே எனக்கு உங்களை எப்படி சமாதானப் படுத்தறதுன்னு தெரியல்லே சார். என்கிட்ட சொல்றதுக்காகத்தானே என்னைக் கூட்டிண்டு வந்திருக்கிங்க? அப்புறம் என்ன தயக்கம்?"

"தயக்கத்துக்குக் காரணம் இருக்கு ராஜி."

"எந்தக் காரணம் இருந்தாலும் அதையெல்லாம் பொருட்படுத்தாம உங்க துக்கத்துக்குக் காரணத்தைச் சொல்லுங்க சார். உங்களுக்கு நான் உதவ முடியல்லேன்னாக் கூட அட்லீஸ்ட் ஐ கேன் ஷேர் யுவர் க்ரீஃப் வித் யூ" என்று ராஜி சதீஷின் கைகளைப் பற்றியபடி கேட்டாள்.

"என்னைத் தப்பா நினைக்க மாட்டியே?"

"கண்டிப்பா மாட்டேன்."

"நான் சொன்னதுக்கப்புறம் அந்த ரகசியத்தைக் காப்பாத்துவியா?"

"என்னை நம்புங்க."

"இந்த மாதிரியான ஒரு வேண்டுகோளை எந்த ஆணும் எந்தப் பெண்ணிடத்திலும் எப்பவுமே கேட்டிருக்க முடியாதுன்னு எனக்குத் தோணறது."

"அதனாலென்ன? நீங்களே அந்த முதல் ஆணாகவும், நானே அந்த முதல் பெண்ணாகவும் இருந்து விட்டுப் போவோமே?"

"அன்னிக்கு சினிமாவுல ரேகாவும் நானும் உன்னைப் பார்த்தோமே அன்னிக்கு இருந்த சதீஷ் வேற. இன்னிக்கு உன் பக்கத்துலே உக்காரந்திருக்கற சதீஷ் வேற. இந்த சதீஷ் மறுபடியும் அந்த சதீஷ் ஆகணும்னா உன் உதவி தேவையாயிருக்கு ராஜி."

"சொல்லுங்க சார். ஐ எம் டையிங் டு ஹியர் வாட் இஸ் யுவர் ட்ரபுள். யூ ஆர் கெட்டிங் ஆன் மை நெர்வ்ஸ்."

"சாரி ராஜி. சொல்றேன். அன்னிக்கு ராத்திரி என்னாலே என் மனைவி ரேகாவை அனுபவிக்க முடியல்லே."

"ஐ ஸீ. இப்ப எனக்கு புரிஞ்சு போச்சு. ஃலக் எ ஃப்ளாஸ் எல்லாம் எனக்குப் புரிஞ்சு போச்சு" என்றாள் ராஜி சிரித்தபடியே.

சதீஷ் அதிர்ச்சியடைந்தான்.

இவள் என்னத்தைப் புரிந்து கொண்டிருப்பாள்? எப்படி?

"உன்னால் முடியாது ராஜி.'

"நான் சொல்லட்டுமா?"

"ஊம்."

"உங்க மனைவிக்கு நம்ம ரெண்டு பேர் மேலயும் சந்தேகம். தவறான அபிப்ராயம். அதனாலெ அவங்களுக்கும் உங்களுக்கும் சண்டை. அவங்க உங்க கிட்ட கோபிச்சுட்டு பிறந்த வீட்டுக்குப் போயிட்டாங்க. அந்த வருத்தத்துலதான் நீங்க அன்னிக்கு பாம்பேக்குப் போறதுக்கு முன்னாடி எங்கிட்ட அநாவசியமா கோபிச்சுண்டிங்க. இப்ப உங்க ரெண்டு பேருக்குமிடையிலே நான் வந்து சமாதானம் பண்ணி வெக்கணும். இல்லியா? ஆம் ஐ நாட் கரெக்ட்?" என்று கேட்டு ராஜி சிரித்தாள்."

சதீஷ் அவளைப் பார்த்து சோகமாகச் சிரித்தபடி தலையை 'இல்லை' என்பது போல ஆட்டினான்.

"என் முன்னால நிக்கற பிரச்னை ஒரு மலை. நீ நினைச்சுக்கிட்டிருக்கறது ஒரு சின்ன மண் கட்டி."

"மறுபடியும் விடுகதை போட ஆரம்பிச்சிட்டிங்களே."

"நீ சொல்றதும் வாஸ்தவம்தான். என் மனைவிக்கு சிறு சந்தேகப் பொறி தட்டியிருக்கறது வாஸ்தவம்தான். ஆனா அவளுக்கு என் மேல நம்பிக்கை இருக்கு. இதுவரையிலும் நான் தவறியிருக்க மாட்டேன் என்கிற நம்பிக்கை அவளுக்கு இருக்கிறது. ஆனால் பயமும் இருக்கிறது. இனிமேல் தவறி விடுவேனோங்கற பயம். எனக்கும் அவளுக்கும் சண்டை கிண்டை ஒண்ணும் கிடையாது. அவள் தகப்பனாருக்கு உடம்பு ரொம்ப ஸீரியஸ்னு மெஸேஜ் வந்து அவ கோயமுத்தூர் போயிருக்கா."

"ஐ எம் ஸாரி. அப்ப நீங்க அன்னிக்கு ராத்திரி அவங்களை அடைய முடியாமப் போன காரணம்?"

"தவறு அவளுடையதல்ல. என்னுடையதுதான்... நோ, என்னுடையதும் அல்ல. விதி என் மூலமா அன்னியிலிருந்து விளையாட ஆரம்பிச்சு இன்னிவரையிலும் விளையாடிண்டிருக்கு" என்று சொல்லத் தொடங்கி அன்று முதல் இந்த நிமிடம் வரை நடந்தவைகள் எல்லாவற்றையும் ஒளிவு மறைவின்றிக் கூறி முடித்தான். கல்பனாவிடம் கூறியது போல பொய்யாக எதையும் கூறாமல் உண்மையையே சொன்னான். டாக்டரிடம் சென்றது, டாக்டர் கூறியது, சௌரிராஜனின் சந்திப்பு, கல்பனாவிடம் நடத்திய நாடகம், சாமியாரிடம் ஏமாந்தது, அவர் கொடுத்த பஸ்மத்தை இன்னும் வைத்திருப்பது, தான் கண்ட கனவு, தன் பயங்கள், தவிப்புகள், நம்பிக்கைகள், அவநம்பிக்கைகள் எல்லாவற்றையும் எடுத்துக்கூறி முடித்துவிட்டு, வறண்டு போன தொண்டையை நனைத்துக் கொள்வதற்காக அறையின் மூலையில் வைத்திருந்த கண்ணாடி ஜாடியிலிருந்து தண்ணீரை டம்ளரில் ஊற்றி மளமள வென்று குடித்தான்.

சில நிமிடங்கள் அங்கே மௌனமும், அமைதியும் நிலவியது. மின்சார விசிறி சுழலும் ஓசையைத் தவிர வேறு ஒரு ஓசையும் கேட்கவில்லை.

"ஐ எம் வெரி ஸாரி ராஜி. டாக்டரிடம் நான் உன்னைப் பற்றிச் சொன்னது. உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம். இவ்வளவு வெளிப்படையாக




எதற்காக கண்ணை மூடிக் கொண்டு கண்ணாடி முன் நிற்கிறீர்கள்?

: நான் தூங்கும் போது அழகாக இருக்கிறேனா என்று பார்க்கத் தான்!

—பிரிய பாலு

நான் விஷயங்களை உன்னிடம் எடுத்துச் சொல்லி என் குறை நீங்குவதற்கு நீ ஒரு கருவியாக உபயோகப்பட முடியுமா என்று உன்னைக்கேட்டு அவமானப் படுத்திவிட்டதாகவும் நீ நினைக்கலாம். நான் குறையேதும் இல்லாமல் பூர்ண மான ஆண்பிள்ளையாக இருந்த போது, உன்னிடம் எனக்குத் தோன்றிய சபலத்தை அடக்கிக் கொண்டு என்னை நானே கட்டுப்படுத்திண்டேன். ஆனா இப்போ இந்த நிலையிலே நான் உன்னை



நெருங்க வேண்டியிருக்கு. எனக்கு இது எவ்வளவோ அவமானமாகத்தான் இருக்கு. ஆனா என் அவமானத்தைக் காட்டிலும் இப்படி நான் நடந்துக் கறதுனாலெ உன்னை ரொம்ப இன்ஸல்ட் பண்றேங்கறதும் எனக்குப் புரியறது. ஆனா எனக்கு ஒரு ரிலீஃப், ஆத்மார்த்த மான ஒரு நண்பன்கிட்ட என்னோட துக்கத்தையெல்லாம் கொட்டிட்டது போல ஒரு ரிலீஃப். நீ என் விருப்பத்துக்கு இணங்குவேங்கற நம்பிக்கை எனக்கு இருந்தது. ஆனா இப்போ உன் மௌனத் தைப் பார்த்து அந்த நம்பிக்கையும் எனக்குத் தகர்ந்து போச்சு. பரவாயில்லே பொறுமையோட என் கதையைக் கேட்டியே அதுக்காக தாங்க்ஸ். நான் கேட்டுண்டபடி இந்த ரகசியத்தை நீ வெளியிடமாட்டேங்கற நம்பிக்கையும் எனக்கு இருக்கு. அதுக்காகவும் அட்வான்ஸா தாங்க்ஸ். இனி நாம போகலாம்னு நினைக்கறேன்." என்று ஒரு நீண்ட பிரசங்கத்தைச் செய்து முடித் தான்.

ராஜி ஏதோ சொல்ல வந்தாள். அப்போது அறைக் கதவை வெளியே யாரோ லொட் லொட்டென்று தட்டி னார்கள். சதீஷ் எழுந்து சென்று கதவைத் திறந்தான்.

வெளியே சாப்பாட்டுக் கேரி யரும் இலையுமாக ஹோட்டல் பையன் நின்று கொண்டிருந்தான்.

"வெச்சுட்டுப் போ" என்று சதீஷ் கூறியதும் அவன் உள்ளே வந்து மேஜையின் மீது காரியரையும் இலைகளை யும் வைத்து விட்டு வெளியேறினான்.

சதீஷ் மறுபடியும் கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு ராஜியின் அரு கில் வந்தான்.

ராஜி இன்னும் மௌனமாகவே அமர்ந்திருந்தாள்.

"சாப்பிட்டுட்டு வீட்டுக்குப் போகலாமா?" என்று சதீஷ் கேட்டான்.

"இருக்கட்டும். அப்புறமா சாப்பிடுவோம்" என்றாள் ராஜி.

"என்ன யோசனை ராஜி? நான் உன்னிடம் இந்த உதவியை எதிர் பார்த்தது தவறாயிருந்தால் உன் காலில் விழுந்தும் மன்னிப்புக் கேட்டுக்கத் தயாராயிருக்கேன். இந்த விஷயத்தையே ரெண்டு பேரும் மறந்துடுவோம்."

"ஸாரி சார். நீங்க பேசினதுல தப்பு ஒண்ணுமே இல்லே. நான் யோசிச் சுண்டிருந்தது அதைப் பத்தி இல்லே. வேற விஷயமா."

"என்ன அது? என்கிட்ட சொல்லக் கூடியதா இருந்தா சொல்ல லாமே."

"நான் இந்த விஷயத்துல உங்களுக்கு உதவி பண்றதுன்னு அப்பவே முடிவு பண்ணிட்டேன். ஆனா இதோட பின் விளைவுகளைப் பத்தி யோசிக்கறேன்.

"அப்படின்னா?"

"இந்த எக்ஸ்பெரிமெண்ட்ல நீங்க வெற்றியும் அடையலாம், அல்லது தோல்வியும் அடையலாம் இல்லியா?"

"ஆமா."

"வெற்றியடைஞ்சிங்கன்னா அதோட நம்ம இந்த ரிலேஷன்ஷிப்புக்கு ஒரு முற்றுப் புள்ளி வெச்சுடணும்னு நான் விரும்பறேன். ஏன்னா, நம்ம உடலுறவு அதுக்கப்புறமும் தொடர்ந் ததுன்னா அது உங்களையும் உங்க மிஸஸையும் பிரிச்சுடும்படியா நேரலாம். அதை நான் விரும்பலே. எக்ஸ்பெரி மெண்டை எக்ஸ்பெரிமெண்டோட நிறுத்திக்கற கட்டுப்பாடு உங்களுக்கும் எனக்கும் இருக்குமாங்கறதை யோசிச் சேன்.

---

"தொற்று வியாதி ஒன்று சொல்லு."

"காப்பி அடிப்பது சார்?"




"அதெப்படி?..."

"இதுவரை நாங்க மட்டும் காப்பி அடித்தோம். இப்ப நீங்களும் காப்பி அடிக்க ஆரம்பிச்சிட்டீங்களே..."

—உடுமலை வடிவேல்




—'பூச்செண்டுகள்' ராதா-கண்ணன்

...இல்லே, இந்த எக்ஸ்பெரிமெண்ட்லே உங்களுக்குத் தோல்வி ஏற்பட்டுடுத்துன்னா இனிமே என்னைப் பார்க்கறப்பெல்லாம் உங்களுக்கு அவமானமாக இருக்கலாம். எனக்கும் எம்பாராஸிங்காக இருக்கும். இதையும் யோசிச்சேன். அவ்வளவுதான்."

"தாங்க்ஸ் ராஜி. எனக்கு வெற்றி கிட்டணும்கற நம்பிக்கை இருக்கு. டாக்ஸியிலே உன் பக்கத்துல உக்காந்துண்டு வர்றப்ப அதுக்கான பரபரப்பும், துடிப்பும் என் உடல்லே ஏற்பட்டதனாலேதான் இவ்வளவு ஆசைப்பட்டேன். என் தலைவிதி வேற விதமா இருந்ததுன்னா அதனாலே இப்ப இதுவரையிலும் ஏற்பட்ட அவமானத்தைவிட பெரிசா ஒண்ணும் ஏற்பட்டுடப் போறதில்லே. எல்லா விஷயத்தையும் உங்கிட்ட சொல்லியாச்சு—மான அவமானத்தைப் பார்க்காம. அப்புறம் என்ன?"

"அப்ப சரி. ஐ எம் அட் யுவர் டிஸ்போசல்" என்று கூறி இரு கைகளையும் நீட்டி அவனை வா என்று அழைப்பதுபோலத் தலையை அசைத்துப் புன்னகைத்தாள்.

நீண்ட அவள் கரங்களின் இடையே பாய்ந்து அவளை அணைத்துக் கொண்ட சதீஷ் தன் உதடுகளை அவள் உதடுகளின் மீது வைத்து அழுத்தினான். ராஜியின் கைகள் அவன் கழுத்தை வளைத்துக் கொண்டன.

சில விநாடிகளுக்குப் பின் ராஜி மெதுவாகத் தன்னை சதீஷிடமிருந்து விடுவித்துக் கொண்டாள்.

"சாப்பிட்டுடலாம்" என்றாள்.

"அப்புறம் சாப்பிட்டுக்கலாம்னு சொன்னியே? என்றான்.

"அப்ப அப்படிச் சொன்னேன். இப்ப இப்படித் தோணுது. உங்களோட இன்னும் கொஞ்சம் பேச வேண்டியிருக்கு. சாப்பிட்டுண்டே பேசலாம்.

இப்படி இருந்துண்டு பேச முடியாது'' என்று சிரித்தாள்.

''சரி''

இருவரும் சாப்பிட அமர்ந்தார்கள் ராஜியே இருவருக்கும் பரிமாறினாள்.

ஜாங்கிரி இருந்தது. ராஜி ஒரு ஜாங்கிரியை எடுத்து சதீஷின் வாயருகே கொண்டு சென்றாள்.

''கடிச்சுக்குங்கோ, பாதியை'' என்றாள்.

சதீஷ் அப்படியே செய்தான். அவன் எச்சில் படுத்திய மீதியை ராஜி தன் வாயில் போட்டுக் கொண்டாள்.

''திஸ் இஸ் எ ஜெஸ்சர்'' என்றாள்.

''தாங்க்யூ ராஜி''

''நீங்க கல்பனாகிட்ட தோல்வியடைஞ்சா மாதிரி என்கிட்ட ஆகாம இருக்கணும்னு அதுக்கு நான் உங்களை பிரிபேர் பண்ணணும். நீங்களும் உங்களையே தயார் பண்ணிக்கணும்.''

''எப்படி?''

''கல்பனாகிட்ட சொன்ன மாதிரி எங்கிட்ட பொய் சொல்லாம எல்லா உண்மையையும் சொல்லிட்டிங்க. அது நல்லதாப் போச்சு. கில்டி கான்ஷியன்ஸ் உங்களுக்கு இல்லே. இன்னொரு விஷயத்துலயும் நீங்க உங்க கான்ஷியன்ஸைக் கொஞ்சம் அதட்டி வைக்கணும்.எங்கூட வெச்சுக்கற இந்த உறவுனாலே உங்க மனைவிக்கு துரோகம் செய்யறதா ஒரு எண்ணமே உங்களுக்கு வரக்கூடாது. பெண்ணான நானே இப்படி இருக்கறப்ப ஆம்பளையான நீங்க இன்னும் பழைய கட்டுப் பெட்டித்தனமான நம்பிக்கைகளை வெச்சுண்டு உங்களையே மோசம் பண்ணிக்கக் கூடாது.''

''நீ சொல்றதை ஒத்துக்கக் கொஞ்சம் கஷ்டமாயிருக்கு ராஜி. உன் விஷயம் வேற, என் விஷயம் வேற. உன் புருஷன் உன்னிடத்துல ஒழுங்கா இருந்திருந்தா நீ மனம் வெறுத்துப் போய் அவரை விட்டுட்டு வந்திருக்க மாட்டே. உன் செக்ஸ் லைஃப் இந்த மாதிரியா ஆயிருக்கவும் ஆயிருக்காது. ஆனா என் விஷயத்துல அப்படி யில்லையே? ரேகா என்னிடத்துல பரிபூரணமா அன்பு வெச்சு எனக்கு உண்மையா நடந்துண்டிருக்கறப்போ அவளுக்கு துரோகம் செய்யறதுன்னா...''

''அதைத் தான் நானும் சொ(ல்)றேன். என்னோட இன்னிக்கு ஒ(ரு) நாள் வெச்சுக்கற உறவு நீங்க அவளுக்கு துரோகம் செய்யறதாகாது. நம்மோட இந்த உறவு தொடர்ந்து, நீங்க அவளை மறந்தால்தான் துரோகம் ஆகும். இன்னிக்கு ஏற்படற இந்த காஷுவல் உறவை நீங்க உங்க மனைவியை விட்டுட்டு ஒரு சினிமாவுக்குப் போன மாதிரியோ, ஒரு நல்ல டின்னர் சாப்பிட்ட மாதிரியோ ட்ரீட் பண்ணணும். அதுக்கு மேல இதுக்கு மகத்துவம் கொடுக்கக்கூடாது. கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு காலத்துக்கேற்ப மாறிண்டே வந்திருக்கு. கணவன் செத்ததும் அவனோட அவன் மனைவியும் உடன் கட்டையேறிடணும்னு இருந்தது ஒருகாலம். அதுக்கப்புறம் என்னாச்சு? அவ உடன் கட்டையேற வேண்டிய அவசியமில்லே, ஆனா மண்டையெ சிரைச்சிட்டு, வெள்ளைப்புடவை உடுத்திட்டு, மஞ்சள், குங்குமம் பூவை விட்டுட்டு மூலையிலெ முடங்கிக் கிடக்கணும்னு ஆச்சு. அதுக்கப்புறம் விடோஸ் கேன் ரிமேரிங்கறுப்பல ஆச்சு. இன்னும் கொஞ்ச நாளுக்கப்புறம் கணவனை டைவேர்ஸ் பண்ணிட்டு வேறொருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு ஆச்சு. பால்ய விவாகம் மறைஞ்சு போச்சு. காதல் கல்யாணங்கள், கலப்பு மணங்கள் இதெல்லாம் சர்வ சாதாரணமாப் போச்சு. அட் திஸ் ரேட் எ டைம் வில் ஷுவர்லி கம் வென் விமென் வில் ஹேவ் ஸ்டில் கிரேட்டர் ஃப்ரீடம் இன் செக்ஸ் மேட்டர்ஸ். என்னைப் போல இருக்கறவங்க அதுக்கு ஒரு முன்னோடி போல'' என்று கூறி நிறுத்தினாள்.

''நான் உன்னைப்பத்தி கொஞ்ச நாளைக்கு முன்னாடி ஒண்ணு நினைச்சேன். அது ரொம்ப கரெக்ட்னு இப்ப நீ ப்ரூவ் பண்ணிட்டே''

''என்ன நினைச்சிங்க?''

''நீ இன்னும் இருபது இருபத்தைஞ்சு வருஷம் கழிச்சுப் பிறந்திருக்க வேண்டியவ.''

இருவரும் சிரித்தார்கள்.

(தொடரும்)

---

உடற்பயிற்சி பள்ளியில் இருந்த வாசகம்:

'ஓடாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்.'

—ப்ரியா பாலு

# 28

"நீங்க அப்படி நினைக்கறிங்க. ஆனு நான் அதுக்கு நேர் எதிரா நினைக்க றேன். அதாவது நானும் என்னைப்போல இருக்கக் கூடியவா இன்னும் சில பேரும் இன்னும் பத்துப் பதினைஞ்சு வருஷங் களுக்கு முன்னாடியே பிறந்திருக்கணும். அப்படிப் பிறந்திருந்தா, இந்நேரத்திற்கு ஆண்களோட அட்டகாசம் எல்லாம் அடங்கிப் போய் பெண்கள் சுதந்திரமா வாழ்ந்துண்டிருப்பாங்க."

"ஐ ஸீ" என்பதைத் தவிர சொல் வேறொன்றும் சொல்ல முடிய வில்லை. அவளுடைய கருத்துக்களை ஏற்றுக் கொள்ள அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. ஆனால் அதே சமயத்தில் அவள் அப்படிப்பட்ட கருத்துக்களை உடையவளாக இருப்பதால்தான் தன்னால் இப்போது அவளை உபயோகப் படுத்திக்கொள்ள முடிகிறது என்பதை யும் அவன் அறிந்தான். இதை உணர்ந்த தும் அவனுக்குத் தன்னிடமே ஒரு வெறுப்புத் தோன்றியது. தன் கருத்துக் களோடு வேறுபட்ட கருத்துக்கள் கொண்ட ராஜியைத்தான் தன் சுய லத்திற்காக உபயோகப்படுத்திக் கொள் வது சுயமைத்தனம் என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் இந்தக் கடைசி நிமிடத்தில் இந்த மாதிரி நியாய, தர்ம, உணர்ச்சிகளால் உந்தப்பட்டுப் பின் வாங்கி மீண்டும் தோல்வியை எதிர் கொள்ளும் துணிச்சல் அவனுக்கு வர வில்லை. எனவே ராஜி வேறு ஆத்தத்தில் சொன்னதை ஏற்றுக்கொண்டு தன் மனச்சாட்சியைக் கொஞ்சம் அதட்டி மௌனமாக இருக்கச் செய்தான்.

"என்ன சாப்பிடாம மறுபடியும் ஏதோ யோசனை பண்றிங்க?" என்று கேட்டாள் ராஜி.

"ராஜி, எனக்கு இந்த எக்ஸ் பெரிமெண்ட்ல நான் தோல்வியடைஞ் சுட்டா தேவலைன்னு தோணுது."

"இதென்ன மறுபடியும் ஆரம் பிச்சுட்டிங்க? அப்ப எக்ஸ்பெரிமெண்டே வேண்டாமே?"

"அதுக்கில்லை ராஜி. நான் உன்னை அடையறதுக்காக வேணும்னே இப்படி ஒரு கதை கட்டியிருக்கேன்னு நீ நினைக்கலாமில்லியா? இன்னிக்கில்லாட் டாலும் நாளை மறுநாள் உனக்கு அந்த சந்தேகம் தோணலாமில்லியா? நான் தோல்வியடைஞ்சுட்டா நான் சொன் னது பொய்யில்லே, உண்மைங்கறது ப்ரூவ் ஆயிடும்."

"ரொம்ப நல்லாருக்கு உங்க ஆர்க்யூமெண்ட். முதலாவது, நான் உங்களை நம்பறேன். ரெண்டாவது நீங்க

என்னை அடையணும்னு விரும்பியிருந்தா என்னிக்கோ அதை சாதிச்சிருக்க முடியும். இப்படி உங்களுக்கே தலைக் குனிவை ஏற்படுத்தக் கூடிய ஒரு பொய்யைச் சொல்லி என்னை அடையணும்கற தேவையில்லே. மூணாவது, நீங்க இப்படி டிஃபீடிஸ்ட் மெண்டாலிடியோட இந்த எக்ஸ்பெரிமெண்ட்ல எறங்கறது தப்பு. வெற்றி கிடைக்கும்கற நம்பிக்கை உங்களுக்கு இருக்க வேண்டியது ரொம்ப அவசியம். அப்பத்தான் வெற்றி கிட்டும்.''

''தாங்க்யூ ராஜி. இந்த ஒரு வாரமாவே நான் சரியா சிந்திக்கற சக்தியையே இழந்துட்டேன்னு நினைக்கிறேன். இந்த நிமிஷம் எடுக்கற ஒரு முடிவை அடுத்த நிமிஷம் மாத்திக்கணும்னு தோணுது. இப்ப சரின்னு தோணற ஒரு சமாச்சாரம் அஞ்சே நிமிஷத்துல தப்போன்னு தோண ஆரம்பிச்சுடறது.''

''எல்லாம் இன்னியோட சரியாப் போகும். நாளையிலிருந்து யூ வில் பி தி ஓல்ட் சதீஷ் யூ வேர் ஒன் வீக் பிஃபோர்.''

''தாங்க்யூ.''

சாப்பாடு முடிந்து இருவரும் கை வாய் கழுவிக் கொண்டு வந்து படுக்கையில் பக்கத்தில் அமர்ந்து கொண்டனர்.

''நீ வீட்டுக்குப் போக லேட் ஆறு பரவாயில்லியா? வீட்ல ஒண்ணும் சொல்ல மாட்டாங்களா?''

''ஹஸ்பண்ட் கிட்டேர்ந்து சுதந்திரம் வேணும்கறதுக்காக அவரை விட்டு வந்துட்டு இப்போ பேரன்ட்ஸுக்கு அடிமையாய் வாழ முடியுமா? அவங்க ஒண்ணும் சொல்ல மாட்டாங்க. சொன்னாலும் நான் அதை கேர் பண்ண மாட்டேன்.!''

''உன் தங்கை?''

''அதைப்பத்தியெல்லாம் நானே படாத கவலையை நீங்க ஏன் படறிங்க?'' என்று கேட்டு ராஜி அவன் மடியில் முகத்தை வைத்துக் கொண்டு, கால்களை நீட்டிக் குப்புறப் படுத்துக் கொண்டாள்.

சதீஷ் அவள் புறங்கழுத்தைத் தடவிக் கொடுத்தான். மௌனமாக சில விநாடிகள் கழிந்தன.

ராஜியின் முதுகைக் கவ்விப் பிடித்திருந்த ப்ளவுஸ் திடீரென்று அவன





றியா வண்ணம் லூசாகி விட்டதைக் கவனித்ததும்தான் அவள் வெகு சாமர்த்தியமாக, தான் கவனிக்காதபடி ப்ளவுசின் பொத்தான்களையோ, கொக்கிகளையோ அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கிருள் என்பதை உணர்ந்தான். ப்ளவுஸுக்குள் கையை விட்டு அவள் முதுகை வருடினுன்.

புடவைக்குள்ளே எல்லாப் பெண்ணும் ஒன்றுதான் என்று சொன்னவன் மடையன் என்று சதீஷுக்குத் தோன்றியது. கல்பனவை அவன் தொட

வில்லை. ரேகாவின் முதுகுக்கும், ராஜி யின் முதுகுக்கும் நிறைய வித்தியாசம் இருந்தது. அதை உணரத்தான் முடிந்ததே ஒழிய என்ன வித்தியாசம் என்று இனம் கண்டு கொள்ள முடியவில்லை.

சதீஷ் இவ்வாறு நினைத்துக் கொண்டிருக்கும் போதே ராஜி குப்புறப் படுத்தவாறே கொஞ்சம் இப்படியும், அப்படியும் மட்டும் அசைந்து, நெளிந்து ப்ளவுஸைக் கழற்றி விட்டாள். பிரா கிடையாது.

கழுத்து, முதுகு, இடை எல்லாம் அவன் முன்னால் காட்சியளித்தன.

ரேகாவைப் போலவோ, கல்பனா வைப் போலவோ ஒரு நொடியில் புடவை, ஜாக்கெட், ப்ரா, பெட்டிகோட் எல்லாவற்றையும் கழற்றிப் போட்டு விடாமல் ராஜி ஒரு புது டெக்னிக்கைக் கையாள்வதாக அவனுக்குத் தோன்றியது.

ரேகாவிலும், கல்பனாவிலும் இல்லாத ஒரு புதுமையும் ராஜியிடம் இருந்தது. அவர்கள் இருவரும் நல்ல வெண்மை நிறம் கொண்டவர்கள். கழுத்தின் வெண்மை, முதுகின் வெண்மை, இடுப்பின் வெண்மை—இம் மூன்றிற்கும் அதிக வித்தியாசம் கிடையாது. ஊன்றிப் பார்த்தாலொழிய தெரியாத லேசான வேறுபாடுதான். ஆனால் ராஜியிடம் அப்படி இல்லாமல் கழுத்தும்



"நல்ல சிக்கனமான குடும்பத்தில் பெண் எடுக்கணும்னு சொன்னாய் அல்லவா?"

"ஆமா! அதற்கு என்ன?"

"நம்ம பார்க்கப் போற பொண்ணோட வீட்டுக்காரங்க பெண்ணோட நெகடிவ் படத்தை அனுப்பியிருக்காங்க. அதைக் கழுவி போட்டோ எடுத்துக் கொண்டு நெகடிவ்வை அனுப்பணுமாம்!"

—எஸ். என். தங்கராஜன்



இமைப் பொழுதும் பிரி திருந்த 'அந்த' இளைய காதலர் இதோ இப்போது பிரியப் போகின்றன அவர்களின் காதல் முறிபடும் கண கணங்களில்-வார்த்தைகளுக்கே வே யில்லா அந்த மௌனப் பொழு உணர்ச்சிக் கங்குலாய் உருகி மெல் மெல்ல ஆனால், உறுதியாக வெளிப்ப வார்த்தை விம்மல்கள் ...!

இதோ— இப்படித்தான் கின்றனர். இந்தக் (கற்பனைக்) காத கள் ...

இடையும் லைட் ப்ரௌன் நிறத் இருக்க, ப்ளவுஸ் போட்டுக் கொள் முதுகுப் பிரதேசம் ப்ளவுஸைக் கழட் பிறகும் கூட உடலோடு வைத் தைத்த ஒரு ப்ளவுஸ் இருப்பது பே பிரத்யேகமான ஒரு வெண்மை நி தைக் காட்டியது. அவர்கள் இருவ யும் விட ராஜிக்கு மிக விசாலமான பர முதுகு. அதைப் பார்த்த போ அவனுக்கு சின்ன வயசில் கோயமு தூரில் வெங்குட்டு மாமா சொல் ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந் சிரிப்பு வந்தது. அவருடைய மூன் நான்கு வைப்பாட்டிகளில் ஒருத்தியா வேணியைப் பற்றி வேடிக்கையா சொல்லுவார்.

"அந்தத் தடிச்சிக்கு எவ்வள பெரிய முதுகுங்கறே! அதைப் பா கறப்பல்லாம் எனக்கு வேற ஒண் தோணுது. அவளைக் குனிஞ்சு நிக் சொல்லிட்டு அவ முதுகு மேல பெ நுனி வாழையிலையைப் போட்டு அம களமா விருந்து சாப்பாடு அதுல பரிமா சொல்லி ஆனந்தமா சாப்பிடணும்

## கடைசி வரிகள்

### இந்த வாரம் இவர்
### பட்டுக்கோட்டை ராஜா

இப்போது கரைகின்ற நிமிடங்கள் இனிமேல் என்னைக் கரைக்கின்ற நிமிடங்களாய்த்தானிருக்கும்!

மங்கலநூலை நானுனக்குத் தர முடியாது போனாலும் மங்கல நினைவுகளை நீ எனக்குத் தந்திருக்கிறாய்; அவை என்னைக் கவிஞனாக்கலாம்!

உன் புகைப்படத்தை நீ தர மறுத்து விட்டாய்—தேவையில்லை; உன் முகப்படந்தான் என் இதயத்தில் ஆழப்பதிந்து விட்டதே!

என் உதடுகள் உன்னை 'எங்கிருந்தாலும் வாழ்க!' என்று வாழ்த்தி வழியனுப்பலாம்; ஆனால் என் அந்தராத்மா உன் பிரிவால் அழுது கொண்டு தானிருக்கும்!

இந்த இதயப்பாலைக்குள்ளும் ஈரம் ஒளிந்திருந்ததை எனக்கு இனங் காட்டியவளே நீ தான்! அந்த ஈரம் திரும்பவும் உலரத்தான் வேண்டுமா?

ஒரே ஒரு வேண்டுகோள்—நிறைவேற்றுவாயா? பொய்க்கோபம் வந்தால் உதடுகளைக் குவித்து, நடுவில் மட்டும் சுழித்து 'அழகு' காட்டுவாயே... அதை ஒரே ஒரு முறை செய்து காட்டி விட்டுச் சென்று விடு!

இந்த ஜென்மம் தான் நம்மைப் பிரித்து விட்டது; போகட்டும்...! இன்னும் ஆறுஜென்மங்கள் மீதம் உள்ளனவே...?

பேட்டி; 'பித்தன்'

('கடைசி வரிகள்' இன்னும் வரும்)

படங்கள் : ஜெயமோகன்

---

தான் தோணும்!" என்று கூறி ஹோ ஹோ வென்று ஹெலன் ராமசாமிச் சிரிப்பு சிரிப்பார்.

விசித்திரமான ஆசை! அளவுக்கு மீறி பெண் சுகத்தை அநுபவித்து விட்ட அந்த மனிதருக்குப் பெண்களை அப்படியெல்லாம் அநுபவிக்கத் தோன்றியது போலும்.

ஆனால் சதீஷுக்கு அது போன்ற வக்கிரமான ஆசை எழவில்லை. குனிந்து அந்த முதுகின் பல இடங்களிலே தன் இதழ்களைப் பூப்போல லேசாக உரசி உரசி எடுத்தான். அவன் உடலில் கொஞ்சம் கொஞ்சமாக சூடேறிக் கொண்டிருந்தது. நரம்புகளில் முறுக்கமும் ஏறிக் கொண்டிருந்தது. வெற்றியின் அறிகுறிகளோ?

ராஜியை மல்லாக்காகத் திருப்ப முயன்றான்.

"நோ. நாட் எட். வெய்ட்" என்றாள்.

குப்புறப்படுத்த படியே புடவையைக் களைந்தாள். முழங்காலுக்கு மேலே ஏறி விட்டிருந்த உள் பாவாடை மட்டும் அவள் உடலிலே. அவளது கால்களை, பாதங்களை சதீஷ் வருடினான்.

அடுத்த சில விநாடிகளில் உள் பாவாடையும் அவள் உடலை விட்டு அகன்றது.

கழுத்து முதல் பாதம் வரையிலான பின்னழகு அவன் கண்களுக்கு விருந்தாக, மண்டையில் போதையாக பிரகாசித்துக் கொண்டிருந்தது. இரண்டு கைகளாலும் வெறியுடன் தழுவினான்.

"திரும்பு ராஜி" என்று வேண்டினான்.

ராஜி திரும்பிப் படுத்தாள்.

சதீஷ் தன் வசமிழந்து உன்மத்தம் கொண்டவனாய் முகத்தை அவள் மார்பிலே புதைத்துக் கொண்டான்.

ப்ளவுஸுக்குள் இருந்த பொழுது தெரியாத ஆகிருதியை இப்போது கண்டு மலைத்துப் போனான். இவ்வளவு பிரம்மாண்டமான இரு கோளங்களை எப்படி



ஒரு புத்தகம் எழுத அரைவாசி நூல் நிலையத்திற்கு மேல் படிக்க வேண்டும்.

—ஜான்ஸன்

* * *

நூல் நிலையம் இல்லாத ஊரும் ஒரு ஊரா?

—லெனின்

* * *

படிப்பில் பற்று இல்லாத அரசனாயிருப்பதை விட, ஏராளமான நூல்களை உடைய ஏழையாய் இருப்பதையே விரும்புவேன்.

—மக்காலே

* * *

என்னையா ஏழை என்று கூறுகின்றாய்? என்னிடம் உள்ள நூல்கள் நாட்டினும் உயர்ந்தன அல்லவோ?

—ஷேக்ஸ்பியர்

தொகுப்பு: பழ. செந்தில்குமார்
-புகைப்படம்: ஜெய்மோகன்




: என் கையில் என்ன உள்ளது?

: யாணை!

: நான் ஒளித்த போது நீ பார்த்துக் கொண்டாய்..

—எஸ். இக்பால்

## அன்று சொன்னவை அர்த்தமுள்ளவை!

அவ்வளவு கச்சிதமாக, பிரா கூட லாமல், அந்த ப்ளவுஸுக்குள் அட கொண்டிருந்தாள்.

மெதுவாக அவள் முக இரண்டு கைகளாலும் தாங்கியபடி இருக்கையை விட்டு எழுந்து, அ கட்டிலின் நடுவில் படுக்க வைத்தா

சென்ற ஒரு வாரத்திய அ ஆண்மை விழித்துக் கொண்டு விட் அறிந்து ஆனந்த மிகுதியால் " யூ ராஜி! யூ ஹேவ் கிவன் மீ நியூ தாங்க்யூ, தாங்க்யூ" என்று கூறி உதடுகள், கன்னங்கள், கண்கள், மோவாய், மார்புகள், வயிறு,தொ என்று ஒவ்வொரு சதுர அங்கு லும் உதடுகளை வைத்து அழுத்தி பற்களால் லேசாகக் கடித்தான்.

எழுந்து நின்று தன் சட்டையை அவிழ்ப்பதற்காக பெல் கை வைத்தான்.

"ஸ்டாப் இட்" என்ருள்

சதீஷ் அதிர்ந்து விட்ட

"ஏன் ராஜி?"

"நீங்க வெற்றியடை டேளே? அவ்வளவுதானே ளுக்கு வேண்டியது? யூ ஹேவ் பேக் வாட் யூ லாஸ்ட். அதுக்கு போக வேண்டாம்" என்ருள்.

சதீஷின் முகம் தொங்கிப் விட்டது.

"இது சித்திரவதை ராஜி"

"ஐ டோண்ட் கேர்."

"ஹேவ் மெர்ஸி ஆன் மீ ர இல்லேன்ஞ இது பாதி கிணறு த டின கதையாப் போயிடலாம். என் இந்த டெம்பரரி இம்பொடன்ஸி காரணமே உன்னை நான் தீவி ஆசைப்பட்டும் அந்த ஆசையை அட வெச்சதுதான். டாக்டர் அகர் அப்படித்தான் சொன்ஞர். இப் என்னை இந்த நிலைமையிலெ ரிஃ பண்ணிட்டேன்ஞ நான் மறுப பழைய நிலைமையையே அடைஞ் கூடும். ப்ளீஸ் ராஜி."

ராஜி புன்சிரிப்போடு அ




கன்னத்தில் 'கன்னம்' இட்டு
கனி இதழில் வண்ணம் இட்டு
பெண்மையிலே எண்ணமிட்டு வலைவீசுது—நெஞ்சம்
பேரின்பம் காண்பதற்கு அலைபாயுது!

...ாக்கிக் கைகளை நீட்டினுள். சதீஷ் ...ந்தக் கைகளுக்கிடையே பாய்ந்து ...வள் மீது படர்ந்தான்.

"சும்மா விளையாட்டுக் காட்டி ...னன். பயந்துட்டிங்களே!"

"இன்னும் கொஞ்ச நேரம் உன் ...ளையாட்டு நீடிச்சிருந்தா எனக்கு ...ார்ட் ஃபெயிலியராயிருக்கும் ராஜி" ...ன்ருன்.

"நௌ கோ அஹெட். ட்ரஸ் ...ாடயாவா?" என்று சிரித்தாள்.

சதீஷ் எழுந்திருந்து அரை ...ிடத்திற்குள் தன் உடைகளைக் களைந் ...றிந்து விட்டு கட்டிலில் பாய்ந்து ...ஜியைத் தழுவிக் கொண்டான்.

இரவு முழுவதும் அவர்களால் ...ங்க முடியவில்லை.

...லை 2ப (திங்கட்கிழமை)

"நான் இன்னிக்கே ஒன்...து மணி ப்ளேன்ல கோயமுத்தூருக்குப் போறேன், ராஜி."

"விஷ் யூ ஆல் தி பெஸ்ட்."

"தாங்க்யூ. ஐ ஹோப் ஐ வில் சக்ஸீட் வித் ஹெர் ஆல் ஸோ."

"சக்ஸீட் ஆகல்லேன்னு சொல் லிண்டு மறுபடியும் வந்திங்கன்னு கன்னத்துல ரெண்டு கிடைக்கும்" என்று ராஜி சிரித்தாள்.

இரண்டு வருடத்தில் ஏற்படாத சலுகை ஒரே இரவில் ஏற்பட்டு விட்டதை நினைத்து சதீஷும் வியந்த படியே சிரித்தான்.

விமானம் கோவையை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. நம்பிக்கை நிறைந்த மனத்துடன் சதீஷும் அதை விட வேகமாகப் பறந்து கொண்டிருந் தான்-மனத்தளவில்.

# ... ஸ்டண்ட் மாஸ்டருக்கு தகுதி இல்லை...

சினிமாவில் எல்லோரும் கை தட்டி ஓஹோ... ஆஹா என்று ஆர்ப்பாட்டம் செய்கிற இடம் ஸ்டண்ட் காட்சிகள் தான்...

ஓடும் ரயிலில் ஃபைட் செய்வது...

மாடியிலிருந்து ரோட்டில் ஓடும் லாரியில் டைவ் அடிப்பது...

நீருக்குள்ளும் கட்டிப் புரள்வது...

கண்ணாடியை உடைத்துக் கொண்டு 'வாவ்' என்று விழுவது...

இவைகளெல்லாம் தான் சண்டைப் பிரியர்களுக்கு அல்வா மாதிரி...

இதை சின்னக் குழந்தைகளிலிருந்து பல் போன பாட்டிகள் வரை 'ஆ...' என்று வாய் பிளந்து பார்ப்பார்கள்...!

ஒரு சினிமா ஓடுவதற்கு த்ரில்லிங்கும், ஃபைட்டும், ஸ்டண்டும் முக்கியமான அம்சங்கள்.

இதை யாராவது இல்லை என்று சொல்ல முடியுமா?

உயிரை அடமானம் வைத்து டைவ் அடிப்பதையும் சண்டை போடுவதையும் பெரிதாக எண்ணாமல்—சினிமா கலைஞர்கள் அனைவருக்கும் அவார்டு தருகிறார்கள்.

ஆனால் இதுவரை தமிழ்ப் படத்தில் ஸ்டண்ட் கலைஞர்களுக்கு தந்ததில்லை...

ஏன்?

ஸ்டண்ட் மதிக்கக் கூடாத கலையா?

நமது கதாநாயகன் தியாகு, செல்வந்தர். பணமும். பதவியும். மற்றும் எல்லா வசதிகளும் இருந்தும், எதையும் அனுபவிக்க இயலாமல் தவிக்கிறான். காரணம் மனைவி லலிதாதான். அவளது அபார செலவு செய்யும் மனப்பான்மை அவனை பிரமிக்க வைக்கிறது.

மாடியில் தனது அலுவலகத்தையும், பங்களாவின் கீழ்ப்பகுதியில் தனது குடும்பத்தையும் வைத்துக்கொண்டு அவன் படும் பாடு... அப்பப்பா... இதோ நீங்களே பாருங்களேன்...



## காட்சி-1

பங்கு பெறுவோர் :

| | | |
|---|---|---|
| தியாகு | — | ஜெமினி மஹாலிங்கம் |
| சுப்பையா | — | கூத்தபிரான் |
| லலிதா | — | லலிதா |
| லட்சுமி அம்மாள் | — | பிரஹா |
| ராமாமிருதம் | — | நடராஜன் |
| சுகவனம் | — | T. U. C. S. ராஜகோபால் |
| சீனு | — | அம்பி நாகராஜன் |
| ரங்கையன் | — | ராஜேந்திரன் |

அனுராதா ரமணன்

## இடம்: தியாகுவின் வீடு

(ரேடியோவில் "என்ன கொடுப்பான் எது கொடுப்பான் என்றிவர்கள் ஏங்கும் முன்னே — எங்கள் கர்ணன் பொன்னும் கொடுப்பான், பொருளையும்தான் கொடுப்பான்" —பாடல் ஒலிபரப்பாகிறது.

தியாகுவின் மனைவி லலிதா, வீட்டில் மிகுதியாய்க் கிடைக்கும் பொருள்களை தன்னுடைய உறவினருக்கும், தியாகுவின் ஆபீஸ் ஊழியர்களுக்கும்— தான தருமம் செய்து விடுகிருள். இதை வெளியிலிருந்து வந்த தியாகு பார்த்து விடுகிருன்.)

தியாகு: என்ன இது? வீட்டிலே தான தர்மம் நடக்கிறதா — ஆபீஸ்காராளும் நம்ம சொந்தக்காராளும் கையிலே வேஷ்டி, புடவை, பிளாஸ்க், குடை, சட்டை, பண்டம், பாத்திரம் எடுத்துண்டு போருளே? எல்லாம் ஏது?

லலிதா: நம்மாத்திலே ஒண்ணுக்கு நாலா இருந்ததும், உபயோகப்படுத்த முடியாம போன சின்னதும்-பெரிசுமாகத்தான் கொடுத்திருக்கேன்—போனு போகட்டும்.

சுப்பையா: அதிலே பாரு தியாகு, அள்ளி அள்ளிக் கொடுக்கும்போது ஒரு தனி சந்தோஷம்.

தியாகு: கை நீட்டி வாங்கும்போதுதான் தனி ஆனந்தம். இதெல்லாம் உம்ம ஏற்பாடா?

லலிதா: நான்தான் வீட்டை ஒழிச்சேன்.

சுப்பையா: ஒரு லாரி சாமான் எக்ஸ்ட்ராவாக இருந்தது.

லலிதா: அதான் —இல்லாதப்பட்டவாளை, தேவைப்பட்டவாளை வரச் சொல்லி...

தியாகு: வாரிக் கொடுக்கிறயாக்கும் — உன் இஷ்டப்படி ஒண்ணுக்கு நாலா வாங்கிட வேண்டியது. அப்புறம் ஒண்ணு ஒண்ணு தானம் கொடுத்திட வேண்டியது. அப்புறம் ஏதாவது மிஞ்சுமா?

சுப்பையா: ஒவ்வொண்ணுலே—மூணு—மூணு மீதி இருக்குமே!

தியாகு: எனக்கு கணக்கு சொல்லித் தரேளா—கணக்குன்னு சொன்னவுடன் ஞாபகம் வரது. ஆமாம், எதுக்கு ஆறு கிலோ தேங்காய் எண்ணை, ஆறு கிலோ சர்க்கரை, ஒரு கிலோ முந்திரி பருப்பு வாங்கினே?

லலிதா: ஆறு கிலோ தேங்காய் எண்ணை முறுக்கு சுத்த—சர்க்கரையும் முந்திரியும்—முந்திரி கேக் பண்ண. உங்களுக்குத் தெரியாதா? நாளைக்கு நம்ம மணியை பிள்ளை பாக்க பொண் வீட்டுக்காரா வராளே ...

தியாகு: [எரிச்சலுடன்] ஆமாம்—மணியை பிள்ளை பார்க்க வராளே [பழித்துக் காட்டுகிருன்] எல்லார் வீட்டிலேயும் ஒரு விதம்னு—நம்மாத்லே எல்லாம் தலை கீழ். பிள்ளையைப் பார்க்கவரோம்னு அவா சொன்னதுக்கு ஒத்துண்டு வந்ததே முட்டாள்தனம். இதுலே ஸ்வீட் காரத்தோட டிபன்வேறேயா?—எவன் வீட்லே பொண்ணைப் பெத்தவாளுக்கு இத்தனை உபசாரம் நடக்கும்? ஹூம்...

லலிதா: அதேதான் நான் சொல்றதும். எவன் வீட்லே பொண்ணைப் பெத்தவாளுக்கு இத்தனை உபசாரம் நடக்கும்னு—பொண்ணைப் பெத்தவர் அதிசயப்பட்டு மூக்கு மேலே விரலை வெச்சு, அப்படியாவது நம்ம மணிக்கு கல்யாணமாகாதான்னுதான்.

சுகவனம்: இதுலே பாருங்க மாப்ளே, நம்ம லல்லுவுக்கு இருக்கிற ராஜதந்திரம் யாருக்கும் வராதுன்னேன். நேத்து நம்ம ராமச்சந்திரன் பொண்ணு கல்யாணத்துக்கு இவ போனாளான்னே? இவளுக்கு பக்கத்திலேதான் மணிக்கு பாத்த பொண்ணோட அம்மா உட்கார்ந்திருந்தாளாம். நாளண்ணைக்கு நான் அடையார் பக்கம் வந்தாலும் வருவேன்னு அவ சொல்லியிருக்கா!

தியாகு: இவகிட்டயா?

லலிதா: என்கிட்டே இல்லே. நான் பிள்ளைபோட ஒண்ணுவிட்ட அக்கா இல்லையா? நாத்தனார் ஸ்தானம். மூஞ்சி கொடுத்துப் பேசினு, அப்புறம் ரொம்ப சீப்பா நினைச்சிட்டா என்ன பண்றது? — அந்த மாமி பக்கம் திரும்பாமே கழுத்தை விறைப்பா நொடிச்சு திருப்பியே வெச்சுண்டிருந்தேன்... உஸ்... ராத்திரியெல்லாம் கழுத்து வலி வேறெ. நான் அப்படி விறைப்பா உட்கார்ந்திருந்தப்ப பக்கத்திலே இருந்த மாமி கிட்ட — நாளண்ணைக்கு அடையார் பக்கம்

வந்தாலும் வருவேன். அப்படியே உங்காத்துக்கும் வருவேன்னு சொல்லிண்டிருந்தா—

தியாகு: சரிதான்னு நீ பாட்டுக்கு முழ நீள லிஸ்டு போட ஆரம்பிச்சுட்டியாக்கும்!

லலிதா: அதனுலே என்ன... முறுக்கும், கேக்கும் செஞ்சு வெச்சா ஊசியா போகப் போறது. அவாளுக்கும் நம்மாத்து பட்சணம் சாப்பிட ப்ராப்தம் இருந்தா, நாளைக்கு வரட்டும். இல்லேன்ன என்ன மோசம்? ஆத்துலே மத்தவாளுக்கெல்லாம் வாயில்லேயா? வயிறு இல்லேயா?

தியாகு: அதுக்கென்ன, வாயும் வயிறும் தாராளமா நிறைய இருக்கு. என் அக்கவுண்ட்லே காசு இருக்கான்னு பார்த்துக்கோ. இதப்பாரு, லல்லு... இங்கவா... இப்படி பக்கத்துலே வா...

(அவள் வருகிருள்)

தியாகு: எங்க அப்பா கோடீஸ்வரர் இல்லே. லட்சாதிபதிதான். அவர் எனக்கு வச்சுட்டுப் போயிருக்கிற சொத்துக்களேயும், எஸ்டேட் பங்களாவையும், தஞ்சாவூர்லே இருக்கிற நிலத்தையும் நாளைக்கு நான் வித்து, காசாக்கி கொண்டு வரேன்...

லலிதா: எதுக்கு?

தியாகு: (ஆத்திரமாய்) எதுக்கா? முந்திரி பருப்பும் சர்க்கரையும்— இந்த காலத்துலே—அதுவும் நீ கேட்கிற மாதிரி கிலோ கிலோவா வாங்கணும்னு என் சொத்தை வித்தாத்தான் முடியும். ஏண்டி, அவனவன் ஒரு வேளை சோத்துக்கே லாட்டரி அடிக்கிறன். ப்ளாக்லே சர்க்கரை வாங்கி முந்திரி கேக் அவசியமா? இல்லே தெரியாமத்தான் கேட்கிறேன்... அவசியமாங்கிறேன்.

[லட்சுமி அம்மாள் கையில் இன்னும் நாலைந்து தூக்குப் பாத்திரங்களுடன் கூடத்துக்கு வந்தவள் — தியாகுவின் கோபத்தைக் கண்டு ஒரு ஓரமாய் ஒதுங்கி நிற்கிருள்.]



தலைவர்: நான் இறப்பதற்கு முன் என் தாடியையும் மீசையையும் எடுத்து விடவேண்டும் என்கிறீங்களே! ஏன்...?

தொண்டன்: சிலை வைத்தால் செலவை குறைக்க உதவும் என்றுதான்...!

—ஆர். சுப்பு

லட்சுமி: (மெல்லிய குரலில்) லல்லூ... இங்கே வா.

லலிதா: (வந்து கொண்டே) என்ன சித்தி?

லட்சுமி: நான் நேத்திக்கே என்ன சொன்னேன்? அடியே... முறுக்கும் கிறுக்கும் இழுத்து விட்டுக்காதடி... சி. கிரேடு காபி கொடுத்தனுப்பு போறும்னு.

சீனு: (ஆவலுடன் கிழவர் சுகவனத்தை நெருங்கி) அது என்ன சி. கிரேடு?

சுகவனம்: (அவன் காதருகில் குனிந்து) இந்த வீட்லே அப்படி ஒரு பழக்கம். அதுவும் உங்க மேனேஜர் — அதான் என் பேத்தி ஆம்டையான் போட்டிருக்கிற ரூல் அது. ரொம்ப வேண்டியவாளா வந்தா, புது பால்லே தண்ணி விடாம, புதுசா அப்பத்தான் எறக்கியிருக்கிற டிகாக்ஷனே விட்டு பதமா சர்க்கரை போட்டு, ஆவி பறக்க பறக்க கொண்டு வரணும். இது வந்து ஏ. கிரேடு காபி. பி. கிரேடுன்னு — பழம்பாலுலே ரெண்டாவதோ — மூணாவது நடவையாகவோ இறங்கின டிகாக்ஷனே விட்டு தாராளமா தண்ணியை விட்டு விளாவி, அரை ஸ்பூன் சர்க்கரை போட்டு அரை சூட்லே கொண்டு வைக்கணும். சி. கிரேடுன்னு—

லட்சுமி: நான் சொல்றேன். சி-கிரேடுன்னு, ஒரு தம்ளர் தண்ணியிலே ஒரே ஒரு கரண்டி பாலை விட்டு—இரண்டு மூணு நாள் முன்னாடி இறக்கின டிகாக்ஷன் இருந்தா... அது மேலே ஒரு மாதிரி பூஞ்சக்காளான் பூத்திருக்கும்— அதை இப்படி

நுனி விரலாலே தூக்கி எறிஞ்சிட்டு, அந்த டிகாக்ஷனை விட்டு கொஞ்சம் வெல்லத்தைப் போட்டுக் கொடுக்கணும்... இதான் சி-கிரேடு.

சுகவனம்: இதெல்லாம் எங்களுக்குள்ளே ஒரு சிக்னல் வெச்சுப்போம்... விருந்தாளி உள்ளே நுழையறப்பவே — மாப்பிள்ளை எழுந்து வாசல் வரைக்கும் போய் வாங்கோ-வாங்கோன்னு வரவேற்றா — ஏ கிரேடு. உட்கார்ந்த இடத்திலேயே தலையை மட்டும் நிமிர்த்தி — வாங்கோன்னு ஒரு தடவை சொல்லிட்டு துளியூண்டு சிரிச்சா, அது பி-கிரேடு. பார்க்க வந்த மனுஷா — எதிர்த்தாப்லே வந்து நின்னா கூட — என்னமோ வேலை இருக்காப்லே ஒரு ஃபைலையோ — இல்லை ஒரு புஸ்தகத்திலேயோ — தலையை அமுக்கிண்டு இருந்தா... சி-கிரேடு.

தியாகு: (லலிதாவிடம் பல்லைக் கடித்தபடி) யார்கிட்ட, என்னத்தைச் சொல்றதுன்னே இல்லையா உங்க தாத்தாவுக்கு? அவன் எங்க ஆபீஸ் ஸ்டாஃப். அவன் கிட்டப்போய் — என் மானம் போறது...

லலிதா: (கண்களைக் கசக்கியபடி) என் மானமும்தான் போறது.

லட்சுமி: என் மானமும்தான் பிச்சுண்டு போறது!

லலிதா: நீங்க இந்த மாதிரி பிசுனாரித்தனமா, அல்பத்தனமா நடந்துக்கறதாலேதானே தாத்தா அப்படி சொல்றார். நமக்கென்ன பணமில்லையா? காசு இல்லையா...?

லட்சுமி: எல்லாம் இருந்து என்னடா கண்ணு பிரயோஜனம்? மாப்பிள்ளைக்குத் தாராள மனசு இல்லையே? உனக்கு இந்த பரந்த மனசு இருக்குன்னா, அது நீ வந்த வம்சம் அப்படி. உங்க அப்பாவும், சித்தப்பாவும் கொடுத்துக் கொடுத்து கை சிவந்த வள்ளல்டி. அவா ஆளாத சொத்தா, பணமா... இந்த மாதிரி ஆயிரமும், லட்சமும்தான் அடுப்புலே போட்ட கடுகு மாதிரி வெடிக்கும். அதெல்லாம் கோடிக் கணக்குலே.

சுகவனம்: (பெருமூச்சுவிட்டு) ஹூம். அப்படி பணத்துலே புரண்டு வளர்ந்தவா நாங்க. மாப்பிள்ளை ஸ்வீட்காரத்துக்கு கணக்கு பார்க்கறார். பிச்சைக்காரனுக்கு பாதாம் அல்வா போட்ட குடும்பம்டா — எங்க குடும்பம்.

சுப்பையா: எனக்குத் தெரியாதா?

தியாகு: அடடா... நான் இப்ப என்ன சொல்லிட்டேன்! லல்லூ, முதல்லே சீனு கிட்ட பணத்தை கொடுத்தனுப்பு. அப்புறமா நாம பேசிக்கலாம்...

(லலிதா பணத்தைக் கொடுத்து அனுப்ப, சுகவனம் தியாகுவை முறைத்தபடி ஈர வேட்டியை ஒரு உதறு, உதறிக் கொண்டு மாடிக்குப் போக...)

தியாகு: (லலிதாவிடம் பல்லைக்கடித்தபடி முனகுகிறான்.) இதப்பாரு. கடல் மாதிரி வீட்டைக் கட்டிப் போட்டிருக்கேன். இந்த மனுஷன் ஈரவேஷ்டியை உலர்த்த மாடிக்கு எடுத்துண்டு போறார்... ஏண்டி, மாடியிலே என் ஆபீஸ் இருக்குங்கிறது தெரியுமோ இல்லையோ... கொஞ்சம் மாடியைப் போய்ப்பாரு... கண்றாவி...

லலிதா: ஏன்னா- வேலைக்காரி, தினம் பெருக்கி துடைக்கிறாளே...

தியாகு: பெருக்கி துடைச்சாப்லே ஆயிடுத்தா. காவேரிக்கரையிலே குறுக்கும் நெடுக்குமா உலர்த்துவாளே — அது மாதிரி ஆபீஸ் ஹால் முழுக்க புடவையும் வேஷ்டியுமா உலர்த்தியிருக்கு. நேத்து என்னைப் பார்க்க தேவேந்திரா எக்ஸ்போர்ட் எக்ஸிக்யூடிவ் வந்தான். சேர்லே உட்கார்ந்து என்னோடு பேசிட்டு எழுந்திருந்தா — உங்க சித்தியோட ரவிக்கை அவன் கோட்டோட மாட்டிண்டு அனுமார்வால் மாதிரி போறது. அவமானம்டி.

சுகவனம்: (தியாகுவின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல்) வாட்ச்மேன், வாட்ச்மேன். இங்கே கொஞ்சம் வா...

தியாகு: ஆமா... இவர் கூப்பிட்ட குரலுக்கு ஆபீஸ் வாட்ச்மேன் ஓடி வரணும்.

ரங்கையன்: என்ன சார்.

சுகவனம்: இந்த வேஷ்டியை ஹால்லே ஒரு பக்கமா கட்டி. ஃபேனை புல்லா போடு. காத்துலையாவது காயட்டும்.

ரங்கையன்: ஃபேனை புல்லா போட்டா, தரையிலே லட்சுமி அம்மா உலர்த்தியிருக்கிற அரிசி மாவு எல்லாம் காத்துலே பறந்துடும் சார்.

தியாகு: ஆபீஸ் ஹால்லே மூலைக்கு மூலை அரிசி மாவு, வத்தல், வடாம் சேச்சேச்சே. என்ன அசிங்கம்...

(தொடரும்)

"சரி... நீ போ... நான் அங்கே வாரேன்."

அவள், 'எதுக்கு?' என்பது போல பார்த்து விட்டு மௌனமாக திரும்பி நடக்க ஆரம்பித்தாள்.

துரையனின் இளவயசு உள்ளம் அவள் பின்னாலேயே துள்ளிக் கொண்டு போனது.

துரையனின் தகப்பன் மாகாளியும், தங்காயாளின் தகப்பன் கோமாங்காட்டு ராசுவும் ஒரே வீட்டை ஆளுக்குப் பாதியாக பாகம் போட்டு வாங்கி, அதிலேயே குடியிருந்த காலம் அது.

செவ்வக வடிவத்தில் ஓடு வேய்ந்த வீடு. வலப்புற பாகத்தில் மாகாளி குடும்பம். இடப்புறத்தில் ராசுவின் குடும்பம். நடுவில் ஒரு கூடம். அதில் நான்கு தூண்கள் எதிர்புறத்தில் இரண்டு சமையல் தடுப்புகள். தனித்தனியாக கட்டப்பட்டு கூரை வேய்ந்திருந்தன.

ஒரு 'போயனிடம்' இருந்து இருவரும் அந்த நிலத்தையும் வீட்டையும் வாங்கிப் போட்டிருந்தார்கள்.

மாகாளியும், ராசுவும் வெவ்வேறு வகுப்பினர்கள் தான்! ஆனாலும் இந்த இரு குடும்பங்கள் மட்டும் மிகவும் சிநேகமாகவே வாழ்ந்து கொண்டிருந்தன. ராசுவுக்கு நிறைய பெண் பிள்ளைகள். ஒரே ஒரு பையன் — வெள்ளிங்கிரி. அவனுக்கு மிகவும் சிறிய வயது. பெரியவள் சரசாள். அதற்கடுத்தவள் தான் தங்காயாள். அதற்கும் அடுத்து பிறந்தவள் சுந்தரம்மாள்.

பெரியார்-கோயமுத்தூர் மாவட்டங்களில் பெண்கள் நல்ல உழைப்பாளிகள். ஆண்களுக்குச் சமமாக வயலில் இறங்கி வேலை செய்து பழக்கப்பட்டவர்கள். தங்கள் நிலங்களில் வெள்ளாமை முடிந்துவிட்டால், கூலிக்கு அடுத்தவர் நிலங்களில் இறங்கி உழைப்பார்கள். மாடு, எருமை, பசு, ஆடு இவைகளை மேய்த்துக் கொண்டு, சமையலையும் கவனித்துக் கொள்வார்கள்.

மாகாளியின் தோட்டத்தில் குனிந்து நாற்று பிடுங்கிக் கொண்டிருந்த தங்காயாள், 'இந்தாளு திடீர்னு ஏன் இப்படி கேக்கருன்..?' என்று யோசித்தபடி இருந்தபோது, ஒரு சிறு கல் அவள் தோளில் வந்து விழுந்தது.

நிமிர்ந்து சுற்றும் முற்றும் பார்த்தாள். யாரையும் காணோம்! மறுபடியும் குனிந்து வேலையில் இறங்கிய போது மீண்டும் ஒரு கல்!

இப்போது அவள் கண்கள் துரையனைப் பார்த்து விட்டன. மஞ்சள் காட்டில் நின்று கொண்டிருந்தான் அவன்.

"ஏன்... கல்லத் தூக்கி போட றீங்க?"

"இங்க வா புள்ள..."

"ஏனுங்க?"

"ஒரு சங்கதி..."

தங்காயாள் வருவதை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்த துரையன், அவள் கைக்கெட்டும் தூரத்தில் வந்ததும், திடீரென்று அவள் தோளைப்பற்றி இழுத்து, தன்னுடன் சட்டென இறுக அணைத்துக்கொண்டான்.

"ஐயோவ்! உட்ருங்க... என்னை ஏனுங்க இப்படி பண்றீங்க?"

"உஷ்...ஏம் புள்ள சத்தம் போட்டுப்பேசுற?... ஆரு காதுலயாவது கேட்டு தொலைக்கப் போவுது!" என்றபடி அவள் சற்றும் எதிர்பாராத நேரத்தில் அவள் வாயை அப்படியே கவ்விக் கொண்டான்.

அவள் உடலின் நரம்புகள் மெலிதாக அதிர ஆரம்பித்தன. மனம் 'தடக் தடக்' என்று குதித்தது. வியர்வை பொங்கி அவளை முழுவதுமாக நனைத்து விட்டது. எங்கோ எதுவோ அவளின் எந்த முகப்பிலோ உசுப்பி விட, அவள் தன்னை இழந்தவளாக அவனுடன் அந்த பூமியில் கிடந்தாள்.

அவன் விரல்கள் பட்ட அவள் உடலின் ஒவ்வொரு சென்டிமீட்டரும் சூடேற, தங்காயாள் அந்த வினாடியிலேயே அவனை மனதிற்குள் வரித்துக் கொண்டு, 'எல்லாம் இனி உன்னுடையது; இனி உன் இஷ்டம்!' என்பது போல் அவனுடன் தேய்ந்தாள்.

மிக மிக நெருக்கமான சுகத்தில் அவளின் வியர்வை மணம் தாக்கி சொக்க வைக்க, துரையன் அவளை மூச்சு முட்ட முத்தமிட்டபடி அவள் ஆடைகளைக் களைய ஆரம்பித்தான்.

அடுத்த சில வினாடிகளில் அவர்களுக்கு மிக அருகில் யாரோ வேகமாக நடந்து வரும் காலடிச்சத்தம் மிகவும் துல்லியமாகக் கேட்டது!

(தொடரு...



அனுராதா ரமணன் 2

பங்கு பெறுவோர் :

| | | |
|---|---|---|
| தியாகு | — | ஜெமினி மஹாலிங்கம் |
| லலிதா | — | லலிதா |
| லட்சுமி அம்மாள் | — | பிரஹா |
| ராமாமிருதம் | — | நடராஜன் |

இடம் : தியாகுவின் வீடு

# தீராத விளையாட்டுப் பெண்ணே

(லட்சுமி அம்மாள் கையிலிருந்த தூக்குப் பாத்திரங்களை —'ணங்'கென்று கூடத்திலேயே வைத்து விட்டு, முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டு உள்ளே போகிறாள். லலிதா—கைகளைப் பிசைந்தபடி கணவரைப் பார்க்கிறாள்.)

லலிதா: என்னன்னு, இப்படி அவா மூஞ்சிக்கு நேரே இப்படி எடுத்தெறிஞ்சிப் பேசிட்டேள். பாவம், சித்தி... மனசு உடைஞ்சு போயிட்டா...

தியாகு: உங்க சித்தி மனசு என்ன — கண்ணாடி டம்ளரா, பொக்கு பொக்கென கீழே விழுந்து உடையறதுக்கு? எப்ப, எதைச் சொன்னாலும் உங்க சித்திக்கு மனசு உடைஞ்சுதான் போறது... என்னிக்கு வாழ்ந்தது? உங்க சித்தி கழுத்துலே, Glass Handle with Care—னு ஒரு போர்டு மாட்டிக்க சொல்லு. இந்த காலத்துலே ஒவ்வொருத்தரும் பொண்டாட்டியை வெச்சுண்டு குடித்தனம் பண்ணவே—வாங்கற சம்பளம் போதாம—முப்பந்தைஞ்சு நாப்பது வயசு வரைக்கும் பாச்சுலராவே லாட்ஜுலே ரூம் எடுத்துண்டு தங்கிடறாங்க. என் பிரண்ட், ஒருத்தன்—ஒருவழியா சஷ்டியப்த பூர்த்தியோடவே கல்யாணத்தை வெச்சிண்டா போச்சுன்னு இருக்கான். ஏண்டா அப்படின்னு கேட்டா—ரிடையர் ஆகி வர்ற P. F. பணத்தை எடுத்துண்டு பொண்டாட்டியோட க்ஷேத்ராடனம், ஹனிமூன் ரெண்டையும் சேர்த்து வைச்சுக்கலாமேன்னு எகனமிக்கலா பிளான் பண்ணியிருக்கேன் கறான்... நான் தான்... (நெஞ்சில் அடித்துக் கொள்கிறான்) ஏதோ அப்பா வெச்சுட்டுப் போன சொத்தை நம்பி இருபத்தைஞ்சு வயசுலேயே கல்யாணத்தைப் பண்ணிண்டு — அடுத்த வருஷமே ஒரு பிள்ளையும் பெத்துண்டேன்.

லலிதா: (அழுதபடி) ஐயோ! ஐயோ! பிள்ளையைப் பெத்தது நான் அடிக்கடி இதை உங்களுக்கு ஞாபகப்படுத்திண்டே இருக்க வேண்டியிருக்கு...

தியாகு: சரி, நீதான் பெத்தே...பொண்டாட்டி பிள்ளை மாத்திரமில்லாம— பொண்டாட்டியோட சித்தி...அவ அப்பா, அவளோட புருஷன், அவாளுக்குப் பிறந்த அசட்டுப் பிள்ளை, எல்லாத்தையும் கட்டிண்டு மாரடிக்கணும்னு சொன்னு விட்டா...நீ அவாளுக்கு தினம் கோபம் வராதா...சரி. என்னமோ ஒழியறதுன்னுவிட்டா...நீ அவாளுக்கு தினம் ஸ்வீட்டும் காரமுமா பண்ணிப் போட்டுப் போட்டு...என் தலையை மொட்டை அடிச்சுடுவே போலிருக்கே...

லலிதா: ஏதாவது விசேஷம்...

தியாகு: இருந்தால்தான் என் தலையை மொட்டை அடிப்பியா?

லலிதா: ஐயோ! செத்த இருங்களேன்... ஏதாவது விசேஷம் இல்லைன்னு நான் ஸ்வீட் பண்றதே இல்லை. ஏன் இப்படி அபாண்டமா சொல்றேள்?

தியாகு: சரி, இதுக்கு முன்னடி எப்ப ஸ்வீட் பண்ணினே?

# மின்னல்

இடிக்கு பயந்து
மேகப்புதரில்
ஓடி மறையும்
வெள்ளி ராகம்!

—சத்யா

கருவானப் பலகையில்
கதிரவன் கையெழுத்தை
இறுக்கி அழித்து
எழுதிப் பார்க்கும்
இண்டர் கார்டன்!

—ப. அ. சுப்ரமணியன்

பேரிடியின்
இசைக்கு ஏற்றபடி
கருமேக
மழையழகி
ஆடும் ஆட்டத்திற்கு
ஒளிரும்
டிஸ்கோ லைட்.

—த. சதாசிவம்

விண்ணில் ஏற்பட்ட ஓட்டையால்
மண்ணில் வெள்ளப் பெருக்கு!
இந்த மின்னல்—
ஓட்டையை அடைக்க
இயற்கை செய்யும்
'வெல்டிங்'கோ?...

—இல. தயாளன்



ஆசிரியர்: உங்க பையனை பிள்ளையார் சுழி போட்டுட்டு பரிட்சை எழுதுடான்னு சொன்னது தப்பா போச்சு!

தந்தை: ஏன்...?

ஆசிரியர்: பக்கம் பூராவும் பிள்ளையார் சுழியாவே போட்டு வைச்சிருக்கான்!

—வி.பார்த்தசாரதி

---

துளியுண்டு மைசூர் பாகு... Detergent கேக் மாதிரி.

தியாகு: அதாவது ரெண்டு நாள் முன்னாடி... அப்பாது மைசூர் பாகு. அதுக்கும் முன்னாடி எப்போ

லலிதா (சுனசுரத்தில்) அதுக்கும் முன்னாடி சித்தி, சித்தப்பாவோட வெட்டிங் டே.

தியாகு: வெள்ளிக்கிழமை மைசூர் பாகுக்கு ரெண்டு நாள் முன்னாடி... உங்க சித்தப்பாவுக்கு பால் அல்வா பிடிக்கும்னு, ஏண்டி இவாளுக்கு இத்தனை வயசுக்கு மேலே வெட்டிங் டே கொண்டாடலேன்னு என்ன...

லலிதா: பாவம் வயசானவா... ஆசைப்பட்டா நம்மளைக் கேட்காம யாரைக்கேப்பா...

தியாகு: ஏன், நீ வளர்ப்பு பெண்தானே... சொந்தப் பொண் டெல்லியிலே இருக்காளே... அவகிட்ட போய்—வெட்டிங் டேன்னு கட்டிண்டு நிற்கிறது. அவ எல்லாம் மகா கெட்டி. உங்க சித்தி, சித்தப்பாவுக்கு பத்து பைசாவுக்கு சாக்லேட் வாங்கிக் கொடுத்து—இதாம்மா என்னாலே முடிஞ்சதுன்னு சொல்லி சாஷ்டாங்கமா விழுந்து நமஸ்காரம் பண்ணிடுவா... நீயும் அவாளை எல்லாம் பார்த்துக் கத்துக்கோடி...

ராமாமிருதம்: (ஒரு பை நிறைய காய்கறிகளை சுமந்தபடி வருகிறார்) மாப்பிளே... லலிதாவை இத்தனை வயசுக்கு மேலே என்னத்தைக் கத்துக்க சொல்றேள்... அதான் பாட்டு, டான்ஸ், தையல் எல்லாம் கல்யாணத்துக்கு முன்னாடியே கத்துக் கொடுத்திருக்கேனே...

தியாகு: அதெல்லாம் கத்துண்டு என்ன சார் பிரயோஜனம்? சிக்கனத்தைக் கத்துக் கொடுத்தேளா? நேத்திக்கு பீன்ஸ் கறியிலே முந்திரி பருப்பு தாளிச்சுக் கொட்டி அனுப்பியிருக்கா...ரசத்திலே கிண்ணங் கிண்ணமா நெய் மிதக்கிறது... வெண்ணை என்ன விலை விற்கிறது தெரியுமா? ஆஞ்சநேயஸ்வாமியே வெண்ணை சாத்தவாண்டாம், கையிலே காசா கொடுத்திடுங்கோன்னு சொல்லி கையை நீட்டிண்டிருக்கார்...

லலிதா: ஹும். அவர் கையிலே இருக்கிற வெண்ணையை இவர் வழிச்சுண்டு வந்திடுவார்.

தியாகு: முந்தா நாள் நல்லியிலே ரிடக்ஷன் ஸேல்ஸாம்... இவபோய் இருபது புடவை வாங்கிண்டு வந்திருக்கா எவன் கழுத்தை அறுத்துண்டு பில் போட பண்ணுவான்... இவளுக்கு என்ன—புடவையா இல்லே—ஒவ்வொண்ணும் பழக்கரை போட்டு...

லலிதா: நான் எல்லாம் யோசிச்சு திட்டம் போட்டுத்தான் வாங்கினேன். இருபது புடவையிலே ஏழு புடவைதான் நேக்கு. மீச்சம் பதிமூணு புடவை வரப்போற ஃபங்ஷன்ஸை உத்தேசம் பண்ணித்தான். ஆச்சு, மணிக்கு கல்யாணம் நிச்சயமாறது—கல்யாணப் பொண்ணுக்கு விளையாடல் புடவை ஒண்ணு வாங்கித் தரணும்.

ட்சுமி: விளையாடலுக்குப் போயிட்டியே... அதுக்கு முன்னாடி சுமங்கலிப் பிரார்த்தனை

தியாகு: விளையாடலுக்கு புடவை எதுக்கு... அவஸ்தை... ஒரு ஸ்போர்ட்ஸ் பனியனும், ஷார்ட்ஸும் வாங்கிக் கொடுத்தா போறுதா...

லலிதா: போறுமே... பெரியவா முன்னாடி அச்சுபிச்சுனு பேசாதீங்கோ... விளையாடல் புடவை ஆச்சு, மணி கல்யாணம்னு டெல்லி அக்காவுக்கு ஒரு புடவை வாங்க வேண்டாமா? அப்புறம் அடுத்த மாதம் அக்கா பொண்ணுக்கு வளைகாப்பு... பாவம் அவ... பெரிய குடும்பத்துலே வாழ்க்கைப்பட்டு கல்யாணத் தும் போதே ஏகமா இழுத்து விட்டுண்டு சிரமப்படறா... அதனாலே அக்கா பொண் ராஜிக்கு நான் தான் மசக்கை கறுப்பு புடவை வாங்கித் தரேன்னேன்.

தியாகு: என்னது? மசக்கை கறுப்பா?

லட்சுமி: லலிதா... மாப்பிள்ளைக்கு புரியும்படியா சொல்லேண்டி.

லலிதா: (வெட்கத்துடன்) ஆமாம்னா. மசக்கைக்காரிக்கு கறுப்புக் கலர் ரொம்ப பிடிக்குமாம்... வாங்கித் தரணும்னு சாஸ்திரம்.

தியாகு: அப்ப எனக்கு ஆரஞ்சு கலர் இல்லேன்னா இந்த கனகாம்பர கலர் இல்லே அந்தக் கலர்... இதுலே வேஷ்டி, சட்டை வாங்கித்தாயேன்.

லலிதா: எதுக்கு?

தியாகு: உம். எனக்கு உன்னாலே சந்நியாச ஆசை கொஞ்ச கொஞ்சமா வந்திண்டிருக்கு. அதான் (ஓங்கி, தலையில் அடித்துக் கொண்டு நகர — ராமாமிருதம், அவனது கையைப் பிடித்து நிறுத்துகிறார்.)

தியாகு: என்ன?

ராமாமிருதம்: ஆரஞ்சு கலர் இல்லேன்னா, கனகாம்பரக் கலர்னு சொன்னேளே, எத்தனை மீட்டர் வேணும்! டூ பை டூ வேணுமா. இல்லே பாலியஸ்டர்லே எடுத்துடலாமா......?

தியாகு: (முறைக்கிறான்) மவுண்ட்ரோடுலே ஒரு கடையிலே ஜப்பான் பட்டு வந்திருக்காம். அங்கே போய் வாங்குங்கோ...

லட்சுமி: லலிதா... மாப்பிள்ளை என்ன அழுத்தம் பாத்தியா... இதுவரைக்கும் சொல்லவேயில்லியே ..

லலிதா: (முக மலர்ச்சியுடன்) நிஜமாவா... ஜப்பான் பட்டா... வாங்கி வைச்சா, நம்ம குழந்தை ரவிக்கு நாலு பைஜாமா, மணிக்கு நாலு ஜிப்பா தைக்கலாமே...

ராமாமிருதம்: எனக்கு கூட ரெண்டு ஜிப்பா அதுலே தெச்சுடும்மா. இதெல்லாத்தையும் விட ஜப்பான் பட்டு நன்றா உழைக்கும்.

லலிதா: அப்ப வாங்கோ, ஸ்டாக் தீர்றதுக்குள்ளே போய் பத்து மீட்டர் வாங்கிப் போடலாம்.

(போகிறார்கள். தியாகு பிரமித்து நிற்கிறான்)

(தொடரும்)

---



"போன வாரம் பச்சைப் பாம்பு கொத்தினதை நினைச்சு இன்னும் வருத்தப்பட்டுக்கிட்டே இருக்கா நம்ம மீனு!"

"எல்லாம் சரியானதுக்கப்புறமும் ஏன் வருத்தப்படணும்?"

"பச்சைப் பாம்பு இவளைக் கொத்தின சமயம் அதுக்கு மேட்சா பச்சைப் புடவையும், பச்சை ஜாக்கெட்டும் போடாம சிவப்புப் புடவையும், சிவப்பு ஜாக்கெட்டும் போட்டிருந்ததை நினைச்சுத்தான் இன்னும் வருத்தப்படறு!"

—எஸ். பாலகிருஷ்ணன்

# ஸ்டெல்லா, எத்திராஜ், எஸ்.ஐ.ஈ.டிக்குள் சண்டையா?

சாந்தி மண்டபத்தை கடக்கும் ...து... கவர்ந்திழுக்க சுவரொட்டி ...தக்கு மதிப்பு கொடுத்ததில்... கால் ...டெக்கில் லேண்ட் ஆகி விட்டது...

அல் பிரஸ் கோ 82... சுவ ...ரட்டிகள் பாதி கிழிந்து தொங்கிக் ...கொண்டிருந்தன.. நிதானமாக படிகளைக் ...ந்து மேலே வந்தால் ரிசப்ஷன் ...த்துக் கிடந்தது... பூந்தொட்டிகளின் ...வேற்பில் கோபத்தை மறந்து... ...ர்ளே தலையை நீட்டியதில்... பெயிண் ...... ஸ்கெட்சிங்...

மயான அமைதி... ஆங்காங்கே ...குடிசைகள்... தண்ணீர் இல்லாமல் ...யும் சில மரங்கள்! கண்ணுக்குக் ...ளிர்ச்சி தருவது சில மரங்கள் + சில ...ண்கள்... குடிசைக்குள் எட்டிப் ...த்ததில்... பெரிய தொழிற்சாலை...



ஆம் கனவுத் தொழிற்சாலையே நடந்து கொண்டு இருந்தது...! புரியாத சில மாடர்ன் ஆர்ட்டுகள்... சில படங்கள்... இப்படி சில குடிசைகளில் கூட்டங் கள் ஏராளம்... பொங்கி வழியும் நம் ஸ்டெல்லா... எத்திராஜ்... எஸ்.ஐ.ஈ.டி. களின் மைல்டு செக்ஸ் தரிசனத்திற்கு காத்து கிடக்கும் நம் மைனர்களின் கூட்டங்கள்... க்விஸ்...

ஏதோ புரியாத சில கேள்விகள்.. சில அரைகுறை நிழல் படங்கள். கீச் சென்று கத்தி பாதியில் அறுந்து போகும் இசை... இதைப்பற்றி கேள்விகள்... வந்திருந்தவர்கள் அனைவரும் தத்துபித் தென்று ஏதோ உளறி... பரிசையும் தட்டி சென்று விட்டார்கள் ஸ்டெல்லா



மேரிஸ்... அந்த மாக்ஸி கூட்டத்தை பின் தொடர்ந்தவர்கள் விவேகானந்தா.. டம் சாரட்ஸ்...

தமிழில் இது ஊமை மொழி யாம்... கொடுத்த சொல்லை துப்பறிய வேண்டும்... இது போட்டி... சுறு சுறுப்பை உடம்பில் தட்டி விட்டது, இது ஒன்றுதான்... கலந்து கொண்ட கல் லூரிகள் ஏராளம்... ஸ்டெல்லா மேரீஸ்.. நல்ல முகபாவம்... வேகம்... விரைவில் கண்டு கொள்ளும் திறமை... முதல் பரிசு அலறிக் கொண்டு அவர்கள் காலடியில் விழுந்தது... நம் ஊர் பையன்களுக்கு சுறுசுறுப்பு போதவில்லை... அசடு வழிய மட்டும் தெரியும்... மியூசிக்...

மாலை ஆறுமணி... கல்லூரிக் காம்பௌண்டை விட்டு காட்டில் நடந் தது... ஏதோ அந்த காலத்தில் மெட் ராஸ் யுனிவர்சிடியில் கருணையால் வழங்கப்பட்டது சென்று பார்த்தால் சிவராஜ்— ஆனந்த் மட்டும் சேரில் இருந் தார். கேட்டதற்கு அவர்தான் நடு

# ஏசுநாதரும் நானும் ஒன்றாய்ப் பிறந்தவர்கள்!

**[illegible]ஷ்மியின் மறுபக்கம்**

எனக்கு சாமி நம்பிக்கை உண்டு. சினிமாவுக்கு வர்றதுக்கு முந்தி நிறைய சாமி கும்பிட்டுக்கிட்டிருந்தேன். இப்பல்லாம் ஜாஸ்தி கும்பிடறதில்லே. உனக்கு தேங்காய் அடிக்கிறேன் [illegible]டைக்கிறேன்னு வேண்டிக்கிடறதில்லே. அப்படி வேண்டிக்கிட்டா ஏதோ ஒரு காரணம் முடியாமலும் போயிடலாம். 'எனக்கு இப்போ முடியலே, முடியறபோது எல்லாம் செய்றேன்' என்று [illegible]கிட்டே சொல்லிடுவேன். இந்த சாமிதான் கும்பிடணும், இந்த சாமியைக் கும்பிடக் கூடாதுன்னு எந்த கட்டுப்பாடும் நான் வைச்சிக்கலே. எல்லா சாமியும் கும்பிடுவேன். கிறிஸ்து மேலே கொஞ்சம் ஜாஸ்தி பிரியம். ஏன்னா நான் பொறந்த நாள் டிசம்பர் 25. யேசு மேலே பிரியம் உண்டு.நானே தவிர சர்ச்சுக்கு போகத் தெரியாது. அவங்க கும்பிடுற முறை தெரியாது. வீட்டிலே யேசுவை நினைச்சுப்பேன். நான் மட்டுமல்ல எங்கம்மாவும் யேசுவை கும்பிடுவாங்க. எங்க ஊர்லே எங்களுக்கு இருந்த தரிசு நிலத்தை 'சர்ச்' கட்டக் கேட்டாங்கன்னு அம்மா கொடுத்திருக்காங்க.

பொதுவா கோவிலுக்கு போய் தான் சாமி கும்பிடணும் என்று நான் நினைக்கிறதில்லே. சாமி கும்பிட மனசு போதும். அதுக்காக நான் கோவிலுக்கு போவதே இல்லே என்றில்லே. போவேன். சின்ன வயசில் நிறைய தடவை கோவிலுக்குப் போயிருக்கேன். எங்க வீட்டுக்கு பக்கத்திலே ஒரு கோவில்—ராமர் கோவில். காலை மூணு மணிக்கு எல்லாம் பூஜை நடக்கும். ஆலயமணி அடிச்சாப் போதும், நானே எழுந்து





யாருக்கும் தெரியாமல் ராமர் கோவிலுக்கு போயிருக்கேன். இப்பவும் திருப்பதி கோவிலுக்கு போகணும்னு நினைப்பிருந்தால் கூட முடியாமலே இருக்கு. சூட்டிங் போகிற போது ஆக்ட் பண்ணுகிறபோது மனசுக்குள்ளே கும்பிட்டுக்குவேன். மனுஷாளுங்க யாரையும் கும்பிடுறது எனக்குப் பிடிக்காது. பிடிக்காதுன்னா நம்மை மோசம் பண்ணிடுவாங்க, அல்லது வேறேதும் பண்ணிடுவாங்க என்கிற எண்ணம் கிடையாது. பொதுவாவே எனக்கு,எதுக்கு மனுஷனை மனுஷன் நம்ப வேண்டும் என்கிற நினைப்புதான் இருக்கும். கடவுளை நம்பினால் நல்லது நடக்கும் என்ற எண்ணம் உண்டு. அவ்வளவுதான்.

பேட்டி: பொன்.ஜெயந்தன்,



அனுராதா ரமணன்

**பங்கு பெறுவோர் :**

| | |
|---|---|
| தியாகு | — ஜெமினி மஹாலிங்கம் |
| லட்சுமி அம்மாள் | — பிரஹா |
| ராமாமிருதம் | — நடராஜன் |
| சீனு | — அம்பி நாகராஜன் |

இண்டர்வியூவிற்காக வந்தவர்கள் :
No. 1 காண்டிடேட் — பாலாஜி
No. 2 காண்டிடேட் — ரமேஷ்

3

# தீராத விளையாட்டுப் பொண்ணு

**இடம் : தியாகுவின் வீடு**

[லக்ஷ்மி, ஊசி நூலுடன் ரவிக்கையை தைத்துக் கொண்டிருக்கிறாள்.]

தியாகுவின் ஆபீஸ் ஊழியர்கள் ஒருவர் பின் ஒருவராய் Attendance Register-ல் கையெழுத்துப் போட்டு விட்டு மாடியிலிருக்கும் ஆபீஸுக்கு போகிறார்கள். மணி கையெழுத்துப் போடாமல் போகிறான். ராவுஜியும் கையெழுத்து போடாமல் பாடிக் கொண்டு மாடிக்குப் போகிறார். லட்சுமி, மணியைக் கூப்பிட்டு Attendance Register-ல் கையெழுத்துப் போடச் சொல்கிறாள். ராவுஜியை ஜாடையில் கூப்பிட்டு கையெழுத்துப் போடச் சொல்கிறாள். ராவுஜி கையெழுத்து போட்டு விட்டு சிரித்து மழுப்புகிறார்.]

இண்டர் வியூவிற்கு வந்திருக்கும் இளைஞன் ஸார் — ஸார்.

லட்சுமி: யாரு.

இளைஞன் : தேவாசுரா பிரைவேட் லிமிடெட்...

லட்சுமி: ஆமா, இதுதான். ஆபீஸ் மாடியிலே இருக்கு. நீ யாரு?

இளைஞன்: இண்டர் வியூ கார்டு வந்திருக்கு. அக்கவுண்டண்ட் வேலைக்கு 10 மணிக்கு இண்டர்வியூ?

லட்சுமி: (கைக்கடியாரத்தைப் பார்த்து) Good! இப்போ மணி 9.45 தான் ஆகிறது. முன்னாடியே வந்துட்டேயே! மாடிக்கு Interview-க்கு போறதுக்கு முன்னாலே இங்கே ஒரு Preliminary Interview...... ம். ம் என்ன படிச்சிருக்கே? என்ன கையிலே?

இளைஞன்: நமஸ்காரம் மேடம். நான் M. A. Economics — இதைத் தவிர Short hand, Typewriting. Accountancy எல்லாம் பாஸ் பண்ணியிருக்கேன். Hindi, Malayalam, Telugu தெரியும். Sportsலே Certificate நிறைய வெச்சிருக்கேன். பார்க்கறீங்களா?

லட்சுமி: இருக்கட்டும், இருக்கட்டும். உனக்கு சில questions.

இளைஞன்: (தன்னுடைய Tie யை சரிபார்த்துக்கொண்டு) கேளுங்க Madam.

லட்சுமி: இன்னிக்கு மார்க்கெட்லே சர்க்கரை என்ன விலை விக்கறது?

இளைஞன்: ம்... வந்து... என்ன Madam, இதைப்பத்தியெல்லாம் எனக்கு எப்படித் தெரியும்?

லட்சுமி: தெரிஞ்சுக்க வேண்டாமோ? எத்தனை நாள் இப்படி தீவட்டித் தடியா ஊட்டமா நிக்க முடியும்? சரி... அடுத்த கேள்வி... உங்காத்துலே இட்லிக்கு அரிசி உளுந்து ஊற போடறதுண்டா?

இளைஞன்: உண்டு, Madam.

லட்சுமி: ஒரு லிட்டர் அரிசிக்கு எவ்வளவு உளுத்தம் பருப்பு போடணும்?

இளைஞன்: இதெல்லாம் பொம்மனாட்டி விவகாரம் இல்லியோ...

லட்சுமி: Nonsense! என்னது பொம்மனாட்டி விஷயம்? இந்தக் காலத்துலே எல்லாம் தெரிஞ்சுக்கணும். இது பாரதியார் நூற்றாண்டு விழா — ஆணுக்குப் பெண் சமம் — தெரிஞ்சுதா? வெறுமே M. A. Certificate-ம், Sports Certificate-ம் இருந்தா ஆயிடுத்தா — கொஞ்சம் General Knowledge-ம் வேணும்...

(இந்த அமளியைப் பார்த்த சீனு மாடிக்கு ஓடி தியாகுவிடம் கீழே நடப்பதைச் சொல்கிறான்.)

லட்சுமி: சரி... ...ம். சுட்ட அப்பளாம் — பொரிச்ச அப்பளாம் எது Weight அதிகம்.

இளைஞன்: (சிறிது நேரம் முழித்து விட்டு பிறகு) Madam, இதை ஔவையாரைக் கேக்க வேண்டிய கேள்வி...

லட்சுமி: எதுய்யா ஔவையாரைக் கேக்க வேண்டிய கேள்வி — வெறுமனே M. A. படித்து விட்டு Accountant வேலைக்கு மனு போட்டா போறுமா? Accountant — Tant — Tant — Tant கேட்ட கேள்விக்கு டாண் — டாண்னு பதில் சொல்ல வாண்டாமோ? சரி. சாதாரணமான very very easy and simple question. அரசு புள்ளியியல் துறையிடமிருந்து வந்துள்ள படி — நேற்றைய அங்காடி விலை விவரம் — முந்திரி பருப்பு — என்ன திரு, திருன்னு முழிக்கிறே — முந்திரி பருப்பு — பண்ருட்டி ரகம் — நூறு கிலோ என்ன விலை?

இளைஞன்: நழுவுதல் — Tries to go out.

லட்சுமி: எங்கே நழுவுறே?

இளைஞன்: பண்ருட்டிக்குப் போய் விசாரித்து வந்து சொல்றேன். (எரிச்சலுடன் சொல்லி விட்டு போகிறான்) அப்பொழுது ராமாமிருதம் வருகிறான்.

இளைஞன் 2: அவரைத் தடுத்து நிறுத்தி) இருங்க சார். எனக்குப் பின்னாடி வந்துட்டு முன்னாலே போறீங்களே க்யூவிலே வாங்க.

[இந்த சத்தத்தைக் கேட்டு விட்டு மாடியிலிருந்து தியாகுவும், சீனுவும் எட்டிப் பார்க்கிறார்கள் — தியாகு இரைந்து — என்ன கலாட்டா அங்கே? All of you come here — ராமாமிருதத்தைப் பார்த்து not you... not you.]

லட்சுமி: (ராமாமிருதத்தைப் பார்த்து தலையைத் திருப்பிக் கொண்டு) நீங்க இங்கே வாங்கோ.

(தொடரும்)

ஆடற்கலை பயின்றவள்தான்; என்றாலும் காதலன் முன் பற்றி வேறு யார் முன்னிலையிலும் ஆடாதவள்! ஆயினும் ஆரணங்கு அவள் நடையழகே அவள் ஆடல் கலை கற்றவள் என்பதை காண்பவர்களை நினைக்கத் தோன்றும்!

அனிச்சமலரும் வருத்தும் அவள் பாதங்கள் நீரில் நனைந்து நிலத்தில் ஏற்படுத்தும் தோற்றத்தைக் காண்பவர்கள் அந்த வடிவழகைப் புகழ்வர்!

பெண்மைக்கு இலக்கணமான உடல்வாகு கொண்டவள். காதலனின் ஆண்மைக்கு பலமுறை விருந்தாளுள் என்றாலும் அவள் அழகும் குலையவில்லை! அவள் காதலனின் ஆசையும் குறையவில்லை!

மீட்டுவோன் கை சேர்ந்த யாழ், புதுப்புது இராகத்தைத் தருவது போல் காதலன் மடியில் அவள் இருக்கும் போதெல்லாம் புதுப்புது சுகந்தந்தாள்!

அமுதசுரபி அவளிடம்! தேன் ஊற்று அவனிடம்! வேப்பமரம் மலர் படுக்கை விரித்துத்தரும் அவள் கால்களுக்கு! அவர்களிடை தென்றல் புக முயற்சிக்கும்! தோற்று, பின்னர் அவர்களைத் தொட்டுவிட்டு நகர்ந்து விடும்!

காதலன் குறிப்பறிந்து அவள் நடப்பாள்! காதலியின் மனமறிந்து அவன் நடப்பான்! ஒருவர் முகம் வாட இன்னொருவர் தாங்க மாட்டார்!

அவன் விழி!
அவள் ஒளி!
அவள் இதழ் தாமரை!
அவன் முகம் கதிரவன்!
அவன் கைகளுக்கு அவள் மலர்ச்செண்டு!
அவன் மடி அவளுக்கு மலர் மஞ்சம்!
அவளுக்கு நோயும் அவனே! மருந்தும் அவனே!
அவளுக்கு உறவும் அவனே! உயிரும் அவனே!

விழிபேசும் மொழியன்றி வேறு மொழி பேசிடார்! இதழ் தரும் தேனன்றி வேறொன்றும் பருகிடார்!

காவியக் காதலர்களாக விளங்கிய இவர்கள் இன்ப வாழ்வில் வாணிபம் குறுக்கிட்டது. விரைவாக வந்திடுகிறேன் என்று கூறி விடைபெற்று கடாரம் சென்ற காதலன் திரும்பவில்லை!

காதலியோ இரவெல்லாம் உறங்கவில்லை. காரணம் காதலன் நடுநிசியில் வந்து கதவைத்தட்டி தான் எழ நேரமாகி விட்டால் என்ன செய்வது என்ற கவலையால் இமைகள் இணைய மறுத்தன! பகலெல்லாம் எழில் மாடத்தே ஏறிவரும் வழி பார்த்தே நின்றிருந்தாள்!

நீள் மூச்சு விடுவாள்! காதலன் பிரிந்து சென்ற நாட்களை, தன் விரல்களைத் தொட்டுத் தொட்டு எண்ணுவாள். ஒரு முறையல்ல... பல முறை!




மையிடாத விழியோடு வாடிய முகத்தோடு வீதி வழி பார்த்து நின்றவளை அவள் தோழி "ஏன் இப்படி நிலை குலைந்து நிற்கிறாய்?" என்றாள்.

"என் கண்களும் அவர் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து ஒளி இழந்து அழகு கெட்டன; விரல்களும் அவர் சென்ற நாட்களைக் குறித்துத் தொட்டுத் தொட்டுத் தேய்ந்தன" என்றாள்!

இதனை அறம்பாடிய குறளாசிரியர்

"வாள் அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள் ஒற்றித் தேய்த்த விரல்"

என்று எழுதினர்.

# தீராத விளையாட்டுப்

இடம்: தியாகுவின் வீட்டு மாடி இதுவே தியாகுவின் ஆபீஸ்.

ஆபீஸ் ஹாலில் சுவற்ருேரமாய் வேட்டிகளும், புடவைகளும் உலர்த்தியிருக்கிறது. தியாகுவின் மேஜையின் மீது முறத்தில் சுண்டைக்காய் வற்றல். தியாகுவின் மேஜையைத்தவிர எதிரும் புதிருமாய் 4 மேஜைகள். ஒரு மேஜை மட்டும்... குமாருக்குப் பக்கத்து டேபிள் காலியாகவே இருக்கிறது. ஹாலின் ஒரு பக்கமாய் நின்றபடி சுகவனம் சந்தியவந்தனம் செய்து கொண்டிருக்கிருர்.

சுகவனம்: என்ன ஓய் வெங்காய சாம்பாரா...?



ராமாராவ்: அதுக்கு ஏன் பரவசமாகப் போறீர். இறைஞ்சு சொல்லாதீங்கோ. உங்க பொண்ணு லட்சுமி அம்மாள் தன் பங்குக்கு ஒரு முறம் வெங்காயத்தை கொடுத்து உரிக்க சொல்லிடுவா... (விசும்பியபடி,புறங்கையால் மூக்கையும், கண்ணையும் தேய்த்து விட்டுக் கொள்கிருர்)ஏற்கனவே ஒரு தாம்பாளம் நிறைய அரிசியைக் கொண்டு வந்து வைச்சிருக்கா. குக்கர்லே வெந்நீர் வச்சிருக்காளாம். அது கொதிக்கறதுக்குள்ளே கல்லுல அரிசி பொறுக்கி-ச்சீ... அரிசியிலே கல்லு பொறுக்கித் தரணுமாம். ஆபீஸ் வேலைக்காக மிஸ்டர் தியாகுவோட அப்பா என்னை Appoint பண்றப்பவே இந்த மாதிரி வேலையெல்லாம் இருக்'தும்னு சொல்லவேயில்லை.

சுகவனம்: இப்ப என்னய்யா குறைஞ்சு போயிடுத்து. (பஞ்ச பாத்திரத்திலிருந்து உத்தரணியால் நீரையெடுத்து 'சர்' ரென்று உறிஞ்சியபடி) உம்ம வீட்டுக்காக வெங்காயம் உரிக்கிறப்ப, நம்மாத்துக்கும் சேர்த்து உரிச்சுட்டுப் போறீர்... உம்ம வீட்டு அரிசியில கல் பொறுக்கரப்ப நம்மாத்துக்கும் சேர்த்துப் பொறுக்கிட்டுப் போறீர்...

ராமாராவ்: வீட்டுல எதுக்காக, என் வம்சத்துப் பேரை சொல்ல, பன்னண்டு குழந்தைகளைப் பெத்து வைச்சிருக்கேன். இங்கே நம்மாத்துக்காக எத்தனை.. (தலையை உலுக்கியபடி) சீச்சி...காலங்காத்தாலே நல்ல வார்த்தைகளா பேசணும்னு பார்த்தா நடக்க மாட்டேங்கறது... சீனு, அப்பா சீனு... (வெங்காயம் உரித்தபடி) அடேய் சீனு கூட ஆபீசுக்கு வரலைன்னு—எங்கே போய் சொல்லிக்கிறது...சேச்செச்சே.

சீனு (வந்து கொண்டே): ராமாராவ், ஏன் கத்தறேள் காலங்காத்தாலே? நான் மட்டும் என்ன... டூயட் பாடிட்டிருக்கேனு... அவனவனுக்கு வேலை இல்லையா... இப்பத்தான் புடவைங்களுக்கு சோப்பு போட்டு வெச்சேன். அதுக்குள்ளே நோட்டுப் புத்தகங்களுக்கு அட்டை போட்டுக் கொடுன்னு ஒருத்தன்...! தலையிலே வச்சிருக்கிற

# பொன்னர் 4

அனுராதா ரமணன்

எண்ணெயை கொஞ்சம் கசக்கிட்டுப் போயிடேன்னு ஒருத்தி.

குமார்: டேய்... டேய், நம்ம ஆபீஸ்லே இருக்கிறதே ஒரே ஒரு பொம்பிளை... அவ எண்ணெ தேய்ச்சு, சாம்பிராணி போட்டு, செவ்வாயும், வெள்ளியும், கபாலீசுவரர் கோயில், முண்டகண்ணி அம்மன் கோயில் எல்லாம் போய் சுவாமி தரிசனம் பண்ணிட்டு கையெழுத்து போட ஆபீசுக்கு சாவகாசமா வருவா... மானேஜர் வீட்டுப் பிள்ளைக்கு நோட் புக்ஸுக்கு அட்டை போடணும்னு— அதுக்கு இதுவா நேரம்...

ராமராவ்: என்னமோ! புடவைங்களை சோப்லே ஊற வச்சிருக்கேன்னியே... மானேஜர் சம்சாரத்தோடதா ...?

சீனு: அட போங்க சார். நீங்க ஒண்ணு. நம்ம சம்சாரத்தோடதுதான்.

குமார்: அடப்பாவி... என்னடா சொல்றே. சார். இத்தனை நாள் சொல்லவே இல்லியே...

ராமராவ்: (கோபத்துடன்) பல்லைத் தட்டி கையில் கொடுத்திடுவேன். எவண்டா சொன்னான் அப்படி...

சீனு: (பெரிசாய் சிரித்துவிட்டு) குமார். நீயும் உன் புத்தியும். நம்ம சம்சாரம்னு... அதெல்லாம் ஒருசிநேகிதத்துல சொல்றது என்னு ராமராவ் சார். அப்படித்தானே. சாருக்குத் தெரியும் நம்மளைப் பத்தி. ஆமா...எதுக்காகக் கூப்டீங்க... எம் பொண்டாட்டி சேலைங்களுக்கு சோப் போட்டு வெச்சிருக்கேன். ஆபீஸ் பாத் ரூம்லே...மானேஜர் சார் வர்றதுக்குள்ளே மளமளன்னு தேய்க்கணும். எம்பையன் நோட்டுப் புத்தகங்களுக்கு வேறே- அட்டை போட்டுக் கொடுத்தாகணும். எம் பொண்டாட்டிக்கு செவ்வாயும் வெள்ளியும் எண்ணெ தேய்ச்சு முழு வாட்டா பிளசரு ஏறிடும்.

ராமராவ்: என்னது... பிளசரா ...

சீனு: ஆமா சார்... பிளசரு... அதான் ரத்தக் கொதிப்பு.

குமார்: பிளட் பிரஷரைச் சொல்றான்

## காட்சி-3

பங்கு பெறுவோர் :

| | | |
|---|---|---|
| சுப்பையா | — | கூத்தபிரான் |
| குமார்— | — | வாசு |
| ராமாராவ் | — | கோவை பத்து |
| ரங்கையன் | — | ராஜேந்திரன் |
| சீனு | — | அம்பி நாகராஜன் |
| மணி | — | திவாகர் |
| தியாகு | — | ஜெமினி மஹாலிங்கம் |
| லட்சுமி | — | பிரஹா |
| சுகவன் | — | T.U.C.S. ராஜகோபால் |
| டைரக்ஷன் | — | கே. எஸ். நாகராஜன் |



ராமராவ்: அதெல்லாம் பணக்கார வியாதின்னுடா... இவனுக்கு எங்கே யிருந்து வந்தது?

சீனு: அதுவா... போன வருஷம் தமிழ் நாடு லாட்டரியிலே எனக்கு பத்தாயிரம் ரூபா பரிசு விழுந்தது. லாட்டரியிலே பணம் வந்த உடனேயே—இவனுக்கு பிளசர் வியாதி, ஹார்ட்வீக் எல்லாம் வந்தது. பத்தாயிரத்திலே ஒன்பதாயிரம் இவ வியாதிக்கே சரியாய்ப் போயிட்டுது. மீதி இருந்த ஆயிரம் ரூபாய்—இவ சரியா குணமாயிடணுன்னு ஸ்வாமிக்கு வேண்டிண்ட பிரார்த்தனைக்கு செல வழிந்தது. இப்ப பணம் காலி... வியாதி மட்டும் அப்படியே தங்கிட்டது.

குமார்: ஏண்டா, உன் குடும்பத்தையே அமுழச்சிக்கிட்டு வர்றியே... மானேஜர் பார்த்தா என்ன நினைப்பாரு...

சீனு: (கோபத்துடன்) என்ன நினைப் பாரு...குடும்பப் பொறுப்போடு இருக் கேன்னு நினைப்பாரு. அவனவனுக்கு குடும்பப் பொறுப்புன்னு இல்லியா... ராமாராவ் சாரைப் பாருங்கோ, ராத்திரி வீட்லே வெங்காய வத்த குழம்புக்கு— ஆபீசுக்கு வெங்காயத்தை எடுத்திண்டு வந்து உரிக்கறாரு...!

ராமராவ்: தன்னுயிருக்கே... நானும் நீயும் ஒண்ணாயிட முடியுமா...? நான் சம்சாரி. பன்னண்டு குழந்தைகள். என்னையும் என் பொண்டாட்டியும் சேர்த்தா பதினாலு பேர்... அவ ஒண்டியா வெங்காயத்தை உரிச்சா சாத்தியப் படுமா... (தணிந்த குரலில்) வெங் காயத்தை கையில் எடுக்காமையே அவ தினம் கண்ணை கசக்கிண்டிருக்கா. இதுலே பார் குமார், எங்க வீட்லே எல்லா வேலையும் பகிர்ந்து போட்டுண்டு செய்யறதுதான் பழக்கம்... ஃபாரீன் கண்ட்ரீஸ் மாதிரி பொண்டாட்டியோட சேர்ந்து சமையல் வேலையிலேருந்து, குழந்தைகளுக்கு தலைபின்னி விடறது வரைக்கும் எல்லா வேலைகளையும் Husband & Wife பகிர்ந்து செய்யணுங் கிறது என்னோட அபிப்ராயம்.

---

சருமத்தில் உஷ்ணத்தை உணரும் இடங்கள் முப்பதாயிரமும், குளிர்ச்சியை உணரும் இடங்கள் இரண்டரை லட்சமும் உள்ளன.

—கணியூர் ஈஜுக.

சீனு (தனக்குள்): ஆம்மா... பெரிசா சொல்ல வந்துட்டேன். இவரு கரண் டியைத் தூக்கலேன்னு — பொஞ்சாதி மூஞ்சியைத் தூக்குவா... தெரியாதாக் கும்.

ராமராவ்: (அசடு வழிய சிரித்தபடி) அதனாலே ராத்திரி வெங்காய சாம்பார், இல்லே வெங்காயத் துவையல் இப்படி எதுவானாலும் காலம்பற ஆபீசுக்குக் கிளம்பறப்ப என் பங்கு வெங்காயத்தை ஆபீசுக்கு எடுத்துண்டு வந்து உரிச்சு வீட்டுக்கு எடுத்துண்டு போயிடுவேன். அதுபோலவே பன்னண்டு குழந்தைகள் கிட்டயும்... ஆளுக்கு ஒரு பிடி வெங்கா யம்... கத்திரிக்கா, வெண்டைக்காய்னு ஆளுக்கு ரெண்டு ரெண்டு காய்... வேலை ஈஸியா போயிடறது பாரு.

சீனு: நீங்க ஆபீசுலே வந்து வெங்காயம் உரிக்கலாம். அது தப்பில்லே. நான் மட் டும் பொண்டாட்டி புடவைகளைத் தோய்ச்சு உலர்த்தக் கூடாதாக்கும்.
(Phone Bell —லட்சுமி கூப்பிடுகிறாள்)

ராமாராவ்: போனை எடுத்து, லட்சுமி அம்மாவா... ஹ...ஹ... என்று அசட்டுச் சிரிப்பு.

லட்சுமி: கட்டையிலே போக

ராமாராவ்: சீனு உனக்கு போன் (என்று சொல்லி சீனுவைக் கூப்பிட்டு, போனை சீனுவிடம் கொடுக்கிறார்.)

லட்சுமி: சீனு... அங்கே என்னடாப்பா பண்றே...

சீனு: (எரிச்சலுடன் தனக்குள்—ஆபீ சுக்கு வந்து என்ன பண்ணுவான்) என்னும்மா...

லட்சுமி: மாடியில் ஹால் கொடியிலே என்னுடைய ரவிக்கை இருக்கா பாரு...

சீனு: (கொடியில் உலர்த்தியுள்ள துணி களைப் பார்த்தபடி) இல்லே... இங்கே உங்க அப்பாவோட வேஷ்டி, லலிதாம்மா வோட புடவை, டைப்பிஸ்ட் சுலோம்மா வோட ரவிக்கை, குமார் சாரோட டெரி லின் ஷர்ட், ராமாராவ் வீட்டுக் குழந்தைங்க துணிங்க இதான் இருக்கு.

லட்சுமி: அப்பப்பா... மாடியிலே ஆபீஸ் ஆரம்பிச்சாலும் ஆரம்பிச்சுது... துணி உலர்த்தக்கூட இடம் இல்லே. இந்த சுலோக்கும், குமார் தடியனுக்கும் இந்தாத்துக் கொடிதான் வேணுமா...? சரி அது போகட்டும். ஆபீசிலே எல்லா ரும் ஒழுங்கா வேலையைப் பாருங்கடா...

(இப்பொழுது சீனு, போனை ராமாராவி டம் கொடுக்க)

ராமாராவ்: என்னம்மா, கூப்பிட்டிங் களா (என்று அசடு வழிதல்)

லட்சுமி: மடையா, ஒழுங்கா வேலை யைப் பாருங்கடா, (என்று சொல்ல, ராமாராவ் போனை வைத்து விடுதல்.)

குமார்: என்னய்யா, ராமாராவ் ஒரு மாதிரியா இருக்காரு.

சீனு: லட்சுமி அம்மா போனில், எல் லாரும் பொறுப்போடு வேலை செய்ய ணும்னு சொல்லியிருப்பா.

குமார்: ஆமாம். எல்லாரும் பொறுப் போடு வேலை செய்யணும்.

சீனு: குமார் ஸார். பெரிசா சொல்ல வந்திட்டியே. நீ மட்டும் என்ன ஆபீஸ் லெட்டரா டைப் அடிச்சிகிட்டிருக்கே.

குமார்: ஆபீஸ் லெட்டர் இல்லாம பின்னே என்ன. நீ ரொம்ப கண்டியோ.

சீனு: அட. சரிதான் நிறுத்து சார். திருப்பதி வெங்கடாசலபதி துணைன்னு இருபது தடவை எழுதி இருநூறு பேருக்குப் போடணும். அப்படிப் போடாம இருந்ததினாலே ஒருத்தன் வாந்தி பேதியிலே போனான். இன்னொருத்தன் பைத்தியம் பிடிச்சு தெருத்தெருவா அலையறான். அதனாலே இந்தக் கடிதம் கண்ட ஒரு வாரத்துக் குள்ளே இருநூறு பேருக்கு இதே மாதிரி லெட்டர் போட்டுடு... இதை மதிச்சு செய்தால் கல்யாணம் நடக்கும்... அழ கான மனைவி வருவா. பதவி உயரும்... இந்த மாதிரி லெட்டர் இங்கிலிசுலே டைப் அடிச்சு நாலு நாளா போஸ்ட் பண்ணிகிட்டிருக்கியே... எனக்கா தெரி யாது...

குமார்: (பதறி) உனக்கு...உனக்கு எப்படித் தெரியும்...

சீனு: ஆங்... இதைக்கண்டு பிடிக்க சுஜாதா கதையில வர்ற கணேஷும், வஸந்தும் வரணுமாக்கும். ஏன் குமார்— போஸ்ட் பண்ணத்தான் பண்ணறே... உன் ஆபீசுலே வேலை செய்யறவங் களுக்கேவா போஸ்ட் பண்ணுவே.

ராமராவ்: ஆமா... நேத்து எனக்கு கூட லெட்டர் வந்தது. நானும் என் ஒய்ஃபுமா இருநூறு கார்டு வாங்கி— எங்காத்து பதினாலு மெம்பருமா தலைக்கு கொஞ்சமா பிரிச்சு வெச்சிண்டு எழுத றோம். ஏண்டா இது உன்னோட வேலையா? டேய்...டேய்... சீனு—இவன்

# தாய் இதழ் விற்பனையாளர் வரிசை



**பி. இருளப்பன்**

சிவகாசி, திருத்தங்கல் தாய் இதழ் விற்பனையாளர் இருளப்பனுக்கு சொந்த ஊர் மேற்கு முகவை மாவட்டம் மல்லாங்கிணறு. கடந்த பதினான்கு வருடங்களாக சிவகாசியில் வசிக்கிறார். தாய் இதழுக்கு விற்பனையாளராக ஆனதிலிருந்து வீடுவீடாகச் சென்று தாய்மார்களைச் சந்தித்து இதழின் சிறப்புக்களைச் சொல்லி எல்லோரும் விரும்பி வாங்கக் கூடிய வகை செய்தி ருக்கிறார். சொந்தச் செலவில் துண்டு பிரசுரங்கள், போஸ்டர்கள் அச்சடித்தும் திருவிழா சமயங்களில் ஒலிபெருக்கி வைத்தும் விளம்பரம் செய்கிறார்.

தாய் இதழ் விற்பனையாகும் கடைகளுக்கு தினசரி குறைந்தது மூன்று முறையாவது சென்று விற்பனை விருத்தி யாவதற்கு ஆலோசனை சொல்கிறார். கடைக்காரர்கள் அனைவரும் உறுதுணை யாக என்னோடு சேர்ந்து ஒத்துழைக் கிறார்கள் என்கிறார்.

பணி மென்மேலும் சிறக்க வாழ்த்துகிறோம். வளர்க! வாழ்க!

கனவைப் பறித்தாய் காட்சியில் நிலைத்தாய்
கண்களைப் பறிக்காதே — என்
மனதைப் பறித்தாய் நினைவைப் பறித்தாய்
மலரைப் பறிக்காதே!

—"நெஞ்சில் ஒரு ராகம்" பாடும் சரிதா, தியாகராஜன்.

தான் எழுதிறன்னு எப்படிக் கண்டு பிடிச்சா?

சீனு: நம்ம ஆபீசுலே குமார் சாரைத் தவிர யாரு இத்தனை தப்பு தப்பா டைப் அடிப்பாங்க? ஒருவரியிலே பதினைஞ்சு தப்பு.

ராமராவ்: (கோபமாய் குமாரைப் பார்த்து) ஏண்டா. இது உனக்கே நன்றாயிருக்கா. நீ பாட்டுக்கு ஆபீஸ் பேப்பர்லே டைப் அடிச்சு ஆபீஸ்லேந்து கவர், ஸ்டாம்ப் எடுத்து ஒட்டி போஸ்ட் பண்றே. நேத்திக்கு நான் இருநூறு கார்டு வாங்கினேன். தபாலாபீஸ்லே ஒரு பையன் ஏன் ஸார் உங்க பொண் கல்யாணத்துக்கு இன்விடேஷன் கார்டு பிரிண்ட் பண்ணக்கூட உங்கள் வசதியில்லையா? பாவம், கார்டுலேயே ஒவ்வொருத்தருக்கும் எழுதிப் போடப் போறேளான்னு கிண்டலா கேட்கறான்... உங்களுக்கெல்லாம்-ஆபீஸ் வேலையைப் பார்த்துண்டு சிவனேன்னு இருக்க முடியாதா?

குமார்: நான் சிவனேன்னுதானே இருந்தேன்! எனக்கு அந்த மாதிரி லெட்டர் வந்ததுலதானே— நான் அவசர அவசரமாக ஒரு வாரத்துக்குள்ளே போஸ்ட் பண்றதுலே மும்முரமா இருக்கேன்... அட கல்யாணமாகி அழகான பொண்டாட்டி வரலேன்னு ஒழியறது...பதவி உயர்வு கிடைக்கும்னு நான் சொப்பனத்திலேகூட நினைக்கலே. ஆனா வாந்தி பேதி வந்து நான் செத்துகித்து வச்சா... என்னாகும்! ஐயோ— அந்தக் கண்ணாவியை நான் பாக்கக்கூட முடியாது...

சீனு: ஏம்பா குமார். நீ செத்துப் போனதுக்கப்புறம் எப்படி கண்ணாவி, கருமாதியெல்லாம் பார்க்கப் போறே?

ராமாராவ்: இந்த மாதிரி இருக்கிறவங்க பீதியை கிளப்பிவிட்டு யார் லெட்டர் போடறாங்க... ஹும்!

குமார்: (வயிற்றெரிச்சலுடன்) அது யாரா இருந்தா என்ன... அவன் நாசமாகப் போகணும்... ஏன் ஸார். ஒரு நாளைக்கு ரெண்டு நாளா- மிஷினைத் தட்டி தட்டி விரலே வீங்கிடுத்து சார் (அழாக்குறையாய்) எங்க அம்மா, தினம் விரலுக்கு அயோடெக்ஸ் போட்டு நீவி விடறாங்க.

ராமாராவ்: (வெங்காயம் உரிப்பதை நிறுத்தி விட்டு, எழுந்து குமார் அருகில் வருகிறார்) த்சொ. த்சொ... விரலைக் காண்பி, நன்றாத்தான் வீங்கிடுத்து... நான் நினைக்கிறேன், குமார்... இந்த லெட்டரை உனக்கு யார் எழுதி அனுப்பியிருப்பா, தெரியுமோ...

(தொடரும்).

காதலன் அருகிலிருக்கும் போது இளம்புரவிகளைப் பூட்டிக் கொண்டு வேகமாகப்பறந்து செல்வது போல் இருந்த பொழுது, காதலன் இல்லாத போது, இவளின் சோகத்தைக் கேலி செய்வது போல் வயதான குதிரைகளைப் பூட்டிய தேர்-மணலில் சிக்கி நகர முடியாமல் தத்தளிப்பது போல் ஊர்ந்து கொண்டிருந்தது! இது காதலன் வருகைக்காகக் காத்திருக்கும் மங்கையின் கணிப்பு!

மையிட்டுத்தான் அவள் கண்களுக்கு அழகு சேர்க்க வேண்டும் என்பதில்லை! இருந்தாலும் தீட்டினாள்! மான் குட்டியின் கண்களில் உள்ள மருட்சி அவள் விழிகளை விட்டு அகலவில்லை!

பாலைச்சிரிப்பை இழைத்து வைத்துள்ள அவள் இதழ்களுக்கு குங்குமப் பூவின் நிறம் யார் தந்ததோ? இருந்தாலும் அந்த இதழ்களில் சாயமிட்டாள்!

வாசனைத் தைலத்தைக் கூந்தலில் தடவி அதனைப் பக்குவமாகக் கோதி கொண்டையிட்டு, தானே பறித்துத் தேர்ந்தெடுத்துத் தொடுத்த முல்லை தன்னைச் சூடினாள்

செந்தாமரை நிறமொத்தது!... ஆனால் அந்திக்கமலம் போன்றது! அவைகளை மறைப்பது போல் வெளியில் காட்டும் கச்சை! குருவியின் குருதியில் தோய்த்தது போன்ற சிவப்பு நிறம்... அதைத் தேர்ந்தெடுத்தாள்... கட்டினாள்!

பளபளப்பை இழக்காத ஆபரணங்கள் தான்...! இருந்தாலும் அவைகளைத் துடைத்தாள்... துடைத்தாள்.. துடைத்தாள... பிறகு அணிந்தாள்!

ஆடைகளைத் தேர்ந்தெடுப்பதும், உடுப்பதும் பிறகு அதைக் களைந்து விட்டு வேறொன்று எடுப்பதும்... அணிவதுமாய் சங்கடப்பட்டாள்! இறுதியாக இலைப் பச்சை நிறத்தை அணிந்தாள்!

இவளைப் பார்த்துக் கொண்டிருந்தத் தோழி நெஞ்சுக்குள் நகைத்துக் கொண்டிருந்தாள். என்றாலும் தோழிபடும் சங்கடத்தைப் பார்த்து அனுதாபப்பட்டாள்!

காதலன் கடிக்க மாட்டானா? என்று ஏங்கும் கொழு கொழு கன்னங்கள்!... சுவையமுது சுரக்கத் தயாராகவுள்ள அதரங்கள்... பார்த்ததுமே நகக் குறியைப் பதிய வைக்கத் தூண்டும் செப்புக் குடங்கள்!... நிலை கொள்ளாது தவிக்கும் இடை!... சிக்கென பிடித்துள்ள ஆடைக்குள்ளிருந்தாலும் 'தொட்டுப்பார்' என்று தூண்டும் செவ்வாழைத் தண்டொத்த துடைகள்!... செதுக்கி வைத்தாற் போன்ற கண்டசதைகள்! தண்டை தாங்கிய சிவந்த பாதங்கள்!... இவள் ஏன் இப்படித் தவிக்கிறாள். என்றறிய நினைத்த தோழி 'சிலை போலிருக்கும் நீ ஏன், நிலை கொள்ளாமல் தவிக்கிறாய்?' என்றாள்!

தலைவியோ நாணத்தால் தலை கவிழ்ந்தாள் என்றாலும், ஏதோ சுமை தாங்க முடியாது வருந்தினாள்! கண்ட தோழியோ விடவில்லை.

"நெஞ்சில் உள்ள சுமையைக் குறைக்க வார்த்தைகளால்தான் முடியும்... ஏன் இவ்வளவு வருத்தப்படுகிறாய்?" என்றாள்.

"காதலர் பிரிவால் துன்பந் தாங்காது என் உடல் வருந்துவது உண்மைதான்" என்றாள் தலைவி!

"காதலன் தான் இரவு வருமுன்னே வந்து விடுவாரே... சொர்க்க புரி போக அவ்வளவு அவசரமா?" என்றாள் தோழி!

தலைவி காரணத்தால் சிவந்தாள்... "துன்பத்தைப் பொறுக்காமல் வருந்துகின்ற என் உடம்பினிடத்தில் உயிரே காவடித் தண்டாகக் கொண்டு காம நோயும், நாணமும் இரு பக்கமும் தொங்குகின்றன" என்றாள்!

இத்தகைய நிலையிலுள்ள இளம் பெண்களின் துடிப்பை அறிந்த வள்ளுவப் பெருந்தகை எழுதினார்:—

"காமமும் நாணும் உயிர்காவாத்
தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து"

**ப.உ.ச**

# தீராத விளையாட்டுப் பொண்ணு

# 5

பங்கு பெறுவோர் :

| | |
|---|---|
| சுப்பையா | — சுந்தரராஜன் |
| குமார் | — வாசு |
| ராமாராவ் | — கோவை பத்து |
| ரங்கையன் | — ராஜேந்திரன் |
| சீனு | — அப்பி நாகராஜன் |
| மணி | — திவாகர் |
| தியாகு | — ஜெமினி மகாலிங்கம் |
| லட்சுமி | — பிரபா |
| சுகவன் | — T U.C.S. ராஜகோபால் |
| டைரக்ஷன் | — கே. எஸ். நாகராஜன் |

குமார்: (ஆவலுடன்) யார் அவர்?

ராமாராவ்: (ரகசியமாய்) நம்ம மானேஜர் தியாகுவாத்தான் இருக்கும்னு நினைக்கிறேன். ஏன்னு. அவருக்குத்தான் உன் மேல ரொம்பநாளா... ஒரு வன்மம். ஆத்திரம். என்னடா இது...எத்தனை நாள் தான் கரடியாகக் கத்தினாலும் இவன் தப்பு தப்பாவே டைப் அடிக்கிறானேன்னு... அதான் இம்பொஸிஷன் மாதிரி இருநூறு தடவை டைப் அடிக்க வச்சுட்டாரோ என்னமோ ..

சீனு: சேச்சே. அவருக்கு அத்தனை சாமர்த்தியம் போருது .. அவரோட சொந்தப் பணத்துல வாங்கிப் போட்ட பேப்பரும், கவரும் செலவழியும் படியா இப்படி ஒரு தண்டனையை அவரு தரவே மாட்டார் ..

குமார்: (ஆத்திரத்துடன்) இந்த லெட்டர் லிங்க்கை எவன் ஆரம்பிச்சானோ—அவன் தலையிலே விழ... அவனை வாந்தி பேதி வாரிண்டு போக...

(குமார் திட்டத் திட்ட—மணி, கையிலுள்ள பத்திரிகையைத் தூக்கி யெறிந்துவிட்டு நிமிர்ந்து உட்காருகிருன். முகம் பேயறைந்தாற் போல மாறுகிறது.)

குமார்: அவன் மாத்திரம் என் எதிர்த்த மாதிரி வந்தா தலையிலே கெரஸினை ஊத்தி நெருப்பு வைப்பேன்.

சீனு: குமார் சார்... அந்த மாதிரியெல்லாம் மட்டும் செய்யாதீங்கோ... கெரஸின் விக்கற விலையில-ஒருஉடம்பை எரிக்கிறதுக்கு கெரஸினைக் கொட்டி வேஸ்ட் பண்ணுவாளா?

குமார்: எனக்கு அதைப்பத்திக் கவலையில்லே... எனக்கு மெட்ராஸ்லே நிறைய பேரைத் தெரியும். சொல்லி வச்சா...



ஒரு நாள்லே அஞ்சு லிட்டர் கெரஸின் கூட என்னால புரட்ட முடியும்.

(சுப்பையா, தியாகு இருவரும் நுழைகிறார்கள்.)

தியாகு: ஆபீஸ் நேரத்துல என்ன கூட்டம் இங்கே. ஹும். மிஸ்டர் குமார், எதுக்கு இப்படி இரைஞ்சு கத்தறீங்க...?

சுப்பையா: என்னமோ கெரஸினைப் பத்திப் பேசிண்டிருந்தான் போல இருக்கு... அப்பா குமார்... நீயாரு. என்னோடை அக்கா பேரன். இத்தனை நாளா—நான் உனக்கு எவ்வளவு உபசாரம் செஞ்சிருக்கேன். இந்த வேலையையே நம்ம தியாகு சார்கிட்ட சொல்லி வாங்கித் தந்தவன் நான்தானே..., எனக்குத் தெரியாம அஞ்சு கிலோ கெரஸின் நீ வச்சுக்கலாமா—அது நீ எனக்குச் செய்யற மகாபாவமில்லையா... துரோகமில்லையா...

தியாகு: அட இருய்யா, இவரு ஒருத்தர் மிஸ்டர் ராமாராவ் குமார் அவங்கவங்க வேலையை பார்க்காம கெரஸினைப்



# அநுராதா ரமணன்

பத்தியும் சர்க்கரையைப் பத்தியும் பேச இதுவா நேரம். (கீழே குனிந்து பார்த்து) என்னது இது... வெங்காயம் சாம்பார் வெங்காயம்... ஆபீசுக்குள்ள சாம்பார் வெங்காயம் எப்படி வந்தது..?

ராமராவ்: (தயங்கியபடி) அது.. அது.. நம்ம ஆபீசுலே எலித் தொல்லை... இல்லையா... சீனு.

சீனு: ஆமா... நேத்து நாலஞ்சு ஃபைலைக் காணோம்...

தியாகு: என்னது ஃபைலைக் காணோமா?

சீனு: நேத்திக்கு மத்தியானத்துக்கு மேலதான் காணோம். சாதாரணமா இவங்க கொண்டு வர டிபன் கொஞ்சம் வாயில வைக்கிற மாதிரி இருந்தா... இந்த எலிங்க ஃபைலை சிந்தாது. நல்ல டிபன் இல்லாத அன்னிக்கு குறைஞ்சது ஒரு ஃபைலையாவது தின்னாத்தான் அதுங்க பசி அடங்கும்.

ராமராவ்: அதனாலேதான் வெங்காயம் வாங்கிண்டு வந்தேன்

குமார்: வெறும் ஃபைலை ... ஊறுகா இல்லாத மோர் சாதத்தைத் திங்கறப் பலத் திங்கறதுகளே இந்த எலிப் பட்டாளம். வெங்காயத்தைத் தொட்டுண்டு சாப்பிட்டுமேன்னு ராமாராவுக்குத் தவிப்பு... பாவம் ஜீவகாருண்யத்துலே தலைவரா இருக்க வேண்டியவர்.

ராமராவ்: நீ பேசாம இரு குமார்.. சார், வெங்காயத்தை வச்சு அந்த எலிங்களைப் பிடிக்கலாம்னு ஐடியா பண்ணிக் கொண்டு வந்தேன். (அசட்டுச் சிரிப்புடன்) நேற்று அமாவாசைங்கறது மறந்து போச்சு. ஒரு வெங்காயத்தை கூட இந்த எலிங்க தொடவே இல்லை... நம்ம ஆபீஸ்லே எலியெல்லாம்கூட அமாவாசை, சனிக்கிழமை மடியா, ஆசாரமாயிருக்கு...

சுப்பையா: அதுங்களுக்கும், அப்பா, அம்மான்னு இருக்கமாட்டாளா... நேம நிஷ்டையாயிருக்கக் கூடாதா?

தியாகு: ஷட் அப்... குமார். நேத்து சுலோகிட்ட ஒருலெட்டர் டைப் அடிக்கச் சொல்லிருந்தேனே... எங்கே அவ சுலோ இன்னும் வரலையா...?

சீனு: சுலோ என்னிக்கும் slowதானே.. பத்தரை மணிக்குள்ளே ஆபீசுக்கு

வந்தா அவனுக்கு திருஷ்டி சுத்திப் போடணும்...

சுப்பையா: அதைச் சொல்லத்தான் நான் இங்கே வந்தேன்.

ராமராவ்: எதை, திருஷ்டி சுத்தி போடச் சொல்லியா!

தியாகு: கொஞ்சம் சும்மா இருங்க... மிஸ்டர் சுப்பையா, உங்க பெண் சுலோ ஏன் இன்னமும் ஆபீசுக்கு வரலே?

சுப்பையா: அவ பிரண்டுக்கு இன்னிக்கு சீமந்தம் சாப்பாடு ஆக கொஞ்சம் லேட்டாகும்னு... இவளுக்குப் பிடிக்குமேன்னு இவ பிரண்டு சமையற்காரர் கிட்ட ஸ்பெஷலா சொல்லியிருக்கா. அதனாலே—இன்னிக்கு அரை நாள் பர்மிஷன் வேணுமாம். என்னை விட்டு சொல்லிட்டு வரச்சொன்னா.

தியாகு: இது என்ன ஸ்கூலாய்யா... அவ லீவு போட்டா லீவு லெட்டர் எதுவும் கிடையாது. நீங்க வந்து சொல்லிட்டாப்பல ஆச்சா...

சுப்பையா: என்னப்பா... இப்படி கோவிச்சுண்டா எப்படி? உங்க அப்பா காலத்துலே—உங்க அப்பாவுக்கு கீழே வேலை பார்த்தவன் நான். உன்னைக் கொண்டு போய் ஸ்கூல்லே விட்டு—அழைச்சுண்டு வந்து... நீ திருட்டு மாங்கா அடிக்க தோப்புக்கு ஓடினப்ப எல்லாம்—உங்க அப்பா கிட்ட பொய் சொல்லி உன்னை அடி வாங்காம காப்பாத்தினவனே நான்தான்... (சீனு, குமார், ராமாராவ் மூவரும் வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்க)

தியாகு: (எரிச்சலுடன்) பழைய ஹிஸ்டரியைக் கிளறுதீங்கன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன். இப்படி வம்ச வம்சமா ஒரே ஆபீஸ்லே வேலை பார்க்கறதுனாலே வர்ர சங்கடம் இதுதான். சின்ன வயசுல செஞ்ச தப்பையெல்லாம் தங்களுக்கு அட்வாண்டேஜா எடுத்துக்கறாங்க... (ராமராவைப் பார்த்து) அக்கவுண்ட் புக்கை எடுத்துண்டு உள்ளே வாங்கோ... மிஸ்டர் குமார், நீங்களும் வாங்கோ... உங்ககிட்ட அஞ்சு லிட்டர் கெரஸினைப்பத்தி பேசணும். சீனு, கீழே கெடக்கற வெங்காயங்களைப் பொறுக்கிண்டுவா...

(அவர்கள் போகிறார்கள். மணி, சுப்பையாவை மட்டும் தடுத்து நிறுத்துகிறான்.)



# ஒருவரேனும் இல்லையா?

என், இதயத்தின் மொழிகளை
இனங்கண்டு கேட்பவர்
எவருமே இங்கில்லையா?
அதன், எண்ணற்ற கனவினை,
ஏக்கத்தை உணர்ந்தவர்
ஒருவரேனும் இல்லையா...?

என், ஆன்மாவின் மௌனத்தின்
அர்த்தத்தைச் சரியாக
அறிந்துகொள் வார்இல்லையா?
நெடு, அலையெனப் புரள்கின்ற
விலையிலா உணர்வினை
அரவணைப் பார்இல்லையா?

என், புண்பட்ட நெஞ்சிற்கு
ஒத்தடம் தருபவர்
பூமி எங்கும் இல்லையா?
அதன், போக்குகள் நீக்குகள்
புதுமையின் நோக்குகள்
புரிந்துகொள் வாரில்லையா?

என், தனிவழிப் பயணத்தில்
தர்மத்தின் குரலோடு
துணைவரு வார்இல்லையா?
என்றும், தணியாத நற்கொள்கைத்
தாகத்தை தீர்த்திட
தமைத்தரு வார்இல்லையா?

என், அன்பெனும் மென்மன
அகண்ட நிலத்தினை
உழவரு வார்இல்லையா?
அதில், ஆயிரம் வகைவண்ண
மலர்களை மலர்வித்து
மணம்பெறு வார்இல்லையா?

**கவிஞர் பொன்னடியான்**

—நன்றி: 'முல்லைச்சரம்'

சுப்பையா: என்னடா பயலே?

மணி: நீங்க சொன்னேளேன்னு வெங்கடாசலபதி துணைன்னு இருபது தடவை எழுதி இருநூறு பேருக்குப் போட்டேன். இந்தக் குமார் என்னடான்னு சாபம் கொடுக்கிறுன் சார்... இந்த மாதிரி லெட்டர் போட்டவன் தலையிலே இடி விழன்னு...

சுப்பையா: (சுற்று முற்றும் பார்த்து விட்டு, நீ வேணு பாரு.. இந்த லெட்டருக்கு கைமேல பலன் உண்டு. ஆமா... எத்தனை தடவை எத்தனை பேருக்குப் போட்டே?

மணி: (பரிதாபமாய்) இருபது தடவை எழுதி இருநூறு பேருக்கு சார்...

சுப்பையா: அடடா... தப்பு பண்ணிட்டியே... இருநூறு தடவை எழுதி இருபது பேருக்குன்னு போடச் சொன்னேன். இதுக்குத்தான், பெரியவர சொல்றப்ப கவனமா கேட்கணும்கறது.

மணி: ஐயோ இப்ப என்ன பண்ணறது?

சுப்பையா: உங்க அக்கா மாதிரி, எதுக்கும் இருக்கட்டுமேன்னு இருநூறு தடவை எழுதி இருபது பேருக்குப் போட்டுடு. இல்லேன்னு விஷயம் விபரீதமா ஆயிடும். இப்ப நீ உனக்கு சீக்கிரம் கல்யாணம் ஆகணும்னு நினைச்சுண்டு எழுதிப் போட்டிருக்கியேன்னே... அது அப்படியே தலைகீழாமாறி— உங்க அப்பா, தாத்தா, அத்திம்பேர் எல்லாருக்கும் சீக்கிரமா இன்னெரு கல்யாணம் நடந்துடும்... உனக்கு மட்டும் கல்யாணமே ஆகாது! தெருவுலே போற பொண்ணெல்லாம் உன்னைப் பார்த்தா மூஞ்சியைத் திருப்பிண்டு போவா. உங்க தாத்தாவுக்கு லவ் லெட்டர் அனுப்புவா...

மணி: ஐயோ!

சுப்பையா: ஐயோன்னு மலைச்சு நின்னு எப்படி! சட்டுபுட்டுனு திரும்பவும் எழுத ஆரம்பி.

(மணி எழுத ஆரம்பிக்கிறுன். சுப்பையா தியாகுவின் அறைக்குப் போகிறுர் சீனு இதுவரையில் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்து தலையை ஆட்டியபடி போகிறுன்)

(தொடரும்)




ஒரு வீட்டில் மாமியாருக்கும், மருமகளுக்கும் சரியான பகை. தனது கணவன் வீட்டில் இல்லாத போது மாமியாருடன் சண்டை பிடிப்பதே அவளுக்கு பொழுது போக்கு.

ஒருநாள் மாமியார் கட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கும் போது உலக்கையால் ஒரே போடு போட்டு கொன்று விடுவது என்று முடிவு செய்து கொண்டு, உலக்கையை எடுத்து தலையை நோக்கி ஒரே போடு போட்டாள். அய்யோ... பாவம்... குறி தவறி உலக்கை மாமியாரின் கழுத்தில் விழுந்து விட்டது.

உலக்கையை எடுத்து சுவற்றில் சாற்றி வைத்துவிட்டு திரும்பும்போது... கணவன் வந்து விட்டான். மனைவிக்கோ ஒரே பயம். அம்மாவின் நிலைமையை கண்டு பதறித் துடித்த அவளது கணவன்... "அம்மா... என்னுச்சு..." என்று வினவினுன். அம்மாவால் பேச முடியவில்லை. உலக்கையையும், தனது கழுத்தையும், மருமகளையும் ஜாடை காட்டி விட்டு மண்டையைப் போட்டுவிட்டாள்.

உடனே அவன் தன் மனைவியை நையப் புடைத்திருப்பான் என்றுதானே நினைக்கிறீர்கள். இல்லை. அவன் அம்மா சொன்ன ஜாடைகள் அவனுக்கு புரியவில்லை. தன் மனைவியை அதற்கு அர்த்தம் கேட்டான். அதற்கு என்ன சொன்னுள் அவன் மனைவி தெரியுமா?

"உலக்கை மாதிரி நிற்கிறுயே! என் கழுத்தில் உள்ள நகையை கழட்டி உன் மனைவிக்கு போடு... நான் போகிறேன்... என்று ஜாடை காட்டினுள்... அய்யோ... என்னை உங்கள் மகள் மாதிரி வளர்த்தீர்களே! திடீரென போய் விட்டீர்களே!" என்று மாமியாரின் மேல் விழுந்து புரண்டாள் மருமகள்.

என்னங்க... உங்களைத் தானே எதற்கும் பெண்களிடம் ஜாக்கிரதையாக இருங்கள்!

(நாட்டோடிக் கதைகள் தழுவி...)

பூவை தங்கபாரதி.

### திலீப்

எனக்கு படிக்கும் போதே நடிகனாக வேண்டும் என்ற எண்ணற்ற ஆசை உண்டு. பல நாட்கள் கல்லூரிக்கு கட் அடித்துவிட்டு தொடர்ந்து,மார்னிங் ஷோ, மேட்டனி, மாலை ஆட்டம் என சுற்றிக்கொண்டு இருந்தேன்.

என்னுடைய செய்கைக்கு வீட்டில் எல்லோருமே பெரும் எதிர்ப்பு. கல்லூரிக்கு கட் அடித்தாலும் பரீட்சையில் கோட் அடித்தது கிடையாது. இதுவே எனக்கு பிளஸ் பாயிண்டாக இருந்தது மற்றவர்களிடம் எனக்காக வாதாட.

'பாக்கெட் மணி கொடுப்பதால் நான் கெட்டுப் போகிறேன்' என என் சித்தி சொன்னதை வேத வாக்காக எண்ணி பணம் கொடுப்பதை நிறுத்தி விட்டார் தந்தை.

என்னால் சாப்பிடாமல் பல நாட்கள் இருக்க முடியும். சினிமா பார்க்







காது மட்டும் ஒரு நாள் கூட இருக்க முடியாது. பணம் வேண்டும் என்பதற்காக நேரத்துக்குத் தகுந்த மாதிரி பல பொய்களை சொல்லத் தொடங்கினேன்.

நடிகனான பிறகு தான் இனி வீடு திரும்புவது என்ற திடமான முடிவுடன் சென்னைக்கு புறப்பட்டேன். செலவுக்கு வேண்டிய பணத்தை என் சொந்த வீட்டிலேயே திருடிக் கொண்டு.

நடிப்புக் கல்லூரியில் சேர்ந்த நான் மானத்தோடு மனிதனாக வாழ ஓட்டலில் வேலையும் தேடிக் கொண்டேன். அன்பு கொண்ட நண்பர்களின் ஆதரவினால் காலம் தள்ளிக் கொண்டு இருக்கிறேன்.

பயிற்சி முடிந்து இனி எதிர் காலம் என்ன என்ற கேள்விக்கு பதில் கிடைக்காத எண்ணத்தில் நடைபாதையில் நடந்து கொண்டிருந்தபோது "உன்னை தேடிக் கொண்டு இருக்கிறார் பாலசந்தர்" எனக் கூறினார்கள் நண்பர்கள்.

என்னுடைய மனவறுமைக்கு பச்சைக் கொடி காட்டினார் பாலசந்தர் 'வறுமையின் நிறம் சிகப்பு' படத்தின் மூலமாக. அன்றுதான் என் வாழ்க்கையில் திருப்பமாக அமைந்த நாள்.

### சுமலதா

படித்துக் கொண்டிருந்த நான் அழகுப் போட்டியில் கலந்து கொண்டேன். பரிசும் பெற்றேன். அடுத்து நடிகை என்று பெயர் பெற்றேன்.

எனக்கும் என் தாயாருக்கும் நான் ஐ. பி. எஸ். படிக்கவேண்டும், பெரிய பதவியில் அமர வேண்டும் என்ற எண்ணத்துக்கு திருப்பம் ஏற்பட்டது.

நடிகையானதுக்கு சுற்றத்தாரிடையே எதிர்ப்பு. இதனால் நான்

# ஒரு குறள் சிறுகதை

தேவைக்கதிகமாக ஊடல் கொண்டதால் நேர்ந்த விளைவை விளக்கிக் கூறிய தோழி, "வெள்ளம் இழுத்துச் செல்வதை அறிந்திருந்தும் ஓடும் நீரில் பாய்கின்றவரைப்போல், பயன்படாமை அறிந்திருந்தும் ஊடல் கொள்வதால் பயன் என்ன?" என்றாள்

இதனை வள்ளுவப் பெருந்தகை

"உய்த்தல் அறிந்து புனல்பாய்
பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலந்து"

என்று எழுதி வைத்தார்.





## காட்சி-4

### இடம்: தியாகுவின் அலுவலகம்

### பங்கு பெறுவோர் :

| | | |
|---|---|---|
| தியாகு | — | ஜெமினி மஹாலிங்கம் |
| சுப்பையா | — | கூத்தபிரான் |
| ராமராவ் | — | கோவை பத்து |
| குமார்— | — | வாசு |
| மணி | — | திவாகர் |
| ரங்கையன் | — | ராஜேந்திரன் |
| சீனு | — | அம்பி நாகராஜன் |
| டைரக்ஷன் | — | கே. எஸ். நாகராஜன் |

தியாகு: (குமாரைப் பார்த்து) ஆபீஸ்லே உட்கார்ந்துண்டு வெங்கடாசலபதி துணை. ஸ்ரீராமஜெயம் இதெல்லாம் எழுதிண்டிருந்தா என் வேலைய எப்ப முடிப்பே? உம் . (சுப்பையாவைப் பார்த்து) உங்களோட சிபாரிசுலைத் தான் இவனுக்கு வேலை போட்டுக் கொடுத்தேன். பையன் என்னடான்னா-ஆபீசுக்கு வராப்பலயே இல்லை . என்னமோ ஜாலியா காலேஜுக்குப் போயிட்டு வராப்பல வந்துண்டு போயிண்டிருக்கான் ... இவன் வேலையையும் சேர்த்து வச்சு நானே செய்ய வேண்டிருக்கு .தினம் சர்யந்திரம் அஞ்சு மணியிலேருந்து ராத்திரி எட்டுமணி வரைக்கும் ஆபீஸ்லேயே உட்கார்ந்து டைப் அடிக்க வேண்டிய லெட்டர்ஸ் எல்லாத்தையும் நானே டைப் அடிச்சு மறுநாள் போஸ்ட்டுக்கு தயாரா வச்சுட்டுப் போக வேண்டியிருக்கு. ஒருத்தராலே ஒரு ஒத்தாசை கிடை யாது... உங்க பொண் சுலோசனாவும் இப்படித்தான் ... காலம்பற பத்துமணிக்கு ஆபீசுக்கு வரா. அவா ஒவ்வொரு பேரின் கிட்டயும் நின்னு க்ஷேம லாபம் விசாரிச்சுண்டு என் ரூமுக்கு வரப்ப மணி ஒண்ணாயிடறது...

சீனு: (சுப்பையாவைப் பார்த்து) ஆமா கரெக்டா உங்க ரூமுக்குள்ள நு றச்சே தான் சுலோசனா ரிஸ்ட்வாட்சைப் பார்ப்பா... உடனே தேளு கொட்டி னாப்பல கையை ஒரு உதறு உதறிட்டு 'ஐயோ' லஞ்சுக்கு நேரமாச்சுன்னு கேன்டீனுக்கு ஓடிடுவா... அப்புறம் மூன்றரை மணி பக்கமாத்தான் ஆபீஸ் பக்கமே எட்டிப் பார்ப்பாங்க.

தியாகு: இதுக்குத்தான்—எங்க அப்பா காலத்துலேயிருந்து அடிச்சுண்டேன் வேலை செய்யற ஸ்டாஃபோட வாரிசுக் கும் இந்த கம்பெனியிலேயே வேலை கொடுத்தாகணும்கற சட்டத்தை மாத் துங்கோன்னு தலை தலையா முட்டிண்

டேன். கேட்கலேயே அவர்... இப்ப எந்த குவாலிபிகேஷனும் இல்லாத அரைவேக்காட்டை எல்லாம் கட்டிண்டு நான் மாரடிக்க வேண்டியதாப் போச்சு. (எரிச்சலுடன் சுப்பையாவைப் பார்த்து) இந்த திட்டத்தை வசமா யூஸ் பண்ணின்டது நீர்தான். உம்ம பொண்ணை உமக்கு வாரிசா இங்கே வேலையில சேர்த்தேள். அவளுக்கு வாரிசா இந்தக் குமாரைக் கொண்டு வந்து என் தலையிலயே கட்டினேள்.. அப்புறம் குமாருக்கு வாரிசா—வாட்ச்மேன் வேலையில ரங்கையனைக் கொண்டு வந்து சேர்த்தேள்.

சுப்பையா: (அசட்டுச் சிரிப்புடன்) அதுவந்து தியாகு..நாலு பேர் முன்னாலே நீ என்னை இப்படிக் கோவிச்சுக்கறது கொஞ்சம்கூட நன்னாயில்லே... நான், உன்னை விட வயசுல பெரியவன். தோப்பனாருக்கு சமம். நமக்குள்ளே ஆயிரம் இருக்கும். அதெல்லாம் இந்தப் பொடிப் பசங்களுக்குத் தெரியணும்னு என்ன அவசியம்...

ராமராவ்: யாரய்யா பொடிப் பசங்க? நானும் இந்தக் கம்பெனியில முப்பது வருஷமா இருக்கறவன் தான். அடுத்த வருஷம் ரிடையராகப் போறவன்... மரியாதைக் கொடுத்துப் பேசும். உமக்கு தியாகு சார் கிட்ட எத்தனை உரிமை இருக்கோ—அத்தனை உரிமை எனக்கும் இருக்கு...

## 6/ தீராத விளையாட்டுப் பொண்ணு

## அனுராதா ரமணன்

சுப்பையா: (விறைப்புடன்) நான்— இந்த தியாகு பொறந்தப்ப புண்யாவசனத்துக்கு வந்து சாப்பிட்டவன்யா... தெரியுமா... அடடாடா.. இவன் அப்பா புள்ளைக் குழந்தை பொறந்த சந்தோஷத்துல ஆபீஸ் ஸ்டாஃப் அத்தனை பேருக்கும் மயில் கண் வேஷ்டி வாங்கித் தந்தார்யா... அவர் பெரிய மனுஷர்... அப்பேர்பட்ட மனுஷருக்கு ரைட் ஹாண்டா வேலை செஞ்ச பெருமை எனக்குத்தான்யா... இவனை மார்மேலயும் தூக்கி வளர்த்தவனும் நான்...

தியாகு: (படபடப்பாய்) யோவ் ஆபீஸ்லே வந்து அவன், இவன்னு பேசக்கூடாதுன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்.

சுப்பையா: (குழைவாய்) சாரி சார்... ஏதோ வேகத்துல பேசிட்டேன்...பழக்க தோஷம் அதுல பாருங்கோ... உங்க அம்மாவால உங்களை சமாளிக்க முடியாதப்போ எல்லாம்—'சுப்பையா இந்த சனியனை கொஞ்சம் தூக்கி வச்சுக்கோ.. கடங்காரன் காலம்பறலேருந்து அழ ஆரம்பிச்சுட்டான்'னு வைச்சுண்டே என் கிட்டத் தள்ளிட்டுப் போயிடுவா... ஒரு கூஜா நிறைய பசும்பாலையும் ஃபீடிங் பாட்டிலையும் உங்க ஆத்து வேலைக்காரி கொண்டு வந்து தந்துட்டு—குழந்தைய சாயந்திரமா வீட்டுல கொண்டு விட்டாப் போறும்னு அம்மா சொல்லச் சொன்னாங்கன்னு சொல்லிட்டுப் போயிடுவா... உங்களுக்காகு பசும்பால் பிடிக்காது... என் பொண்டாட்டி எனக்காக பிசைஞ்சு வச்சிருக்கற பழையதை மூச்சு முட்ட சாப்பிட்டுடுவேள்...

ராமராவ்: பசும்பாலை நீங்க குடிச்சிடுவேளாக்கும்... பார்த்தா தெரியறதே...

சுப்பையா: (முறைக்கிறார்)

தியாகு: பழைய கதையெல்லாம் வேண்டாம். உங்க பொண்—மிஸ்.சுலோசனா இன்னும் ஆபீசுக்கு வரலை... ஆபீஸ் பத்து மணிக்கே ஒர்க் பண்ண ஆரம்பிச்சுடறது தெரியலில்லே... (தனக்குள்) ஆறு, அவளைச் சொல்லி என்ன பிரயோஜனம்... எங்க அப்பா காலத்துல உங்களை வச்சுண்டு மாரடிச்சார்... நான் உம்ம பொண்ணை வச்சுண்டு திண்டாடறேன்.

ஸ்ரீ யா க செ கொ?

ஆ ஆ ஆ உ கி எ பெ.

வணக்கம்: ஸ்ரீதேவி யாரைக் கல்யாணம் செய்து கொள்ளுவார்?

ஆந்திராவின் ஆணழகர் ஆறடி உயரமுள்ளவர். கிருஷ்ணம் ராஜு என்ற பெயருள்ளவர். இது யூகம்.



மணி: அத்திம்பேர்...எத்தனை நாளா இது மாதிரி லலிதாவுக்கு துரோகம் பண்ண ஆரம்பிச்சிருக்கேள்? நான் இப்பவே போய் அக்காகிட்ட சொல்றேன் ...(கிளம்புகிறேன்)

சுப்பையா: (அவனது சட்டைக் காலரைப் பிடித்து இழுத்து) அசத்து! எந்த வார்த்தைய எப்படி எடுத்துக்கறதுங்கற விவஸ்தை இல்லாதவன்... போடா போய்—சினிமா எக்ஸ்பிரஸ்லே புதுமுகம் ஏதாவது பார்க்க லட்சணமா இருக்காளான்னு பாரு...நான் அட்ரஸ் வாங்கித் தரேன் ..

குமார்: டேய் மணி, சினிமா எடுக்கப் போறயா... எங்கிட்ட சொல்லவே இல்லியே... எனக்கு ஒரு சான்ஸ் கொடுடா ...பிரமாதமா ஆக்ட் பண்ணுவேன்.

ராமராவ்: எம்பொண்ணு — கடைக்குட்டி லச்சுமி கூட பஸ்ட் கிளாஸா நடிப்பா ...நல்ல ஃபேஸ்கட்...

மணி: (ஆவலுடன்) சொல்லவே இல்லையே...என்ன படிக்கறு...

ராமராவ்: ஃபஸ்ட் கிளாஸ்.

மணி: மூஞ்சி! ஃபஸ்ட் கிளாஸ் படிக்கற பொண்ணு ஃபஸ்ட் கிளாஸா நடிக்கறுளாம்..யாருக்கு வேணும்...பதினெட்டு வயசுல ஜிலுஜிலுன்னு ஒரு பொண்ணு-ஜெயமாலினி மாதிரி இருந்தா சொல்லுங்கோ

குமார்: அதுக்கு ஜெயமாலினியையே கேட்டுடறது...

மணி: கேட்டேனே ...மாட்டேனுட்டா..

குமார்: ஏன் கால்ஷீட் பிராப்ளமா ...?

சுப்பையா: உம்..கார் ஸீட் பிராப்ளம்... இவனும் அவளும் சேர்ந்து கார் பின்னுடி ஸீட்லே-உட்கார்ந்தா கார் கதவெல்லாம் பிஞ்சு போயிடும்... அதான்.

குமார்: டேய்மணி, ஜெயமாலினிய உம் படத்துக்கு புக் பண்ணிஞ தனியா கார் அனுப்பி ஷூட்டிங்குக்கு வர சொல்லணும். என்ன... நீயும் அவ கார்லே வருவேன்னு அடம் புடிக்கக் கூடாது.

மணி: நான் எங்கேடா படம் பிடிக்கப் போறேன். என்னைக் கல்யாணம் பண்ணிக்கறயான்னு கேட்டதுக்கு மாட்டேனுட்டான்னு சொல்ல வந்தா. படம் எடுக்க பணத்துக்கு எங்கே போறது...ரொம்ப நாளா ஒரு போட்டோ எடுத்துக்கணும்னு பார்க்கறேன். முடிய மாட்டேங்கறது. எங்க அத்திம்பேர் எனக்கு கொடுக்கற சம்பளத்துல உருப்படியா ரெண்டு சட்டை, பாண்ட் வாங்கிக்க முடியலே... அத்திம்பேர், அடுத்த மாசத்துலேருந்து எனக்கு நூத்தம்பது ரூபாய் இன்கிரிமென்ட் வேணும், சொல்லிட்டேன். விலைவாசி போற வேகத்துக்கு இந்தச் சம்பளம் கர்ச்சீப் வாங்கக் கூடக் காணுது...

குமார்: கர்ச்சீப் உனக்கா—ஜெயமாலினிக்கா... உனக்குத்தானேடா, பழைய வேஷ்டிய கர்ச்சீப் அளவுக்கு கட் பண்ணி ஓரம் மடிச்சு தச்சுக்கோ. போறும்.

தியாகு: விலைவாசியப்பத்தி உனக்கென்னடா கவலை? அதான் ஒரு ஹோல்சேல் ஏஜென்டை என் கழுத்துல கட்டியிருக்காளே உங்க அப்பா, அம்மா... அவ வாங்கிப் போடற சட்டை துணிமணிதான் உங்க தாத்தாவுக்கு, அம்மா, அப்பாவுக்கு, உனக்கு டில்லியில இருக்கற உங்க அக்காவுக்கு எல்லாம் சப்ளையாறது...கடையேறி-ஒரு பனியன் கூட இதுவரைக்கும் இவன் வாங்கினதில்லே...விலைவாசியப்பத்தி சொல்ல வந்துட்டான்...

சுப்பையா: சும்மா சொல்லக் கூடாது. மிஸஸ் தியாகுவுக்கு தாராள மனசு போன வாரம் ஆத்துப் பக்கம் போயி

ருந்தேனு...என்னம்மா- எப்படியிருக்கே. ஆத்துல எல்லோரும் சௌக்கியமான்னு விசாரிச்சேன்.

தியாகு: யார்கிட்ட... லலிதாகிட்டயா? ஏன்யா-என்னைத்தான் தினம் ஆபீசுக்கு வந்து கர்ம சிரத்தையா பார்க்கறி யோன்னோ—அப்புறம் ஆத்துல எல்லா ரும் சௌக்கியமான்னு அங்கே என்ன வம்பு?

சுப்பையா: ஆத்துல நீங்க ரெண்டு பேர் தானு...சித்தி, சித்தப்பா, தாத்தா, மணி அப்புறம் உங்க குழந்தை... எல்லாரும் இல்லையா... என்னமோ கேட்டேன். பாவம், அதுக்கு அவ பொல பொலன்னு அழுதுட்டா. நான் பதறிப் போயிட்டேன், 'ஏம்மா குழந்தே-எதுக்கு அழறே?'ன்னு கேட்டேன்... உங்களைப் பத்திக் கதை கதையா சொன்னு...தியாகு...லலிதா பெரிய இடத்துப் பொண்ணு ... கொஞ்சம் தாராளமா செலவு செஞ்சே பழக்கம். அதுக்குப் போய் கன்னு பின்னுன்னு திட்டறேளாமே...ரொம்பத் தப்பு...இந்த காலத்துல இப்படி ஒரு தாராள மனசை பார்க்கறதே அபூர்வம்...

தியாகு: (பல்லைக் கடித்தபடி) வீட்டு விஷயங்களை எல்லாம் ஆபீஸ்லே சதிர்காய் உடைக்கருப்பல உடைக்காதீங்கோன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்...

சுப்பையா: (சிரித்தபடி) இதுல என்ன வெட்கம்...ஆபீஸ் வேற வீடு வேறயா... ஆபீஸ்லே மட்டும் என்ன, வேத்து மனுஷாளா இருக்கா? உங்க மச்சினன் மணி, என் உறவுக்காரன் குமார், அவனோட அத்தை பேரனோட மச்சினன் ரங்கையன், அவனுக்கு நெருங்கின சினேகிதன் தான் நம்ம சின்னி...இந்த ராமராவ் மட்டும்தான் நம்மாத்து மனுஷாள்லே சேராதவர்... முப்பது வருஷமா ஆபீஸ்லேயே படுத்து, தூங்கி, சாப்பிட்டு, வெங்காயம் உரிச்சு, கறிகாய் நறுக்கி, வரிசையா நட்சத்திரத் துக்கு ஒரு பிள்ளை வீதமா பெத்துண்டு... ஆபீஸ் வேற வீடு வேறங்கற நினைப்பே இல்லாம சல்லோ பல்லோன்னு வாழ்ந் துட்டார். இப்ப மட்டும் அவரை ஒதுக்கி வச்சுட்டு நாம குடும்ப விஷயத்தை பேசினு அத்தனை டீஸண்ட்டா இருக் காது. அவரையும் சேர்த்துப்போம். நீங் களும் வாங்கோ. எல்லாருமா சேர்ந்து மிஸஸ் தியாகுவைப் பத்திப் பேசு வோம்...

(ரங்கையனும் சீனுவும் கை நிறைய ஃபைலோடு அறைக்குள் நுழைந்தவர் கள் ஆவலுடன் ஓடி வருகிறார்கள். குமார் மணி, ராமராவ், ரங்கையன், சின்னி அத்தனை பேரும் தியாகுவையும் சுற்றிக் கொள்ள...)

தியாகு: (சத்தமாய்) எல்லாரும் போங்க...!போய் அவங்கவங்க வேலை யைப் பாருங்க...

ரங்கையன்: என்ன சார்... இதைவிட வேற வேலை எதுவும் முக்கியமாத் தோணலை...

சீனு: (அலட்சியமாய்) ஆமா பெரிய சீக்ரெட்...நமக்குத் தெரியாத விஷயமா.. நீங்க எல்லாரும் கேன்டீனுக்கு வாங்க... நான்—மானேஜர் சாருக்கே-தெரியாத அவரு வீட்டு விஷயங்களை எல்லாம் எடுத்து சொல்றேன்... (தியாகுவைப் பார்த்து)சார் வாட்ச்மேன், பியூன் தானேன்னு அலட்சியமா பேசிடக் கூடாது... எங்களுக்குத் தெரிஞ்ச அளவுக்கு உங்க ஃபேமிலி மேட்டர்ஸ் உங்களுக்கு சத்தியமா தெரியாது... சொல்லட்டுமா...

மணி: சொல்லுடா சீனு. எனக்குமே எங்காத்து விஷயம் எதுவும் தெரியாது.

சின்னி: பத்து நாள் முன்னு டி - மானேஜர் வீடடு அம்மா, அதான் உங்க அக்கா—புதுசா ஆறு பவுனுக்கு நெக்லஸ்



மோகன் படங்களில் பிஸியாக இருந்தாலும், தீவிரமாக ஒரு பெண்ணைக் காதலித்துக் கொண்டிருக்கிறார் வீடும் தேடுகிறார். வீட்டுக்குள் குடிபோக இருக்கும் அந்த நடிகை யார்? பூர்ணிமா ஜெயராம் அல்லவாம்.




ராதிகா-பிரதாப், வனிதா-(சங்கர்) கணேஷ், உஷா ராணி-ரவீந்தர் வீட்டு டெலிபோன்கள் அடிக்கடி தானே பேசிக் கொள்ளுகிறதாம்.






பண்ணக் குடுத்திருக்காங்க... சாருக்குத் தெரியுமா கேளு...(தியாகு திகைப்புடன் தெரியாதேன்று தலையாட்டுகிறான்) அப்புறம்—உங்க தாத்தாவுக்கு ஃபாரின்லேந்து கூலிங் கிளாஸ் வந்திருக்கு. இருநூத்தி சில்லறை ரூபா... நான்தான் கஸ்டம்ஸ்லே டியூட்டி கட்டி வாங்கி வந்தேன்... சாருக்குத் தெரியுமா... (தியாகு பரிதாபமாய் தலையாட்டுகிறான்) அஞ்சு நாள் முன்னாடி டில்லிக்குப் போற ஃபிரண்ட்ஸ்கிட்ட—மணியோட அக்காவுக்கு நாலு பட்டுப் புடவையும், குழந்தைங்களுக்கு டிரஸ்ஸும் இன்னும்... அப்பளம், வத்தல், வடகம் எல்லாம் போயிருக்கு... ஏன், சாம்பார் வெங்காயத்தை மறந்துட்டேனே. டில்லியில சாம்பார் வெங்காயம் கிடைக்கறதில்லேன்னு மணியோட அக்கா கடுதாசிப் போட்டிருந்தாங்க... லலிதாம்மா—நம்ம ராமராவ் சார்கிட்டதான் அம்பது ரூபாய்க்கு சாம்பார் வெங்காயமும், அம்பது தேங்காயும் பணகல் பார்க்லேயிருந்து வாங்கிட்டு வரச் சொன்னாங்க... ராமராவ் சார், உண்டா இல்லையான்னு சொல்லுங்க...

சுப்பையா: (ராமராவ் முகத்தை உறுத்துப் பார்த்து) நாலு நாள் முன்னாடி மிஸஸ் தியாகு வீட்டுக்கு நீர் வாங்கிண்டு போன சாம்பார் வெங்காயமும்—சித்த முன்னே ஆபீஸ் ஹால்லே நீர் உரிச்சுண்டிருந்த வெங்காயமும் ஒரே கடையைச் சேர்ந்ததுதானு...

ராமராவ்: அல்பம்! மகா அல்பம்! ஆபீசுல ஆயிரக்கணக்கான பணத்தை கையாடறேன். சாரி, கையாளறேன்... அதையெல்லாம் விட்டுட்டு சாம்பார் வெங்காயத்துக்காக என் மேல சந்தேகப்படறது அக்கிரமம்!

மணி: (சுப்பையாவிடம்) எதுக்கும் விசாரிச்சுப் பார்த்துடறது நல்லதுன்னு எனக்குத் தோணறது சார், ஆத்துல, டில்லிக்கு அனுப்பிச்ச வெங்காய மூட்டையிலயிருந்து ஏழெட்டு வெங்காயம் ஸ்டோர் ரூம்லே சிதறிக் கிடக்கு... யாரும் அதை எடுத்து வைக்கமாட்டா. எங்காத்து வழக்கம் அப்படி. தலையில பூசணிக்கா உருண்டுண்டு கிடந்தாலும் எல்லாரும் காலாலே இடறிண்டே போவாளே தவிர — யாரும் அதை அத்தனை சுலபத்துல எடுத்து வச்சுட மாட்டா, தான் வேணும்னு அந்த வெங்காயங்களை எடுத்துண்டு வரேன். அத்திம்பேர், ராமராவ் கிட்டயிருந்து கொஞ்ச நேரம் முன்னாலே பிடுங்கின வெங்காயம் பத்திரமா இருக்கு இல்லியா.. ரெண்டையும் கொண்டு போய் லாபரெட்டரியில கொடுத்து—பணகல் பார்க் நாத்தம் இருக்கான்னு பாத்துடலாம்.

குமார்: ஏன், விசாரணைக் கமிஷனே ஒண்ணு வச்சுட்டாப் போறது...

தியாகு: ஆல் ஆஃப் யூ கெட் அவுட். இது என் சொந்த விஷயம். நான் பார்த்துப்பேன்.

மணி: நானும் உங்களுக்கு சொந்தம் தான் அத்திம்பேர். அடிக்கடி அதை மறந்து மறந்து போயிடறேள். எதுக்கும் வெங்காய விசாரணைக் கமிஷனை பத்திக் கொஞ்சம் யோசிங்கோ.

தியாகு: சரிதான் போடா. பெரிசா சொல்ல வந்துட்டான். பூசணிக்கா போறது தெரியாது. சுண்டைக்கா சமாச்சாரத்துக்கு விசாரணையாம், கமிஷனும்...

(எல்லோரும் போகிறார்கள். தியாகு, தலையில கை வைத்தபடி உட்காருகிறான். ராமராவ்— பாதி வழி போனவர் திரும்பி வருகிறார்)

(தொடரும்)

# தீராத விளையாட்டுப் பொண்ணு 7

ராமராவ்: சார்... சின்ன ரிக்வஸ்ட்.

தியாகு: என்னது...?

ராமராவ்: யாரை நம்பினாலும் நம்புங்கோ. இந்த சுப்பையாவை மட்டும் நம்பாதீங்கோ. வேலையிலேருந்து ரிடையரா ஆயிட்டாரோல்லியோ... அப்புறமாவும் எதுக்கு காக்கா மாதிரி ஆபீசையும், உங்க ஆத்தையும் சுத்தி சுத்தி வரார் தெரியுமோ-உங்க ஒய்ஃப், தன் தாத்தாவுக்கு சின்னதாப் போன ஷர்ட்டையெல்லாம் இவருக்குத் தரா. உங்க ஒய்ஃப்போட சித்திக்கு சின்னதாப் போனப் புடவையெல்லாத்தையும் சுப்பையா சம்சாரத்துக்கு...

தியாகு: புடவை எப்படிய்யா சின்னதா போகும்...?

ராமராவ்: நன்னு கேட்டேளே... சில புடவைகளுக்கெல்லாம் தண்ணிய கண்டாலே அலர்ஜி. வெக்கப்பட்டுண்டு உடம்பை ஜிவ்வுனு சுருக்கின்டுடும். உங்க மிஸஸோட சித்திக்கு அதெல்லாம் சரிபட்டு வராது...வாங்கின அடுத்த மாசமே சுப்பையா சம்சாரத்துக்குப் போயிடும். அந்த அம்மா வெட வெடன்னு ஈர்க்குச்சி மாதிரி இருப்பாள்... அதனால ரொம்ப சௌகரியம் சுப்பையாவுக்கு... இந்த மாதிரி அகல நீளம் குறைஞ்ச புடவைக்கு ஏத்த மாதிரி பெண்டாட்டி உடம்பு இருக்கணும்னே அவளை கம்பல்ஸரி டயட்லே வச்சிருக்கார் மனுஷன்...

(இதற்குள் சுப்பையா திரும்பி வர—சட்டெனக் கிளம்புகிறார்)

அவ்வளவுதான் சார். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன். கவனிச்சுக்கோங்கோ...யார் வீட்டு சொத்து-யாருக்குப் போறது பாருங்கோ. உங்க அப்பா அந்த மாசத்துல ஓடி ஓடி, வயித்தைக்கட்டி, வாயைக் கட்டி சம்பாதிச்ச சொத்து...ஜாக்கிறதையா பார்த்து வச்சுக்கோங்கோ... வயசானவன் சொல்றேன்...வரட்டுமா...

(போகிறார்)

சுப்பையா: என்ன வத்தி வச்சுட்டுப் போறான் மனுஷன்...தியாகு, இவனை நம்பாதே...

தியாகு: (பல்லைக் கடித்தபடி) மரியாதை...மரியாதை!

சுப்பையா: இருக்கட்டும்... நாம ரெண்டு பேரும் தனியாத்தானே இருக்கோம்... அதுல பாரு தியாகு, உங்க பங்களாவுல மூணாவது மாடி கட்டினப்போ—கன்ஸ்ட்ரக்ஷன் சூபர்வைஸிங்கை இந்த ராமராவை நம்பி விட்டிருந்தியோன்னோ, அப்போ, இவன் இத்துனூண்டு போர்ஷன்லே குடியிருந்தான்... எங்க பங்களா மாடி கட்டறதுக்குள்ளே இவன் கிரௌண்டு வாங்கி சின்னதா சிமிழ் மாதிரி ஒரு வீடே கட்டிண்டுட்டானே... எப்படி...எப்படி...

தியாகு: (கத்துகிறான்) எனக்குன்னு ஒரு அசடு கர்ணனோட வம்சத்துல வந்தவ, பாரிவள்ளலுக்குப் பேத்தி,

அனுராதா ரமணன்

பங்கு பெறுவோர்

| | |
|---|---|
| தியாகு | ஜெமினி மஹாலிங்கம் |
| லலிதா | லலிதா |
| லட்சுமி | பிரஹா |
| ராமாமிருதம் | நடராஜன் |
| சுகவனம் | T. U. C. S. ராஜகோபால் |
| மணி | திவாகர் |
| டைரக்ஷன் | K. S. நாகராஜன் |



பொண்டாட்டியா வந்து வாச்சிருக்கா... என்னை ஒரு நாளைக்கு பண்டாரமா தெருவுல நிக்க வச்சுட்டுத்தான் மறு வேலை பார்க்கப்போரு... போய்யா— போய் உங்க பொண் சுலோவை அந்த தோல் கல்பெனி ஃபைலை எடுத்துண்டு வரச் சொல்லுங்கோ...நான் வீட்டைப் பத்தியே கவலைப் பட்டுண்டிருந்தா பிஸினஸ் திவாலாயிடும்... ஆயிரம் ஆயிரமா சம்பாதிச்சுக் கொட்டறேன். எல்லாரும் சுரண்டுங்கோ... ஏன் நிக்கறீர்...சுலோசனு அந்த லெதர் கம்பெனி ஃபைலோட இங்கே வரணும்.

சுப்பையா: அடடா... அனத்தாதே தியாகு. ஆபீசுக்கு கிளம்பிண்டிருந்த சுலோவை—லலிதா தான் போன் பண்ணி அவசரமா வரச் சொன்னு... எங்கேயோ உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர்லே— பெட் ஸ்ப்ரெட், பில்லோ கவர்ஸ் எக்ஸி பிஷனும் ரெண்டு பேருமா போயிருக்கா.. மேலும் இன்னிக்கு செவ்வாய் கிழமை... கிருத்திகை வேற... தோல் கம்பெனி ஃபைலை எம் பொண்ணு விரலாலே தொடக் கூட மாட்டா... அதான் கையோட நான் எடுத்துண்டு வந்தேன். எனக்குத்தான் இந்த ஆபீசுல எல்லாம் அத்துபடியாச்சே... ஹி... ஹி...இந்தா ஃபைல்.

(தியாகு அவர் கொடுத்த ஃபைலினுலேயே தனது தலையில் அடித்துக் கொள்கிருன்)

## காட்சி-5
### இடம்: தியாகுவின் வீடு

தியாகு: (ஆபீசிலிருந்து வந்து கொண்டே) லலிதா...லலிதா...

(சுகவனம் சோபாவில் உட்கார்ந் திருக்கிருர். லட்சுமி அம்மாள் தரையில் உட்கார்ந்தபடி சாத்துக்குடி ஜூஸ் பிழிந்து கொண்டிருக்கிருள்... பக்கத்தில் ஏழெட்டு சாத்துக்குடி)

லட்சுமி: லலிதா கடைக்குப் போயி ருக்கா. இதோ, இன்னும் அஞ்சு நிமிஷத் துல வந்துடுவா... உட்காருங்கோ டிபன் காபி கொண்டு வரேன்... அப்பா, நீங்க கொஞ்சம் வெயிட் பண்றேளா... மாப் பிள்ளைக்கு டிபன் கொடுத்துட்டு வந்து ஜூஸ் பிழிஞ்சு தரேன்...

சுகவனம்: ஆகட்டும்... ஆகட்டும். எனக்கு ஒண்ணும் அவசரமில்லே... நிதானமா வா.

தியாகு: ஆமா...என்ன உடம்பு...

சுகவனம்: உம்?

தியாகு: (முணுமுணுப்பாய்) வீட்டுல இருக்கறவா பேசிறு— காது நன்று கேட்கும். என் பேச்சு மாத்திரம் கேட்காது... இதெல்லாம் செவிட்டோட சேர்த்தி இல்லே...வேணும்னு ஆக்ஷன்! புடுபாவிப்பய தொண்டைத் தண்ணி வத்தி சாகட்டுமேன்னு நினைப்பு... (இரைந்து) ஆமா, உடம்புக்கு என்ன... சாத்துக்குடி சகிதமா அமர்க்களமா உட்காந்திருக்கேள்?

சுகவனம்: ஹி.. ஹி.. சாத்துக்குடியா.. ஒரு பழம் அம்பது பைசான்னு வித்தான்...ரொம்ப சீப்பா இருக்கேன்னு லல்லுதான் வாங்கிப் போட்டா...

தியாகு: (ஆத்திரத்துடன்) எத்தனை பழம் வாங்கினு...

சுகவனம்: அதிகமா ஒண்ணும் வாங்கிடலை நூறுதான்...

தியாகு: (அதிர்ச்சியுடன்) என்னது நூறு பழமா...ஜூஸ் ஃபாக்டரி வைக்கப் போறுளா...?

சுகவனம்: நூறு பழம் செலவாகாதா என்ன...லல்லு ஒண்ணும் யோசிக்காம வாங்கிடலை. தாத்தா நீங்க நாலஞ்சு நாளைக்கு தண்ணிக்குப் பதிலா ஜூஸா குடிங்கோன்று. குழந்தை...மணிதான் சொன்றுன், 'அக்கா நீ ஆரஞ்சு ஜெல்லி பண்ணி ரொம்ப நாளாச்சே'ன்னு... பாவம் அக்ஞானம் கேட்காம அதையும் பண்ணி வச்சா. அப்புறம் ரொம்ப நாளா, நம்ம சீனுவாச மாமா சம்சாரத்தைப் போய் பார்த்துட்டு வரணும்னு சொல்லிண்டிருந்தா... அவ இந்த கர்ப்பப்பை ஆபரேஷன் செஞ்சுண்டதுக்கு அப்புறம் லலிதா பார்க்கவே இல்லை...

தியாகு: ஆபரேஷறு... சீனுவாசன் சம்சாரத்துக்கா...அது எப்போ...

சுகவனம்: சீனுவாசன் சம்சாரத்துக்கு ஆபரேஷன் போன வருஷமே ஆயிடுத்து! அதுக்கப்புறம் நாலஞ்சு தடவை மியூசிக் அகாடமியில அவ லலிதாவைப் பார்த்தாளாம். மூஞ்சியத் திருப்பிண்டு போயிட்டாளாம். ஆபரேஷன் ஆனதை விசாரிக்கலைன்னு கோபமா இருக்குமோ என்னமோ... சாத்துக்குடிதான் நிறைய இருக்கே... இருபத்தஞ்சு பழத்தை எடுத்துண்டு போய் கொடுத்துட்டு விசாரிச்சுட்டு வரேன்னு போயிருக்கா...

தியாகு: அவா வீடு குரோம்பேட்டையிலன்று இருக்கு...தனியாவா போயிருக்கா?

லட்சுமி: (டிபன் தட்டுடன் வந்து கொண்டே) தனியா போறு மாப்பிள்ளை கவலைப்படுவாரேடின்னு நான்தான் சொன்னேன். கார் எடுத்துண்டு போயிருக்கா. துணைக்கு மணி அய்யர் போயிருக்கார். கூடவே மணியும் போயிருக்கான்...

தியாகு: இத்தனை பேரும் காரை எடுத்துண்டு குரோம்பேட் போய் சீனுவாசன் சம்சாரத்தை இப்பப் பார்க்கலைன்று என்ன...இப்ப என்ன அவளை ரேழியிலயா தூக்கிப் போட்டிருக்கு? அடுத்த மாசம் நான் ஆபீஸ் வேலையா குரோம்பேட் போறப்ப இவளும் என் கூட வந்தா அழைச்சுண்டு போக மாட்டேறு...

சுகவனம்: பேஷா அழைச்சுண்டு போவேள். ஆறு சாத்துக்குடி இருக்கறப்ப ஆபரேஷன் செஞ்சுண்டவளை விசாரிச்சுட்டு வர்றதை விட்டுட்டு... அப்போ வேற தனியா சாத்துக்குடி வாங்கிண்டு போவாளா... எகனுமிகலா திங்க் பண்ணனும் மாப்பிள்ளே...

தியாகு: (கொதிப்புடன்) எது எகறு மிகல்...இருபத்தஞ்சு சாத்துக்குடிக்காக காலன் காலறு பெட்ரோலை ஊத்திண்டு காரை எடுத்துண்டு சுத்துவாளா. ஏன், மீதி நாப்பது அம்பது பழம் இருக்கோன்று...நீங்க வேணும்று ஹாஸ்பிடல்லே போய் படுத்துக்கோங்களேன்.. இல்லைன்று இன்னும் நாலஞ்சு வருஷம் கழிச்சு வர்ற உங்க சதாபிஷேகத்தை நாளைக்கே வச்சுக்கலாமா...வர்ற போறவங்களுக்கெல்லாம் தாம்பூலப் பையிலப் போட்டுக் கொடுத்துடலாம்...

லட்சுமி: (அலுப்புடன்) அப்பப்பா...

## தெரிஞ்சா பதிலைச் சொல்லுங்க

இராமாயணத்தின் கதாநாயகன் இராமனின் இனிய மனைவி சீதை என்பதை சிறு குழந்தைகள் கூட அறிவார்கள்.

இலட்சுமணன்— பரதன்— சத்ருக்கனன் ஆகியோரின் மனைவியர் பெயர் பலருக்குத் தெரியாது. உங்களுக்குத் தெரியுமா?

தெரியாவிட்டால் அடுத்த பக்கம் பாருங்கள்.

முன் பக்கத்திற்கான விடைகள்:
லட்சுமணன் மனைவி—ஊர்மிளை
பரதன் மனைவி—மாண்டவி
சத்ருக்கனின் மனைவி— சுருதகீர்த்தி
தகவல்: கலவை ப. வரதன்

எப்பப் பார்த்தாலும் கோபம்தான். போறும் எங்கேயிருந்துதான் இப்படி ஒரு மாப்பிள்ளையத் தேடிப் பிடிச்சாரோ...

(இந்த சமயத்தில் லலிதா, தன் சித்தப்பா ராமாமிருதம், மணி முதலியவர்களுடன் வீடு திரும்புகிருள். தியாகு, உர்ரென்று முகத்தை வைத்துக் கொண்டு டிபன் தட்டைக் கையிலெடுக்கிருன்)

லலிதா: அட வந்துட்டேளா... இன்னிக்கு கொஞ்சம் லேட்டாகும்னு சொன்னேளே... சித்தி, குரோம்பேட் போயிட்டு வர்றச்சே, வர்ற வழி தானேன்னு பல்லாவரத்துல இருக்கற உங்க அக்காவாத்துலயும் தலையக் காமிச்சுட்டு வந்தேன்...போனது ரொம்ப நல்லாதாப் போச்சு.

லட்சுமி: (ஆர்வத்துடன்) அக்கா எப்படி இருக்கா? விச்சு சௌக்கியமா? விமலாவுக்கு எது மாசமாம்? அக்கா கால்லே இருந்த பித்த வெடிப்பு எல்லாம் தேவலாமா...?

ராமாமிருதம்: அதையேன் கேட்கறே போ...ஒரே உபசாரம்தான். காபி சாப்பிட்டுத்தான் போகணும்னு உங்க அக்காவும் விச்சுவும் ஒத்தைக் கால்லே நின்னு பாரு...

தியாகு: (பல்லைக் கடித்தபடி) காபி? காபி குடிச்சுட்டுப் போகச் சொல்லி ஒரே உபசாரமா? லலிதா—அவா இங்கே வந்தா, வடை பாயசத்தோட விருந்தும், ஸ்வீட் காரத்தோட டிபனும் அமர்க்களப் படுத்துவியே லலிதா... அல்ப காபிக்காக பல்லாவரம் வரைக்கும் காரை எடுத்துண்டு போனியா...

லட்சுமி: (துக்கம் தொண்டையை அடைக்க) லலிதா மாப்பிள்ளைக்குத் தான் எங்காத்து மனுஷாளைக் கண்டாலே பிடிக்காதே...நீ ஏண்டியம்மா போனே? எங்க அக்காபாவம்...ரொம்ப சாதாரணப் பட்ட குடும்பமா இருந்தாலும் 'ஓகோ'ன்னு உபசாரம் பண்ணுவா. குசேலன், கிருஷ்ணன்கிட்ட நடந்துக்கற மாதிரி உண்மையானப் பிரியத்தோட நடத்துப்பா... அதெல்லாம் உங்க அகத்துக்காரருக்கு எப்படித் தெரியும்? நீ சொன்னுத்தானே தெரியும்...

மணி: அம்மா, பெரியம்மா ஒண்ணும் அக்காவை வெறும் கையோட அனுப்பலே தோட்டத்துல வேப்பமரம் இருந்ததா... நிறைய பூ பூத்திருந்தது... ஒரு பிளாஸ்டிக் பை ஃபுல்லா வேப்பம்பூ கொடுத்திருக்கா. சொல்லேன் லலிதா...

தியாகு: வேப்பர்பூ கொடுத்திருக்காளா... அடேடே... லல்லு, தொடுத்து தலையில வச்சுண்டு கிளம்பு. சினிமாவுக்குப் போயிட்டு வரலாம்.

ராமாமிருதம்: சரிதான் நிறுத்துங்கோ மாப்ளே. என்னமோ குழந்தைய கலாட்டா பண்ணின்டேயிருக்கேளே... என்னமோ ஒரு ஆசையில லட்சுமியோட அக்காவகத்துக்குப் போனு... வேப்பம்பூ வாசனை கம்முனு வர்ற தேன்னு இவ கேட்டதுக்கு அவாளும் அள்ளி கவர்லே போட்டுக் கொடுத்தா... இதைவிட வேற என்னத்தை தூக்கித் தரமுடியும் ஒருத்தி...ஏதோ அவளாலே ஆனதை தந்தா...!

தியாகு: (லலிதாவைப் பார்த்து) அன்னிக்கு அந்தப் பெரியம்மாவும், அவ பொண்ணு விமலாவும் பிள்ளை விச்சுவும் வந்திருந்தப்ப நீ என்னல்லாம் அவா பையில திணிச்சு அனுப்பினே... சொல்லு மறைக்காம சொல்லணும். மென்னு முழுங்கப்படாது... உம்.

லலிதா: என்னத்தைக் கொடுத்துட்டேன். அவா வந்திருந்த அன்னிக்கு ரவாலட்டு பண்ணியிருந்தேன். எப்படிம்மா இப்படி போட்டாக் கரையருப் பல பண்ணினே. நான் பண்ணினு மட்டும் தொண்டையில 'கப்'புனு அடைச்சுக்கறதேன்னு சொல்லிச் சொல்லி மாஞ்சு போனு...

தியாகு: ஆமா... அவா பண்ணினு தொண்டையில 'கப்' புனு அடைக்கத் தான் செய்யும். ஏன்னு அது அவாத்து ரவா சர்க்கரையைப் போட்டுப் பண்ணினதோல்லியோ...

லலிதா: சித்த சும்மா இருங்கோ...

தியாகு: சரி, சொல்லு. அந்த மாதிரி சொல்லிச் சொல்லி மாஞ்சு போனதால எத்தனை ரவாலட்டு கொடுத்தே...

லலிதா: (மென்று விழுங்கியபடி) முப்பதே முப்பதுதான்...

தியாகு: உம் அப்புறம்... நிறுத்தாம மேலே சொல்லிண்டே போ... இன்னும் என்னவெல்லாம் இங்கேயிருந்து பார்சல் பண்ணி அனுப்பினே?

லலிதா: விமலா... அதான் எங்க பெரியம்மா பொண்ணு, ஆவக்கா ஊறுகா போட்டிருக்கியா லலிதான்னு கேட்டா. பிள்ளைத்தாய்ச்சி பொண் கேட்கறாளேன்னு ஒரு ஜாடி ஊறுகா கொடுத்தேன். அப்புறம் உங்க பேண்ட்லே சின்னதா போனதை விச்சுவுக்கு கொடுத்தேன்.

தியாகு: சின்னதா போனதுன்ன உடனே ஞாபகம் வர்றது. ஏண்டி, எங்க ஆபீஸ் சுப்பையாவுக்கு உங்க தாத்தாவுக்கு, சின்னதா போன சட்டையெல்லாத்தையும் தூக்கித் தரயாம். அவர் ஒய்ஃபுக்கு உங்க சித்திக்கு சின்னதாப் போன புடவைகளைத் தரயாம்..உன் மனசுல என்ன நினைப்பு...

ராமாமிருதம்: துணி கொடுத்தா பிணி போகும்னு பெரியவா சொல்லுவா...

தியாகு: பிணி மாத்திரம் போகாது.என் பாங்க் பேலன்ஸூம் சேர்த்து போகும். ஏய் லலிதா—சுப்பையா கிழவர் ஆபீசுல வந்து உன்னோட வள்ளல் தன்மையை பறை சாத்தறார். போதாக் குறைக்கு ராமராவ் வேற... ஆமா, ராமராவ் கிட்ட அம்பது ரூபா கொடுத்து சாம்பார் வெங்காயம் வாங்கிண்டு வர சொன்னியா... அப்புறம்... அந்த சின்னி வரிசையா லிஸ்ட் போட்டு சொன்னனே... எனக்குத் தெரியாம நீ என்னல்லாமோ வாங்கியிருக்கியாம்... உம்...

மணி: நான் சொல்லட்டுமா அத்திம்பேர்... தாத்தாவுக்கு கூலிங்கிளாஸ், டில்லி அக்காவுக்கு நாலு பட்டு புடவை.. அப்புறம் நெக்லஸ்...

தியாகு: ஆங்... அந்த நெக்லஸ் விஷயம்... பார்த்தியா, கேட்க மறந்தே போயிட்டேன். உனக்குத்தான் ஏற்கனவே நாலு செட் நெக்லஸ் இருக்கு இல்லே... அப்புறம் எதுக்குப் புதுசா இன்னொன்று...

லலிதா: அது வந்து...

தியாகு: மென்னு முழுங்காதே... சொல்லித் தொலே.

லட்சுமி: சொல்லேண்டி. நீ மென்னு முழுங்கறதைப் பார்த்தா— என்னமோ எனக்கும் என் பொண்ணுக்கும்தான் செய்யறதா மாப்பிள்ளை நினைச்சுக்கப் போறார்...

லலிதா: அது வந்து... தங்கம் விலையெல்லாம் ஏகத்துக்கு ஏறிண்டு போறதோன்றே... நாளைக்கு நம்ம குழந்தைக்கு கல்யாணமானா...

தியாகு: நமக்கு பெண் குழந்தை இல்லையே... பிள்ளைதானே இருக்கான்.



## அவர் தான் இவர்!

கோல்ஃப் விளையாட்டில் பந்துகள் காணாமற் போவதைத் தவிர்க்க முடியாது.

ஆனால் இதற்கு நேர் எதிராக ஹாம்ப்ஷையர், நியூ ஃபாரஸ்ட்'டில் உள்ள புரோக்கன் ஹர்ஸ்ட் மேனர் கோல்ஃப் கிளப்பில் ஒரு பந்து கூடக் காணாமல் போவதில்லை.

காரணம் இந்தக் கிளப்பில் காணாமற் போன பந்துகளைக் கண்டு பிடிப்பதற்கென்றே ஒரு பணியாளை நியமித்திருக்கிறார்கள்.

அந்தப் பணியாள் ஒரு நாய். பெயர் வாட்டி.

ரெக்கார்ட்ஸ் புக்கில் இடம் பெற்றிருக்கும் வாட்டி முயல்களை வேட்டையாடும் நாய் வகையைச் சேர்ந்தது.



எதுக்கு கேட்டுக்கறேன்னு — நீ செய்யற அமளியில இதெல்லாம் அடிக்கடி மறந்து-மறந்து போறது...

லலிதா: பிள்ளைதான். அதுக்குன்னு அவன் கல்யாணத்தும்போது நம்ம நாட்டுப் பொண்ணுக்கு நாம ஏதாவது செய்ய வேண்டாமா... அத்தனை வர தட்சிணை கொடுத்தோமே — பதிலுக்கு உங்காத்துல என்ன போட்டான்னு மாட்டுப் பொண்ணை அவ அம்மா அப்பா கேட்க மாட்டாளா...

தியாகு: கேட்பா... கேட்பா... ஆமா நம்ம பிள்ளைக்கு பொண்ணு பார்த்தாச்சா... எப்ப முகூர்த்தம் வச்சிருக்கே...

லலிதா: (சிணுங்கியபடி) இந்த கேலிதானே வேண்டாங்கறது. நம்ம குழந்தை இப்பதானே யு.கே.ஜி படிக்கருன்.

தியாகு: அது ஞாபகம் இருக்கோல்லியோ? ஏண்டி, யு கே ஜி படிக்கற பையன் இன்னும் இருபது இருபத்திரண்டு வருஷம் கழிச்சு கல்யாணம் பண்ணிக்கப் போருன். அவன் பெண்டாட்டிக்கு இப்பவே பிடிச்சு நகை வாங்கி வைக்கணுமா?

லலிதா: (இரைகிருள்) ஆமா. உங்களுக்கு என்ன தெரியும்? உங்க அம்மா— அந்த காலத்துல-பவுன் எண்பது ரூபாய்னு காசுமாலையையும், ஒட்டியாணத்தையும் வித்தார். கொஞ்சம் பொறுத்துக்கோங்கோ. பவுன் நூறு ரூபாய் கொடுத்து நானே வாங்கிக்கறேன்னு ஆன மட்டும் எங்க சித்தப்பா சொன்னுர். கேட்கலையே... இப்போ... பவுன் ஆயிரத்து மூந்நூறுக்கும் மேல போயிடுத்து. உங்க அம்மாவோட நகையெல்லாம் இருந்திருந்தா நான் தங்கத்துலேயே கவசம் பண்ணி சாத்திண்டிருப்பேன். இந்த ரேட்டுல பவுன் விலை போயிண்டேயிருந்தா நம்ம பிள்ளையோட காலத்துல என்னத்தை வாங்க முடியும்?

> **கனவு**
>
> ஏக்கத்தின் பிரதிபலிப்பு
> எண்ணத்தின் நிழற்படம்...
>
> — அபிசேகமணுளன்.

தியாகு: இந்தக் கவலை பெண்ணைப் பெத்தவாளுக்கு இருக்கணும்டி.. உனக்கு எதுக்கு? இப்படித்தான் முந்தா நாள் புக் ஷாப்புக்குப் போய் இந்த வருஷ ப்ளஸ் டூ புக்ஸ் எல்லாத்தையும் வாங்கிண்டு வந்தியாம். புஸ்தகக் கடை ராமலிங்கம் என் ஃபிரண்டு. அவன் கேட்கருன், 'ஏண்டா. உன் பொண்டாட்டி இத்தனை-வருஷம் கழிச்சு மேல படிக்கப் போருளா'ன்னு...அவன் கிட்ட நீ பி.ஏ. டிகிரி வாங்கியிருக்கற விஷயத்தை சொன்னு நம்ப கூட மாட்டேங்கருன்.

சுகவனம்: மாப்ளே... அது கூட நம்ம லலிதா ஐடியா பண்ணித்தான் வாங்கியிருக்கா. நான் அந்த காலத்து ஃபோர்த் பாரம். எனக்கு இருக்கற இங்கிலிஷ் நாலட்ஜ் என் மாப்பிள்ளை ராமபத்ரனுக்கு கிடையாது ... ராமபத்ரனுக்கு இருக்கற இங்கிலீஷ் நாலட்ஜ் உங்களுக்கு கிடையாது... (ராமபத்ரனும், தியாகுவும் முறைக்கிருர்கள்) ஆங்... முறைச்சு என்ன பிரயோஜனம்... போற போக்கைப் பார்த்தா உங்க பிள்ளை ரவி— நாளைக்கு ஏ.பி.ஸி.டி. கூடத் தெரியாம எம்.ஏ. லிட்ரேச்சர் டிகிரி வாங்கிடுவான் போல இருக்கு... அப்போ அந்தக் காலத்துல அவனுக்கு இந்த ப்ளஸ் டூ புக்ஸ் எல்லாம் உபயோகப் படுமோன்னே...

தியாகு: ஐயோ... இத்தனை புத்திசாலியான ஃபேமிலி பேக்ரௌண்ட் உனக்கு இருக்கும்னு தெரியாமப் போச்சேடி லலிதா...

ராமபத்ரன்: அதனுல என்ன இப்ப மாப்ளே... எங்க குடும்பத்துல அத்தனை பேருமே அதீத புத்திசாலிகள் தான்...

தியாகு: அதான் சொல்ல வந்தேன். இது முன்னடியே தெரியாமப் போச்சே...

சுகவனம்: தெரிஞ்சா மாத்திரம் என்ன செஞ்சிருக்க போறேள்...?

தியாகு: (கடுப்புடன் லலிதாவை சுட்டிக் காட்டி) இவளை கல்யாணம் பண்ணின்டதுக்கு பதிலா இவ பாட்டியை பண்ணின்டிருப்பேன். ஏன்னு—இவளை விட இவ பாட்டி புத்திசாலியா இருந்திருப்பாளோல்லியோ...

சுகவனம், ராமபத்ரன்: ஹாங்! (அதிருகிருர்கள்)

(திரை)

(தொடரும்)

# தீராத விளையாட்டுப் பொண்ணு



(தியாகு வருத்தத்துடன் மேஜை மீது தலையைக் கவிழ்த்தபடி உட்கார்ந்திருக்கிறான். சுப்பையா மெதுவாக எட்டிப் பார்க்கிறார்.)

சுப்பையா: ஹி... ஹி... விச்ராந்தியா இருக்காப் போல இருக்கு... டிஸ்டர்ப் பண்ணிட்டேனோ...

தியாகு: (எரிச்சலுடன்) டிஸ்டர்பன்ஸ்காகவே எங்க அப்பா உமக்கு சம்பளம் கொடுத்து வச்சுண்டிருந்தார்... என்ன விஷயம் சொல்லுங்கோ. இன்னிக்கும் உம்ம பொண்ணு ஆபீசுக்கு லேட்டா? உம்ம கிட்ட சொல்லியனுப்பிச்சாளா.

சுப்பையா: அந்த காலத்துல இருந்தே உனக்கு மூளை அதிகம் தியாகு. எல்லாத்தையும் சட்டுனு புரிஞ்சுண்டுடுவே... சுலோ இன்னிக்கு ரெண்டு மணி நேரம் தான் பர்மிஷன் கேட்டிருக்கா... மாங்காடுல யாரோ நாடி ஜோஸ்யம் சொல்றாளாம். இவளுக்கு பார்க்கற வரன் எல்லாம் தட்டி தட்டி போறதோல்லியோ... அது

**காட்சி-6**

டைரக்ஷன் — கே. எஸ். நாகராஜன்

இடம்: தியாகுவின் ஆபீஸ்

பங்கு பெறுவோர்:

| | | |
|---|---|---|
| தியாகு | — | ஜெமினி மஹாலிங்கம் |
| சுப்பையா | — | கூத்தபிரான் |
| ராமராவ் | — | கோவைபத்து |

• அனுராதா ரமணன்

பத்தி விஜாரிச்சுண்டு வர அவளும் அவ அம்மாவும் போயிருக்கா... ரெண்டு மணி நேரத்துல வந்துடுவா. உனக்கு கூட விபூதி குங்குமம் பிரசாதம் கொண்டு வருவா.

தியாகு: அந்த நாடி ஜோஸ்யத்து லேயே—மிஸ்டர் தியாகராஜனுக்கு பைத் தியம் பிடிக்கறதுக்கு சான்ஸ் இருக்கா, திவாலாகி மஞ்ச கடுதாசி கொடுக் கறதுக்கு வழியிருக்கான்னு கேட்டுண்டு வர சொல்லுமே...

சுப்பையா: ஆஹா... அதுக்கென்ன... பேஷா கேட்டுண்டா போச்சு... அடுத்த வெள்ளிக்கிழமை குழந்தை மாங்காடு போறப்ப கண்டிப்பா கேட்கச் சொல்ல றேன்.

தியாகு: (ஆத்திரத்துடன் மேஜையைத் தட்டி) என்ன ஓய்—ஒருத்தன் வேதனை யில அவஸ்தைப் படறப்ப—விளை யாடறீரா...?

சுப்பையா: (தன் தவற்றை புரிந்து கொண்டு) அடடே... நீ வேதனையில சொன்னியா... நான் காதுல சரியா வாங்கிக்கலே. அப்படி என்ன வேதனை உனக்கு... ஆத்துல ஏதாவது தகராறு... அந்தக் கிழவர், ஒரு நிமிஷம்கூட சும்மாவே இருக்காதே... நச்சு நச்சுன்னு பிராணனை வாங்குமே... அட, அதை விட்டுத் தள்ளு... உன் ஒய்ஃபோட சித்தி சித்தப்பா இருக்காளோல்லியோ... முந்தா நாள் மாட்னி ஷோ—லவ் ஸ்டோரி வந்திருந்தா... அதுவும் காருல. இந்த வயசுக்கு மேல இதெல்லாம் தேவையா, நம்ம ஆபீஸ்காரா ரெண்டு மூணு பேர் அந்த ஷோவுக்கு வந்திருந் தாளா... நன்னாத்தான் இருக்கு, சிறுசுகள் நம்ம தியாகு சாரையும் அவர் ஒய்ஃபையும் விட்டுட்டு இவாளுக்கு இந்த சினிமா பார்க்கலேன்னு என்னன்னு வாய் ஓயாம சொல்லிண்டா. நான் வாயே திறக்கலே. என்னைப் பார்த்ததுமே திருடனுக்குத் தேள் கொட்டினாப்பல பாப்கார்ன் பாக்கெட்டுல மூஞ்சிய புதைச்சுண்டா. நானும், 'சரித்தான். இப்ப இவாளைக் கண்டுண்டாப்பல காமிச்சுக் கறது அத்தனை டீஸன்ஸி இல்லே'ன்னு நாசூக்கா நகர்ந்துட்டேன்.

தியாகு: நீங்க எங்கே அங்கே போனேள்?

# வாரம் ஒரு குடும்பம்



புருஷோத்தமன் · மீனாட்சி

காத்திருந்த கொஞ்ச நேரத்தில் நிறைய பேர்கள் வந்தார்கள். காரில் ஸ்கூட்டரில் வந்த பலர் காத்திருந்து தேதி வாங்கிச் சென்றனர். வலது பக்கத்தில் இருவர் சகட்டுமேனிக்கு "லட்டுக்களை" உருட்டித் தள்ளிக் கொண் டிருந்தனர். எதிர்த்தாற்போல் பலசரக் குச் சாமான்கள் வைக்கப்பட்டு இருந் தன.

"வீட்டைக் கட்டிப்பார், கல்யாணத்தைப் பண்ணிப்பார் என்பார்

சுப்பையா: நானும் என் ஒய்ஃப்பும் அதே ஷோவுக்குப் போயிருந்தோம்.

தியாகு: கருமம்!

சுப்பையா: கருமமா... சேச்சே, ஏ கிளாஸ் படம்...எதுக்கு சொல்ல வந்தேன்னு... தியேட்டர்லே உன் மாமனார் கோன் ஐஸ்கிரீமுக்கு பேப்பர் கர்ச்சீப் கொடுக்கலேயின்னு நூறு ரூபா நோட்டை கர்ச்சீப்பா யூஸ் பண்ணினார். இந்த ரெண்டு கண்ணாலப் பார்த்தேன். (வருத்தமுடன்) ஹூம்... எப்படியெல்லாம் சம்பாதிச்ச பணம், எப்படியெல்லாம் போறது பார்த்தியா...உங்க அப்பா இருந்த காலத்துல தனக்குன்னு பர்ஸனல் யூஸுக்காக ஒரு சாமான் ஆசையா வாங்கிண்டது கிடையாது. எல்லாமே ஓசிதான், உங்கம்மாவைத் தவிர... மனுஷன் பொடி டப்பா கூட வச்சுண்டு நான் பார்த்ததில்லே...

தியாகு: இப்ப நான் மட்டும் என்ன... என்னால முடிஞ்ச மட்டும் வாயைக்கட்டி, வயித்தைக் கட்டி சேர்க்கத்தான் சேர்க்கறேன். நான் இந்தப் பக்கம் சேர்க்க சேர்க்க என் பொண்டாட்டி—இன்னொரு பக்கமா வாரி விட்டுண்டிருக்காளே... இவளுக்கு ஏத்தாப்பல இவாத்து மனுஷா வேற...ஒண்ணும் சொல்லிக்க முடியலே.

சுப்பையா: (பரபரப்புடன்) பரவாயில்லே, என் கிட்ட சொல்லலாம். சொல்லு, என்னால முடிஞ்ச ஹெல்ப் பண்ணறேன்.

தியாகு: ஆமா. நீங்க உங்களாலே ஆன ஒத்தாசையா-எரியற வீட்டுல உருவறது லாபம்னு சட்டையும், புடவையுமா உருவிண்டு வருவேள். வேற என்ன செய்வேள்?

---

கள்...'' என்றபடியே வருகிறார் திரு. புருஷோத்தமன். "இரண்டுக்கும் ரொம்ப அனுபவம் வேணும். நான் திடீர்னு இந்த நிலைக்கு வந்துடலை... குடும்பப் பொறுப்பை ஒன்பது வயதிலேயே ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலைமை வந்தது. கல்யாணங்களுக்கு சமையல் செய்யும் ஒருவரிடம் சேர்ந்தேன். அவரிடம் 13 வருடங்கள் சமையல் கலையை கற்றேன். பின் நானாக கல்யாண சமையல்களுக்கு சமையல் செய்யத் தொடங்கினேன். செய்கின்ற தொழிலை தெய்வமாக எண்ணி செயல் பட்டேன். இன்று நல்ல நிலைமைக்கு வந்திருக்கிறேன்.

கோவையில் 'கல்யாணம்'னு சொன்னா சமையலுக்கு புருஷோத்தமனைத் தேடி வருகிறார்கள்னா அது எனது ஆட்களின் திறமையும், கவனிப்பும்தான். கல்யாணங்கள்லே எத்தனையோ குறை இருந்தாலும் அதையெல்லாம் சாப்பாட்டினாலே நிறைவு செய்ய முடியும்.

பெண்கள் என்றாலே சற்று கூச்சப்படும் சுபாவமுடையவன் நான். தனியாக ரூமில் இருந்தபோது அதே தெருவில் இருந்த இவளை இரண்டொரு தடவை சந்தித்திருக்கிறேன். யாருக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை, என் நண்பர்களும், என் மனைவியை பராமரித்து வந்த திரு.ரத்தினம் அய்யர்—சுப்புலட்சுமி அம்மாள் தம்பதிகளும் எங்கள் திருமணத்தில் அக்கறை காட்டி முடித்து வைத்தார்கள். இவளை மனைவியாக அடைந்த பின் என் தொழிலில் வேக வேகமாக முன்னேற்றம் அடைந்தேன். அதை இவள் வந்த வேளை என்று தான் சொல்ல வேண்டும்.

சமீபத்தில் கோவையில் நடந்த ரஞ்சி டிராபி கிரிக்கெட் போட்டிக்கு ஒரு நாளைக்கு 1,500 புளியம்சாதம், தேங்காய் சாதம் போன்ற பொட்டலங்கள் சப்ளை செய்தேன். அதுவும் என் மனைவி ஒருத்தியாகவே தனியாக சமாளித்து விட்டாள். நான் வேறொரு கல்யாணத்திற்குச் சென்று விட்டேன். பெரிய கம்பெனிகள், பாங்குகள் மற்றும் வீட்டில் நடக்கும் சீமந்தம், ஆண்டு நிறைவு போன்ற விழாக்களுக்கு எத்தனை சாப்பாடு என்று எண்ணிக்கை சொல்லி 'மெனு'வும் கொடுத்து விட்டால் இங்கே வீட்டிலேயே தயாரித்து சப்ளை செய்து விடுவோம். இந்த அளவுக்கு முன்னேற்றத்திற்கு உதவி செய்யவேண்டும் என்ற என் மனப்பான்மையும் ஒரு காரணம்''

...சமையல் தொழிற்சாலை நடத்துகிறரோ என்று எண்ணும்படி இருபது முப்பது பேர் இவர் வீட்டில் எப்போதும் வேலை செய்கிறார்கள். ஒரே நாளில் இரண்டு, மூன்று கல்யாணங்களுக்கும் ஒத்துக்கொள்ள தயங்காத இவர், அவசியமானால் சட்டையை கழட்டிவிட்டு இவரே "அடுப்படிக்கு" சென்று விடுவாராம்.

பேட்டி: 'சத்யம்—சிவம்'




அதான் 'இன்று முதல் தோசைக்கு நெய் கிடையாது'ன்னு எழுதியிருக்கோமே. அப்புறமும் நெய் கேட்டா எப்படி?

முதல் தோசைக்கு தானே கிடையாது? நான் இரண்டாம் தோசைக்கல்லவா கேட்கிறேன்.

—அ. கிருஷ்ண சங்கர்

சுப்பையா: ஒண்ணு வேணு செய்யட்டுமா?

தியாகு: என்ன?...

சுப்பையா: உன் சம்சாரம் லலிதா கிட்ட அப்பப்போ பணத்தைக் கடனு கேட்டு வாங்கிண்டு வந்து உன் கிட்ட கொடுத்துடறேனே... நான் அந்தப் பக்கமா—கொண்டு வரேன். நீ இந்த பக்கமா பாங்குல போட்டுடேன்... லலிதா கிட்டேயிருந்து இன்னிக்கு நூறுரூபா வாங்கறேன்னு வச்சுக்கோ. கரெக்டா அடுத்த மாசம் அதே தேதியில் உன் கிட்ட கொடுத்துடுவேன்.

தியாகு: நடுவுல இருக்கற முப்பது நாள்லே அந்தப் பணத்தை வட்டிக்கு விட்டு—வருமானத்துக்கு வழி பண்ணிக்கறேன்னு சொல்றேளாக்கும்.

சுப்பையா: ஹி...ஹி... அப்படி பிளெய்னு சொன்னு நன்னுயிருக்குமா... இதெல்லாம் ஒரு அன்டர் ஸ்டாண்டிங் தான்.

தியாகு: அட போய்யா, நீரும் உம்ம யோசனையும் (கொஞ்சம் யோசித்து) ஆமா—உம்ம குடும்பத்துக்கு மாச வருமானம் என்ன...?

சுப்பையா: இந்தக் கேள்வியை ரொம்ப நாளா நீ கேட்பேன்னு எதிர்பார்த்துண்டேயிருக்கேன். என்ன பெரிய வருமானம்? சுலோ கொண்டு வர்ற ஐநூறு ரூபா சம்பளத்துல என்ன பெரிசா ஸேவ் பண்ண முடியும்... நீயே யோசிச்சுப் பாரு. காலம் கிடக்கற கிடப்புல—மளிகை சாமான் வாங்குவேணு, துணிமணி வாங்குவேணு, பால், கறிகாய் வாங்குவேணு...

தியாகு: இந்த அழுகைதானே வேண்டாம்கறது. சுப்பையா... நான் உங்க பொண்ணுக்கு ஆயிரம் ரூபா சம்பளம் போட்டுத் தரேன்னு...

சுப்பையா: (உற்சாகமாய்) ஐயோ, ஐயோ—உனக்கு எவ்வளவு நல்ல மனசுடா... குழந்தை (தியாகுவின் கன்னத்தை நெட்டி முறித்து திருஷ்டி கழிக்கிருர்) நீ தீர்க்காயுசா—க்ஷேமமா இருக்கணும்.

தியாகு: இருங்கோ. நான் சொல்ல வந்ததை முழுசா சொல்லலையே. நான் உங்க பொண்ணுக்கு ஆயிரம் ரூபா சம்பளம் போட்டுத் தரேன்னு வச்சுக்கோங்கோ... அப்பவும் இதே கஷ்டங்கள்ளாம் இருக்கத்தானே போறது... அதனுலே இதுவே போறும். நீங்க சமத்து. புத்திசாலி. உங்களை விடவும் உங்க ஆத்துக்காரி படு புத்திசாலி. எப்படியோ இந்த ஐநூறு ரூபாய்லேயே அட்ஜஸ்ட் பண்ணிக்கரு பாருங்கோ.

சுப்பையா: இதைச் சொல்லத்தான் இத்தனை சுத்தி வளைச்சியா... இந்த சம்பளத்துல நான் எப்படி சுலோவுக்கு கல்யாணம், கார்த்திகை பண்ணிப் பார்க்கறது... உம்?

தியாகு: நன்னுயிருக்கே... உங்க பொண்ணுக்கு வளைகாப்பு, சீமந்தம், ஷஷ்டியப்த பூர்த்தி எல்லாம்தான் பண்ணிப் பார்க்கணும்னு ஆசைப்படுவேள். ஆனு, எல்லாத்தையும் என் பணத்துலேயே முடிச்சுடணும்னு முடியுமா. அதெல்லாம் இருக்கட்டும். இந்த ஐநூறு ரூபாய்லே பாதுகாப்பாக எவ்வளவு செலவு பண்றேள்... மளிகை சாமானுக்காக எவ்வளவு செலவு செய்யறேள்... கொஞ்சம் சொல்லுங்களேன். நானும் தான் தெரிஞ்சுக்கறேன்.

(மீதி மேடையில் காண்க)

புரட்சித்தலைவர் நடித்த படங்களில் எனக்கும் பிடித்த படம்

11

# அடிமைப்பெண்



புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். நடித்து இமாலய வெற்றி பெற்ற படங்கள் ஏராளம். அவற்றில் பலகோடி ரசிகப் பெருமக்களை பலவிதங்களிலும் கவர்ந்த படம் அடிமைப்பெண்.

'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக்கொளுத்துவோம்'என்னும் வீரக் கவிப் பொருளை உட்பொருளாய் கொண்டு தாய்க் குலத்தினை அடிமைகளாக்கி கொடுமை செய்யும் அக்கிரமக்காரர்களை அழித்து அப்பெண்களின் கண்ணீரைத் துடைக்கும் பாசமகனாக, மாவீரனாக, இளஞ்சிங்கமாக எம்.ஜி.ஆர். தோன்றும் படம் தான் அடிமைப்பெண்.

இதில் கள்ளமற்ற குழந்தைகளுடன் குழந்தையாக அரிச்சுவடி படிக்கும் போதும், ஜெயலலிதாவிடம் 'எதிரின்னு யாரு?' என்று கேட்கும் போதும் தானும் ஒரு குழந்தையாக மாறி விடுகிறார் எம்.ஜி.ஆர்.

உயிரைத் துச்சமென நினைத்து நீர்வீழ்ச்சியில் குதித்து தாயை காண விரையும் போதும், சுற்றிலும் பகைவர்கள் சூழ்ந்த போது தைரியம் புருச லட்சணம் என்ற வாக்கின்படி எதிரிகளை பந்தாடும் போதும், 'ஆயிரம் நிலவே, வா' காதல் பாடலில் நாயகியுடன் மன்மதனாக ஆடிப் பாடும் போதும், தாயைக் காக்கும் தனயனாக சிங்கத்திடம் போரிட்டு வெல்லும் போதும், புரட்சித்தலைவர் ஆனந்தத்திலும், ஆச்சரியத்திலும் நம்மை மூழ்கச் செய்கிறார்.

கலைச்செல்வி ஜெயலலிதாவும் இரட்டை வேடம் ஏற்று சிறப்பாக நடித்துள்ளார். நடித்துள்ளார் என்ன — மனதில் தங்கி உள்ளார்.

'அம்மா என்றால் அன்பு' பாடலுக்கு தொட்டிலை ஆட்டி தாலாட்டுவது போல இயக்கி இருப்பது-சூபர்ப். 'தாயில்லாமல் நானில்லை' பாடலுக்கு ஒரே காட்சியில் பலவித, பல வண்ண உடைகளில் புரட்சித்தலைவர் பெருமித நடைபோடும் போது காமிரா-எக்ஸலெண்ட்.

'ஆயிரம் நிலவே வா' பாடலில் ஜெய்ப்பூர் அரண்மனை அழகை அபரிமிதமாய் அள்ளி வழங்கும் போசு-ஃபென்டாஸ்டிக்.

வசனங்கள் நல் முத்துக்கள் — அதில் சில:—

பகைவனுக்கு பாராட்டுப் பத்திரமா- அழிக்கப்பட வேண்டியவனுக்கு ஆரத்தியா—மனோகர்.

வீரம் எங்கிருந்தாலும் அதை பயன்படுத்துவதுதான் விவேகம். கழுத்துக்கு மேலே தலை இருக்கிறவங்க எல்லாம் தலைவனாக முடியாது—ஜெயலலிதா.

இது என்ன திருட்டுக் கூட்டமா?- மனோகர்.

இல்லை திருத்தும் கூட்டம்— புரட்சித்தலைவர்.

படத்தில் நகைச்சுவையும் ஏராளம்.

நெஞ்சில் துணிவற்ற எந்த ஒரு கோழையையும் வீரனாக்கும்படி உணர்ச்சிக(ா)ரமாய்த் தயாரிக்கப்பட்ட படம் இது.

என்றென்றும் எல்லாப் படங்களையும் தனக்குக் கீழ் அடிமையாக்கி ரசிகர்களின் பேராதரவு எனும் வெற்றி மகுடத்தை அணிந்து வெற்றி உலா வரும் உன்னதப்பெண்... புரட்சிப் பெண்... இந்த அடிமைப் பெண்.

ஜெ. பூர்ணசந்திரன்,
9-10, சத்தியமூர்த்திதெரு,
கண்டனூர்-623104,
முகவை மாவட்டம்.

# சூாயதாந்தன்

அவனுக்கு அன்றைய இரவில் வேலை இருக்குமென்ற நிலவரம் தெரிந்தது.

அவனுக்காகவே ஸ்பெஷலாக தயாரிக்கப்பட்டிருந்த பிரியாணியையும், மற்றும் சில இதர வகையருக்களையும் இஷ்டந்தீர பிடித்துவிட்டு வாசலுக்கு வந்தான்.

கட்டிலில் வெற்றிலைப்பெட்டியும் சகிதமுமாய்...எகத்தாளமாக உட்கார்ந் திருந்த ராக்காயி சொன்னுள்...

"பிடாரி... இன்னிக்கு ராத்திரி இங்கயே இரு...! உனக்கு வேணும்னு தனி மரத்துக் கள்ளுக்கு சொல்லியனுப்பி யிருக்கேன்..."

அவளுடைய பேச்சின் தோரணையும், அதில் அடங்கியுள்ள அர்த்தங்களும் அவனுக்கு ரொம்பவும் அத்துப்படியானவைகள் என்பதால்— தலையை ஆட்டி சம்மதம் தெரிவித்து விட்டுப் போனுன்.

அவளிடம் வேலைக்குச் சேர்ந்து பதினைந்து வருஷங்களுக்கும் மேலேயே ஓடிப்போய் விட்டன. கடந்த நாட்களில் அவனுக்கு எல்லா வகையான ஆதரவை யும் தந்து, வைத்துக் கொண்டிருக்கிற ராக்காயியை முதன் முதலில் எந்தச் சூழ்நிலையில்... எப்போது சந்தித்தான் என்பதெல்லாம் நினைவில் இல்லை.

ஆனுல்—



அவள் இடுகிற கட்டளையை' எந்தவிதமான மறுப்பும் சொல்லாமல் முடித்துவிடக்கூடியவனாக இருந்தான்.

அந்தச் செயலில் இருக்கிற கொடூரத்தையும், பாவத்தையும் பற்றி கொஞ்சங்கூட கவலைப்படுகிற மனநிலையிலும் அவனில்லை. அனைத்தும்... உள்ளுக்குள் மக்கி உறைந்திருந்தன.

ராத்திரி எட்டு மணி சுமாருக்கு வந்து நின்ற டாக்ஸியிலிருந்து ஒரு பருவப்பெண்ணை படுவேகமாக இழுத்துக் கொண்டு போனார்கள். அவளுடைய துள்ளலும், அழுகையும் அவர்களை ஒன்றுஞ் செய்யவில்லை.

"எக்கச்சக்கமான கஷ்டமாப் போச்சுது...! ராங்கி புடுச்ச இவளெக் கொண்டுட்டு இங்கெ வர்றதுக்குள்ளெ... கையெக்கூட கடிச்சுப் போட்டா..."

எஜமானத்தனத்தோடு நின்றிருந்த ராக்காயியிடம் அந்த மூன்று பேரில் ஒருத்தி அப்படிச் சொன்னாள்.

"சரி...போயி... மற்றதுகளெ பாருங்க...! இன்னிக்கு நைட் இவளெ முடிச்சுடலாம்..."

ராக்காயியின் குரலுக்கு கும்பிடு போட்டு விட்டு அவர்கள் போயாயிற்று.

அந்த இருப்பிடம் ஊரின் கடைசிக் கோடியில் ஒதுக்குப் புறமாய் இருந்தது. பல பெண்களின் கற்புக்கு அது ஒரு மயான பூமி...! அந்த அக்கிரம சமஸ்தானத்துக்குவேண்டிய அடிப்படைகளை கைக்குள் வைத்துக் கொண்டு பரிபாலனம் நடந்தது.



அவளுடைய பெரிய தளபதியாக பிடாரியை நியமனம் பண்ணி வைத்திருந்தாள்...!

புருஷனோடு கோபித்துக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேறியவர்கள், காதலனால் கைவிடப்பட்டு கண்ணீரோடு அலைந்தவர்கள், இது போக அப்பாவித்தனமாய் தனியே ஏமாந்து வந்தவர்கள்...! இப்படிப்பட்டவர்களையெல்லாம் வலைபோட்டுப் பிடித்து வர, ஒரு டஜன் ஆட்களை அவள் வேலைக்கு வைத்திருந்தாள்.

பருந்துச் சின்னம் போட்ட பாட்டிலில் சாராயத்தையும், எவர்சில்வர் தட்டில் வறுத்த கரியையும் எடுத்துக் கொண்டு அவள் அவனிடம் போனாள்.

"பிடாரி... ரெடியா இருக்கில்லெ... நீ...! இந்தா இதுகளை மொதல்லெ முடி...! அப்புறம் ரூம்லெ இருக்கறவளெ முடிச்சு வழி பண்ணு...!"

அந்தக் கட்டளையை அடுத்து, அவன் தயாரானான்.

விருவிருவென்று வீசி வந்த காற்று — அவனைக் கண்டு எட்டவே ஒதுங்கிப் போனது. கடைசியாய் உறிஞ்சி முடித்த பீடித்துண்டை காலில் போட்டு மிதித்து விட்டு, அந்த அறையின் கதவைத் திறந்தான்.

கண்களில் போதையும், வெறியும் பொங்க வழிய கைகளும், நாக்கும் பசியோடு பரபரத்தன...!

துச்சாதனத் தாண்டவத்தின் முதல் கட்டம்.

உள்ளே எரிந்து கொண்டிருந்த விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் அந்தப் பருவப் பெண் சுவற்றின் ஓரமாய் பயந்து — பதுங்கி குறுகுவது தெரிந்தது.

கதவைச் சாத்தி தாளிட்ட ஓசை, அவளுக்கு குரல் வளையை அழுத்தி நசுக்குவது போலிருந்தது.

அடுத்த நிமிஷங்கள்... வெம்மையைப் போர்த்திக் கொண்டு இயங்கின. அவனுக்குப் போதை அதிகமாகிக் கொண்டிருந்தது. நரம்புகளில் குரூரம்.

அந்தப் பெண்ணின் கண்கள் இரண்டையும் கருப்புத் துணியால் இறுக்கிக் கட்டியிருந்தார்கள். மிரட்சியில் தடுமாறி கட்டிலில் சாய்ந்தாள். பின்புறம் சேர்த்து கைகளும் கட்டப்பட்டிருந்தன.

ஒருமுறை இருமி, தான் அறைக்குள் பிரவேசித்திருக்கிற அறிவிப்பை பிடாரி காட்டினான்.

இரையாகப் போகிற வேதனையின் உச்சியில் அவள் வீறிட்டாள்...! அழுது தவித்தாள்...! துடி துடிக்கும் கண்ணீரால் கும்பிட்டுக் கெஞ்சினாள்...!

இதுமாதிரி எத்தனையோ பேர்களின் கூப்பாட்டையும், அலறல்களையும்... உள் வாங்கி அவனுடைய காதுகள் மரத்துப் போயிருந்தன.

தொடர்ந்து—

அந்த இளமான் கலங்கிக் கதறியது..!

ஆட்சேபணையில்லாமல் பெருநரி பாய்ந்து பாய்ந்து காயப்படுத்தி ருசித்தது...!

முரட்டுப் பிடியில் துவண்டு மயக்கமானாள்.

பிடாரி, வியர்வையைத் துடைத்துக் கொண்டு... வெளியே வந்து—கதவைச் சாத்திவிட்டு... நடந்து போனான்.

அந்தப் பெண் அவனால் முத்திரை குத்தப்பட்டாயிற்று.

இனி, வழிக்கு வந்த மாதிரித்தான்.

அதைத் தவிர, வேறு வழி எதுவும் கிடையாது.

இதுமாதிரி... பல பெண்களை தன்னுடைய தொழிலுக்கு ராக்காயி கட்டுப்பட வைத்திருக்கிறாள்.

அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவனை, ராக்காயி உலுக்கி எழுப்பினாள். அவன் எழுந்து கிணற்றடிக்கு குளிக்கப் போனான்.

முன்னைய இரவு அவனுக்கு உண்டான நகக்கீறல்கள்... உடம்பில் அங்குமிங்கும் தெரிந்தன.

ஒவ்வொரு நாளும் அவன் குளிக்கிறபோது—முன்னைய நாள் செய்த பாவங்கள்... அக்கிரமங்கள் எல்லாம் அழுக்கு கரைவதுபோல கரைந்து போய் விடுவதாக நினைத்துக் கொள்வான்.

அவன் அடக்கிய அந்தப் பெண்ணை-அவன் அனுபவித்துத் தீர்த்த அந்தப் பெண்ணை—இனி ராக்காயியிடம் கொண்டு வந்து நிறுத்த வேண்டிய முக்கியமான வேலை பாக்கியிருந்தது.




சாவியை வாங்கிக் கொண்டு அந்த அறையை நோக்கிப் போனான். சென்ற இரவில் அந்தக் கதவைத் திறக்கும் போது இருந்த பிடாரியல்ல இப்போது அவன்...!

போதை தீர்ந்து, ஆள் தெளிவாயிருந்தான்.

நடையில் தடுமாற்றம் இல்லை. கண்களில் வெறி இல்லை.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே அடியெடுத்து வைத்த 'மறுநிமிஷம்—

அவள் தனது கிழிந்துபோன துணிகளை எடுத்து உடலைப் போர்த்திக் கொண்டு, தலைவிரிகோலமாக எழுந்து நின்றாள்...

அடுத்த விநாடி—

"அண்ணா..."

வீறிட்டு வந்த அவளுடைய அழுகைக் குரல் அவனைத் துளைத்தது. அவனுடைய தங்கைதான் அது...!

சிறு வயதிலேயே வீட்டை விட்டு ஓடி விட்ட அண்ணனை மறுபடியும் அவள் இப்போது தான் பார்க்கிறாள். ஆனால்... நினைவு மாறவில்லை. அடையாளத்தை மறக்கவில்லை.

அந்தக் குரல் பிடாரியைக் குத்திக் குதறியது...!

நெருப்புக்குள் விழுந்தது மாதிரி துடிதுடித்துப் போய் — பாய்ந்து கதவைச் சாத்தி விட்டு வெளியே ஓடி வந்தான்.

என்ன காரணமென்று புரியாமல், ராக்காயியும், அடியாள் பெண்களும் அறைக் கதவுக்கு பலத்த பூட்டு ஒன்றைப் போட்டு விட்டு ஜன்னலைத் திறந்து பார்த்தனர்.

உள்ளே — கட்டிலில் புரண்டு கதறிக் கொண்டு அவள் அழுவது தெரிந்தது.

ஒரு வேளை, பிடாரியை கடித்துக் குதறி வெளியே தள்ளி விட்டாளோ — என்கிற பயமும், சந்தேகமும் மறைந்தது. ஆனால்... இது நாள் வரை எத்தனையோ முரட்டு வகையறுக்களை அடக்கி வழிக்குக் கொண்டு வந்த அவன் — இன்று முதன் முறையாக இப்படிப் பதறியடித்தபடி ஓடி வந்து விட்டானே.. என்கிற விஷயம் ராக்காயியின் மூளைக்குள் மர்மமாக அலைந்தது.

குழப்பமாகவும், சங்கடமாகவும் போய் அவளைப் பிடித்து நிறுத்தியது. வாசலில் போட்டிருந்த கட்டிலில் சாய்ந்து கொண்டு இது பற்றி யோசித்தாள்.

நேரம் நகர்ந்தது.

பூட்டப்பட்ட அறைக் கதவை உள்ளேயிருந்து உயிரைக் கொடுத்துத் தட்டி கூச்சலிட்டுக் கொண்டிருந்தாள் அந்தப் பெண்.

சிறிது தொலைவிலிருந்த தென்னந் தோப்பின் பின்புற மணலில் புழு மாதிரி புரண்டு துடித்துக் கொண்டிருந்தான் பிடாரி.

தன்னுடைய வெறிக்கு கதறக் கதற இரையாக்கப்பட்டது-தன்னுடைய உடன் பிறந்த தங்கையா...?

'அய்யோ' அவன் நாடி நரம்புகளெல்லாம் அக்கினிக் குழம்பைக் குடித்தது போல, வெடித்து விடத் தயாராகி விட்டன.

ரத்தத்தின் ஒவ்வொரு சொட்டும் எரிமலைக் குமிழ்களாய் கொப்பளித்து அவனை எரித்தன.

சுடுமணலில் இருந்து அவன் எழும்போது-கண்களில் இதுநாள் வரை முகாமிடாத கடுங்கோபத்தின் நிறம். தீக் குழம்பாகப் பாய்ந்து வந்தான்.

தானே கோடாரிக் காம்பாகி இத்தனை காலமாய் செய்து வந்தது களுக்கெல்லாம் ஒரு முடிவாக—

அதற்குக் காரணகர்த்தாவாக இருந்து ஆட்டிக் கொண்டிருந்த ராக்காயிக்கு சொல்லக்கூடிய தீர்வாக—

அவன் அவளைத் தேடி அப்படி வேகமாய்க் குமுறி வந்தான்.

சாயங்காலம் முடிய சிறிது நேரமே பாக்கியிருந்தது.

அடுத்த சில நிமிஷங்கள்... கோரமாய் நகர்ந்தன.

ராக்காயி நாக்கு வெளித்தள்ளி கண்கள் தாறுமாறுகப் பிதுங்கி கட்டிலின் கீழே பிணமாய்க் கிடந்தாள். அவளைக் குடித்த பிடாரியின் பிச்சுவாக்கத்தி பக்கத்திலே கிடந்தது...!

அறைக்குள்ளிருந்து, திறந்திருந்த ஜன்னல் வழியாக அந்தப் பெண்ணின் கண்கள் பார்த்த போது— சிறிது தூரத்திலிருந்த வேப்ப மரத்தில்... தூக்குப் போட்டு தொங்கிக் கொண்டிருந்தான் பிடாரி.




டைரக்டர் ராஜதுரையும்,புரொட்யூஸர் பொன்னுராஜுவும், ஜன்னல் வழியே-பக்கத்து அறையில் கூடியிருந்த பெண்கள் கூட்டத்தைப் பார்த்துப் பூரித்துப் போனார்கள்.

"எத்தினி பச்சைக்கிளிங்க வந்திருக்கு பார்த்தீங்களா பொன்னுராஜ் ஸார்?" டைரக்டர் ராஜதுரை கண்களைச் சிமிட்டிக் கொண்டே சொன்னார்.

"முந்தின படத்துக்கு 'புதுமுகம் தேவை'ன்னு நாம விளம்பரப்படுத்தினப்ப வந்திருந்த கூட்டத்தைவிட இது அதிகந்தான் ... நம்ம காட்டில மழைதான் ... அமர்க்களப் படுத்திடுவோம்"... பொன்னுராஜ் ஆர்ப்பரித்தார்.

"போன தடவை மாதிரி அவசரப் படக்கூடாது. தினத்துக்கு ஒருத்தியா வரச்சொல்லலாம். நிதானமா சாவகாசமா எல்லா டெஸ்ட்டும் பார்த்துட்டு மெதுவா அனுப்பலாம்..." ராஜதுரை சிரித்துக் கொண்டே சொன்னார்.

"கூடுமானவரை அப்பா இல்லாத பொண்ணுகளா பார்ப்போம்... அப்பத்தான் பின்னாடி ஒரு வம்பும் வராது...",

"அதுக்காக அழகா இருக்கிற—ஆனா அப்பன் இருக்கிற பச்சைக்கிளிகளை சும்மா விட்டுட முடியுமா என்ன?"

ராஜதுரை கேட்டுவிட்டு சிரிக்க—அந்தச் சிரிப்பில் பொன்னுராஜுவும் கலந்து கொண்டார்.

"இன்டர்வ்யூவை ஆரம்பிச்சுடுவோமா?"

"உம்..."

முதலாவதாய் — அறைக்குள் நுழைந்த அந்தப் பெண்ணே—சினிமாவுக்கு ஏற்ற முகவெட்டோடும், நல்ல உடம்புக் கட்டோடும் இருந்தாள்.

ராஜதுரையும், பொன்னுராஜுவும் திருப்தியாய் புன்னகைத்துக் கொண்டார்கள்.

"வாம்மா... வா... இப்படி உட்கார்..."—நாற்காலியைக் காட்டினார் ராஜதுரை. அவள் உட்கார்ந்தாள். இந்த இன்டர்வ்யூக்கென்றே தனிப்பட்ட முறையில் உடம்பைக் கொண்டு வந்திருந்தாள் அவள். தூக்கிக் கட்டிய மார்புப் புருக்கள். மழித்து மை தீட்டப்பட்ட புருவங்கள். தொப்புளுக்கு கீழே இருந்த சரிவின் வெகு தூரத்திற்கு இறங்கிவிட்ட புடவைக்கட்டு. ராஜதுரையின் நரம்புகளில் உஷ்ணம் உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்தது.

"உம்பேரென்னம்மா?"

"மல்லிகா"

"மல்லிகாவா...?சரி பின்னாடி ஜெயமல்லிகான்னு மாத்திடுவோம்..." பொன்னுராஜ் முதல் தடவையாய் வலையை வீசினார். அந்தப் பெண்ணின் விழிகள் படபடத்தன.

"இதுக்கு முன்னாடி சினிமாவில் நடிச்சிருக்கியாம்மா?"— ராஜதுரை கேட்டார்.

"இல்ல ஸார்... காலேஜ் ட்ராமாவில் மட்டும் ஆக்ட் பண்ணியிருக்கேன்..."!

"அப்படியா? தட்ஸ் குட்...! உனக்கு அப்பா இருக்காராம்மா...?"

"இல்ல ஸார்... சின்ன வயசிலேயே இறந்துட்டார்... அண்ணனோட ஆதரவில படிச்சேன்... அவருக்கு கல்யாணமானதும் அண்ணி பேச்சைக் கேட்டுகிட்டு தனிக்குடித்தனம் போயிட்டார்... இப்போ குடும்பத்தைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு என் தலையிலே

ராஜேஷ்குமார்



விழுந்துடுச்சு...வேலே தேடிப் பார்த்தேன் கிடைக்கல்லே... இயற்கையாவே எனக்கு இருக்கிற நடிப்புத் திறமையை பயன்படுத்தி சினிமாவில நுழையலாம்ன்னு வந்தேன் ஸார்..."

"நுழைச்சிடுவோம்... உன் கிட்ட அழகு இருக்கு... திறமையைக் காட்டிடு போதும்...மத்ததை நான் கவனிச்சுக்கறேன்..."— பொன்னுராஜ் விஷமச்சிரிப்போடு சொன்ஞர்.

ராஜதுரை தன் நாற்காலியை விட்டு எழுந்து நின்ருர்.

"நீயும் கொஞ்சம் எழுந்திரிச்சு நில்லம்மா..."

அவள் எழுந்து நின்ருள்.

அவளை நெருங்கிய ராஜதுரை— அவள் உடம்பினின்றும் எழுந்த சுகந்தமான வாசனையில் ஒரு விநாடி சிலிர்த்தார்.

"அம்மா மல்லிகா...! பச வாட்டில கொஞ்சம் திரும்பி நில்லு..."

திரும்பி நின்ருள்

"அப்படியில்லேம்மா...இப்பிடி..." என்றவாறே அவளுடைய செழிப்பா தோள்பட்டையின் மீது ஒரு கைமை வைத்து—மறு கையால் அவளுடை திண்ணென்ற முதுகைத் தொட் திருப்பி விட்டார்.

அவள் கூச்சத்தால் நெளி தாள்.

"இதோ! பாரம்மா மல்லிகா. சினிமாவில நடிக்கணும்ன்னு ஆசை பட்டு வந்துட்டா இந்தக் கூச்சத்தை யெல்லாம் உட்டுடணும்... கூச்ச இருந்துச்சுன்ஞ சினிமா ஆசையை உட்டுடணும்...நீ எதை உடப்போறே?

“நா கூச்சத்தை விட்டுடறேன் ஸார்!”

“தட்ஸ் குட்...! இப்ப நான் சொல்ற மாதிரி நில்லு... பார்க்கலாம்...” பொன்னுராஜின் விழிகள் வெறித்தன வாய் அவளுடைய உடம்பில் மேய்ந்து கொண்டிருந்தன. ராஜதுரை சொல்லிக் கொண்டிருந்தார்... “எனக்கு உன் முதுகை காட்டிட்டு நில்லம்மா...!”

நின்றாள் அவள்; முதுகைக் காட்டிக் கொண்டு.

சந்தனப் பலகையாய் மினுமினுத்த அவளுடைய முதுகைக் காட்டிக் கொண்டு.

“மார்புச் சேலை அப்படியே நழுவ விடம்மா...!”

“ஸார்...!”

“சொன்னபடி செய்யம்மா... நா உன்னோட உடம்பைப் பார்க்கணுங்கிற ஆசையில சொல்லல்லே...காமிராவுக்கு உன்னோட உடம்பு எடுபடுமான்னு பாக்கறேன்...ம்...கூச்சத்தைப் பார்க்காமே மார்புத் துணியை நழுவ விடம்மா...!”

அவள் ந...ழு...வ... விட்டாள்.

“அப்படியே திரும்பி ஒரு மார்பை மட்டும் பக்கவாட்டில் காட்டிட்டு நில்லு...!”

சொன்னபடி நின்றாள்.

சிலிர்த்தார் ராஜதுரை.

“அப்படியே எனக்கு முன்னாடி திரும்பு...!”

தி...ரு...ம்...பி...னா...ள்.

“ஓ! பெண்டாஸ்டிக்...!”—சூடேறிய உள்ளங்கைகளைத் தேய்த்துக் கொண்டார் ராஜதுரை. “போதும்மா... சேலையை மேல போட்டுக்கோ..அழகான உடம்பு உனக்கு இருக்கு...இதுல நீ பாஸ் பண்ணிட்டே...இனி மேக்கப் டெஸ்ட் இருக்கு...அதுல நீ தேறணும்... நீ கண்டிப்பா அதுல தேறிடுவே...வர்ற வாரம் சனிக்கிழமை இதே நேரத்துக்கு இங்கே வாம்மா...மேக்கப் டெஸ்ட் பாத்துடலாம்...”

“தேங்க்யூ...ஸார்...!”

“அடுத்த வாரம் வர்றப்போ... இந்தக் கூச்சம் இருக்கக் கூடாது... உடம்பு உன்னோடங்கிறதை சுத்தமா மறந்துடணும்...நாங்க தர்ற டிரஸ்ஸைப் போட்டுக்கணும்...சொன்னபடி செய்யணும்...”—ராஜதுரை சொன்னார்.

“சரி...ஸார்...!”

அவள் அறையைவிட்டு வெளியேறினாள்.

“இந்தக் கிளி எப்படி பொன்னுராஜ் ஸார்?” ராஜதுரை கண்ணடிக்க “அதை அடுத்த வாரமில்லே சொல்லணும்...”—பொன்னுராஜ் சொல்லிவிட்டு சிரித்தார்.

அழைப்பு மணியைத் தட்டினார் ராஜதுரை.

மல்லிகாவை மிஞ்சக்கூடிய உடலமைப்பில் இன்னொருத்தி நுழைந்தாள்.

வழக்கம்போல் கேள்விகள்.




கலைஞனுக்கு கல்லும், கிளிஞ்சலும் கலைப்பொருள் தான்—குளத்தில் கிடக்கும் கிளிஞ்சல்கள், பறவைகள் ஆகின்றன. அழகிய மேசைக் காட்சி ஆகின்றன.

ஒரு கப்பல் செய்து இருக்கிறார். அனைத்தும் வெள்ளியில்.

இரும்பைக் கொண்டு மினி டிராக்டர் செய்து இருக்கிறார். சாவி கொடுத்தால் இயங்கும்.

திருத்துறைப்பூண்டி எடையூர் கிராமக் கூட்டுறவு சங்கத்தில் நகை மதிப்பாளராக இருக்கும் டி.சுப்பிரமணியனின் கைவண்ணம் வியக்கத்தக்கது.

—பி.கலா

தொடல்கள். முந்தாணை நழுவல்கள். மேக்கப் டெஸ்டுக்கு வரும்படி சொல்லி ஒரு தேதி.

அன்றைக்கு வந்திருந்த இருநூற்று எழுபத்திரண்டு பேர்களில் நூற்றி முப்பத்தாறு பேர்களுக்கு இதே பாணியில் இண்டர்வ்யூ முடிந்ததும் மத்தியானம் ஒருமணி சுமாருக்கு நூற்றி முப்பத்தேழாவது பச்சைக்கிளியாய் அந்தப் பெண் அறைக்குள் நுழைந்தாள்.

வந்தவளுக்கு வயது இருபதுக்‌துள் இருக்கும்.

கோதுமை நிறத்தில் ஒடிசலாய் இருந்தாள். சற்றே தூக்கலான
வித்தியாசமான மூக்கு அவளு
அழகுக்கு ப்ளஸ் பாயிண்டாக
தது. மோவாய்க்கு நடுவே இ
அந்த அழகுக் குழியும், மேலுதட
இடது புறத்தில் ஒரு கடுகைப் பதித்
போன்ற அந்த மச்சமும்—அடி
காதுமடல்களைத் தடவிக் கொண்ட
நீண்ட விரல்களின் நளினமான
சமும்...

ராஜதுரை விழிகளை இன
மறந்தார்.

ராஜதுரை ஒன்றும் பேச
உட்கார்ந்திருப்பதைக் கண்டு த
பேச்சை ஆரம்பித்தார் பொன்னுரா




**நாடக விமர்சனம்!**

ஐ. சி. எஃப். டாக்டர் அம்பேத்கார் கலையரங்கில் பி. எஸ். எம். கிரியேஷன்ஸ் வழங்கிய நாடகம்தான் 'பஸ் பயணங்களில்'.

திருவாரூரில் ஏழை பிராமணக் குடும்பத்தில் பிறந்த கீதா, பரதக்கலையில் 'பளிச்'செனமின்னியதால் சினிமா மோகம் அவளுள் சில்வண்டாய் ரீங்காரம் செய்தது.

அதுவே அவளை சென்னைக்கு இழுத்து வந்தது. பரதக்கலையால் அவள் பட்டினிப் பாட்டைக் கூட தீர்க்க முடியவில்லை.

அவள் சூழ்நிலையால் 'திசை' மாறினாள். இது தான் 'பஸ் பயணங்களி'ன் உயிர்க்கரு.

கீதாவாக நடித்த ஸ்ரீபாலா
காட்சிகளில் எல்லாம்
இதயத்தைப் புயலாகத் தாக்கின
தென்றலாக குளிர்வித்தார் — தே
உள்ளத்தை மெல்ல வருடி விட்ட
வில்லனாக வந்த (இளங்
ரெத்தினம் வந்த காட்சி ஒ
என்றாலும் உள்ளத்தில் நிலைத்
காட்சி. அப்படியே மர்ம மனித
வந்த தாசும் குறிப்பிடத்தக்க

திரைப் படங்களில் வருவது பே
ஒலிப்பதிவு இருந்தது பு
யுத்திதான். பாடல்களுக்கு இ
அமைத்திருந்த வசீகரன் ரமேஷி
இசை மிக மிக வசீகரமாக இருந்த

'சின்னஞ்சிறு கிளியே' படத்தி
மூலம் புகழ்பெற்ற நகைச்சுவை நடி
'பல்லவ சிங்காரம்' தான் கதை
வசனம் — பாடல்கள் எழுதி இயக்
இருப்பவர் என்பதை அறியும் போ
அவரது துணிவை அறிவை நா
பாராட்டத்தான் வேண்டி இருக்கிற

பல இடங்களில் அவரது நடிப்ப
வசனங்கள் வார்த்தை கத்திகளா
நம்மைத் தாக்குகின்றன. சி
இடங்களில் சிந்திக்கத் தூண்டு
சிறுவிளக்கின் தூண்டுகோலா
இருக்கின்றன.

இந்த பஸ் பயணங்கள
எழுதிய பல்லவ சிங்காரம் ஒ
ஒரு பல்லவன் போக்குவரத்துக் கழ
பஸ் டிரைவர் என்பது குறிப்பிட
தக்கது

—பித்தன்




"மூன்று முகம்" படத்தில்-ரஜினி

---

"ஏம்மா உம் பேரென்னம்மா?",

"வத்சலா!"

"ப்யூட்டிபுல் நேம்..."

"உனக்கு அப்பா இருக்காரா?"

"இல்ல ஸார்... அப்பாவும் இல்ல... ம்மாவும் இல்ல... எங்க அத்தை வீட்ல ன் குடியிருக்கேன்..."

"த்ஸொ...! த்ஸொ...!"—போலி ய் அனுதாபப்பட்ட பொன்னுராஜ் துக்கு முன்னாடி எதிலாச்சும் ஆக்ட் ண்ணியிருக்கியாம்மா?"—என்று கேட் ர்.

"இல்ல ஸார்... எனக்கு நடிக்கி துக்கு ஆசைதான்...! ஆனா எங்கம்மா ன் நடிக்கக்கூடாதுன்னு கட்டாயமா ால்லிட்டாங்க... எங்கம்மா உயிரோடு ருந்த வரைக்கும் என்னோட ஆசைக்கு ணை போட்டுட்டு வந்தேன்... போன நஷந்தான் எங்கம்மா காலமானாங்க... ழைப்புக்கும் வேற வழியில்ல... அதான் வந்துட்டேன்..." பொன்னுராஜ் நாற் காலியைப் பின்னுக்கு தள்ளிவிட்டு எழுந்தார்.

வத்சலாவை நெருங்கினார்.

"இப்படி பக்கவாட்டில தலையைத் திருப்பிகிட்டு நில்லம்மா..." —வத்சலாவின் தோளின் மேல் கையை வைக்கப் போனார் பொன்னுராஜ்.

"பொன்னுராஜ் கொஞ்சம் இருங்க..." —பரபரப்பாய் எழுந்து வந்தார் ராஜதுரை.

"என்ன டைரக்டர் ஸார்?" —எரிச்சலோடு திரும்பினார் பொன்னு ராஜ்.

"இந்தப் பெண் ரொம்பவும் ஒடிசலாத் தெரியறா... வேண்டாம்... வெளியே அனுப்பிச்சுடுங்க..."

பொன்னுராஜ் விழிகள் சுருங்க —ராஜதுரையை முறைத்தார்... "இந்தப் 'புதுமுகத் தேர்வு' 'இண்டர்வ்யூ...'

இதெல்லாம் சும்மா ஒரு பாவ்லா தானே? விதவிதமான அழகையெல்லாம் பார்க்கவும், ரசிக்கவும், முடிந்தால் சுவைக்கவும் நாம ஏற்பாடு செஞ்சதுதானே...? திடீர்னு இதென்ன பூஜைக்கரடித்தனம்...?'' —பார்வையிலேயே கேட்டார் பொன்னுராஜ்.

ராஜதுரை வத்சலாவின் பக்கமாய்த் திரும்பினார்.

"இந்தாம்மா... வத்சலா... இப்ப நாங்க எடுக்கப் போற படத்துக்கு உன்னோட உருவ அமைப்பு பொருந்தி வராது... அடுத்த படத்திற்கு உன்னைக் கூப்பிட்டு அனுப்பறோம்... போய்ட்டு வா...''

"ஸார்...?'' -பொன்னுராஜுவை அவள் பரிதாபமாய் திரும்பிப் பார்த்தாள். ராஜதுரைக்கு கோபம் மேலிட்டது.

"அங்கென்ன பார்க்கிறே? உம்... நட... படத்தோட டைரக்டர்... நான்... பணம் போடறவர் அவர்... அவ்வளவுதான்!''

வத்சலா நகர முற்பட்டாள்.

பொன்னுராஜ் அவளுக்கு குறுக்காகப் போய் நின்றார்... "நீ இரும்மா...'' என்றார் கரகரப்பான குரலில்.

"பொன்னுராஜ்! அவளைப் போக விடுங்க..!''—கத்தினார் ராஜதுரை. ராஜதுரையின் கத்தலில் பயந்து போய் பின் வாங்கி நின்றார் பொன்னுராஜ்.

வத்சலா மௌனமாய் வெளியேற... வெறித்துப் பார்த்தபடி நின்ற... ராஜதுரையின் தோள்பட்டை... பிடித்து — உசுப்பினார் பொன்னு... "டைரக்டர் ஸார்.. திடீர்னு என்... உங்களுக்கு?''

பதில் பேசாமல் மௌன... நின்றார் ராஜதுரை.

இருபது வருஷங்க... முன்னால்—அஸோஸியேட் டைரக்ட... இருந்து வந்த ராஜதுரை ஒரு எக்ஸ்... நடிகையான மதுபாலாவைக் காதலி... தான் ஒரு புகழ் பெற்ற டைரக்ட... உயர்ந்தபோது தன் அந்தஸ்... கருதி அவளைக் கைவிட்டதை... எல்லை மீறி பழகியதின் விளைவாக ... பாலா கருவுற்றபோது அதைக் கலை... விட்டு தன்னை மறந்து விடும்படி அ... டம் சொன்னதையோ—அதை ஏற்... மதுபாலா அவனைவிட்டு விலகி வாழ்... ஒரு பெண் குழந்தைக்கு தாயா... சிரமப்பட்டு வளர்த்து அவளை இரு... வயது வத்சலாவாக்கி விட்டு விட்... திடீரென்று வந்த ஒரு நாள் மா... வலியில் அவள் கண்ணை மூடி மண்ணு... குள் போனதையோ—

எப்படிச் சொல்ல முடி... அவரால்?

முடியாது... அவரால் சொ... முடியாது...ஏனென்றால்...

இந்தியாவின் தலைசிறந்த ப... டைரக்டர்களில் அவரும் ஒருவர்.

O



"ஹலோ டாக்டர்! நான் எழுத்தாளர் சண்முகசுந்தரத்தோட மனைவி பேசறேன்... ஞாபகமறதியாய் என் கணவர் பேனாவை விழுங்கிட்டார்...!''

"அப்படியா! அவருக்கு என் பாராட்டை தெரிவியுங்கள்.''

"ஏன்?''

"எழுத்துலகத்துக்கு அவர் இப்போ செய்திருக்கிற உதவிக்காக...''

—எஸ். என். தங்கராஜன்

அதிகம் ஏற்படலாம். உடல் நலம் நன்றாய் இருக்கும். எதிர்பார்த்த செய்திகள் நல்ல விதமாய் வரும்.

**(டிசம்பர் 23 — ஜனவரி 20)**

தொழில், வியாபாரத்துறை இவற்றில் உள்ள நெருக்கடி படிப்படியாக குறையும். பணியாட்கள், முதலாளிகள் இவர்களுக்குள் ஒற்றுமையும், நல்லுறவும் இருக்கும். அயல்நாட்டு காண்ட்ராக்ட்கள் கிடைக்க வாய்ப்பு உண்டு. எதிர்பார்த்த உதவிகள் தானாகவே வந்து சேரும். உத்தியோகத்தில் பேரும், புகழும் கிடைக்கும். சக ஊழியர்கள் உதவியால் வேலைப்பளு குறையும். வருமான அபிவிருத்தி இருக்கும். குடும்பத்தில் பொருளாதாரம் நன்றாய் இருந்தாலும் சிலசமயம் பணமுடை ஏற்படலாம். திட்டமிட்டுச் செலவு செய்ய வேண்டும். குழந்தையைப் பற்றிய ஒரு சஞ்சலம் தீரும்.

**(ஜனவரி 21—பிப்ரவரி 19)**

தொழில், வியாபாரம் இவைகளின் அபிவிருத்திக்காக சில திருத்தங்களைச் செய்ய வேண்டி வரும். கமிஷன் வியாபாரம் நல்ல லாபத்தைக் கொடுக்கும். வழக்குகளில் வெற்றி ஏற்படும். அரசாங்க அதிகாரிகளால் ஏற்பட்டு வந்த நிர்ப்பந்தங்கள் மாறி மனநிம்மதி ஏற்படும். மருத்துவத்துறை, ரசாயனத் துறை, அரசாங்கத்துறை ஆகிய பணிகளில் ஈடுபட்டு இருப்பவர்களுக்கு இது நல்ல வாரமாகும். குடும்பத்தில் திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணப் பேச்சு நடைபெறும். உறவினர்கள் வீண் விரோதம் பாராட்டுவார்கள்.

**(பிப்ரவரி 20—மார்ச் 20)**

தொழில், வியாபாரம் இவற்றில் அலைச்சல் எதுவுமின்றி, நினைத்த காரியங்களைச் செயலில் நடத்தலாம். கிளர்ச்சிகள், மறைமுக சூழ்ச்சிகள் எல்லாம் இவர்களைக் கண்டவுடன் அடங்கி விடுவதைக் காணலாம். உத்தியோகத்தில் தாமதப்பட்டு வந்த பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பு உண்டு. குடும்பத்தில் பழைய பொருட்கள், பூர்வீகச் சொத்துக்கள் விற்பனையிலும், புதிய பொருட்கள் வாங்குவதிலும் நினைத்தபடி நடக்கும். பொருளாதார நிலையில் இவர்கள் பணம் மற்றவர்களிடம் போய் சிக்கிக்கொள்ளும் நிலை ஏற்படும். கணவன் மனைவிக்குள் சில சமயம் தகராறுகள் ஏற்படும்.



டகு வைத்திருந்த தோடுகளையே அடகுக் கடைக்காரனிடம் விலை பேசி விற்று விட்டாள் தாயம்மா. அவன் கொடுத்த நானூறு ரூபாய் சொச்சத்தையும் மடியில் வைத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினாள்.

''நாளைக்கே புவனாவுக்கு மணி ஆர்டர் செய்து விட வேண்டும்.''

புவனா பி. எஸ்சி. இறுதி ஆண்டில் படித்துக் கொண்டிருந்தாள்.

யாருமில்லாத தாயம்மாவுக்கு எல்லாமாக இருக்கிற ஒரே சொத்து புவனாதான்!

புவனாவை செல்லமாகவும், உயிருக்குயிராகவும் வளர்த்து பட்டதாரியாகவும் ஆக்கி விட போராட்டமே நடத்திக் கொண்டிருந்தாள் அவள்.

ஆனால் அதற்காக அவள் படுகின்ற துன்பங்கள் ஒவ்வொன்றும் ஒரு பெரிய தபஸ்!

மடியை இறுக்கிப் பிடித்துக் கொண்டு வீட்டைத் திறந்த தாயம்மாவை தரையில் கிடந்த இன்லேண்ட் லெட்டர் குனிய வைத்தது.

புவனாதான் எழுதியிருந்தாள்.

அன்பு நிறைந்த அம்மா!

எனக்குத் தேவையான பணத்தை நான் இங்கேயே புரட்டிக் கொண்டேன். எனவே பணத்திற்காக சிரமப்பட வேண்டாம்.

இப்படிக்கு
புவனா.

கடிதத்தை வாசித்து முடித்த தாயம்மாவுக்கு பெருத்த ஆச்சரியமும் நிம்மதியும் ஏற்பட்டது. கூடவே ஒரு மன உளைச்சலும் துளைக்க ஆரம்பித்தது.

'இந்த விபரங்கெட்ட பெண், பணத்தை எப்படி சமாளித்துக் கொண்டாள்? கடிதத்தில் ஒரு வரி எழுதியிருக்கக் கூடாதோ?'

இறுதித் தேர்வை முடித்து விட்டு ஊருக்கு வந்தாள் புவனா.

ரொம்ப நேரம் தாயும் மகளு அளவளாவிக் கொண்டிருந்த பிற புவனாவிடம் கேட்டாள் தாயம்மா.

''புவனா! எப்படிம்மா ஐநா ரூபாயையும் உன்னால் சமாளிக் முடிஞ்சது? எந்த மகராசி கொடு தாள்?''

புவனா சொன்னாள்: ''மகரா இல்லேம்மா, மகராசன்!''

தாயம்மாவுக்கு இதயத்தி சுருக்கென்றது.

''மகராசனா?''

''ஆமாம்மா. ஒரு பாய் ஃபிரண்ட் பெரிய பணக்காரன்! அவன் கிட்டே தான் வாங்கினேன்!''

''என்னடி சொல்றே?''

தாயின் அதிர்ச்சியைக் கண்டு புவனா சிறிதும் துணுக்குறவில்லை! ரொம்ப அலட்சியமாகக் கேட்டாள்.

''ஏம்மா இப்படிச் சத்தம் போடுறே? இதிலென்ன தப்பு? நான் அவரைத் தானே கல்யாணம் பண்ணிக் கப் போறேன்?''

''ஓ... அவ்வளவு தூரம் வந்தாச்சா? ஏண்டி அவன் உனக்குப் பணம் கொடுத்தான்னா, நீ அவனுக்கு ஏதாவது கொடுத்தால்தானேடி முடியும்? பாவி... நம்ம குடும்ப மானத்தையே பலி குடுக்கத் துணிஞ்சிட்டியா?'' என்று வயிரெறிய கூச்சலிட்டாள் தாயம்மா.

''அ... உன் மகள் ஒண்ணும் அவ்வளவு மோசமாகப் போகமாட்டாள். நான் பார்த்தாலே போதும்; ஒரு வார்த்தை பேசினாலே போதும்; அவையெல்லாம் பெரும் பாக்கியம்னு நினைக்கிறவர் கிட்டே, நான் ஏம்மா மானத்தை பலி குடுக்கணும்? எம் மனத்தைக் கூட பலி குடுக்கலே தெரியுமா? அவர் காதலிக்கிறது என்னவோ என்னைத்தான்! ஆனால்... நான் காதலிக்கிறது..அவரோட பணத்தை மட்டும்தான்!''

''அடிப்பாவி!''

பளாரென்று புவனாவின் கன்னத்தில் அறைந்தாள் தாயம்மா. ஆவேசத்தால் அவள் கண்கள் சிவந்து நீர் நிறைந்தன. அடிகொடுத்து சிவந்த தன் கையைப் பார்த்து விட்டுப் பொருமினாள்.

# வழி தவறிய வண்டிகள்...!

நா.ஜெயபாலன்



புவனு அடி வாங்கிய பிறகும் உரக்கவே வாயைத் திறந்தாள்.

"எவ்வளவு தான் வாழ்க்கையில அடிபட்டாலும் சில பேருக்கு அப்புறமும் புத்தி வராது! பணத்தோட அருமை தெரியாது. அவங்களைப் போலத் தானம்மா நீயும்! இல்லையா? தன் மகள் வசதியான இடத்தில் வாழ்க்கைப் படற திலே ஒரு தாய்க்கு இவ்வளவு பொருமை இருக்கலாமா? ஐ மீன்... பொறுக்காத தன்மைதான். நீ நினைக்கிற மாதிரி நம்ம தகுதிக்கு—ஒரு ஓட்டாண்டியோட தன் வாழ்க்கையை அமைச்சுக்கிட்டு, வாழ் நாள் முழுவதும் 'நான் இந்தப் பிறவி எடுத்ததே வறுமையில் சிக்கி வதங்கிப் போகத்தான்!' என்கிற மாதிரி கைக்கும் வாய்க்கும் எட்டாத நிலையிலேயே தவிச்சு துடிச்சு வாழணும்.




"இந்தக் கண்ணாடி தலைவலிக்காகப் போட்டதா?"

"இல்லே... எனக்காகப் போட்டது!"

—கீழை. அ. கதிர்வேல்

---

அவர் என்னைக் காதலிக்க நான் ரொம்பக் கொடுத்து வச்சிருக்கணும்! காரணம் நம்மையெல்லாம் ஆட்டி வச்சிருக்கிற, இன்னும் கொஞ்ச நாளில் நான் ஆட்டி வைக்கப்போகிற பணம், அவர் கிட்டே இருக்கு. இனி நான் அதுக்கு அதிபதி! உன்னை சந்தோஷமா, சுகபோகமா வச்சுக்குவேன் அந்தப் பணத்தாலே!"

ரொம்பத் தெளிவாக, ஆணித்தரமாக, அழுத்தம் திருத்தமாக அச்சம் என்பது இனி இல்லை என்ற உணர்வோடு பேசினாள் புவனா... மகள் சொன்ன வார்த்தைகளில் ஒரு சில சரியானவைதான் என்பது அவளுக்கும் தெரியவே செய்கிறது. காதல் என்ற உணர்வும், அதில் கல்யாணம் என்ற உறவும் விரும்பத்தக்கது; வரவேற்கத் தகுந்தது என்பதும் அவளுக்குத் தெரியும்.

வரதட்சணை என்கிற முள் விருட்சம் கன்னிப் பெண்களின் கன்னிமைக்கே சவால் விட்டு அவர்களுடைய திருமணப் பாதையை அடைத்துக் கொண்டிருப்பதும் அவளுக்குத்தெரியும்!

ஆனால்—

இவள் தன்னுடைய காதலை விளக்கிய விதம், அதற்கு அவள் கொடுத்த உருவம்தான் தாயம்மாளை நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாக வேண்டும் போல் செய்தது.

நிலைமையைக் கொஞ்சம் கீழிறக்கும் முயற்சியோடும், அந்த 'புண்ணியவான்' யார் என்று அறியும் எண்ணத்தோடும், "எங்கே அந்தப் பையனின் போட்டோவைக் கொடு பார்க்கலாம்..." என்று கேட்டாள் தாயம்மா.

புவனா அலட்சியமாகச் சொன்னாள்.

"ஹூம்! நான்தான் அப்பவே சொன்னேனே! அவர் தான் என்னை காதலிக்கிறார்; நான் அவரோட பணத்தைத்தான் காதலிக்கிறேன்னு. அவர் கிட்டே தான் என்னுடைய போட்டோ இருக்கு. ஆனா என்கிட்ட அவருடைய அட்ரஸ் மட்டும் இருக்கு. இடையிலே தேவையானா பணம் கேட்டு எழுத!"

மேஜை மீதிருந்த தன் கைப்பையிலிருந்து அவன் கொடுத்திருந்த விசிட்டிங் கார்டை எடுத்து சுவரோரமாய் அமர்ந்திருந்த தாயின் மடியில் போட்டாள் புவனா.

நொந்து போன மனதோடு அதைக் கையிலெடுத்த தாயம்மா "போ! பெண் பிறவியிலும் நீ ஒரு மட்டமான பிறவி என்பதை நல்லாவே காட்டிட்டே! நான் உச்சியைத் தட்டித் தட்டிப் புகட்டிய பாலெல்லாம் உன்னுடைய மட்டமான புத்தியாலும், மனசாலும் இன்னிக்கு உனக்குள் விஷமா பரவிப் போயிருச்சே, நான் என்ன செய்வேன்?... ஆனாலும்... நான் செய்ய வேண்டியது ஒண்ணு இருக்கு! அதை நான் செய்யத்தான் வேணும். ஏன்னா, அது என் கடமை!" என்று சொல்லி விட்டு அந்த விசிட்டிங் கார்டைப் பார்த்தாள்.

ஏழெட்டு நாட்கள் கழிந்தன.

தன் காதல் திருமணத்திற்கு சம்மதம் தந்து விட்ட தன் பெற்றோர்களுடன் அமர்ந்து, சந்தோஷமாய் இருந்தான் ரகுபதி. அன்று மதியம் அவன் பெயருக்கு தபாலில் ஒரு கடிதம் வந்தது.

"அன்புடையீர்,

வணக்கம்.

நான் புவனாவின் தாய் எழுதுகிறேன். இந்தக் கடிதத்தை நான் எழுதாமல் கூட இருந்திருக்கலாம். ஆனால் என் மனச்சாட்சி கேட்கவில்லை. நீங்கள் என் மகள் புவனாவைக் காதலிக்கிறீர்கள், கல்யாணமும் செய்து கொள்ளப் போகிறீர்கள் என்று அவளிடமிருந்து நான் அறிந்து கொண்டபோது எனக்கு சாதாரணமாக ஒரு நிம்மதி ஏற்படத்தான் செய்தது.

ஆனால் நான் ஒருதாய் அல்லவா? என்னிடமும் பணம் இருந்து, எனக்கும் ஒரு பையன் இருந்தால், இந்தக் கட்டத்தில் நான் எப்படிச் செயல்படுவேன் என்பதை நான் உணர்ந்து பார்த்தேன் என்று சொல்வதை விட, முதலில் நான் இதுபோன்ற கீழ்த்தரமான போக்குகளைச் சகித்துக் கொள்ள முடியாதவள் என்பதைத் தெரிவித்துக் கொள்ளவே விரும்புகிறேன்.

இதையெல்லாம் எப்படி விளக்குவது என்றும் எனக்குச் சரியாகத் தோன்றவில்லை.

அவள் சொன்னாள்! "அவர் என்னைக் காதலிக்கிறார்; நான் அவருடைய பணத்தைக் காதலிக்கிறேன்!" என்று.

என் செவிகளில் விழுந்த போது எனக்கு நெருப்பாகச் சுட்ட இந்த வார்த்தைகளை, இப்போது நான் உங்களுக்கு எழுதி விட்டேன் கைகள் நடுங்க!

எனக்கு அவமானமாய் இருக்கிறது; இப்படி ஒரு பெண்ணைப் பெற்றதற்காக.

ஒரு பெண் தன் கணவனிடம் இருக்கும் பணத்திற்காகவே அன்பும் விசுவாசமுமாய் இருப்பாளானால்,அதை இந்தச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளாது! பெண்ணினமும் இதனால் பெருமைப் படாது.

நான் மேலும் புவனாவிடம் பேசிய போது அவள் இந்த வார்த்தைகளை ஏதோ பாவம் விவரமில்லாமல் சொல்லி விட்டாள் என்று எடுத்துக் கொள்ள முடியவில்லை!

அவள் ரொம்பத் தெளிவாக மிகப் பெருமையாக இப்படி சொல்லிக் கொண்டாள்.

நிராதரவான ஒரு ஏழைத்தாய், தன் பெண்ணுக்கு நல்லதொரு வாழ்வை அமைத்துக் கொடுக்க எத்தனை அல்லல் பட வேண்டும்; எவ்வளவு அவதிப்பட வேண்டும் என்பதை நான் உணர்ந்து கொண்டிருக்கிற போதிலும், இத்தனையையும் மீறி, ஒரு இனிய இல்லறம் பாழ்பட்டுப் போகக் கூடாது, கணவன் மனைவிக்குள் காட்டப்படும் அன்புக்கு பணம் ஒரு அஸ்திவாரமாய், அளவுகோலாய் ஆகி விடக் கூடாது; ஒரு பெண் பணப்பித்து பிடித்தவளாக மாறி விடக் கூடாது என்ற வேகத்தில் இதனை எழுதி விட்டேன்.

இனி முடிவு உங்கள் இஷ்டம் போல்!

நன்றி.

அன்போடு,
தாயம்மா.

படித்து முடித்த போது அவன் கண்கள் சிவந்திருந்தன; முகம் கருத்திருந்தது. உள்ளம் கொதிக்க ஆரம்பித்தது.

"என்ன ரகு எங்கிருந்து லெட்டர்?" என்று கேட்ட தன் பெற்றோரிடம் அந்தக் கடிதத்தைக் கொடுத்தான் ரகுபதி.

"எக்ஸ்கியூஸ்மீ டாடி! நான் ஏமாந்து போயிட்டேன்." கடிதத்தை உரக்கப் படித்த அவன் தந்தை, "படிச்ச முட்டாள்களும் உண்டு. படிக்காத மேதைகளும் உண்டு. ஆனா ஒரு மேதைக்கு ஒரு முட்டாள் பொறந்திருக்கறதுதான் அநியாயம்!"

அவனது தாய், அந்த தாயம்மாவுக்கு மானசீகமாக நன்றி கூறிக் கொண்டிருந்தாள். ●

---




"நூறு வயசான பெண்ணைத்தான் கட்டிக்குவேன்னு அடம் பிடிக்கிறாரே யாருங்க அவர்?"

"அவர் ஒரு தொல் பொருள் ஆராய்ச்சியாளர்"

—கே. செல்வகாந்தி

புரட்சித் தலைவர்

நடித்த படங்களில்

எனக்குப்

பிடித்த படம்

**12**






வானில் எத்தனையோ விண்மீன்கள் இருக்கலாம்-ஆனால் ஒரு ஞாயிறு. திங்களுக்கு இணை ஏது? அது போல வள்ளுவர், பாரதியார்,இளங்கோவடிகள் படைப்புகளுக்கு ஈடேது?

அதுபோல புரட்சித்தலைவர் எம். ஜி.ஆர். படங்களுக்கு ஈடு உண்டா? உண்டு என்றால் அது புரட்சித்தலைவரின் படங்களாகத்தான் இருக்கவேண்டும்.

அவருடைய ஒவ்வொரு படத்திலும் பல நல்ல அம்சங்களைக் காணலாம். அவருடைய பல படங்கள் பல உலக சாதனைகளைப் புரிந்துள்ளன. அத்தகைய படங்களில் எனக்குப் பிடித்த படம் 'நீதிக்குப்பின் பாசம்'

படத்தில் நீதிக்குப் போராடி, நீதியை நிலை நாட்டும் பாத்திரம் மக்கள் திலகத்திற்கு! டாக்டராக கண்ணாம்பா, இன்ஸ்பெக்டராக எஸ். வி. ரெங்காராவ் மற்றும் எஸ். ஏ. அசோகன், சரோஜாதேவி,சகுந்தலா, எம்.ஆர்.ராதா எம். என்., நம்பியார், சாண்டோ சின்னப்பா தேவர் ஆகியோர் திறம்பட நடித்துள்ளார்கள்.

தாயின் மீது சாட்டப்படும் கொலைக் குற்றத்தை இல்லை என்று ஆக்கி உண்மைக் குற்றவாளிக்கு ஆதாரபூர்வமான முறையில் தண்டனை கிடைப்பதுதான் கதைக்கருவாக இருக்கிறது. வழக்கு மன்றத்திலும் அண்ணன்-தம்பி பாசத்தை வலியுறுத்தும் இடத்திலும், காதல் காட்சியிலும், சண்டைக் காட்சியிலும் வைரம் ஜொலிப்பது போல ஒவ்வொரு காட்சியிலும் ஜொலிக்கிறார் புரட்சித்தலைவர்.

மானல்லவோ கண்கள் தந்தது, சிரித்தாலும் போதுமே, இடி இடிச்சு மழை பொழிஞ்சு, அக்கம் பக்கம் பார்க்காதே... போன்ற பாடல்கள் சர்க்கரைப் பந்தலில் தேன்மழை பொழிவதைப் போல...
இனிமை இனிமை!

கருத்தாழம் மிக்க பாடல்கள், வீரமிகு வசனங்கள், எழுச்சியூட்டும் இன்னிசை கண்கவர் இயற்கைக் காட்சிகள், அதி பயங்கர சண்டைகள், பாசம், சோகம் இப்படி பல ரசனைகள் நிறைந்து இருப்பதால் நீதிக்குப்பின் பாசத்தை அதிகமாய் நான் விரும்புகிறேன்.

பத்தமடை எஸ். கந்தசாமி
3/132 செட்டிபிள்ளைமார்தெரு,
காருகுறிச்சி—627417
நெல்லை மாவட்டம்.

# இன்றைக்கு மீனாட்சிபுரம்

அய்க்கண்

உத்தரேதாத மனாத்மானம் நாத்மானமவஸாதயேத் I
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மன II
—பகவத் கீதை : அத்தியாயம் 6 : சுலோகம் 5

(தன்னைத் தன்னாலே உயர்த்திக்கொள்க; தன்னைக் கீழ்மைப்படுத்திக் கொள்ளக் கூடாது. ஏனென்றால், தானே தனக்கு நண்பன்; தானே தனக்குப் பகை.)

சூரியப்பட்டியைத் தெரியுமா உங்களுக்கு?... ஊஹூம்... தெரிந்திருக்காது. எந்த அரசியல் தலைவரும் சினிமா நட்சத்திரமும் பிறக்காத ஊர் அது. மகாத்மா காந்தி சொன்னாரே (மகாத்மா காந்தி யார் என்பது நினைவிருக்கிறது, இல்லையா?) 'இந்தியாவின் இதயம், கிராமங்களில்தான் இருக்கிறது' என்று—அப்படி இந்தியாவின் இதயம், ஒளிந்து கொண்டிருக்கிற ஒரு சிறு கிராமம் கரியப்பட்டி.

அரசாங்கத்துக்கே, பத்து வருடத்திற்கு ஒருமுறை சென்சஸ் எடுக்கும் போதுதான், அந்தக் கிராமத்தின் நினைவு வரும். அரசியல்வாதிகள், ஐந்து வருடத்திற்கு ஒரு முறை அல்லது இடைத்தேர்தல் வந்தால், அப்போது அந்தக் கிராமத்துக்கு ஜீப், கார், மைக் சகிதம் விஜயம் செய்வார்கள். யார் முதலில் வந்து காரில் அழைத்துப் போய் புளியோதரையும், தயிர் சாதமும்,ரொக்கமும் கொடுக்கிறார்களோ, அவர்கள் காட்டும் சின்னத்தில் முத்திரை வைத்துவிட்டு, அந்தக் கிராம மக்கள் தங்கள் வாக்குரிமையைக் கை கழுவிவிடுவார்கள். அவர்களுக்கும் ஜனநாயகத்துக்கும் உள்ள தொடர்பு அவ்வளவு தான்.

அந்த ஊர் மக்கள், பஸ்ஸைப் பார்க்க வேண்டும் என்றால் பத்து மைல் நடந்து போக வேண்டும். மின்சாரம், ரேடியோ, நியூஸ் பேப்பர் என்பதெல்லாம் அவர்களுக்கு இன்னும் ரொம்பத் தூரம்.

இந்தியா சுதந்திரம் வாங்கிய செய்தி, அங்கே போய்ச் சேரவே நான்கு நாட்களாகி விட்டன. சுதந்திரம் வாங்கிய பலன், முப்பத்து நான்கு ஆண்டுகளாகியும் இன்னும் அவர்களைப் போய்ச் சேரவில்லை.

அவர்களைப் பொறுத்தவரையில் தங்களை ஆள்வது வெள்ளைக்காரனா, இந்தியனா, திராவிடனா என்பதெல்லாம் தெரியாது. விதிதான் அவர்களுடைய ராஜா. விதியின் சார்பாக, சில பண்ணையார்கள் அவர்களைக் கொத்தடிமைகளாக வைத்து ராஜ்ய பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

கரியப்பட்டிக்குள்ளும், அந்தச் செய்தி புகுந்து பரவ ஆரம்பித்திருந்தது.

பக்கத்துக் கிராமமாகிய வடகுடியில் பள்ளிக்கூட ஆசிரியராயிருக்கும் சதாசிவம், அங்கே பாதிரியாரைப் பார்க்கப்போன கருப்பனை, கண்மாய்க் கரையிலே சந்தித்துக் கதறினார்:

"ஏலே, சேதி தெரியுமா...? காலம் ரொம்பக் கெட்டுப் போச்சுடா...

மீனாட்சிபுரமங்கிற ஊரிலே எல்லா அரி ஜனங்களும் முஸ்லீம் மதத்துக்கு மாறிட் டாங்களாம், தடிப்பசங்க... முஸ்லீம் மதத்துக்குப் போயிட்டா மட்டும், ரொம்ப ஒசந்து கொடி கட்டிப் பறந்திடு வானுங்களோ? நம்ம மதத்தைவிட அது ரொம்ப ஒசத்தியோ...? எல்லாம் பணத் துக்கு அலைகிற .........கள்...! பணம்னு எதுக்கும் துணிஞ்சிடுவானுங்க, ......... பசங்க...!'' என்று சென்ஸார் பண்ண வேண்டிய வார்த்தைகளால் திட்டிக் கொண்டிருந்தார் சதாசிவம்.

அந்த 'இந்து' ஏன் இப்படி அலறுகிறார், ஏன் இப்படித் துடிக்கிறார் என்பதெல்லாம் கருப்பனுக்குப் பு வில்லை. ஆனால் ஒன்று புரிந்தது—

மீனாட்சிபுரத்திலே நேற்றுவ கொத்தடிமைகளாய் இடுப்புத் துண் அக்குளில் செருகி, கால் செருப்பை கையில் தூக்கிக் கொண்டு, தலைகுனி படி நடந்த ஜனங்கள். இனிமேல் நிமிர் இடுப்பிலே வேட்டியும், மேல்துண்டு காலிலே செருப்புமாகக் கைவீசி நட கின்ற காட்சி, அவனுடைய மனத்தி யில் வண்ணப்படமாகக் குளுமையா நகர்ந்தது...

ஊருக்குத் திரும்பிய கருப்பன்



தன் சக அடிமைகளிடம் 'மீனாட்சிபுர விடுதலை'யைப் பற்றிச் சொன்னான்.

"அடடே...! இப்படிக் கூடச் செய்யலாமா...! அது சரி, நம்ம மதத்தை விட்டுட்டுப் போயிட்டா, பொழைப்புக்கு என்ன பண்றது...? பழைய எசமான்க வேலை குடுக்கமாட்டாங்களே?" என்று மூக்கன் கவலைப்பட்டான்.

ஏழைக்குப் பிழைப்புதானே முக்கியம். வேலை, சாப்பாடு, குடும்பம்—இதற்கெல்லாம் பின்னால்தானே மதம்.

"அவங்க துலுக்க மதத்திலே சேர்ந்தவுடனே நெறையப் பணம் குடுத்தாங்களாம். வெளிநாட்டிலே வேலை வாங்கித் தர்றாங்களாம்... பெரிய பெரிய மசூதிகளாகக் கட்டி, அதிலே எல்லாருக்கும் வேலை, சம்பளம் எல்லாம் குடுக்கிறாங்களாம்."

"ஏலே, பணத்துக்காக நம்ம சாமியை விட்டுட்டு மசூதிக்குப் போயிடலாமாடா?"

"சாமியாவது, மதமாவது...? மனுசனுக்கு மானம்தான் முக்கியம். நம்மை மனுசன்னு மதிக்கிறவன்தான் நம்ம சாதி சனம். நம்மை ஒதுக்கித் தள்றவங்களோட நமக்கு என்ன ஒட்டு?"



கருப்பனின் சக தொழிலாளர் களின் மனக் குமுறல்கள், எரிமலையாய் பொங்கிக்கொண்டிருந்தன.

அந்த ஊமை எரிமலைகள் வாய் பிளந்து வெடித்து, பூகம்பம் ஏற்பட்டு விடுமோ?

அடிமைகளின் ரத்த நாளங்க ளில் ஓடிய சுதந்திர மின்சாரத்தைச் சட் டென்று நிறுத்தி ஃப்யூஸாக்கியது — "டேய்!" என்ற குரல்.

ஆயிரம் மெகாவாட் சக்தியுள்ள அந்த எஜமானக் குரல், வேலைக்காரர் களைத் திடீரென்று தாக்கி, முதுகுகளை வளைத்து "எசமான்!" என்று குனிந்தபடி ஓட வைத்தது.

எத்தனை வருஷப் பழக்கம்? —வருஷமா...? பரம்பரையாக ஊறிவந்த பழக்கம். தாங்கள் எப்போது, எந்தத் தலைமுறையில் அடிமையானோம் என் பதே அவர்களுக்குத் தெரியாதே...!

"டேய்...! யார்ரா அங்கே!" என்று குரல் கொடுத்துக்கொண்டே வந் தார் பண்ணையார்.

சினிமா நடிகர்களைப் போல், பளபளப்பான மேனி; பணக்காரர்களின் தனியுரிமையான மேட்டுத் தொந்தி. உடல் பளபளப்புக்கு 'மாட்ச்'சான பட்டு வேட்டி. கழுத்திலே ஊஞ்சலாடும் மைனர் சங்கிலி; சிவந்த கண்களிலே பொங்கி வழியும் அதிகார போதை—

வாசலில் கிடந்த பிரம்புச்சாய்வு நாற்காலியில் தன் சிவந்த மேனியை தளரத் தளரச் சாய்த்துக் கொண்டார் பண்ணையார்.

"டேய்!... மேல வயலுக்கு இன்னிக்கு உரம் வீச வேண்டாமா? மறந்திட்டீங்களாடா?"

"இல்லேங்க, எசமான்!" — தரையைத் தொடுமளவுக்கு முதுகை வளைத்துக் குனிந்தபடி சொன்னான் கருப்பன்.

சிறிது நேரத்துக்கு முன்புதான், அந்தத் தொழிலாளர்கள் கண்மாய்த் தெற்குக் கவ்ல் பூராவும் உழுது கடலை வித்து விதைத்து விட்டு வந்திருந் தார்கள். விடிந்தும் விடியாமலும் புறப் பட்டுப் போய் ஏர்பூட்டி உழுது விதைக்க, சாயந்தரமாகி விட்டது. உடலுழைப்பில் அயர்ந்து போய் வலிக்கும் கால்களை நீவி விட்டபடி உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அன்று ஓய்வெடுத்துக் கொண்டு விட்டு மறுநாள் காலை மேல வயலுக்கு உரம் வீசலாம் என்று அவர்கள் நினைத்திருந் தார்கள்.

அவர்கள் ஒன்று நினைக்க 'தெய்வம்' ஒன்று நினைத்து விட்டது...

"டேய்!... உர மூட்டைகளை எடுத்துக்கிட்டுக் கிளம்புங்க... பொழுது சாயறதுக்குள்ளே வீசிட்டு வந்திடுங்க.."

"சரிங்க, எசமான்!"

அந்த உழைக்கும் இயந்திரங்கள் புறப்பட்டன.

'எட்டு மணி நேரத்துக்கு மேல் வேலை செய்ய முடியாது, செய்தால் ஓவர் டைம் சம்பளம் கொடுக்க வேண் டும்' என்று கேட்க அவர்களுக்குத் தெரியுமா? தெரிந்தாலும், கேட்கத் துணிவு வருமா அந்த இயந்திரங் களுக்கு...?




ஆளுக்கு அரை மூட்டை உரத்தை முதுகில் சுமந்து கொண்டு, கையில் மரக்காலுடன் நடக்க ஆரம்பித்தார்கள் அவர்கள்.

"கருப்பா! வீட்லே பொண் சாதிக்கு ஒரே இருமல். மூச்சுக்கு முந்நூறு தடவை லொக்கு லொக்குனு இருமுரு... நம்ம ஊர் ராமாயி வைத்தியம் பார்த்து ஒண்ணும் சரிப்படலே... வடகுடியிலே இங்கிலீசு வைத்தியர்கிட்டே கூட்டிக் கிட்டுப் போவலாம்னு நெனைக்கிறேன். ஆனா நேரம் கெடைக்கலே—" என்று முணுமுணுத்துக் கொண்டே நடந்தான் மாடசாமி.

கருப்பனின் இதயத்தில் பழைய நினைவுகள் சிலிர்த்து எழும்பிப் பொங்கின...

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு—

வலியில் துடித்துக் கொண்டிருந்த போது கூட, அவன் பக்கத்தில் இருக்க, அந்த அடிமைக்கு நேரம் கிடைக்க வில்லே.

வேலாயிக்கு இடுப்பு வலி வந்த போது, கருப்பன் கீழ்காட்டு நஞ்சை யிலே கரும்பு வெட்டிக் கொண்டிருந் தான். செய்தி கேட்டு அவன் எஜமான னின் வீட்டுக்கு ஓடினன்.

"எசமான்! என் பெண்டாட் டிக்கு இடுப்புவலி..." என்று பதறிய கருப்பனே, நிதானமாக ஏறிட்டுப் பார்த்த படி கொட்டாவி விட்டார் பண்ணேயார். மத்தியானச் சாப்பாட்டின் கன பரி மாணத்திலே உடம்பைச் சிறிது நேரம் மெத்தையில் சாய்த்துத் தூங்கிவிட்டு அப்போதுதான் எழுந்து வந்திருந்தார் அவர்.

"டேய் கருப்பா!... நல்ல சமயத் திலே வந்தே... நம்ம மாரியாத்தா கோயிலுக்கு வெளக்குப் போட எண்ணே இல்லே... நேத்துத் தீர்ந்து போச்சு. வடகுடிக்குப் போய் ஒரு படி வெளக் கெண்ணே வாங்கிட்டு வா... ஓடு..." என்ருர் அவர்.

கருப்பன் உடம்பின் இளரத்த மெல்லாம் ஜிவ்வென்று துடித்தது.

"எசமான்! வீட்டிலே பெண் டாட்டி இடுப்பு வலியிலே—"

"ஏலே! பெண்டாட்டிக்கு இடுப்பு வலின்னு நீ ஏண்டா துடிக்கிறே? அவதானேடா புள்ளே பெறப் போரு?...போ, நீ ஓடிப்போய் எண்ணே வாங்கிக்கிட்டு வா. போ!..." என்று அதட்டிய எஜமானக்குரல், வழக்கம் போல் அவனது பிடரியைப் பிடித்து உந்தி ஓட வைத்தது.

உங்கள் தொடர்கதை விஷயமா ஒரு சந்தேகம்?

(ஆவலாக) கேளுங்க! என்ன சந்தேகம்?

அது எப்போ சார் முடியும்?

—வேடு. கி.சுந்தர்

'மகமாயி! மாரியாத்தா!... என் வேலாயியைக் காப்பாத்தணும்' என்று மனதிற்குள் வேண்டிக் கொண்டே, ஓட்டமும், நடையுமாகப் போய் எண்ணெய் வாங்கிக் கொண்டு திரும்பிவரும் வழியில் எதிரே மண்வெட்டி யுடன் வந்தான் குப்பன்.

"ஏலே கருப்பா!...ஒனக்கு ஆம்பிளேப் புள்ளே பொறந்திருக்குடா... என் பொஞ்சாதி சொன்னு..."

மகிழ்ச்சியில் திளேத்துக் குதித்த கருப்பன், கோயில் இருக்கும் திசையை நோக்கித் திரும்பி "ஆத்தா! மகமாயி!" என்று உள்ளம் விம்ம நன்றி சொல்லி விட்டு, பண்ணேயார் வீட்டை நோக்கி வேகமாக நடந்தான்.

பண்ணே வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தபோது, "அண்ணே...! அண்ணே!" என்று பின்னுல் வேகமாக ஓடி வந்தான் வேடப்பன்...

"அண்ணே! ஒன்னே எங்கே யெல்லாம் தேடுறது?" என்று மூச்சிரைக் கப் பேசினன் அவன்.

"ஏன் வேடப்பா! என்ன விசயம்?"

"உன் பொண்டாட்டிக்கு ரொம்ப முடியாமப் போயிட்டுது...ரத்தப்போக்கு அதிகமாயிடுச்சாம். ஒடனே திருப்பத்தூர் ஆசுபத்திரிக்குத் தூக்கிக்கிட்டுப் போகணும்னு மருத்துவச்சி சொல்லுது... பண்ணேயார்கிட்டே கேட்டு மாட்டு வண்டியைப் பூட்டிக்கிட்டு சீக்கிரம்வா.."

உடலெல்லாம் பதறி நடுங்க, பண்ணே வீட்டுக்குள் நுழைந்தான் கருப்பன்...

"எசமான்...! எசமான்..."

உள்ளேயிருந்து—பட்டுவேட்டி, மல் ஜிப்பா, ஜரிகைத்துண்டு அலங் காரத்தோடு வெளியே வந்தார் பண்ணே யார். பக்கத்திலே, நடமாடும் நகைக் கடையாய், ஜவுளிக்கடை ஷோகேஸ் பொம்மையாய், அவருடைய இளம் மனைவி எழுந்தருளியிருந்தாள்.

"எசமான்!" என் பெண்டாட் டிக்கு ரொம்ப முடியலியாம்...ஒடனே திருப்பத்தூர் ஆசுபத்திரிக்குத் தூக்கிக்கிட்டுப் போகணுமாம். உங்க மாட்டு வண்டியை ஓட்டிக்கிட்டுப் போகட்டுங்களா?" என்று கண்களில் நீர் பனிக்கக் கெஞ்சினன் கருப்பன்.

(52-ம் பக்கம் பார்க்க)

''உங்களால் டாக்டர் பட்டத்திற்கே மரியாதை இல்லாமல் போய் விட்டதாகச் சொல்கிருர்களே?...''

''எல்லாரும் அப்படித்தான் சொல்ருங்க. சமீபத்தில் ஒரு பத்திரிகையில் கூட, நான் பணம் வாங்கிக் கொண்டு டாக்டர் பட்டம் விற்கிறதாக எழுதினுங்க. நூறு டாலர்தான் வாங்கறேன். அதையும் அமெரிக்காவிற்கு அனுப்பிடறேன். தமிழ் நாட்டிலே டாக்டர் பட்டம் வழங்கப்பட்டவர்கள் ஒன்றிரண்டு பேர்தான் இருந்தாங்க. ரொம்ப பேர்க்கு கொடுக்கலே. அதனுலதான் நான் டாக்டர் பட்டம் கொடுக்க ஆரம்பிச்சேன்.''



''தகுதியே இல்லாதவங்களுக்கெல்லாம் டாக்டர் பட்டம் கொடுக்கறீங்களே?...''

''யார் தகுதி இல்லாதவங்க? அகிலனுக்கு கொடுத்தேன். கி.வா.ஜ.விற்கு கொடுத்தேன். இன்னும் நா. பார்த்தசாரதி, தி. ஜானகிராமன்—இவங்களுக்கெல்லாம் நான் தானே கொடுத்தேன். எம். எல். ஏக்களுக்கும், பத்திரிகை நிருபர்களுக்கும் ஏன் டாக்டர் பட்டம் கொடுக்கறேன்னு கேட்கருங்க. ஒன்றிரண்டு பேருக்கு, அவங்க தொல்லை பொறுக்க முடியாம கொடுத்தது உண்மைதான். அப்படி இப்படி—ஏதேனும் ஒரு தவறு நடந்துடுது. இதை வைச்சே என்னை தாக்கருங்களேன்னு தான் கவலைப்படறேன்.''

''அதெல்லாம் போகட்டும். ஜஸ்டிஸ் மோகனுக்குப் போய் டாக்டர் பட்டம் கொடுத்தீங்களே?... அவர் அப்படி என்ன பண்ணிட்டார்...?''

''அதான் சொல்லிட்டேனே... ஒன்னு ரெண்டு தவறு நடந்துருக்கலாம்; நடந்துருச்சி. இல்லேன்னு சொல்லலே.

ஜஸ்டிஸ் மோகன் ஒரு புத்தகம் போட்டிருக்கார். சின்ன புத்தகம்தான். ஏதோ சட்டத்தை பத்தி எழுதியிருக்கறதா சொன்னுர். இன்னும் நான் அதைப் படிக்கலே. அந்த புத்தகத்தை ஒருதகுதியா வைத்துத்தான் மோகனுக்கு டாக்டர் பட்டம் கொடுத்தேன். 1985லே எங்கள் உலக கவிஞர்கள் சங்க மகாநாடு இந்தியாவிலே கூடுவதாக இருக்கு. அதை நடத்த, எனக்கு 50 லட்ச ரூபாய் தர்றதா அமெரிக்காவிலே சொல்லி இருக்காங்க. 50 லட்ச ரூபாயையும்

# கிருஷ்ண ஸ்ரீனிவாஸ்

# கொடுப்பது டாக்டர் பட்டமா?

காட்டாற்றில் வெள்ளம் திடீரென்று வரும்! அதேபோல்தான் செல்வமும் திடீரென்று வரும்!

காட்டாற்று வெள்ளம் திடீரென்று வற்றிப் போகும்! அதேபோல் தான் வந்த செல்வம் சொல்லாமல் கொள்ளாமல் அற்றுப் போகும்!

செல்வத்தைச் சேர்த்தல் கடினம்! சேர்த்ததைக் காத்தல் அதனினும் கடினம்! காத்ததை, உரியவருக்கு உரிய நேரத்தில் உதவுதல் எல்லாவற்றைவிடக் கடினம்!

'பொன்னன்' தன் உழைப்பை முதலாக வைத்து பெரும் பொருளீட்டினான்!

பொன்னனுக்குப் போட்டியாகப் பொருள் சேர்க்கத் துவங்கினான் 'நாகன்'!

இருவரிடமும் செல்வம் ஏராளம் குவிந்தது!

பொன்னனோ தான் ஈட்டிய செல்வத்தை வறுமையோடு போராடும் வறியோருக்கு வாரித் தந்தான்! 'இறைக்கும் நீர் சுரக்கும்' என்பர்! சுரக்கும் நீரை வாடிய பயிருக்குப் பாய்ச்சி, காய்ந்தது பசுமை பெறுவது கண்டு களித்தான்!

நாகனோ தன்னிடம் சேர்ந்த செல்வம் கொண்டு தன் வாழ்வை வளமாக்கிக் கொண்டான்! உலகச் சுகங்கள் அத்துணையையும் அனுபவித்துவிடத் துடித்தான்!

பொன்னன் பிறர் கண்ணீரைத் துடைத்து அதில் இன்பம் கண்டான்!

நாகனோ பிறர் கண்ணீரில் சுகம் கண்டான்!

வந்தோர் வறுமையறிந்து அளக்காமல் அள்ளித் தந்தான் பொன்னன்!

வந்த பெண்களின் பருவத்தையும், அழகையும் பார்த்து, பெற்ற சுகத்திற்கேற்ற பொருள் தந்தான் நாகன்!

நாகன் நாவன்மை படைத்தவன்! கற்ற தமிழைக் காசாக்கும் தந்திர முறைகளைக் கையாண்டான்! வெற்றியுங் கண்டான்!

பேச்சு நயத்தால் வெகுமதிகள் ஏராளம் பெற்றான்! வெள்ளிக் கட்டிகளும், பொன்னாரங்களும், வெண் பொற்காசுகளும் ஏராளம் குவிந்தன!

பொன்னன் சேர்த்த செல்வமோ தாகம் தீர்க்கும் தடாகம் போல் ஊரார்க்கு உதவியது!

நாகன் சேர்த்த சொத்தோ அவன் குடும்பத்தாரின் தோள்களில் மின்னிற்று!

# பஉச

நாகன் சேர்த்ததை, வைக்க இடந்தெரியாது பூமியில் புதைத்தான்! நம்பிக்கைக்குரியவர்களிடம் கொடுத்தும் வைத்தான்!

பொன்னன் புகழ் சேர்த்தான்!

நாகன் பொருள் சேர்த்தான்!

"நாகன் தான் சேர்த்த பொருளைக் கொண்டு என்ன செய்யப் போகிறான்?" என்று ஊரார் பேசிக் கொண்டனர்!

தமிழ் கற்ற பெரும் புலவரிடம் போய் இது குறித்துக் கேட்கப் போயினர்!

புலவரோ மெல்ல நகைத்து விட்டு உங்கள் வீடுகளில் "திருக்குறள் உளதா?" என்றார்.

"நாங்கள் தமிழர்கள்! தமிழ் மறையில்லா வீடு தமிழர் வீடாக இருக்க முடியாதே" என்றனர்!

"அப்படியானால் வள்ளுவரின் 1008 வது குறளைப் போய் பாருங்கள்" என்றார் புலவர்!

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள் நச்சு மரம்பழுத் தற்று"

என்றான் ஒருவன்!

(பிறர்க்கு உதவாத காரணத்தால் ஒருவராலும் விரும்பப்படாதவனுடைய செல்வம், ஊர் நடுவில் நச்சு மரம் பழுத்தாற் போன்றது.)

(25-ம் பக்கத் தொடர்ச்சி)

''மாட்டு வண்டியா?... நானும் இவளும் காரைக்குடிக்கு சினிமா பார்க்கக் கிளம்பிட்டோமே... வேறே ஏதாவது மாட்டுவண்டி கிடைக்குமானு பாரு...'' என்று நிர்த்தாட்சண்யமாகச் சொல்லிவிட்டு, ''வா கமலா! போவோம்...''என்று இளம் மணைவியைத் தாங்கி நடக்காத குறையாய், கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு நகர்ந்தார் பண்ணையார்.

ஆத்திரமும் ஆதங்கமும் உள்ளே வெடித்துப் புகைய வீட்டுக்கு ஓடினுன் கருப்பன்.

குடிசை முன்னுல் இரண்டொரு பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

''வேலாயிக்கு எப்படியிருக்கு?'' என்று அவர்களைப் பார்த்துக் கதறினுன் கருப்பன்.

''ரொம்ப நேரமா துடிச்சுக் கிட்டுக் கிடந்தா... கடேசியிலே, வடகுடியிலேருந்து வருவாரே சாமியார்— அவரு ஏதோ அவசர வேலையாய் வண்டியிலே வந்துக்கிட்டிருந்தாரு. வேலாயி நெலமையைச் சொன்ன ஒடனே, அந்த வண்டியிலேயே அவளைத் தூக்கிப் போட்டுக்கிட்டு மருத்துவச்சியோட திருப்பத்தூர் ஆஸ்பத்திரிக்குப் போயிருக்காரு...புண்ணியவான்! அவரு நல்லாயிருக்கணும்...'' என்று விவரம் சொன்னுள் ஒருத்தி.

வடகுடியில் தங்கியிருக்கும் பாதிரியார் அடிக்கடி கரியப்பட்டிக்கு வருவார். நிலபுலன் சம்பந்தமாக, கரியப்பட்டிப் பண்ணையாரைப் பார்க்க அவர் வருவது வழக்கம்.

கருப்பன், திருப்பத்தூர் மருத்துவமனை போய்ச் சேரும் முன்னே, வேலாயி மேல் உலகம் போய்ச்சேர்ந்து விட்டாள்.

''கருப்பா! பெரிய டாக்டராலேயே வேலாயியைக் காப்பாத்த முடியலப்பா... கொஞ்ச நேரத்துக்கு முன்னுடி தூக்கிக்கிட்டு வந்திருந்தா, பொழைக்க வச்சிருக்கலாம்னு டாக்டர் சொன்னுரு...''என்று அரற்றினுள் மருத்துவச்சி.

அன்றே, இரக்கமற்ற பண்ணையாரிடமிருந்து விலகிக் கொள்ள நினைத்தான் கருப்பன். ஆனுல் அவ்வளவு எளிதாக அந்தக் கொத்தடிமையிலிருந்து அவனுல் விடுதலை பெற முடியுமா? என்னென்னவோ பத்திரங்களிலே



அவனுடைய கைரேகையை வாங்கி வைத்திருக்கிருரே பண்ணையார்...?

அவர் வெறும் பண்ணையார் மட்டுமில்லை; அந்த ஊருக்கும் பக்கத்துக் கிராமங்களுக்கும் அவர்தான் கிராம முன்சீப். அரசாங்க எந்திரத்தின் ஒரு முக்கிய கை...அவர் கட்டளையை மீறி ஓடுபவர்கள் மீது, ஏதாவது பொய்க் குற்றச்சாட்டு, பொய் வழக்கு தாக்கல் செய்து, சிறைக்குள் தள்ளிவிடுவாரே...!

திருப்பத்தூரிலேயே மணைவியை அடக்கம் செய்துவிட்டு, பச்சைக் குழந்தையுடன் ஊர் திரும்பினுன் கருப்பன்.

பக்கத்து வீட்டுப் பேச்சி, தன் நாலு குழந்தைகளுடன் ஐந்தாவது குழந்தையாக கருப்பன் மகனை வளர்த்து வந்தாள்.

மற்ற கரியப்பட்டிக் குழந்தைகளைப்போல், ஆண்டியப்பனும் ஐந்து வயதில் வடகுடிக்குப் படிக்கப் போனுன்.

அந்தக் கிராமத்துப் பிள்ளைகள் படிக்கப் போவது என்பது, ஓர் இடைக்கால ஏற்பாடுதான். மாடு மேய்க்கவும் வயல் வேலை செய்யவும் போதுமான உடல் வலிமை வந்தவுடன், பிள்ளைகளின் படிப்பை நிறுத்தி விட்டு, கோவணத்தைக் கட்டி வேலைக்கு அனுப்பி விடுவார்கள் பெற்றோர்கள். பிள்ளைகளுக்கு, கால் கை கழுவத் தெரிந்தவுடன் தம் வயிற்றையும் கழுவிக் கொள்ள ஆரம்பித்து விடுவார்கள்.

ஆனுல் ஆண்டியப்பன் படிப்பிலே வகுப்பில் முதல் மாணவனுக விளங்கியதைக் கண்ட பாதிரியார், அவனைப் பத்தாவது வரை படிக்க வைக்கும் பொறுப்பை தானே ஏற்றுக் கொண்டார். வடகுடியிலேயே அவனைத் தங்க வைத்துப் படிக்க உதவி

செய்தார்.

எஸ். எஸ். எல். சி. தேர்வில், மாவட்டத்தின் முதல் ராங்க் மாண வனகத் தேறிய ஆண்டியப்பனை, தானே முன்னின்று திருப்பத்தூர் கல்லூரியிலும் சேர்த்து விட்டார் பாதிரியார்.

எப்போதாவது அப்பாவைப் பார்க்க வருவான் ஆண்டியப்பன்.

வழக்கமான சேரிக் குழந்தை களைப் போல் இல்லாமல் முகத்திலே அறிவுக்களையும் உடலில் தூய்மையுமாக விளங்கும் மகனைப் பார்த்துப் பூரித்துப் போவான் கருப்பன்.

தன் மகன் 'இங்கிலீசு' படிக் கிறான் என்பதுதான் அவனுக்குப் புரிந்த விஷயம். அதற்கு மேல் ஆண்டி யப்பனுடைய பட்டப்படிப்பு, தேர்ச்சி எதுவும் அவனுக்குப் புரிவதில்லை. அவனுக்கு மட்டுமா, கிராமத்தில் மற்ற வர்களுக்கும், ஆண்டியப்பன் படிப்பு பற்றிப் புரிந்து கொள்ளும் ஞானம் இல்லை...!

பண்ணையார் கொடுமையால் மனைவியைப் பறி கொடுத்த ஆத்திரம் எத்தனையோ ஆண்டுகளாய் நீறு பூத்த நெருப்பாய் இருந்த கருப்பனின் உள்ளத் திற்குள், மீனாட்சிபுரச் செய்தி ஒரு உறுதி யான திருப்பத்தை ஏற்படுத்தி விட்டது.

அன்று, கரியப்பட்டிக்கு வந்து கிராம முன்சீப்பைச் சந்தித்து விட்டு, வடகுடிக்குத் திரும்பிய பாதிரியாரோடு, கருப்பனும் கண்மாய்க் கரைப்பாதையில் நடந்து போய்க்கொண்டிருந்தான்.

அப்போது, தன் உள்ளத் திற்குள் இருப்பதை மெதுவாக வெளிப் படுத்தினான் அவன்.

"சாமி! ஏதோ மீனாட்சிபுரம்னு ஒரு ஊரிலே என் மாதிரி ஏழைக ஒட்டு மொத்தமா துலுக்க மதத்திலே சேந்துட்டாங்களாமே..." என்று தொடங்கிய கருப்பனை, ஆச்சரியத் துடன் திரும்பிப் பார்த்தார் பாதிரியார்.

'இந்த அடிமைகளுக்கு இப் போது வெளியூர்ச் செய்திகள் கூட தெரிய ஆரம்பித்து விட்டதே!' என்ற வியப்பு அவருக்கு.

"ஆமா... அதுக்கென்ன?"

"அது மாதிரி நானும் ஒங்க மதத்திலே சேந்திடலாம்னு பார்க் கிறேன்..."

"கருப்பா! நீ கிறிஸ்துவ மதத்திலே சேர்றதுனா, அதிலே உனக்கு கன்விக்ஷன், நம்பிக்கை ஏற்படணும். உங்க மதத்திலே இருக்கிற வெறுப் பினாலே, பண்ணையார் கொடுமை யிலேருந்து தப்பிக்கிறதுக்காக, இன்னொரு மதத்துக்கு மாறுவது நியாயமில்லை. மதம் என்கிறது, ஒருத்தனுடைய வாழ்க்கை முறை. புகலிடம் இல்லே..."

அப்போது, வழியிலே கிடந்த ஒரு கல் தடுக்கிக் கீழே விழப்போன கருப்பன், தன்னையறியாமலே "மகமாயி! மாரியாத்தா!" என்று கூவியபடி, கீழே விழாமல் சமாளித்துத் தன்னை நிலைப் படுத்திக் கொண்டான்.

"பாத்தியா, கருப்பா! உன் ரத்தத்திலே இந்து மதமும், இந்துக் கடவுள்களும் ஊறிப்போயிருக்கு..." என்று பாதிரியார் மெதுவாகச் சிரித்தார்.

"அதுமட்டுமா சாமி! இந்த ரத்தத்திலே அடிமைத் தனமும் ஊறிப் போய்க் கிடக்கு... அதிலேருந்து எனக்கு விடுதலை கெடைக்கணும்... பண்ணையார் மாதிரி ராட்சசன் கிட்டேயிருந்து நான் தப்பிக்கணும்..." என்று குமுறினான் அந்தக் கொத்தடிமை.

"கருப்பா! பணக்காரங்க ஏழை களைக் கொடுமைப்படுத்துறதும், சுரண்டி ஏமாத்துறதும், எல்லா மதத்திலேயும் இருக்கு... முதலாளிகளின் கொடுமையை எதிர்த்து ஏழைத் தொழிலாளர்களின் புரட்சி வெடித்ததெல்லாம் கிறிஸ்துவ நாடுகளில்தானே?"

"ஏழை பணக்காரன் வித்தி யாசம் இருந்தால்கூட பரவாயில்லே, சாமி! சாதியிலே நாங்க தாழ்ந்தவங்கனு சொல்லி ஒதுக்கி வச்சிருக்காங்களே, அந்தச்சாதி வித்தியாசம் இல்லாம இருந்தா, ஏழையாக்கூட வாழலாம், சாமி!"

"சின்ன வயசுல எல்லாரையும் அறு அறுன்னு அறுப்பானே உங்க பையன்...! இப்ப அவன் என்ன பண்றான்?"

"டி. வி. நாடகத்திலே நடிக்கிறான்!"

—வி. பார்த்தசாரதி

கருப்பன் முதுகில் மெதுவாகத் தட்டிக் கொடுத்தார் பாதிரியார்.

"கருப்பா! ஜாதி வித்தியாசம் இந்து மதத்திலே மட்டுமில்லே, எல்லா மதத்திலேயும் இப்போ ஏற்பட்டுடுச்சு... எல்லா மதமும் ஒண்ணுனு பெரியவங்க சொல்றுங்களே, அதுக்கு ஒரு அர்த்தம் என்ன தெரியுமா? எல்லா மதங்களுமே ஒரே மாதிரி குறைகள் உள்ளதுன்னும் அர்த்தம்... கிறிஸ்துவப் பிள்ளைமார், கிறிஸ்துவச் செம்படவங்க வீட்டிலே சாப்பிடமாட்டாங்க. கிறிஸ்துவ நாடார், கிறிஸ்துவ முதலியார் வீட்டோடு சம்பந்தம் பண்ணிக்க மாட்டாங்க, தெரியுமா?..." என்று வேதனையோடு சிரித்தார் பாதிரியார்.

"அப்படியா, சாமி?"

"ஆமா... அதனாலே ஜாதி வித்தியாசம், பொருளாதார வித்தியாசத்துக்கெல்லாம் மதம் மாறிப் பிரயோஜனமில்லே... அதையெல்லாம் உன் மதத்திலிருந்து கொண்டே எதிர்த்துப் போராடணும். அப்படிப் போராட, உன் இந்து மதத்திலே நிறைய சுதந்திரம் இருக்கு. இந்து மதத்தில் இருந்து கொண்டு, ஜாதிகள் இல்லேனு மட்டுமில்லே, கடவுளே இல்லேனு கூட வாதாடலாம்..."என்று மேலும் விளக்கிப் பேசிக்கொண்டே வந்தார் பாதிரியார்.

பாதிரியார், தன்னைக் கிறிஸ்துவ மதத்தில் சேர்த்துக் கொள்ளத் தயங்குவதன் காரணம் என்ன என்று கருப்பன் சிந்தித்தான்.

அவனைக் கிறித்தவனாக்கி விட்டால், அவனைத் தொடர்ந்து மற்ற அடிமைகளும் கிறித்தவர்களாகி விட்டால், கிராம முன்சீப்—பண்ணையாரின் பகை, பாதிரியாருக்கு ஏற்பட்டு விடும்.

அந்தக் கிராமப் பகுதியில் பண்ணையாரின் விரோதத்தையும், எதிர்ப்பையும் பாதிரியாரால் தாங்கிக் கொள்ள முடியாது. வடகுடியிலிருக்கும் அவருடைய சர்ச்சும் புள்ளிக்கூடமும், நிலமும் பண்ணையாரின் நெற்றிக்கண் பார்வைக்குள் சிக்கிவிடும் என்று பாதிரியார் பயப்படுகிறார் என்று யூகித்துக் கொண்டான் கருப்பன்.

"அப்படின்னா, எங்க அடிமைத் தனத்துக்கு முடிவே கெடையாதா?" என்று நெஞ்சு வெடிக்கப் பரிதாபமாகக் கேட்டான் அவன்.

அவனுடைய தலையில் கை



வைத்துப் பரிவோடு தடவிக் கொடுத்த பாதிரியார் "கவலைப் படாதே, மகனே...! எல்லா இரவுகளும் விடியத்தான் செய்கின்றன...இன்னும் கொஞ்ச நாளிலே உன் மகன் படிப்பெல்லாம் முடிச்சிட்டு வந்திடுவான். அதற்குப் பிறகு நீ யோசித்து ஒரு முடிவுக்கு வரலாம்..." என்று தேற்றினார்.

மகன் நினைவு வந்ததும், கருப்பனுக்கு ஆயிரம் யானைபலம் உடலுக்குள் புகுந்துவிட்டது.

'ஆம்... என் மகன் படித்து முடித்து வரட்டும். வந்ததும், இந்தப் பாதிரியாருக்கு மேலே உள்ள பெரிய பாதிரியாரிடம் போய், கிறிஸ்துவ மதத்திலே சேர்ந்து விடலாம். இந்தப் பண்ணையாரும் அவர் பார்வையும் அதிகாரமும் எட்ட முடியாத ஊருக்குப் போய்விடலாம்...' என்று மனதுக்குள் தீர்மானித்துக் கொண்டான் தகப்பன்.

பேச்சு வாக்கில் தன் கூட்டாளிகள் சிலரிடம் கருப்பன் தன் தீர்மானத்தைக் கூறியபோது அவர்களுடைய சிந்தனையிலும் அந்தப் பொறி பரவி சூடு பிடித்தது. தாங்களும் கருப்பனோடு சேர்ந்து மொத்தமாகக் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்துவிடுவது என்று, எல்லாக் கொத்தடிமைகளும் ரகசியமாக முடிவு செய்து கொண்டார்கள்.

ஒரு சாதகமான சூழ்நிலையை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள் அவர்கள்...

சில மாதங்கள் கழித்து— கரியப்பட்டியில் ஒரு திடீர்ப் பரபரப்பு.

புதிதாகப் பதவியேற்றிருக்கும் சப்-கலெக்டர் அந்தக் கிராமத்துக்கு வரப் போகிறார் என்ற செய்தி, பண்ணை

மழுங்கிப் போய் விடும் அல்லவா? கலெக்டரிடம் மகன் இங்கிலீசில் பேசி, விஷயத்தை நடத்தி முடித்து விடுவான்' என்ற சிந்தனை ஊறியது அவன் உள்ளத்தில்.

"சாமி! என் மகனை இத்தனை நாள் படிக்க வச்சு ஆளாக்கின நீங்க தான் இனிமேலும் அவனுக்குப் புது வழி காட்டணும்... எங்களுக்கு நீங்க செஞ்சிருக்கிற உதவிக்கெல்லாம், பதிலாக நாங்க என்ன செய்ய முடியும்? எங்களையும் உங்க மதத்திலே சேத்துக்கிடுங்க சாமி...!" என்று நெஞ்சம் நனைந்து தழுதழுத்த குரலில் சொன்னான் கருப்பன்.

"கருப்பா! நான் என்ன பிரமாதமாய் உதவி செஞ்சிட்டேன்? உன் மகன் புத்திசாலி. கவர்ன்மெண்ட் ஸ்காலர்ஷிப் கிடைச்சது. படிச்சு முன்னுக்கு வந்திட்டான். உங்க முன்னேற்றத்துக்காக அரசாங்கத்திலே எத்தனையோ உதவிகளும் சலுகைகளும் கொடுக்கிறாங்க. அதுக்கெல்லாம் வழி மட்டும் தான் நான் காட்டினேன். அப்படி வழிகாட்டினதுக்காக, அந்த நன்றிக் கடனுக்காக, உங்களை என் மதத்திலே சேர்த்துக்கிட்டேன்னா, நான் இதுவரை காட்டின மனிதாபிமானத்துக்கும், கருணைக்கும் அர்த்தம் இல்லாமப் போயிடும்... நான் செஞ்ச உதவியெல்லாம், சுயநலத்துக்குனு ஆகி, கேவலமாய்ப் போயிடும், இல்லையா?"

"நீங்க கட்டாயப்படுத்தி நாங்க மாறினாத்தான் கேவலம்... சாமி! உங்க கிட்டே சொல்லாம ஒரு ரகசியத்தை இத்தனை நாளா மறச்சு வச்சுக்கிட்டிருந்தேன்... நானும் என் மகனும் மட்டுமில்லே, ஊரிலே என் சாதிக்காரங்க எல்லாமே, உயர்ந்த சாதிக்காரங்களோட கொடுமை தாங்காம, கிறிஸ்துவ மதத்திலே சேரப் போறோம்..." என்று கருப்பன் உறுதியாகச் சொன்னதும், பாதிரியார் திகைத்துப் போனார்.

"கருப்பா! நான் முன்னேயே சொன்னேனே, மறந்திட்டியா...? அடிமைத்தனம், தீண்டாமை, ஜாதிக் கொடுமை இதுக்கெல்லாம் பயந்து, உங்க மதத்தை விட்டு வர்றது, கோழைத் தனம். உங்க மதத்துக்குள்ளேயிருந்துக்கிட்டே போராடணும்... நந்தனார், திருப்பாணாழ்வார் மாதிரி எத்தனையோ தாழ்த்தப்பட்டவர்கள், தங்கள் பண்பாலே, அறிவாலே, பக்தியாலே,

உங்க பக்கத்து வீட்டுக்காரர் இன்னைக்கு ஏழைகளுக்கெல்லாம் சாப்பாடு போடறாரே! என்ன விசேஷம்?

அவர் பையனுக்கு எல். கே. ஜி.யில அட்மிஷன் கிடைச்சிருக்காம்!

—சி. பாஸ்கர்

யார் வயிற்றிலே புளியைக் கரைத்தது.

'ஏன் திடீரென்று சப்-கலெக்டர் இந்தக் கிராமத்துக்கு விஜயம் செய்கிறார்? ஜமாபந்தி சமயத்தில் தவிர, மற்ற நாட்களிலே இந்தக் கிராமத்தையே ரெவின்யு டிபார்ட்மெண்ட் மறந்துவிடுமே?... ஏதேனும் மொட்டை மனு போயிருக்குமோ?' என்று மனதுக்குள் நடுங்கிக் கொண்டே, சப்-கலெக்டரை வெகு விமரிசையாக வரவேற்க ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினார் முன்சீப்.

வரவேற்பு வளைவு, தோரண அலங்கார வேலைகளுக்காக கருப்பன் தோப்புக்குப் போய் குலைவாழை மரங்கள் வெட்டிக் கொண்டிருந்தபோது வடகுடியிலிருந்து வந்த சடையாண்டி, "கருப்பண்ணே! வடகுடிச் சாமியார் உன்னை இன்னிக்கு வரச்சொன்னாரு... ஏதோ முக்கியமான விசயமாம்..." என்று அறிவித்து விட்டுச் சென்றான்.

அன்று சாயந்தரம் வேலைகளெல்லாம் முடிந்ததும், வடகுடிக்கு ஓடினான் கருப்பன்.

"கருப்பா! நாளைக்கு உன் மகன் படிப்பெல்லாம் முடிஞ்சு வர்றான்... அதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன். நீ இங்கேயே தங்கி நாளைக்கி அவனைக் கூட்டிக்கிட்டு ஊருக்குப் போகலாம்..." என்றார் பாதிரியார்.

நெடு நாட்களுக்குப் பிறகு மகனைப் பார்க்கும் ஆவலும் அவனை ஆளாக்கியிருக்கிற பாதிரியார் மேல் பொங்கும் நன்றியுமாய், கருப்பனின் இருவிழிகளிலும் நீர் கசிந்தது.

'நாளைக்கு மகன் வந்ததும் அவனும் நானும் மற்றவர்களையும் சேர்த்துக் கூட்டமாக, சப்-கலெக்டர் முன்னாலேயே, கிறிஸ்துவ மதத்துக்கு மாறி விடலாமே...? மேலதிகாரியின்

மற்ற உயர்ந்த ஜாதிக்காரங்க மதிக்கும் படியாய் வாழவில்லையா?"

"அதெல்லாம் அந்தக்காலம், சாமி!" என்று குறுக்கிட்டான் கருப்பன்.

"ஏன் இந்தக் காலத்திலே டாக்டர் அம்பேத்கார், தன் அறிவாலே உயர்ந்து, நாட்டின் அரசியல் சட்டத்தையே உருவாக்கிய மேதையாக விளங்கவில்லையா? ஜெகஜீவன் ராம் மாதிரி எத்தனையோ பேர் அரசியலிலே உயர்வடையவில்லையா? பகவத் கீதையிலே சொல்லியிருக்கிறதே, 'உத்தரேதாத் மனுத்மானம் நாத்மான மவஸாதயேத்' என்று—அதுமாதிரி நீங்க




அரசியல்வாதி: ஏண்டி பையனைப் போட்டு இப்படி நையப் புடைக்கிறே?

மனைவி: பின்னே என்ன? உங்க பிள்ளை உங்களாட்டமே எடைக்கு எடை 'சிலேட்டு'வாங்கி தந்தா தான் ஸ்கூலுக்குப் போவேங்கருன்.

—நீ. க. குறள்வாணன்

உங்களை உயர்த்திக் கொள்ள முயற்சி செய்யணும். நீங்களும் அறிவு பூர்வமாய், உத்தியோக ரீதியிலே, பொருளாதார ஸ்திதியிலே உயர்ந்திட்டா, மத்தவங்க எல்லாரும் உங்களை மதிப்பாங்க, மரியாதை காட்டுவாங்க..."

பாதிரியாரின் விளக்கத்திலே கருப்பனுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

"என்ன மகனே! நான் சொல்றதிலே உனக்கு நம்பிக்கையில்லியா? நாளைக்குப் பார்— உன் மகனுக்கும் உனக்கும் உங்க கிராமத்திலே எவ்வளவு மரியாதை கிடைக்குதுனு பார்!" என்று சிரித்தார் பாதிரியார்.

கருப்பன் திகைப்புடன் அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

"கருப்பா! நாளைக்கு உங்க கிராமத்துக்கு விஜயம் செய்கிற சப்-கலெக்டர் யார் தெரியுமா...? உன் மகன் ஆண்டியப்பன் தான்...!"

தகப்பன் திடுக்கிட்டு நின்றான்.

"ஆமாம், மகனே! ஆண்டியப்பன் ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணிட்டு இப்போ சப்-கலெக்டராய் வர்றான். உனக்கும் மத்தவங்களுக்கும் சொல்லாமலே அவனைப் படிக்க வச்சேன். இதே வட்டாரத்துக்கு அவனை சப்-கலெக்டராய்ப் போட முயற்சி பண்ணினேன். என் நல்லெண்ணத்தைப் புரிஞ்சுக்கிட்ட அரசாங்கம் அப்படியே ஆர்டர் போட்டுடுச்சு..."

மறுநாள்—

பண்ணையார் இடுப்பில் கட்டிய துண்டும், முதுகு வளைந்த பணிவுமாக, சப்-கலெக்டர் ஆண்டியப்பனை, கோயில் முன்பு பூர்ண கும்ப மரியாதையுடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் செல்வதையும், ஊர்மக்கள் அனைவரும் அந்த அரிஜனை மதிப்புடன் நடத்துவதையும் பார்த்த கருப்பனின் உள்ளம் மகிழ்ச்சியால் நிறைந்து, கண்களில் நீராக வழிந்தது.

அவன் தன் 'சாதி சனங்கள்' பக்கம் திரும்பிப் பார்த்தான்.

அந்த ஈரவிழிகளின் பார்வை சொல்லும் பாடங்கள், அந்த அடிமைகளுக்குப் புரிந்தது.

அவர்கள் தம் நெற்றி வியர்வையைத் துடைத்தபடி, ஆண்டியப்பனைப் பார்க்க முதுகையும் பார்வையையும் நிமிர்த்திக் கொண்டார்கள்.

அந்த வியர்வையிலும், கண்ணீரிலும், பல 'மீனாட்சிபுரங்கள்' கரைந்து மறைந்து கொண்டிருந்தன...

**"நாம் கீழ்ஜாதி என்ற நினைப்பே கூடாது. எவன் தன்னை எப்படி நினைத்துக் கொள்கிறானே, அவன் அப்படியே ஆகிவிடுகிறான். மேல் ஜாதியாரை வெல்ல வேண்டுமானால், மேன்மைக் குணங்களைப் பழகிக் கொள்ள வேண்டும். படிப்பினால் மேன்மையடையலாம்."**

**பாரதியார் உரைநடை.**
13, ஜூலை, 1917

■ நெல்லை மாவட்டத்தில் நகைச் சுவை மன்னன் என்று எல்லோராலும் அழைக்கப்படுகிறவர் பொ. ம. ராஜா மணி. இவர் பட்டிமன்றம் ஏறுத நாளே யில்லை. இவர் செல்கிற பட்டிமன்றத் திற்கு இவர்தான் நடுவர். எப்போதும் புகையிலையை அதக்கிக் கொண்டே யிருப்பார். நடமாடும் சொல் விளை யாட்டு வீரர். ஆனாலும் கணக்கு ஆசிரியர். பட்டிமன்றம் தேவையில்லை என்பவர்களுக்கு சரியான பதிலைச் சொல்வதாய் சொன்னார்.

"எளிய கிராம மக்களுக்கு பட்டி மன்றம் ஒரு நல்ல பொழுது போக்கு. அதோடு கூட அவர்களைச் சிந்திக்க வைக்க அதுவே வாய்ப்பாகி விடுகிறது. இலக்கியமும் சொல்லவேண்டும். அதே சமயம் அவர்களை போர் அடிக்காமலிருக் கவும் செய்யவேண்டும் என்றால் கொஞ் சம் நகைச்சுவையும் சேர்க்கத்தான் வேண்டியுள்ளது.

அது தப்பில்லை. சரி பட்டி மன்றம் வேண்டாம், வழக்காடு மன்றம் வேண்டாம். வேறு எப்படி கிராம மக்க ளுக்கு இலக்கிய அறிவு, ரசனையை உண்டாக்க முடியும்...?

யோசித்துப் பார்க்கவேண்டும்.

தனிப்பேச்சு. பேசும் போதே எதிரே தூங்குகிறார்கள். பட்டிமன்றமும், வழக்காடு மன்றமும் வேண்டா மென்றாச்சு...!அதற்கு மாற்று... அதையும் நான் அறிமுகப்படுத்தியுள்ளேன். 'விசாரணை மன்றம்..." கோர்ட் மாதிரியே... நல்லதங்காள், அரிச்சந்திரன், கர்ணன் வழக்கு நடக்கிறது...!

இப்படித்தான் செய்ய முடியும். அதனால் பட்டிமன்றம், வழக்காடு மன்றமே வேண்டாமென்று சொல்ல முடியாது...

என் குழுவில் சுமார் 27 பேர்கள் இருக்கிறார்கள். 2600 முறை மேடை யேறியுள்ளோம். 14 வருடம் எனக்கு இதில் ஈடுபாடு...என் அனுபவத்தில் இந்த வடிவம் வெற்றி பெற்ற ஒன்று.

என் குழுவிலிருப்பவர்களுக்கு சில கண்டிஷன்கள் எப்போதும் உண்டு. தலைப்பை தாங்களே எடுத்துக் கொள்ளக் கூடாது. பணம் இவ்வளவு என சொல் லக்கூடாது. கொடுக்கும் தலைப்பில் பேச வேண்டும். பேசும் முன் ஒரு பரிசீலனைக் கேள்விகள் நடக்கும். அதில் தேறினால் பேசலாம். இல்லையேல் பேசக்கூடாது. சாப்பாடு ஒன்றாய் உண்ணவேண்டும். அறிவிப்பில்லாமல் வெளியே பேசக் கூடாது...

**தமிழ்க் கனல்**

நானும் பட்டிமன்றம் வேண்டும் என்றேதான் சொல்லுவேன். அது ஒரு அவசியத் தேவை, காலத்தின் நிர்ப்பந் தம். படிக்காதவர்களின் இலக்கிய ஏடு. இந்த வடிவம் சில நேரங்களில் வீணாகிப் போவது வாஸ்தவம். பல சோஷியல் தலைப்புகளில் பட்டிமன்றம் நடத்தியுள் ளோம். கூட்டமே வராது. 'குடும்பப் பொறுப்பை ஏற்கும் தகுதி கொண்டவர் மாமியாரா-மருமகளா' நடத்தினால் ஏகப் பட்ட கூட்டம்... நெரிசல்...! சினிமாவுக் குக்கூட அவ்வளவு ஜனம் வராது. விழா மாதிரி இருக்கும். என்ன செய்யறது? எதுக்கு மவுசோ அதில்தான் நாம் எதை யாவது சொல்ல வேண்டும். முடிந்தவரை முயற்சிதான் செய்து கொண்டிருக்கி றோம்...

நல்ல ரசனை வரும்போது பட்டி மன்றப் போக்கும் மாறும் என்று நான் நம்புகிறேன். அதனால் அதை வேண்டா மென்று சொல்ல மனசு சங்கடமாயிருக் கிறது.

பேட்டி: நவபாரதி



# பட்டி மன்றம் கண்டிப்பாக தேவை!



# ஒரே ஒரு ஆசை!

தன்னிடமிருந்த எல்லா பணத்தையும் தரையில் கொட்டி எண்ணிப் பார்த்தான் பாபு. ஐம்பத்தி நான்கு ரூபாயும் எழுபது காசும் இருந்தன. அவனுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. ஒரு சக்கிலியன் ஆறே மாதத்தில் இவ்வளவு பணம் சேர்த்தது அதிசயம் என்பதே அவன் எண்ணம்.

உண்மையில் அவன் இவ்வளவு பணம் சேர்த்து விட்டதற்காக மகிழ்ச்சியடையவில்லை. அவன் சந்தோஷத்திற்குக் காரணம் அவனுடைய நெடுநாள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் வாய்ப்பு கடைசியில் வந்தே விட்டது என்பதுதான்.

அது என்ன அப்படிப்பட்ட ஆசை என்கிறீர்களா? வேறென்ன ஒரு முப்பது வயசான வாலிபனுக்கு வழக்கமாக இருக்கும் பருவ இச்சைதான். தேவி என்ற ஒரு பெண்ணுடன் ஓரிரவைக் கழிக்க வேண்டும் என்ற ஆசைதான் அது.

'சரி, அதற்கும் அவன் பணம் சேர்ப்பதற்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்பீர்களேயானால் நீங்கள் சரியான 'ட்யூப் லைட்' என்று அர்த்தம். ஏனென்றால் 'தேவி வெறும் தேவியல்ல; தேகத்தை விற்கும் தேவி' என்ற சிறு விஷயத்தை உங்களால் ஊகிக்க முடியவில்லையே.

தேவியின் ரேட் பதினைந்திலிருந்து பத்துக்கு வந்து வெகு நாட்களாகி விட்டன. இப்போதெல்லாம் அவள் ஐந்துக்கும் சம்மதிக்கிறாள். அது கூட கிடைக்காது போலிருந்தால் இரண்டு மூன்று பேரை ஒரே நாளில் தனித்தனியே சந்தித்து திருப்திப் படுத்தி விட்டு மூன்று ரூபாய், நான்கு ரூபாய் என்று வாங்கி நாளை ஓட்டுகிறாள். டிமான்டே இல்லையென்றால் 'காலேல கீட்டா பத்து மணிக்கு உங்கைல காசு இருக்கும்' என்று கடன் சொல்லுவோரை நம்பி ஏமாந்தும் இருக்கிறாள்.

இசைப்பித்தன்

இரண்டு மூன்று பேருக்கு இரையாகித் தன் இரையைத் தேடும் நாளெல்லாம் தேவி உடல்வலியும், மனவலியும் ஒருங்கிணைந்து துன்புறுத்த துவண்டு படுத்துக் கொண்டேயிருப்பாள். எழுந்திருக்கவே அவள் உடல் கெஞ்சும். ஆனாலும் உடல் என்ற அந்த பெரிய இயந்திரம் இயங்க வேண்டுமென்றால் அதன் ஒரு பகுதியாகிய வயிறு என்ற அந்த சிறிய யந்திரத்திற்குத் தீனி போட்டாக வேண்டுமே. எனவே தன் வாடிக்கையான இடத்திற்குக் கிளம்பி விடுவாள்.

அந்த வாடிக்கையான இடம் வேறெதுவுமில்லை.பாபு செருப்பு தைக்கும் பஸ் ஸ்டாண்ட்தான். அங்கே சென்று பஸ்ஸுக்குக் காத்திருப்போரையும், சினிமாவுக்குப் போவோர் வருவோரையும், பஸ்ஸிலிருந்து இறங்குவோரையும் நோட்டம் விடுவாள் தேவி. அவள் கணிப்பில் யாரெல்லாம் தேறுகின்றனரோ அவர்களிடமெல்லாம் சென்று, "இன்னா சாமி வெலாசம் தெரியலியா" என்றோ "பதிமூணும் பஸ்ஸுக்கா நிக்கறீங்க. இப்ப ஒண்ணு போச்சே..." என்றோ "பிக்சருக்கு டிக்கெட் வேணுமாங்க" என்றோ "படம் எப்படி சார் கீது?" என்றோ மிக உரிமையாகக் கேட்பாள். அவள் உதடுகள் தான் கேள்விகளைக் கேட்குமே தவிர அந்த வறுமையிலும் வளம் குறையாத அவள் கட்டுடலோ கவர்ச்சியாக வளைந்து திமிறி நின்று 'உனக்குத் தேவையானதை உடனே தரத் தயார்.' என்று சொல்லாமல் சொல்லும்.

இதையெல்லாம் பார்க்கும் பாபுக்கு,'இவள் ஒரு நாளாவது நம்மிடம் வந்து இப்படி ஏதாவது கேட்டு கிறங்க வைக்க மாட்டாளா?' என்று தோன்றும். ஆனால் அவள் அவனிடம் போதையூட்டும்படியாக எதுவும் பேசாமல் வேறு விதமாகப் புலம்புவாள்.

"யோவ்... உம்பாடு தேவலயா... கைக்கு மட்டுந்தான் வேல... கெடைக்கற



காசுல வயத்தைக் கழுவிறுப் போதும்... நம்மளப்பாரு...ஒடம்பு முழுக்க இவனுக சொல்றபடி கேக்கணும்.'' என்று சொல்லி விரக்தியாக சிரிப்பாள் அவள்.

பெண்மையனுபவமே இல்லாத பாபு''ஆ...நம்மகிட்ட கதையளக்கறியே.. நீ என்ன சொகுசாப் போயி துட்டு பண்றே... நம்மள மாதிரி வெயிலு, மழைன்னு பாக்காம கஷ்டப்படறயா என்ன? என் கைவலியும், கண்வலியும் உனக்கென்ன தெரியும்? இவ்வளவு கஷ்டப்பட்டு தெச்சும் சிலபேரு பதினஞ்சு பைசா போட்டுட்டு இதுவே ஜாஸ்தின்னு சொல்லிட்டு போரானுங்க தெரியுமா.'' என்று சொல்வது கேட்டு கலகலவென்று சிரிப்பாள் தேவி.

''வெவரம் புரியாத ஆளுய்யா நீ. உன்னால எங்கஷ்டத்தை புரிஞ் சுக்கவே முடியாது...''

''அல்லாம் புரியுது. அஆங்... நீ சொம்மா ஒட்டல்லயும் சினிமா கொட் டாலயும் ஜாலியா குந்திகிட்டே பொழுதை ஒட்டுவே... அப்பறம் அலுங் காம அவங்க குடுக்கற புதுநோட்டை வாங்கிப்பே...''

மறுபடியும் சிரித்து விட்டு, ''நெஜமாவே நீ இன்னும் கொழந்தையா இருக்கய்யா.. எனக்கு இன்னு அவ்வளவு சுளுவா பணம் கெடைக்குதுன்னு நெனக்கறயா..யோவ்.. நீ சொன்னியே ஒட்டல்ல துங்கறது... சினிமா போறது... அதெல்லாம் பெரிய மனுசாளுங்ககிட்ட போயி மினுக்கற எஷ்ட்ராங்களுக்குதான்யா... நான் ரோட்டோர கிராக்கிதானே...ஆ...மா... எனக்கு ஒரு நாளைக்கு இன்னு கெடைக்கு துன்னு நீ நெனக்கறே...ம்?''

பாபு பதில் பேச மாட்டான்.

''அட சொம்மா சொல்லய்யா...''

''என்ன?... ஒரு அம்பது ரூவா கெடக்...'' அவன் முடிப்பதற்குள் அவள் இடிஇடியென நகைப்பாள்.

''அய்யோ...அய்யோ... ஒலகம் தெரியாத மனுசன்யா நீ...நான் ஆளான புச்சுலயே எனக்கு அம்மாந்துட்டு கெடச்சதுல்ல... இப்ப?...இப்ப கெடக் குமா என்ன? யோவ்...எனக்கு ஒரு நாளைக்கி ரெண்டு மூணு பேரை பார்த்தா கூட ஏழெட்டு ரூபாய்க்கு மேல கெடக் கறதில்லே... தெரியுதா...''

அவள் சொல்வதை நம்ப முடியாமல் அவளேயே வைத்த கண் வாங்காது பார்ப்பான் பாபு.

"அட... இன்று அப்படி பார்க்கறே.. நான் சொல்றது நெசம்யா... எனக்கு இப்ப பத்து ரூவா கூட கெடக்கறதில்ல... ஒன்றுல நம்ப முடியல இல்ல...ஆறு அதுதான்யா உண்மெ..." என்று சொல்லிவிட்டு கொஞ்ச நேரம் மௌனமாக இருப்பாள் தேவி. பிறகு "மெய்யா சொல்றேன்யா...நான் ஒரு நாளாவது யாரையும் பார்க்காம இருக்க மாட்டேனுன்னு ஏங்கறேன்...ஆறு அது முடியலிய்யா...நம்ம பொழப்பே அதுல தானே கீது...! எல்லாரும் பொழப்பு படுத்துடுது... படுத்துடுதுன்னு சொல்ருங்க...! படுத்தாத்தான்யா பொழப்பே எனக்கு கெடைக்குது...! அதனுல ரெஷ்ட்டே எடுக்கமுடியலே." என்று சொல்லுவாள்.

இந்த உரையாடல் மாதத்திற்கு ஒரு முறையாவது வார்த்தைகள் மட்டும் மாறுபட்டு நடக்கும். ஒவ்வொரு தடவையும் ஏதோ அப்போதுதான் அதுபற்றி முதன் முறையாகப் பேசுவது போல் சுவாரசியமாக இருவரும் பேசுவார்கள். ஒருமுறை பாபு பேச்சு வாக்கில்தான் எப்படியாவது பணம் சம்பாதித்து அவளுக்கு உதவுவதாக சொன்னபோது அவளுக்கு வந்த கோபம் கண்டு நடு நடுங்கி விட்டான்.

"யோவ்...என் தொழில் மோசமானதுதான்...அதுக்காக நீ இனமா குடுக்கற பணத்தை வாங்கற பிச்சக்காரின்னு என்ன மட்டமா மட்டும் நெனக்காதே... ஆமாய்யா... நான் அவ்வளவு இன்னும் சீப்பா பூடல..." என்ற அவள் வார்த்தைகள் இரண்டு நாட்களுக்கு அவன் காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தன.

கொஞ்சம் கொஞ்சமாக பாபுவுக்கு அவள் மேலிருந்த ஈடுபாடு அதிகமானது. ஆனுல் அதைக் காதல் என்றே பரிதாப உணர்ச்சி என்றே சொல்ல முடியாது. மற்ற ஆண்களுக்கு ஏற்படும் அதே சதையுணர்ச்சிதான் உண்டானது. ஆனுல் அதோடு லேசாக இரக்க உணர்ச்சியும் கலந்திருந்தது.

'செருப்பைவிட கேவலமா தன் உடம்பை உபயோகிச்சு இவ்வளவு கஷ்டப்படருளே... ம்... சரி... இதை நம்மால முழுக்க நிறுத்த முடியாது. ஆறு இவ ஆசைப்படருப்பல இவளுக்கு ரெஷ்டு கெடைக்கும்படியா பணம் குடுத்தா?... சும்மா குடுத்தா நிச்சயம் வாங்க மாட்டா... இவளோட ஒரு நா தங்கிடறது... இவளுக்கு ஒரு ரெண்டு மூணு நாளைக்கு செலவாற பணத்தைக் குடுக்கறது... வாங்குவாளோ... கட்டாயம் வாங்குவா... நம்மோட ஆசையும் தீந்த மாதிரியிருக்கும்... அதான் சரி... நாம உண்டீல பணம் போட்டு நெறய சேத்துகிட்டு, ஒரு நா இவளோட ஜாலியா சுத்தணும்... அப்பாலே நம்ம குடிசைக்குக் கூட்டிக்கிட்டு போணும்... ஒரு நாப்பது ரூபா குடுத்தா அவளும் ஒரு நாலு நா நல்லா துன்னுட்டு கம்னு கெடக்கலாம்...' என்றெல்லாம் எண்ணினுன்.

அன்றிலிருந்து கிடைத்த கொஞ்ச நஞ்ச காசில் ஒரு பகுதியை அவளுக்காக சேர்க்க ஆரம்பித்தான்.

தூரத்தில் தேவி வருவதைப் பார்த்த பாபு, "இந்தாம்மே... இங்க கொஞ்சம் வா." என்று உரக்கக் கத்தினுன்.

அவன் குரல் கேட்டவுடன் கொஞ்சம் வேகமாக நடந்து அவனருகே வந்து நின்று, "இன்னுய்யா?" என்ருள் அவள்.

அன்று வழக்கத்துக்கு அதிகமாகவே தன்னை அலங்கரித்திருந்தாள் அவள்.

"இன்னும்மா... இன்னிக்கி சும்மா சீதேவி கணக்கா ஸோக்கா வந்திருக்கியே... இன்னு... ஏதாவது ஸ்பெசல் கிராக்கியா..."

பதில் சொல்லாமல் அவள் சிரித்த போது அவள் நாணப்படுவது போல் தோன்றியது அவனுக்கு.

'அட... இவளுக்கு வெக்கப் படக் கூட தெரியுமா' என்று நிணைக்கையில்—

"ஆமாய்யா... பெசல்தான்." என்ருள் தேவி.

சிறிது தயங்கிய பாபு மெதுவாக, "அந்த ஸ்பெசல் கிராக்கியை ஒரு மூணு நாலு நா கழிச்சு வரச் சொன்னு இன்னும்மே செய்வான் அவன்." என்ருன்.

அது கேட்டு அவள் கண்கள் வியப்பால் விரிந்தன.



நெஞ்சமெனும்
ஊஞ்சலிலே
அஞ்சுகமே
நீ ஆடு...!
கொஞ்சுமொழி
கோகிலமே
கூடியொரு
இசைபாடு...!
—'நாடோடி ராஜா'
படத்தில்
ராஜீவ்-அருணா.

"இன்னாய்யா... புச்சா ஏதோதோ சொல்றே... அது இன்னா ரெண்டு மூணு நாலு... நீ இன்னா தான்யா சொல்றே..."

"அட இன்னும்மா உன்னோட பேஜாரா கீது...அல்லாம் நான் பாத்துக்கறேன்னு சொல்றேன்...இத்து கூடவா புரியலே..." கடைசியில் துணிந்து சொல்லியே விட்டான் பாபு.

"இன்னாது?" என்று அவள் சத்தமாகக் கேட்க அங்கிருந்த சிலர் அவர்களைத் திரும்பிப் பார்த்தனர்.

"யோவ்...உனக்கின்னா லாட்ரீ கீட்ரீ வுளுந்துடுச்சா. இன்னா?"

"அதெல்லாம் உனக்கு எதுக்கும்மே...துட்டு கீது... அவ்வளவுதான்.. நீ இன்னா சொல்றே..."

மௌனமாக நிற்கும் அவளைப் பார்த்த பாபுவின் மனம் அவள் மாட்டேனென்று சொல்லி தன்னைத் திட்டி விடுவாளோ என்ற பயத்தால் திக்திக்கென்று அடித்துக் கொண்டது.

"சரிய்யா...ஒன் இஸ்டம்... எங்கே போலாம்...சொல்லு..." என்ற தேவியின் வார்த்தைகளைக் கேட்டவுடன்—

"ஒரே மினிட்... வந்துடறேன்..." என்றவாறு வேக வேகமாக தன் முன்னாலிருந்த தோல் துண்டுகள், ஊசி, ட்வைன் நூல், செர்ரிப்லாஸம் டப்பா, பாலீஷ், கத்திரி என்று எல்லாவற்றையும் ஒரு துணிப்பையில் அள்ளிப் போட்டு கட்ட ஆரம்பித்தான் பாபு.

"இந்தாம்மே... எந்திரி... அட எந்திரின்னா... தா எந்திரேன்...இதப் பாரு...ஸ்பெசல் டீயும், பன்னும் வாங்கியாந்திருக்கேன்... எந்திரி... மொகம்

கழிவிட்டு சாப்ட வாணும்...''என்று பாபு அவளை பலமுறை உலுக்கிய பிறகே எழுந்திருந்தாள் தேவி.

நிதானமாக சோம்பல் முறித்தவள் பாபுவை நோக்கிக் கண் சிமிட்டியபடி...

"யோவ்...பாக்கறதுக்கு சாதுவா இருந்துகிட்டு பெரிய ஆளாக்கிறீயே... நேத்து நா..."

பேசிக் கொண்டே போனவளின் கையைப் பிடித்து...

"மொதல்ல போயி மொகங் கழுவிட்டு வா... டீ ஆறுது இல்ல..." என்று சொல்லி விட்டு வெட்கத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான் அவன்.

அவள் உடைகளை சரி செய்து கொண்டு முகம் கழுவச் சென்றாள்.

முதல்நாள் அவளுடன் இஷ்டப்படி சுற்றிவிட்டு சினிமா சென்றதும், சிரித்து சிரித்து பேசிக் கொண்டு மிலிடரி ஓட்டலில் பிரியாணி சாப்பிட்டதும், குடிசைக்குத் திரும்பி வந்து தன்னுடைய ஆறு மாதக் கனவை நிணவாக்கிக் கொண்டதும் அவன் கண் முன் மீண்டும் ஒருமுறை தோன்றி அவனை மகிழ்ச்சியால் பூரிக்கச் செய்தன.

"யோவ்... டீ நல்லா கீதுய்யா" என்ற குரல் கேட்டு நிகழ்காலத்துக்கு திரும்பிய பாபு, காலி டீ டம்ளருடன் எழுந்திருக்கும் தேவியைப் பார்த்தான்.

எழுந்து சென்று அவன் தன் சட்டைப் பையிலிருந்து பணம் எடுக்கையில், "கிலாஸ" உன்னுதுதானே இரு கயுவியாரேன்" என்றவாறு வாசலை நோக்கி நடந்தாள் தேவி.

"அது கெடக்கட்டும்மே... அப்பால கயுவிக்கலாம்... இப்ப நீ கொஞ்சம் நில்லு..." என்றவாறு பணத்துடன் அவளை வேகமாக நெருங்கிய பாபுவை நோக்கி—

"இன்னாய்ய... இன்னும் ஆசை தீரலியா ஒனக்கு" என்று குறும்பாகக் கேட்டவாறு டம்ளரை கீழே வைத்தாள் தேவி.

"இதப் பாரும்மே இந்த நாப்பது ரூவா ஒனக்குத் தான்... சும்மா குடுக்கலே... நீ என்னோட தங்கினதுக்குக் கூலி... இன்னா... புரியுதா... இந்த துட்டு உனக்கு நிச்சயம் மூணு நாள் செலவுக்குத் தாங்கும்னு நெனக்கிறேன்... அதனால நீ நல்லா ரெஸ்ட் எடுத்துக்கிட்டு அப்புறமா உன் தொழிலை இஸ்டாட் பண்ணலாம்... இன்னா... அதனாலதான் நீ சொன்ன ஸ்பெசல் கிராக்கியை நாலு நா கழிச்சு வரச் சொன்னு இன்னுன்னேன்... இந்தா புடி... வாணுன்னு மட்டும் சொல்லிடாதம்மே... நான் உனக்காகத் தான்..."

விக்கி அழ ஆரம்பிக்கும் தேவியைப் பார்த்து பேசுவதை நிறுத்திய பாபு ஒன்றும் புரியாமல் விழித்தான்.

அழுகையோடு பேச ஆரம்பித்தாள் அவள்.

"யோவ்... நான் சொன்ன ஸ்பெசல் கிராக்கியே நீதான்யா... ஒனக்கு எம்மேல ஒரு கண்ணுன்னு எனக்கு எப்பவோ புரிஞ்சு போச்சு... ஆனா. எனக்கு தெனம் சாப்பாட்டுக்கு துட்டு வேணுமே... அதனால நான் ஒரு நா கூட துட்டு வாங்காம யாரோடயும் போக முடியாதே... அதே நேரம் துட்டு குடுத்து உன்னால என்னோட வர முடியாதுன்னும் எனக்கு தெரியும்யா. ஏன்னா உனக்குத்தான் பாதி நா நாஷ்டாக்கும், டீக்குமே பணம் வருதில்லியே... அதனாலதான் நான் ஒரு ரெண்டு நாளுக்கு நம்மகிட்ட பணம் இருந்தா உன்னோட சும்மாவே இருக்கலாமேன்னு நானும் பணம் சேத்தேன்... ஆமாய்யா... இப்ப எங்கிட்ட துட்டு கீது... அதனாலதான் துட்டு வாங்காம ஒனக்கு முந்தான விரிக்கலாம்னு ஓடியாந்தேன்... இத்த நான் போறப்ப சொல்லலாம்னு இருந்தா... நீ இப்படி பேசி முந்திகிட்டியேய்யா... இம்புட்டு ஆசையா எனக்காக துட்டு சேத்து என்னையே நீ மிஞ்சி..."

மேற்கொண்டு பேச முடியாமல் விக்கி விக்கி அழும் அவளையே பிரமை பிடித்தவன் போல பார்த்துக் கொண்டிருந்தான் பாபு. ●

**மான்**

மரக் காட்டுக்கு
உள்ளே
மான்குட்டிகள்
மிரள்கின்றன.
கம்பிவேலிகளின்
உள்ளே
மான்குட்டிகள்
மிரள்கின்றன
கவிதைகளின்
உள்ளே
துள்ளித்திரிகின்றன
மான்குட்டிகள்

—விஷ்ணு நாகராஜன்



வெளிநாடுகள் சென்று வந்தவர்:

ஹாங்காங்ல பணம் மட்டும் இருந்தாப் போதும் சார், தாயைத் தவிர உலகத்திலுள்ள எதையும் விலைக்கு வாங்கி விடலாம்.

மற்றவர்:

இதென்ன சார் பிரமாதம்! இங்கே நாங்கதான் வாராவாரம் 'தாய்' வாங்குறோமே!

கருத்து: ஜெ...



"கசாப்புக் கடையில வேலை செஞ்சவனை சமையல்காரனுக்கியது சிரிப்பாப் போச்சு."

"ஏன்?"

"காய் வெட்டுறதா இருந்தா மேல கட்டித் தொங்க விட்டுத்தான் வெட்டு வங்கிறான்..."



"நான் சொல்றது எல்லாம் நடக்குங்க."

"எப்படி சொல்றீங்க?"

"ஆடு, மாடு, கோழி, நாய், பூனை."

—சைதை செல்வா



"அவனை கல்யாணம் கட்டிக்கிட்டதாலே வாழ்க்கையே பிசுபிசுத்துப் போச்சு..."

"எவனை?"

"எண்ணெய் கடைக்காரர் மகனை."

—பவித்ரா



"குடும்பத்தோட கவுரவம் பெண்கள் கிட்டத்தான் இருக்கு. என் பொண்டாட்டிய எடுத்துக்குங்க..."

"சே...ச்...சே... வேண்டாங்க... நல்லாயிருக்காது... தப்பாயிடுங்க..."

—சைதை செல்வா

அவன் பதற்றத்துடன் காத்திருந்தான். அந்த இடத்தில் குழுமியிருக்கிற அத்தனை பேரும் சாலை போக்குவரத்திலும், பின்னால் டீக்கடையிலிருந்து அலறும் சினிமாப்பாடலிலும் சுவாரஸ்யம் இழந்து, அக்கறையோடு அவனையே கவனிக்கிற மாதிரி மனசு குறுகுறுத்தது. இந்த நினைப்பு வெறும் பிரமைதான் என்று உள் மனசுக்குப் புரிந்தாலும் அர்த்தமில்லாத ஒரு நமைச்சலும் இருந்தது. ரமணியின் கோபம் உஷாவின் மேல் திரும்பிற்று.

என்ன பெண் இவள்? பதினோரு மணிக்கெல்லாம் டாணென்று வந்து விடுவதாய்க் கூறி விட்டு... மணியைப்

வளாய் குனிந்து புடவைக் கொசுவத்தை சரி செய்து கொண்டு மெல்ல நடந்தாள்.

ரமணி சுற்று முற்றும் பார்த்து விட்டு மெல்ல அவளைப் பின் தொடர்ந்து, சுரங்கப் பாதையில் இறங்கி அவளை நெருங்கினான்.

"என்ன உஷா இவ்வளவு லேட்... நீ வரமாட்டியோன்னு பயந்திட்டேன்..." அவள் இவனைத் திரும்பிப் பார்க்காமல் முணுமுணுக்கிற குரலில், "ஷ்...எங்க வீட்டுக்கு எதிர் வீட்டுப் பையன் ஒருத்தன் கூடவே பஸ்ஸில் வந்தான்... இதே ஸ்டாப்பிலதான் எறங்கினான்... பின்னாலேயே வந்து தொலைக்கப்போறான்... நீங்க என்னைக் கண்டுக்காம அப்படியே நடந்துபோய் தியேட்டருக்குள்ள காத்திருங்க..." என்று மிக இயல்பாய் குனிந்து செருப்பை சரி செய்கிற பாவனையில் சொன்னாள்.

ரமணிக்கு சுருக்கென்றது. பேசாமல் அவளைக் கடந்து நடந்து

# காற்றுக் குமிழிகள்

பார்த்தான். பதினொன்று இருபது. திடீரென்று மனசில் ஒரு வலி கவ்விற்று. உஷா வரவே மாட்டாளோ? ஒரு வற்புறுத்தல் காரணமாய் வருவதற்கு ஒப்புக் கொண்டு, பின்னர் யோசித்து பின் வாங்கி விட்டாளோ? சட்டென்று ஒரு ஏமாற்றமும், விரக்தியும் சேர்ந்து தாக்கின. அவளை நம்பி ஒரு நாள் விடுப்பு கேட்டு வந்தது தப்போ? பஸ்ஸோடு போகிற ஆபீஸ் தோழன்களில் எவனாவது பார்த்து விட்டுப் போனால் கூட போதும்.

'என்னடா எதிர் வெயில்ல பஸ் ஸ்டாண்ட்ல அம்போன்னு நின்னுட்டிருந்த...! என்று கேள்வி கேட்டு துளைத்து விடுவான்கள்.

ரமணியின் கண்கள் சட்டென்று அகன்றன. உஷாதான்! நின்றிருந்த பஸ்ஸின் முன் பக்கத்திலிருந்து மெல்ல அவள் இறங்கினாள். இவன் திசையில் திரும்பிப் பார்த்தாள். ஆனால் முகத்தில் எந்த பரிச்சய அறிகுறியும் இல்லாத

படியேறிப் போனான். ஒரு கனவு கலைந்த மாதிரி அசதியாயிருந்தது. ஆரம்பமே சரியில்லையே...

அவளுடன் கை கோர்த்து நடந்து தியேட்டருக்குள் நுழைய வேண்டுமென்கிற எண்ணத்தில் மனசுக்குள் எத்தனை ஒத்திகை பார்த்து, எத்தனை முறை சொல்லிச் சொல்லி பார்த்துக் கொண்ட வார்த்தைகள்... அத்தனையும் வீண்...

"ச்சூ... ஏன் கையைப் போட்டு இப்படி அழுத்தறீங்க..."

"எவ்வளவு மிருதுவா பஞ்சு போல இருக்கு உன் கை... உள்ள எலும்பு கிலும்பு இருக்கான்னு தேடறேன்..."

கொட்டகையில் அவ்வளவு கூட்டமில்லை. படம் ஆரம்பித்திருப்பார்கள். எல்லோரும் உள்ளே போய் விட்டிருப்பார்கள். நல்ல வேளை, இங்கு ஏதேனும் தெரிந்த முகம் இடறுமோ என்ற

பயம் இனி வேண்டாம். சட்டைப் பையிலிருந்து டிக்கட்களை எடுத்துப் பார்த்தான். கடைசி வரிசையில், கோடியில் இரண்டு இருக்கைகள். கவனமாய், ஜாக்கிரதையாய் தேர்ந்தெடுத்து வாங்கியவை. பகல் காட்சி என்பதால், இருபத்தைந்து வாரங்கள் கடந்து விட்ட படமென்பதால் கேட்ட இடத்தில் கிடைத்தது.

உஷா ஓட்டமும் நடையுமாய் இவனை நெருங்கினாள்.

"ஸாரி ரமணி... எக்கச்சக்கமா

நடுக்கம் கண்டிருந்தது. மனதில் கொஞ்சம் பயமாயிருந்தது. நிறைய சந்தோஷமாயிருந்தது. சாயங்காலத்தில் ஒவ்வொரு புஷ்பமாய் பூக்கிற மாதிரி ஒவ்வொரு கனவாய் விரிந்து கொடுத்தது.

பெயர் காட்டிக் கொண்டிருந்தார்கள். கும்மிருட்டில் அவன் தடுமாறிய வேளையில், விளக்கின் வட்டம் அவன் கையில் படிந்து தங்கிற்று.

"டிக்கட்டை இப்படிக் காட்டுங்க..."

காட்டினான்.



மாட்டிக்கிட்டேன்... கௌம்பறச்சயே பாட்டி மடக்கிட்டாங்க..எங்க ஏதுன்னு.. பஸ்ஸில இந்த பையன் வேற... ரொம்ப காக்க வச்சுட்டேனா..."

"பரவாயில்ல... வா, உள்ள போலாம்..."

அவன் முன்னால் நடந்தான். அவள் கொஞ்சமாய் திரும்பி சுற்றிலும் பார்வையை அலைய விட்டுப் பிறகு அவனைத் தொடர்ந்தாள். உடல் லேசாய்

"இப்படி வாங்க..."

"வா உஷா..."

"பேர் சொல்லாதீங்க..." என்று காதில் கிசுகிசுப்பாய் வந்தது அவள் குரல்.

"கடைசி சீட் ஸார்..."

விளக்கு வட்டம் கொஞ்ச தூரம் அவனைத் தொடர்ந்து சட்டென்று மறைந்து போயிற்று.

மை தடவின இருளில் எதுவும் தெரியவில்லே. நாற்காலி விளிம்புகளில் கையை ஓட்டி, பூ ஸ்பரிசித்த இடங்களில் கையை விலக்கி லேசான ஆட்சேபணை களைப் பொருட்படுத்தாமல் போய் இரண்டில் சாய்ந்து பெருமூச்சு விட்டான். பின்னுல் வந்த அவள் அவன் கால்களில் உராய்ந்து, அவனைக் கடந்து கடைசி இருக்கையில் அமர்ந்தாள்.

''படம் ஆரம்பிச்சுட்டான்... இல்ல...''

''ம்'' என்ருன்.

ஆரம்ப ஏமாற்றங்களைப் புதைத்து விட்டு மனசை சுயநிலைக்குக் கொண்டு வந்து எதிர்வரும் கணங்களில் லயிக்க தயாராஞன்.

''ச்சே...'' என்ருள் உஷா.

''என்ன உஷா...''

''சீட்டை எவஞே கிழிச்சிருக்கான்...தலே சாயற எடத்துல முடி அப்படியே மாட்டிக்குது...''

''இந்த சீட்டுக்கு வரயா...''

''வேணும்... வேணும்... பரவாயில்ல...''

திரைக்காய் கண்களை ஓட்டிஞன். ஏற்கனவே பார்த்த படம். பரிச்சயமான வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருந்தனர். திரையில் பட்டுத் தெறிக்கிற வெளிச்சத்தில் மெல்ல கண் பழக்கப் பட்டுப் போனது. மசமசப்பாய் முன்னுல் உட்கார்ந்திருந்தவர்களின் உருவம் புலப் பட்டது. கண்ணுடி போட்டு, போடாமல் வயதானவர்கள், கல்யாணம் பண்ணி குழந்தையோடு வந்து அவதிப் படுபவர்கள்...விதவிதமாய் மனிதர்கள்.

திரையில் மனசு செல்லாமல் குதி போட்டது.

நிஜமா? இது நிஜமா? இரண்டு மூன்று மாசமாய் பேச்சளவில் அலசி, பரிசீலித்து தயங்கி கடைசியில் ஒரு வழியாய் திட்டம் போட்டு...

இப்பொழுது உண்மையிலேயே உஷா அடுத்த இருக்கையில்.

அவன் மெல்ல கொஞ்சம் போல இடது பக்கம் சரிந்து உட்கார்ந்தான். அவனுடைய முழங்கை அவளுடைய கையில் உரசிற்று. அவள் சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.



## சிலுக்கு ஸ்மிதாவின் மறுபக்கம்

சின்னப்போது சின்னக் க்ளாசில் படிக்கிறபோது சுரேஷ்னு ஒரு பையன் இருந்தான். ரொம்ப அழகா இருப்பான். எனக்கு அந்த வயசிலே அவன் மேலே காதல் வந்ததா இல்லே அன்பா என்னன்னு சொல்லத் தெரியலே. அவனும் நானும் பிரியமா இருந்தோம். அவன் வீட்டுக்கும் என் வீட்டுக்கும் தூரம். நான் ஸ்கூலுக்கு போகலேன்னு அந்தப் பையனும் உள்ளே போக மாட்டான். அந்தப் பையன் ஸ்கூலுக்கு வரலேன்னு நானும் போக மாட்டேன். இதை காதல்னு சொல்லலாமா? என்னன்னு சொல்லலாம். பாசமா? பாசம்னு என்ன

ரமணிக்கு உடலில் உஷ்ணம் ஏறிற்று. அவளது முகம் கொஞ்சமாய் சாய்ந்து பார்க்கிற பார்வையில் உணர்ச்சிகள் அவள் உடலிலும் விளையாடிக் கொண்டிருக்கிறதைத் தெரிவித்தது.

கைப்பிடியில் வைத்திருந்த கையை அகற்றி அவள் கையைத் தேடினான். விரல்களோடு விரல்களைக் கோர்த்துக் கொண்டான். தலையை இடப்புறமாய் சாய்த்து வாயை அவள் தோளுக்கருகில் புதைத்து, "ஐ லவ் யூ..." என்றான்.

அவள் மௌனமாயிருந்தாள். அவளைப் பற்றின அவனது கையை இன்னும் இறுகப் பற்றினாள்.

அவளது பின் கழுத்தில் வியர்வையும், பவுடரும் கலந்து வருகிற வாசனையில் அவன் கிறங்கிப் போய் இன்னும் சரிந்து உட்கார்ந்தான். இடது கையால் அவன் தோளைப் பற்றி உஷா தலையைத் திருப்ப எதிர்வரிசையில் இருந்த குழந்தை 'வீல்' என்று அழலாயிற்று.

ஒரு திடுக்கிடலோடு விலகிக் கொண்டான். விலகிக் கொண்டாள்.

அந்த வரிசையிலிருந்து ஒரு உருவம் குழந்தையோடு எழுந்து கொள்வது தெரிந்தது. குழந்தை விடாமல் வீறிற்று. அதன் தாய் போலும், அதை எடுத்துக் கொண்டு வெளியேறினாள். கதவைத்திறந்ததும் பகல் நேர வெளிச்சம் நேரே பாய்ந்து கண் கூசிற்று. அவன் இன்னும் நன்றாய் விலகி உட்கார்ந்தான்.

'சே...'

நாலும் நாலும் எட்டு ரூபாய் முழுசாய்க் கொடுத்து வந்த படம். வீணாகப் போய் விடும் போல் தோன்றிற்று. கவனத்தை மறுபடிக்கு திரையில் வைத்தான். திரை பிம்பங்கள் அசைந்து, ஒன்றுடன் ஒன்று கை கோர்த்து, ஒன்றுடன் ஒன்று உடலை உரசிக் கொண்டு...

கொடுத்து வைத்தவர்கள் என்று ரமணிக்குத் தோன்றிற்று. காமிரா மேன், டைரக்டர், அவன் இவன் என்று ஆயிரம் பேர் பார்க்கிற போது கொஞ்சம் கூட கவலைப்படாமல் இஷ்டப்படி இடித்துக் கொள்வதும் உரசிக் கொள்வதும்... இங்கு ஒரு சிறு அசைவு கூட அத்தனை சந்தோஷத்தையும் பொசுக்கி விடுகிறது. மனம் படியாத திரையில்

காதல் இல்லையா? அன்பா? அன்புன்னு காதல் கிடையாதா? சரி அதை என்ன சொல்லணும்னு தெரியாது. நாங்க ஒரு நாள் பார்த்துக் கொள்ளலைன்னு இருக்க முடியாது. எப்போதும் எங்க வீட்டில் எது செஞ்சாலும் யாரும் பார்க்காம அவனுக்குக் குடுப்பேன் அந்த பையனும் எனக்குக் குடுப்பான். நான்-அவன் ரெண்டு பேரும் டியூஷன் படிச்சோம். படிச்சோம் என்ன? படிக்க மாட்டோம். ஒருத்தரை ஒருத்தர்பார்த்துகிட்டே இருப்போம். இதை என்ன சொல்லணும். சின்னப்போது என்ன காதல். ஜஸ்ட் நட்பு. எனக்கு ஒரு வாட்டி டைபாய்டு வந்தது. 21 நாள் ஸ்கூலுக்குப் போகலே. அந்தப் பையன் கூட ஸ்கூலுக்குள்ளவே போகலியே... அதற்கப்புறம் வீட்டிலே டீச்சர் சொல்லி ஏன் ஸ்கூலுக்கு போகலன்னு விசாரிச்சப்ப, 'இல்லே விஜி வரலை (என் ரியல் நேம் விஜயா) அதனாலதான் போகலே' அப்படின்னு சொல்லிட்டு உட்கார்ந்துக்கிட்டிருக்கான். என் வீட்டுக்கு வந்தா யாராலும் திட்டுவாங்கன்னும் பயந்திருக்கான். எனக்கு ஜுரம் போகறவரைக்கும் அவன் ஸ்கூலுக்கே போகலே.

அப்புறம் ஒரு நாளைக்கு—எதுக்குன்னு இப்போ நினைவில்லை-சண்டை போட்டோம். மூணு நாளா பேசிக்கலே. அந்த மூணு நாளும் அவன் சாப்பிடவே இல்லே. தெரிஞ்சு அவனிடம் மன்னிப்பு கேட்டேன். கொஞ்ச நாளில் மாத்தி போயிட்டாங்க. இப்போ எப்படி இருக்கிறானோ... கிறானோ தெரியலே. ஒரு வேளை நாங்க பிரியாம இருந்திருந்தா என்ன ஆகி இருக்கும்? நிஜமா காதலாகி இருக்குமா? இப்போ அவனுக்கு...கல்யாணமாகி பசங்க இருக்கலாம். எங்கே இருக்காங்கன்னு தெரியலே.

பேட்டி : பொன்-ஜெயந்தன்
படம் : ரவி

வகுப்பறையில் வாத்தியார் கேட்டார்.

'படைப்பவன் பிரும்மா... அழிப்பவன் சிவன் — இது வரலாறு.' இதை சில உதாரணங்களைக் காட்டி நிரூபி என...

படைப்பவன் பிரும்மா என்பதற்கு உதாரணம் காட்ட முடியாமல், அழிப்பவன் சிவன் என்பதற்கு மட்டும் காரணத்தை அந்த மாணவன் கூறினான்.

"ஸார், யுத்தத்தில் மனிதரை கொல்ல பயன்படும் ராக்கெட், அணுகுண்டு, துப்பாக்கித் தோட்டாக்களை நேராக நிறுத்திப் பாருங்கள் சிவலிங்கம் போலவே தெரியும்."

வாத்தியார் தலையில் கைவைத்துக் கொண்டு அமர்ந்து விட்டார்.

—சாந்திப்பிரியா

இன்னும் கொஞ்ச நேரம் பார்வையை மட்டும் உரச விட்டு, மெல்ல மனம் பழைய நிலைக்கு திரும்ப, மெதுவாய் அவள் பக்கம் திரும்பி அவள் கையைப் பிடிக்கையில் பளீரென்று விளக்குகள் எரிய அவன் ஒரு கணம் ஆடிப் போனான்.

இடைவேளை!

சட்டென்று அவள் கையை விடுத்து எழுந்து நின்றான்.

"வெளில போலாம் வரியா...?"

"வேணும்... யாராவது பாத்துத் தொலைப்பாங்க..."

அவன் சுற்றிலும் பார்வையை ஓட்டினான். நிறைய இருக்கைகள் காலியாகி விட்டிருந்தன.

"வா உஷா..."

"வேணும் ரமணி..."

"இங்க கோன் ஐஸ்க்ரீம் ரொம்ப நல்லாருக்கும் உஷா..."

அவன் மனதை புண்படுத்த வேண்டாமென்று நினைத்தாளோ என்னவோ அவள், "சரி நீங்க முன்னால போங்க... நான் பின்னாடியே வரேன்..." என்றாள். அவன் இரண்டு ஐஸ்க்ரீம்களை வாங்கிக் கொண்டு காத்திருந்தான். அவள் வெளியே வந்ததும் ஒன்றை அவளிடம் நீட்டி சற்று ஒதுக்குப்புறமா நகர்ந்தான்.

"ஸார்... ஸார்... மீதி சில்லறை வாங்கலீங்களே..."

சட்டென்று ஒருகூச்சம் வந்து அவனை சூழ்ந்தது. சுற்றி இருந்தவர்கள் கணநேரம் சுவாரஸ்யம் தட்டி அவனை பார்க்க ஆரம்பித்த வேளையில் சில்லறை வாங்கி முகம் திருப்பிக் கொண்டு அவளை மறைக்கிற மாதிரி நின்று கொண்டான்.

உஷா மௌனமாய் சாப்பிட்டு விட்டு கையைத் துடைத்துக் கொண்டாள்.

"உள்ள போலாமா..."

இடைவேளைக்குப் பிறகு கால இருக்கைகளில் சௌகரியம் கருதி சில இடமாற்றங்கள் நடந்திருந்தன. ரமணிக்கு இந்த புறம் கொஞ்சம் வய தான நரைத்த தலை உட்கார்ந்திருந்தது. உஷாவின் கழுத்தில் மாங்கல்யத்தைத் தேடி, காணாமல் ஒரு யோசனையுடன் ரமணியையும் அவர் பார்த்து சந்தேகக் கண்களை சுருக்குகையில் விளக்கணைந்து படம் தொடர்ந்தது. ரமணி மிக சங்கடமாய் உணர்ந்தான். அசையாமல் நேர் செங்குத்தாய் இருக்கையில் அமர்ந்து படத்தில் ஒரு கணம், பக்கத்து மனிதர் கவனத்தில் ஒரு கணம் என்று பார்வை பந்தாடிற்று.

"ஹேய்... என்ன படத்தில் மூழ்கிட்டீங்களா" என்று கிசுகிசுப்பாய்க் கேட்டு உஷா அவன் இடது கையைத் தட்டினாள்.

"ம்...?" என்று அந்த சாக்கில் அவள் புறம் தலை சாய்த்தான் ரமணி. பிரதிபலித்து பிரகாசமும், மங்கலுமாய் ஜாலம் செய்கிற ஒளியில் அவளது கன்ன மேடுகள் செழிப்பாய் அண்மையில் கிளர்ச்சி செய்தன. இடது கையை மெல்ல உயர்த்தி அங்கு அவன் வருடிக் கொடுத்தான். பின் மெல்ல இறங்கி அவள் தோளில் கை படிந்தது. உஷாவின் உடல் சிலிர்த்துக் கொடுத்தது. அப்படியே அவள் கையை அழுந்த வருடுகையில் நெல் நாற்று மாதிரி உரோமம் விறைப்பு கொண்டது. அவள் கையை அழுந்தப் பற்றி கொஞ்சம் விளிம்பு மீற விரல் நுனியில் அவள் மார்பு பட்டது. மிருதுவாய், பூ மாதிரி கொஞ்சம் கடினமாய் ஈரம் ஊறிய பஞ்சுருண்டை மாதிரி உஷா

கண்களை மூடிக் கொண்டு அவன் கையைப் பற்றி விலக்க, அவன் பிடிவாதமாய் அவள் விரல்களைக் கிள்ளி விரல் இடைவெளியில் ஊடுருவி மறுபடியும் மறுபடியும் வருடிக் கொடுக்க...

"தூ..."

சடாரென்று விலகிக் கொண்டான். பக்கத்து நரைத்த தலைதான் துப்பியிருந்தது.

"படம் எடுக்கருங்களாம் படம். வெவஸ்தை வேண்டாம்... ஆன்னு ஊன்னு அவளை அவன் மோந்து பாக்கறதும், அவன் மேல அவ விழுந்து புரள்றதும்... ச்சே..."

"ஷ்...ஷ்..." என்று ஆட்சேப சீறல்களும் உடன் எழுந்தன.

ரமணிக்கு செவிட்டில் அறைந்த மாதிரி இருந்தது. குறி பார்த்து அடிவயிற்றில் ஓங்கிக் குத்தினாற்போலிருந்தது. சட்டென்று உடலின் உஷ்ணம் வடிந்து இறங்கின மாதிரி தோன்றிற்று.

உஷாவும் மிக அதிர்ந்து போயிருந்தாள். படத்தில் கவனம் பாயவில்லை. திடீரென்று அசதியாய் இருந்தது. பஞ்சு மெத்தையில் உருளப் போய் முள் செடியில் சிக்கினாற்போல மனம் வலுத்தது. அஸ்திவாரம் போடு முன்னரே கோட்டையைத் தகர்த்து எறிந்த மாதிரி, சொப்பன மொட்டுக்கள் மலருமுன் கிள்ளி எறிந்த மாதிரி ஏமாற்றம் தட்டிற்று.

"போயிடலாம் வாங்க... எனக்கு படம்பிடிக்கலே..பயமாயிருக்கு.."

சடக்கென்று ரமணி எழுந்து கொண்டான். இருளில் சரசரவென்று சாரை மாதிரி வெளியேறினான். உஷாவும் தொடர்ந்தாள்.

சட்டென்று எதிர்ப்பட்ட வெய்யிலில் கண் சுருங்கிற்று. நெற்றியின் குறுக்காய் கை வைத்து தலை தூக்கி ராட்சஸ பேனர்களை பார்த்தான். வந்த பரிசுகளையெல்லாம் விளம்பரம் பேசி இன்னும் காசு தேடுகிற அந்த படம் அவனுக்கு எரிச்சலையே தந்தது.

ரமணி கொட்டகையை விட்டு வெளியேறினான்.

"படம் நல்லாயிருக்குன்னு இவ்ளோ பேர் சொல்றாங்க... எனக்கு கொஞ்சங்கூட பிடிக்கலே..." என்றாள் உஷா.

"ம்... எனக்குந்தான்..."

அவன் முகத்தின் ஏமாற்றம் அவள் மனதில் குற்ற உணர்வைத் தூண்டியிருக்க வேண்டும்.

"வேற ஒரு நல்ல படமா பாத்து, இன்னொரு நாளைக்குப் போலாம்.. என்ன சொல்றீங்க ..?"

அவன் வெறுமையாய் சிரித்தான்.

"இந்தப்படம் 25 வாரங்கள் எப்படி ஓடுது?"

அவன் மனதில் பல ரமணிகளும், பல உஷாக்களும் வந்து போனார்கள்.

## ஓடுங்கள்.... ஆவிகளே!



படத்திலிருப்பவர்கள் ஸ்விட்சர்லாந்தைச் சார்ந்த ஒரு கிராமத்தினர் (ஆர்போல்ட்ஸ்வில்) வருடத்திற்கு ஒரு முறை இரவில் தலையில் நீண்ட தொப்பி அணிந்து மற்றும் கழுத்தில் பெரிய மணியையும் அணிந்து கொண்டு காதை யடைப்பது போல் மணியடித்துக் கொண்டு ஊர் முழுவதும் வலம் வருகின்றனர். ஊரில் உள்ள தீய சக்தி ஆவிகளை விரட்டத்தான் இப்படி செய்கிறார்களாம்...!

—ராஜேஸ்வரி

ஆதாரம்: வீக் என்ட்

# ஓ பனித்துளிகளே!

முல்லை இராதா

ஓ பனித்துளிகளே!
உங்களுக்குத்தான்
எத்தனை ஆசைகள்?
ஆயிரங் கோடிப் பிறவிகள் எடுத்தும்
ஆசை தீராத ஆசை...!

அழகான மலரிதழ்களை
ஆயிரமுறை முத்தமிட்டும்
ஆலிங்கனம் செய்தும்;
அடங்காத தாகத்தால்
ஆராதனைப் பூக்களையும்
'இச்'சிட்டு நனைத்து
களங்கப்படுத்தி விடுகிறீர்களே!

அனைத்து ஆத்மாவின்
உள்ளங் குளிர-எண்ணமினிக்க
எல்லா மலர்களையும்
முத்தமிட்டு, நித்த நித்தம்
மடிந்து மறைந்து போகும்
மாணிக்க முத்துக்களே!
—உங்களின்
மேனிக்கு அடிமையாகி-தங்களின்
மென்மையான உடலை
களங்கப்படுத்திக் கொள்ளும்-அந்த
காலைப் பூக்கள் அன்றுடம்
அழுதழுது சிவந்து விடுகின்றனவே
அப்போதும் உங்களின்
மோகம் தணிவதில்லையா?

ஓ பனித்துளிகளே!
பார்த்தீர்களா அந்தப் பாவப்பட்ட
பாசமலர்களை!
பருவத்தின் வாசம்
பகலவனின் ஒளியினை
பார்த்து ரசிக்கு முன்னே —உங்களின்
பார்வை பட்டுப் பாழாகி விடும்
பரிதாபத்தை!
ஓ...பனித்துளிகளே...





"வாண்ணு."

திண்ணையில் உட்கார்ந்து புடைத்துக் கொண்டிருந்த மாமியார் யாரை வரவேற்கிருள் என்று கதவு சந்து வழியே எட்டிப் பார்த்தாள் சரோஜா.

சென்னியப்பன். நீலம்பாளையத்திலிருந்து வந்திருக்கிருர்.

"உக்காரு. தங்கையா, கண்ணம்மா எல்லாரும் நல்லாருக்கருங்களா?" முறத்தை ஓரமாக ஒதுக்கி வைத்து விட்டுக் கேட்டாள் பார்வதி. "சரோசா, சென்னியண்ணன் வந்திருக்குது. சக்கரைக் காப்பி வெய்யி."

அவர்கள் வழக்கமாகக் குடிப்பது வெல்லக் காப்பிதான். விசேஷ நாட்களில் மட்டும்தான் சர்க்கரைக் காப்பி.

"எல்லாரும் நல்லாயிருக்காங்க" மேல் துண்டால் திண்ணையிலிருந்த தூசியைத் தட்டி விட்டு உட்கார்ந்தார் சென்னியப்பன். "கண்ணம்மா பையனுக்கு முடியெறக்கிக் காது குத்தரோம். வர்ற நாத்துக்கௌமை. பேரூர் கோயில்ல. அதுக்கு சொல்லிட்டுப் போகலாம்னுதான் வந்தேன்."

சரோஜாவுக்கு 'திக்' கென்றது. போச்சு, இனி குறைந்தது அரை மணி நேரம் அவள் மாமியார் வாயில் அரைபட வேண்டும். குழந்தை பிறந்த சேதி, பேர் வைக்கும் சேதி எதுவும் அந்த வீட்டுக்கு வந்து விடக் கூடாது. உடனே பார்வதி, கல்யாணமாகி ஐந்து வருஷம் ஆகியும் இன்னும் வயிற்றில் 'பூச்சி பொட்டு' இல்லாமலிருக்கும் தன் மருமகளின் அவலத்தைப் புலம்பி, தெரிந்த நாட்டுப் பாடல்களைச் சொல்லி, போன ஜென்மத்தில் என்ன பாவம் செய்திருந்தால் இப்படி குழந்தை யில்லாமல் போகும் என்று விளக்கி...

"கடவுள் என்னிக்குக் கண்ணத் தொறந்து உன்ற கலியத் தீப்பாரோ?" என்று அடியெடுத்துக் கொடுத்தார் சென்னியப்பன்.

"அஞ்சு வருஷம் ஆச்சு" மாமியாரின் பெருமூச்சு துல்லியமாகக் கேட்டது சரோஜாவுக்கு.

தொடர்ந்து—

"வட்டிலிலே போட்ட சோறு
வாரித்திங்கப் புள்ளையில்லே

# வைக்கோல் கன்றுக்குட்டி

## ஜெனமேஜயன்

வீதியிலே மண்ணெடுத்து
வெளையாடப் புள்ளையில்லே"

என்று இசையோடு பாடினுள்.

காப்பி எடுத்துக் கொண்டு வெளியே வந்த போது மெல்லிய குரலில் "உங்கிட்ட சொல்றதுக்கு என்னண்ணு, ஒரு ரோசனை பண்ணி வெச்சிருக்கறேன், கொமாரசாமியும் செரீன்னுட்டான்..." என்று மாமியார் கிசுகிசுப்பது கேட்டது சரோஜாவுக்கு. அவளைப் பார்த்ததும் சட்டென நிறுத்திக் கொண்டாள்.

"அப்ப, நாம் பொறப்படட்டுமா? வடக்கு வளவுக்குப் போய் மாரப்பன் ஊட்டுக்குச் சொல்லோணும்" சென்னியப்பன் புறப்பட்டார்.

சரோஜா நெற்றியைச் சுருக்கி யோசித்தாள். மாமியார் என்ன 'ரோசனை' செய்திருப்பாள்? என்னப் பார்த்ததும் சட்டென நிறுத்திக் கொண்டாளே...

ஒரு வேளை அப்படியிருக்குமோ?

அடுத்த கணமே அடுப்பில் கொதிக்கும் உலையைப் போலவே அவள் மனமும் கொதிக்க ஆரம்பித்தது.

பார்வதியின் பேரப்பிள்ளை ஆசை அதீதமானது. தன் தம்பி மகள் சரஸாவைத்தான் மருமகளாகக்கொண்டு வர ஆசைப்பட்டு திட்டம் போட்டாள் பார்வதி. குமாரசாமியின் ஆசை, கண்ணபிரான் மில்லில் வேலை செய்யும் சரோஜாவின் மீது இருப்பதை அறிந்தபோது

ஏமாற்றமாகப் போய்விட்டது. ஆனால் குமாரசாமி மிகவும் பிடிவாதமாக இருக்கவே, 'செரிடா கொமாரு, உன்ற ஆசைப்படியே செஞ்சுக்க. ஆரு வந்தாலும் எனக்கு ஒரு பேரணைப் பெத்துக் குடுத்துட்டாப் போதும்' என்று ஒப்புக் கொண்டாள்.

கல்யாணமான அடுத்த மாதமே, சரோஜா புழக்கடையில் ஒதுங்கி 'உட்கார்ந்த' போது ஏமாற்றமாக இருந்தது பார்வதிக்கு. தொட்டில் கட்டக் கொக்கி கூட மாட்டி வைத்தாள்.

ஒவ்வொரு மாதமும் தள்ளிப் போகப் போக அவளுடைய ஏமாற்றம் ஏக்கமாக மாறிற்று. ஏக்கம் விரக்திய உருவெடுத்தது.

சரோஜா மீதிருந்த பிரிய மாறி,வெறுப்பு கள்ளிப் புதராய் வளர்ந் விட்டது.

''கண்ணாலங் கட்ன மறு நா விருந்தே அவ அவ மாசம் எண்ணிக்க இவ என்னடாண்ணா, மாசந்தவறும பொடக்காளில போய் உட்காந்துக்கற என்று சரோஜா காதுபட முணுமுணு பாள்.

இதுபோல் எத்தனையோ நிகழ்ச்சிகள்.



சரோஜாவுக்கு மாமியாரின் ஆசையோ, அதிலுள்ள நியாயமோ புரியாமலில்லை. ஆனால் அதற்காக வருத்தப்படலாமே தவிர, தன் மீது கோபிப்பது என்ன நியாயம் என்று தான் அவளுக்குப் புரியவில்லை. குழந்தை உண்டாகாமலிருக்க—மருந்து, மாத்திரை சாப்பிடுகிறாளா? உண்டான குழந்தையை அழித்து விட்டாளா? அல்லது புருஷனிடம் ஆசையாக இல்லையா?

...அவளுக்கு மட்டும் குழந்தை பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை இல்லையா?

தன்னுடைய இந்த ஆசையும், தவிப்பும் ஏன் இந்த ஜென்மங்களுக்குப் புரியவில்லை என்பதுதான் சரோஜாவுக்கு விளங்காத புதிர்.

மறுநாள் மதியச் சாப்பாட்டின் போது மில்லின் காம்பௌண்டு சுவர் ஓரமாகப் புங்கமரத்து நிழலுக்குத் தெய்வாத்தாளுடன் போனபோதுதான் மாமியாரின் 'ரோசனை' தெரிந்தது சரோஜாவுக்கு. அவள் சந்தேகப்பட்டது சரிதான்.

"எங்கிட்ட வெசயத்தைச்



சொல்லவே இல்லையே" என்று ஆரம்பித்தாள் தெய்வாத்தா.

"என்ன வெசயம்?"

"உம் புருசன் எளைய குடி கட்டப் போறதைத்தான்"

"என்னது நெசமாவா? ஆரு சொன்னா?" — படபடத்தாள் சரோஜா

"இதென்னடி கூத்து? உனக்கு வெசயமே தெரியாதா? சித்ரா மில்லில வேலை செய்யுதே தொளசி, அவதானும். அவ அப்பாரு கூட சம்மதிச்சுட்டாராம்"

துளசியை சரோஜாவுக்குத் தெரியும். சின்னப் பெண். மாநிறம். லட்சணமாக இருப்பாள்.

சரோஜா வாயடைத்து நின்றாள். உடம்பெல்லாம் 'திகு திகு' வென்று எரிந்தது.

"கவலைப்படாதே சரோ. இளைய குடி கட்றது ஊரு உலகத்துல நடக்காததில்ல. தொளசியும் நல்ல பொண்ணு தான்..." அனுதாபத்துடன் சமாதானத்தைக் கலந்தாள் தெய்வாத்தா.

"அதுக்கில்ல தெய்வா. இப்பவே அந்த ஊட்ல நான் மூலைல ஒதுங்கிக் கெடக்கறேன். எளையகுடி வந்துட்டா சீமாத்துக் குச்சிய விடக் கேவலமாப் போயிருவேன்."

கொஞ்ச நாளாகவே குமாரசாமியின் பிரியம் குறைந்து வருவதைக் கவனித்திருந்தாள் சரோஜா. அதன் காரணம் இப்போதுதான் புரிந்தது அவளுக்கு. இப்பவே அப்படி என்றால் இளையதாரம் வந்த பிறகு எப்படி அலட்சியப்படுத்துவான்?

இருதாரத் தடைச் சட்டமெல்லாம் அவர்கள் அறியாதது. 'குழந்தையில்லை' என்பது இரண்டாந்தாரம் கட்ட ஒரு சுலபமான முகாந்திரம். பஞ்சாயத்தாரிடம் சொல்லிவிட்டால் போதும். அப்பீல் கிடையாது.

மில் சைரன் அழைத்தது. சோறு கொண்டு வந்திருந்த 'தூக்கு போசி'யைத் திறக்காமலே கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்தாள் சரோஜா.

குமாரசாமி சாப்பிட்ட தட்டைக் கழுவி ஜலதாரையில் சிந்தி விட்டு வந்து எதிரில் உட்கார்ந்தாள் சரோஜா. மாமியார் வெளியே போயிருந்தாள்.

"ஏனுங்க, நாங் கேள்விப்பட்டது நெசந்தானா?"

"என்ன?" என்பது போல் குமாரசாமி புருவத்தை உயர்த்தினான்.

"நீங்க தொளசிய எளையகுடியாக் கட்டறதா..."

"அஞ்சு வருசமாச்சு. புள்ளை குட்டியில்லை. என்ன பண்ணச் சொல்றே?"

கொஞ்சம் தயங்கிச் சொன்னாள் சரோஜா. "மதுக்கரையில குடுத்திருக்கற எங்க பெரியம்மா பொண்ணுக்கு நாலாவது கொழந்தை பொறந்திருக்குது. ஆம்பிளப் பையன் சுருட்ட முடியோட செவச்செவன்னு அளகா இருக்கும். அதை நாம எடுத்து வளத்தா

என்னங்க?''

''என்னலே சொன்னே? எடுத்து வளர்த்தறதா?'' வெடுக்கென்று உள்ளே நுழைந்தாள் பார்வதி. சரோஜா பேசியதை நடைக் கதவோரம் நின்று கேட்டு விட்டாள்.

சரோஜா எழுந்து திண்ணைக் காலில் சாய்ந்து நின்று கொண்டாள்.

''ஊரார் புள்ளைய எடுத்து வளத்தா நம்ம வம்சம் தழைக்குமா?'' உரத்த குரலில் கேட்டாள்.'' ''என்னட மகனுக்குப் பொறக்கற கொளந்தயத்தான் நான் கொஞ்சோணும். ஊரான் புள்ளை எனக்கென்னத்துக்கு! தொட மாட்டேன். பெரிய கவுண்டர் வந்ததும் பஞ்சாயத்துல திங்கக் கௌமையே சொல்லிடப் போறேன்''

சரோஜாவின் கண்களில் பெருகிய நீர் திண்ணைக் காலில் வழிந்து தரையில் படர்ந்தது.

வேர்வையைத் துடைக்கக் கூட நினைக்காமல் நடந்து கொண்டிருந்தாள் சரோஜா. அம்மாவிடம் போய் தன் குறையைச் சொல்லியழுதால்தான் கொஞ்சம் ஆறும் போலிருந்ததால் புறப் பட்டு விட்டாள். இன்னும் ரெண்டு கல் தொலைவு நடக்கவேண்டும்.

சரோஜா வீட்டையடைவதற்கும், அவள் அம்மா சந்தையிலிருந்து திரும்புவதற்கும் சரியாக இருந்தது.

''வாம்மா சரோசா'' சந்தைக் கூடையைத் திண்ணையில் இறக்கி வைத்த வேலம்மா மகளுடைய முகத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டாள். ''ஏம்மா ஒரு மாதிரியா இருக்கறே?'' என்று கவலையுடன் கேட்டாள்.

''ஒண்ணுமில்லேம்மா. சும்மா தான்''

''ரோசாப்பூ கணக்கா இருக்குமே உம் மொகம். இப்படி வாடிக்கெடக்குதே. என்னம்மா வெசயம்?''

அதுக்கு மேலும் சரோஜாவால் கட்டுப்படுத்த முடியவில்லை. கொட்டித் தீர்த்து விட்டாள்.

வெகு நேரம் இருவரும் மௌனத்தில் கரைந்தார்கள்.

''வேலம்மா, உன்னை நர்ஸம்மா வரச் சொன்னாங்க'' என்று பக்கத்து வீட்டுப் பையன் வந்து சொன்னபோது தான் இருட்டி விட்டதையே உணர்ந்



விழிகளுக்குள்ளே வெள்ளங்களென்ன
விளையாட வந்த உள்ளங்களென்ன?
பருவங்கள் தேடும் சுப மங்கலங்கள்
பாலாபிஷேகம் சுகசங்கமங்கள்!

தார்கள்.

வேலம்மா எழுந்தாள். ''நானு வரேம்மா'' என்று சரோஜாவும் கிளம் னாள். கல்யாணத்துக்கு முன் அவளு நர்ஸ் தங்கத்தின் வீட்டில் வேலை செ திருக்கிறாள். நர்ஸுக்கு சரோஜா மீ ஒரு தனிப் பிரியம் உண்டு.

''அட, சரோஜாவா அதுதானே பார்த்தேன். மகளைப் பார்த் சந்தோஷத்திலதான் வேலம்ம வேலையையே மறந்துட்டாளா?'' என்ற தங்கம்.

''சந்தோஷமில்லம்மா... சங்கட தான். சரோசா பொளப்பு அம்பலத்து இருக்குது.''

''என்னடி சரோஜா? உன்



—கார்த்திக்-ஜீஜீ

'நினைவெல்லாம் நித்யா'

புருஷன் கூடத் தகருரா?"

எல்லாவற்றையும் சொன்ஞள் சரோஜா.

"அப்படியா விஷயம்? ஆமாம் உன் கிட்டத்தான் குறையிருக்குதுன்னு அவங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் நர்ஸ். "உன் புருஷ னிடம் குறையிருந்தால்?"

அவர்கள் புரியாமல் விழித் தார்கள்.

"...இத பாரும்மா. பயிர் விளையற துக்கு நிலம் செழுமையா இருந்தால் மட்டும் போதாது. விதையும் நல்லா இருக்கணும்... இல்லையா? அது போல் தான், குழந்தை பிறக்கறதுக்குப் பெஞ் சாதியிடம் குறையில்லாம இருந்தால் மட்டும் போதாது. புருஷனிடமும் குறை யிருக்கக் கூடாது. ஆண் மலடும் உண்டு தெரியுமா...?"

சற்று யோசனைக்குப் பின் சொன்ஞள் தங்கம். "நாளைக்கு மத்தி யானம் எனக்கு டூட்டி. நீ டவுன் ஆஸ்பத்திரிக்கு வா. நான் டாக்டரிடம் சொல்லி டெஸ்ட் பண்ணச் சொல்றேன். அப்புறம் பார்க்கலாம்."

மறு நாள் மாலை. 'டெஸ்ட்' எல்லாம் முடிந்து ஆஸ்பத்திரி வராந் தாவில் சரோஜாவும், வேலம்மாவும் காத்துக் கொண்டிருந்தபோது— தங்கம் வந்தாள், சிரித்தபடி.

"நான் சொன்னதுதான் சரி. சரோஜாவிடம் ஒரு குறையுமில்லை. பத்துப் பிள்ளை பெத்துக்கலாம். அஞ்சு வருஷமாக் குழந்தையில்லேன்ஞ, உன் புருஷங்கிட்டத்தான் கோளாறு. உன் புருஷன்தான் மலடாக இருக்கணும். டாக்டர் சொன்னதா நீ போய்ச்சொல்லு. வேணும்ஞ நானே வரேன் அப்புறம். சரியா?"

'தான் மலடியில்லை' என்ற நினைப்பு கற்கண்டாக இனித்தது சரோஜாவுக்கு. சுற்றி சுற்றிக் கும்மியடிக்க வேண்டும் போல் ஒரு உற்சாகம்.

வேகு வேகென்று நடந்து கொண்டிருந்தாள் சரோஜா.

இப்போது அவள் மனதில் ஒரு ஆக்ரோஷம் பொங்கியிருந்தது. தன் உணர்வுகளை மதிக்காமல், செய்யாத குற்றத்துக்கு தண்டிக்க முயன்றவர்களைப் பழி வாங்க வேண்டும் என்ற ஒரு துடிப்பு இருந்தது.

என்ன ஆஞலும் சரி. உடைத்துச் சொல்லிவிட வேண்டும். 'டாக்டர்கிட்ட காட்டி பரிசோதிக்கலாம். புள்ளை பொறக் காததுக்கு நாந்தான் காரணம்னு சொல் லிட்டா நெரந்தரமாவே வேணும்ஞலும் பிரிஞ்சு போயிடறேன்'னு சொல்லணும். கொளந்தையில்லேன்னதும் உடனே ரெண்டாந்தாரம் கட்டும் வளக்கத்தைத் தொரத்தோணும்!'

மாமியார் கிழவி மேல் அவளுக்கு அடங்காத ஆத்திரம் பொங்கி வந்தது. இரக்கமில்லாத ஜென்மம். எத்தனை பேச்சுப் பேசி விட்டாள்.

நர்ஸம்மாவை மனதார வாழ்த்



திருமணத்திற்குப் பிறகு.

முதல் வருடம் கணவன் பேச மனைவி சிரிக்கிருள்.

இரண்டாம் வருடம் மனைவி பேச கணவன் சிரிக்கிருன்.

மூன்ரும் வருடம் அவர்கள் இருவரும் பேச அக்கம் பக்கத்தவர் சிரிக்கிருர்கள்.



முதல் பைத்தியம்:

இன்னிக்கு வேற ஒரு புது டாக்ட வரப் போருர்.

இரண்டாம் பைத்தியம்:

முன்னே இருந்த டாக்டர்,குணமா வீட்டுக்குப் போய் விட்டா அதனுல்தான்.

திருள். அந்தம்மா இல்லாவிட்டால் வீணுக அந்த சின்னப் பெண் துளசியின் வாழ்வும் கருகியிருக்குமே.

கண்மாய்க் கரைக்கு வந்த போது மசமசவென்று இருட்டிவிட்டது.

சரோஜா சட்டென்று கொஞ்சம் தயங்கி நின்ருள். எதிரே யாரோ வேகமாக வருவது தெரிந்தது. உற்றுப் பார்த்தாள். யாரோ பெண்... அட,துளசி போல் தெரிகிறதே.

துளசியேதான். சரோஜாவைப் பார்த்ததும் தயங்கி ஒதுங்க முயன்ருள். முகம் பயத்தால் வெளுத்து விட்டது.

"என்ன தொளசி இது? எங்க இந்நேரத்துல, இந்தப் பக்கம்?" திகைப்புடன் கேட்டாள் சரோஜா.

"ஒண்ணுமில்லக்கா. சும்மா தான்" துளசியின் குரலில் நடுக்கம்.

"எதையோ மறைக்கறெ. பயப் படாமச் சொல்லு. என்ன வெசயம்?"

"ஒண்ணுமில்லக்கா... வந்து... அதை எப்படி சொல்றதுண்ணு..." தொடர்ந்து பேசமுடியவில்லே. 'குபுக்' கென்று வாந்தியெடுத்தாள் துளசி.

தாங்கிப் பிடித்துக் கொண் டாள் சரோஜா. விஷயம் புரிந்தது.

"ஏந் தொளசி அப்படியா?...ம்?"

"ஆமாக்கா" விசும்பினுள் துளசி.

"யாருடி உன்ன ஏமாத்துனது?"

"ஏமாத்தலேக்கா"

"பின்னே?"

"எனக்கும் செந்திலுக்கும் ஒ வருசமாப் பளக்கம்."

"செந்திலா? பதினேந்து நாட் களுக்கு முன்ருல் மில்லிலிருந்து வெளியே வரும்போது பஸ்ஸில் அடிபட்டு அதே இடத்தில் நசுங்கிச் செத்துப் போன செந்திலா? அடப்பாவமே"

"ஒரு வருசமா ஒரு தப்பும் நடக்கலே. மாரியம்மன் நோம்பி சாட்டு னப்பதான், அம்மா எல்லாம் டவுனு குப் போனப்ப தப்பு பண்ணிட்டோம் அடுத்த வாரம் பரிசம் போடறேன்ருரு அதுக்குள்ள விதி முடிஞ்சு போச்சு என்ற தலேயெளுத்து அப்படி. இந்த நெலமையிலே நான் எப்படிக்கா உசிரோட இருக்கறது? அவரு கூடவே போயிருக்கோணும். முடியலே."

சற்று நேரம் சரோஜா மௌன மாக யோசித்தாள்.

பட்டாம் பூச்சி போல் படபடக் கும் துளசியின் விழிகளேயும், கபடமற்ற குழந்தை முகத்தையும் ஆராய்ந்தாள். முற்ருத சோளக்கதிர் போல் இருக்கும் இந்தச் சின்னப் பெண் அழிவதா? கூடாது.

ஆதரவாகத் தோள்களேப் பற்றினுள் சரோஜா. "கவலேப்படாதே



"என்னங்க நாய் வாலில் மணி கட்டியிருக்கிங்க?"

"நம்ப நாய் யார் வந்தாலும் குரைக்கவே மாட்டேங்குது. வாலை ஆட்டிக்கிட்டே நிற்கிறது. அதனால் தான்."



எச். எம். டி. கம்பெனியில் மட்டும் திருட்டே நடக்காது.

ஏன்?

அங்கே தான் வாட்ச் பண்ருங்களே!

—அ. கிருஷ்ண சங்கர்

துளசி. நடந்தது நடந்து போச்சு. எம் புருசனுக்கு உன்னை எளைய தாரமாக் கேக்கறது தெரியுமில்ல?"

'தெரியும்' என்று தலையாட்டினுள் துளசி.

"அதுக்கு சம்மதிச்சுரு."

"என்னக்கா சொல்றீங்க?" பதறிப் போனுள் துளசி. "உங்களுக்குப் போட்டியா நான் வரணும்னு நீங்களே கூப்டறதா? வேண்டாங்கா. என்னை உட்டுடுங்க. நான் கண்மாயில் உளுந்துடறேன்."

"யோசிச்சுத்தான் சொல்றேன் தொளசி. கொளந்தை ஆகலையேங்கறது எங்குறை. ஆ'பிடுச்சேங்கறது உங்குறை. ரெண்டையும் நெரவிடலாம்." நடந்ததைச் சொன்னுள் சரோஜா. "அடுத்த வாரமே கல்யாணத்தை வெச்சுடலாம். நாம ஒத்துமையா இருப்போம்."

வெகு நேர யோசனைக்குப் பிறகு தயங்கிக் கேட்டாள் துளசி. "அக்கா இந்த வெசயம்... நா முளுவாம இருக்கேங்கறது..."

"எங்கட்டை வேகறப்ப இந்த ரகசியமும் சேந்து வேகும். அதுவரை வெளில வராது சத்தியம்."

துளசி சம்மதித்தாள். சரோஜாவின் மனம் மிக லேசானது போலிருந்தது.

டாக்டர் சொன்ன உண்மையை இனி மேல் அவள் வெளியிடப் போவதில்லை.

மாமியார் அவளைப் புழக்கடையில் தள்ளுவாள் தான். இனிமேல் அவள் 'சீமாத்துக்குச்சி'யைப் போல் ஒதுக்கப்படுவாள் தான். புருஷனுக்கு அவள் மேல் பிரியம் குறையும்தான். ஆனால் அதைப் பற்றி எல்லாம் சரோஜா கவலைப்படப் போவதில்லை.

இதோ இந்த 'இரண்டு உயிர்'களைக் காப்பாற்றிய திருப்தியில் அவையெல்லாம் துச்சம். துளசியின் வாழ்வுக்காக மலடிப்பட்ட சிலுவையைத் தொடர்ந்து சுமக்க அவள் தயார்.

இருவரும் மெதுவாக நடந்தார்கள்.

வைக்கோல் கன்றுக் குட்டியைத் தன் கன்று என்று நினைத்துப் பசு ஆசையாக நக்கிக் கொடுப்பதைப் போல், 'என் மகனுடை பிள்ளையைத்தான் கொஞ்சுவேன். ஊரான் பிள்ளையைத் தொட மாட்டேன்' என்று சூளுரைத்த மாமியார் கிழவி, செந்திலுக்குப் பிறக்கப் போகும் குழந்தையைத் தன் மகனுக்குப் பிறந்ததாக நினைத்து ஆசையுடனும் பெருமையுடனும் கொஞ்சப் போவதைக் கற்பனை செய்து பார்த்து மெல்லச் சிரித்து கொண்டாள் சரோஜா.



# இரண்டாம் திருஞானசம்பந்தர்!



எழுத, படிக்கவே தெரியாத ஒருநபர், திரைப்படத்திற்குப் பாட்டெழுதிய அதிசயத்தைக் கேட்டதுண்டா? இந்திய திரைப்பட வரலாற்றிலேயே முதன் முதலாக ஒரு படத்தில் இது நிகழ்ந்திருக்கிறது.

படத்தில் இருக்கும் பழனிச்சாமி என்ற இந்த 'கைநாட்டுக் கவிஞர்' ஒரு தமிழ்ப்படத்திற்கு நான்கு பாடல்கள் எழுதியுள்ளார்.

இசைத் தட்டாகவும் அது வெளிவந்து விட்டது.

இப்பாடல்களை எப்படி அவர் எழுத நேர்ந்தது என்று விசாரித்த போது கிடைத்த தகவல் சுவாரஸ்யமானது. பழனிச்சாமிக்கு அப்போது ஒன்பது வயதிருக்கும். அன்று, வீட்டில் அம்மாவுடன் சண்டை. அடிக்கடி நடப்பது தான். ஆனாலும் அன்றைக்குக் கொஞ்சம் 'ஓவர்!'. கோபத்தில் வீட்டை விட்டுக் கிளம்பி, ஊர்க் கோடியில் இருந்த அம்மன் கோவிலில் வந்து படுத்து விட்டார்.

காலையில் எழுந்து பார்த்த போது, உடம்பில் ஆங்காங்கே சிறுசிறு ரத்தக் காயங்கள்! ஆனால் எந்தக் காயமும் வலிக்கவே இல்லை. வீட்டிலுள்ளவர்கள், காயங்களுக்கான காரணம் கேட்டபோது பழனிச்சாமியால் பதில் சொல்ல முடியவில்லை. ஏதேதோ சைகை செய்தான். ஆம். பழனிச்சாமிதான் ஊமைச் சிறுவனாயிற்றே!

மறுநாள் காலை. தன்னந்தனியாக அம்மன் கோவில் வந்தமர்ந்து கொண்டு, பெருங்குரலெடுத்துப் பாட ஆரம்பித்தான். பக்திப் பாடல்தான். நேற்றுவரை 'அம்மா' என்று கூடச் சொல்லத் தெரியாத ஊமைச் சிறுவனுக்கு திடீரென்று எப்படி பாட வந்தது? செய்தி அறிந்து கிராமமே திரண்டு விட்டது.

அன்று பாட ஆரம்பித்த சிறுவன் பழனிச்சாமி தினம் ஒரு பாடலாய் அம்மன் மீது பாடிக் கொண்டே இருந்தார்.

சேலத்தில் படப்பிடிப்பு நடத்திக் கொண்டிருந்த **'நான் சூட்டிய மலர்'** படத்தயாரிப்பாளர், எடப்பாடி கிராமத்திற்கு வந்து பழனிச்சாமியை சந்தித்தார். பாட்டெழுத அழைத்தார்.

"நான் பள்ளிக்கூடமே போனதில்லே. எனக்கு பாட்டு பாடத்தான் வரும். எழுத முடியாதுங்களே..."

"பரவாயில்லை. பாட்டெழுத வேண்டிய சூழ்நிலையைச் சொல்கிறோம். அதுக்குத் தகுந்த மாதிரி நீ பாடு. நாங்கள் எழுதிக் கொள்கிறோம்."

இசை அமைப்பாளர் சந்திரபோஸ் காட்சி அமைப்பைச் சொல்ல, பழனிச்சாமி அதற்கேற்ப பாட, பக்கத்திலிருப்பவர் பாடலை பிரதி எடுக்க...

ஒவ்வொரு பாடலும் ஓ. கே!

பழனிச்சாமி திரைப்பட பாடலாசிரியரானது இப்படித்தான். இப்போது தன் ஊரான எடப்பாடி கிராமத்திலேயே இருக்கிறார் இவர்.

—ஆர்.சி.சம்பத்.

1981-ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்புப்படி இந்தியாவில் மிகவும் வேகமாக வளர்ந்துவரும் நகரம் கர்தாடக மாநிலத்தின் தலைநகர் பெங்களூர் ஆகும்.

—மா. சண்முகம்.

போர்ட்டில் கையெழுத்திட்டு அனுப்பி விட்டார்கள்.

எத்தனை ரூபாய் மதிப்புள்ள பொருளுக்கு எவ்வளவு ரூபாய் வரி போடுவது என்கிற நிர்ணயம் கிடையாது. கஸ்டம்ஸ்காரர்களுக்கு அந்த நிமிஷம் என்ன தோன்றுகிறதோ—அது தான்.

பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருள் கொண்டு வந்த என் நண்பருக்கு 1,500 ரூபாய் வரி. ஆறாயிரம் ரூபாய் மதிப்புள்ளவைகளை மட்டுமே எடுத்து வந்தேன் நான். எனக்கு 2,800 ரூபாய் வரி! எப்படி இருக்கிறது? என் நண்பரே விழுந்து விழுந்து சிரித்தார்.

கஸ்டம்ஸில் 'வரி விதிப்பு' என்பது அவரவர் 'அதிர்ஷ்ட'த்தை பொறுத்ததாம். அநியாயம்!

கஸ்டம்ஸில் கீழ் மட்டத்திலிருந்து மேல் மட்டம் வரை அத்தனை அதிகாரிகளும் பணம் கேட்கிறார்கள். நாம் கொடுக்கிற லஞ்சத்தின் தொகை, கூடக் கூட, வரி விதிப்பின் அளவு குறைந்து கொண்டே வருகிறது."

—என்று அழாத குறையாகப் பேசினார், கப்பலிலிருந்து இறங்கி வந்த ஒரு தஞ்சாவூர் பிரயாணி.

ஏதாவது கேட்டாலோ, அந்த பொருளை எடுக்காதீர்கள் என்று தடுத்தாலோ—வேண்டுமென்றே அக்கிரமமாக வரி விதிக்கிறார்கள். சில பேர் கொண்டு வருகிற பொருளின் மதிப்பை விட, வரியின் தொகை அதிகமாகி விடுகிறது. இதனால் அவர்கள் பொருளையே பெற்றுக் கொள்வதில்லை.

இரண்டு மாதகாலம் கஸ்டம்ஸி


லில்லி



லேயே இருந்து, பிறகு ஏலம் விடப்படுகிறது.

கப்பலைவிட்டு இறங்கியதுமே, தளத்தில் இருக்கிற சுமை தூக்கும் தொழிலாளிகள், 'எந்தெந்த அதிகாரிக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும்' என்பதை 'எடுத்துக்' கூறி, அவரே குறிப்பிட்ட அதிகாரியிடம் அழைத்துச் செல்கிறார். (கேன்வாஸிங்?)

கஸ்டம்ஸின் ஒவ்வொரு அதிகாரிக்கும்—கப்பல் வந்து இறங்குகிற அன்று 7,000 ரூபாயிலிருந்து 10,000 ரூபாய்வரை வருமானம் கிடைக்கிறது.

பயணிகளிடமிருந்து அவர் எடுத்துக் கொள்கிற பொருட்கள் விலை மதிப்புள்ளவை. கொடுக்க மறுப்பவர்களுக்கு மூன்று மடங்கு வரி விதிக்கப் பட்டுவிடும்.

"அப்படித்தான் ஒரு தடவை, என் மாமா ஒருவர் சிங்கப்பூரிலிருந்து வந்தார். அவருடைய பொருள்கள் சிலவற்றை கஸ்டம்ஸில் எடுத்துக் கொண்டார்கள். 'எவ்வளவு வேண்டுமானாலும் வரி போட்டுக்கொள், கவலை இல்லை. என் பொருள் எதையும் தொடாதே!' என்று சொல்லி விட்டார். அவர் கொண்டு வந்த பொருளின் மதிப்பை விட இரண்டு மடங்கு வரி விதித்து விட்டார்கள். அவர் பணக்காரர். வரியை கட்டி விட்டு வந்து விட்டார். எங்களைப் போன்ற ஏழைகளின் கதி?" என்றுகுமுறினார் சமீபத்தில் சிங்கப்பூரிலிருந்து வந்த திரு. ஜெயராமன்.

"நடிகர், நடிகைகளின் வீடுகளில் புகுந்து கறுப்புப் பணத்தை அள்ளி வருகிற இந்த கஸ்டம்ஸ்காரர்கள் ஒவ்வொருவரின் வீட்டிற்குள்ளும் புகுந்தால் கோடி ரூபாய் மதிப்புள்ள அயல்நாட்டுப் பொருள்களை அள்ளி வரலாம். யாரால் முடியும்? அவர்கள் தானே அதைச் செய்கிறவர்கள்!" என்றார் ஒரு அம்மையார்.

கேட்கும் போது நமக்கே மனம் குமுறுகிறது. ஆனால் யார் தட்டிக் கேட்பது?

புகைப்படங்கள்: ஜெய்மோகன்




# கஸ்தூரி பஞ்சு

ஆபீஸிலிருந்து நாலரை மணிக்கெல்லாம் வீடு திரும்பினவரை, ஆச்சரியத்துடன் பார்த்தேன்.

"அட, எப்படி இத்தனை சீக்கிரம் வந்தீர்கள்? ராத்திரி பதினொரு மணிக்கு முன்னால் வரமுடியாது என்று சொல்லிவிட்டுப் போனீர்களே!" என்று என் வியப்பை வார்த்தைகளில் நான் வெளிப்படுத்தினதும் என் கணவர் சிரித்தார்.

"நீதான் ரொம்பவும் குறைப்பட்டுக் கொண்டாயே! வருஷப் பிறப்பன்று கூட இரண்டு பேரும் சேர்ந்து எங்கேயும் போக முடிவதில்லையென்று. அதனால்தான் 'பர்மிஷன்' கேட்டுக் கொண்டு வந்து விட்டேன். உம்... சீக்கிரமாகக் கிளம்பு, பார்க்கலாம்! புதிதாக 'ரிலீஸ்' ஆகியுள்ள படம் ஏதாவது பார்த்துவிட்டு வரலாம்" என்றார்.

உற்சாகத்துடன் உள்ளே ஓடின நான், 'பரபர'வென்று உடை மாற்றிக்கொண்டேன். வெளிக்கொடியில் காயப்போட்டிருந்த துணிகளை உருவிக் கொண்டு வந்து உள்ளே போட்டேன். கொல்லையிலிருந்து வாசல் வரையில், எல்லா ஜன்னல்களையும் சாத்திக் கொண்டு, வாசலைப்பூட்டும்போது மணி ஐந்தடித்து பத்து நிமிடங்களாகியிருந்தன.

"என்னங்க இது, நேற்று வெளியான படங்களுக்கு இத்தனை நேரம் கழித்துப் போனால் டிக்கட் எப்படிக் கிடைக்கும்?" தெருவில் இறங்கி நடந்து கொண்டே என் கணவரிடம் கேட்டேன்.

"எல்லாம் கிடைக்கும் பாரேன்" ரொம்ப நம்பிக்கையுடன் சொன்னார் அவர். நல்லகாலம், பஸ் உடனே கிடைத்துவிட்டது. நாங்கள் தியேட்டருக்குள் நுழையும் போது மணி ஐந்தே கால்.



என்னவிலை" என்று அவசரமாக கேட்டார் இவர்.

"ஒரு டிக்கட் ஆறு ரூபாய்" என்றான் அவன், வாய் கூசாமல். பன்னிரெண்டு ரூபாயை அவனிடம் கொடுத்து விட்டு இரண்டு டிக்கட்டுகளை வாங்கி, பர்ஸினுள் வைத்துக் கொண்டு என்னைத் திரும்பிப் பார்த்த இவர், "பார்த்தியா கௌசி, எப்படியோ டிக்கட் கிடைக்கும்னு சொன்னேனே... பலிச்சுடுத்து பார்" என்று சிரித்துக் கொண்டு சொன்னார்.

என்னால் சிரிக்க முடியவில்லை. அவரே தொடர்ந்து பேசினார். "அவசரமாகக் கிளம்பினதில் காபியைக்கூட ருசித்துக் குடிக்கவில்லை. பக்கத்து ஹோட்டலில் போய் டிபன் காபி சாப்பிட்டு விட்டு நிதானமாக வரலாம். நாம்தான் டிக்கட் வாங்கியாகி விட்டதே!" என்று சொல்லி, பெருமை

# டிக்கெட்... டிக்கெட்

யுடன் அவர் சட்டைப் பாக்கெட்டைத் தொட்டுக் காண்பித்த போது, அதில் பங்கு கொள்ள முடியாமல் என் தலை தானாகவே குனிந்து கொண்டது.

மகாமகக் கூட்டம் போல, தியேட்டர் முழுவதும் ஒரே தலைகள் மயம்.

"அடேயப்பா, இதென்ன இப்படியொரு கூட்டம்?" என்றார் இவர், மலைப்புடன்.

"அதுதான் நான் அப்போதே சொன்னேன்" என்று பதிலளித்த எனக்கு அவரின் ஏமாற்றம் பரிதாபமாக இருந்தது.

"இப்போ என்ன செய்யலாம் கௌசீ?" என்று அவர் கேட்டுக் கொண்டிருந்தபோது எங்களருகில் நிழலாடிற்று. சட்டென்று நிமிர்ந்து பார்த்தேன்.

நீலச்சட்டை போட்ட ஒரு ஆள், மஞ்சள் தாள்களுடன் நின்று கொண்டிருந்தான்.

"2.90 டிக்கட் வேணுங்களா?" என்று அடித்தொண்டையில் அவன் கேட்பதும், "கொடப்பா... கொடு...

அவருக்குச் சரியாக என்னால் சிரித்துப் பேச முடியாமலிருந்ததைப் போல அவருக்குச் சமமாக நடக்க மாட்டாதபடிக்கு, என் மனதில் கவிழ்ந்து நின்ற சிந்தனைக்குவியல்கள், நடைக்குத் தடை போட்டன.

என் புது வருடத் தீர்மானத்திற்கு இப்படியொரு ஆபத்து வரும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை. முழுமையாக ஒரு நாள் கூட ஜீவித்திராமல் அது இவ்வளவு அற்பாயுஸிலா மாண்டு போக வேண்டும்? நான் கலங்கிப் போனேன்.

எங்கள் காலனியிலுள்ள மாதர் சங்கத்திற்கு நான்தான் காரியதரிசி. இன்று காலையில் அங்கத்தினர்களையெல்லாம் வரச் சொல்லி சங்கத்தில்

# உழைத்தால் சோறும் துவையலும் கிடைக்கும்

ஏழுமலை



சின்னமலை கூவம் ஆறு அருகே டோபிகானு...

மனம் வெளுத்த கைகள்

அழுக்கை வெளுக்கத்தயாராய் உள்ளன. ஐநூறு பேர் காலையிலேயே துவைக்க ஆரம்பித்து விடுகின்றனர்.

ஒருவர் துணிகளை அள்ளிக் கொண்டு வந்துபோட்,ஒருவர் துவைக்க-இன்னொருவர் நல்ல நீரில் அலச—மற்றொருவர் நீலம் போட-ஐந்தாமவர் காயப் போட ஒரு துணி சாதாரணமாய் ஐந்து பேரின் உழைப்பை வாங்கி விடுகிறது.

இங்கே துவைக்கிறவர்கள் எல்லோரும் சலவையகம் வைத்தவரல்ல—கூலிக்கு துவைப்பவர்கள்.

நாற்பதுக்கு மேலாகும் ஏழுமலை கூலிதான். ஒரு நாளைக்கு எட்டு ரூபா—

நாளெல்லாம் துவைத்தால் நானூறு துணிகள்...

தப்-தப் பென்று தப்பி எடுக்க வேண்டும்.

ஆயாசம் வந்தால் ஒரு சிங்கிள் டீ...

துவைப்பது காண்ட்ராக்ட்தான்.

சலவையகம் வைத்திருப்பவர்கள் 100 துணிக்கு 20 ரூபாய் என தருகிறார்கள்.

---

கூட்டமொன்று கூட்டியிருந்தேன். அனைவரும் வந்ததும் எழுந்து நின்று பேச ஆரம்பித்தேன்.

"இன்றைய இந்தக் கூட்டம் எதற்கு என்பதை இப்போது உங்களுக்கு நான் சொல்லப் போகிறேன்.

...நம் சங்கம் மற்ற மாதர் சங்கங்களினின்று தனித்தும்,மற்ற சங்கங்களுக்கு முன்னோடியாகவும் விளங்க வேண்டும் என்பதுதான் என்னுடைய, நம் எல்லோருடைய விருப்பமும். அதற்காக நாம் பல முயற்சிகளில் முனைந்து செயலாற்ற வேண்டும். அதில் முதலாவதை இன்று மேற்கொள்ளலாம் என்பது என் அபிப்பிராயம். அது என்னவென்றால், புது வருஷத்தின் ஆரம்ப நாளான இன்று நாம் ஒவ்வொருவரும் ஒரு உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும். அந்த உறுதிமொழி வீட்டுக்கும், நாட்டிற்கும் பயனுள்ளதாக இருக்க வேண்டும். இந்த என் அபிப்பிராயம் உங்களனைவரின் ஆமோதிப்பையும் பெறும் என்று நினைக்கிறேன், நான் சொல்வது சரிதானே?" என்று நான் கேட்டதும் எல்லோரும் மிக உற்சாகத்துடன், புளியம்பழம் உலுக்கினது போல 'சடபட'வென்று கைகளைத் தட்டி, "ரொம்ப கரெக்ட்... ரொம்ப கரெக்ட்" என்று பலமாக ஆர்ப்பரித்தனர். புன்முறுவல் பூத்த நான் "இனி ஒவ்வொருவராக மேடைக்கு வந்து, அவரவர் எடுத்துக் கொள்ளும் உறுதி மொழியை அறிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்." என்று சொல்லி விட்டு கீழே இறங்கின என்னை எல்லோருமாக சேர்ந்து குண்டு கட்டாகத் தூக்கி, மீண்டும் மேடையில் ஏற்றி நிறுத்திவிட்டு "இந்த அபூர்வமான யோசனையை வெளியிட்ட நீங்களே தான் முதலாவதாகவும் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று ஒரே குரலில் கூவினர்.

எனக்கு ரொம்பப் பெருமையா இருந்தது. ஆனாலும் அது வெளியே தெரியாதபடி அடக்கிக் கொண்டு, ஏற்கனவே தீர்மானம் செய்து கொண்டு வந்ததை அப்போதுதான் யோசனை செய்வது போல் கொஞ்சம் பாவனை செய்து விட்டு வெளியிட்டேன்.

அந்தத் துணிக்கு முதலில் சோடா போட்டு ஊற வைக்கணும்—துவைக்கணும்—பிளீச்சிங் பவுடர் போடணும்—மறுபடியும் துவைக்கணும்— நீலம் போடணும்—ஜவ்வரிசி கஞ்சி போடணும்—காய வச்ச பின்னால இஸ்திரி போட்ணும்—

இதுக்குள்ள அவங்க கொடுத்த பணத்துல முக்கால் வாசி கரைந்து போயிடும்—மீதி கால் பாகத்தில தான் வாழ்க்கை...!

பாக்கறீங்கல்ல... எவ்வளவு கஷ்டப்படறோம்னு... ஏதோ தெரியாத்தனமா இந்த தொழில்ல இறங்கிட்டோம்...

போக முடியுமா வெளிய?

மழை வந்தா யோசிச்சுப்பாருங்க- தொழிலு நடக்குமா? எப்படி பிழைக்கிறது. தண்ணி மேல போற மீனவங்க மாதிரி—பொழைப்பு எங்களுக்கும் கஷ்டம்தான்.

சரிங்க. நேரமாவுது—துவைச்சாதான் துவையலுக்காவது ஆகும்!

"வியாதியில் கான்ஸரைப் போல வியாபாரத்தில் கள்ளத்தனம் படு பயங்கரமானது. எக்காலத்திலும், எக்காரணத்திற்காகவும் கள்ளமார்க்கெட் வளர, நாம் காரணமாக இருந்து விடவே கூடாது. இதுதான் என் புது வருடத் தீர்மானம். எந்த இக்கட்டான நிலைமையிலும் இந்த உறுதிமொழியை காற்றிலே பறக்க விடாமல் கடைபிடிப்பதுதான் என் லட்சியம்" என்று நான் சொல்லி முடித்ததும் கட்டிடமே இடிந்து விழுந்து விடும் போல கரவொலி செய்த அங்கத்தினர்கள், நான் திணறும்படியாக என்னைப் பாராட்டித் தீர்த்தனர்.

காபிக்குச் சர்க்கரையில்லாவிட்டாலும் கூட, சாப்பாட்டிற்கு அரிசி கிடைக்காவிட்டாலும் கூட அவைகளை வாங்காமலேயே சமாளிப்பேன் என்று சவால் விட்டவள், கேவலம் சினிமா டிக்கட்டை மூன்று பங்கு பணம் கொடுத்து வாங்கியிருப்பது எந்த விதத்தில் நியாயமாகும். இந்த விஷயம் மாதர் சங்கத்தினருக்குத் தெரிந்தால், என்னை எவ்வளவு கேவலமாக நினைப்பார்கள்? எப்படியெல்லாம் ஏளனமாகப் பேசுவார்கள்? எனக்கு உடம்பு வியர்த்துப் போயிற்று.

ஹோட்டலுக்கு வந்து, எதிரெதிராக நாங்களிருவரும் உட்கார்ந்த பிறகே என் தவிப்பை என் கணவர் கவனித்தார்.

"என்ன கௌசி...? உடம்பு சரியில்லையா? தலையை வலிக்கிறதா? ஒரு 'ஸாரிடான்' வாங்கி வரட்டுமா?" என்று பரிவுடன் அவர் கேட்ட பிறகு என்னால் விஷயத்தை மறைத்து வைக்க முடியவில்லை. கொட்டி விட்டேன்.

திகைப்புடன் நான் சொன்னவைகளையெல்லாம் கேட்டுவிட்டு, "ச்சேசே... நீ செய்தது கொஞ்சமும் சரியில்லை கௌசி. இந்த விஷயத்தை இப்படியா மூடி மறைப்பது? பிரமாதமான தீர்மானத்தைச் செய்துக் கொண்டவள், அதைப் பலப்படுத்த முயல வேண்டுமேயல்லாமல், இப்படி பலவீனமாக ஆக்கத் துணியலாமா? இந்தசினிமாவை, எப்படியாவது இன்றே பார்த்தாகவேண்டும் என்கிற அவசியம் எனக்கு இல்லை. உம்... கிளம்பு...கிளம்பு. பக்கத்து தியேட்டர் எதிலாவது சுலபமாக டிக்கட் கிடைத்தால் போகலாம். இல்லாவிட்டால், இருக்கவே இருக்கிறது கடற்கரை" என்றார்.

எனக்கு ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது. "அப்போ இந்த டிக்கட்?" என்று கேட்டேன். மனப்பாரம் முழுமையும் குறைந்தவளாக.

"இது ஒரு பிரச்னையா என்ன? டிக்கட் கிடைக்காமல்தான் ஏகப்பட்ட பேர் தவித்துக் கொண்டிருக்கிறார்களே! அவர்களுக்கு கொடுத்து விட்டால் போயிற்று" என்றார்.

"ரொம்ப சரி. நானே கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருகிறேன்" என்று சொன்ன நான், அவரிடமிருந்து டிக்கட்டுகளை வாங்கிக் கொண்டு, தியேட்டருக்குள் நுழைந்தபோது, எதிரே இரு பெண்மணிகள், கையைப் பிசைந்தபடி காணப்பட்டனர்.

"டிக்கட் இல்லையா?" என்று கேட்டேன்.

'ஊஹூம்.கிடைக்கவேயில்லை' என்று வருத்தத்துடன் அவர்கள் சொன்னதும், "என்னிடம் இரண்டு டிக்கட்டுகள் இருக்கின்றன, வாங்கிக்கொள்கிறீர்களா?" என்று கேட்டேன்.



# வளமான கற்பனைதான் உங்கள் நிருபருக்கு!

உங்கள நிருபர் நான் சென்னை வந்திருந்தபோது என்னைச் சந்தித்து அமெரிக்க அழைப்பு, என் எழுத்துலக அனுபவங்கள் பற்றிக் கேட்டறிந்தார். ஆனால் எனக்கும் அவருக்கும் என் அழகு பற்றியோ, குரலினிமை பற்றியோ எந்தப் பேச்சும் நிகழவில்லை.

வளமான கற்பனைதான் உங்கள் நிருபருக்கு. பதினேழு வயதில் திருமணமாகி, உடன் குழந்தைகள் பெற்று, பல வருடங்கள் பெரியவர்கள் பாதுகாப்பில் வெளியுலகம் அறியாமல் இருந்தவள் நான். என்னைத் தேடிக் கொண்டு சினிமாவில் நடிக்க அழைத்தார்களாம்...! என்ன பேத்தல் இது... சினிமா உலகில் அவ்வளவு நடிகைப் பஞ்சமா என்ன? இன்னும் கூட, ஆண்டுக்கு ஒரு சினிமா கூட நான் பார்ப்பதில்லை. எனக்கும், சினிமாவுக்கும் உள்ள தொடர்பு என். இரண்டு கதைகளை அவர்கள் படமாக்க வாங்கியுள்ளதே.

இந்த அழைப்பைப்பற்றி எந்த கர்வமும் எனக்கில்லை. நான் தனியாகத் தமிழுலகையே சீர்திருத்தப் போவதாகச் சொல்லவும் இல்லை. என்னைவிட எத்தனையோ சிறந்த எழுத்தாளர்கள் இருக்கிறார்கள், கவிஞர்கள் உள்ளார்கள். மு.மேத்தா போன்ற கவிஞரை அழைத்திருந்தால் இன்னும் பெருமைப்பட்டிருப்பேன் என்றேன். இதன் பெயர் கர்வமா?

கண்ணியமான குடும்பத்தில் பிறந்து, அறிவு பூர்வமான சூழலில் வளர்ந்து, சமுதாயத்தில் மிகவும் மதிப்பாக இருக்கும் நடுத்தர வயதுப் பெண்மணியான என்னை ஒரு கேடு கெட்ட, அகம்பாவம் பிடித்த show business personality போல் சித்தரித்திருப்பது பற்றி வருந்துகிறேன். வெட்கப்படுகிறேன். கோபப்படுகிறேன்.

இங்ஙனம்

உஷா சுப்பிரமணியன்

---

அவர்கள் முகம் மலர, துள்ளிக் குதிக்காத குறையாக, "ஓ...ஓ...வாங்கிக் கொள்கிறோம். என்ன விலை?" என்று கேட்டு, பர்ஸைத் திறந்தனர்.

சட்டென்று, "இரண்டிற்குமாக எட்டு ரூபாய் கொடுங்கள்" என்றேன்.

நாலு ரூபாயை இழப்பதன் மூலம் செய்த தவறுக்கு,ஒரு சிறு பிராயச்சித்தம் செய்து விட்ட நிம்மதி எனக்கு. என் செய்கைக்கு என் கணவர், என்னை ரொம்பவும் புகழ்ந்தார்.

"வருஷப் பிறப்பான இன்று, எனக்கு ஏகப்பட்ட பாராட்டுக்கள். நாளை, இந்த விஷயம் தெரிந்து, அங்கத்தினர்களும் என்னைத் திணற அடிக்கப் போகிறார்கள்" என்றேன் பெருமையுடன்.

மறுநாள், கனகம்பீரமாக, மாதர் சங்கத்திற்குக் கிளம்பிப் போன என்னை உள்ளிருந்து வந்த பேச்சுக் குரல் வெளியிலேயே நிறுத்தி வைத்தது.

"அநியாயத்தைக் கேட்டியா? நம்ப செக்ரட்ரி கௌசல்யா, நேற்று இரண்டு ரூபாய் தொண்ணூறு பைசா டிக்கெட்டை, நாலு ரூபாய்க்கு வித்திருக்கா. இதில் வேடிக்கை என்னவென்றால், என் சித்தி பெண்ணுக்கு நம்ப செக்ரட்ரியைத் தெரியும். இவளுக்கு என் சித்தி பெண்ணுன்னு தெரியாது. அது தான் வகையாக மாட்டிக்கொண்டு விட்டாள். வருஷ முதலாம்... உறுதி மொழியாம்... என்ன கதை... என்ன நடிப்பு!" பல்லைக் கடித்தாள் அவள்.

"வரட்டும். நாம்ப அத்தனை பேருமாகச் சேர்ந்து, நம்பிக்கையில்லாத்

தொடர்ச்சி 72ம் பக்கம்

12ம்பக்க தொடர்ச்சி
தீர்மானம் கொண்டு வந்து, அவளைத் தூக்கிடலாம்.'' இது இன்னொருத்தி.

"அவள் அத்தனை சுலபமாக உண்மையை ஒப்புக்கொண்டு விடுவாளா என்ன? அதற்கு என்னவெல்லாம் சப்பைக்கட்டு கட்டுவாளோ?'' என்றாள் வேறொருத்தி.

"இன்னமும்கூட அவள் பேச்சை நாம் கேட்கணுமா என்ன? வந்ததுமே வாசலைக் காண்பித்துவிட வேண்டாமா?'' என்றாள் முன்னவள் ஆக்ரோஷத்துடன்.

நான் திரும்பி நடந்தேன். "ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்காமல்,

## அன்று அழுதேன்


பழனிமுத்து

## இன்று சிரிக்கிறேன்

வெறும் வார்த்தை ஜாலத்திற்காக மட்டுமே, நேற்று நான் கான்ஸரையும், கள்ளமார்க்கெட்டையும் ஒப்பிட்டுப் பேசினேன். ஆனால் அதுதான் எத்தனை சத்தியமான வார்த்தையாகப் போய் விட்டது! உடலில் பரவ ஆரம்பிக்கும் கான்ஸர் நோய்க்கு மிகுந்த கவனத்துடன் வைத்தியம் செய்யாவிட்டால், அது உயிரையே குடித்து விடுவதுபோல இந்த கறுப்பு மார்க்கெட் விஷயத்தில், நான் கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்ததில் என் பதவியை அது பலி வாங்கிவிட்டதே!'' என்று என் உள்ளம் ஓலமிட, உண்மைதான்...உண்மைதான் என்று ஒத்துப்பாடின உதடுகள்.

O

வள்ளுவர் கோட்டம் அருகே...

ஒலிம்பிக் சலூன்...

பழனிமுத்து சொன்னார்:

வயசு அப்போ பதினாறு...

படிப்பு ஏறல...என்ன பண்ணட்டும்? ஊரு சுத்திகிட்டிருந்தேன்...

அம்மாவும், அப்பாவும் பிடிச்சி இழுத்துகிட்டுப் போய் மதுரையிலே இருக்கிற எங்க சித்தப்பாகிட்டே விட்டுட்டாங்க...

மொதல்ல ஆறு மாசம் கீழே விழற முடியை கூட்டணும்... எடுபிடி வேலே செய்யணும்...செய்தேன்...

அப்புறமா பையன் ஒழுங்கு தான்னு முடிவு பண்ணினதும்... சோப்பு போட்டு ஷேவிங் செய்ய கத்து கொடுத்தாங்க...

ஒரு நாள்...

மொதல்ல ஒரு பெரியவருக்கு ஷேவிங் பண்ண ஆரம்பிச்சேன்... எதானச்சும் எக்குத்தப்பா ஆயிடுச்சுன்னா என்ன பண்றதுன்னு அவஸ்தைப்பட்டேன்...

கை தான நடுங்குதச்சு... எப்படியாவது நடுக்கத்தை நிறுத்தணும்னு ட்ரை பண்றேன்... எப்படி முடியும்? சித்தப்பா இல்லேன்னாலாவது நடுங்காம செய்யலாம்...

நடுக்கத்துல பெரியவர் கன்னத்தை கத்தி அறுத்திடுச்சி...

பெரியவர் 'அய்யய்யோ'ன்னு அலறிட்டாரு... அவ்வளவுதான்...

என்னை வாங்கு வாங்குன்னு வாங்கிட்டாரு சித்தப்பா... உடம்புல எல்லா இடத்திலேயும் வலி... தாங்க முடியலே...

தொழிலே அப்படி ஆரம்பிச்ச தனலேதான் இன்னிக்கு தொழில் சுத்தமா செய்ய முடியுது...

பேட்டி : ராசி. அழகப்பன்
புகைப்படங்கள் : ஜெய்மோகன்

'தாய்'க்கு முதலாண்டு நிறைந்ததை நினைத்து நேரிலும், தொலைபேசியிலும், தபாலிலும், தந்தி வாயிலாகவும் வாழ்த்துக்களைத் தெரிவித்துள்ள வாசகர்கள், விற்பனையாளர்கள், விளம்பரதாரர்கள் அனைவருக்கும் நன்றி... நன்றி... நன்றி...

(ஆ-ர்)



ராஜசேகரன்

சிடுச்சு... பயம் லேசா வர... ஜுரம் வர்ற மாதிரியிருந்திச்சு... ஒரே ஓட்டமா வீட்டுக்கு ஓடிப் போயி ஒரு மூலையில உக்காந்துகிட்டு ஒரு புஸ்தகம் எடுத்து படிக்கிற மாதிரியிருந்திட்டேன்...

படிக்கவே முடியலே...

அதற்கப்புறம் ஒரு நாள் நான் அப்பாகிட்டே சொன்னேன். அப்பா அசந்து போயிட்டாரு...

என் தலையைக் கோதி விட்டுகிட்டே சொன்னாரு...

"ராஜசேகரா... அந்த வேலையெல்லாம் வேணுண்டா உனக்கு...! மோசமான தொழிலு... மரியாதையே கிடைக்காது... என்னதான் பெரிய வங்களா ஆனாலும் டேய் வெட்டியா... என்னடா... அப்படி இப்படிம்பாங்க... வருமானம் நிரந்தரமில்லே... வந்தா உண்டு... இல்லேன்னா இல்ல... பொழைக்க முடியாதுடா..."

ஒண்ணுமே புரியலை அப்பா என்னென்னவோ சொல்றாரு...

## எலியைக் கொன்றால் அழகி ஆகலாம்!

பிலிப்பைன்ஸ் தீவுகளில் இருக்கும் சல்மான்கா நகரில் ஒரு சமயம் அழகுப் போட்டி நடைபெற்றது. இதற்காகப் பல்லாயிரக்கணக்கான எலிகள் தமது உயிரைத் தியாகம் செய்திருக்கின்றன. எப்படி தெரியுமா?

அழகிப் போட்டிக்குச் சில நாட்களே இருக்கும் போது அந்நகரத்து மேயரான அரிலியோ பிரெய்ரிஸ் ஒரு கட்டளை பிறப்பித்தார். அதன்படி அழகுப் போட்டியில் வழங்கும் ஒவ்வொரு வாக்குடனும் ஓர் எலியின் வால் இணைக்கப்பட வேண்டும். அப்போது தான் அந்த வாக்கு செல்லுபடியாகும்.

அந்த நகரத்தில் எலிகளின் எண்ணிக்கை பெருகி பெரும் தொல்லை கொடுத்ததனாலேயே இந்த விதி சேர்க்கப் பட்டது. முடிவு எப்படியிருந்தது தெரியுமா?

17,834, எலிவால்களைப் பெற்று, மிஸ் கார்மலிடா கரோஸா அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இரண்டாவது இடத்தைப் பெற்ற மிஸ் லொலிதா காரேகேவுக்குக் கிடைத்த எலிவால்கள் 17,595. மூன்றாவது இடத்தைப் பெற்ற மிஸ் எல்டா அண்டன் டோகனுக்குக் கிடைத்த எலி வால்கள் 15,155.

இந்த அழகு ராணிப் போட்டிக்காகக் கொல்லப்பட்ட மொத்த எலிகள் 84,276.

—ஈழம் மலர்மன்னன்

## ஒரு தலைவலி

லண்டன் மாநகரில் வாடிக்கைக்காரர்களின் வீட்டிற்கு முன் அதிகாலையில் பால் வழங்குவோர் வைத்துச் செல்லும் பால்புட்டியின் மூடியை கழற்றிப் பாலைக் குடித்துவிட்டு 'ப்ளூ இற்றிட்' என்ற பறவை பறந்து விடுகிறது. இது லண்டன் மாநகர் வாசிகளுக்கு தலைவலியாக இருக்கிறது.

—ஏ.கே.சகிலா பேகம்

# ஓசைபெறுவோறும் நின்றநின்ற சங்கீதா!

வீணை பத்மஸ்ரீ டாக்டர்: இமானி சங்கர சாஸ்திரி: (6 MSC 6013)

வீணைக் கொடியில் இத்தனை இசைப்பூக்களை இவரால் மட்டுமே இப்படி மணம் வீசி சிறக்க மலர்விக்க முடியும்!

VEENA

VEENA EMANI KALYANI
MRIDANGAM KARAIKUDI R MANI

அடேயப்பா...ஸ்வரங்கள் எப்படி எப்படி புஷ்பிக்கின்றன. தாளங்கள் எத்தனை விதமாய் உருப்பெறுகின்றன.

இந்தக் கேஸட்டில்—

'சோபில்லு சப்த ஸ்வர' என்ற தியாகராஜ கீர்த்தனை—ஜகன் மோகினி ராகத்தில், ரூபக தாளத்தில் வந்து நம் நெஞ்சைத் தொடுகிறது.

'ப்ரோசேவாரெவருரா என்ற பாடலும், சிருங்கார லஹரி, எந்தரோ மஹானுபாவலு' என்ற பாடலும் ஈரமாய் நம் இதயத்தைத் தொடும் இன்ப நதி ஓடைகள்!

—விநாயகப்பிரியன்.

---

பிடிக்கப்பட்டான். பெயர் 'சுப்ரமணியன்' ஒரு போலீஸ் அதிகாரி வேடிக்கையாகச் சொன்னார். "நீங்கள் திருடனை சகோதரா என்றீர்கள், அதை மெய்ப்பிப்பது போல் பெயர்கூட 'கணபதி—சுப்ரமணியன்' என்று பொருத்தமாக இருக்கிறது."

தாங்கள் எழுதுவதில் மட்டும் திருப்திப்படாத இந்த தம்பதிகள், தங்கள் செல்வங்களையும் இலக்கியச் சேவை செய்வதில் உற்சாகப்படுத்துகிறார்கள். முதல் பெண் குமாரி ஆண்டாள் பிரிய தரிசினியின் கதைகள், கட்டுரைகள் பல பிரசுரமாகியுள்ளன. கல்லூரி நாடகங்களிலும் நடிக்கும் இவர் பொதுவாக எல்லா அமைச்சர்களிடமும் பரிசு வாங்கியிருக்கிறார்.

புதுக்கவிதை பற்றி...

"கண், காது, கை, கால் எல்லாம் அதனதன் இடத்தில் இருந்தால்தான் முழு மனிதன் ஆகிறான். அதுபோலத்தான் கவிதைக்கும் இலக்கணம் அவசியம்.

புதுக்கவிதை என்பது ஜெயமாலினியின் இஷ்டப்படி ஆடும் ஆட்டம் போன்றது, மரபுக் கவிதை — பத்மா சுப்ரமணியத்தின் கட்டுப்பாடான பரத நாட்டியம் போன்றது" என்கிறார் புலவர் கணபதி.

டி.வி. வானொலியில் 500-க்கும் மேற்பட்ட மெல்லிசைப் பாடல்கள் எழுதியிருக்கும் புலவர் கணபதி, கருமாரியம்மன், கதிர்காம முருகன் பற்றிய பாடல்களை இசைத்தட்டாகவும் வெளியிட்டுள்ளார்.

"ஒரே பையன். மூன்று வயதுக்கும் மேல் ஊமையாக பேசாமல் இருந்தான். திருச்செந்தூர் முருகனிடம் வேண்டிக் கொண்டு பிரார்த்தனை செலுத்தச் சென்றபோது, முதன் முறையாக யானையின் முழு உருவத்தைப் பார்த்து அது பிளிறும் போது அலறத் தொடங்கி, பின் பேசத் தொடங்கினான். அன்றிலிருந்து ஆண்டவனின் மேல் நம்பிக்கை ரொம்ப அதிகமாகிவிட்டது!" அதனால் பையனுக்குக் கூட முருகன் என்று பெயர் வைத்திருக்கிறார்.

பேட்டி: "சத்யம்—சிவம்"

மீண்டும் அந்த தர்ம சங்கடம் ஏற்பட்டிருக்கிறது. கடந்த ஆறு மாதங்களில் இது மூன்ருவது தடவை.

முதல் தடவை அன்னகாமுவின் மனசாட்சியே அவளை சாட்டையாக அடித்தது. இரண்டாவது தடவை ஈட்டியாகக் குத்தியது. இந்தத் தடவை?

என்ன செய்வதென்று தெரியாமல் செயலற்று நின்று விட்டாள் அன்னகாமு.

தெரியாதா? அதைச் சொல்லுங்க...''

''தெரியும்... புரோக்கர் கோவிந்து சொல்லியிருக்காரு...''

''சொன்னதுக்கு அப்புறம் கூட கோமதியைப் பெண் பார்க்க வர்ருங்கள்லே...''

''ஆமா...''

''அப்புறமென்ன...? சிவகாமி பாட்டுக்கு ஒரு ரூமுக்குள்ளே அடைஞ்சி கிடந்துட்டுப் போரு...அவளை ஏன்




''என்ன அன்னம்... பேசாமல் இருக்கே... நேரம் ஆயிட்டிருக்கு...'' என்ருர் சதாசிவம் — அவள் கணவர்.

''என்ன செய்யச் சொல்றீங்க?'' என்ருள் அன்னகாமு, தன் கணவனை ஒரு மாதிரியாகப் பார்த்தபடியே. அவளை இந்த தர்மசங்கடத்தில் சிக்க வைத்து தவிக்க விடுபவரே அவர்தான்.

''பிள்ளை வீட்டார் நாலு மணிக்கு வந்துடுவாங்க... மணி மூணு ஆச்சி...'' என்ருர் சதாசிவம்.

''அவங்க வர்றது ஒரு பக்கம் இருக்கட்டும்... முதல்லே சிவகாமியைப் பற்றி அவங்களுக்குத் தெரியுமா — வெளியே அனுப்பி வைக்கணும்' ஆதங்கத்தோடு கேட்டாள் அன்னகாமு.

சதாசிவத்துக்குக் கோபம் வந்து விட்டது. 'ஓ' வென்று கத்த நினைத்தார். ஆனுல் அடக்கிக்கொண்டார். சிவகாமி-கோமதி இருவருக்கும் கேட்டு விடும். அப்புறம் ரசாபாசம்...

''எனக்கொன்னும் நீ யோசனை சொல்ல வேணும்... நான் சொன்னதைச் செய்...'' என்ருர் அழுத்தமான-ஆனுல் கண்டிப்பான குரலில். அதோடு விட்டாரில்லை. ''என்னமோ பேசுரு... சிவகாமியை வெளியே அனுப்புருமேன்னு ஒனக்கு மட்டும்தான்

வேதனை... எனக்கில்லையா?'' என்றார் தொடர்ந்து.

அன்னகாமு பதில் பேசாமல் அவரையே பார்த்தாள். இப்போது அவள் கண்கள் கலங்கி இமைகள் நனையத் தொடங்கின.

சதாசிவத்துக்கு என்னவோ மாதிரி ஆகி விட்டது. கொஞ்சம் இறங்கி வந்தார்.

''அன்னம்... நான் என்ன சொல்றேங்கிறதை புரிஞ்சிக்க... சிவகாமி



மட்டும்தான் நம்ம பொண்ணுன்னு நினைக்காதே... கோமதியும் ஒன் வயத்திலே பிறந்தவதான். சிவகாமியோட வாழ்க்கை முடிஞ்சி போச்சி... கோமதியோட வாழ்க்கை இனிமேல்தான் ஆரம்பமாகணும்... இன்றைக்கு கோமதியைப் பெண்பார்க்க வர்றவங்க பெரிய இடம்... ரொம்ப ஐதீகமானவங்களாம். சாஸ்திரம்—சமூகங்களிலே அதிகமான நம்பிக்கை உள்ளவங்களாம்... ஒரு நல்ல காரியமா அவங்க வந்து உக்காந்து இருக்கிறப்ப அகஸ்மாத்தா ஒரு... ஒரு... விதவைப் பொண்ணு அவங்க கண்ணிலே தென்பட்டுட்டா காரியம் கெட்டுடுமேன்னுதான் நான் பயப்படுறேன்...''

உணர்ச்சி வயப்பட்ட நிலையிலும் ஒரே மூச்சில் சொல்லி முடித்தார் சதாசிவம்.

அவர் இவ்வளவும் சொல்லித்தான் அன்னகாமுவுக்குப் புரிய வைக்க வேண்டுமென்றில்லை. அவளுக்கே இது தெரியும். ஆனால் அந்த தாய் மனம் தான் கிடந்து தவியாகத் தவிக்கிறது.

மனச்சுமையை காற்றாக வெளியேற்றினாற் போல் ஒரு பெருமூச்சு விட்டாள் அன்னகாமு.

''ஒரு தாய் செய்யக்கூடாத காரியம்... இருந்தாலும் உங்களுக்காகவும்—கோமதிக்காகவும் செய்றேன்... இது மூணாவது தடவை...'' என்றாள்.

சதாசிவத்துக்கு கொஞ்சம் தெளிவு வந்தது. ''சிவகாமியை எங்கே அனுப்பப் போறே...? எங்கேயாவது பக்கத்து வீட்டிலே போய் இருக்கச் சொல்றியா...?''என்று கேட்டார்.

''அதை நான் பார்த்துக்கிறேன்... நீங்க ஹோட்டலுக்குப் போயி ஏதாவது பலகாரம் வாங்கிட்டு வாங்க...''

''பிள்ளை வீட்டார் நாலுமணிக்கு வருவாங்க... அவங்க போறதுக்கே எப்படியும் ஒரு மணி நேரம் ஆகும்... நீ எதுக்கும் சிவகாமியை ஒரு ரெண்டு மணிநேரம்—நாலுமணியிலிருந்து ஆறு மணி வரைக்கும் வெளியே இருக்கிற மாதிரி பண்ணிடு...''

''எனக்குத் தெரியும்... நீங்க போங்க...'' சீறினாள் அன்னகாமு. குரலில் பிசிறுதட்டியது.

பிரச்னை இதுதான்.

சதாசிவம்—அன்னகாமு தம்பதியினருக்கு இரண்டு பெண்கள், மூத்தவள் சிவகாமி. இரண்டு வருஷங்களுக்கு முன்பு அவளுக்குத் திருமணம் நடந்தது. சதாசிவம், தமது சக்திக்கு மீறியே செலவு செய்து கல்யாணத்தை அமர்க்களமாக நடத்தி விட்டார்.

ஆனால் என்ன கொடுமை!

கல்யாணமான இரண்டே மாதங்களில் கணவனை ஒரு விபத்தில் கொடுத்து விட்டு கைம்பெண்ணாக வந்து நின்றாள் சிவகாமி. இடி, சரியாகக் குறிபார்த்து, சதாசிவம்—தம்பதியினரின் இதயத்தில் வந்து விழுந்த மாதிரி இருந்தது.

பதினெட்டு வயதில் பருவத்தின்

தலைவாயிலில் — பூவிழந்து — பொட்டிழந்து வந்து நிற்கும் பெண்ணை வைத்துக் கொண்டு 'என்னப்பா செய்யப் போகிறோம்...' என்று அவர்கள் தவித்த தவிப்பு—

கால வெள்ளத்தில் சிறிது சிறிதாக மறைந்து சிவகாமி, அவர்களுக்கு ஒரு பழக்கப்பட்ட துயரமாக ஆகி விட்ட போது—

ஒரு நாள் அதே சிவகாமி அவர்களுக்கு ஒரு பிரச்னையாக உருவெடுத்தாள்.

வேறொன்றுமில்லை... இரண்டாவது பெண் கோமதியைப் பெண் பார்க்க வரன் வீட்டார் வருவதாகத் தகவல் வந்தது.

அப்போது சதாசிவத்தின் மனதில் முதலில் எழுந்த கேள்வி—

'வீட்டில் ஒரு அமங்கலியின் பிரசன்னத்துக்கு மத்தியில் ஒரு மங்கல காரியம் நடந்தேறுமா?' என்பதுதான்.

அந்தக் கேள்விக்கு அவரே விடையும் கண்டார்.

பிள்ளை வீட்டார் வந்து போகிற வரைக்கும் சிவகாமி எங்காவது வெளியில் இருக்கிற மாதிரி செய்தாக வேண்டும்.

அன்னகாமு முதலில் அதற்கு ஒத்துக் கொள்ள மறுத்து — பிறகு கணவனின் வற்புறுத்தலுக்காக அரை குறையாக சம்மதித்து குறிப்பிட்ட அந்த ஓரிரு மணி நேரங்களுக்கு சிவகாமியை வெளியில் அனுப்ப ஒரு வழியைக் கண்டு பிடித்தாள்.

ரேஷன் கடை.

பாவம் சிவகாமி! பையையும்— அட்டையையும் எடுத்துக் கொண்டு ஓடினாள். க்யூவில் இரண்டு மணிநேரம் கால்கடுக்க நின்று விட்டு கடைசியில் வெறும் பையோடு அவள் திரும்பி வருவதற்குள் —

பிள்ளை வீட்டார் வந்து கோமதியைப் பெண் பார்த்துவிட்டுப் போய் விட்டார்கள்.

போனவர்கள் போனவர்கள் தான். அந்த சம்பந்தம் அமையவில்லை.

இரண்டாவது முறை இதே இக்கட்டு ஏற்பட்ட போது—



நல்ல வேளையாக பக்கத்து வீட்டுப் பெண்கள் சினிமாவுக்குக் கிளம்பவே அவர்களோடு சேர்த்து சிவகாமியை அனுப்பி வைத்துவிட்டாள் அன்னகாமு.

ஆனால் அந்த இரண்டாவது பெண் பார்த்த படலமும் காபி-டிபனுக்குப் பிடித்த கேடுதான்.

இப்போது மூன்றாவது தடவை. இருப்பதோ ஒரு மணி நேரம். மகளை எங்கே—என்ன சொல்லி அனுப்புவது?

கூடிகாரமுள் நகர, நகர கவலை அதிகரித்தது அன்னகாமுவுக்கு. ஒரு வழியும் புலப்படவில்லை. பேசாமல், சிவகாமியை ஒரு ரூமுக்குள்ளேயே முடங்கிக் கொள்ளச் சொல்லலாமா?

அதைவிட பாவம் வேறு எதுவுமில்லை.

## ஒரு படம் நாலு கவிதைகள்!

இவர்களின்
வயிற்றுச்
சோகங்களும்
வாழ்க்கைக்
கனவுகளும்
இரு இணை
கம்பிகளாய்
இணையாமலே
போகிறதோ?

—புஷ்பகாந்தன்

எரிபொருளில்லாது
எங்கள் வயிற்று
எஞ்ஜின்கள்
பசியை மட்டுமே
ஏற்றிக் கொண்டு
இனி—
பழைய விதிக்கோட்டில்
பயணம் செல்லாது...
எங்களை ஏற்றிச்
செல்லாத ரயில்
எங்கள் மேல்
ஏறிச் செல்லட்டும்...!
பாலம் எங்கள் கையில்
இனி உங்கள்
பயணத்தையே
நாங்கள் மாற்றுவோம்.

—ஜெகாதா

வறுமைக்கோடு
வட்டாரத்தில்
இவர்கள்
பிரஜா உரிமை
பெற்றவர்கள்...
சமுதாயப் பாலம்
சீர் கெட்டதால்
ரயில் பாலத்துடன்
உறவு கொண்டவர்கள்...!
விதி சரியில்லையென
மதி இழந்தவர்கள்...
உயர்திணை மனிதர்களால்
அஃறிணை ஆக்கப்பட்டவர்கள்!

—ஆர். கண்ணன்

எங்களின்
கனவும்
கவலையும்
உங்களின்
கவிதைக்குப்
பொருளாய்
களவாடப்பட்டன...
உங்களின்
கவிதைக் கண்ணீரால்
எங்களுக்கு
என்ன லாபம் சாமி?

—கல்யாண்குமார்

படம்: ஜெய்மோகன்

பிறகு என்னதான் செய்வது?

திடீரென்று மின்னல் கீற்றாக அவள் மனதில் ஒரு எண்ணம்...

டைலரிங் கிளாஸ்!

மூன்று மாதமாக சிவகாமி போய் வந்து கொண்டிருக்கிறாள்... ஆனால் அதிலும் ஒரு சிக்கல்... இன்றைக்கு அவளுக்கு கிளாஸ் இல்லை.

இல்லாவிட்டால் என்ன? ஏதாவது ஒரு சாக்கு சொல்லி சிவகாமியை கிளப்பியாக வேண்டும்.

அன்னகாமு தாமதிக்கவில்லை. பீரோவைத் திறந்தாள். தன்னுடைய ரவிக்கைகள் இரண்டை எடுத்து தையல் முழுவதையும் பிரித்தாள். பிறகு 'சிவகாமி' என்று குரல் கொடுத்தாள்.

படுத்திருந்த சிவகாமி முதல் அழைப்பிலேயே எழுந்து கொண்டாள்.

"என்னம்மா?"

"தையல் கிளாஸுக்குப் போகலே...?" மனதின் கள்ளத்தனத்தை திறமையாக மறைத்துக் கொண்டு கேட்டாள் அன்னகாமு.

"இன்னக்கி கிளாஸ் இல்லேம்மா..."—ஒரு குழந்தை கூட சத்தமாகப் பேசும். ஆனால் சிவகாமியின் குரலிலோ எந்தத் தெம்பும் இல்லை.

"அடக்கடவுளே... நீ தையல் கிளாஸுக்குப் போவேன்னு நினைச்சிக்கிட்டு என் ரெண்டு ரவிக்கையை தையல் பிரிச்சிட்டேனே..."

"நாளைக்குக் கொண்டு போய் தைச்சுட்டு வந்துடுறேம்மா..."

"எனக்கு நாளைக்கு காலையிலே வேணுமே... என்ன செய்றது?..."

சிவகாமி பதில் பேசவில்லை.

அவள் சுயமாக சிந்தித்தே ரொம்ப நாட்களாகிவிட்டது.

"ஒண்ணு பண்ணேன்...இப்ப கொண்டு போய் தைச்சுட்டு வந்து டேன்..."

"இப்பவேவா?" என்று தயங்கிஞற்போல் கேட்டாள் சிவகாமி.

"ஏன்? மிஷின் கிடைக்காதா?"

"கிடைக்கும்... வேணும்ன்ஞ அஞ்சு மணிக்குப் போறேன்..."

அதுதானே ஆபத்தான நேரம். அன்னகாமுவிஞல் அதை அனுமதிக்க முடியாது.

"அஞ்சு மணிக்குப் போயி— நீ திரும்பி வர்றதுக்குள்ளே இருட்டிடும். நாலு மணிக்குப் போஞ ஆறு மணிக்குள்ளே வந்துடலாம்..."

சிவகாமி கடிகாரத்தைப் பார்த்தாள். மணி மூன்றரை. அம்மா சொல்வதும் அவளுக்குச் சரியென்று தோன்றியதோ என்னவோ—

எழுந்து படுக்கையைச் சுருட்டிஞள். முகம் கை, கால் அலம்பி தலைவாரிக் கொண்டு அடுத்த பதினைந்து நிமிஷங்களில் ரவிக்கைத் துண்டுகளை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டாள்.

ஒரு கண்டத்திலிருந்து தப்பிய மாதிரி இருந்தது அன்னகாமுவுக்கு.

மணி நாலரை—

நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தார் சதாசிவம்.

அதற்குக் காரணம்—

பிள்ளை வீட்டார் இன்னும் வரவில்லையே என்பதல்ல... ஆஞல் டைலரிங் இன்ஸ்டிட்யூட்டுக்குப் போயிருக்கும் சிவகாமி, சிவபூஜையில் கரடி மாதிரி வந்து விடக் கூடாதே என்ற உதைப்பு.

"சிவகாமி ஆறு மணிக்கு மேலேதானே வருவா?" என்று கேட்டார் மனைவியிடம்.

"சொல்ல முடியாது... தைச்சி முடிஞ்சிட்டா அதுக்கு முன்ஞலேயே வந்தாலும் வந்துடுவா..."

சதாசிவத்துக்கு குண்டு விழுந்த மாதிரி இருந்தது.

மற்ற வரன்களை விட இப்போது வரப் போகும் வரன் விஷயத்தில் அவருக்கு நாட்டம் அதிகம். பம்பாயில் அடாமிக் எனர்ஜி கமிஷனில் வேலை. பெண் பார்த்து நிச்சயிப்பதற்கென்றே பெற்ருேர்களுடன் நேற்று காலை சென்னைக்கு வந்திருக்கிருன். நாலைந்து இடங்களில் பெண் பார்க்கும் புரோக்ராம். ஆஞல் மற்றதையெல்லாம் தட்டிக் கழிக்க வைத்து கோமதியை முடித்து விடுவதாக புரோக்கர் கோவிந்து உறுதி சொல்லியிருந்தார்.

"இன்னும் அவங்களைக் காணேமே..." என்ருள் அன்னகாமு.

"வந்துடுவாங்க... வந்துடுவாங்க..."

ஒரு புறம் நம்பிக்கையான எதிர்பார்ப்பு. மறுபுறம் பதைபதைப்பு.

"புடிக்கும்போது சுரேஷ் என்ற ஒரு பையன் ரொம்ப அழகா இருப்பான். எனக்கு அவன் மேலே காதல் வந்ததா இல்லே அன்பா என்னன்னு சொல்லத் தெரியலே. அவனும் நானும் பிரியமா இருந்தோம். ஒரு வேளை நாங்க பிரியாம இருந்திருந்தா நிஜமா காதலாகி இருக்குமா?" என்று சொல்லி இருந்தார் சிலுக்கு ஸ்மிதா.

அதைப் படித்து விட்டு இரண்டு பேர் நான்தான் அந்த சுரேஷ் என்று எழுதி இருக்கிருர்கள்...

அன்பே விஜி (சிலுக்கு ஸ்மிதா) வணக்கம்.

உன் கடிதம் 'தாய்' ஏட்டில் படித்து கண்ணீர் வடித்தேன். என்னை மறவாமல் உன் உள்ளத்தில் அப்படியே வைத்ததற்கு நன்றி. நடந்தது எல்லாம் கனவு என்று எண்ணி மறந்து விடு.

நான் நன்ருக இருக்கிறேன். எனக்கு திருமணம் ஆகிவிட்டது. மூன்று குழந்தைகள் இருக்கிருர்கள்.

இந்த கடிதம் கண்டதும் உன் திருக்கரம் பதித்த கையழுத்துடன் உனது புகைப்படம் அனுப்பிவைக்கவும்.

அன்பன்,
அ. பிலிப்குமார்,
7-வது கிராஸ்,
ஜெய்ஜவான் நகர்,
சுப்பன்பாளையம்,
பெங்களூர்-43.

"இரண்டுக்கும் இடையில் சதாசிவம் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தபோது—

வாசலில் ஆட்டோ வந்து நின்றது. புரோக்கர் கோவிந்து மட்டும் உள்ளே நுழைந்தார்.

"என்ன கோவிந்து... நீங்க மட்டும வந்திருக்கீங்க...?" என்று சதாசிவம் கேட்க—

அதற்குப் பதில் சொல்லாமல் முகத்தைச் சுளித்தார் கோவிந்து,

"பிள்ளை வீட்டார் வரலியா?"- அன்னகாமு.

"இல்லேம்மா...வேறொரு பொண்ணைப் பார்த்து அவங்க நிச்சயம் பண்ணிட்டாங்க... நான் எவ்வளவு சொல்லியும் கேட்கலே..." ஈரப்பசையில்லாமல் இருந்தது கோவிந்துவின் குரல்.

இந்தத் தடவையும் ஏமாற்றம் தானா?

சதாசிவம் தளர்ந்து போனார். அந்தத் தளர்ச்சியோடு சோபாவில் சாய்ந்தவருக்கு—

கோவிந்து விடை பெற்றுக் கொண்டு போனது கூடத் தெரியவில்லை.

அன்னகாமுவின் குரல்தான் அவரை சுயநினைவுக்கு இழுத்து வந்தது,

"என்னங்க...யாரோ வந்திருக்



# சிலுக்கின் காதலன் நான். இல்லை, நான்தான்!

தாங்கள் பிரசுரித்த 'சில்க்கின் ஐந்து வயதுக் காதல்' படித்தேன். மிக்க மகிழ்ச்சி. என் மனம் புல்லரிக்கிறது. ஏன் என்று கேட்கிறீர்களா? என்னுடன் சிறு வயதில் படித்த அந்த விஜயா இன்று சிலுக்காக திரையில் கொடி கட்டிப் பறக்கிறாள் என்பதை நினைக்கும் போது யாருக்குத்தான் புல்லரிக்காது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அவள் சொல்லியுள்ள எல்லா நிகழ்ச்சிகளையும் கோர்வைப் படுத்திப் பார்க்கும்போது அந்த விஜயாவும், இந்த சிலுக்கும் ஒன்றுதான் என்று எண்ணத் தோன்று கிறது. மற்ற இடங்களில் 'சக மாணவன் என்ற அர்த்தத்தில் 'அவன்' என்று சொல்லிவிட்டு இப்பொழுது 'எப்படி இருக்கிறாரோ..கிறாரோ என்று மரியாதையாக சொல்லியிருப்பது அவள் பெருங்குணத்தைக் காட்டுகிறது. அவளுக்கு டைபாய்டு, 21 நாள் லீவு என்பதெல்லாம் முற்றிலும் உண்மை. பின் நாங்கள் சென்னைக்கு மாறுதல் ஆகி வந்து விட்டோம். ஆனாலும் அந்த இனிமையான நட்பை இன்று கூட நினைத்துக் கொள்கிறேன்.

அதில் காதலுக்கெல்லாம் இடமே கிடையாது. தூய்மையான அன்பு கலந்த நட்புதான். என் சகமாணவி இன்று சிலுக்காகி இருப்பது சிறிதளவு பிரமிப்பாகவே இருக்கிறது. எனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை.

ஓ.எம்.சுரேஷ்,
28, கீழ்பாக் கார்டன் ரோடு,
கீழ்பாக்கம், சென்னை-10.



5.5 கிலோ மீட்டர் நீளமுள்ள, உலகத்திலேயே மிகவும் நீளமான பாலம் பீகாரில் கங்கை நதியின் குறுக்கே கட்டப்பட்டுள்ளது.

—மா.சண்முகம்.

காங்க...''

ஐம்பது வயதுக்கு மேலான ஒருவர். கண்ணியமான தோற்றம். தயங்கித் தயங்கி நின்ருர்.

அவரை வரவேற்கக்கூட சதாசிவத்துக்குத் தோன்றவில்லே. ஏமாற்றத்திலிருந்து இன்னும் மீளாத நிலே.

வந்தவரை வரவேற்று உட்காரச் சொன்னது அன்னகாமுதான்.

''என்பேரு சந்திரசேகரன்...'' என்ருர் வந்தவர்.

சதாசிவம் கவனிக்கிருரா— இலலேயா என்று கூடத் தெரியவில்லே.

''உங்க மூத்த பெண் சிவகாமி படிக்கிற டைலரிங் இன்ஸ்டிட்யூட் என்னுடையது தான்...''

''அவ அங்கேதான் போயிருக்கா...'' என்ருள் அன்னகாமு.

''ஒரு முக்கியமான விஷயமா உங்ககிட்டே பேசலாம்ன்னு வந்தேன். அது சரின்னு உங்களுக்குத் தோணிஞ சம்மதம் சொல்லுங்க. தப்புன்னு தோணிஞ என்னே மன்னிச்சிடுங்க...'' என்ருர் சந்திரசேகரன்.

அடக்கமான-ஆனல் புதிரான பீடிகை.

சதாசிவம் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''என்னுடைய மூத்த பையன் பாஸ்கர். டைலரிங் இன்ஸ்டிட்யூட்டை அவன்தான் கவனிச்சிக்கிருன். ஒரு மாதிரியானவன்... எடுத்தது தொட்டதுக்கெல்லாம் சீர்திருத்தம், சமுதாய சேவைன்னு பேசுறவன் அவனுக்கு சிவகாமியை மறுமணம் செய்துக்கணும்ன்னு...''

அவ்வளவு தான்.

உடம்பின் அத்தனை நரம்புகளையும்—ரத்த நாளங்களேயும் யாரோ சுண்டி விட்ட மாதிரி இருந்தது.

'சிவகாமிக்கு சிவகாமிக்கு...' திகைப்பின் எல்லேக்கே போய் விட்டார் சதாசிவம்.

''சிவகாமி விதவை சார்...'' என்ருர் தீனமான குரலில்.

''தெரிஞ்சுதான் மறுமணம்ன்னு சொன்னேன்... உங்களுக்கு அதில் நம்பிக்கை இருந்தா...''

சதாசிவத்தின் உடலில் ஒரு நடுக்கம் ஊடுருவியது.

அவர்கள் எதிர் பார்த்திருந்தது, கோமதியைப் பெண் பார்க்க வரும் பிள்ளே வீட்டாரைத்தானே தவிர— சிவகாமியை மறுமணம் செய்ய விரும்பும் பையனின் தந்தையை அல்ல.

கோமதிக்கு வரன் நிச்சயமாக வேண்டுமென்பதற்காக அவர் சிவகாமியை வெளியே அனுப்பிஞர்.

ஆனல் இப்போது நடந்திருப்பதென்ன?

நினைக்க நினைக்க சதாசிவத்தின் நெஞ்சு துடித்தது.

''நான் சொல்றது தப்பா இருந்தா மன்னிச்சிடுங்க... அல்லது உங்களுக்கு அதிலே விருப்பம் இருந்தா ஒரு நல்ல நாள் பார்த்து...''

சந்திரசேகரன் சொல்லி முடிக்கவில்லே.

''இன்றைக்கு நல்ல நாள்தான்... இன்றைக்கு நல்ல நாள்தான்...'' என்று சொல்லியவண்ணம் ஒரு குழந்தையைப் போல் அழத் தொடங்கி விட்டார் சதாசிவம்.

O

# வருகிறேன் உன்னைத் தேடி...



அ. வின்சென்ட்

விவிதபாரதியின் 'பொன்னருவி'யில் அந்தி மழை பொழிந்து கொண்டிருந்தது. என் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து நனைந்து கொண்டிருந்தேன். எதிரே தெருவில் மழை பொழியவில்லை. ஆனால் இளமை பொழிந்து கொண்டிருந்தது. ஒரு இளமைத் தேர் தயங்கித் தயங்கி நகர்ந்து, நான் உட்கார்ந்திருந்த திண்ணையருகே வந்ததும் நின்றது.

தேரின் முகத்தில் மாதவியின் சாயல்.

## அன்புள்ள ஆசிரியர்க்கு....

வணக்கம்.

உத்தம சோழ மங்களம்
நான்
உனக்காகப் பிறந்த ஊர்.

எத்தனை நாட்களின்
கனவைத்தான்
சேமித்துக் கொள்வது?

கவிதை எழுதி
நகக்கண்களில்
ரத்தம் தெரிந்தது.
கடிதம் எழுதி
விழிக்கண்களில்
கண்ணீர் சுரந்தது.

ஒரேவாட்டம்
படுக்கும் உடல்
மரத்துப் போகிறமாதிரி
உன்னை எண்ணியே
மனமும்
மரத்துப் போனது.

பைசா நகரத்து
கோபுரமாய்
உன் சாயலில்தான்
நான்
சாய்ந்து போய்விட்டேன்.

நீ
வெடித்த பட்டாசு மட்டும்
இடியின்
இயல்பைப் பெற்றது.

நீ நட்ட
மரம் மட்டுந்தான்
பார்க்கும் போது
வளர்ந்தது.

உன்
பேனாவின் கீறல்
என் இதயத்தில் விழ
நான்
சம்மதித்தேன்.

உன்
பாடலை நான்
பாடிக் காட்டினேன்.

நான்
புளுகுவதெல்லாம்
'பொய்'யென்றால்

உடம்பில் தாவணி பிளஸ் நெளியல். பல்லில் ஹீ ஹ
அவளுடைய அதீதமான வெட்கம் என்னைய
தொற்றிக் கொள்ள, விவிதபாரதியிடம் 'எக்ஸ்க்யூ
கேட்டுக் கொண்டு, என் பங்குக்கு வழிந்தே
ஹீ ஹீ.

பதினாறு... ஏழு... எட்டு வயசிருக்கு
சம்பந்தா சம்பந்தமில்லாத கலரில் தாவ
பாவாடை, ஜாக்கெட், கைகளில் ஸ்பிரிங் வளைய
வலதில் பச்சை, இடதில் சிகப்பு. உடலை படு கஷ்ட
படுத்தி வளைத்து நாணம் சொன்னாள். எதற்கு இ
தனை நெளியல்?... அரைக் கிறுக்கோ? இல்லை. அந்
முழி புத்தி சுவாதீனம் இருப்பதைச் சொல்லியது
கையில் ஏதோ கடிதம் போல் ஒன்று வைத்திரு
தாள். தன் வெட்கத்தை விரல்களால் தேய்த்
அந்தக் கடிதத்துக்கும் தொற்றச் செய்து கொண்
ருந்தாள்.

பெண்... நெளியல்... கடிதம் சுவாரஸ்
மான விஷயம் இருக்கிறது! இன்று அதிகாலை ஒலித்
'இந்த வீட்டுக்கு மஹாலட்சுமி வரப்போரு,மறுபடியு
ரீவைண்ட் ஆகி ஒலித்தது. குடுகுடுப்பைக்கார
நிஜம் கூடச் சொல்வானு!

"எதுக்கு இத்தனை நெளியல்? உங்க உடம்
கஷ்டப்படறதைப் பார்த்து என் மனசு கஷ்ட
படுது" என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தேன்.

"என் பெயர் ராதா, பக்கத்துத் தெருவிலே
வீடு. இந்தத் தெருவழியா போகும் போதும், வரு
போதும் உங்களை இந்தத் திண்ணையிலே பார்த்
திருக்கேன்" என்று கொஞ்சியது இளமைத் தேர்.

"ஹீ ஹீ அப்படியா எங்க வீட்டிலே கூட
எல்லாரும் சொல்வாங்க. 'டேய் குமார் நீ எவ்வள
லட்சணமா இருக்கே. உன்னைப் பார்த்துக்கிட்டே
இருக்கலாம் போலிருக்கு' அப்படின்னு (அப்பட்ட
மான பொய்) இன்னைக்கு நீங்க சொல்றீங்க. ரொம்ப
நன்றி... பக்கத்துத் தெரு வழியா நான் பல தடவை
போயிருக்கேன். உங்களைப் பார்த்ததில்லையே? ஒரு
தடவை பார்த்திருந்தேனு நானும் உங்களைப் போல
அடிக்கடி வந்து பார்த்திருப்பேன். ஹீ ஹீ"

"எங்க வீட்டுலே திண்ணையே கிடையாது
அதனாலேதான் வெளியே தென்பட்டிருக்க மாட்
டேன். ஆமா நீங்க ஏன் எந்த நேரமும் இந்தத்
திண்ணையிலேயே உட்கார்ந்திருக்கீங்க?"

"எனக்குப் பொறுக்கித் தனமா ஊர் சுத்தப்
பிடிக்காது. காலித்தனமா பெண்களை சைட் அடிக்கப்
பிடிக்காது. திருட்டுத்தனமா தம் அடிக்கப் பிடிக்
காது. அதனால்தான் எப்பவும் இந்தத் திண்ணை
வாசம்". (உண்மையில் நான் வேலை வெட்டி
கிடைக்காத தண்டச்சோறு.)

"காதலைப் பத்தி நீங்க என்ன நினைக்க
றீங்க?"—ராதா.

காதல்...காதல்...(தொண்டைக்குள் ஐஸ்

கட்டி இறங்க வெளியில் வியர்த்தேன்) சினிமாவிலே காட்டறுங்களே அதுதானே. ஸ்லோ மோஷன்லே வெள்ளை டிரஸ் போட்டுக்கிட்டு பறக்கறது.மரத்தைச் சுத்தி சுத்தி ஓடறது. பீச்சில் தண்ணீர் கிட்டே உட்கார்ந்திருக்கிறது. பார்க்கிலே புதர் மறைவிலே ஒருத்தரை ஒருத்தர் மோந்து பார்த்துக்கறது...காதல் மிகவும் சுவாரஸ்யமான விஷயம்தான் போலிருக்கு. ஆனு இன்னைக்கு வரைக்கும் எனக்கு அந்த அனுபவம் இல்லை. இன்னையிலிருந்து...ஹீ...ஹீ...''

''காதல் ஒரு விசித்திரமான விஷயம்ங்க. பாருங்களேன் எப்படி திடுதிடுப்புன்னு வருது. தெரு வழியா போகும் போதும், வரும்போதும் வருது. இதை ஒரு கோணத்திலிருந்து பார்த்தா முட்டாள்த் தனமா இருக்கு. நல்லா யோசிச்சுப் பார்த்தா இதுவே தெய்வீகமா இருக்கு.''

''தெய்வீகம்தாங்க. காதலில் சிக்குண்டவர்கள் அத்தனைப் பேரும் மனித நிலைக்கு அப்பாற் பட்டுப் போய் தெய்வங்களா ஆயிடறுங்க. நான் கூட சீக்கிரமா தெய்வமாயிடுவேன்னு நினைக்க றேன்ங்க.ஹீ...ஹீ—''

''இத்தனை அற்புதமான காதல் பெரும் பாலான இடங்களில் கொலை செய்யப்படுகிறது. அநேகமா பெற்ருேர்கள் தான் வில்லன்களா இருக் காங்க.''

''எல்லாப் பெற்ருேர்களும் வில்லன்களா இருக்கமாட்டாங்க. பச்சைக்கொடி காட்டறவங் களும் இருக்காங்க. உதாரணமா எங்க அப்பா, அம்மா கிட்டே போய் நான் காதலிக்கறேன்னு சொன்ன, அவங்க என் காலில் விழுந்து வணங்குவாங்க... காதல்தான் என்னை தெய்வமா ஆக்கிடுச்சே!''

''காதல் கடிதம் எழுதறதைப் பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''காதலை நாகரிகமா வெளிப்படுத்த காதல் கடிதம்தான் சிறந்த வழின்னு ஜெயகாந்தன் சொன் னதா பாக்யராஜ் படத்துலே சொல்றுங்க...அது என்ன சாதாரண காகிதமா? இல்லை. உடலிலிருந்து தனியே அறுத்தெடுக்கப்பட்ட இதயத்தை பொட்டல மாகச் சுருட்டித் தாங்கிவரும் கனமான காகிதம் அது.

''கடிதம் ஒரே பேத்தலா எழுதப்பட்டி ருந்தா?''

''உண்மையான காதலருக்கு அது பேத்தலா இருக்காதுங்க. காவியமா இருக்கும். கவிதையா இருக்கும். அத்தனை எழுத்துக் களும் ஆசைப்பூக்கள், வாசப்பூக்கள், உதிரிப்பூக்கள், உதிராப்பூக்கள், கண்ணீர்ப் பூக்கள்.''

''அழகாச் சொன்னிங்க... உங்க தங்கை நல்லா படிக்கிருளா?'' திடீரென்று என் குடும்பத் துக்குள் நுழைந்தாள் ராதா.

''ஓஹோ! என் குடும்பத்தைப் பத்தி தெரிஞ் சுக்க ஆசைப்படறீங்களா? அப்பா, அம்மா, அப்பா வோட அம்மா, நான், என் தங்கை, என் தம்பி

நான் 'மெய்' மறக்க
நீதான் காரணம்.
எனக்கு
தீயில் நுழையும்
தன்னம்பிக்கையை
வாயில் ஊட்டிய
முதல் மனிதன்
நீதான்...

அன்று
வசதியில்லையென்று
வாழ்க்கை கேட்காமல்
வீரமிருக்கிறதென்று
வாய்ப்புக் கேட்டேன்.

தேமே என்று
நின்ற என்னை
மே மாதம்
வரச் சொன்னுய்.

மறக்க மாட்டீர்கள்
அல்லவா?
என்றேன்.

மறதியை
மறப்பேன் என்ருய்.

சூரியனைச் சுடும்படி
உன் வார்த்தையில்
என்ன
சூட்சுமம் இருக்கிறது
என்று கேட்டாய்.

எழுதுகோலுககுள்
எண்ணெய் இட்டு
எழுதினுல் மட்டும் என்ன
நெருப்பா தெறிக்கும்?

அதனுல்தான்
என்னை இட்டு
எழுதுகிறேன்
என்று சொன்னேன்.

இது
என்
முகவரிக்கு
எழுதிக் கொண்ட
உன் கடிதம்.

இன்று நான்
தனியார் தபால்காரன்.

என் விழி
நீரில் மூழ்கி வாடும்.
அது பழி
யார் மீதில் போடும்?

ரவி.லோகநாதன்

மொத்தம் ஏழுபேர்.''

''ஏழா ஆறு தானே வருது?''

''எனக்கு வரப்போற மஹாலட்சுமியை சேர்த்துச் சொன்னேன்.''

''நல்லா வரட்டும்... உங்க தங்கையை கூப்பிடுங்க.''

''அவ எதுக்குங்க?''

''அவகிட்டே இந்தக் காதல் கடிதத்தை கொடுத்தால்தானே அவ இதை உங்க அப்பா கிட்டே காட்டுவா?... காதல், கல்யாணத்துலே முடியும்?''

''வேண்டாங்க. நீங்க அதை என் கிட்டேயே கொடுங்க. நான் போய் அப்பாகிட்டே காட்டறேன் கவலைப்படாதீங்க. உடனே கல்யாணம்தான். (உடனே செருப்படிதான்.)

''இல்லைங்க உங்க தங்கையைக் கூப்பிடுங்க.

''இல்லைங்க நீங்க என் கிட்டேயே கொடுங்க.

''அய்யோ! உங்ககிட்டே தரக்கூடாதுங்க.

''இப்போ நீங்க அதை என் கிட்டே தர போறீங்களா, இல்லை நானே பிடுங்கிக்கட்டுமா?''

''இல்லைங்க. என் அண்ணன் இதை உங்க தங்கை கிட்டேதான் கொடுக்கச் சொன்னாரு!''

''என்ன? உங்க அண்ணன் சொன்னாரா?''

''ஆமாங்க. என் அண்ணன்தான் உங்க தங்கைக்கு காதல் கடிதம் எழுதி என் மூலம் கொடுத்தனுப்பிச்சிருக்காரு!'',

''அப்போ நீங்க எனக்கு எழுதினது காதல் கடிதம் இல்லையா அது?''

''இல்லைங்க.''

''அடி செருப்பாலே. நீ தாவணி போட்டு ரெண்டு வருஷம் ஆகியிருக்காது. அதுக்குள்ளே காதல் கடிதத்தைத் தூக்கிட்டு காதல் தூது வந்துட்டியா. கழுதை. முதல்லே உன் வீட்டைக்காட்டு. உன் அண்ணனைச் செருப்பாலே அடிக்கணும். கண்ட சினிமாவைப் பார்க்க வேண்டியது. காதல் அது இதுன்னு பைத்தியக்காரத்தனமா அலைய வேண்டியது. அபத்தமா உளறி காதல் கடிதம் வேறே. காதலாவது மண்ணாங்கட்டியாவது, காதலிக்கிறவங்களை எல்லாம் நிக்க வைச்சு சுடணும். இன்னொரு தடவை காதல், காதல் கடிதம்னு இந்தப் பக்கம் வந்தா உன்னைச் சுடுவேன். அப்புறம் போய் உன் அண்ணன் தடியனைச் சுடுவேன். அவன் கிட்டே சொல்லிவை. அந்தக் கடிதத்தைக் கிழிச்சிக் கிட்டே ஓடிப்போ.''

தாவணியும், பாவாடையும் பறக்க என் சொற்ப நேரக் காதலைச் சாகடித்துவிட்டு ஓடினாள் அந்த ராதா—இளமைப் பேய்.

விவிதபாரதி அழுதது. 'காதலிலே தோல்வியுற்றான் காளை ஒருவன்.'

○



படு சுட்டியான பையன் தந்தையிடம் கேட்டான்:

''அப்பாக்கள் புத்திசாலிகளா? பிள்ளைகள் புத்திசாலிகளா?''

அப்பா சொன்னார்:

''அப்பாக்கள்தான் பெரியவர்கள். ஆகவே, அப்பாக்கள்தான் புத்திசாலிகள்.''

பையன்:

''ரேடியோவைக் கண்டுபிடித்தது யார் அப்பா?''

அப்பா:

''மார்க்கோனி''

பையன்:

''ஏன் புத்திசாலியான மார்க்கோனியின் அப்பா ரேடியோவைக் கண்டுபிடிக்கவில்லை?''

—'பிரபல்யா'

சீனக் கதை

மூலம் : லின்யுடா

# அந்த முப்பது நாட்கள்!

பொன் பரமகுரு

## 1

யாங்சின் சுற்றுப் பயணத்தில் அந்த போசிங் நகர விடுதியில் வந்து தங்கினர். அன்று விடுதிக்கு அருகிலுள்ள மடத்தின் மணியோசை கேட்டது.

சோகமும் இன்பமும் கலந்த வானத்தில் நினைவுப் பறவை படபட வென சிறகடித்து 20 வருடங்கள் பின்னோக்கி பறக்க ஆரம்பித்தது யாங்சின் னுக்கு. அப்போது இருபது வயது. சிறந்த அழகும், அறிவும், ஆற்றலுமிக்க வர். ஒப்பற்ற கவிஞரும்கூட! அந்த நிமிடம் வரை அவர் எந்த காதல் விவ காரத்திலும் சிக்காமல் உஷாராக இருந் தார்.

டங் பேரரசின் ஆட்சிக் காலத் தில் புலமைசால் மாணவர்கள் தங்களது இறுதிப் பரீட்சைக்கு முன் விடுமுறையில் சில மாதங்கள் நாட்டைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்து, தலைநகரில் தேர்வில் பங்கேற்பார்கள். யாங்சின் அப்படி நாட்டைச்சுற்றி வரும் போது, போசிங் நகரில் தனது அருமை அன்பர் ஏங் என்பவரை சந்தித்தார். அவர் வற்புறுத்தி யாங்சின்னை ஓரிரு மாதம் அவ்வூரிலேயே தங்க வைத்தார்.

போசிங் மஞ்சள் நதிக்கக மீதுள்ள ஒரு அழகிய நகரம். நகருக் கிழக்கே மூன்று மைல்களுக்கு அப் லுள்ள தைபோ மலை அடிவாரத் அழகிய பூச்யு ஆலயம் இருந்த மஞ்சள் நதியும், தைபோ மலை அந்நகரை அடுத்து இருந்தத இயற்கை வளத்திற்கும், இங்கிதமா தட்பவெப்ப நிலைக்கும் அது பெ பெற்றதாகி விட்டது. கவி உள்ள கொண்ட யாங்சின்னை அந்த போச நகரம் மிகவும் கவர்ந்து விட்டது.

நகரை அடுத்து நதிக்கரை ப ஆலயத்தைச் சார்ந்த மடம் இருந்த விழாக் காலங்களில் பக்தர்கள் வ தங்குவதற்காக பல விடுதிகள் அ இருந்தன. தன் நண்பர் ஏங் உதவிய வடகோடியிலுள்ள ஒரு விடுதி யாங்சின் தனக்கு அமர்த்திக் கொ டார்.

விடுதியின் முன் வராந் வரவேற்பு அறை, படுக்கை அறை, கு அறை முதலியன மிக வசதிய அதில் இருந்தன. போதிய மேசை நாற்காலி, படுக்கை, மெத்தை யா போடப்பட்டிருந்தன. அவ்விடுதியை சுற்றிலும் வண்ண வண்ணப் பூக்களை பூக்கும் பூச்செடிகள், பச்சைக் கம்பள பரப்பினாற்போல புல்வெளி, ஆங்காங் வானளாவிய மரங்கள், அருகில் வளை

பாய்ந்தோடும் நதி, சிறிது தூரத்தில் வனப்புமிகு மலை—இவை யாவும் மன திற்கு எழுச்சியும், கண்ணிற்கு குளிர்ச்சி யும் அளிப்பதாய் அமைந்திருந்தன. ஒரு கவிஞனுக்கு, உயர்படிப்பு படிக்கும் மாணவனுக்கு அந்த அழகிய விடுதியும், சீரிய சுற்றுப்புற சூழ்நிலையும் மிகவும் உகந்ததாய் இருந்தன. தனது விடுமுறை நாட்களை மன நிறைவோடும், நிம்மதி யாயும் அங்கு இன்பமாய் கழிக்க யாங்சின் முடிவெடுத்து விட்டார்.

“இங்கே இருக்கும் நாட்களில் நான் ஒரு சன்னியாசி வாழ்வு வாழ்ந்து, புத்தகப் புழுவாகவே விளங்கப் போகி றேன். தேர்விலும் முதல் மதிப்பெண்கள் பெற்று வெற்றி பெறுவேன்” என்ற யாங்சினை புன்னகையுடன் பார்த் தார் ஏங்.

“நல்லது, என் மனமார்ந்த நல் வாழ்த்தும், நல்லாசியும்! நான் வரு கிறேன். வேளாவேளைக்கு உனக்கு உணவு இங்கு வந்து சேரும்” என வாழ்த்தி விடைபெற்ருர் ஏங்.

மறுநாள்.

அங்குள்ள மடத்தையும், ஆலயத்தையும் சுற்றி வரும் போது யாங்சின் மேற்குப்பக்கம் கோவில் மதில் சுவரை அடுத்து ஒரு அழகிய மாளிகை இருக்கக் கண்டார். அதைச் சுற்றி மதில் சுவர். சுவருக்கும், மாளிகைக்குமுள்ள அகன்ற இடைவெளியில் அருமையான தோட்டம். அதில் வித விதமான பழ மரங்கள், பூச்செடிகள் பல மிகச் செழிப்பாய் வளர்ந்திருந்தன. மாளிகை யின் எடுப்பான அமைப்பையும், சுற்றி யுள்ள செழிப்பான தோட்டத்தையும் பார்த்தால், அது ஒரு பணக்காரரின் இடமாகத்தான் இருக்க வேண்டுமென்று எண்ணிஞர் யாங்சின்.

விடுதிக் காவலாளியை விசா ரித்ததில் அந்த மாளிகை கோவிலைச் சேர்ந்தது என்றும், ஆனால் ஆதியில் அதைக் கட்டி ஆலயத்திற்கு அன்பளிப் பாய்க் கொடுத்தவர் பண்ணையார் சுயு என்றும், அவர் சமீபத்தில் காலமானதும், அவரது குடும்பத்ினர் நகரத்திலிருந்து அங்கு வந்து குடியிருக்கிருர்கள் என்றும் தெரிந்தது.

மூன்ரும் நாள் இரவு அம் மாளிகையிலிருந்து இனிமையான சோக கீதம் மெதுவாக, மென்மையாக, ஏழு நரம்புகளாலான சின் என்னும் வாத்தி யம் அவர் நெஞ்சை நிறைத்தது. அந்த இசையைக் கேட்டு ரசித்த வண்ணம் யாங்சின் அன்று இரவு தூங்கி விட்டார்.

அடுத்த நாள் காலையில் யாங் சின், அம்மாளிகைப் பக்கம் சென்று நின் ருர். அந்த மதில் வாசல் முன் அழகிய சிற்ருேடை ஒன்று ஓடியது. அதன் மீது சிவந்த பாலம் ஒன்றும் இருந்தது. அதன் மேல் ஏறிச் சென்றுதான் மாளிகை மதில் வாயிலை அடைய வேண்டும். முன் வாயிற் கதவு சாத்தியிருந்தது.

மதில் சுவரை அடுத்து ஒரு தனிப்பாதை ஆலயம்வரை சென்றது. அதன்வழி சென்ருல் யாங்சின் தங்கி யிருக்கும் விடுதியின் பின்புறத்தை அடையலாம். அம்மாளிகையில் தென் புறத்தில் மதிலில் ஒரு சிறு கதவு இ தது. அதைத் திறந்து வந்தால் நேரங்க நதிக்குச் செல்லலாம். அக்கதவின் அரு கில் நின்று காது கொடுத்துக் கேட்டார் யாங்சின். உள்ளே குழந்தைகள் ஓடி



விளையாடும் குரலும், இடையிடையே இளம் மங்கையர் பேச்சும் கேட்டன. உடனே, யாங்சின் அம்மாளிகையில் யார் யார் குடியிருப்பார்கள்; எத்தனை ஆண்கள், எத்தனை பெண்கள் என்றெல்லாம் தன் கற்பனையில் கணக்குப் போட்டுக் கொண்டே தன் விடுதிக்கு வந்து சேர்ந்தார். எப்படியும் அம்மாளிகையின் மர்மத்தையும், அதில் வசிப்பவர்களைப் பற்றியும் அறிய வேண்டுமென்ற அவா அதிகம் ஏற்பட்டது அவருக்கு.

அதற்கு ஏற்றாற்போல், மறு வாரம் ஒரு திடுக்கிடும் நிகழ்ச்சி நடந்தது.

நகரில் ஆணையர், ஜெனரல் ...ங்சிங் திடீரென மாண்டார். அவருக்குப் பதில் ஆணையர் தலைநகரிலிருந்து வேறொருவர் வருவதற்குள் நகரிலுள்ள கட்டுப்பாடில்லாத சில சிப்பாய்கள் ஜெனரல் வாங்சிங்கின் சவ ஊர்வலத்தின்போது கலகம் செய்தனர். அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி சில சமூக விரோதிகள் நகரிலுள்ள பணக்காரர்களின் வீட்டில் கொள்ளையடிக்கத் தொடங்கினர். சிப்பாய்களின் கலகமும், கொள்ளையடிக்கும் செய்தியும் காட்டுத் தீ போல் எங்கும் பரவியது.

நகரிலும், சுற்றுப்புறங்களிலும் ஒழுங்கு மீறிய சிப்பாய்களும், சமூக விரோதிகளும் பல அக்கிரமங்களையும், அட்டகாசங்களையும் புரிகின்றனர்; அதனால் பெண்களுக்கும், மற்ற உடமைகளுக்கும் பாதுகாப்பு இல்லையெனப் பீதி எல்லா திசைகளிலும் பரவியது.

மாளிகை மதில் சுவரின் தென்புறத்திலுள்ள சிறு கதவு திறந்து, அதன் வழியே ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி, இரு இளம் பெண்கள், ஒரு சிறு பையன் நால்வரும் வெகு வேகமாய் ஆலயம் நோக்கி ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)





# ஆசிரியர் தொகுதி

**தாயில்லாமல் நானில்லை**
**தாய்: 2 சேய்: 2**




ஆல் இண்டியா ரேடியோ என்பது ஆகாஷ்வாணி ஆகி விட்டது. கடந்த வாரம் கொதிக்கிற கோபத்தோடுதான் ஆல் இண்டியா ரேடியோ இனி நமக்கு அன்னியமானது என்று எழுதினேன். இனி ஆல் இண்டியா ரேடியோ என்று சொல்வது கூட தவறு. அகில இந்திய வானொலி நிலையம் என்றுதான் அவர்கள் வழங்க வேண்டும் என்று நாம் போராட வேண்டும். வானொலி நிலையத்தார் ஆகாஷ்வாணி என்கிற சொல்லை அகற்றுகிறவரை பேசு, பாடுகிற தமிழர்கள் வானொலி நிகழ்ச்சிகளைப் புறக்கணிக்க வேண்டும். இதற்கிடையில் தொலைக்காட்சியில் இந்திச் செய்தி வாசிக்கப் போகிறார்கள் என்று ஒரு செய்தி வந்திருக்கிறது. அப்படி நிகழ்ந்தால் தொலைக்காட்சியில் பங்கு பெறுகிற நிகழ்ச்சிகளைக்கூட, ஏன் பார்ப்பதைக்கூட தமிழர்கள், புறக்கணிக்க வேண்டும். தமிழர்கள் அல்லாதவர்கள் கலந்து கொண்டால் கவலைப் படவேண்டாம். தமிழகம் அவர்களைத் தாங்குகிறவரை தாங்கும்!

இந்த வகையில் அ. இ. அ. தி. மு. க வின் செயற்குழு தீர்மானம் வரலாற்றுப் பெருமை பெற்றது. நீறுபூத்த நெருப்பான இந்தி எதிர்ப்பில் இது புதுக்காற்றின் புறப்பாடு!



கூறியது கூறல் குற்றம் என்கிறார்கள். இப்பொழுது நான் சொல்லப் போவதை மீண்டும் மீண்டும் சொல்லா விட்டால்தான் குற்றம். புரட்சித் தலைவர் அறிவித்த குழந்தைகளுக்கான இலவச உணவுத் திட்டத்தை குறை சொல்லுகிறவர்கள் இரக்கமற்றவர்கள்.

பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் இருக்கிற ஈரம்கூட இவர்களுக்கு இல்லாமல் போனது வருந்தத்தக்கது.

நான் இப்படிச் சொல்லுவதற்கு ஒரு காரணம் உண்டு. சின்ன வயதில் நான் பெற்றவர்களை இழந்தவன்.

அப்போது எங்கள் பள்ளிக்கூடத்தில் அமுலில் இருந்த இலவச மதிய உணவுத் திட்டத்தால்தான் என் போன்ற சிறுவர்கள் உயிர் பிழைத்திருக்க முடிந்தது. அப்போதெல்லாம் நாங்கள் சிலேட்டோடும் பிளேட்டோடும் போவோம். எல்லாக் குழந்தைகளுக்குமான இப்படி ஒரு திட்டத்தை புரட்சித் தலைவர் அறிவிக்கிறபோது குழந்தைகளுக்குச் சோறு கிடைக்குமே என்று பார்க்காமல் புரட்சித்தலைவருக்குப் பேரு வந்து விடுமே என்று பார்க்கிறவர்கள் மனித உருவில் நடமாடுகிற ஓநாய்கள்.

திட்டத்தில் தவறுகள் நிகழும் என்று இவர்கள் நினைத்தால், அந்தத் திட்டத்தை இப்படி இப்படிச் செயல்படுத்துங்கள் என்று ஆக்கப்பூர்வமான ஆலோசனைகளைச் சொல்லட்டும். அதை விட்டு விட்டு, தவறு நடந்து விடும் ஆகவே தரவேண்டாம் குழந்தைகளுக்கு உணவு என்று தப்புத்தாளம் போடுவது மனித நாகரிகத்திற்கே எதிரான குற்றமாகும். 'களைகள் வந்து விடும் ஆகவே பயிருக்கு பாய்ச்சாதே தண்ணீர்' என்பது போல இருக்கிறது.

கே. ரவீந்திரன் அவர்களால் பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. முகவரி: 34, நெல்சன் மாணிக்கம் சாலை, சென்னை-600 029.

ஆசிரியர்: வலம்புரி ஜான்.

# அந்த முப்பது நாட்கள் 2

சீனக் கதை
மூலம் : லின்யுடிங்

-பொன் பரமகுரு



நாற்பது வயதுள்ள அந்த நடுத்தரமான அம்மையார் அலங்கார ஆடை அணிகலன்கள் அணிந்து, நல்ல செல்வச்சீருடன் காணப்பட்டார். அவர் காலஞ்சென்ற பண்ணையார் சுயு அவர்களின் மனைவி. இரு இளம் பெண்களில் ஒருத்தி அந்த அம்மையாரின் மகள் இன்ஜிங். மற்றொருத்தி அவளது தோழி.

இன்ஜிங் எளிய, எழிலான நீலநிறக்கவுன் அணிந்திருந்தாள். தன் நீண்ட கரிய தலைமுடியை அழகாய்ப் பின்னி தொங்க விட்டிருந்தாள். வயது பதினேழு இருக்கும். வயதுக்கேற்ற உடல் வனப்பும், முக அழகும் பரிமளித்துக் கொண்டிருந்தது. கூட வந்த சிறுவன் அவளுடைய தம்பி.

அவர்களைக் கண்டதும் ஆலயத்திலுள்ள பூசாரிகளும், சிப்பந்திகளும் மிகவும் பரபரப்பு அடைந்தனர். அந்த அம்மையார் பீதியுடன் நகரில் நடக்கும் கலவரம் பற்றியும், கொள்ளைகள் பற்றியும் வெகு பதட்டத்துடன் பூசாரிகளிடம் சொல்லிக் கொண்டிருந்தார். தனக்கும், தனது இளம் குழந்தைகளுக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

"அம்மா! நாம் எதைப்பற்றியும் கவலைப்படத் தேவையில்லை. நாம் தைர்யமாக நம் வீட்டில் தங்கி இருப்பது தான் நல்லது. இல்லையென்றால் யாராவது வீட்டில் புகுந்து கொள்ளையடித்து விடுவார்கள். ஆபத்து ஏற்படும் போது நாம் இப்போ வந்த வழியிலே ஆலயத்

துக்கு வந்துவிடலாம். ஆகவே நாம் வீட்டுக்குச் செல்வதுதான் நல்லது.'' என வெகு திடமாயும், தெளிவாயும் கூறினுள் இன்ஜிங்.

அவளது அழகையும், அறிவை யும், திடத்தையும் கண்டு ரசித்த யாங்சின், அவர்களுக்கு உதவ முன் வந்தார்.

தலைமைப் பூசாரியிடம், "அவர் களுக்குத் தக்க பாதுகாப்பு அளிப்பது நமது கடமை. எனது நண்பர் 'ஏங்' நகரில் இருக்கிருர். அவரது உதவி கொண்டு தளபதியிடம் கூறி, சில சிப்பாய்களை அழைத்து வந்து, அவர் களது மாளிகைக்குத் தக்க பாதுகாப்பு கொடுக்கலாம். அதுவரை நீங்கள் அவர் களை கண்காணித்துக் கொள்ளுங்கள்.'' என்ருர் யாங்சின்.

"சரியான யோசனை! உங்க ளுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி!'' என அப்பெண் இன்ஜிங் கனிவான பார்வையுடன் யாங்சினிடம் கூறினுள். அவளது தாயாரும் அதை ஆமோதித்து நின்ருள். இவ்விதமாக அக்குடும்பத்தின் தொடர்பு கிட்டியதை எண்ணி மகிழ்ந்த யாங்சின், உடனே நகரம் சென்று, தன் நண்பர் ஏங் மூலம் முயன்று, ஆறு சிப்பாய்களை கூட்டி வந்து அம்மாளிகைக்கும், அதில் வசிப்பவர்களுக்கும் தக்க பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்தார்.

ஒரு வாரத்தில் புது ஆணையர் வந்ததும் நகரில் கலகம் ஓய்ந்தது. அமைதி நிலவியது. அம்மாளிகைக்கு பாதுகாப்புக்கு வந்த ஆறு சிப்பாய்களும் நகரம் திரும்பிச் சென்றனர். யாங்சின் தன் சீரிய சேவைக்கு அந்த இளம்பெண் இன்ஜிங்கின் கடைக்கண் வீச்சும், கனிவான புன்னகையும் கிடைக்குமா வென ஏங்கி நிற்க ஆரம்பித்தார்.

சில தினங்களில் திருமதி சுயு விடமிருந்து விருந்துக்கு அழைப்பு வந்தது. யாங்சின் சேவையைப் பாராட்டி நன்றி சொல்ல அந்த விருந்து ஏற்பாடாயிற்று. அந்த குடும்பத்துடன் நெருங்கிப் பழக நல்ல வாய்ப்பு கிடைத்த தற்கு யாங்சின் மிகவும் மகிழ்ச்சி அடைந் தார்.

யாங்சின் அந்த மாளிகைக்குப் போன போது, வரவேற்பு அறையில் திரு மதி சுயு மலர்ந்த முகத்துடன், குவித்த கரங்களுடன் அவரை வரவேற்ருர்.



திருப்பி வணங்கி ஒரு சொகுசு இருக்கை யில் அமர்ந்தார் யாங்சின். அவர் எதிரே மற்ருெரு ஆசனத்தில் அமர்ந்த திருமதி சுயு, "உங்களுக்கு முறையே என் குடும் பத்தாரை அறிமுகம் செய்கிறேன்.'' என்ருர். அப்போது பன்னிரண்டு வயதான சிறுவன் அங்கு வந்தான். "இவன் தான் என் ஒரே மகன் குன்லாங்,'' என அறிமுகம் செய்தார்.

"அருமை மகளே இன்ஜிங்! இதோ இங்கு யார் வந்திருக்கிறது என்று வந்து பார்!'' என அன்பாய் அழைத் தார்.

இன்ஜிங் வரவேற்பறைக்கு வர சற்று தாமதம் ஆனது.

அவள் நாணத்தோடு வரவேற் பறைக்கு வந்து மிகப்பணிவாக, ஆனால் கம்பீரமாக, வணக்கம் தெரிவித்தாள்.



உடலைக் கவ்விப் பற்றிய ஒய்யார ஆடை அணிந்து, சீராக அலங்காரம் செய்து, எழில்மிகு வதனத்தில் புன்னகை தவழ, "உங்க உதவிக்கு மனமார்ந்த நன்றி." என அன்புடன் யாங் சினைப் பார்த்துக் கூறி விட்டு, தன் தாயார் அருகில் அவளும் அமர்ந்தாள்.

விருந்து வெகு சிறப்பாய் இருந்தது. அதுசமயம், மூன்று நான்கு முறை இன் ஜிங் கண்களும் யாங்சின் கண்களும் சந்தித்து சூழ்நிலையில் ஒரு குளிர்ச்சியை உண்டாக்கிக் கொண்டன.

"எனக்கு இன் ஜிங் ஒரே மகள். பதினேழு வயதாகிறது. பள்ளிப்படிப்பு முடிந்ததும் அவளது தந்தை இறந்தார். எனவே மேல் படிப்புக்கு அவளை அனுப்பாமல் நாங்கள் இங்கு குடி வந்தோம்." என்ருர் சுயு.

"இரவு நேரங்களில் இனிமையான, சின் வாத்திய இசை கேட்கிறதே, அது உங்களது மகளின் வாசிப்பு தானே?" என வினவினார் யாங்சின்.

"ஆமா, அவள் முறைப்படி சங்கீதம் படிச்சவ. ஓய்வு நேரங்களில் சின் வாத்தியம் வாசிப்பாள். உங்களுக்கு ம்யூசிக் ரொம்ப பிடிக்குமா?"

"ரொம்ப பிடிக்கும். கவிதைகளும் எழுதுவேன்," என்றபடி அவர் இன் ஜிங்கை மெதுவாக பார்த்தார். அது சமயம் அவளும் பார்த்தாள். இருவர் கண்களும் சந்தித்ததும், உடல்கள் சிலிர்த்தன. உள்ளங்கள் மகிழ்ந்தன.

விருந்து முடிந்து விடைபெறும் போது மட்டும், "வணக்கம்" என புன்னகையுடன் கூறி அவரை வழி அனுப்பினாள் இன் ஜிங்.

அவளுடைய இனிய நடை உடை, பாவனை, பண்பு யாவும் யாங் சின்னை வெகுவாகக் கவர்ந்தன. அவளை மீண்டும் எப்படிச் சந்திப்பது, எப்போது மனம்விட்டுப் பேசுவது என்ற ஏக்கம் ஏற்பட்டது. ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அவர் பல தடவை அந்த மாளிகைக்குச் சென்ற போதிலும் அவளைக் காணவே இயலவில்லை. யாங் சின்னுக்கு பெருத்த ஏமாற்றம். அதனால் எப்படியும் அவளைச் சந்திக்க வேண்டு மென்ற ஆர்வம் விஸ்வரூபமெடுத்தது.

காலையில் ஒருநாள் அவளது தோழியை தற்செயலாய் சந்தித்தார் யாங்சின். அவளும் புன்னகை புரிந்து வணக்கம் தெரிவித்தாள். அந்தச் சந்தர்ப்பத்தை பயன் படுத்தி, உன்னுடைய எஜமானிக்குத் திருமணம் நிச்சய மாகியுள்ளதா என்ன?"என்று கேட்டார் யாங்சின்.

"ஏன் அதைக் கேட்கிறீர்கள்?" என வினவினாள் தோழி.

"ஒன்றுமில்லை, அவளைப்பற்றி அதிகம் அறிய விருப்பம். அன்று அறிமுக மானபின் அவளை நான் மீண்டும் சந்திக்க முடியவில்லை. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆமா ஏன் என்னைப் பார்க்க மறுக்கிறாள்?"

"அது எனக்கு எப்படித் தெரியும்?"

"அவள் ஒரு அருமையான பெண். நான் அவளை ரொம்ப மதிக்கி றேன். மனமார நினைக்கிறேன். சதா அவளையே எண்ணி ஏங்குகிறேன்."

"அப்படியா சேதி? அவளும் உங்களைப்பற்றி என்னிடம் பேசியிருக் கிறாள்" எனக்கூறி நமட்டுச் சிரிப்பு சிரித்தாள்.

"சிரிப்பது இருக்கட்டும். நீதான் எப்படியாவது எனக்கு உதவ வேண் டும். அவளை சந்திக்க ஒருவழி சொல்ல வேண்டும்."

"நானா? வாய்விட்டு உங்களைப் பற்றி என் எஜமானியிடம் பேச முடியாது. அப்படிப் பேசினால் அவள் எவ்விதம் அர்த்தம் கொள்வாள் என்று நிச்சயமாகச் சொல்லமுடியாது."

"பிறகு வேறென்ன வழி? உன்னால்தான் உதவ முடியும்."

"அவளுக்கு கவிதை என்றால் பைத்தியம். நீங்களும் கவிதை எழுதுவ தாய்க் கூறினீர்கள். ஒரு கவிதை எழுதி நாளைக்கு என்னிடம் கொடுங்கள். நான் அதை அவளிடம் கொடுத்துப் பார்க்கிறேன். ஏதாவது பலன் கிடைக் கும். நான் வருகிறேன்," எனக்கூறி விடை பெற்றாள் தோழி.

அன்றே அறையில் தனிமை யில் உட்கார்ந்து பின்வரும் கவிதையை எழுதினார்.

"பருவத் தனம்துள்ளும்
பதுமையாம் பெண்ணரசி
கருமத் தனம் நிமிரும்
கன்னியென நிற்கின்றாய்
கருமித் தனம் வேண்டாம்
கையணைய வந்திடுவாய்
தருமத் தனம் பேணி
தம்பதியே ஆகிடுவோம்!"

மறுதினமே அக்கவிதையை தோழி மூலம் இன்ஜிங்கிற்கு அனுப்பி வைத்தார். அன்று மாலையே பின்வரும் கவிதையை இன்ஜிங்கிடமிருந்து யாங் சின்னுக்குக் கொண்டு வந்தாள் தோழி.

"வானத்து வண்ணம் வழங்கிடும்
மாலை—தன்
ஆனந்தக் கோலம்
அடங்கிடும் வேளை
மனத்துள் மோகம் தோன்றிடுங்
காலை—என்
தென்புறக் கதவும்
திறந்திருக்கும் நாளை".

அக்கவிதையைக் கண்டதும் யாங்சின் னின் உள்ளத்தில் ஒரு வெண்பறவை சிறகடித்துப் பறந்தது.

மறுதினம் மாலை சிறிது முன் னிருட்டு கவ்வியது. தன்னை நன்கு ஆடை அலங்காரம் செய்துகொண்டு புறப்பட்டார் யாங்சின். அவரது மனம் படபடவென அடித்தது. பெருமூச்சு வாங்கியது. ஒருவிதமாய் மாளிகை மதில் சுவரின் தென்புறத்திலுள்ள சிறுகதவை அடைந்தார். கதவின் மீது கைவைத்து மெதுவாய்த் தள்ளினார். கதவும் திறந்தது.

அது மாளிகையின் பின்புறம் மெதுவாக நடந்து பின்புற வராந்தாவை அடைந்தார். அங்கே தோழி யாங்சின் வருகையை எதிர் பார்த்து நின்றாள். உடனே அங்குள்ள ஒரு அறையில் அவரை உட்கார வைத்துவிட்டு:



கண்ணாலே நான் உன்ன படம் புடிச்சேன் — அடி
கண்ணாளம் பண்ணிக்கவும் இடம் புடிச்சேன்
மண்ணாளச் சொன்னாங்க மறுத்தேனடி — இந்தப்
பெண்ணாளப் பலநாளா நெனச்சேனடி

—'புதிய சங்கமம்' சுகாசினி-சந்திரசேகர்

"இதோ வருகிறேன்." என்று உள்ளே சென்றாள்.

எங்கும் ஒரே நிசப்தம். கால் மணிநேரம் ஒருவரையும் காணோம். யாங்சின் பொறுமைக்கு பெருத்த சோதனை. கால்மணி நேரம் கழிவதே ஒரு யுகம் போல் தோன்றியது அவருக்கு.

திடீரென்று தேவதையாய் அவள் வந்தாள்.

வண்ண வண்ணப் பூக்கள் நிறைந்த இரவில் அணியும் பட்டாடை அங்கி அணிந்து, அன்ன நடை நடந்து வந்தாள் இன்ஜிங். அவள் முகத்தில் கவர்ச்சியும் கலக்கமும் தென்பட்டது. அவளது அகன்ற கருவிழிக் கண்கள் காதல் அலைகளை வீசின. ஆனால் அவள் மட்டும் ஏதோ அவசரத்தில் இருப்பது போல் காணப்பட்டாள். அங்கு அதிக நேரம் நின்று பேசக்கூட அவகாசம் இல்லாததுபோல் தோற்றமளித்தாள்.

யாங்சினை அங்கு அவ்வேளையில் சந்தித்த முதற்கூச்சம் தெளிந்ததும் சிறிது உறுதியுடன் கூறினாள்.

"மிஸ்டர் யாங்சின்! நீங்கள் சந்திக்க விரும்பியதால் நான் உங்களை வரச்சொன்னேன். நீங்கள் எங்கள் குடும்பத்திற்கு செய்த பேருதவிக்குத் தனிப்பட்ட முறையில் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன். அந்தக் காதல் கவிதையை நீங்கள் என் தோழி மூலம் அனுப்பியது கண்டு நான் ஆச்சரியம் அடைந்தேன். எனினும் உங்கள் கவிதை வெகு அருமை. நான் அதை மிகவும் ரசித்தேன். நேரில் உங்களை



30-5-82 தாய் இதழில் 'நீங்கள் இப்படி பாக்யராஜ் அப்படி' என்று நண்பர் ஒருவர் எழுதியிருந்தார். பாக்யராஜ் அப்படி அல்ல என்பதற்கு எனக்குத் தெரிந்த ஒரு சிறு விளக்கம் தருகிறேன். வானொலிப் பேட்டி நிகழ்ச்சிகளில், தனிப்பட்டவர்களின் நிறுவனங்கள், பத்திரிகைகளின் பெயர்கள் ஒலி பரப்பாவதை அனுமதிக்க மாட்டார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால் தான் பாக்யராஜ் 'தாய்' இதழில் என்று கூறாமல் ஒரு பத்திரிகையில் என்று கூறியிருப்பார் என்பது என் எண்ணம்.

—நா. லீலா கிருஷ்ணன்

நான் வேண்டுவதெல்லாம் இனி அத்தகைய காதல் கவிதைகளை தயவு செய்து எனக்கு எழுதாதீர்கள்'' இவ்விதம் அவள் மூச்சுவிடாது பேசியது ஏதோ ஏற்கனவே தயார் செய்து கொண்டு பேசிய வசனம் போல் தோன்றியது.

யாங்சின் அதைக் கேட்டு அதிர்ச்சியுற்றார். ''மிஸ் இன்ஜிங்! உன் கவிதை கண்டுதான் நான் இங்கு வந்தேன். அதுவும் உன்னிடம் கொஞ்சம் பேசிவிட்டுப் போகத்தான்'' என்றார்.

''உண்மை! நான்தான் உங்களை அழைத்தேன். அந்த ஆபத்தான காரியத்தை ஆனந்தமாகத்தான் செய்தேன். ஆனால் அதனை நீங்கள் தவறாக எண்ணிவிடக் கூடாது. மன்னிக்கவும்! வருகிறேன்.'' என தன் உள்ளுணர்வுகளை அடக்கிக்கொண்டு படபடவெனப் பேசி விட்டு, உடனே திரும்பி அவசரமாய் உள்ளே சென்று விட்டாள் இன்ஜிங்.

ஏமாற்றத்தாலும், அவமானத்தாலும் கோபமடைந்தார் யாங்சின். தன் காதுகளையே அவரால் நம்ப முடியவில்லை. அங்கு நடந்ததும் அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. கவிதையை எழுதி அங்கு வரச்சொல்லிவிட்டு-அவள் ஏன் ஒரு குட்டி பிரசங்கமே நிகழ்த்த வேண்டும்? பயத்தால் கடைசி நேரத்தில் மனம்மாறி இவ்விதம் பேசிச்சென்று விட்டாளா? அவரால் அவளைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. தன்னை ஒரு கேலிக்கு ஆளாக்கியதால் அவருக்கு அவள் மீதிருந்த விருப்பமெல்லாம் வெறுப்பாய் மாறிவிட்டது.இனி போதும் இந்தக் காதல் விளையாட்டென்று எண்ணிச் சோகத்துடன் தன் விடுதி திரும்பினார் அவர்.

இரண்டு இரவுகள் நிம்மதியின்றி கழிந்தன. மூன்றாவது இரவில் தான் யாங்சின் நிம்மதியாய்த் தன் படுக்கையில் படுத்துத் தூங்க ஆரம்பித்தார். நடுநிசி நேரம், ஏதோ மெல்லிய கரம் இருளில் தன்னைத் தட்டி எழுப்புவதை உணர்ந்தார். உடனே எழுந்து, விளக்கை ஏற்றினார். இன்ஜிங்கின் தோழி நின்று கொண்டிருந்தாள்.

''எழுந்திருங்கள். அவள்—உங்கள் காதலி இன்ஜிங் வருகிறாள்.'' என மெல்லிய குரலில் கூறிவிட்டு தோழி வெளியே ஓடி விட்டாள்.

தனது கண்களைக் கசக்கிக் கொண்டு யாங்சின் தன் படுக்கை மீது உட்கார்ந்தார். தான் தூங்குகிறோமா அல்லது விழித்துக் கொண்டு இருக்கிறோமா என்று அவருக்கே ஒரு சந்தேகம். சரி, நடப்பது நடக்கட்டும், என்று காத்திருந்தார்.

சற்று நேரத்தில் இன்ஜிங் அந்தப் படுக்கை அறைக்குள் வந்தாள்.

அவளது அழகிய முகம் நாணத்தாலும், பதட்டத்தாலும் சிவந்திருந்தது. அவளது கர்வம், சுயக்கட்டுப்பாடு யாவும் காற்றில் பறந்து போய் விட்டது போல தோன்றினாள். அவள் அன்று நடந்ததற்கு எவ்வித விளக்கமோ மன்னிப்போ கூறவில்லை. அவளுடைய

பட்டுப் போன்ற கருங்கூந்தல் காற்றில் பறந்தது. அவளது ஆழமான காந்தக் கண்களால் யாங்சின்னை விழுங்குவது போல் மோகப்பார்வை பார்த்தாள். எவ்விதப் பேச்சுமின்றி யாங்சின் அருகில் படுக்கையில் அமர்ந்தாள். அவரைப் பார்த்து புன்னகை பூத்தாள்.

யாங்சின்னின் இதயம் படபடத்தது. சப்த நாடியும் துடிக்க ஆரம்பித்தது.

கனவு போல் காரியங்கள் நிகழ்வது கண்டு அதிசயித்தார். தன் படுக்கை அறைக்கு அவள், தானே வலிய வந்து தன்னிடம் சரண் புகுவதைக் கண்ட அவர், அவள் தன்னை மாளிகையில் மதிக்காமல் கேலி பேசி, அலட்சியப் படுத்தி, அறிவுரை கூறி அனுப்பியதையெல்லாம் உடனே மறந்தார்.

அவரது கோபம் எல்லாம் ஒரே நொடியில் மோகமாய் மாறியது.

இன்ஜிங் விளக்கை அணைத்தாள். வெளியில் பௌர்ணமி நிலவு பால் போல் காய்ந்தது. நிலவொளி சன்னல் வழியே படுக்கை அறையில் பாய்ந்து, வண்ண ஒளி வீசியது. அந்த ரம்மியமான சூழ்நிலை யாங்சின்னை முறுக்கேற்றியது.

அருகில் அமர்ந்திருந்த இன்ஜிங் உடலின் சூடு அவரைச் சுண்டி இழுத்தது. இன்ஜிங்குடைய மௌனம் யாங்சின்னை துணிய வைத்தது.

தன் இரு கரங்களாலும் இன்ஜிங்கை அப்படியே வாரிக்கட்டி தன்னோடு இறுக அணைத்தார். கண நேரத்தில் இருவரது அதரங்களும் ஒட்டி, உராய்ந்து உறவாட ஆரம்பித்து விட்டன.

இன்பத்தால் அவளது இதயம் படபடவெனத் துடித்தது. மெய் சிலிர்த்தது. உணர்ச்சி ஓங்கியது. அவளது இளமை குலுங்கும் அழகிய மேனியை மூடி மறைந்திருந்த அங்கி நழுவி, மெல்ல மெல்ல அகன்றது. எவ்விதப் பேச்சுமின்றி அவள் அப்படியே கண்களை மூடியபடி படுக்கையில் சாய்ந்தாள்.

(தொடரும்)

## ராத்திரிப் பூக்கள்

ராத்திரிப் பூக்கள் — இவர்கள்
ராத்திரிப் பூக்கள்!
பூத்திரி விழியால்
காத்திருக்கும் — இவர்கள்
ராத்திரிப் பூக்கள்!

இருள் வீட்டின்
மூலை முடுக்கில்
ஒளிர்ந்திடும்
நிலா முகங்கள்!

வறுமைத் தோலைப்
போர்த்தியிருக்கும்
பலாச் சுளைகள்!

அமுதக் கலசங்கள்
அழகு காட்டும்
தென்னை மரங்கள்!

உல்லாச மன்னர்கள்
ஊஞ்சல் ஆடிடும்
ஆலம் விழுதுகள்!

தொட்டில் தொடாத
தாய்மைக் கன்னிகள்!
கட்டில் கதைகளின்
'கரு'வே அவர்கள்!



பகலில் தூங்கி
இரவில் மலரும்
அல்லி மலர்கள்!

ராத்திரிப் பூக்கள் — இவர்கள்
ராத்திரிப் பூக்கள்!

—கவிஞர். தமிழ்தாசன்.

## 15-6-82 முதல் 21-6-82 வரை

**நீங்கள் பிறந்த ஆங்கிலத் தேதி, மாதம் இவைகளைக் கொண்டு பலன் பார்த்துக் கொள்ளுங்கள்.**



**(மார்ச் 21—ஏப்ரல் 20)**

தொழில் துறையில் ஒரு நிரந்தரமான தன்மை ஏற்பட்டு விடும். இது வரை இருந்து வந்த தடைகள், தானே விலகி விடும். வியாபாரத்தில் புதிய சரக்குகள் கொள்முதல் செய்ய ஏற்ற நேரம். பாங்குகளின் கெடுபிடிகள் அதிகம் இருந்தாலும் எதிர்பார்த்த பணவரவு உண்டு. உத்தியோகத்தில் விரும்பிக் கேட்ட இட மாற்றம், சம்பளப்பாக்கி வரவு, நிரந்தரமான வேலை, எல்லாவித நல்வாய்ப்புகளும் உண்டு. குடும்பத்தில் இது நாள் வரை ஏதாவது மனஸ்தாபம், உள் புகைச்சல் ஏதும் இருந்து வந்தால் அது மாறி அமைதி நிலவும். செலவுகள் கட்டுக்குள் அடங்கியே இருக்கும். சொத்துக்கள் வாங்குவதில் ஓரளவு அபிவிருத்தி ஏற்படும். ஏதாவது மன உளைச்சலினால் நிம்மதியின்றி தவிப்பீர்கள்.




**(ஏப்ரல் 21—மே 21)**

தொழிலில் பல வித இடைஞ்சல்கள் ஏற்பட்டு அதை சமாளிப்பீர்கள். பணக் கஷ்டம் ஏற்படாது. எந்த காரியமும் ஒரு வித பரபரப்புடனும், அவசரத் தன்மையுடனும் நடக்கும். வியாபாரத்தில் புதிய தொழில் தொடங்க நினைத்தால் இப்போது நன்மை ஏற்படும். சேமித்து வைக்கும் அளவு பணப் புழக்கம் ஏற்படும். உத்தியோகத்தில் எதிர்பார்த்த பதவி உயர்வு, சம்பள உயர்வு கிடைக்கும். மன உற்சாகம் இருக்கும். குடும்பத்தில் பொறுமை, நிதானம் இவற்றைக் கடைப் பிடிக்கும்படி சில நேரம் அமையும். அலைச்சலும், உறவினர்களால் மறைமுக எதிர்ப்பும் ஏற்படக்கூடும்.

**(மே 22—ஜூன் 21)**

தொழில் துறையில் அனுகூலமான நிலைகள் இருந்து வந்தாலும், நினைத்த படி காரியங்களை நிறைவேற்ற முடியாமல், அரசாங்க அதிகாரிகளால் சில தொல்லைகள் ஏற்பட்டு அதைச் சமாளிப்பீர்கள். வியாபாரத்தில் போட்டிகளால் ஏற்படும் தொல்லைகளை சமாளித்து வெற்றி காண்பீர்கள். உத்தியோகத்தில் மேலதிகாரிகளின் ஆதரவும், அலுவலகத்தில் மன திற்குப் பிடித்த சூழ்நிலையும் இருக்கும். குடும்பத்தில் மனைவியின் உடல்நிலை பாதிக்கப்பட்டு வைத்தியச் செலவு ஏற்படலாம். பூர்வீகச் சொத்துக்களில் தகராறுகள் நீங்கி நன்மை ஏற்படும். பண விஷயத்தில் எதிர்பாராத லாபம் ஏற்படும். வேலை வாய்ப்பைத் தேடி இருப்பவர்களுக்கு நல்ல சேதி வரும்.

**(ஜூன் 22 — ஜூலை 23)**

தொழிலில் வெளி வட்டாரப் பழக்கமும், அயல்நாட்டுத் தொடர்பும் ஏற்படும். புதிய கூட்டுத் தொழில் செய்ய முயற்சி எடுப்பார்கள். வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கல் சரளமாய் இருக்கும். புதிய ஏஜென்ஸி அல்லது கொள்முதல் இவற்றால் அதிக லாபம் ஏற்படும். உத்தியோகத்தில் ஏதோ ஒரு வகையில் மாற்றம் ஏற்படும். அது நன்மையும், மகிழ்ச்சியும் விளைவதாய்த்தானிருக்கும். குடும்பத்தில் பொருளாதாரம் நன்றாய் இருந்தாலும், செலவினங்கள் இருக்கும்.

# அந்த முப்பது நாட்கள்



இன்ஜிங், இளமையும் அழகும் நிரம்பிய தன் உடலுடன் யாங்சின்னை இழுத்து தன் மீது போர்த்திக் கொண்டாள்.

வானத்திலிருந்து மன்மதன் மலர்களை இருவரின் உள்ளங்களிலும் தூவ ஆரம்பித்து விட்டான்.

அதிகாலையில் மடத்தின் மணியோசை ஒலித்தது. பொழுது விடியத் தொடங்கியது. தோழி வந்து மாளிகைக்கு திரும்ப வேண்டுமென எச்சரித்தாள். உடனே இன்ஜிங் எழுந்து அவசர அவசரமாய் அதிகாலை மங்கிய வெளிச்சத்தில் தன் ஆடையைச் சரி செய்தாள். கைகளால் தலைமுடியைக் கோதி, படிய வைத்தாள். பிரியாவிடை ஏக்கம் முகத்தில் தேங்கி நிற்க, பெருமூச்சுடன் யாங்சின்னை மோகப் பார்வை பார்த்து தன் தோழியுடன் வேகமாக நடந்து சென்றாள். இரவு முழுவதும் அவள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. எல்லாம் யாங்சின் தான் பேசினார். இடையிடையே அவள் உம் கொட்டினாள். சில சமயம் பெருமூச்சு விட்டாள். தனது ஆழ்ந்த முத்தங்களால் அவர் சொல்வதை ஆமோதித்தாள். யாங்சின் தனக்கு அவள் மீதுள்ள அளவில்லா அன்பு, காதல், மோகம் யாவும் வாயால் எடுத்துச் சொல்லச் சொல்ல அவள் எல்லாவற்றையும் செயலில் காட்டிவிட்டு சென்றாள்.

இதுவரை யாங்சின் இத்தகைய இன்பத்தை, சுகத்தை அனுபவித்ததே கிடையாது. இவர் ஒரு தனி உலகிலேயே சஞ்சரிக்கத் தொடங்கினார். அடுத்த இரவிலும் அவள் வருகைக்காக வழிமேல் விழி வைத்து வெகு நேரம்வரை காத்திருந்தார். எந்நேரத்திலும் அவள் வந்து தன் சாதாரணப் படுக்கை அறையை அவளது காதலால் இன்பபுரியாய் மாற்றுவாளென ஏங்கிக் கிடந்தார். ஆனால், அவர் நினைத்தது, எதிர் பார்த்தது நடக்கவில்லை. அவள் வரவில்லை. ஓரிரவல்ல, பல இரவுகள். ஒருவேளை அவள் தனது தாங்க முடியா மோக வெறியில் ஒருநாள் தன்னிடம் வந்து தனது தாகம் தீர்ந்ததும், நின்று விட்டாளா? அல்லது தனது காதல் லீலை சரிதானா எனச்சிந்தித்துக் கொண்டிருக்கிறாளா? அவளைப் புரிந்து கொள்ள முடியவேயில்லையே யென ஆழ்ந்த சிந்தையில் மூழ்கினார்.

அவளை மறக்க எவ்வளவோ முயன்றும் யாங்சின்னால் முடியவில்லை. ஒரு நாள் அவளது தாயாரைக் காணும் சாக்கில் அவளது மாளிகைக்கு சென்றார். அந்த அம்மையார் என்றும்

பொன் பரமகுரு

போல் யாங்சின்னை வெகு அன்பாக வர வேற்று உபசரித்தார். நடுப்பகல் உணவு சாப்பிடச் சொன்னுர். சாப்பாட்டறை மேஜைக்கு வந்த இன்ஜிங் எப்போதும் போல் எவ்வித உணர்ச்சியும் வெளிக் காட்டாது அமர்ந்தாள்.

யாங்சின்னுடன் மிகவும் நெருக்க மாய்ப் பழகிய அறிகுறி எதுவும் தன் முகத்திலோ, பேச்சிலோ எள்ளளவும் காட்டவில்லை. ஏதாவது சமிக்ஞை தனக்குக் காட்டுவாளென்று யாங்சின் எண்ணி ஏமாந்தார்.

இருவர் கண்களும் சந்தித்த போது கூட எவ்விதச் சலனமுமின்றி உணர்ச்சியற்று இருந்தாள். ஒருவேளை அவளது தாயார் ஏதாவது சந்தேகப் பட்டு, அதனுல் அவள் அப்படி இருக் கிருளோ என்று நினைத்துக்கொண்டாள். அவளது மௌனத்துக்கு ஏதாவது கார ணம் இருக்கத்தான் வேண்டுமெனக் கருதினுர்.

கிட்டத்தட்ட ஒருவாரம் எவ்வித நிகழ்ச்சியுமின்றி காலம் கடந்தது.

ஒருநாள் மாளிகையின் தென் புறக் கதவு வழியாக தோழி வந்தாள்.

"இதோ மாளிகையின் தென் புறக் கதவின் மாற்றுச்சாவி. இதனை என் எசமானி செய்விக்க இத்தனை நாளா னது. இனி நீங்கள் மனம்போல் வந்து என் எசமானியை நிம்மதியாய் சந்திக்கலாம்." என்று கூறிச் சாவியைக் கொடுத்துவிட்டு உடனே சென்று விட் டாள் அவள்.

அந்த நாள் இரவு முதல் இன்பம் ஒரு தொடர்கதையாகியது. யாங்சின் அடிக்கடி இன்ஜிங்கை அந்த மாளிகையில் பின் அறையில் சந்தித்து வந்தார். சாதாரணமாக நள்ளிரவுக்குப் பின் தான் அவர்களது சந்திப்பு நிகழும். விடியும்வரை நீடிக்கும். ஏதாவது ஒரு நாள் வர இயலவில்லையென்ருல் முன் கூட்டியே தன் தோழி மூலம் தகவல் அனுப்பி விடுவாள் இன்ஜிங்.

யாங்சின் தெவிட்டா இன்பத்தை அனுபவித்தார். இன்ஜிங் தன் மனம் திறந்து பேசினுள். காதல் மழை பொழிந் தாள். எது நேரிட்டாலும் அவர்கள் இரு வரும் இணைபிரியாது இருக்கச் சபதம் ஏற்றனர். நல்ல மதிக்கூர்மையும், ஆழ்ந்த அறிவும் படைத்தவள் இன்ஜிங். எனவே அவள் எதையும் தீர சிந்தித்து, திட்ட மிட்டுச் செயலாற்றுபவள். பல இரவுகள் அவர்கள் இருளில் இணைந்திருந்து, கிசு கிசுவெனத் தங்கள் எதிர்காலம் பற்றிப் பேசிய வண்ணமிருந்தனர்.

தனது களவு ஒழுக்கத்தைப்பற்றி அவள் கடுகளவும் கவலைப்படவில்லை. அதைப்பற்றி யாங்சின் கேட்ட போது அவரை இறுகத்தழுவி, ஆசையோடு முத்தமிட்டு, அவரது காதில், "நான் என்ன செய்ய. உங்கள் மீது எனக்கு அவ்வளவு காதல்" என முணுமுணுத் தாள்.

"உனது தாயார் நமது உறவைக்கண்டு பிடித்தால் நீ என்ன செய்வாய்?" என ஒரு முறை கேட்டார் யாங்சின்.

"அப்போ அவள் உங்களை தன் மருமகனுய் ஆக்கிக் கொள்வாள்." எனக்கூறி புன்னகை பூத்தாள்.



அவர்களது நெருக்கமான காதல் இன்ப வாழ்வு சரியாக முப்பது நாட்கள் நடந்தது.

யாங்சிங் விடுமுறை முடிந்து தனது இறுதிப் பரீட்சைக்காக தலைநகர் செல்ல வேண்டிய நேரம் வந்தது. இன் ஜிங் எவ்விதப் பதட்டமோ, அதிர்ச்சியோயின்றி, "அவசியம் போக வேண்டுமெனில் சொல்லுங்கள். ஆனால் தலைநகரம் இங்கிருந்து சமீபத்தில்தான் உள்ளது. நினைத்தால் நீங்கள் வந்து போகலாம். எவ்விதமும் பரீட்சை முடிந்து கோடை விடுமுறைக்கு இங்கு அவசியம் வாருங்கள். நான் எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்" என்றாள். யாங்சின் மீது தனக்குள்ள காதலைப்பற்றி அவள் அவ்வளவு உறுதியாய் நம்பி இருந்தாள்

இன் ஜிங்கை விட்டுப் பிரிய யாங்சின்னுக்கு மனமே இல்லை. மிகவும் சோகத்தோடு அவளை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டே பேச்சற்று நின்றார். அவரது ஆசை அணைப்பில் துவண்டு, உணர்ச்சி வசப்பட்டு நடுங்கும் இன் ஜிங், அந்த இக்கட்டான நெருக்கடி நேரத்தில் பதறாது, நிதானமாய், "ஏதோ என்னை விட்டு ஒரே அடியாகப் பிரிந்து போகிறவர் போல் ஏன் தயங்கி[illegible] இருக்கிறீர்கள். திடமாய்ச் சென்று வெற்றியுடன் வாருங்கள். நான் உங்களுக்காக காத்திருப்பேன்" என ஊக்கமூட்டி வழியனுப்பினாள்.

தலைநகர் சென்ற யாங்சின் தனது இறுதிப் பரீட்சையில் தோற்றார். வெட்கம் மிகுதியால் போசிங் திரும்பி வந்து திருமதி சுயுவிடம் தனக்கு இன் ஜிங்கை திருமணம் செய்து கொடுக்கும்படி கூற இயலவில்லை. ஒரு முறையேனும் அவளை வந்து பார்க்கக் கூட



தைரியம் இல்லை. எனினும் அவள் பொறுமையாகக் காத்திருந்தாள்.

ஆரம்பத்தில் யாங்சின்னிட மிருந்து இன்ஜிங்கிற்குக் கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. நாளடைவில் அதுவும் குறைந்தது. எனினும் அவள் நம்பிக்கை இழக்கவில்லை. அவளது ஆழமான காதல் மீது அவளுக்கு அவ்வளவு நம்பிக்கை!

திருமதி சுயு சிறிது நாளில் தன் மகளின் கனவுகளைப் புரிந்து கொண்டு விட்டாள். மீதி கதையை அந்தத் தோழியை விசாரித்து நடந்த அத்தனை யையும் தெரிந்து கொண்டு மகளுக்காக தவிக்க ஆரம்பித்தாள்.

ஒரு நாள் ஏங் அவளது மாளிகைக்கு வந்தார். அப்போது திருமதி சுயு அவரிடம் யாங்சின்னைப் பற்றிக்கூறி, தலைநகர் சென்று விபரம் அறிந்து வரக் கோரினார். அண்மையில் யாங்சின் இன்ஜிங்கிற்கு எழுதியிருந்த கவிதை ஒன்றைக் காட்டினார். அது பிரியா விடைக் கவிதையாக இருந்தது.

அதில் ஒரு காதலன் காதலியை நீண்ட நாள் பிரிந்திருக்க நேர்ந்தால், அந்தக் காதலி இச்சைக்கு ஆளாகாமல் சுத்தமாயிருக்க எப்படி முடியுமெனக் கேள்வி கேட்பதாய் இருந்தது. அதைப் படித்த இன்ஜிங் சோகப்பிழம்பாய்க் காட்சியளித்தாள். இதைக் கண்ட ஏங் அவளைத் தேற்றி, தான் தலைநகர் சென்று, யாங்சின்னைச் சந்தித்துப் பேசி வருவதாய்க் கூறினார்.

இன்ஜிங் அவர் மூலம் யாங்சின் னுக்கு ஒரு உருக்கமான கடிதம் எழுதிக் கொடுத்தாள்.

"உங்களது கவிதை கண்டு மகிழ்ந்தேன். நீங்கள் நலமாய் உங்களது இறுதிப் பரீட்சையை வெற்றிகரமாய் எழுதுங்கள். விதியை நொந்து பயனில்லை. எனக்கு எது ஏற்பட்டாலும் அதை நான் மகிழ்வுடன் ஏற்கத்தயார். நீங்கள் என்னைப் பிரிந்து சென்றதிலி ருந்து நான் உங்கள் நினைவாகவே உள்ளேன். தனிமை என்னை மிகவும் வாட்டுகிறது. நாம் பிரிந்து, சுமார் ஓராண்டு ஆகிறது. தலைநகரில் தாங்கள் இருந்தும் உங்களது காதலியான என்னை மறவாது இருப்பது அறிந்து பூரிப்படை கிறேன். தங்களுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை என்றும்காப்பாற்றுவேன் ஏதோ உணர்ச்சி வசப்பட்டு, அளவிலா மோகத்தால் நான் உங்களிடம் சரண டைந்தேன். தாங்கள் எனக்கு அளித்த வாக்கை நிறைவேற்றினால், இவ்வுலகில் என்னைப் போல் ஆனந்தம் அடைபவர் எவருமில்லை. ஆனால், நீங்கள் பழைய நட்பை மறந்து புதிய நட்பை நாடினால், நம் காதலை அலட்சியப்படுத்தினால், நான் கவலைப்படாது, உங்களையே தொடர்ந்து காதலிப்பேன். எல்லாம் உங்கள் கையிலே உள்ளது. என் உள்ளம் என்றும் உங்கள் அருகிலே. ஆனால் உடல்தான் தொலைவில். உங்களுக்கு இடம் அளித்த என் இதயத்தில் வேறு எவர்க்கும் இனி இடமில்லை. என்றென்றும் உங்கள் நினைவாகவே வாழ்ந்து, மடிவேன்."

இக்கடிதத்தை தலைநகர் சென்று ஏங் தனது நண்பர் யாங்சின் னிடம் கொடுத்து, அவர் அதைப்





பேராசிரியர்.

சேதுமணியன்

லேடிடோக் கல்லூரி

ஆண்கள் ஏகப்பட்ட
சாமார்த்தியசாலிகள்...

அதிக பலம் வாய்ந்த யானையை
கோயிலில் கட்டி சலாம் போட
வைத்து விட்டார்கள்.

எருமையை வீட்டிலே முடக்கி
விட்டார்கள்...

சிங்கம், புலியைக் கூட சர்க்கஸுக்கு
பயன்படுத்திக் கொண்டார்கள்...

இந்த ரீதியில் பெண்ணை
அடுப்படிக்கே ஒதுக்கி விட்டார்கள்...
வீணே முடக்கி வைத்தல்
என்ன நியாயம்?

பாத்திரம் கழுவுவது என்ன அவளின்
பரம்பரைத் தொழிலா?

படிக்கும் போது அவருக்கு ஏற்படும் உணர்வுகளை முகத்தில் கவனித்தார்.

"நல்லது! நீ ஏன் ஒரு முறை அங்கு வந்து இன்ஜிங்கை சந்திக்கக் கூடாது?" என ஏங் கேட்டார்.

அங்கு தான் வர இயலாமைக்கு யாங்சின் ஏதேதோ நொண்டிக் காரணங்கள் கூறினார். முக்கியமாக, பரீட்சைக்குப் படிப்பது கெட்டுவிடும் என்றார்.

"நீ அவளுக்கு உண்மையிலேயே பெரும் துரோகம் புரிகிறாய்!" என்றார் ஏங்.

"நான் என்ன செய்யட்டும்? என் இறுதிப் பரீட்சையில் நான் வெற்றி பெற்று, ஒரு பதவி ஏற்கும்வரை இன்ஜிங்கை திருமணம் செய்ய என்றால் இயலாது. உண்மை, நான் அவளிடம் நெருக்கமாகப் பழகினேன். ஏதோ இளமை மோகத்தின் கோளாறு. 'மோகம் முப்பதே நாள்' என்பது போல, எங்கள் பழக்கமும், உறவும் முப்பது நாட்கள் தான் நீடித்தன! இளமையில் எதிர் பாராது நிகழ்ந்த அந்த மோகலீலை என் வருங்கால நல்வாழ்வை பாதிக்கும்படி நான் எப்படி விடமுடியும்?" என வினவினார் யாங்சின்.

"என்ன, இளமையின் மோக லீலையா? உனக்கு அது விளையாட்டு லீலையாக இருக்கலாம். ஆனால் அந்த உருக்கமான கடிதம் உனக்கு எழுதிய அந்தப் பெண்ணின் கதி என்ன? அதை எண்ணிப் பார்த்தாயா?"

"வாலிப வயதில் தவறு செய்தல் இயற்கை. ஆனால் அதற்காக ஒருவன் தன் வாழ்நாளை பெண்களுக்காக செலவிட முடியுமா!"

"இந்த வீண் வாதமெல்லாம்

# பெண்களைப் புரிந்துகொள்ளுங்கள்

ஆண்கள் அடிப்படியில் என்றாவது உதவுகிறேன் என்று நெருங்கிப் போகிறார்களா? அப்படி உதவுவது என்ன கேவலமா?

புரிந்து கொள்வதும், ஒத்துழைப்பதும் தானே இல்லறத்திற்கு சிறப்பு. சமுதாயம் புதிய எழுச்சியோடு நிமிரத் தலைப்படவேண்டாமா?

பாவம் பெண்கள் தன் நிராசைகளை நகை, ஆடம்பரங்களின் மேல் அடம்பிடிக்கிறார்கள் ... அதிலாவது தன் ஆசை பூர்த்தி அடையாதா?... அடையணும்... அடைவதற்காய் பல பல நேரங்களில் அழவும் செய்கிறாள் ...

அதுதான் அவளின் கடைசி பலம்... அண்ணா ஒரு கதையில் சொல்வார்... "வயதானவனுக்கு வாழ்க்கைப்பட்ட இரண்டாந்தார இள மனைவி, சரியச் சரிய பட்டுப் புடவை கட்டிக்கொண்டு, வெளியில் சந்தோஷமாய் இருப்பதாய் காட்டிக் கொள்கிறார்கள் என்று..."

இதுதான் பெண் நிலைமை!

பெண்கள் இப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று கட்டுப்படுத்தி ஒழுக்கம் என்று பெயர் சூட்டி அழகு பார்க்கிறார்கள்.

அவர்களுக்கு கிடைத்த லேட்டஸ்ட் கிரெடிட் வேலைக்குச் சிலர் போவதுதான்—

அதுவும் வரதட்சணைக்குப் பயன்பட்டுப் போனது.

அவர்களே தேசத்தின் பிரச்னை மாதிரி ஆக்கப்பட்டார்கள். ஆமாம் அவர்களுக்கு கல்யாணமே ஒரு பிரச்னை!

பெண்களின் உணர்வுகளையும், அபிலாஷைகளையும் புரிந்துகொள்ள வேண்டும். ஆண்களின் பொறுப்பான கடமைகளில் இது தலையாயது—

பெண்ணுரிமை—பெண்கள் கோஷம் போடுவதிலும், எதிர்ப்பதிலும் கிடைத்துவிடும் என்று யாரும் நம்பவில்லை. அது ஆண்களின் புரிந்து கொள்ளுதலிலும், ஒத்துழைப்பதிலுமே இருக்கிறது.

மனித நேயம் கொண்டவர்கள் இதற்கு உதவுவார்கள் என்று நம்பலாம் அல்லவா?

—பேட்டி: நவபாரதி



ஸ்ரீ மாத்ரே நம:

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி, ஸ்ரீ சிருங்கேரி ஆச்சார்யார்கள், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் மற்றும் பல மகான்களின் ஆசிகளால் அருளப்பெற்ற நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்:**

| | |
|---|---|
| ஸ்ரீ சக்கரம் மற்றும் இதர சக்கரங்கள் 1-ன் விலை | ரூ. 115.00 |
| சபரிமலை செல்லும் பக்தர்களுக்குரிய ஸ்ரீ ஐயப்பன் டாலர்கள் பல சைஸ்களில் | ரூ. 60, 40, 35, 25. |
| ஒரிஜினல் துளசி மணி மாலை (54 மணிகள்) (வெள்ளிக் கவசத்துடன் கூடியது) | ரூ. 60-00 |
| ஒரிஜினல் ஸ்படிக மணிமாலை (54 மணிகள்) | ரூ. 250.00 |
| இமிடேஷன் (ஸ்படிக மாலை 54 மணிகள்) | ரூ. 60.00 |
| ஒரிஜினல் தாமரை மணி மாலை 54 மணிகள் (வெள்ளிக் கவசத்துடன் கூடியது) | ரூ. 100.00 |
| ஒரிஜினல் ருத்திராக்ஷ மணி மாலை 54 மணிகள் நோய் தீர்க்கும் அதிசய சக்தி கொண்டது. பூஜையில் வைத்துக் கொடுக்கப்படும். (வெள்ளிக் கவசத்துடன் கூடியது) | ரூ. 250.00 |

மற்றும் மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், கும்பம், மீனம் ஆகிய இந்த ராசிக்குரிய நட்சத்திரக்காரர்களுக்கு காலநிலை சரியாக இல்லாததால், 'நவக்கிரக டாலரை' அணிந்து நவக்கிரக தோஷத்தினால் வரும் துன்பங்களிலிருந்து நிவர்த்தி பெறலாம்!

நவக்கிரக டாலர்கள் — ஒரு புறம் ராசிநாதன் உருவமும், மறுபுறம் அதற்குரிய மந்திரமும் பொறிக்கப்பட்டுள்ளது. இவை யாவும் வெள்ளியால் செய்யப்பட்டவை. டாலர் ஒன்றுக்கு விலை ரூ. 37.00

9 கிரகத்தின் பிம்பமுடன் கூடிய நவக்கிரக சக்கரம் விலை ரூ. 115-00

விலைப் பட்டியல் வேண்டுவோர் 50 பைசா தபால் தலையுடன் விண்ணப்பிக்கவும்.

**திருஷ்டி நிவர்த்தியந்திரம்:**

இதை வீட்டிலும், வியாபார ஸ்தலத்திலும் மாட்டி வைத்தால் கண் திருஷ்டியால் வரும் எல்லா துன்பங்களையும் நீக்கி விடும். விலை ரூ. 50/-

ஒரிஜினல் ருத்திராக்ஷ மணி மாலை 54 மணி வெள்ளி கவசத்துடன் கூடியது (பூஜையில் வைத்து அனுப்பும் இதை அணிந்து வந்தால் ப்ளட் பிரஷர், டயபடீஸ் முதலிய வியாதிகள் தீரும்.) விலை ரூ. 250/-

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**விஸ்வகர்மாக்ஞ்ய ஸ்வாமி: ஸ்ரீ எஸ். டி. முருகபூஷணம்**
**நவசக்தி நிலையம், 153, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்,**
**(ஸ்டேட் பாங்க் எதிரில்) சென்னை-600086.**
**(போன்: 812013)**

"லோகாஸ் ஸமஸ்தாஸ் சுகினோ பவந்து"

BANU

வேண்டாம். உன் மனம் மாறி விட்டது. நீ வேறொரு பணக்காரப் பெண்ணை இப்போது விரும்புகிறாய். சரி, உன் பிரியம். நான் வருகிறேன்.''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளேன். இன்ஜிங் என்னை மறப்பது நல்லது.''

''உன்னைப் போல் சுயநல வாதியை நான் கண்டதில்லை. சரி, நீ எக்கேடும் கெட்டுப்போ''

அவர்களிருவருக்கும் இருந்த நல்ல நட்பு அன்று அடியோடு முறிந்து போய் விட்டது.

> வரதட்சணை —
> துகிலுரிய வந்த
> துச்சாதனர்கள்
>
> ஏமாந்து
> திரும்பினர்.
>
> பாவம்,
> திரௌபதை
> ஏற்கனவே
> நிர்வாணமாகத்தான்
> நின்று கொண்டிருந்தாள்!
>
> —ஆர்சி. சம்பத்

போசிங் திரும்பிய ஏங் இச்சோகச் செய்தியை இன்ஜிங்கிடமோ, அவளது தாயாரிடமோ உடனே சொல்லத் தயங்கினார். நாளடைவில், மெதுவாக் திருமதி சுயுவிடம் சொன்னார்.

''யாங்சின் தற்போது ஒரு பணக்காரப் பெண்ணை காதலிக்கிறார். விரைவில் அவர்களது திருமணம் நடைபெறும்.''

அந்தச் செய்தி கேட்டு அதிர்ச்சியுற்றார் திருமதி சுயு.

பின்னர் ஏங்கை இன்ஜிங் சந்தித்தபோது, ''என்ன, என் கடிதத்திற்கு யாங்சின் பதில் கடிதம் கொடுத்தாரா?'' எனக்கேட்டாள்.

''இல்லை. தனது பிரியாவிடைக் கவிதையையே பதிலாக ஏற்கச் சொன்னார்.''

''அவரைப்பற்றி வேறென்ன தகவல்?''

''அவர் விரைவில் ஒரு பணக்காரப் பெண்ணை மணக்கப் போகிறார்

உங்கள் காதலைப்பற்றி நான் கேட்டபோது, 'மோகம் முப்பதே நாள்' எனக்கூறி விட்டார். அவர் ஒரு கவிஞர் அல்லவா?'' என்றார் ஏங் வார்த்தையில் வருத்தத்துடன்.

அதைக் கேட்டு இன்ஜிங் பேச்சற்று, செயலற்று சில நிமிடங்கள் நின்றாள். அவளுக்கு என்ன ஆகுமோ என ஏங் பதறினார். ஆனால், அவள் சற்று உறுதியாகவும், கர்வமாகவும், ''சரி, அப்படியே ஆகட்டும்,'' எனக் கூறிவிட்டு, தனது அறைக்குள் ஓடினாள். அங்கு சென்றதும் ஓவென்று அலறி, பின் பேய்ச் சிரிப்பு சிரித்தாள். திருமதி சுயு அவளது பின்னால் அறையினுள் ஓடினாள். அந்தச் சிரிப்பு ஓயாது ஒலித்ததை கேட்டு ஏங் அதிர்ச்சியுற்று வெளியேறினார்.

சிலநாள் கழித்து ஏங் திருமதி சுயுவை சந்தித்து விசாரித்தார். இன்ஜிங் நாளடைவில் அந்தப் புத்தி மாருட்ட நிலை மாறி, சுகமாகவே இருப்பதாக அறிந்தார். ஆனால், அவள் யாரையும் திருமணம் செய்து கொள்ள மறுத்து விட்டாள்! அவளது தாயாரும் அவள் விருப்பம்போல் விட்டுவிட்டார்.

பலகாலம் கழித்து ஒருநாள் பணக்காரப் பெண்ணை மணந்த யாங்சின் இன்ஜிங் இல்லத்திற்கு வந்து 'அவளைக் காண வேண்டும்' என்றார்.

முதலில் இன்ஜிங் அவரைக் காண மறுத்தாள். யாங்சின் திரும்பிச் செல்லும்போது, திடீரென அறையினுள்ளிருந்து வெளியே வந்து, ''இன்னும் ஏன் இங்கு மீண்டும் வந்து என்னைச் சித்திரவதை செய்கிறீர்கள்... உங்களுக்காக நான் பலகாலம் காத்திருந்தேன். அந்தத் தொடர்பு எப்பொழுதோ அறுந்துவிட்டது. இனி உங்களுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. நான் உங்களை மறக்க நினைப்பதுபோல், நீங்களும் என்னை, 'மோகம் முப்பதே நாள்' என நீங்கள் கூறியதுபோல் எண்ணி, மறந்து விடுங்கள். தயவு செய்து போய்விடுங்கள்,'' எனக்கடிந்து கூறினாள்.

மறுவார்த்தை பேசாது யாங்சின் அங்கிருந்து அகன்றார்.

மறுவிநாடி இன்ஜிங் உயிரற்ற மரம்போல் மண்ணில் சாய்ந்தாள்.

(முற்றும்)

# வந்தால் தூக்கத்தில் வரவேண்டும்!

நான் என்னைக்குமே முகத்துக்கோ உடம்புக்கோ மஞ்சள் பூசினது கிடையாது... அதனாலே உடம்பு முழுக்க மஞ்சள் பூசிக்க கொள்ளை ஆசை. குங்குமப் பொட்டு வைச்சிக்கிறதுக்கும் எனக்கு தெரியாது. அதுவும் எனக்கு ஆசை.

நான் சாகும் போது நல்லா மஞ்சள் பூசி பெரிசா குங்குமப் பொட்டு வைச்சு... வெள்ளைச் சேலை கட்டி... நிறைய மல்லிகைப் பூ வைச்சு என்னை... எரிச்சிடுவாங்களா இல்லை புதைப்பாங்களா என்னவோ... ஏதோ ஒண்ணு செய்திடணும். நான் நினைச்ச மாதிரி இந்த நாலு மட்டும் செய்யணும். நான் விரும்பறது இந்த நாலையுந்தான், இந்த நாலு மட்டும் நடந்தால் போதும்.

சரி... அப்போ எனக்கு கல்யாணமாகி இருந்தா தாலியோடு! நான் விரும்பப்போற கணவர் இப்போ இல்லாவிட்டாலுங்கூட கொஞ்ச நாளைக்கு அப்புறமா எனக்கு கணவர் என்று ஒருவரை கடவுள் கொடுத்தாரென்றால்... நான் காதலிச்சு இஷ்டப்பட்டுத்தானே அவரைக் கல்யாணம் செய்துக்கப் போறேன். அவர் மடிமீது— இந்த மஞ்சள் குங்குமத்தோட படுத்து செத்திடலாம்ன்னு ரொம்ப ஆசை, என் சாவு எப்படி நடக்கும்? யாருக்குத் தெரியும்?

ரொம்ப நாள் வாழணும்... நூறு வயசு உயிரோடிருக்கணும் என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. சில சமயம் வெக்ஸ் ஆகி இருக்கிற போது இன்னும் ஏன் சாகாமல் இருக்கிறோம் என்றெல்லாம் கூட தோணும். உடனே சினிமா வாழ்க்கை நினைவுக்கு வந்திடும். என் பெருமைக்காகச் சொல்லலை. இப்போ என்னை நம்பிட்டு நிறைய பேர் இருக்காங்க. நான் செத்துப் போனா அவங்களுக்கு நஷ்டம்தானே...

எனக்கு சாவைக் கண்டு பயம் இல்லை. ஆனா செத்துக் கிடக்கும் உடலை கண்டால் பயம். அலர்ஜி... நடுங்கிப் போவேன்... கும்பகோணத்திலிருந்து வருகிற போது ஒரு ஸ்டேஷனில் ஒரு ஆள்... முப்பது வயசு முப்பத்தைஞ்சு வயசுதான் இருக்கும், அந்த ஆளுக்கு திடீர்னு ரயில் முன்னாடி தலை வச்சுட்டான்... தலை கண்ட துண்டமாயிடுச்சு. பயங்கரமா இருக்கு. செத்த உடலை பார்ப்பதற்கு... நானும் பார்த்தேனா... எனக்கு ஜுரம் வந்திடுச்சு. மூணு நாள் ஜுரத்திலே படுத்திட்டேன். அந்த நாளில் ஏன்னென்னவோ கத்தினேனாம். எனக்கு ஒண்ணும் தெரியாது. அம்மா வந்து எழுப்பினாங்க... என்ன ஆச்சு என்ன ஆச்சுன்னு கேட்கிறேன்... 'இல்லே இப்போ நீ பயங்கரமா கத்தினே' அப்படிங்கிறாங்க. என் அறையிலேயே படுத்திட்டாங்க.

மறுநாள் ராத்திரி... நான் படுத்திருக்கிறேன்... எதிரே அடிச்சிருக்கிற ஃபிளைவுட்டில் மேலே கறுப்பா ஒண்ணு உட்கார்ந்திட்டிருக்கு... ரொம்ப குண்டாய் இருக்குது. பயங்கரமா... அப்படி இப்படி, இப்படி அப்படி... கை காலை ஆட்டி பரதநாட்டியம், ஆடுறது மாதிரி ஆடுது... என்னன்னு தெரியலை எனக்கு! நான் முழிச்சிட்டு பார்த்தேன். துணி ஏதாவது ஆடுதான்னு! அங்கே துணியும் இல்லே ஒண்ணும் இல்லே... தலை முடியை பயங்கரமா விரிச்சுப் போட்டுக்கிட்டு இருக்குது. யார் என்னன்னு அடையாளம் தெரிய மாட்டேங்குது... நான் வேலைக்காரியை கூப்பிட்டு, 'ஏண்டி இங்கே என்னவோ கிடந்தது... ஆடுது... வந்து பார்த்து விரட்டு'ன்னு கூப்பிட்டா அவ வந்து ஒண்ணும் இல்லேங்கிறா...

அது என்ன மனப் பிரமையா... பேயா? நான் பேய்க்கதை எல்லாம் கேட்டிருக்கேன். பேய் என்றால் எப்படி இருக்கும் என்று அன்னைக்கு வரை தெரியாது... செத்துப் போறவங்க எல்லாம் பேய் ஆயிடுவாங்கன்னு சொல்றது உண்மையா? எனக்கு என்னவோ நம்ப வரலை. செத்துப் போனவங்க எப்படி பேயாக முடியும்? அப்படி பேயாக முடியும் என்றால் நான் எப்படிச் செத்துப் போனாலும் பேயாக மட்டும் உலாவக் கூடாது.

பேட்டி: பொன். ஜெயந்தன்
படம்: ஏ. எஸ். மணி

நாச்சம்மை தேவராயன்




# இன்னும் சில நியாயங்கள்



"ஏங் குப்பம்மா இந்த பஞ்சாயத்துக்கு முன்னுடி உன்னே ஏன் நெருத்தியிருக்காக தெரியுமா?" என்றுர் கர்ணம்.

...குப்பம்மாவின் மௌனம் பஞ்சாயத்தில் உள்ள அனைவருக்கும் வியப்பை அளித்தது.

"பாரும்மா பஞ்சாயத்துக்கு முன்னுடி பயப்படத் தேவையில்லே. எதையும் தைகிரியமா சொல்லாம்" என்றுர் பாய்.

எதற்கும் தலேயே வணங்கிப் பேசாதா குப்பு தற்சமயம் குவிந்த தலே நிமிராமல் கலங்கிய கண்களுடன் இருந்தாள்.

"நேத்து ராவு பத்து மணிக்கு மேலே ஒன் வீட்டுக்கு வந்தது யாரு?"

தலேயை நிமிர்த்தி அனைவரையும் ஒரு முறை பார்த்துவிட்டு, "ராசப்பா" என்றுள்.

"எதற்காக வந்தான்?"

—மௌனம்.

"ஒன்னெ கெடுத்துப்புட்டானு?"

—மௌனம்.

"ராசப்பா எங்கேடா?" என்றுர் கர்ணம்.

கூட்டத்தை விலக்கிக்கொண்டு தோளில் இருந்த துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டே பஞ்சாயத்துக்கு முன் ராசப்பா வந்தான்.

"நேத்து நீ குப்பு வீட்டுக்குப் போனியா?" ஐயர் கேட்டார்.

—மௌனம்.

"குப்புவுக்கும் ஒனக்கும் எத்தனை நாளா பழக்கம்?" இது கர்ணம்.

"போன மாரியம்மன் திருவிழா வில் இருந்துங்க."

"ஒம் பொண்டாட்டிக்குத் தெரியுமா?"

"தெரியுங்க"

"தெரிஞ்சும சுமமாவா இருந்தா?"

"ஆமாமுங்க."

பஞ்சாயத்தார்கள் கசமுசவென்று பேசி ஒருதீர்மானம் எடுத்தனர்.

ஊர் ஜனங்கள் என்ன தீர்ப் பாக இருக்கும் என ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தனர்.

ஐயர் நிதானமாக தீர்ப்பைக் கூறினார்.

"இந்தா புள்ளே குப்பு! நீ சம்ம திச்சா ராசப்பாவை இரண்டாம் தாரமா கல்யாணம் பண்ணிக்க."

"என்னடா ராசப்பா, நீ குப்புவை கட்டிக்க சம்மதிக்கிறியா" என்றார்.

"அதுக்கு முன்னாடி ஓம் பொண்டாட்டி சம்மதத்தைக்கேட்டு அவ இந்த பஞ்சாயத்திலே வந்து ஒன்னே இரண்டாம் கல்யாணம் கட்டிக்க சம்மதம் தெரிவிக்கணும்" என்றார்.

"ஐயரே குப்பு புருஷன் பட்டா ளத்திலிருந்து வந்தா என்ன நடக்கும்?" என்று குண்டை போட்டார் கர்ணம்.

"இவ மனசும், ராசப்பா மனசும் ஒத்துப் போச்சு. முதல் பொண்டாட்டி யும் தலையை ஆட்டிட்டா. வேலை சுலபம் தானே பஞ்சாயத்துக்கு" என்றார் ஐயர்.

ராசப்பா தன் மனைவியை அழைத்து வந்து பஞ்சாயத்தில் சொல்ல வைக்க வீட்டுக்கு ஓடினான். அதற்கு முன் காளி போய் விஷயத்தைச் சொல்லி விட்டாள்.

இனி அவள் மறுப்புக் கூற என்ன இருக்கிறது என்ற தைரியம்.

"இந்தா புள்ளே ரஞ்சிதம், இப்பவே பஞ்சாயத்துக்குப் போயி, நா எம் புருஷனை இரண்டாவது கல்யாணம் அவர் இஷ்டப்படி பண் ணிக்க ஒத்துக்கிறேன்னு சொல்லு" என்றான்.



தாய்: உன் பெண்டாட்டியை கொஞ்சம் கண்டித்து விட்டுப் போப்பா...!

மகன்: (ஏதோ காதில் வாங்கியபடி) சே! நன்றாயிருக்காது. என் மனைவியைப் பார்த்து கண்ணடித்து விட்டுப் போனால் அசிங்கமாக நினைப்பார்கள்...

—அ. கிருஷ்ணசங்கர்

"ஒங்கூட ஒன்பது வருசமா குப்பை கொட்டினதுக்கு என்ன சுகத் தைக் கண்டேன். இனிமேல்தான் நா சுகத்தை அனுபவிக்கணும்" என்று பஞ்சாயத்தை நோக்கி நடந்தாள்.

பஞ்சாயத்துக்கு முன்னாடி போன உடனே குப்பு, "ஏய் ஒன்னேதாம் புள்ளே, இவரோடே நா வாழ்ந்ததிலே என் வயித்திலே ஒரு பூச்சி புழு கூட இல்லே. நீயாவது பெத்து சந்தோஷ மாயிரு" என்று நிதானமாகக் கூறினாள்.

ராசப்பா மனைவி மிகுந்த நிதானமுடையவள். சிறிது வசதியும் படைத்தவள். அவளுக்கு ஊரில் நல்ல மதிப்புண்டு.

"ஐயா நா வாழ்ந்த வாழ்க்கையே, குப்புவுக்கு தானம் செய்யிறதிலே, எனக்கு வருத்தமில்லே. இப்பவே அவுக இரண்டு பேரும் கல்யாணம் செஞ்சுக் கட்டும். எனக்கும் அவுகளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லேன்னு எழுதிக் கொடுத்துர்றேன். சொத்து சுகம் தேவை யில்லே. என் விஷயத்திலே இனி அவுக தலையிடலேன்னு உத்திரவாதம் பஞ்சா யித்து கொடுத்தா அதுபோதும் எனக்கு" என்றாள்.

குப்பு பேயறைந்தவள் போல் நின்று கொண்டிருந்தாள்.

"என்ன குப்பு, ராசப்பா விஷயம் ஊரே தெரிஞ்சு போச்சு. நீங்க கல்யாணம் பண்ணிக்கிறதுதான் நியாயம். நாளைக்கு ஓம் புருசன் பட்டாளத்திலிருந்து வந்தான்னு வெச்சுக்க. என்ன நடக்கும்? விஷயம் ஊரே பரவி விட்டது. நீ ஊரிலே தலை காட்டணும்னா, இது நல்ல முடிவுன்னு பஞ்சாயத்து சொல்லுது" என்றார்.

குப்பு நிமிர்ந்து பஞ்சாயத்தில் உள்ள ஒவ்வொருவராக பார்த்து தொடர்ந்தாள்.

"போன வருசம் மாரியம்மன் திருவிழா தெருக்கூத்து பாக்க நா மட்டும் வந்துக்கிட்டு இருந்தேங்க. வரப்போ, ஐயர் மகள் புதுசா கல்யாணமாகி ஊருக்கு வந்திருக்கிற ஞாபகம் வந்து ஜன்னல் பக்கம் எட்டிப் பார்த்தேன். அப்ப அவங்க இருந்த நிலைமை சரி யில்லே. உடனே கூத்து பாக்க வந்துட் டேன். எம் புருசன் போயி ஒரு வருசம் வேறே ஆச்சு. அங்கே இந்த ராசப்பா வந்து 'ஏ புள்ளே, உங்க பாட்டி ஒன்னே

கோடையிலே இளைப்பாற
கூந்தலெனும் குடைவிரிச்சேன்
மேடையிலே நீராட
மேனியிலே நதி படைச்சேன்

—'என் அருமை மனைவி' ராஜலட்சுமி

தேடுது' என்று சொல்லி என்கூட காவலுக்கு வந்தான். ஐயர் மகளை பார்த்த நா, என்னையும் ராசப்பாவையும் எணைச்சு பார்த்தேன். அப்ப அவன் கை என் தோள் மேலே இருந்தது. அப்ப இருந்த தாகத்துக்கு தண்ணி குடிச் சுட்டேன். அது கெணத்துத் தண்ணியா? இல்லே கடல் தண்ணி யான்னு பார்க்கலே...

—தாகம் எடுக்கிறப்போதானே தண்ணி குடிக்கிறோம். ஆனா அந்த தண்ணியிலே மூழ்கிட்டா செத்துப்புடு வோம்னு நேத்துத்தான் தெரிஞ்சதுங்க. நா ஊர விட்டு பட்டணத்திலே இருக்கிற எங்க சின்னம்மாகிட்டப்போய் ஏதாவது வீட்டு வேலை செஞ்சு பொளச்சுக் கிறேன்.

—எம் புருசனை எச்சில் எலை சாப்பிட விட மாட்டேங்க. நாய்ங்க சாப்பிடுற எச்சல் எலையாவும் நா இருக்க விரும்பலை." என்று கூறி பஞ்சாயத்தி டம் விடைபெற்றாள்.

ராசப்பா மனைவியும் "எம்புருசன் பல பெண்களை பார்க்கணும்னு நெனக்கிறவன். அவன் வலையிலே பாவம் குப்பு மாட்டிக்கிட்டா. அடுத்து சுப்பு மாட்டிக்கலாம். இப்படிப்பட்ட வனுக்கு பொண்டாட்டின்னு சொல்றதை விட புருசன் இருக்கிறபோதே விதவை பாயிடலாம். இந்த பஞ்சாயத்துக்காரங்க முன்னாடி இதோ அவர் கட்டின தாலியை அவர் கையிலயே கொடுத் துறேன்"னு செயல்பட்டாள்.

ராசப்பா செய்வதறியாது திகைத்து நின்றான்.

"நம்ஊரில் இன்னும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது" என்றார் ஐயர்.






## பூகம்பம் (ஆங்கிலப் படம்)

'ஹாலிவுட்காரர்களுக்கு இப்படி ஏதாவது நடந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை ஏற்படக்கூடாது.' உடனே அதைப் படமாக எடுத்து விடுவார்கள். கப்பல் ஒன்று புயலில் மாட்டிக் கொள்வது, பலமாடிக் கட்டிடத்தில் ஏற்படும் தீவிபத்து, சுறுமீன்களின் அட்டகாசம் இவை திரைப் படங்களாக வந்தன.

இதைத் தொடர்ந்து இப்போது வந்திருப்பது பூகம்பம் பற்றியது...!

மெல்லிய இழையாக கதையை வைத்துக் கொண்டு பூகம்பம் ஏற்படுவதையும், அதன் விளைவுகளையும் விரிவாகக் காட்டியுள்ளனர். பயங்கரமான செட்டுகளை அமைத்து விட்டு அதை அழிக்கும் மனப்பக்குவம் ஹாலிவுட்காரர்களைத் தவிர வேறு யாருக்கும் வராது. உயர்ந்த மாடிக் கட்டிடங்கள் சரிந்து விழுகின்றன. புயல் வருகிறது. வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. இதில் மாட்டிக் கொண்டு அனைவரும் மடிகின்றனர்... கதாநாயகன் உட்பட.

பூகம்பம் என்றால் என்ன என்பதை இப்படத்தை பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். பெரிய நடிகர்கள் எல்லாம் நடித்து இருக்கின்றனர். அருமையான ஒளிப்பதிவு, ஒலிப்பதிவு. இந்த படத்தை பார்ப்பதனால் ஏற்படும் பாதிப்பு ரொம்ப நாட்களுக்கு இருக்கும்.

டி.வி.பாலு

# வாரம் ஒரு குடும்பம்

## ஜே.வி.நாதன் ஜெயா

"ஷேக்ஸ்பியரின் Much Ado About Nothing நாடகத்தில் வரும் பெனடிக்—பியாட்ரிஸ் இருவரும் சந்திக்கிறபோதெல்லாம் கேலி, குத்தல், சண்டை, சூடு பறக்கும் விவாதம்—ஆனால் இருவரும் மனமொத்த காதலர்கள் என்பது பின்னால் தான் தெரிகிறது. அதுபோலத்தான் நானும், அவளும் சந்திக்கிறபோதெல்லாம் கேலிப் பேச்சுகள்-வம்புகள்-வல்லடி வழக்குகள்! பத்து வருடங்கள் விடாமல் காதலித்து, எதிர்ப்புகளைப் பொருட்



படுத்தாமல் அவளையே மணந்து கொண்டேன்" என்று சொல்கிறார் ஜே.வி.நாதன்.

நான் மாவட்ட மருத்துவர் அலுவலகத்தில் நிர்வாகப் பிரிவில் பணி புரிகிறேன். என் மனைவி மகளிர் கல்லூரி ஒன்றில் Head of the Dept. of Chemistry ஆகவும், Principal- Incharge ஆகவும் பணியாற்றுகிறாள். இருவருமே வெளியே சென்று விடுவதால் குழந்தைகளை மாலை வரை பிரிந்திருப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது" என்று கூறுகிறார்.

150 சிறுகதைகள், நான்கு நாவல்கள் இதுவரை பத்திரிகைகளில் வெளிவந்திருந்த போதிலும் புத்தக வடிவில் எதையுமே வெளியிட வில்லையாம். காரணம் நானாக கைக்காசு செலவிட்டுப் புத்தகம் போட விரும்பவில்லை.புத்தக வெளியீட்டாளர்கள் எழுத்தின் மதிப்பைப் பாராமல் பிரபலங்களின் எழுத்தை மட்டுமே வெளியிட்டுக் காசு சம்பாதிக்க விரும்புகிறார்கள் என்று மனம் வருந்தும் இந்த எழுத்தாளர், 'இலக்கியச் சிந்தனை'யின் சிறந்த சிறுகதைக்கான பரிசையும் பெற்றுள்ளார். தன் மனைவியும் ஒரு எழுத்தாளர் என்கிறார். ஆனந்த விகடன், தினமணிகதிர் இதழ்களில் சிறுகதைகளும், 'அமுதசுரபி'யில் ஒரு பேட்டியும் இதுவரை வெளிவந்துள்ளன எனத் தன் மனைவியைப் பற்றிப் பெருமையுடன் கூறினார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் என் மனைவி படித்தது இரசாயனம். நான், பொருளாதாரம். இருவரும் காதலித்தோம். சாதி வேறுபாடு உண்மையான காதலுக்குக் குறுக்கே நிற்காது என்பதற்கு எங்கள் திருமணமே சாட்சி.

வீட்டில் எல்லா வேலைகளையும் செய்து விட்டு கல்லூரியிலும் அயராது பணிகளைக் கவனித்து விட்டு வீட்டுக்கு மாலை வந்து,

# இல்லறத்தார்

மீண்டும் அவள் உழைப்பாள். நான் அவளுக்கு நேரெதிர்! சரியான சோம்பேறி! எனது அலுவலகப் பணி தவிர, இலக்கியச் சொற்பொழிவு, படிப்பு, எழுத்து என்று இருப்பேனே தவிர, என் உடைகளைத் துவைத்து, அயர்ன் செய்யக் கூட என் உடம்பு வளையாது- எல்லாம் என் மனைவி தான்—முன் ஜன்மங்களில் நான் செய்த புண்ணியம்தான் இவள் எனக்கு மனைவியானது' என்று சிலிர்ப்புடன் கூறுகிறார்.

"எங்களிடையே ஏற்படும் கருத்து வேற்றுமைகளை இருவரும் அமர்ந்து விவாதித்துத்தான் முடிவு செய்வோம். என்னைக் கேளாமல் இது வரை ஒரு புடவை கூட அவள் வாங்கியதில்லை. நானும் அவளைக் கலந்து பேசாமல் எந்தக் காரியத்தையும் செய்ததில்லை. இதனால் நான் 'பெண்டாட்டி தாசன்' என்றாகி விடமாட்டேன். எனக்கு அடிக்கடி கோபம் வரும். சத்தம் போடுவேன். பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு கடைசியில் முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு ஏதாவது 'ஜோக்'அடிப்பாள். சிரிப்பு வந்துவிடும்'. என்கிறார் அவர்.

இந்த மனமொத்த தம்பதியின் வெற்றி, வாழ்க்கை ரகசியம் ஓரளவு புரிகிற மாதிரி இருக்கிறதல்லவா?

பேட்டி: "சத்யம்-சிவம்"



## ஜெகாதா



ஈசல் ஈசலாய்க் குறவர்கள்... யார் அசந்த நேரத்தில் இவ்வளவு கூட்டமும் நகருக்குள்!

இடுப்புக் கயிருேடு ஒரு கோவணக் கிழிசல், ஒரு கொண்டைக் கட்டு, மற்றபடி முழுக்க முழுக்க நிர்வாணம்.

இடையிடையே பெண் ஈசல்கள். கருப்பும் சிவப்புமாய்... தொடைகளை இன்னும் காட்டும் குட்டை-குடைப் பாவாடை ஊடே எப்பொழுதேனும் தெரியும் கிழிசல். தொப்புள் தெரியும் படியான வயிற்றையும், இத்யாதிகளையும் மிக விரிவாகக் காட்டும் ரவிக்கை.

—தோளிலே தகரடப்பா, வாளி, பாசிமாலைகள், ஊக்கு கொத்து, சீப்புக் கட்டு, நரிக்கொம்பு வகையரு ...ம்ஹூம் ஒன்றும் கிடையாது!

என்ன இப்படி முழுக்க நாகரீகமாகத் திரிகிருர்கள்?

எச்சில் இலைகளை விசிறி யிறைத்தது போல நகரத்துள் நான்கு நாட்களாய்...

நான்காவது நாள் தைப் பொங்கல்.

"ஷாமி.. ஷாமி... ஷாமி..." சமஸ்கிரித ரீங்காரம்... வீட்டுப்படிகளெல்லாம் காட்டுக்குருவிகள்!

"ஆயி ஆயி, அப்படி கையில கொட்டுங்க துன்னுக்கிர்ரோம்..."

"ஒருத்தன்னு சரி, உன் சாதி சனம் அத்தனையும் கூட்டி வந்தா... போ... போ... கோயில்ல அன்னதானம் போடுவாங்க. இல்லாட்ட ஊரெல்லாம் கொடியேத்தி பொங்க ஆக்கிப் போடுற எடத்துக்குப் போ... போ..."

"ஆயி... ஆயி... ஆயி..."

பறந்து பறந்து இறக்கை உதிர்ந்து விட்டது. பஸ் ஸ்டாண்டு, ரயில்வே ஸ்டேசன், கடைவீதி எங்கும் இவர்களே...




'ஜலதோஷமா? தொண்டைப்புண்ணா? தலைவலியா? சாப்பிடுங்கள்......' என்ற விளம்பரம் ரேடியோவில் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது. இதைக் கேட்ட ஒரு வயதானவர் நினைத்துக் கொண்டார்...'

'ஹ்ூம்! ரேடியோவிலாவது என் உடல் நலம் பற்றி விசாரிக்கிறார்களே!'

—அ. கிருஷ்ணசங்கர்

ஜனங்கள் கால் வைத்து நடக்கக் கூசினர்.

விரட்ட விரட்ட மொய்க்கும் அருவெறுப்பில் அந்த ஊரின் பாதசாரிகள் முகஞ்சுழித்து வெதும்பினர்.

"ஷாமி பத்து நாளா பட்டினி ஷாமி... எங்க குடிசைகள் எல்லாம் வெள்ளத்தில போயிடுச்சு ஷாமி. கொலந்தைகளெல்லாம் பட்டினியா கிடக்கு ஷாமி."

அத்தனை புழுக்களும் பாத சாரிகளின் மத்தியில் நசுங்கிக் கதறின.

நாகரீகமாக உடையணிந்து சென்ற இருவரை விடாமல் ஒரு அம்மைத் தழும்புக் குறவன் நமுத்துக் கொண்டு வந்தான்.

"இந்தக் குறவங்ககிட்ட இல்லாத காசா. நரிக்கொம்பு, கஸ்தூரின்னு வித்து எவ்வளவு காசு வச்சிருப்பாங்க தெரியுமா? சும்மா ஒன்னுமே இல்லாதவங்க மாதிரி நடிக்கிறாங்க. டிரான்சிஸ்டரும் தோளுமா எப்பவும் திரிவாங்க... நீங்க வாங்க"

அம்மைத் தழும்புக் குறவன் டக்கென்று நின்று விட்டான். அதற்கு மேல் அவர்களைத் தொடரவில்லை.

தன்னுடைய தோளைத் தொட்டான். அந்தக் குறவனுக்கு கண் கலங்கி விட்டது.

டிரான்சிஸ்டர்... அவன் கூட வைத்திருந்தான்!

சாம்பல் நிறக் காளான் குடைகளாய் ஒரு காட்டோரத்தில் பெருவாரியாக முளைத்திருந்த குச்சுகளில் எல்லோரும் குன்னிக் கொண்டிருந்த ஒரு கனத்த இரவில்...

ஆ... என்னமாய் வந்தது புயலும் வெள்ளமும். திசை தெரியாத இருட்டில் உயிர்களை மட்டுமே பாதுகாக்க நினைத்து கண்மண் தெரியாத ஓட்டத்தில்... காட்டுக்குருவிகளின் ஒரே அலறலாய்... இடுப்புக் கயிறுக்கு ஏறி விட்ட தண்ணீர் நுரைப்பின் பயத்தில்... ஓடுவதா... நீந்துவதா... எது வழி? ஒரே வழியாய் காட்டாறு எல்லோரையும் இழுத்துக்கொண்டு போவதை உணர்ந்து மயங்கி ஒரு இரவின் கண் விழிப்பில் எங்கோ கரை ஒதுங்கி...

செத்துப் போனவர்களெல்லாம் பெரும்பாலும் குழந்தைகள், பெண்கள், வயோதிகள்!

—வள்ளியும் ஒருத்தி. அவளைப் போலவே தண்ணீர் வெளுப்பில் குழந்தையும்-தோள் மாருப்பில் இறுகத் தொங்கிக் கொண்டு!

தன்னுடைய தோளில் டிரான்சிஸ்டரைப் பிரிய மனமில்லாது தொங்க விட்டுக் கொண்டு வந்ததற்குப்பதில் வள்ளியிடமிருந்து தன்னுடைய குழந்தையை வாங்கி அவளுடைய சிரமம் போக்கியிருந்தால் ஒரு வேளை வள்ளி மட்டுமாவது பிழைத்திருப்பாள்!

இழப்புகள் மூட்டிய கோபம் டிரான்சிஸ்டரை அந்தக் கரையிலேயே நொறுக்கியதோடு முடிந்தது.

அம்மைத் தழும்புக் குறவன் தனி ஆளாய் அதற்கு மேல் சிந்திக்கத் தயாராயில்லை. கூட்டத்தோடு சேர்ந்து கொண்டான்.

அவர்கள் எல்லோரும் குப்பை மேட்டு நாய்களாக அலைந்தார்கள்

பசி... பசி... பசி...!

"நரிக்கொம்பு இருக்கா... கஸ்தூரியாவது இருக்கா?"

"அடுத்த தடவை கொண்டு வர்றோம் ஆயி. ஞ்சியை ஊத்திக் குடிக்க தகரவாளி கூடயில்லே. ஆயி... வெள்ளத்தில எல்லாம் போயிடுச்சு."

"கஸ்தூரி கொடுத்தின்னு கஞ்சி ஊத்தறேன்... இல்லேன்னு போ... போ... போ..."

"ஆயி... ஆயி... ஆயி..."

அக்கம் பக்கத்திலுள்ள நாய்களும் ஒன்று சேர்ந்து கொண்டு அந்தக் குறவர் கூட்டத்தினரை விடாமல் குலைத்துக் கொண்டே வந்தன. ஓட்டமும் நடையுமாக அலைந்தனர்.

குறத்திகளெல்லாம் ஒரே கூட்டமாய் திடீரென்று நின்று விட்டனர். நிறைமாதக் கர்ப்பிணியாக இருந்த குறத்தி அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

குறவர்களிடம் நாலைந்து குறத்திகள் ஓடி வந்தனர். கைகளைப் பிசைந்தனர். குறவர்கள் முகத்திலும் கலவரம்!

தெருவின் ஓரமாய் சுவரை ஒட்டி இடைவெளியில்லாமல் நெருக்கமாக வட்டம் கட்டி குறத்திகள் நின்று கொண்டனர்.

நடுவில்...

குறவர்கள் வீடு வீடாய்ப் படியேறினர்.

"ஆயி ஆயி தங்கச்சிக்காரி புள்ளைப் பேரில நிக்கரு. ஒரு கந்தல் கிழிசல் துணி இருந்தா குடுங்க ஆயி. உங்க குடும்பம் நல்லா இருக்கணும்."

—அந்த வீட்டிலிருந்த பெண் வாசலுக்கு ஓடி வந்தாள். வட்டமாய் நின்று புழுதி பரப்பிக் கொண்டு ஊர் நாய்கள் ஊளையிடுவதற்கும் மேலாக ஒரு பெண்ணுடைய பிரசவ வேதனையின் காட்டுக் கூச்சல் அதற்குள்ளிருந்து வந்ததை உணர்ந்து சிலிர்த்துப் போய் விட்டாள் அவள்.

ஒரு கணம் என்ன செய்வதென்றே புரியவில்லை. விருட்டென்று தன்னுடைய மேலாடையை அவர்களின் அவசரத்துக்கு அவிழ்த்தெறிந்து விட்டு உள்ளே ஓடினாள்.

## தாய் இதழ்
## விற்பனையாளர் வரிசை

நீலகிரி மாவட்டம்-உதகை வட்ட 'தாய்' விற்பனையாளராக இருக்கும் இவர் தாயை தெய்வமாக மதிக்கின்ற காரணத்தால் தன் ஏஜென்சியை தன் தாயின் பெயரிலேயே வைத்திருக்கிறார்.

ஒவ்வொரு கடைக்கும் இவரே முன் சென்று விற்பனை குறித்துப் பேசி வருகிறார்.

'தாய்' இதழிற்காக மட்டும் தனியே பல விளம்பரங்களைச்செய்து வருகிறேன் என்கிறார்.



ஜெயசீலன்.

'தாய்' விற்பனையை இன்னும் ஓராண்டிற்குள் பெருமளவில்—தமிழகத்திலேயே உயர்த்திக் காட்டுவேன் என்று உறுதியோடும் சொல்கிறார்—பெருமையாகவும் சொல்கிறார்.

இவரின் தாயின் பெயர் எஸ். ஏ. ஞானமணி.

விற்பனையைக் கூட்ட இன்னும் எந்தெந்த வழிகளில் பாடுபடலாம் என்று துடிப்போடு இந்த இளைஞர் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்.

இவர் பணி வளர்க.

வாழ்க. வாழ்த்துகிறோம்!




—சிவகுமார்-அம்பிகா

'தீர்ப்புகள் திருத்தப்படலாம்'

வெள்ளத்தால் வீடு சேதமடைந்தவர்களுக்கு வேட்டி, சேலை, அரிசி எல்லாம் கொடுப்பதாக சேதி அறிந்ததும் குறவர்களிடையே பெரும் பரபரப்பு உண்டாகியது.

புயலும் வெள்ளமும் எங்கோ அழிக்க சிறு தூறல் விழுந்த அந்த ஊரின் ஜனங்கள் பெருவாரியாக நிவாரணம் வாங்கிக் கொண்டிருந்தனர்.

ஓவென ஓரே இரைச்சலாய் அங்கே புகுந்தனர்.

''ஷாமி...ஷாமி எங்க குச்சுகளும் வெள்ளத்தில அழிஞ்சு போச்சு ஷாமி... எங்கள்ல பாதிப் பேரு செத்துப் போயிட்டாங்க ஷாமி...சேலை வேட்டி குடுக்கறதாச் சொன்னுங்க ஷாமி. பெரிய மனசு பண்ணி...ஷாமி''

''வீடு சேதமானவங்களுக்குத்தான் கொடுக்கச் சொல்லியிருக்காங்க. நாடோடிக்கெல்லாம் கிடையாது. உங்களுக்கெல்லாம் வீடே இல்லாத போது எப்படிக் குடுக்கிறது...?''

சோர்ந்து போய் விட்டார்கள் குறவர்கள்.

நகரத்தை அவர்கள் நன்ருக இனம் கண்டு கொண்டு விட்டார்கள். நரிக்கொம்பும், கஸ்தூரியும் இல்லாமல் இனி நகரத்துள் நுழைய மாட்டார்கள்.

மறுநாள் நரிக்குறவர்கள் ஊரை விட்டுப் போயே விட்டார்கள். ஒருவரையும் காணவில்லை.

ஊரின் கட்சிக் கொடிக்கம்பங்களெல்லாம் மூளியாய் காணப்பட்டன. நரிக்குறவர்களுக்கு புதுக் கோவணம் கிடைத்து விட்டது.

நகரின் மத்திய தேசியக் கம்பத்தில் கொடி இருக்கிறது—அரைக் கம்பத்தில்!



# பார்த்தே ஆகணும்

சொக்கநாதபுரம் சேதுராமன்

"பொண்ணப் பார்க்காம சம்மதம் சொல்ல மாட்டேன்"

நிக்காஹ் நடக்கவிருக்கும் கடைசி நிமிடத்தில் மாப்பிள்ளை இப்படிச் சொல்வான் என்று ஆலீம்ஷா எதிர்பார்க்கவேயில்லை.

அதை ஜமாத்தார் முன்னிலையில் அவர் தெரிவித்தபோது அவர்களும் திகைத்துப் போய் விட்டார்கள்.

பையனின் தகப்பனாருக்கோ கோபமாக வந்தது. அதை நுனி மூக்கில் வைத்துக் கொண்டு "என்னடா முறையில்லாம பேசறே. நிக்காஹ் முடிஞ்ச பிறகுதானே பொண்ணப் பார்க்க முடியும்?" என்றார் அவனிடம்.

அவன் நினைப்பெல்லாம் நண்பன் ராமு சொன்னதிலேயே இருந்தது...

'மஜீத்! எனக்கு கட்டி வைத்தார்களே காசுக்கு ஆசைப்பட்டு ஒரு கரி மூஞ்சியை. அதுபோல உனக்கும் ஆகிடக்கூடாது. பெண்ணை உனக்குப் பிடிச்சிருந்தாலொழிய யார் பேச்சைக் கேட்டும் கல்யாணத்தைப் பண்ணிடாதே. பிறகு என்னைப் போல நீயும் அவஸ்தைப் படணும்' என்பதை வெளிப்படையாகச் சொல்லாமல் மேலோட்டமாக 'பொண்ணப் பார்க்காம சம்மதிக்க எனக்குத் திருப்தியில்லை' என்றான் தந்தையிடம்.

"அப்படின்னா நீ அய்யாச் சாமிக்கோ, ஆறுமுகத்துக்கோ பிறக்க வேண்டியவன். அல்லாப் பிச்சைக்கில்ல பிறந்திட்டே" என்றார் கடுமையாக.

யாருக்குப் பிறந்திருந்தாலும் சரி, தன் முடிவை மாற்றிக் கொள்வதாய்

இல்லே என்று அவன் உறுதியாய் இருந்தான்.

தன்னுல்தானே இத்தனையும் என்று பக்கத்து அறையில் இருந்த மணப்பெண் கதீஜாவுக்குப் பொறுக்க வில்லே. "அவர் என்னேப் பார்க்கனும்னு தானே விரும்புருர். நல்லாப் பார்த்திட்டுப் போகட்டும்" என்ருள் தந்தையை வர வழைத்து.

"என்னம்மா நீயும் அப்படிச் சொல்றே?"

"பிடிவாதமா இருக்கும் போது வேற என்ன சொல்றது" அவள் கண்களில் நீர் முத்துக் கோத்தது.

சில நிமிடங்களுக்கெல்லாம் மணப்பெண் இருக்கும் அறைக்கு மாப்பிள்ளேயை அழைத்துச் சென்றனர்.

அவனது எதிர்பார்ப்பெல்லாம் பூச்சரங்களால் திரையிட்ட அவள் முகத்தைக் காண்பதிலேயே இருந்தது.

தன் முகத்திற்கு திரையிட்ட பூச்சரங்களே மணப்பெண் தன் பிஞ்சு விரல்களால் மெல்ல விலக்கி மாப்பிள்ளேக்கு முக தரிசனம் செய்தாள். பார்வை மட்டும் நிலம் பார்த்திருந்தது.

மேகத்திலிருந்து வெளி வந்த முழு நிலவாய் அவள் முகம் கண்ட மாப்பிள்ளே பிரமித்துப் போனுன்.

இதுவரை அவன் காணுத அழகு முகம்!

அவனது முகத்தில் சந்தோச ரேகைகள் பளிச்சென்று தோன்றின.

ஜமாத்தார் முன்னிலேயில் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

அதைத் தொடர்ந்து மணப் பெண்ணிடம் சம்மதம் கேட்கப்பட்டது. அவள் நிறுத்தி நிதானமாக தன் மறுப்பைத் தெரிவித்தாள்.

ஜமாத்தாருக்கு மீண்டும் அதிர்ச்சி. பெண்ணின் தகப்பனுர் துணுக் குற்றுப் போனுர்.

'அல்லாவே இது என்ன சோதனே? பையன்தான் தெரிந்தோ, தெரியாமலோ நடந்து கொண்டான் என்ருல் இவளுக்கு இப்போது புத்தியில் என்ன வந்தது?'

"ஏம்மா... ஏன் வேண் 'டாங்கறே?" என்ருர் பதட்டத்தோடு.

அவள் சில விஞடிகள் மௌன மாக இருந்தாள்.

"எதுவாக இருந்தாலும் சொல்லம்மா" —பெற்றவருக்கு மனம் அலே பாய்ந்தது.

"என்னே மன்னிச்சுடுங்க அத்தா! நா அழகா, இல்லேயான்னு என்னேப் பார்த்ததுக்கப்புறந்தானே அவர் சம்மதம் சொன்ருர். ஒரு வேளே நா அழகா இல்லாம இருந்தா இந்த நிக்காஹிற்கு எப்படி சம்மதிப்பார்? அவருக்கு நா வாழ்க்கைப்பட்டா என்னுடை அழகு ஆரம்பத்தில கொஞ்சநாள் வரைக்கும் அவருக்கு சந்தோஷத்தை கொடுக்கலாம். குழந்தை குட்டினு உண்டான பிறகு அவருக்கு நா அழகாத் தெரியாது, மகிழ்ச்சியும் இருக்காதே? அத்தோடு இல்ல, மதிப்பும் போயிடும். பிறகு, பாசத்தையோ, பற்றுதலேயோ அவரிடம் எப்படி எதிர்பார்க்க முடியும்? இப்படிப் பட்டவங்க தலாக் கூட செய்யமாட்டாங் கன்னு என்ன நிச்சயம்?"

தன் உள்ளக்கிடக்கையை கொட்டி விட்ட அவளுக்கு யாரால்தான் பதில் சொல்ல முடியும்?

●



முதன் முதலில் தமிழ்வாணன் எழுதிய நாவல் 'அல்வாத்துண்டு' அவர் இறுதியாக எழுதிய நாவல் 'டயல் தமிழ்வாணன்'

தமிழ்வாணன் இறுதியாக வாங்கிய நூல்கள்:

Life and Death
Future Shock

—டி. ஆர். கே. திங்கர்சால்





# மோகன்

விமர்சிக்கிறார்

## நினைவெல்லாம் நித்யா

ஸ்ரீதர், மீண்டும் தன்னை யார் என்று காட்டி இருக்கிறார். இவருடைய பிற படங்களுக்கு இணையாக-ஏன் அவைகளை விடவும் மேலாக இந்தப் படத்தை ஆக்கித் தந்திருக்கிறார். படத் துவக்கத்தில் இருந்து முழுமை வரைக்கும் கதையோடு ஒன்றி அதிலேயே படம் பார்க்கிறவர்களை அமிழ்ந்து போகச் செய்திருக்கிறார். ஃப்ரேமுக்கு ஃபிரேம் கவனம் செலுத்தி படம் செய்திருக்கிறார்.

சொல்லப்பட்டிருப்பது காதல் கதைதான். கார்த்திக்-ஜீஜீ காதல் ஜோடிகள். ஜீ ஜீ. புது முகம். புத்தம் புதுமலர். திரைக்கு புதிதான முக பாவங்களோடு தோன்றுகிறார். தன் பங்கை தெளிவாய், இயல்பாய், சிறப்பாய் செய்திருக்கிறார். திரைக்கு ஜீஜீ புதிதான வருகையால் அவர் செய்கிற எல்லாமே புதிதாக அலுக்க வைக்காததாக இருக்கிறது.

கார்த்திக்கின் இள நடிப்பும் சிறப்போடிருக்கிறது. ரவி, திலீப், லாவண்யா-கதை பாத்திரங்களாகத் தாங்கள் மாறி இருக்கிறார்கள். எம். ஆர். கேயின் காமெடி கலகலப்பூட்டுகிறது. தியேட்டரில் போய் உட்கார்ந்து இவரின் காமெடிக்காக மனம் விட்டு வாய் விட்டு சிரித்து விட்டு வரலாம்.

காமிரா கலை நயத்தோடு காட்சிகளைப் பிடித்துப் போட்டிருக்கிறது. ஜீ ஜீ.— கார்த்திக் இருக்கிற போட்டோ எரிந்து உருகி விழ பின்னாடி ஜீ ஜீ. அழுது கொண்டிருப்பதாக ஒரு காட்சி. எத்தனை அழகாக படமாக்கி இருக்கிறார்கள்!

இளையராஜாவின் சிறந்த ரீரிக்கார்டிங்... பாட்டுக்கள். இனிமை—இசை வெள்ளம்!

குறை கூறுதபடி அனைத்தும் சிறப்பாக இருக்கிறது. என்னை—என் மனசை இந்தப் படம் தொட்டிருக்கிறது. மனசுக்குள் நீங்காத ஒரு தாக்கம் ஏற்பட்டிருக்கிறது.

நல்ல கலரில் நயமாய் வந்த நளின நாடகம்!

சின்னஞ்சிறு மாலு — தன் அப்பாவையே கண்கொட்டாமல் வெறித்துக் கொண்டிருந்தாள்.

சத்தியமாய் — அப்பாவின் இந்த முகம், அவள் இதுவரையில் அறிந்தேயிராத முகம்... அம்மம்மா... என்ன ஒரு சிடுசிடுப்பு... எத்தனைக் கோபம்...

அப்பாவுக்கு இத்தனைக் கோபம் கூட வருமா? பல சமயங்களில் — அம்மாதான் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்வாள். ஒன்றுமேயில்லாத சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் அம்மா முகத்தைக் கடுகாய் சிறுக்க வைத்துக் கொள்வதும் — 'ஜனனி... ஜனனீ டார்லிங்...' — இப்படி இழைய இழையக் கூப்பிட்டபடி, அப்பா—அம்மாவின் பின்னாலேயே வட்டமிடுவதும் மகா வேடிக்கையாக இருக்கும்.

"அப்பாதான் இத்தனைக் கெஞ்சுறாரே... பழம் விட்டுடுமா..." — மாலு, அப்பாவின் சார்பில் தூது நடப்பாள்.

அம்மாவுக்கு, அப்பாவின் மீது ஏற்படும் எரிச்சலின் காரணத்தை அவள் அறிவாள்...

# பாவம், மாலுக்குட்டி

## அனுராதா ரமணன்



எல்லா அப்பாக்களையும் போல — ஆபீசுக்குப் பத்து மணிக்குப் போய்— மாலை ஐந்து மணிக்கு 'டாண்' என்று வீட்டு வாசலில் நிற்கிற ரகமில்லை அவளுடைய அப்பா.

டாக்டர் அப்பா. ஊரில் இருக்கிற நோயாளிகளுக்கெல்லாம் மருந்து கொடுத்து, ஊசி போட்டு, வியாதியை விரட்டுகிறவர். அடிபட்டால்—உடனே, காயத்தைக் கழுவிக் கட்டுப் போடுகிறவர். எப்பேர்ப்பட்ட காய்ச்சலும், இவர்



கை பட்டால் பறந்து விடும் என்பது சுற்று வட்டாரத்தில் பேசப்படும் பேச்சு.

"சொன்ன நேரத்துக்கு வர முடியவில்லை டார்லிங்... ஸாரி... ஸாரிம்மா... அவசரமா ஒரு கேஸ் வந்தது... நம்ம ஆடிட்டர் பிள்ளை — மரத்துலேருந்து கீழே விழுந்து, வலது கை எலும்பு ரெண்டு இடத்துல முறிஞ்சுடுத்து... பிளாஸ்டர் போட்டு, தூங்கறதுக்கு இன்ஜெக்ஷன் ஒண்ணையும் போட்டுட்டு — ஓடி வர்றேன்..."

அப்பாவின் நிலைமை மாலுவுக்குப் புரியும். ஆனால், இத்தனைப் பெரிய அம்மாவுக்கு மட்டும் புரியாது.

"பாவம்மா... கை ஒடைஞ்சு போனா — ரொம்ப வலிக்கும்தானே... அப்பா, அவனுக்கு மருந்து போட்டுக் கட்டலையின்னா வலி தாங்காம அழுவான் இல்லையா... நாம இன்னொரு நாளைக்கு சினிமாவுக்குப் போயிட்டாப் போச்சு...',

**டைரக்டர் ஜெகன்னாதன்**



## முதல் டைரக்ஷனில் முதல் காட்சி...

ஓ...அந்த இனிய நாளா...! அக்டோபர் 1972-ல் சத்யா ஸ்டுடியோ... காலை மணி 10. எனக்கு பயிற்சி கொடுத்து ஆளாக்கிய டைரக்டர்கள் டி. பிரகாஷ்ராவ், பி. நீலகண்டன், சாணக்கியன். எடிட்டர் தேவன், ஆகியவர்கள் கால்களில் விழுந்து வணங்கி விட்டு ஸ்டார்ட் சொன்னேன். படம் 'மணிப்பயல்'. முதல்காட்சி மாஸ்டர் சேகரை குளோசப்பில் எடுத்தேன். ஒரே ஷாட்டில் ஓ. கே. ஆகிவிட்டது. பதினைந்து வருடமாக பதினெட்டு படங்களுக்கு துணை இயக்குனராக பணிபுரிந்து பத்தொன்பதாவது படம் 'மணிப்பயல்' நான் டைரக்ட் செய்தேன். நல்லவர்களின் வாழ்த்தொலிகள் என் இதயத்தை வருடிக் கொடுத்தபோது, வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயத்தை தொடங்குவது போன்ற ஒரு உணர்வு ஏற்பட்டது.

1972-ஆம் ஆண்டு, நமது தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். அவர்களுக்கு இந்திய அரசு சிறந்த நடிகருக்கான விருது கொடுத்து கௌரவித்தது. அந்த பாராட்டு விழாவில் புரட்சி தலைவருக்கு நான் மாலை அணிவித்தேன். அதே மாலையை அவர் எனக்கு அணிவித்து "நீ சீக்கிரம் டைரக்டர் ஆகிவிடுவாய்" என்று சொன்ன தேவ வாக்குப்படி மூன்றே மாதத்தில் சத்யா மூவிஸின் அதிபர்- இன்றைய அமைச்சர் மாண்புமிகு ஆர்.எம்.வீரப்பன் அவர்கள் 'மணிப்பயல்' படத்தை டைரக்ட் செய்யும் வாய்ப்பைக் கொடுத்தார்.

உயர்ந்த நெஞ்சங்களின் பாதங்களை நன்றி உணர்வோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்...

"சொல்லுடா கண்ணு... நீயாவது எடுத்துச் சொல்லு... உடம்பு முக்கியமா... நம்ம சந்தோஷம் முக்கியமான்னு கேளு..."

டாக்டர் அப்பா — தன் மகளிடம் தனது கேஸை ஒப்படைப்பார்... அவள்தான் இருவருக்கும் இடையில் சமாதான தேவதையாக நிற்பவள்...

அப்பேர்ப்பட்ட அப்பா, கற்பாறையாய் இறுகின முகத்துடன் உட்கார்ந்திருப்பதும்—டாக்டரை, மிக அவசரமாகப் பார்க்க வந்த நாலு பேர் — அவரின் இரு கால்களையும் இறுக்கமாய் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டுக் கெஞ்சுவதும்...

"தயவு செஞ்சு, பெரிய மனசு பண்ணுங்க டாக்டர்... லாரி மோதி, குத்துசுரும், குலை உசிருமா கிடக்காருங்க, எங்க அண்ணாத்தை... புள்ளை குட்டிக்காரருங்க..."

"இதப் பாருங்க... எத்தனை தடவைதான் திருப்பித் திருப்பிச் சொல்றது? நான் என்ன இங்கிலீஷ்லேயா சொல்றேன்... தமிழ்லேதானே பேசறேன்... இது போலீஸ் கேசு. சட்டப்படி இதைக் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி டாக்டருங்கதான் பார்க்கணும்..."

"என் நர்ஸிங் ஹோம்லே — சாதாரண ரூமே ஒரு நாளைக்கு அம்பது ரூபா வாடகைப்பா... இந்த மாதிரிக் கேஸை நான் கவனிக்கிறதுன்னு ஆயிரக் கணக்குல பணம் செலவாகும்... கவர்ன்மெண்ட் ஹாஸ்பிடல்லேன்னு செலவு அதிகம் ஆகாது..."

"அப்படிச் சொல்லிடாதீங்க தரும துரை... ஒரு கட்டுக் கிழத்தியத் தாலி அறுக்க வச்சிடாதீங்க..."

இவர்கள் — விடாப்பிடியாகக் கெஞ்சிக் கொண்டிருக்க... மாலு, அம்மாவின் முதுகைச் சுரண்டுகிறாள்...

"அம்மா..."

"என்னடி?"

"நம்ம நர்ஸிங் ஹோம்லேதான் —இப்ப நாலஞ்சு ரூம் காலியா இருக்கறதா அப்பா சொன்னாரே... அதுல ஒரு ரூம்லே இந்த பேஷண்ட்டைப் போட்டு, அப்பாவை சுருக்க 'ட்ரீட்மெண்ட்' கொடுக்கச் சொல்லேன். பாவம்..."

"நீ வாயை மூடிட்டு இரு... நாத்துக் கிழவி..."

அம்மா, 'சுள்'ளென்று எரிந்து விழுகிருள். மாலு, பால்கனி பக்கம் போய்—அடிபட்டுக் கிடப்பவனைப் பார்க்கும் ஆவலில் எட்டிப் பார்க்க...

ரத்த வெள்ளத்துக்கு நடுவே—துணி மூட்டையாய் சுருட்டப்பட்டுக் கிடத்தப்பட்டிருக்கும் அவன்...

அவனை, தினமும் பள்ளிக்குப் போகும் வழியில் மாலு பார்த்திருக்கிருள். சைக்கிள் ரிக்‌ஷா ஒன்றை, புளிய மரத் தடியில் நிறுத்தி வைத்து, அதிலேயே சொகுசாக, என்னமோ நகைக்கடை சேட்டுக் கணக்காக, சாய்ந்திருப்பான் அவன்.

புளிய மரத்தடிதான் இவனின் வீடோ என்றுகூட அவள் அடிக்கடி நினைப்பதுண்டு. அப்படி, பிள்ளை-குட்டி களுடன் எப்பொழுதும் குடும்பம் புடை சூழ அமர்ந்திருப்பான்...

இவளையொத்த ஒரு பெண் — தன் தாய்க்கு ஒத்தாசையாக, கரிச் சட்டிகளைக் கழுவிக் கொண்டிருக்கும். இல்லாவிட்டால், தம்பிப் பாப்பாவுக்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருக்கும். சில சமயங்களில்—அப்பனுடன் பேச்சுக் கொடுத்து — வாயடித்துக் கொண்டிருக் கும்...

பள்ளிக்கூட நேரங்களில், கைக் காரியத்தை அப்படியே போட்டுவிட்டு, கான்வென்ட் சிறுமிகளின் நறுவிசான உடையையும், பளபளக்கும் பூட்ஸ் அணிந்த பாதங்களையும், இரட்டைப் பின்னல்களில் பட்டுப் பூச்சிகளாய்ச் சிற கடிக்கும் வெள்ளை ரிப்பன்களையும், சிறுமி களின் உதட்டோரத்தில் விளையாடும் 'தஸ் புஸ்' இங்கிலீஷையும் — தனது கொட்டைப் பாக்குக் கண்களை இன்னும் அகல விரித்தபடி வேடிக்கை பார்ப் பாள் அவள்...

"ஏய் பொம்மி... அங்கே என்ன வேடிக்கை... உன்னையும் இஸ்கூலுல சேர்த்துரட்டுமா..."

"இவங்க போருங்களே... அதே பள்ளிக்கூடத்துல சேர்த்துடறியாப்பா.."

"அடி, என் சீமாட்டி பெத்த வெள்ளாட்டுக் குட்டி... இங்கிலிபீசு படிப்பு வேண்டிக் கிடக்குதா களுதைக்கு..."

பெற்றவன் சீண்டுவான். சிறுமி, சிணுங்குவாள்.

பள்ளிக்கூடத்தின் மிக அருகில்-இவர்களது குடியிருப்பு. மாலுவும், மற்ற சிநேகிதிகளும் மதிய உணவு வேளையில், மரத்தைச் சுற்றி புளியம்பழம் பொறுக்கு வதில் மிகத்தீவிரமாக முனைவார்கள். அப்பொழுதெல்லாம் பொம்மி இவர் களுக்காக வரிந்து கட்டிக் கொண்டு, புளியம்பழம் பொறுக்குவாள். பழங்களில் மண் ஒட்டிக் கொண்டிருக்கிறதோவென தனது அழுக்குப்பாவாடையால் துடைத் துக் கொடுப்பாள்... சில சமயங்களில், இவர்களது தொந்திரவு பொறுக்க முடியாமல் பொம்மியின் தகப்பனே மரத்திலேறி, புளியம்பழங்களை உலுக்கி உதிரும்படி செய்வான்...

"நீங்கள்ளாம் பெரிய மனுசங்க வீட்டுப் பிள்ளைங்க... இப்படி புளியாம் பழம் திங்கறது உங்க வீட்டுக்கு தெரிஞ்சா திட்ட மாட்டாங்களா..."

## பெண்ணில்லாமல் படமா?



சாதாரண படங்களைவிட Science-Fiction படங்கள் பிரமாதமாக ஓடு கின்றன. ஆகவே 'Star wars' படத்தைத் தொடர்ந்து 'Battle Beyond the stars' என்ற படம் வரவிருக்கிறது. ஒரு கிரகத்தை மற்ெருரு கிரகத்தார் அடிமைப் படுத்த முயல்வது கதை. எப்படிக் கதை பண்ணினுலும் பெண்கள் இல்லாமல் எதுவும் இல்லை. அந்தப்படத்தில் வரும் பெண் இவள்.

—எம். சிவசங்கரன்

இப்படி அவன் கேட்டிருக்கிறான். மாலு. தன் தந்தையைப் பற்றி, அவரது டாக்டர் தொழிலைப் பற்றி பொம்மியிடம் பேச்சு வாக்கில் பீற்றிக் கொண்டிருக்கிறாள்.

"எங்க அப்பா ஊசி போட்டா செத்துப் போனவங்க கூட முழிச்சுகிட்டு, எழுந்து உட்காருவாங்க..."

"ஆங்..."

"நேத்து ஒரு ஆபரேஷனும்..."

"ஆப்பரேசன்னா?"

"ஆபரேஷன் தெரியாது...? எங்கே ரொம்ம்ப வலிக்குதோ... அங்கே, கத்தியாலக் கீறி— புண்ணு கிண்ணு இருந்தா சரிபடுத்தி மறுபடியும் 'ஸ்டிச்' பண்ணிடுவாங்க... நேத்து— இப்படித்தான்...ஒருத்தருக்கு வயத்துல கீறி, ஆப்ரேஷன் செஞ்சிருக்காரு எங்கப்பா..."

"வலிக்காதா..."

"ச்சீய்... என்ன நீ இப்படிக் கேட்கறே... எங்கப்பா வலியே தெரியாம ஆபரேட் பண்ணுவார்..."

"என் கால் சிரங்கை காமிச்சா- அதைக் கூட ஆப்பரேசன் பண்ணி சரி பண்ணிடுவாரா...?"

"சிரங்கா... இதுக்கெல்லாம் ஆபரேசன் வேணும்... ஆயிண்ட்மெண்ட் போறும்..."

மாலு, இப்படி அவளிடம் சொல்லும் போது-பொம்மி, அவளையே ஒரு டாக்டராகப் பாவித்து, பய பக்தியுடன் பார்ப்பாள். இவர்களது பேச்சை ரசித்தபடி-மர நிழலில் சிறு குழந்தையை மார்பு மீது போட்டபடி படுத்துக் கிடப்பான் பொம்மியின் தகப்பன்.

"டாக்டரு பொண்ணு பார்த்தியா... என்ன தான் சொல்லு... அதுங்க புத்தியும் படிப்பும் தனிதான்... ஒசத்தி ஒசத்திதான்..."—இப்படி, தன் மனைவியிடம் கூறி சிலாகிப்பான்.

அப்பேர்பட்டவன்—

மூச்சு பேச்சில்லாமல் கிடக்க... அவனது ரத்தம் தோய்ந்த கிராப்பை ஒதுக்கியபடி, கண்ணீரை ஆறாகப்பெருக விட்டபடி பொம்மியின் தாய்—அவனருகில் அமர்ந்திருக்க... தம்பிப் பாப்பாவைத் தோளில் சார்த்தியவாறு பொம்மி, பால்கனியை அண்ணாந்து பார்க்க...



## நிஜங்கள்-நிழல்கள்

'மற்றொன்று எடுத்துக் கொள்ளுங்கள் மேடம்' என்று ரீகன், எலிஸபெத் ராணியிடம் கூறுவது போல் இருக்கிறது. ஆனால் இவர் ரீகனின் டூப்ளிகேட், மிஸ்டர். டேவிட் பெக்கர். ஷாப்பிங் சென்றிருந்த போது அங்கு ஒரு பெண்மணியிடம் பேச நேர்ந்த போது 'Caravan' போட்டோ கிராபர் 'க்ளிக்' செய்து விட்டார். இந்தப் பெண்மணியின் பெயர் ஜேனட்.

—எம். சிவசங்கரன்

மாலு ஒரு கணம் செயலிழந்து நிற்கிறாள்,

"சைக்கிள் ரிக்ஷா இருக்குதில்லே... அதுல தூக்கிட்டுப் போங்கய்யா..."

"எப்படிங்க... எப்படிங்கய்யா.. ரிக்ஷாவுல படுக்க வைக்கற வசதி ஏதுங்க... அவரை, இப்ப எந்த இடத்துலப் புடிச்சுத் தூக்கினாலும் 'பொட்டு'னுப் போயிடுவாருங்க..."

"தெரியுதில்லே? இந்த மாதிரி ஒரு கண்டிஷன்லே பேஷண்ட்டைக் கொண்டு வந்துட்டு, எங்கிட்ட மல்லுக்கு நின்னா எப்படி... நான் வந்து என்ன தான் செய்யப் போறேன்..."

"சார்..."

"இந்தாப்பா—வாட்ச் மேன், இங்கே என்ன சினிமாவா நடக்குது? வேடிக்கைப் பார்த்துகிட்டு மரமாட்டம் நிக்கறதுக்கா, நான் உனக்கு மாசா மாசம் சம்பளம் கொடுத்து வச்சிட்டிருக்கேன்? இவங்கள வெளில அனுப்பி கேட்டை பூட்டு மேன்..."

மாலு, அப்பாவின் இரைச்சலைக் கேட்டு, குலை நடுங்கியவளாய், அம்மாவின் பின்னால் ஒளிய...

வாட்ச்மேன், அவர்களை வெளியேறும்படிக் கேட்டுக் கொண்டிருக்கும் போது...

கீழே பொம்மியின் தாய் பெரிசாய் ஓலமிட...

"ஐயோ, ராசா... மோசம் பண்ணிட்டுப் போயிட்டிங்களே..."

கூடவே, அந்த ஏழைச் சிறுமியின் அவலம் நிறைந்த அழுகுரல்...

மாலு, அவசரமாய் பால்கனிப் பக்கம் ஓட... அவளின் தாய், அவளைப் பலவந்தமாய் இழுத்தணைத்து தடுக்கிறாள்...

"ஷ்... அங்கே போகாதே... அதையெல்லாம் நீ பார்க்கக் கூடாது..."

மாலு, அம்மாவையே வெறித்துப் பார்க்கிறாள்...

இவர்களின் அழுகுரலில், ஒரு கணம் ஸ்தம்பித்து நின்ற அந்த நாலு பேர்களின் விழிகளிலும்... சுடர் விட்டுத் தெறித்த ஆத்திரம் — வார்த்தைகளில் அடங்காதது.

நால்வரில் ஒருவன் — முதலில் தன் நிலைக்கு வந்து, டாக்டரைப் பார்த்துக் காறி உமிழ்கிறான்.

"த் தூ... நீயெல்லாம் ஒரு டாக்டரா..."

"உனக்கு சாமி தகுந்த தண்டனை கொடுக்கத்தான் போறாரு... எங்க வயித்தெரிச்சல் — உன்னை சும்மா விடாது..."

இது, அடுத்தவனின் சீற்றம் மிகுந்த சாபம்...

மூன்றுவன், எகிறுவதற்குள்— வாட்ச்மேன், இவர்களைக் கீழே தள்ளிக் கொண்டு போக...

வெகு நேரம் வரையில் மௌன மாய் அமர்ந்திருந்த மாலுவை, அம்மா அழைத்துக் கொண்டு போய் படுக்க வைக்க...

"அம்மா..."

"உம்..."

"அந்த...செத்துப் போனுனே... அவன் ரொம்ப நல்லவன்... அவனேட பொண்ணுதான் பொம்மி..."

"சரி. போகட்டும். நீ இப்பப் படுத்துத் தூங்கு..."

அம்மா, அவளை மிருதுவாய்த் தட்டுகிருள்.

"என்னவாம்..."

கேட்டுக் கொண்டே, மகளின் மறுபுறத்தில் டாக்டர் வந்து படுக்க...

"ஒண்ணுமில்லே... குழந்தை தானே...என்னமோ பயந்து போய் புலம்பரு..."

அம்மாக்காரி, விஷயத்தை இலேசாக்க முயற்சிக்க...

"நான் ஒண்ணும் பயந்து போகலே. இந்த பொம்மி இருக்காளே... நான் ஸ்கூலுக்குப் போறவழியில—தினம் பார்ப்பேன். அவ அப்பாதான் இப்ப செத்துப் போனது...நீங்க, அவனைப் பிழைக்க வச்சிருக்கலாம்..."

"பெரியவங்க விவகாரத்துல நீ தலையிடக் கூடாது மாலு. சமர்த்தா தூங்கு..."

அப்பாவின் கண்டிப்பான வார்த்தைகள்... அவளை ஒரு விதப் பரிவுடன் அணைத்த அவரது தடித்த விரல்கள்...மாலு, ஒரு விதக் கூச்சத் துடன், அருவெறுப்புடன் நகர்ந்து, அப்பாவுக்கும், அம்மாவுக்கும் நடுவில் படுத்திருந்தும்—இவர்களின் ஸ்பரிசங் களிலிருந்து விலகிப் படுக்க...

மறுநாள்—

இவள் பள்ளிக்குப் போகும் பொழுது...பள்ளிக்கூட வேனின், சன்னல் புறமாய் அமர்ந்து—தெருவை, புளியமரத்தடியை அவள் ஒருவிதப் பரபரப்புடன் பார்க்கும் பொழுது...

பொம்மியின் தகப்பனை—அவனது ரிக்ஷாவிலேயே உட்கார வைத்து, பூக்களால் வண்டியை அலங்கரித்து... சிறு கும்பலாய் வண்டியைச் சுற்றி ஒப்பாரி வைத்து...பொம்மியின் தாய்—தரையில் விழுந்து புரண்டு அழுது கொண்டிருக்கிருள் ... அவளை இரு பெண்கள், கைத்தாங்கலாய் அணைத்துப் பிடித்திருக்கிருர்கள்.

பொம்மி—

இந்தக் கூட்டத்திலிருந்து ஒதுங்கி மரத்தடி நிழலில் அனுதரவாய்—அழக் கூடத் தெரியாமல்...

பள்ளி வண்டி, அவளைத் தாண்டும் போது—மாலுவின் கண்களை அவள் ஒருகணம் தரிசித்த போது—

ஆக்ரோஷத்துடன், தரையில் கிடந்த கல் ஒன்றைப் பொறுக்கி, வண்டியின் மீது அடிக்க...

"தட தட தட் தட்" — வண்டி யில், கல் உரசுவதை, துக்கம் பொங்க

---



"சாமி நான் கௌரவமா காலேஜ் பக்கம் பிச்சையெடுக்கிறவனுங்க!"

"அதுக்கு நான் என்ன பண்ணணும்?"

"ஏதாவது பழைய ஜீன்சு, கீன்சு இருந்தா இங்க தள்ளுங்க சாமி!"

—ஜி. நடராஜன்

பாலோடு பழமோடு வரவேண்டுமோ—என்
பருவத்தை விருந்தாகத் தரவேண்டுமோ
பாலுண்டு இதையுண்டு பசியாறலாம்—இந்தப்
பழச்சோலை யில்நீயும் இளைப்பாறலாம்...

—'கண்மணிப் பூங்கா'வில் சரிதா—விசு.

எட்டிப் பார்க்கிருள் மாலு. கல், அவள் மீதுப் படவில்லையாயினும் — நெஞ்சைக் குறி பார்த்து எறிந்தாற் போல மரண வலி...

அன்று நடுப்பகல்—

தாள முடியாத காய்ச்சலுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தவள் தான் மாலு.

சாப்பாட்டு மேஜையில் பரிமாறப்பட்ட உணவுகள் எதுவுமே பிடிக்காமல்...

"என் கண்ணு இல்லே,கொஞ்சமாவது ஆகாரம் உள்ளே போக வேணுமா... என்னங்க, நீங்களாவது அவளை ஒரு தம்ளர் பாலைக் குடிக்கச் சொல்லுங்களேன். ஸ்கூல்லேருந்து வந்ததுலேருந்து-ஒரு வார்த்தைக் கூடப் பேச மாட்டேங்கரு... ஒரே பிடிவாதம்..',

அம்மா, அப்பாவிடம் சொல்ல

"அவ சமர்த்தாச்சே... நான் கொடுத்தா ஒழுங்கா குடிப்பாளே..."

அப்பா,பால் தம்ளரை அவளது உதட்டில் பதிக்க...

மாலு — இவர்கள் இருவருமே எதிர்பாராத வகையில் தம்ளரைப் பறித்து, விட்டெறிகிருள்.

"கிட்ட வராதே... உன்னைக் கண்டாலே எனக்குப் பிடிக்கலே... போ... போயிடு..."

அப்பாவைப் பார்த்து இரைந்து கூச்சல் போட்டதுமல்லாமல் மேஜையில் வைத்திருந்த பீங்கான் தட்டைத் தூக்கி, தந்தையின் முகத்தை நோக்கி விட்டெறிகிருள்...

"பயப்படாதே ஜனனி...நேத்து நடந்த இன்ஸிடன்டுல குழந்தை ரொம்ப மிரண்டு போயிருக்கா... ரெண்டு மூணு நாள்லே சரியாயிடுவா..."

பெற்றவளுக்கு — டாக்டர் புருஷன் சொல்லும் தேறுதல் மொழிகள்.

இரண்டு மூன்று நாட்களில் சரியாகாமல் — காலம் முழுக்க மாலு புத்தி பேதலித்து இருக்கப் போவதை... பாவம் — அத்தனைப் பெரிய டாக்டர் அப்போது உணர்ந்திருக்கவில்லையே!



# மணலைப் பார்த்தீர்களா!

இலங்கை—

கொழும்பு நகரின் கடற்கரை...

, திறந்த வெளி திரை அரங்கமாகத்தான் தோன்றியது. சென்சார் செய்யாத ஆங்கிலப் படங்களை இங்கே பார்ப்பது போலவே தோன்றியது. சே! நம்மூர் சினிமாக்களில் பட்டும் படாமலும் காண்பிக்கப்படும் காட்சிகள்! அப்படியே நேரடியாகவே செய்து காட்டுகிறார்கள்.

என்ன ஆச்சரியம்! இந்த காட்சிகளை எல்லாம் பார்த்து ரசிக்காத பாவியும் இங்கே உண்டா? அவன் அதிசய மனிதன் தான்!

தனியாக இவன் மட்டும் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்ற ஆச்சரியத்தில் அவன் அருகில் சென்றேன்.

மணலைக்குவித்து அலைப்பரப்பில் சின்னவீடு கட்டுவதும், சீறிப் பாய்ந்து வரும் அலைகள் அதை சிதறுகாயாய் ஆக்குவதும், மீண்டும் அதையே செய்வதும் வேடிக்கையாகவே தோன்றியது, அவனின் இந்த விளையாட்டு!

ஆனால் மணல் வீடு கட்டி விளையாடும் வயது அவனுக்கு இல்லை. பைத்தியகாரனைப் போலும் தெரியவில்லை. வயது முப்பதுக்குள் தான். அதிகமாகவே காட்டும் முதிர்ச்சி. நான் பக்கத்தில் போய், "உனக்கு எந்த ஊர்?" என்றேன். என் கேள்வியில் கொஞ்சம் பரிவு இருந்திருக்கவேண்டும். அவனது பார்வையில் பரிதாபம் மட்டும்தான் பதிலாக கிடைத்தது. "என்னப்பா, நீ ஊமையா? கேள்வியில் கொஞ்சம் உஷ்ணம். "இராமநாதபுரம் பக்கம்."

"ஏன் இப்படி சின்னப்பிள்ளை மாதிரி வீடு கட்டி விளையாடுகிறாய்?"

"சம்பாரிச்சி, ஊரில் போய் வீடு எல்லாம் கட்ட வேணும் என்றுதான் நினைத்தேன். தலையெழுத்து சரியில்லையே மணல் வீடு கட்ட வைத்துவிட்டது" நொந்து கொண்டான்.

'ஹோட்டல் நிப்போன்' எங்களை வரவேற்றது. இருவரும் சாப்பிட்டோம். பலநாள் பசி அவனது வேகத்தில் தெரிந்தது. வெளியில் வந்து பில்லுக்கு பணம் கொடுத்துவிட்டு, மேலே உள்ள எனது அறைக்குள் அழைத்துச் சென்று, "உட்கார். இப்போது சொல். நீ ஏன் இப்படி ஆனாய்?"



**அஷோக மனோன்**

அவன் தெளிவாக பேச ஆரம்பித்தான். "இராமநாதபுரம் பக்கத்தில், சேதுக்கரைதான் எனக்கு சொந்த ஊர். வசதியான குடும்பத்தில்தான் பிறந்தேன். பெரிய ஆளுக பண்ணின தப்பு, அத்தனையும் வித்து தொலைத்துச் சுட்டாங்க—நான் எனது குடும்பத்தை காப்பாற்ற, ஒரு சின்ன டீக்கடையை

வைத்து ஏதோ எங்களது வயிற்றை கழுவிக் கொண்டிருந்தோம். கடைக்கு வருகிற முதலாளிங்க எல்லாம் இங்கே வந்து சம்பாரிச்சு, கொண்டாந்த பணத்தை வைத்து வியாபாரம் செய்யறதும், வீடுகள்—பங்களாக்களை கட்டறதும், எனக்கு என்ன வோ பண்ணிச்சு. நானும், அது மாதிரி இங்கே வந்து சம்பாரிச்சு காசு சேர்க்கணும் போல தோணுச்சு. அந்த முதலாளிகளை கெஞ்சி ஒரு வழியா இங்கே வந்து சேர்ந்தேன்.

சின்ன டீக்கடையா வைத்தேன். நல்ல நேரம். பெருகி வந்தது. வயித்தை மட்டும் கட்லேங்க—எல்லாத்தையும் கட்டிகிட்டேணுங்க. பணமும் சேர்த்திட்டேன். ஊருக்கு போகத்தான் வழி தெரியலே. ஏன்னு நான் பாஸ்போர்ட்டிலே வரலே. எப்படியோ சமாளிச்சு. அப்பப்ப, கொஞ்சம் சல்லியை கொடுத்து, தன்னக்கட்டிட்டேன். பாவி ஒருத்தன் கிட்டே யோசனை கேட்டேன்.

அவன், 'தெரிந்த ஒருத்தர் கிட்டே கொடுத்திடலாம். பின்னலே நம்மூரிலே போய் வாங்கிக்கலாம்'னு சொல்லி அத்தனை பணத்தையும் எடுத்துக்கிட்டு வரச்சொன்னான். நானும் நம்பினேன். கொஞ்சம் அதிகமாகவே செலவழித்தால், பாஸ்போர்ட் கூட வாங்கிடலாம்னு அவன் சொல்லவே எனது பொஞ்சாதிக்கு கடிதாசு வேறு போட்டுட்டேன். கடையை, வேறு ஒரு சிநேகிதர்கிட்டே கொடுத்து அதற்கும் பணம் வாங்கிக்கிட்டேன்.

எல்லா பணத்தையும் எடுத்துக் கொண்டு, போன மாதம் ராத்திரியில் அவன் கூட புறப்பட்டேன். அவன் முதலில் ஒரு வீட்டுக்குப் போய் ஒருவரிடம் என்னவோ பேசினான். நான் வெளியில் நின்றேன். ஒன்றும் விளங்கவில்லே. அவனும் சேர்ந்து வந்தான். நாங்க மூணு பேரும் ஒரு பெரிய இடத்திலே சாப்பிட்டோம். தண்ணிவேறு வாங்கிக் கொடுத்தாங்க. நல்ல குடி.

காலேயிலே தெருவிலே கட்டிய துணியுடன் கிடந்தேன். யாரையும் காணோம். அப்ப இருந்து இப்படித்தான் திரிகிறேன்."

பாவம் அவன் ஏமாந்து போயிருப்பது என்னைச் சங்கடப்படுத்தியது.

"உடனே நீ போலீஸில் சொல்லியிருக்கலாமே?" என்றேன்.

பாஸ்போர்ட் இல்லாமலிருந்ததற்கு தண்டனை தப்பாது என்பது அவன் பதிலிலிருந்து தெரிந்தது.

"சரி நான், உனக்கு உதவி செய்கிறேன், ஊருக்குப் , போகலாம்." என்றேன்.

"எந்த மூஞ்சியுடன் ஐயா நான் ஊருக்கு போக முடியும்?

கொஞ்ச காலம் இப்படியே இருந்து, கொஞ்சமாவது காசு ஏதாவதுசேர்த்துகிட்டு வரேனுங்க. ஐயாவுக்கு சிரமம் வேண்டாங்க" என்று கூறி விட்டு எவ்வளவு சொல்லியும் கேளாது சென்று விட்டான்.

மாசனத்தை (அதுதான் அவனது பெயர்) நான் ஊருக்கு கிளம்புவதற்கு முதல் நாள் பார்க்கக் கிளம்பினேன்.

. கடற்கரையை நோக்கி சென்றவனுக்கு, ஒரு பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. அவன் வழக்கமாக இருக்கும் இடத்தில் ஒரே கூட்டம்! போலீஸ் வேறு. மனசில் ஒரு பரபரப்புடன் வேகமாக கூட்டத்தை விலக்கிக் கொண்டு, உள்ளே சென்றவனுக்கு எத்தனை அதிர்ச்சி! உள்ளுக்குள் அது அழுகையாக மாறி விட்டது.

, ஆண்டவனே, இதென்ன சோதனை! இது வரையில் நடைப்பிணமாக திரிந்த மாசானம் பிணமாகவே ஆகி விட்டான்.

வேதனையுடன் கப்பலில் ஏறினேன். மாசானத்தின் முடிவு என்னை சுற்றி சுற்றி வந்து கொண்டிருந்தது.

மூன்று மணி நேரத்தில் தமிழ் நாட்டு மண்ணில் — இராமேஸ்வரத்தில் —கால் வைத்தேன்.

கஸ்டம்ஸ் செக்கிங் பிரிவிற்கு வந்த போது பிரசவ வேதனை தான்.

நமது கஸ்டம்ஸ், அந்தக் காலத்தில் இரண்யன் வேடம் போட்டவர்கள் போலும். அடுக்கி வைத்திருந்த பழைய சட்டைகளை எல்லாம் குடலாகவே உருவிவிட்டார்கள். தாறுமாருக கலைத்து, என்னத்தைத்தான் அப்படி பார்ப்பார்களோ தெரியவில்லை. இதற்கிடையில் ஏழாயிரம் கேள்விகள் வேறு.

இது ஒரு உண்மைக்கதை

கலைக்கப்பட்ட துணிகளை அடுக்க ஆரம்பித்தேன். இரண்டு மூன்று சேலைகள், குழந்தைகள் உடைகள், பிஸ்கட் பாக்கெட்டுகள், சில அலங்காரப்பொருட்கள், சோப்புக்கட்டிகள், பவுடர் டப்பாக்கள் இவைகளை உள்ளே வைக்கமுடியவில்லை. நல்லவேளை கைவசம் ஒருபிளாஸ்டிக் பை இருந்தது. அதில் அவைகளைப்போட்டு, சூட்கேசை மூடி எடுத்துக் கொண்டு பெற்று எடுத்துவிட்ட பெருமையில், முகத்தில் பெய்திருந்த வியர்வை மழையை துடைத்துக் கொண்டே, வெளியில் வந்தேன்.

அருகில் ஒரு இடத்தில் நிழல் இருந்தது. அங்கே நின்றவுடன் ஒருசுகம்.

மறுபடியும், மாசானத்தின் நினைவு வாட்டி எடுக்க ஆரம்பித்தது. திடீரென்று ஒரு குரல்—"என் மச்சானைப்பார்க்கணும், விடுங்களேன் ..." திடுக்கிட்டு அங்கே பார்த்தேன். கீறல் விழுந்த இசைத்தட்டைப் போல் அதையே மீண்டும் சொல்லிக் கொண்டு உள்ளே போக எத்தனித்துக் கொண்டிருந்தாள் ஒருபெண். கேட்டருகில் நின்றிருந்த காவலர் தடுத்துக் கொண்டிருந்தார். உள்ளே நின்று கொண்டிருந்த கூலிப் போர்ட்டர் ஒருவர் வேகமாக வந்து, "உனக்கு தினம் இந்த எழவுதான், மச்சான் வந்தால் தானாகவருவான் போ" என்று சொல்லிக் கொண்டே— தரதர வென்று இழுத்துக் கொண்டு, நான் நின்ற பக்கம் தள்ளி விட்டான்.

"இந்தாம்மா?" நான் தான் அழைத்தேன். என்னருகில் வந்தாள். அவளது விழிகள் ஏக்கத்தைப் பிரதிபலித்தன.

"உன் மச்சான் பெயர் என்ன?" என் கேள்வியைக் கேட்டதும், பதில் கூற அவள் தயங்குகிறாள் என்பதை அவளது பார்வையே கூறியது. தமிழ்ப் பெண்களுக்கே உள்ள தயக்கம். என் நினைவில் ஓர் மின்னல் கீற்று.

"உன் மச்சான் பெயர் மாசானமா?"

அவளது முகத்தில் எத்தனை மாற்றம். என்ன களிப்பு! கண்களில் என்ன ஆனந்தக் கண்ணீரா?

"ஆமாம் சாமி, அவுகளைப் பார்த்தீகளா? நல்லா இருக்காகளா? எப்ப வருவாக?"கேள்விகள் அடுக்கப் பட்டன.

அத்தனை கேள்விகளுக்கும் ஒரே பதில்தான்.

ஆம் ஒரே பதில்! அந்த ஒரே பதில் என்ன செய்யும்? அவளது கூந்தலில் சொருகியிருந்த மலிவான மலரைக் கசக்கி விடும், கருக்கிவிடும். குங்குமத்தை அழித்துவிடும். சேலையை மாற்றிவிடும். இதற்கும் மேலாக ஒரு வேளை எனது ஒரே பதில் அவளது உயிரையே பறித்து விட்டால்? மனதைப் பக்குவப்படுத்திக் கொண்டேன். இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டேன்.

"ஆமாம்." — ஒரு கணம் நிறுத்தினேன்.

அவளது முகத்தில் எத்தனை அமைதி!

"உன் மச்சானைப் பார்த்தேன். நல்லா இருக்கார். இன்னும் கொஞ்ச நாளில் வந்துவிடுவார்." —புளுகினேன்.

"ஐயா, நீங்க நல்லா இருக்கணும். நல்ல சேதி சொல்லி இருக்கீக"— வாழ்த்தினாள்.

நான் புளுங்கினேன். கையில் ஊ் ந்திருந்த பிளாஸ்டிக் பை கணத்தது. நலல வேளை கஸ்டம்ஸ்காரர்களுக்கு நன்றிதான் சொல்லவேண்டும்—தொந்தரவு கொடுத்தாலும் இப்போது இப்படி பயன்படவாவது, பை உதவுகிறதே— அந்த பையை அப்படியே— உள்ளேயிருந்த பொருட்களோடு அவளிடம் நீட்டினேன்.

"உன் புருஷன்தான் கொடுத்து விட்டார்."

வாங்கிக் கொண்டாள். கண்களில் ஒற்றிக்கொண்டாள். எவ்வளவு மகிழ்ச்சி? எத்தனை ஆறுதல்? கணவனையே கண்டுவிட்ட பெருமிதம் அவளது முகத்தில்! குளமான அந்த விழிகளில் நன்றியைக் கண்டேன்.

"வரேனுங்க"— கும்பிட்டுக் கொண்டே சென்ற அந்தப் பெண்ணை மனநிறைவுடன் பார்த்துக் கொண்டிருந்தேன். இது மாதிரி எத்தனை மாசானங்களோ? எத்தனை பெண்களோ?

இந்தப் பெண்களின் கண்களில் களிப்பு பொங்க எத்தனை பொய்கள் சொன்னாலும் பரவாயில்லை என்று நினைத்துக் கொண்டே நடக்க ஆரம்பித்தேன்....

O

# வெள்ளை நிறத்தில் ஒரு குட்டி

இன்றைக்கு என்னைப் பெண் பார்க்க வருகிறார் ஒருவர். அவர் கிறிஸ்டியனும். நான் கிறிஸ்டியனாக இல்லாவிட்டாலும் என்ன? 'ஒன்றேகுலம், ஒருவனே தேவன்'—இதுதான் சின்ன வயதிலிருந்தே என் கொள்கை.

அவர்—என் அண்ணா ஆபீஸுக்குப் பக்கத்து பாங்கில் மானேஜராக வேலை பார்க்கிறாராம். திருநெல்வேலிக்காரர். யாருமற்ற தனிக்கட்டை. தனி வீட்டில் தானே சமையல். ஊனமுற்ற பெண்ணைத்தான் திருமணம் செய்வேன் என்று நிஜமாகவே, மனப்பூர்வமாகவே பொய்யில்லாமல் நினைப்பவராம். அவர் தான் இப்போது வரப்போகிறார். கல்யாணத்திற்குப் பின் எங்களுடனேயே அவர் தங்கிவிடவேண்டும் என்று சொல்லிவிட்டான் அண்ணா. அன்பு கொண்ட கணவன், பாசம் மிக்க அண்ணன். இதைவிட வேறென்ன பாக்கியம் வேண்டும், ஊனமுற்ற எனக்கு?

இதுவரை என்னைப் பெண் பார்த்துவிட்டுச் சென்ற இருவரை நினைத்தாலே சிரிப்புத்தான் வருகிறது எனக்கு.

நான் செய்த பஜ்ஜியும் சொஜ்ஜியும் தின்று முடித்ததும், நான் போய் அவர்கள் முன் நின்றால் போதும். என்னைப் பார்த்துப் பயந்துபோய் பிடரியில் கால் இடிக்காத குறையாக,கைகூடக் கழுவாமல் ஓடிவிட்டார்கள். மனத்திற்குள் சிரித்துக் கொண்டே எதிரிலிருந்த டிரஸ்ஸிங் டேபிள் கண்ணாடியில் என்னைப் பார்க்கிறேன். நிறைய நகைகள். நீண்ட கருத்த கூந்தலில் மல்லிகைப் பூ. வட்டமுகம். வடிவான மூக்கு. இயற்கையாகவே சிவந்த உதடுகள். அழகிய அஞ்சன விழிகள். பளபளக்கும் குங்குமப் பூ நிறத்தில் பிளவுஸும், பட்டுப் புடவையும் என் உடலில் ஜொலிக்கிறது. என் 19-வது பிறந்த நாளுக்கு என் அண்ணாவின் அன்புப் பரிசு.

எனக்கு என்ன ஊனம்...?

கால் ஊனமா? இல்லவே இல்லை. நான் படித்த உஸ்மான்ரோடு, சாரதா வித்யாலயாவில் ஒவ்வொரு வருடமும் சாம்பியன் நான்தான்.

வாய் ஊமையா? காது செவிடா? ம்ஹூம். பள்ளியிலே பேச்சு, கவிதை, பாடல் போட்டிகளில் நான் வாங்கிய முதற்பரிசுகள் கண்ணாடி அலமாரியை அடைத்துக் கொண்டிருக்கின்றன. அதில் என் அண்ணாவுக்கு ரொம்பப் பெருமை.

பின் என்ன ஊனம்...?

அதோ மோட்டார் பைக்கில் 'அவர்' வந்து விட்ட சப்தம். இங்கிருந்தே ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கிறேன். என் அண்ணா ஓடிச்சென்று அவரை அழைத்து வருகிறான். என் உடலில் ஒரு புல்லரிப்பு. அவருடைய கருப்பான நிறம் எடுப்பான உயரமான உடம்பிற்கு எவ்வளவு அழகாகப் பொருந்துகிறது. எனக்கு ரொம்பவும் நம்பிக்கையிருக்கிறது. இவர் என்னைத் திருமணம் செய்து கொள்வாரென்று.

ஏனெனில் அண்ணா என் போட்டோவை முதலிலேயே காட்டி விட்டு, அவர் சம்மதித்த பிறகுதான் அவரைக் கூட்டி வந்திருக்கிறான்.

இதற்காகப் போட்டோ எடுக்க ஸ்டுடியோவிற்குச் சென்ற போது அந்த போட்டோகிராபர் பயந்து விட்டதை நினைத்து சிரிக்கிறேன்.

ஆண்டாள் பிரியதர்ஷினி

'யாரை ஸார் போட்டோ எடுக்கணும்?'

அண்ணு என்னைச் சுட்டிக் காட்ட,

'இவங்களையா...?' என்று கேட்டு விட்டு போட்டோகிராபரின் முகம் போன போக்கு... நல்ல ஜோக்தான். பின், வேண்டா வெறுப்பாக என்னைப் படமெடுத்தார்.

வந்திருக்கும் அவருக்கு சொஜ்ஜி, பஜ்ஜி இதெல்லாம் பிடிக்காதாம். அதனுல்தான் நானே ஃப்ரூட் சால்ட் தயாரித்து பிரிஜ்ஜிற்குள் வைத்திருக்கிறேன் அவருக்குக் கொடுக்க.

அதோ என் அண்ணு உள்ளே வருகிருன். என் கையைப் பிடித்து அவன் அழைத்துச் செல்ல நாணத்துடன் தலை குனிந்தவாறு நடக்கிறேன்.

'ஒரு பெண்கூட இல்லை இவளைக் கூட்டி வர. அதனுல்தான் நானே அழைச்சிட்டு வர்றேன்...' சிரித்தபடி அண்ணு கூற...

மெதுவாக அவரை நிமிர்ந்து பார்க்கிறேன். மற்றவர்களைப்போல் என்னைப் பார்த்ததும் அவர் பயப்படவில்லை. 'கவலைப்படாதே... நானிருக்கேன் உனக்கு' என்று கூறுவதைப்போல கனிவான, அன்பான அவரது பார்வையிலேயே மயங்கி விடுகிறேன் நான்.

சோபாவில் அண்ணுவுடன் அமர்கிறேன்.

'நோ ஃபார்மாலிட்டீஸ் ப்ளீஸ்... நான் நேரிடையாகவே சொல்லிடறேன். உன்னைக் கல்யாணம் செய்துக்கப் போறது ஏதோ தியாக மனப்பான்மையிலுலோ, ஊனமுற்றவங்களுக்கு ஆதரவு தரணும் என்ற எண்ணத்திலுலோ இல்லை. உன்னை மனப்பூர்வமா விரும்பி மனைவியா ஏத்துக்கறேன். மருத்துவ வசதி சரியா முன்னேருத அந்தக் காலத்திலே... உங்க அம்மாவின் அறியாமையினுலே... நீ இப்படிப் பிறந்திருக்கே... உன் அம்மா கருவுற்றபோது, அவங்களுக்கிருந்த விட்டமின்—டெபிஸிட் டியினுலே உன் உடம்பு முழுசுமே லூகோடர்மா மாதிரி வெள்ளையா இருக்கு... அதுக்கு நீ என்ன பண்ணுவே... இது தொத்து நோய் இல்லேன்னு தெரிஞ்சிருந்தும் ஒருத்தரும் உன்னை மணக்க முன் வராதது அறிவீனம்...

வெள்ளைக்காரங்களைப் பார்த்தா ஈன்னு பல்லை இளிக்கிற நாம், இந்த மாதிரி குறை உள்ளவங்களைப் பார்த்தால் முகத்தைச் சுளிக்கறது சுத்த மடத்தனம். உடம்பைப் போலவே உன் மனசும் வெள்ளைங்கறது எனக்குத் தெரியும். நிறைய திறமைகள் இருக்கற உன்னை மணக்கறதுக்கு நான்தான் அதிர்ஷ்டம் செய்திருக்கணும்... அடுத்த முகூர்த்தத்திலேயே நம்ம கல்யாணம் நிச்சயம் நடக்கும்...'

உண்மையான அன்புடன், நிறைந்த மனசுடன் நீளமாகப் பேசி முடித்த அவர் பரந்த மார்பில் சாய்ந்து, ஆனந்தக் கண்ணீர் வடிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. பெருமிதத்தால் என் நெஞ்சு பூரிக்கிறது... சட்டென அவர் கால்களில் விழுந்து வணங்குகிறேன். 'அட அசடே! இதெல்லாம் எதுக்கு...?' எனக் கேட்பதைப் போல ஆதரவாக என் தோளைப் பிடித்துத் தூக்குகிருர்.

அவர், "உடனே போய் நீ செய்து வச்சிருக்கற ஃப்ரூட் சாட்டில் எனக்கு மூணு கப் கொண்டு வருவியாம்..." என்றதும், ஆச்சரியமாக அண்ணுவை நோக்குகிறேன். "உன் ஃப்ரூட் சால்ட்டைப் பற்றி முதல்லேயே அவர்கிட்டே சொல்லிட்டேன்" என்பது போல அவன் புன்னகைக்கிருன்.

நோ வரதட்சணை... நோ சீர் செனத்தி... அடுத்த முகூர்த்தத்தில் அண்ணுவுடைய, அவருடைய ஆபீஸ் நண்பர்கள் முன்னிலையில் எங்கள் கல்யாணம். பகாளாபாத், பஃப், மைசூர் பாக், பொட்டேட்டோ சிப்ஸ், தயிர் சாதம், பாயசம், மீண்டும் ஃப்ரூட்-சால்ட் இவைதான் டின்னர். வாழ்நாளிலேயே மிகவும் மகிழ்ச்சியுடன் என் அவரைப் பார்த்துச் சிரிக்கிறேன்.

---

சிந்தனையாளர் ரூசோ ஒருவரி எழுத வேண்டுமென்றுலும் அதிக வெளிச்சத்தில்தான் எழுதுவது வழக்கம். அவர் எழுதிய நூல்களில் பெரும்பகுதி, தோட்டத்தில் கண்களைக் கூசச் செய்து, உடலை வருத்தும் வெயிலில் அமர்ந்து எழுதியவைதான்.

—கணியூர்பருக்.

...அன்றைக்கு அவர் பாங்க் ஸோனல் ஆபீசருக்கு ஃபேர்வெல் பார்ட்டி. கல்யாணத்திற்குப் பின் முதன் முதலாக வெளியே செல்கிறோம். நானும் அவரும் சேர்ந்து போகவேண்டுமென்பது அவர் விருப்பம். அவர் என்னைப் பெண் பார்க்க வந்தபோது உடுத்தியிருந்த குங்குமப்பூ நிறப் பட்டுப் புடவை, நகைகளுடன் புறப்பட்டேன். அவர் ஜம் மென்று ஸபாரி சூட்டில். அண்ணாவுக்குக் கண்களில் நீர் பனித்தது, எங்களைப் பார்த்ததும். மகிழ்ச்சியால் என் கண்களிலும் நீர் துளிர்த்தது.

'சீச்சி! அழாதேம்மா...!' அண்ணா என் கண்ணீரைத் துடைக்க...

'நீ அழாதேண்ணா' நான் அவன் கண்ணீரைத் துடைக்க... இதைப் பார்த்துக் கொண்டிருந்த என் அவர் கடகடவென்று சிரிக்க... நாங்களும் சிரிக்க... சிரிக்க... உற்சாகம் ஊற்றெடுத்தது.

'சரிம்மா. நீங்க ரெண்டு பேரும் பார்ட்டிக்குப் புறப்படுங்க...' அண்ணா கூற, நாங்களும் சந்தோஷித்த மனத்துடன் வெளியே நடக்கிறோம்.

'ஏய் வெள்ளைக்காரிச்சி வர்றுடா டோய்... அவ உன்னைத் தொட்டா கருப்பான உன் தலை முடி கூட வெள்ளையாயிடும்டா...!'

ஹா! ஹா! என்று மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்த பையன்கள் கெக்கலித்தனர்.

இன்னொரு புத்திசாலிப் பையன் 'அந்தக் கரும்பேயை ஏண்டா மறந்திட்டே? அந்த ஆளு உன் பாட்டியோட நரைச்ச முடியைத் தொட்டாத் திரும்பவும் அவுங்க கூந்தல் இளமையா ஆயிடுமேடா!'

—ஓஹோஹோ என்ற சிரிப்பின் எதிரொலி. எங்களைப் பற்றித்தான் இவ்வளவு கமெண்ட்ஸ் என்பது எனக்குத் தெரியும். ஆனால் எங்களுக்குக் கவலையே இல்லை.

சாதி மத 'நிற' பேதமற்ற எங்களின் வாழ்க்கையில் இவர்களின் கேலிகள் விலகி ஓடும் மேகங்கள் என்பது எனக்குத் தெரிந்ததால்தான் என் கை விரல்களை அவர் கரத்தோடு மேலும் இறுக்கமாகப் பிணைத்துக் கொள்கிறேன். இருவரும் பெருமிதத்தோடு நடக்கிறோம்.

*

# தாராபுரத்தில் நீதிகேட்டு ஊருக்குள் வந்த நரி

"ஏ... புள்ள சொக்கி..." சுக்கிரன் குடிசைக்கு வெளியில் நின்றபடி நாட்டுத் துப்பாக்கியுடன் குரல் கொடுத்தான்.

"என்ன மச்சான்... வேட்டைக்குக் கிளம்பிட்டியா...? இரு... இரு. நானும் வாரேன்... காட்டுல கொஞ்சம் சுள்ளி பொறுக்கோணும்..."

"அப்ப சீக்கிரமா வா... நேரமாச்சு..." என்றபடி மெல்ல நடக்க ஆரம்பித்தான்.

சொக்கி தூங்க ஆரம்பித்த கைக்குழந்தையை தொட்டிலில் இட்டு பக்கத்து குடிசைக் கிழவியைப் பார்த்துக் கொள்ள பண்ணி விட்டு ஓட்டமாக தன் மச்சான் பின்னால் கிளம்பினாள்.

சுக்கிரனுக்கு வயது 28. அவனுக்கு இரண்டு வயது சிறியவள் சொக்கி.

பெரியார் மாவட்டம் தாராபுரத்திற்கும், காங்கேயத்திற்கும் இடையில் ஒரு மலை. அதுதான் கூத்தியூர் மலை. அங்கு வசித்து வேட்டையாடி வயிறு வளர்க்கும் சின்ன குடும்பம் அது.

அன்று மலை மீது நீண்ட தூரம் ஏறியும் முயலோ, காட்டுப்பன்றியோ கண்ணில் படவேயில்லை. சுக்கிரன் வெறுப்பின் உச்சியில் இருந்தான். சொக்கி கீழே விழுந்து கிடக்கும் மரக் கிளைகளையெல்லாம் தன்னால் இயன்ற மட்டும் சேகரித்துக் கொண்டே வந்தாள்.

திடீரென்று சொக்கியின் கண்களில் ஒரு காட்சி. அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவள் மார்பில் பாலூறியது.

"ஏ... மச்சான்... அங்க பாரு..."

அவன் திரும்பினான்.

அங்கே...

ஒரு தாய் நரி, தன் குட்டிக்கு பால் கொடுத்துக் கொண்டிருக்கிறது. குட்டி நரி படுசுட்டித்தனமாக தாயின் உடலோடு ஒட்டிக் கொண்டு முட்டி முட்டி பசியாறிக் கொண்டிருக்கிறது. தாய் அணைத்தபடி தன் நாவால் இதமாக தடவுகிறது.

சொக்கி ஒரு தாயின் பரிவோடு அதைப் பார்த்துக் கொண்டிருக்க, சுக்கிரன் ஒரு வேட்டைக்காரனின் குறியோடு அதைப் பார்த்துக் கொண்டிருக்க, அடுத்த நொடியில் 'டுமீல்...' என்ற சத்தம்! குட்டி நரி துள்ளி விழுந்து சுருண்டு போகிறது!

அமைதியாக பாலூட்டிக் கொண்டிருக்கும் போது, தன் குழந்தையைப் பறிகொடுத்து விட்ட தாங்க முடியாத வேதனையுடன் தாய் நரி கண்மூடிக் கிடக்கும் தன் வாரிசை சுற்றிச் சுற்றி வருகிறது.

மீண்டும் ஒரு டுமீல்!

தாய் நரி அதிசயமாக தப்பி நொடியில் மறைந்து விடுகிறது.

சொக்கிக்கு சோகம் நெஞ்சை அடைக்கிறது.

சுக்கிரனுக்கு மகிழ்ச்சி வெள்ளம்! சுவையான இள நரியின் சதையை இன்று பிய்த்துப் பிய்த்து சுவைத்து சாப்பிடப் போகிறோம் என்ற துள்ளலுடன் ஓடிப் போய் அந்த குட்டியைத் தொடுகிறான்.

அப்போது...

தூரத்தில் எங்கோ அந்த தாய் நரியின் ஓலம். பெருங்குரலெடுத்து அது அழுவதைப் போலவே ஒரு சத்தம். சொக்கியின் கண்கள் கலங்கியே விடுகின்றன.

அவளால் என்ன செய்ய முடியும்? சுக்கிரன் பெயரைப் போலவே படுகோபமான ஆசாமி. அவனுக்கு மனதின் மென்மையான உணர்வுகளை விட இரைப்பையின் இதமான அதிர்வுகளே பெரிது.

அன்று அந்த 'பஞ்சு' உடலை தீமூட்டி சமைத்த போது சொக்கி தன் கைக்குழந்தையை அணைத்துக் கொண்டு கண்ணீர் சொரிந்தபடியே இருக்கிறாள்.

அன்றிலிருந்து எப்போதும் அந்த வீட்டை இரவில் இரண்டு கண்கள் கண்காணித்துக் கொண்டே இருப்பது போல் சொக்கிக்கு தோன்றும். தன் மன பீதியை சுக்கிரனிடம் சொல்லும் போதெல்லாம் அவன் வீண் பிரமை என்று கூறி அட்டகாசமாக சிரிக்கவே செய்வான்.

அவளுக்கு பின்னிரவில் திடீரென்று கனவுகள்... அதில் அந்த தாய் நரியின் துக்கமான முகம். பரிதாபம் தொனிக்கும் அழுகை. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து உட்காருவாள்.

அன்று.

சுக்கிரனும் சொக்கியும் கடைக்குப்போய் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள்.

சொக்கி கைக் குழந்தையை தொட்டிலில் போட்டுவிட்டு பார்த்துக் கொள்ளச் சொன்ன பக்கத்து குடிசைக் கிழவி, ஏதோ வேலையாய் தன் குடிசைக்குள் போய் ஐந்து நிமிஷமே ஆகியிருக்கும்.



அட்டையில்
**திருமதி. சொய்சிக் ஸ்டெஞு**
வண்ணப்படம்
**ரவி**

*அட்டையில் வீசிய*
*மெல்லிய தென்றல்*
*70 ல் எட்டிப்பார்க்கிறது*

இந்த சந்தர்ப்பத்திற்கென்றே காத்துக் கொண்டிருந்தது போல் வேகமாக அதே தாய் நரி சுக்கிரனின் குடிசைக்குள் பாய்ந்து நுழைகிறது.

பாலூட்டிக் கொண்டிருக்கும் போது, தன் குழந்தையைக் கொன்றவனின் குழந்தை பால் குடித்து விட்டு அமைதியாகத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்க அதற்கு வயிறு எரிகிறது. பழிவாங்கும் உணர்ச்சி அதன் பற்களில் படர, அது தொட்டிலுக்குள் பாய்கிறது.

அடுத்த நிமிடம்... குழந்தை பெருங்குரலெடுத்துக் குரல் கொடுக்க, வெறி தலைக்கேறி நரி குழந்தையைக் கடித்துக் குதறி ரத்தத்தைக் குடிக்க ஆரம்பிக்கிறது.

பிறகு என்ன நினைத்ததோ, குழந்தையைக் கவ்வி இழுத்துக் கொண்டு காட்டுக்குள் ஓட ஆரம்பிக்கிறது.

கடையிலிருந்து திரும்பிய சுக்கிரனும், சொக்கியும் குழந்தையைக் காணாது சுற்றும் முற்றும் தேட, தரையில் சிதறிக் கிடக்கும் பச்சை ரத்தத்தைப் பார்த்ததுமே சொக்கி 'ஐயோ! என் செல்வமே!' என்று அலறியபடி மயங்கி விழுகிறாள்!

பிறகு ரத்தக்கறை அடையாளத்தை வைத்து இருவரும் காட்டுக்குள் ஓடிப் பார்க்கிறார்கள்.

*கஸ்தூரி ரங்கன்*




நிருபர்: 'அலைகள் ஓய்வதில்லை' படம் பற்றி...

நடிகை: அதில் நான் தான் முதலில் நடிப்பதாக இருந்தது!

நிருபர்: 'பயணங்கள் முடிவதில்லை' படத்தில்...

நடிகை: அதிலும் நான்தான் முதலில் நடிப்பதாக இருந்தது!

நிருபர்: நடிகை 'ஷோபா'வின் மறைவு பற்றி...

நடிகை: முதலில் நான்தான் மறைவதாக இருந்த... ஆங்... சாரி! சாரி!

"என் கணவர் முன்பு தூக்கத்தில், ராதா, ஸ்ரீதேவி, ஸ்ரீப்ரியா என உளறுவார். இப்போது இல்லை!"

"எப்படி நிப்பாட்டினாய்?"

"நானும் தூக்கத்தில் ரஜினி, கமல், ராஜீவ் என்று உளறினேன். அதிலிருந்து அவர் நிப்பாட்டிட்டார்!"

—எஸ். என். தங்கராஜன்




அங்கே அந்த நரி குழந்தையை கடித்துச் சுவைத்து தின்றுகொண்டிருக்கிறது. சொக்கிக்கு அந்த காட்சியைப் பார்த்தபோது தன் இதயத்தை அது தின்பது போல துடித்துப் போகிறாள்.

சுக்கிரன் அந்த நரியின் கண்களில் தெரிந்த உணர்ச்சியைப் பார்க்கிறான். பசியாறவில்லை அது! பழி தீர்க்கிறது என்பது துல்லியமாகப் புரிகிறது அவனுக்கு.

ஆத்திரத்துடன் அதைக் கொல்ல குறி வைக்கிறான்.

'உனக்கும் பேபே... உங்கப்பனுக்கும் பேபே' என்று அது அலட்சியமாக குண்டுக்கு தப்பி நொடியில் மறைந்து போகிறது.

மறுநாள். முயல்க்றியில் விஷம் வைத்துதான் அவனால் அந்த நரியைக் கொல்ல முடிகிறது. குட்டியைச் சமைத்து தின்ற சுக்கிரனால் அந்த நரியைச் சாப்பிட முடியவில்லை. காரணம் அதன் வயிற்றில், தன் சொந்த குழந்தை இருப்பதால்தான். முடிந்தால் என்னை சாப்பிட்டு உன்னை ஈனப்படுத்திக் கொள்! என்ற சவாலுடன் அது கீழே கிடக்கிறது.

மனிதர்களுக்கு மட்டும்தான் பாசம், பழி வாங்கும் உணர்ச்சி இவைகள் இருக்குமா? எனக்கும் தான் இருக்கிறது. மனிதனால் என்ன; மிருகமானால் என்ன தாய்மை எங்கும் ஒன்றுதான் என்பதை அந்த நரி இன்று இந்த உலகத்திற்கே பாடம் சொல்லிக் கொடுத்திருக்கிறது.

நரி தந்திரத்திற்கு மட்டுமல்ல... தாய்மைக்கும் இன்று தாராபுரத்திலிருந்து பெயரெடுத்திருக்கிறது!




# ஜீவிதம் என்பது நதியானுல்...

முற்றத்தில் ஏழரை மணி சூரியன் வெய்யில் போட்டிருக்கிறுன். சோலாப்பூர் போர்வையை இடுப்புவரை உரித்து... கைகளை தொய்வாக்கி படுத்தி ருக்கிறேன். தூக்கம் கலந்த புதுசில் ஒருவித தத்தித்தனமாய் விழித்துக் கிடப்பது அனேகமாய் சுகானுபவம், இந்த நிமிஷத்தில் நான் அதில்தான்.

என்னை அதட்டி எழுப்ப... அல்லது கொஞ்சலாய் எழுப்ப... யாரு மில்லை.

சும்மா ஒரு கடமைக்கு 'ஜெகன்' என்று குரல் கொடுக்கக்கூட யாரு மில்லை.

இந்த பத்தடிக்கு பத்தடியில் நான்! நான்! நான்! அனுதாபத்துக் குரிய நான் மாத்திரந்தான்!

நானே எழுந்து, நானே ஸ்டவ் பற்ற வைத்து ... நானே காப்பி கலந்து...ச்சே!

இந்த மோசமான நிலைமை இன்னும் சுமார் மூன்று மாதங்கள் வரை நீடிக்கலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

அதற்கப்புறம்...?

அதற்கப்புறம் என் பிரிய வசந்தி... ஆஃபீஸில் என்னை, அழகிய நயனங் களால் முத்தமிடுகிற வசந்தி.

அதை உதட்டால் செய்து,

# தொட்டால் அதிலே சுகமிருக்கு!

ஓவியர் கோபன்

"என்னப்பா இந்த வாரம் 'ஆறு வித்தியாசங்கள்' கண்டு பிடிக்கவே கஷ்டமாயிருக்கு..." கண்மணி சிணுங்குகிறாள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. ரொம்ப ஈஸி. உன்னாலே முடியலே..." என்கிறார் மகன் கவிமணி...

மனைவி வைஜயந்திதான் கடைசியில் ஓ.கே. செய்வது...

மூன்று பேரும் என்னுடைய படங்களுக்கு ஐடியாவும், விமர்சனமும் செய்கிற முதல் வாசகர்கள்...

சென்ஸார் போர்டு—தொந்தரவு தராத மனைவிதான். லே-அவுட்டும் வைஜயந்திதான்.



இப்படி என்னோடு ஒத்துழைக்கிற இவர்களே எனக்கு ஆத்மா...

நாளெல்லாம் ஆபீஸ் வேலை... தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் கண்காட்சிகளுக்கு மாதிரிப் படம் வரைவேன்—அது உயிர் பெற்று பிரம்மாண்டமாய் நிற்கிறபோது பார்க்க வேண்டுமே? அதிலே கிடைக்கிற மகிழ்ச்சியே அலாதி!

எனக்கு பின்னி மில்லில் வேலை கிடைத்தும் போகவில்லை... அதுவும் பெங்களூரில்—நண்பர்கள் போய்விடு என்றார்கள். என்னால் எப்படி இயலும்?

சென்னை என்றால், வேலை முடிந்ததும் தூரிகையைத் தொட்டு விடுவேன். கதைகளுக்கேற்ற கதாபாத்திரங்கள்—இந்த் சிருஷ்டியில் கிடைக்கிற சொர்க்கம் வேறு எங்கு கிடைக்கும்! அதான் இப்போது நாள்தோறும் சுகமாய் தொட்டுக் கொண்டிருக்கிறேன்.

இன்பமாய் எழுப்புவாள். வெகு இன்பமாய்... ஆ... ஆ... வழக்கம் போல் "மானஸ ஸஞ்சரரே..." புறப்பட சிலிர்த்துப்போகிறேன். நெளி நெளியாய்... மென்மையாய் தவழ்கிற... தழுவுகிற மிதக்கிற... சாரீரம் பக்கத்துக் கதவிலிருந்து உற்பத்தியாகி... அந்த அற்புதமான அலைகள் ஒவ்வொன்றாய் என்னை சுற்றி... சுற்றி... சுற்றிக் கொள்ள...

ஹா! சலனங்கள் மொத்தமும் ஸ்தம்பித்துப்...போக... ஒரே வரியுடன் சடக்கென்று நின்று போனதும் பிரக்ஞை கிடைத்து சுயமாகிறேன்.

இந்த போர்ஷனில் குடிவந்த நாளிலிருந்து, இப்படித்தான்! நேரங்காலமில்லாமல்... முன்னறிவிப்பு இல்லாமல்... அடிக்கடி... இரண்டொரு நிமிஷம் முழுசாய் என்னை வீழ்த்திப் போடுகிற குரல்! குரல் என்கிற சாதாரண பதத்தை பிரயோகித்தி அதை... ஜாலத்தை... உருவப்படுத்த மனசு வரவில்லை.

இதே மாதிரி... உணர்ச்சிகள் அமுங்க... ஆத்மார்த்தமாய் அழுந்தி... வார்த்தைகளுக்கு தவித்து... கண்ணீர் பொழிய நின்றிருக்கிறேன். எப்பொழுது?

யெஸ்! இதே 'மானஸ ஸஞ்சரரே'வை அம்மாவும் லயித்து பாடுவாள். மெதுவாய் மனசில் சொல் சொல்லாய் நிறுத்தி எழுதுகிற மாதிரி... ரசித்துப் பாடுவாள்.

பள்ளிக்கூடமே போகாமல், அம்மா இடுப்பை கட்டிக் கொண்டு, அவள் வயிற்றில் தலை அழுந்த, கண்களை மூடி கேட்டுக் கொண்டேயிருக்க வேண்டும்போல் பயங்கர ஏக்கம் வரும். யாராவது தென்பட்டால், அம்மாவும் சடக்கென்று நிறுத்தி விடுவாள். அப்போது ஏராளமாய் ஆத்திரம் வரும்; பின், தணிந்து வருத்தமாயிருக்கும். கண்கள் ஈரமாகிவிடும். திரும்பவும் அம்மாவை நச்சரித்து பாட்டை தொடரச் சொல்லும்போது அதில் சொல்லத் தெரியாத என்னவோ ஒன்று குறைந்து போயிருக்கும். மீண்டும் யாருமில்லாமல் அவள் ஆரம்பிக்கிற போது, பழையபடி இயல்பாய் சுகமாய் தவழும் சாரீரம்.

அதற்கப்புறம் அம்மா ஸ்வர்க்கத்தில் கச்சேரி பண்ண, ஒரு சோக ராத்திரியில் பிரயாணப்பட்டாள். நாங்கள் முகாரி பாடி வழியனுப்பினோம். பிறகெல்லாம் வறட்சியான நாட்கள்! அவை அர்த்தமில்லாத சொற்களைப் போல!

இத்தனை வருஷத்தில் இப்போதுதான், அந்த வகையான அற்புத அனுபவம் அதிர்ஷ்டவசமாய்... கொஞ்சம்கூட எதிர்பாராமல் தாக்கியிருக்கிறது. மரத்துப் போயிருந்த தாகித்துக் கிடந்த என் ஆத்மார்த்த உணர்ச்சிகளை உயிர்ப்பிப்பதும் சாத்தியமாகியிருக்கிறது.

இவளும், அம்மாவைப் போல் சமையற்கட்டில் பாடுபவளாகத்தான் இருக்கிறாள்.

அந்தக் கதவுக்குப்பின், அவர்கள் வீட்டு சமையலறைதான். ஆனாலும், அம்மாவுக்கிருந்த தீட்சண்யமான கண்களும், பனி மாதிரி சிரிப்பும் இவளுக்கில்லை. அந்த சாரீரத்திற்கு சம்பந்தமில்லாமல், மென்மை கொஞ்சமாய், பருமனாயிருக்கிறாள். வசீகரம் அதிகமில்லாத முகம் அடிக்கடி வசந்தியை நினைக்கச் சொல்கிறது.

வசந்தி! மைடியர்!

"வீட்ல படுத்துக்கிட்டு வசந்தி வசந்தின்னு எப்படி? சட்டு புட்டுனு கிளம்பி ஆஃபீஸ் வாங்க!"

ஒரு துள்ளலுடன் எழுந்து பாத்ரூம் கண்ணாடிக்குள் பல் தேய்த்து, ஷேவ் செய்து, குளித்து, உடையும் பெல்ட்டும், ஷூவும் அணிந்து கிளம்புகிறேன்.

ஆஃபீஸ்.

"ஹாய் ஜகன்! குட்மார்னிங்! இன்னிக்கு லஞ்சுக்கு மாரீஸ் போகலாம்! முக்கிய விஷயம் பேசணும்! ஓகே?"

நெருக்கமாய் சொல்லிவிட்டு ஆர்கண்டி புடவை அசங்காமல் போகிற வசந்தி லட்சணமாயிருக்கிறாள். இவள் காதலியாயிருக்க, நான் பூர்வஜென்மத்தில் அசுவமேத யாகம் அல்லது அதற்கொப்பான ஏதாவது காரியம் செய்திருக்க வேண்டும். இவள் அப்பனுடன் பேசி இவளை கல்யாணம் செய்து கொண்டு, ஆஃபீஸில் அத்தனை ஜோடி பொறாமை கண்களுக்கும் நெருப்பு வைக்க வேண்டும்.

"ஜெகன் ஸார்! மேனேஜர் கூப்பிடறார்!" சொல்லி விட்டுப் போன ப்யூனை நிறுத்தி, "இன்னிக்கு டிபன் வாங்கிட்டு வந்துடாதே!" என்கிறேன்.

மேஜைக்கடியில் டிராயரை இழுத்து, ஷார்ட்ஹாண்ட் நோட்டும்,

## தொடாதவனுக்கு பேனா எதற்கு?

**கவிஞர் சாமிபழனியப்பன்**

அரண்மனையிலிருந்து... தெருமுனை வரைக்கும் வந்த இலக்கியம், இத்தனை நூற்றாண்டுகளைக் கடந்த பிறகும் எதைச் சாதித்தது?

பசியைப் பாடு பொருளாக்கிக் கொண்டு, பட்டினி கிடக்கும் பாலைகளைப் பரிதாபத்தோடு பார்த்து விட்டு, சம்பிரதாய அனுதாபங்களோடு மௌனித்து விடுகிறதே, இவை என்றைக்கு அரிவாள்களோடு வயல்வெளிகளில் இறங்கப் போகின்றன?



'மனிதனைப் பாடுவேன், வியர்வையைப் பாடுவேன், பசியைப் பாடுவேன்' என்று சொல்லிக் கொண்டுதான் இன்றைக்கு ஒவ்வொருவனும் எழுதத் தொடங்குகிறான். ஆனால், அமெரிக்காவில் வாழ்ந்து கொண்டு, இந்தியக் கிராமத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடுகிற முகமூடிகள் இவர்களில் ஏராளம் இருக்கிறார்கள்.

பேனா, பூமியைப் புரட்டி விடக்கூடிய புரட்சி நெம்புகோல்தான். ஆனால், அவர்களில் பல பேர் நெம்புகோலை உந்துவதற்குக் கூட தம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளாதவர்கள். பிரச்னைகளைத் தொடாதவர்கள் பேனாவைத் தொடுகிற வரைக்கும், மக்கள், கலை, இலக்கியம் ஆடையின்றி அழுது கொண்டுதானிருக்கும்.

சூரிய பென்ஸிலும் எடுத்து மேனேஜரிடம் நடக்கிறேன்.

மாரீஸில் வசந்தி.

"நேத்து அப்பாகிட்ட உங்களை பத்தி சொல்லிட்டேன்! பாக்கலாம்னுர்! எப்ப வரீங்க வீட்டுக்கு?" என்கிருள்.

கூடிய சீக்கிரம் முற்றுகையிட வேண்டும்.

சென்னையின் சாயந்திர பரபரப்பில் ஏராள வியர்வையும் அலுப்பும் விரவியிருக்க... தெருமுனை டீக்கடையில் சூடாய் டீ குடித்து விட்டு, களைப்பை கழற்றி வைத்து நடக்கிறேன். வாசலில் பக்கத்து போர்ஷன்காரர் துடிப்பாய் நின்றிருக்கிறுர்.

நுழைந்ததும் "ஸார்! சின்ன ஹெல்ப்!" நான் 'என்ன' பார்வை தந்ததும்,

"ரெண்டு ஃபோல்டிங் சேர்ஸ் வேணும், இன்னிக்கு என் டாட்டரை பொண்ணு பாக்க வராங்க" என்கிருர்.

"அப்படியா! ரொம்ப சந்தோஷம்! இதோ தரேனே!"

நாற்காலிகளுடன் அவசரமாய் போகிருர்.

கொஞ்ச நேரத்தில் அவர்கள் போர்ஷன் பரபரப்பாக, ஜன்னல் வழியே பார்க்கிறேன். முதலில் ஆடம்பரத் தடியுடன் நுழைகிறவர் அப்பாவாயிருக்க வேண்டும். அப்படியிருக்குமாளுல் தொடர்வது அம்மாவேதான். அவருடன் ஈஷிக் கொண்டு நடக்கிருள். பின்ளுல் வந்த இரண்டு இளைஞர்களில் மாப்பிள்ளையை கண்டுபிடிப்பது சிரமமாயில்லை. முகத்தில், சற்றுமுன் போன அம்மா பகிரங்கமாய் உட்கார்ந்திருந்தாள். பம்பாய் நாகரீகத்தில் மீசையை வழித்து, ஜீன்ஸ் போட்டிருந்தான். அநாகரீகமாய் அவர்கள் சத்தம் போட்டு பணவிவகாரம் பேசுவது எரிச்சலை வரவழைக்கிறது. காப்பி ஆற்றுகிற ஓசையும், 'பொண்ணை கூப்பிடுங்கோ'வும் அடுத்தடுத்து வருகின்றன.

"விஜி! பாடேம்மா ஏதாவது!"

விநாடிகளில் நெஞ்சம் வெளியே விழத்துடிக்க... காத்திருக்கிறேன்.

"மானஸ ஸஞ்சரரே..."

அதே தவழ்தல்! நெளிதல்! தழுவல்! மிதத்தல்! புல்லரித்துப் போகிறது எனக்கு!

வழக்கம் போலவே, சுற்றுப் புறங்கள் இருட்டடிக்க, எல்லாரும் எல்லாமும் மறந்து மறைந்து போகிருர்கள். அந்த ஒலியலைகள் ஒவ்வொன்ருய் என்னை வளைத்து நெருக்கி தழுவிக் கொள்ள...

ஓ! இங்கே இப்போதிருப்பதெல்லாம் அதியற்புதமான சாரீர இழையும், மயக்கப்பட்டிருக்கும் என் அந்த ராத்மாவும்தான்!

இல்லை யில்லை!

அம்மாவின் இடுப்பைக் கட்டிக் கொண்டு அவள் வயிற்றில் தலை சாய்த்து... நான்!

சொல் சொல்லாய் மனசில் எழுதுகிற அம்மா!

தீட்சண்யமாய் பார்த்து பூமாதிரி அணைக்கிற அம்மா!

சடக்கென்று நிறுத்தாமல்,

பிரவாகமாய் தேனை சாய்க்கிற அம்மா! இனிமேல் நிச்சயமாய் பள்ளிக்கூடம் போகமாட்டேன்!

நிச்சயமாய்!

அம்மா! நீரோடை மாதிரி பாடுகிற அம்மா!


"நீங்க சொல்லிகிட்டு வந்த கதையிலே 'கரு'வே இல்லையே!"

"எப்படிங்க இருக்கும்? — கதாநாயகி மாடியிலிருந்து உருண்டு விழுந்ததால் அபார்ஷனுகிப் போச்சே!"

—கோவி. பரஞ்ஜோதி



பொன்னகை அலங்காரம் — நெஞ்சில்
பூட்டிடும் அகங்காரம்
புன்னகைப் பூவானம் — மனப்
பூரிப்பின் அடையாளம்!
—வனிதா, ராஜ்மதன். படம்: 'அனல்காற்று'

"அ...ம்...ம்... ம்... மா... ஆ!"

"மா... னஸ... ஸஞ்..."

"அம்மா! ஏம்மா நிறுத்திட்டே? அம்..."

சப்தமாய் குழப்பமாயிருக்கும் வார்த்தைகள் மண்டைக்குள் போய் தெளிவில்லாமல் சிதற... திடுக்கென்று கண் திறக்கிறேன்.

பக்கத்து போர்ஷனில்தான் சப்தம்! ஆமாம்! எழுந்து போய் கதவில் ஒட்டிக் கொள்கிறேன்.

"என்ன ஸார் இது! 'ஸ்டாப் இட்'னு பெரிசா கத்தற வரைக்கும் இப்படியா சுரணையில்லாம பாடிக்கிட்டேயிருப்பாங்க?"

நாளைக்கு கல்யாணமாகி இப்படி கூப்பிட கூப்பிட தன்னை மறந்து உக்காந்துக்கிட்டு இருந்தா... ஓ காட்!

இத பாருங்க ஸார்! ஐயம் எ பிஸி பிஸினஸ்மேன்! எனக்குத் தேவை எப்பவும் ஸ்மார்ட்டா, பிஸினஸ்ஸில் எனக்கு உதவியாயிருக்கிற வொய்ஃப்!"

"ஸாரி ஸார்! தப்பா நினைச்சுக்காதீங்கோ விஜி கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டுட்டா! ப்ளீஸ்!"

ஜன்னலைத் தாண்டி விருட்டென்று போகிற மாப்பிள்ளையும், முகத்தில் கலவரத்தை பூசிக் கொண்டு பின்னால் பதைத்து நடக்கிற பக்கத்து போர்ஷன்காரரும் ஒரு உச்ச கட்ட நாடக பாத்திரங்கள் போல் தோன்றுகிறார்கள்.

கொஞ்ச நேரத்தில் அழுது விடுவார் போல் திரும்பி நடந்து என் அறையைக்கடக்கிற அவரை இழுத்து, இடது கையால் அவர் தோளை அழுந்தப் பற்றுகிறேன்.

எனக்குப் புரிந்து விட்டது.

ஜீவிதம் என்கிற நதி- எங்கே உற்பத்தியானது எங்கே சங்கமித்தால்,

காலமெல்லாம் ஜீவநதியாக இருக்குமென்று எனக்குப் புரிந்து விட்டது.

எனக்கும் இந்த விஜிக்கும் இருப்பது பஞ்சாங்க சாஸ்திரங்களில், வேதங்களில் சொல்லப்பட்டிராத... சொல்லவும் முடியாததோர் பொருத்தம்.

கண்ணீர் பொழிய இருந்த பக்கத்துப் போர்ஷன்காரரின் சின்னக் கண்களுக்குள், என் தீர்மானித்த பார்வையை நிதானமாய் பாய்ச்ச ஆரம்பிக்கிறேன்...

42 ம் பக்க விடை : [illegible]



# சுமலதா பதில்கள்

கோ. பாலு, வளையச்செட்டிப்பட்டி.

தினமும் டயரி எழுதும் வழக்கம் உண்டா?

சிறிய வயதில் நடந்த நிகழ்ச்சிகள் கூட இன்றும் பசுமையாய் என் மனதில் இருக்கின்றன. எனக்கு மனதுதான் டயரி.

கோ. பாலு, வளையச்செட்டிப்பட்டி.

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் பற்றி என்ன கூற விரும்புகிறீர்கள்?

திட்டமிட்டுச் சோம்பலில்லாமல் செயல்பட்டால், எந்தவித தோல்வியும் நம்மை அணுகாது என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குபவர்.

ப. திருநாவுக்கரசு, சாத்துமாநகர்.

உங்களைவிட உங்கள் தாயார்தான் அழகாக இருக்கிறார்கள் என்று கூறுகிறேன்...!

சந்தேகமில்லை. உங்களோடு ஒத்துப் போகிறேன். சமீபத்தில் சிவாஜி ஒருமுறை, "அம்மா தொடர்ந்து படங்களில் நடிக்கலாம் போலிருக்கே!" என்று சொன்னார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ஆர். நாகராஜன், பரசலூர்.

நிஜங்கள் சில சமயம் பொய்யாகி விடுவதேன்?

அந்தப் பொய் நிலைத்து நிற்காது. தற்காலிக மௌனமாகத்தானிருக்கும். 'உண்மைகள் நிரந்தரமாக உறங்குவதில்லை!'

ஆபுதீன், சக்கரக்கோட்டை.

சினிமா பின்னணிப் பாடகர்களில் தங்களைக் கவர்ந்தவர் யார்?

இந்திப் படவுலகில் கிஷோர்குமார், லதாமங்கேஷ்கர், மலையாளத்தில் ஜேசுதாஸ், தமிழில் எஸ். பி. பாலசுப்பிரமணியம்.

எஸ். காளிமுத்தன், உச்சிப்புளி.

நீங்கள் தனிமையில் இருக்கும்போது என்ன செய்வீர்கள்?

ஏதாவது ஒரு விஷயத்தை வேடிக்கையாக கற்பனை செய்து கொண்டு சுற்றுப்புற சூழ்நிலையை மறந்து ரசித்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டிருப்பேன்.

ஆ. சா. முகமதுமைதீன், ஆனைமலை.

முரட்டுக்காளையில் தாங்கள் சொல்லும் விடுகதைக்கு விடை என்ன?

இன்றுவரை தெரியாது. டைரக்டர் எஸ். பி. முத்துராமன், 'தெரிந்து கொள்ளாமல் இருப்பது நல்லது. இரட்டை அர்த்தம் கொடுக்கும்' என்றார்.

"பரிகாசம் போலவே கடித்த பாம்பு,
பல பேர் அறியாமலேயே மெத்த வீங்கி,
பரிகாரம் ஒரு மாது பார்த்தபோது,
பையோடு கழன்றதென்று
ஆடு பாம்பே!"

மீண்டும் சொல்லிப் பார்த்தும் விடை கிடைக்கவில்லை!

வி. சந்திரபோஸ், சென்னை-52.

தங்களுக்குப் பிடித்த குழந்தை நட்சத்திரம் யார்?

நடிப்பிலும் சரி; பழகியவரையிலும் சரி—பேபி அஞ்சுதான். அஞ்சுவின் முகபாவங்களை இன்று முழுவதும் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

எம். எஸ். சேகர், சிங்காநல்லூர்.

எம். ஜி. ஆருடன் நடிக்க வேண்டும் என்று நினைத்ததுண்டா?

அவரோடு நடித்து அவருடன் பாடல் காட்சியில் அவரைப் போல் அழகாக டான்ஸ் மூவ் மெண்ட்ஸ் செய்யவேண்டுமென்று அவர் படங்களைப் பார்க்கும்போதெல்லாம் நடிகையான பிறகு நினைத்துக் கொண்டிருக்கிறேன்.

# ஒரு நீர்முட்டை உடைந்து போகிறது

ஐந்தரைக்கு விழிப்பு வந்து விட்டது. மார்டன் ஆர்ட் போல தூங்கிக் கொண்டிருந்த மற்றவர்களைப் பார்க்கும் பொழுது சந்தோஷம்.. சின்னக்குழந்தை போல நாம்தான் முதலில் எழுந்தது என்று.

'ஏன் இன்னும் அம்மா எழுந் திருக்கலே?' காலண்டர் முந்தின நாள் சனிக்கிழமை காட்டியது.

'ஓ அதுதான் நாலரைக்கு எழுந் திருக்கும் அம்மா இன்னும் தூங்குகிருள்!'

முகத்தை கழுவி, பல் தேய்த்து ஜன்னல் ஓரத்தில் வந்து வெளியே பார்த்தான். பணக்கார பெருங்காயத்தி னர் இரண்டு பேர் ஓடி ஓடி கரைய பார்த்துக் கொண்டிருந்தார்கள். மெல் லொளி இன்ஞெரு நாளைக்கு முன்னுரை யானது. இலைகளில் பனித்துளிகளின் ஆயுள் எண்ணப்பட, கீச்... கீச் குருவி கள் வேலைக்கு போயின.

தலை போகும் அவசரத்தில் பையன் எரிந்து விட்டு போன பேப்பர் ராக்கெட், சுதாகரின் கைகளில் லேண்ட் ஆனது. மொர மொரப்பான நியூஸ் பிரிண்ட் வாசனையோடு, சில மணி நேரம் முன்ஞல் பிறந்த அது அவனுடைய சேவை யாருக்கும் தேவையில்லை என்று சொன்னது. அப்பாடா என்றிருந்தது. குற்றம் கலந்த நிம்மதி... இந்தியர்கள் யார் யாரிடம் தோற்ருர்கள் என்று அவன் தெரிந்து கொண்ட போது அம்மா உள்ளே காப்பிக்கு பில்டரில் தண்ணீர் ஊற்றி தட்டிக் கொண்டிருந்தாள்.

காப்பி குடிக்கும் போது சந் தோஷமாக இருந்தது. இன்று ஏதோ நடக்கப் போகிறது வித்தியாசமாய்... என்ன? தெரியாவிட்டாலும் எதிர்பார்ப் பில் ஒரு திரில் இருக்கத்தான் செய்தது.

சிலோனில் பிடித்த பாட்டு ஒலித்த பொழுது அப்பா எழுந்தார். அவரைப் பார்த்ததும் லேசாக ஏதோ நெருடியது.

இன்று முழுவதும் வீட்டில் இருப்பார். சுதந்திரமாக ரேடியோ கேட்க முடியாது. தங்கைகளுடன் கேரம் விளை யாட முடியாது. ஏதாவது சொல்வார், கோபமாக.

எட்டரை மணிக்கு டிபன் சாப் பிட்டு விட்டு பேண்ட் ஷர்ட்டில் நுழையும் பொழுது ஆச்சர்யப்பட்டான். இன்று எங்கே போகிருர். போகிற போது அட்ரஸ் ஒன்றைக் கொடுத்து... "இவரைப் போய் பார்... உன் வேலைக்கு சொல்லியிருக்கேன். கண்டிப்பா செய்ய றேன்ஞர். பத்து மணிக்கு மேல போய் பாரு"...

சலிப்பாக இருந்தது. படித்து முடித்து வேலைக்காக போய் பார்த்தவர் கள் சென்னை மாநகரில் பாதியிருக்குமா? இருந்தாலும் அலட்சியம் செய்ய மனம் வரவில்லை. போய் பார்க்கலாம். என்ன சொல்லப் போகிருர்?

அவசர குளியல். சாப்பிட உட்கார்ந்து எழுந்த பொழுது யாரோ வருவது போல தெரிந்தது...

இந்து யாருக்கோ 'ஹாய்'... நந்தினி!

சந்தோஷம் உற்பத்தியாகி ஒவ் வொரு செல்லிற்கும் வினியோகம் செய் யப்பட்டது. எவ்வளவு நாள் ஆச்சு பார்த்து...

"ஹல்லோ...... வெல்கம்...... வெல்கம்......" சிரிப்பு பூவாய் மலர வரவேற்ருன்.

நந்தகுமார்

யாரை ராத்திரிகளில் கனவு காண்கிருளே அவள் அவனுடைய கண்ணுடி அணிந்த தேவதை நந்தினி...

காலையில் நினைச்சது சரியா போச்சு, அவசரமாய் யார் முகத்தில் விழித்தோம் என மூளை தேட, அவசரத்தில் இதயம் கவிதை ஊற்றுய்—

'...இதழ் பவளங்கள்
சங்கீதம் உன் மொழி
போக மீதங்கள்...'

"வா... வா..."— அம்மா.

கூடத்தில் இந்துவுடன் பேசிக் கொண்டிருந்தாள். என்ன வேலை இவனுக்கு குறுக்கும், நெடுக்குமாய்...? இந்து— அவனுடைய புத்திசாலி தங்கை துப்பறியவில்லை. சுதாகரின் பரபரப்பை புன்சிரிப்பால் ரசித்தாள்.

"ஏண்டா அப்பா யாரையோ பார்த்துட்டு வரச் சொன்னுரே?"

'இன்றுதான் போய் பார்க்க வேண்டுமா. இந்த அருமையான சந்தப்பத்தை நழுவவிடணுமா?'

அப்பா மேல், நினைவு படுத்திய அம்மா மேல் எரிச்சலாய் வந்தது... என்ன செய்யலாம். போகவில்லை என்ருல் திட்டுவார். கோபப்படுவார்... போகலாம்.

இந்துவைக் கூப்பிட்டு "ப்ளீஸ் ஒரு ஹெல்ப்..." என்று இழுத்தான்.

"தெரியும் நீ வரவரைக்கும்..."

"கரெக்ட். நீ செய்வியா?"

"நான் செய்ய வேண்டாம். அவளே சாயந்திரம்தான் போகப் போரு"

விசிலடித்து... கவனமாக தலைவாரி, டக் செய்து...

"எங்கே போருர் உங்கண்ணு?" அடுத்த அறையில் ஒலிச்சித்திரம் கேட்டது. ஹாலை கடக்கும் போது இந்துவிடம் வழக்கமில்லா வழக்கமாக, "போயிட்டு வர்றேன். முப்பது நிமிஷத்தில வந்துடறேன். இருப்ப இல்ல?" தைரியமாய் இவ்வளவு நாளில் அவளிடம் பேசிய அதிக பட்ச வார்த்தைகள் இவைகள் தான்!

"ஓ! சாயந்திரம் போனு போதும்.",

வானத்தில் நடந்து, பஸ் ஸ்டாண்டில் நின்ருன். பஸ் வரவில்லை.

'ஐ லவ்யூ!'



'நிஜமாவா!' கண்கள் அகல நந்தினி.

'இதயம் பூரா...ஐ லவ் யூ.'

பஸ் வரவில்லை.

"இந்த ப்ளூ ஹஃப் ஸாரி உனக்கு நல்லாயிருக்கு'

'தாங்க்யூ'

'இன்னிக்கு எங்கே போகலாம்'

'பீச்... ஓ கே?'

பைக் புறப்பட்டது, சந்தோஷ ஜோடிகளுடன்.

'எங்க வீட்ல வந்து கேளுங்க சுதாகர்'

'சரி கம்மிங் சண்டே பேரண் ஸோட வர்றேன்?'

'ஜாதகம் நன்று பொருந்தியிருக்கு'

"சார் மணி என்ன சார்?"

சே! அவ்வளவு தானு...!

மணியைப் பார்த்தான். நாற்பது நிமிஷம்... 2400 அருமையான

செகண்டுகள். சுகந்தங்களை தூவி கரைந்து விட்டிருந்தது.

பஸ் வரவில்லை.

"என்னடா அதுக்குள்ள வந்துட்ட?" அம்மா கேட்கிருள்.

"ம்ம்... ராம்ஜி ஸ்கூட்டர்ல லிப்ட் கொடுத்தான்... போன இடத்தில அவரும் இல்லை."

"கொஞ்ச நேரம் இருந்து பார்த்துட்டு வரது."

"சாயந்திரம்தான் வருவாராம்."

இந்து இவனுடைய டிராயிங் நோட்டை நந்தினியிடம் காட்டிக் கொண்டிருந்தாள்.

"ரொம்ப நல்ல வரைஞ்சிருக்கீங்க...வெரி ஃபைன்...எனக்கு ஒரு படம் தர்றீங்களா?"

"எது வேணுமோ எடுத்துக்குங்க."

என்ன பேசுவது... 'ஷெல்லி பிடிக்குமா... கீட்ஸ்... விசாரணைகள் படிச்சியா... சேஸ்ஸை விட, அகதா கிருஸ்டி லாஜிகலா இருக்கு இல்ல...' இதெல்லாம் கேட்க நினைத்து,

"அப்பா! இன்னிக்கு வெய்யில் ஜாஸ்தி இல்லை?" பேசியது இதுதான்.

ஐந்து மணிக்கு நேருக்கு நேர் முடித்து இரவு டைரியில் இடமில்லாமல் அடுத்த பக்கத்தையும் நிறைத்து, ராத்திரி தூக்கம் வந்த பொழுது திங்கட்கிழமை. பேசிக் கொண்டிருந்தது முழுவதும் பொதுவான விஷயங்கள். நந்தினி... நந்தினி... நந்தினி.

மூன்ரும் நாள் மாலை. ஆபீஸி லிருந்து திரும்பிய அப்பா முகத்தில் வெப்பம் மே மாத வெயிலாக பாரன் ஹீட்டில் எகிறியது.

"ஏ... சுதாகர் அவரைப்போய் பார்க்க சொன்னேனே பார்த்தியா..."

"அவர் வீட்டில் இல்லை."

"மண்ணுங்கட்டி.போய்ப் பார்த்தாலும். அவரே இன்னிக்கு ஆபீஸ் வந்திருந்தார். இரண்டு மணி வரைக்கும் இருந்தேன். வரவேயில்லையே...நிச்சயம் வேலை கிடைச்சிருக்கும்னுர்"

சட்டென்று இனிமைகள் கரைந்து போய் எல்லோர் முன்ருலேயும்





புளோரிடாவின் உலகப்புகழ் பெற்ற 'சீ வேர்ல்டு' அக்வாரியத்தின் பயிற்சியாளரான டான் பிளாஸ்சோ, நதிகளில் இக்கரையிலிருந்து அக்கரைக்குச் செல்ல படகுகளைப் பயன்படுத்துவதில்லை.

இரண்டு டால்பின்கள் மணிக்கு பத்து மைல் வேகத்தில் நீரைக் கிழித்துக் கொண்டு இவரைச் சுமந்து செல்கின்றன.

இந்த இரண்டு டால்பின்களும் டான் பழக்கியவைதான். டானின் நெருங்கிய நண்பர்கள் இவை.

குற்றவாளியாய்...

கனமான மௌனம். அம்மா சாப்பாடு போடும்போது மட்டும் "ஏண்டா இப்படி பண்றே...?"

சாப்பிட்டுவிட்டு மொட்டை மாடிக்கு போனான். பௌர்ணமி அருகில் இருந்தது. மரங்கள் ஒளியில் குளித்துக் கொண்டிருந்தன...!

என்ன பெரிய வேலை...நூத்தைம்பது ரூபா சம்பளத்தில பத்துமணி நேரம் கையை உடைப்பானுக...அதுக்கா... no...வேலை கஷ்டமானதாகக்கூட இருக்கலாம். தகுதிக்கு தகுந்த வரவேற்பு இல்லாததுதான் அவனுக்கு வருத்தமாக இருந்தது. முன்னே முயற்சி செய்தது கூட இதுபோலத்தான். இதுவும் அது மாதிரிதான் இருக்கும்.

என்ன மனுஷங்க...மத்தவங்க இஷ்டங்களை மனநிலையை புரிஞ்சுக்காத இவங்க ஒரு மனுஷங்களா? கோபமாக வந்தது அப்பாமீது.

"சரியான தண்டனை...இவங்களை யெல்லாம் இப்படித்தான் தண்டிக்கணும். நீ செய்தது கரெக்ட்" மனது சமாதானம் சொல்ல வெறுப்பு துடைக்கப்பட்டு சுத்தமானது.

மணி என்ன... ஒன்பது... என்ன செய்து கொண்டிருப்பாள்... பாட்டா, பேச்சா, ஹோம் ஒர்க்கா...எது?

உன் நினைவு
மழையில்
முழுவதும் நனைந்துவிட்டேன்.
காதல் ஜுரம்
பற்றிக் கொள்ள
பிதற்றுகிறேன் கவிதையாய்

ஹாய்! நல்லா வந்திருக்கே...! இந்துவிடம் காலையில காட்டணும்...

அடுத்த இரண்டாம் வாரம் ஒருநாள். இந்துவின் முகம் சோகமாக இருந்தது.

"என்ன இந்து...ஏன் இப்படி இருக்கே?"

"அண்ணு நந்தினிக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. நேத்து திடீர்னு பெண் பாக்க வந்தாங்களாம். நந்தினி உன்னைப்பத்தி போல்டா அவங்க அப்பாகிட்ட சொல்லியிருக்கா. 'அவன் வேலையத்த பையன்ம்மா... இந்த மாப்பிள்ளையைப் பாரு...நூத்தைம்பது ரூபாதான் சம்பளம். ஆனா படிப்படியா முன்னுக்கு வர சான்ஸ் இருக்கு..மரியாதையா கழுத்தை நீட்டு'ன்னுட்டார்..."

மேலும் அவள் பேசியபோது அவனுக்கு ஒன்று புரிந்தது. அந்த மாப்பிள்ளைப் பையன் வேலை பார்க்கும் இடம் அவன் முன்பு போய் பார்க்காமல் தவற விட்ட அதே இடம்!

அவன் துடித்துப்போய் நின்றான். தற்காலிகமான சுகந்தங்களுக்காக நிரந்தரமான சுகத்தைப் பறிகொடுத்துவிட்ட துக்கம் அவன் முகத்தில் நிழலடித்துக் கொண்டிருந்தது.

O

# ஆகாய வண்ணத்தில் ஒரு அழகான பட்டுப் புடவை!

ராஜேஷ்குமார்

குத்துக்காலிட்டு உட்கார்ந்த படி, சட்டியில் இருந்த கம்பஞ்சோற்றில் மோரை வார்த்து, இரண்டு உப்புக் கல்லையும் நசுக்கிப் போட்டு பிசைந்தான் கிட்டான்.

குடிசைக்கு வெளியே அவனை யாரோ அழைத்தார்கள்.

''கிட்டான்... கிட்டான்...''

கம்பங்கூழ் கரைத்த சட்டியை அப்படியே வைத்து விட்டு எழுந்தான் கிட்டான். குடிசையின் நைந்து போன கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான்.

வெட்டியான் சுடலை ஒரு அரை பீடியை சுகமாய்ப் புகைத்தபடி நின்றிருந் தான்.

''என்ன சுடலை...?''

''மயானத்துக்கு ஒண்ணு வந் திருக்கு...!'' — பீடியை விட்டெறிந்தான் சுடலை. கிட்டானின் கண்கள் ஆசையில் பளபளத்தன... ''என்ன, ஆணு? பொண்ணு...?''

''பொண்ணுதான்...''

''பெரிய இடமா?''

''பெரிய இடமா இல்லாங்காட்டி உங்கையில விஷயத்தைச் சொல்ல வருவேனா...? பட்டுப்புடவை போர்த்தி யிருக்காங்க... ராவுக்கு வந்துரு கிட்டா, உருவிடலாம்...''

கிட்டான் சந்தோஷத்தில் மிதந் தான். ''வா சுடலை... ரெண்டு பேருமா கம்பங்கூழ் சாப்புடலாம்... இப்பத்தான் நா குடிக்கலாம்ன்னு கரைச்சேன்...''

சுடலை குடிசைக்குள் நுழைந் தான். ''உங்கம்மாக்காரியை இன்னுமா ஆஸ்பத்திரியிலிருந்து கூட்டிட்டு வரலை...?''

''அம்மாவுக்கு நோவு ஜாஸ்தி யாயிடுச்சு சுடலை...! பஞ்சாயத்து ஆஸ்பத்திரி டாக்டர், கோயமுத்தூர் பெரியாஸ்பத்திரிக்கு கொண்டுட்டு போகச் சொல்லிட்டாரு...கையில சல்லிக் காசு இல்லாமே டவுனுக்கு எப்பிடி கூட்டிட்டுப் போறதுன்னு முழிச்சுட்டி ருந்தேன்... நீ வந்து சேதியைச் சொன் னதும்தான் தெம்பாயிருக்கு...''

அலுமினிய டம்ளர்களில் கூழை வார்த்துக் கொண்டே பேசினான் கிட்டான். ''ஆண்டவன் எதுக்கோசரம் இருக்கான்? நம்ம மாதிரி ஏழை பாழைங் களுக்கு சமயம் பாத்து உதவி பண்ணு வான்... இப்ப மயானத்தில அடக்க மாயிருக்கிற பொணத்துமேல ஐநூறு ரூபா பட்டுப் பொடவையைப் போத்தியிருக் காங்க... உருவிகிட்டு போயி நம்ம பழைய மார்க்கெட்டு முஸ்தபா கடையில வித்தா கண்ணை மூடிகிட்டு இருநூறு ரூபா தருவான்... உனக்கு நூறு. எனக்கு நூறு...''

சொல்லிவிட்டு கூழை உறிஞ்சி குடிக்க ஆரம்பித்தான் சுடலை.

கையில் வழவழத்த அந்தப் பட்டுப் புடவையைப் பார்த்தான் கிட்டான்.

அது... ஆகாய வண்ணத்தில் அழகாய் இருந்தது. புடவை பூராவும் ஜரிகை வேய்ந்த சூரியகாந்திப் பூக்கள் சிரித்தன. ஓரம் பூராவும் மாங்காய்

பிஞ்சுகள் பார்டராய் ஓடியது.

சுடலே சொன்ன மாதிரியே 'அந்தப் பட்டுப் புடவை'யை பழைய மார்க்கெட் முஸ்தபா இருநூறு ரூபாய்க்கு வாங்கிக் கொண்டான்.

பங்குப் பணத்தை வாங்கிக் கொண்ட சுடலே சாராயக் கடைப் பக்கம் போக—

கிட்டான் தன் கிராமத்திற்குப் பஸ் ஏறினுன்.

உச்சி நேரத்துக்கு அவன் தன் குடிசையை நெருங்கியபோது — குடிசை யின் உள்ளேயும் வெளியேயும் நின் றிருந்த உறவுக் கூட்டம் அம்மா 'உயிரோடு' இல்லேயென்பதை அவ னுக்கு உணர்த்த சட்டென்று தளர்ந்து போனுன்.

குடிசைக்கு வெளியே—

எதிர் வீட்டிலிருந்து இரவல் வாங்கிய நாற்காலியில் ஆரோகணித் திருந்த கிட்டானின் தாய்மாமன் பிச்சை முத்து போலியான பரிவோடு கேட்டார், "டேய்! கிட்டா... நீ எங்கேடா போயிட்டே...? உசிரு போற நேரத்தில உன்னெ பார்க்கணும்னு உங்கம்மா எப்படி துடிச்சா தெரியுமா...?"

கிட்டான் ஒன்றும் பேசாமல் கலங்கிய கண்களோடு குடிசைக்குள் நுழைந்தான்.

கிட்டானின் தாய்மாமன் பிச்சைமுத்து கொஞ்சம் வசதியான பேர்வழி. நிலம், நீச்சு, தோட்டம், தோப்பு, மாடு, மனேயோடு—சௌரிபாலே யத்தில் சௌக்கியமாய் வாழ்கிறவர். கிட்டானின் அம்மா அவருக்கு உடன் பிறந்த அக்கா. அக்காகாரியும், மருமக னும் கஷ்டப்படுவதை கடுகளவுகூட கண்டு கொள்ளாதவர். அவள் செத்த தும், தாய்வழி உறவு என்று சொல்லிக் கொள்ள அவர் மட்டும் இருக்கிறபடியால் செய்ய வேண்டிய காரியங்களேச் செய்து விட்டுப் போவதற்காக பல்லேக் கடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

பறை முழக்கம் கேட்க—பாடை கட்டும் வேலே ஆரம்பமாகியது.

"கிட்டா... எந்திரிச்சு வெளியே வாடா! பொட்டையாட்டம் உள்ளார போய் உட்கார்ந்துட்டா காரியங்களே யார் கவனிக்கிறது? ஒடம்பை ரொம்ப நேரம் வெச்சிருக்கக் கூடாதுன்னு டாக்டர் சொல்லிட்டார். பெரிய வயசுக் காரி... நோயி தாக்கின உடம்பு... சீக்கிரமா எடுத்துடணுமாம்... சட்டு புட்டுன்னு நீ யார் யாருக்கு சொல்லி வுடணுமோ... அவங்களுக்கெல்லாம் சொல்லிவுடு..."

—பிச்சைமுத்து பெருங்குர லெடுத்துக் கத்தினுர்.

கிட்டான் அழுது வீங்கின முகத்தோடு வெளியே வந்தான். சட்டைப் பையில் இருந்த நூறு ரூபாயை எடுத்து தன் தாய்மாமனிடத்தில் கொடுத் தான். "மாமா! என்கிட்ட இருக்கிற பணமே இவ்வளவுதான்... இதை வெச்சுகிட்டு காரியங்களே நடத்துங்க..."

பிச்சைமுத்து அந்தப் பணத்தை வாங்கி ஜிப்பா பைக்குள் போட்டுக் கொண்டு செயற்கையான ரோஷத்தை வரவழைத்துக் கொண்டு பேசினுர்... "என்னடா கிட்டா... எனக்கு பணம் தர்றே? எங்கிட்ட பணம் இருக்குடா...



உங்கம்மாக்காரி யாருடா? எனக்கு அக்காடா! கூடப் பொறந்தது. அது காரியங்களை எப்படி நடத்துறதுன்னு எனக்குத் தெரியுண்டா... ஆயிரம் ரோஜா பூவு; கோடித் துணியா போடற துக்கு பட்டுச்சீலை; எல்லாத்துக்குப் சொல்லிட்டேன்..."

பிச்சைமுத்து சொல்லச்சொல்ல—

கிட்டானுக்கு மனசு நிறைவாய் இருந்தது.



வினஞ்சிருக்குது கம்பங்காடு
விளையாடுது காஞ்சமாடு
சிரிச்சிருக்குது சின்னப்பேடு
சிலுசிலுன்னும் முல்லைக்காடு

'ஆகாய கங்கை'யில் கார்த்திக், உஷா



காரியங்கள் மளமளமென்று நடக்க ஆரம்பித்தன.

ஏறக்குறைய ஒரு மணி நேரத்திற்குப் பிறகு—பூவும், சேலையும் வாங்க டவுனுக்குப் போனவர்கள் திரும்பி வந்தார்கள்.

"என்னடா கதிரு! ரோஜா பூவு கிடைச்சுதா...!"- பிச்சைமுத்து கேட்க-

அவன் தலையாட்டினான். "இல்லீங்க. டவுன் பூராவும் சுத்திட்டோம்... பூவே இல்லீங்க... இந்த செவ்வரளியும்... துளசியுந்தான் கிடைச்சுது..."—கண்ணைச் சிமிட்டினான்.

"சரி... சரி... சரி... அதாவது கிடைச்சுது...! ரோஜாப் பூவைக் காட்டிலும் செவ்வரளியும் துளசியும் ரொம்பவும் விஷேசண்டா...!"— பிச்சைமுத்து சொல்லிக் கொண்டே புடவை பார்சலை எடுத்தார்.

"புடவை... பட்டுப் புடவை தானே எடுத்தீங்க...?"

"ஆமாங்க...!"

பார்சலைப் பிரித்தார். சேலையை எடுத்தார். உதறினார்.

கிட்டான் எட்டிப் பார்த்தான்.

ஆகாய வண்ணத்தில்-ஜரிகை வேய்ந்த சூரியகாந்திப்பூக்கள் தெரிய— ஓரம் முழுவதும் மாங்காய்ப் பிஞ்சுகள் பார்டராய் ஓடின.

கிட்டான் அதிர்ந்து போய் நிற்க—

பிச்சைமுத்து புடவை வாங்கி வந்தவனிடம் தாழ்ந்த குரலில் கிசுகிசுத்தார்.

"பழைய மார்க்கெட்டில் தானே வாங்கினே?"

"ஆமாங்க!"

மறுபடியும் கிசுகிசுத்தார். "சபாசுடா! பொடவை வெகு ஜோரா இருக்கு... எந்தக் கொம்பனாலேயும் இது பழைய மார்க்கெட் பொடவைதான்னு சொல்லிட முடியாது..."

கிட்டான் திக்பிரமை பிடித்து நிற்க—

"அக்கோவ்... அக்கோவ்... தாய் வீட்டு சீதனமா உம் மேல என்னை பொடவை போர்த்தும்படியா பண்ணிட்டியே... ஏ...ஏ...ஏ..."

ஆர்ப்பாட்டமான அழுகையோடு-சேலையை எடுத்துக் கொண்டு— உள்ளே போனார் பிச்சைமுத்து.



படத்துக்கு பூஜை போட்டனர். தமிழக முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மா குத்துவிளக்கு ஏற்றி வைத்தார். படத்தை இயக்கும், நடிக்கும் பாக்யராஜ் மனைவி பிரவீணாவுடன் வந்திருந்தார்.





## தலை நிறைய பூ! கை நிறைய வளையல்!

அழகிய முகம். அளவோடு வளர்த்தி. ஒல்லியிலும், பருமனிலும் சேர்த்தி இல்லாத வாகோடிருக்கிறார் விஜி. இன்னும் கண்களில் குழந்தைத்தனம் போகவில்லை. கங்கை அமரனின் கோழி கூவுது படத்தில் கதாநாயகியாக நடித்துக் கொண்டிருக்கிறார். கங்கை அமரனைப் பற்றி சொல்லுகிறபோது 'தமாஷாக இருக்கிறார். அதே சமயம் வேலையில் கவனமாகவும் விரைந்து பணியாற்றவும் செய்கிறார். இந்த யூனிட் தனக்கு கிடைத்தது அதிர்ஷ்டம்தான்' என்றார். எல்லோரிடமும் ஜோவியலாக பழகுவாராம். அன்பாக, கௌரவமாக நடந்து கொள்வேன் என்மேல் யாருக்கும் கோபம் வருவது மாதிரி நடந்து கொள்ள மாட்டேன் என்றார்.



எல்லா டைப் கேரக்டர் பண்ணவும் இஷ்டத்தோடிருக்கிறார். நடிக்க வந்ததை, 'ஆபீஸில் ஒர்க் பண்ணவந்தது மாதிரி இருக்கு' என்றார். இவருக்கு பரதநாட்டியம், மணிப்புரி டான்ஸ் தெரியுமாம். சென்னை எக்மோர் ஆஸ்பத்திரியில் பிறந்தவர். தமிழ் தெளிவாக பேசுகிறார். சந்தோஷமானாலும் அல்லாததானாலும் எதையும் மனசுக்குள்ளே வைத்துக் கொள்ளுவாராம். தலைநிறைய பூ வைத்துக் கொள்ளுவதிலும், கை நிறைய வளையல் அணிந்து கொள்வதிலும் விருப்பமாம்.

## அம்பிகாவை மணப்பேன்!
—சங்கர்

ஏவி.எம். நாலாவது ஃப்ளோரில் துரை டைரக்‌ஷனில் தமிழிலும், மலையாளத்திலுமாக நடித்துக் கொண்டிருந்தபோது சங்கரைப் பார்த்தேன். ஒன்றுவது ஃப்ளோரில் சகலகலா வல்லவனுக்காக அம்பிகா இருந்தார். இடைவேளையில் சங்கரை பார்க்க வந்து போனார். இவர்கள் இருவரையும் இணைத்து பேசப்படுவது பற்றி சங்கரிடம் விசாரித்தேன். நான் அம்பிகாவை கல்யாணம் செய்து கொள்ளக் கூடாதா? என்று கேட்டார். அசந்து போனேன். மட்டுமல்ல 'இப்போதைக்கு எங்களுக்கு கல்யாணம் இல்லை. ஓரிரு ஆண்டுகளில் நடக்கும்' என்றார். 'அம்பிகாவுக்கு சம்மதம்தானா' என்று கேட்டதற்கு 'சம்மதம்தான்' என்றார். இப்போதைக்கு இவர்கள் நல்ல நண்பர்களாக இருக்கிறார்களாம்.

# பாய்க்கால்
# ழதைகள்



**மாலன்**

தலைவருக்கு வயது தொண்ணூறு. தளதளவென்று பரங்கிப் பழம் போல் முகம். இட்ட அடி நோக இருவர் தாங்கிப் பிடித்துக் கொள்ள, மெல்ல நடந்து வந்தார். திண்டில் மடங்கிச் சாய்ந்தார்.

பேட்டிக்கு நோட்டைப் பிரித்துக் கொண்டேன்.

‘‘வாழ்த்துக்கள். வயது உங்களுக்குத் தொண்ணூறு இன்று.’’

ஆசிர்வாதத்திற்குக் கையை உயர்த்தினார். ‘‘எழுதிக் கொள்ளுங்கள். ஆளும் கட்சியின் அராஜகம் நாளுக்கு நாள்...’’ என்ற வழக்கமான அரசியல் வார்த்தைகளில் ஆரம்பித்தார்.

‘‘மன்னிக்க வேண்டும்.’’

என்ன என்று கண்கள் கேட்க முகத்தை உயர்த்தினார்.

‘‘எப்போதும் போன்ற உபதேசங்கள் வேண்டாம். அடிப்படைகள் குறித்து பேச விரும்புகிறேன்.’’

‘‘ம்?’’

"எழுபது வருடமாக அரசியலில் புழங்கி வருகிறீர்கள். எத்தனையோ வினோதமான யோசனைகளை முன் வைத்திருக்கிறீர்கள். அரசுக்கெதிராக ராணுவம் கிளர்ச்சி செய்ய வேண்டும். நாடு உருப்பட வேண்டும் என்றால் அரசியல், கலாச்சார, ஆன்மீக மாறுதல்கள் ஏற்பட வேண்டும் என்றெல்லாம் பேசி வந்திருக்கிறீர்கள். எப்போதேனும் சாதாரண மனிதனை நினைத்துப் பார்த்ததுண்டா?"

கேள்வி முகத்தில் அறைந்தது. திகைத்துப் போனார் தலைவர். அரை



நிமிடம் தான். அதற்குள் சமாளித்துக் கொண்டு முறுவலித்தார்.

"மை டியர் ஆங்கிரி எங்மேன்..." என்று ஆரம்பித்தார். சடாரென்று வயிற்றைப் பிடித்துக் கொண்டு சரிந்தார். அம்மா என்று முனகினார். உடனே நினைவிழந்தார். பக்கத்திலிருந்த தொண்டர்கள் திமுதிமுவென்று ஓடிவந்தார்கள். டாக்டருக்கு போன் பறந்தது. முதலுதவிப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்தார் ஒருவர். பரபரவென்று உள்ளங்காலில் சூடு பறக்கத் தேய்த்தார் ஒருவர்.

சாப்பிட உட்கார்ந்து சற்று நேரம் ஆகியிருக்கும். பாதிச் சாப்பாட்டில் வாசக்கதவு இடிஇடியென்று குலுங்கியது. பயமும் பதற்றமும் தெரிந்த இடிப்பு. பதிலுக்குக் காத்திராமல் சார், சார், என்று மிரண்ட குரல். முதுகுக்குப் பின்னால் கையை மறைத்துக் கொண்டு கதவைத் திறந்தேன். சந்திரசேகர்.

"சாப்பிடறீங்களா சார்? ஸாரி."

"என்ன சேகர், இத்தனை பதட்டம்?"

"சாப்பிட்டு வாங்க, போகலாம்."

"என்னப்பா?"

"நீங்க சாப்பிடுங்க சொல்றேன்."

"ப்ச். விஷயத்தை சொல்லு முதலில்."

"ரகுவிற்கு நிலைமை மோசமாயிருக்கிறது. தூக்கித் தூக்கிப் போடுகிறது. அவன் அம்மாவிற்கு கையும் ஓடலை. காலும் ஓடலை. மிரண்டு போய், நடுவார்டில் 'ஓ'வென்று அழுகிறாள்.

நீங்கள் வந்து இரண்டு வார்த்தை சொன்னால் அடங்குவாள்."

சாப்பாட்டைக் கை கழுவி விட்டுச் சட்டையை மாட்டிக் கொண்டு புறப்பட்டேன்.

இன்றைக்கெல்லாம் இருந்தால் ரகுநாதனுக்கு இருபது வயதிருக்கும். வெகு சூட்டிகையான பையன். வேலைக்குச் சேர்ந்த அன்றே வித்தை தெரிந்த ஆள் என்று காண்பித்து விட்டான். சின்னப் பையன் என்று டெஸ்பாட்ச்சில் போட்டிருந்தேன். அதிகம் வேலை இல்லாத நாற்காலி. ஆனால் உட்கார்ந்தோம், வேலை செய்தோம், வீட்டுக்குப் போனோம் என்ற நிம்மதி கிடையாது. மருந்துக் கம்பெனி ஆனதால் தினம் இருநூறு முன்னூறு கடுதாசி வெளியில் போகும். அதில் பாதி டாக்டர்களுக்கு அனுப்பும் ஞாபகக் கடிதங்கள். இன்ன ஊரில், இந்த டாக்டருக்கு, இன்ன தேதியில், இன்ன ப்ராடெக்ட் என்று போக வேண்டும். ஆம்பிளை டாக்டருக்கு பிரசவ மருந்தும், குழந்தை டாக்டருக்கு கருத்தடை மாத்திரையும் போனால் தபால் செலவு தண்டம். வருகிறவர்கள், போகிறவர்கள் எல்லாம் இவருக்குப் போச்சா, அவருக்குப் போச்சா என்று குடைந்து கொண்டு இருப்பார்கள். அப்படிப் போகவில்லை என்றால் அதனால்தான் விற்பனை குடி மூழ்கிப் போயிற்று என்று கூவுவார்கள். இவனை மாதிரிச் சின்னப் பையனாக இருந்தால் கேட்கவே வேண்டாம். எல்லோருக்கும் கிள்ளுக்கீரை. ஆனால் ரகுநாதன் வந்த அன்றைக்கே வேலையைப் புரிந்து கொண்டு விட்டான். கிடுகிடுவென்று பெயர்களை அகர வரிசைப் படுத்திக் கொண்டான். இந்தத் தேதியில் இன்ன ஊர் என்று திட்டம் செய்தான். செய்தவற்றை என்னிடம் காண்பித்து 'சரியா சார்' என்று ஒப்புதல் வாங்கிக் கொண்டான்.

இதையெல்லாம் பார்த்து நான் பிரமித்துப் போனேன். இத்தனை சின்னப் பையன் இப்படித் துருதுருவென்று காரியம் செய்வதைக் காண ஆனந்தமாய் இருந்தது. இதே நேரத்தில் கூடவே ஒரு உறுத்தல். இத்தனை புத்தியும், கூர்மையும் உழைப்பும் இருந்தும் இவனுக்கு ஒரு கடைநிலை குமாஸ்தாவாகத்தான் வாழ்க்கையைத் துவக்க முடிந்திருக்கிறது. குறுக்கே விழுந்த முட்டுக்கட்டை படிப்பு. அதற்கு உண்டான விலை. மூச்சுப் பிடித்து எஸ்.எஸ். எல். சி. வரை படித்தான். அதற்கு மேல் படிக்க ஐவேஜ் இல்லை. அப்பா இல்லாத பையன். அம்மா சமையல்காரி. அண்ணா தாலுகா ஆபீஸ் குமாஸ்தா. பணமும் படிக்க வாய்ப்பும் கிடைத்திருந்தால் பையன் கிடுகிடுவென்று முன்னேறி இருந்திருப்பான். விதி வேறு விதமாக இருந்திருக்கும். இந்த நேரத்தில் அநேகம் பேருடைய வாழ்க்கையைத் தீர்மானிப்பது,திசை திருப்புவது எல்லாம் பணம். புத்தி இல்லை. உழைப்பு இல்லை. இந்தப் பரிதாபத்திற்குப் பலியாகப் போனவன் ரகுநாதன்.

மொத்தம் மூன்று மாதம் வேலை செய்திருப்பான். ஒரு வியாழக்கிழமை மத்தியானம் விடுமுறைக்கு விண்ணப்பம் போட்டான்.

"என்னப்பா?"

சற்று முன்னே வந்து வேட்டியை விலக்கிக் காண்பித்தான். முட்டியில் இருந்து கணுக்கால் வரை செவசெவ என்று தடித்திருந்தது. துடைப்பக்கத்தில் வீக்கம். அரையிடுக்கில் நெறி கட்டிக் கொண்டு இருக்கிறது என்று கூசிக் கூசிச் சொன்னான்.

"விஷக்கடி போலிருக்கிறது சார். மந்திரிக்கணும்.மாரியம்மன் கோவில் போக வேண்டும்."




"என்னய்யா எனக்கு மட்டும் பாயாசம் போடாமல் அடுத்த இலைக்கு போடறீங்க?"

"யோவ்! 5 ரூபாய் மொய் போட்டவங்களுக்கு எல்லாம் பாயாசம் கிடையாதுன்னு வாசலில் போர்டு மாட்டியிருக்கே! அதைக் கவனிக்கலையா?"

—இரா. அண்ணாதுரை




நீங்க 'நொண்டி'ன்னு ஒரு கதை எழுதி அனுப்புனீங் களே... பத்திரிகையிலே பிரசுரம் ஆயிடுச்சா?

கதையோட 'நடை' சரியில்லைன்னு திருப்பி அனுப்பிட் டாங்க!

—புதுக்கோட்டை ரவி

நிமிர்ந்து முகத்தைப் பார்த் தேன். நீர் கோர்த்துக் கொண்டிருந்தது மாதிரி ஒரு உப்பல். இது விஷக்கடி இல்லை. வேறு விதம் என்று பார்த்ததும் தெரிந்து விட்டது.

"சாமி வேண்டாம். டாக்டரை பாரப்பா" என்று சொல்லி அனுப்பித் தேன்.

மறுநாள் ரகுநாதன் வரவில்லை. ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகி இருப்ப தாக செய்தி வந்தது. அதற்கடுத்த நாள் பதறிக் கொண்டு சேகர் வந்து நிற்கிறான்.

தலைவர் கண் விழித்ததும் டாக்டர் முகத்தைப் பார்த்தார். முறுவலித்தார். "களைப்பாய் இருக்கிறது" என்றார். யாரோ சில்லிட்ட பழரசம் கொண்டு வந்தார்கள். "வேண்டாம்" என்று நிறுத்தினார் டாக்டர். "அதிகம் தண்ணீர் கொடுக்க வேண்டாம். கிட்னி செயலிழக்கத் துவங்கி இருக்கிறது. நல்லவேளையாக ஒரு கிட்னி மட்டும். உடனே ஆஸ்பத்திரியில் சேர்ந்து கொள்ளுங்கள்."

"ஆஸ்பத்திரி. அவசியம்தானா?"

"இடைவிடாத கண்காணிப்பு வேண்டும். இங்கு அது சாத்தியமா?"

"முடியும் டாக்டர். கண்ணும் கருத்துமாக கவனித்துக் கொள்ள முடியும். இன்றைக்கு நீங்கள் இங்கு தங்கிவிடலாமே."

"இங்கேயா? அரசாங்க டாக்டர் நான். ஒரு அவசரத்திற்கு பரவாயில்லை. ஆனால் இங்கேயே தங்கி விடுவது...''

"அதற்கான பெர்மிஷன் தானே.. இதோ வாங்கி விடுகிறோம்''

அந்தரங்க உதவியாளர் முதல்வரிடம் அவசரக்கால் போட்டுப் பேசினார். 'அடேடே' என்று பதறினார் முதல்வர். உடம்பைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி அறிவுரை சொன்னார். டாக்டர் விஷயத்திற்கு, தாமதமின்றி, சரி என்றார்.

கேஷுவாலிட்டி வாசலின் வழியே புகுந்து கிடுகிடுவென்று வார்டுக்குப் போனேன். பொது வார்டுப் படுக்கையிலும், தரையிலும் முனகிக் கொண்டிருந்த வியாதிகள்.

ரகுவைச் சுற்றிச் சின்னக் கூட்டம். கையும், காலும் கிடுக்காய் பின்னிக் கொள்ள வாயில நுரை தள்ளி இருந்தது. பல்லுப்பட்டு, நாக்கிலும், உதட்டிலும் ரத்தம். நர்ஸுகளோ, டாக்டர்களோ யாரும் காணோம். வார்டுப் பையன் யாருக்கோ காபி வாங்கக் கடைக்குப் போயிருப்பதாக தகவல். நான் வேகமாய் நகர்ந்து மேஜைமீது பேப்பர் வெயிட் போலிருந்த ரப்பர் துண்டை கழுவி,பற்கள் மோதிக் கொள்ளாதபடி வாயில் திணித்தேன். கையையும், காலையும் சூடு பறக்கத் தேய்த்தேன். உடலின் துள்ளல் அடங்கிற்று. ஒரு அரை நிமிடம் கண்ணை விழித்துப் பார்த்தான். உடம்பு முழுக்க ஊதிக் கிடந்தது.

எப்படியோ செய்தி போய் எங்கிருந்தோ ஒரு நர்ஸ் வந்தாள். 'விலகிப் போங்க' என்று அதட்டல் போட்டாள். "இதை யார்வைத்தது?" என்று உறுமினாள்.

"டாக்டர் யாரும் இல்லையா?"

"யாரு நீங்க?"

இதற்கு பதில் சொல்வது அநாவசியம் என்று நினைத்தேன்.

"இது யார் யூனிட்?"

"நீங்க யாரு, ஸ்டுடண்டா?"

கட்டிலில் மாட்டி இருந்த சார்ட்டிலிருந்து யூனிட் சீஃப்பின் பெயரை கண்டு பிடித்தேன். சீஃப்பின் வீட்டு நம்பரையும் தெரிந்து கொண்டேன். வார்டிலிருந்த போனை எடுத்தேன். தஞ்சாவூரில் ஒரு சௌகரியம். டயல் கிடையாது. நம்பர் பிளீஸ்தான். ஸிஸ்டர் பாய்ந்து வந்தாள்.

"போனைத் தொடாதீங்க"

"சீஃப்போட பேசணும்."

மறுபடியும் "யார் நீங்க?"

சீஃப்பின் வீட்டில் விடாமல் மணி அடித்துக் கொண்டிருந்தது. இருபது முப்பது ரிங் அடித்ததற்குப் பின்னால் வேலைக்காரி மறுமுனையில் பதில் சொன்னாள். "சீஃப் வீட்டில் இல்லை. சினிமாவிற்குப் போயிருக்கிறார்."

நர்ஸ் போய் ஹவுஸ் சர்ஜனை அழைத்து வந்தாள். சின்னப் பெண். கண்ணாடி ஃபிரேமில், காலர் வைத்த ப்ளவுசில் நாகரீகம் ததும்பியது. நர்ஸ் கேட்ட கேள்வியை அவள் ஆங்கிலத்தில் கேட்டாள்.

என் பார்மஸி பட்டம், பார்க்கும் உத்யோகம் பற்றி இரண்டு வரியில் சொன்னேன்.

"எங்கள் அனுமதி இல்லாமல் போனை உபயோகிப்பது நாகரீகக் குறைவான செயல்"

"நாகரீகம் பார்க்கும் நேரம் இல்லை இப்போது."

"மருத்துவக் கல்லூரியில் நான்கு வருடம் படித்து இருக்கிறீர்கள். நமது ஆஸ்பத்திரிகள், சீஃப்கள் பற்றி உங்களுக்குத் தெரியும். நான் டியூட்டியில் இருக்கும் போது என்னை மீறிக் கொண்டு சீஃப்புக்கு போன் செய்வது என் கேரியரையே நாசம் செய்து விடும்."

"ஸாரி, அது என் நோக்கம் இல்லை."

"என்ன வேண்டும் உங்களுக்கு?"




"கல்யாணப் பத்திரிகையிலே மாப்பிள்ளை பெயருக்குப் பின்னாலே இ. எஸ். எஸ். எல். சி., எஸ். எஸ். எல்.சி., பி. யூ. சி.ன்னு போட்டிருக்கே!"

"அது மாப்பிள்ளை வாங்கின டிகிரிங்க!"

—எஸ். அமகேசன்

"இந்தப் பையன், ஃபிட்ஸ் வர ஆரம்பித்திருக்கிறது."

"ஐ காண்ட் ஹெல்ப் இட். கிட்னி பெயில் ஆகத் துவங்கி விட்டது. இனி என்ன செய்வது என்ற முடிவை சீஃப் தான் எடுக்க வேண்டும்."

"சீஃப் வீட்டில் இல்லை. இந்த ராத்திரி மட்டும் தூங்க வைக்க முடியாதா?"

"தூக்க மருந்துகள், பூட்டிய கஃபோர்டில் இருக்கின்றன. டி. ஏ. பி.யைப் பாருங்கள். அவர் சொன்னால் செடேடில் கொடுக்கிறேன்."

"டி.ஏ.பி. என்றால் யார்?"

"ட்யூட்டி அஸிஸ்டெண்ட் பிஸிஷன். மூன்றாவது மாடியில் அவர் அறை இருக்கிறது."

நான் வேக வேகமாகப் படியேறினேன். டி. ஏ. பி. அறை திறந்திருந்தது. ஆளைக் காணோம். விசாரிப்பதற்குக் கூட யாரும் இல்லை. அங்கே உயிர் ஊசலாடிக் கொண்டிருக்க இங்கு ஐந்து நிமிடம் முள் மீது நின்றேன். பொறுமை இல்லாமல் காரிடாரின் முனைவரை நகர்ந்தேன். அங்கு அரைத் தூக்கத்திலிருந்த கடைநிலை ஊழியரை உலுப்பினேன்.

"ஸ்கூட்டர் கீழே இருக்கிறதா பாருங்க. இருந்தால் ஐயா ரவுண்ட்ஸ் போயிருக்கிறார். இல்லை என்றால் வெளியே போயிட்டார் என்று அர்த்தம்."

# ஆரோக்கியத் துடிப்பு ...



மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ
சொட்டு மருந்தும், ட்ரிபிளான்டிஜேனும்
அளிக்கப்படும் இடம்;




**தமிழ்நாடு தாதா
பார்மாசூடிக்கல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர்
(ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086. தொலைபேசி 810646

**உங்கள் குழந்தைக்கு
போலியோ சொட்டு மருந்து
அளித்து இளம்பிள்ளை
வாத நோயிலிருந்து
பாதுகாப்பு அளித்திடுங்கள்.**

ஞாயிறு : காலை 8.30 முதல் பகல் 12.30 வரை
புதன் : காலை 8.00 முதல் பகல் 10.00 வரை
சனி : மாலை 3.00 முதல் 6.00 வரை

madhu ads TNDP 131

கீழே ஸ்கூட்டர் இல்லே. மறுபடியும் வார்டுக்கு வந்தேன்.

"என்ன பார்த்தீங்களா?" என்ருர் ஹவுஸ் சர்ஜன்.

"அவர் இல்லே. வேறு யாரைக் கேட்பது?"

"ஆர்.எம்.ஓ.வைப் பாருங்கள்."

அவசர நோயாளியின் மருந்துக்கு முன்ஞல் ஆயிரம் அரசாங்க சட்டங்கள்.

ரகு, அவன் புத்திசாலித்தனம், அவன் வயது, வாழ்க்கை அவனுக்கு விட்டிருக்கிற சவால் எல்லாவற்றையும் நிணைத்த போது இந்தச் சட்டங்களே உடைத்தெறிய வேண்டும் என்ற வெறி பொங்கிற்று.

ஆர். எம். ஓ. வீடு பூட்டி இருந்தது.

தலைவர் முகம் கோணியது. கால்கள் இழுத்துக் கொள்ள கைகள் உதறிற்று.

"இனிமேல் தாமதிக்க கூடாது. நகரத்தில் இருக்கும் பெரிய ஆஸ்பத்திரிக்குத்தான் எடுத்துச் செல்ல வேண்டும்" என்ருர் டாக்டர்.

"ஆபத்தான நிலேமையா டாக்டர்?"

"டையலேஸ் செய்தால் காப்பாற்றலாம்"

"அதை இங்கேயே செய்ய முடியாதா டாக்டர்?"

"சாத்யமில்லே. டையலேஸர் வேண்டும். நுணுக்கம் தெரிந்த நிபுணர்கள் வேண்டும்"

"டையலேஸர்"

"ஆமாம். உடம்பிற்கு வெளியே வேலே செய்யும் செயற்கை சிறுநீரகம். ரத்தக் குழாயிலிருந்து அதற்கு ஒரு இணைப்புக் கொடுத்து விடுவோம். கழிவு ரத்தம் டையலேஸரில் வடிகட்டப்பட்டு சுத்தமாகி மறுபடியும்..."

டாக்டர் பேசி முடிப்பதற்குள் ஆம்புலன்ஸ் வந்து நின்றது. உள்ளிருந்து ஸ்டிரக்ச்சர் இறங்கிற்று. பயணத்தின் போது துன்பமின்றி இருக்க தூக்க மருந்து ஏற்றிஞர் டாக்டர். இரண்டுமணி நேரத்தில் பக்கத்து நகரம். அங்கிருந்து தலே நகருக்கு தனி விமானம். தலைவரின் கை டயலேசருடன் பிணைக்கப்பட்ட போது இரவு மணி இரண்டு.

"இந்த நேரத்தில் இங்கு எங்கு சுற்றிக் கொண்டிருக்கிறீர்கள்?" திரும்பிப் பார்த்தேன். செந்தமிழன். டாக்டர் செந்தமிழன். எனக்குத் தெரிந்த ஹவுஸ் சர்ஜன். விஷயத்தைச் சொன்னேன்.

"கிட்னியா, அடப்பாவமே?"

"டயலேஸ் செய்தால் காப்பாற்றலாமே டாக்டர்"

"விளேயாடறீங்களா? தஞ்சாவூரில் ஏது டயலேஸர்? வேலூர் போணும் இல்லே மெட்ருஸ் போணும். போறவரைக்கும் தாங்குமா? போறக்கூட செலவைத் தாக்குப் பிடிக்க முடியுமா? ஒரு தரம் பண்றதுக்கு ஆயிரக்கணக்கில ஆகும்."

"இப்ப என்ன பண்ணலாம்?"

"முதல்ல பையன் ராத்திரி தூங்கட்டும். யாரு ட்யூட்டி ஹவுஸ் சர்ஜன்?"

"பெயர் தெரியாது."

தோற்றத்தை வார்த்தைகளில் ஸ்கெட்ச் போட்டேன்.

"அதுவா? ஊசியைத் தொடுவதற்கு நூறுதரம் யோசிக்குமே" என்று சொல்லி என்னுடன் வார்டுக்கு நடந்தார் செந்தமிழன்.

"என்ன டாக்டர்? என்ன கேஸ்?"

பெண் ஹவுஸ்சர்ஜன் அதிருப்தியோடு என்னைப் பார்த்தார். உலர்ந்த குரலில் விவரிக்கத் தொடங்கினார்.

"யூரேமியா. கிட்னி செயலிழக்க ஆரம்பித்து விட்டது. என்ன செய்வது என்ற முடிவை சீஃப் எடுக்கவேண்டும்"

"சீஃப் வீட்டில் இல்லை." என்று குறுக்கில் விழுந்தேன் நான்.

"இன்னிக்கு ராத்திரிக்குத் தூங்க ஏதாவது ஸெடேட்டில் கொடுங்களேன்" என்றார் செந்தமிழன்.

"ஆர்.எம்.ஓ.வைக் கேட்க வேண்டும்."

ஒன்றும் பேசாமல் நான் விடுவிடென்று கபோர்டை நெருங்கினேன். கீழே கிடந்த இரும்புத் தடியால் பூட்டை உடைத்தேன்.

"என்ன பண்றீங்க?" என்று பதறிக்கொண்டு வந்தார் டியூட்டி ஹவுஸ் சர்ஜன்.

"ஐ கேர் ஹூட்ஸ் ஃபார் யுவர் ரூல்ஸ். உங்கள் விதிகளை விட அந்த இருபது வயதுப் பையனின் உயிர் அதி முக்கியம்."

"உஸ்." என்று தோளில் தட்டினார் செந்தமிழன்.

நிதானமாக ஸிரிஞ்ஜை எடுத்து அதில் மருந்தை ஏற்றிக் கொண்டார்.

"டாக்டர்" பெண் ஹவுஸ் சர்ஜன் பதற்றமும், கோபமும் பொங்கி எழ குறுக்கே நின்றார்.

"இது என் பேஷண்ட். இன்றிரவு ஏதாவது நடந்தால் சீஃப்பிற்கு பதில்

அலுவலகத்தில், போலீஸ் ஸ்டேஷனில், மாஜிஸ்திரேட் கோர்ட்டில் பதில் சொல்வதில் கரைந்து போனது.

மாலையில் ரகுநாதன் செத்துப் போனான். இருபது வயதில் உலகத்தை ஜெயிக்கக் கூடிய ஒரு அலெக்ஸாண்டர் அரசாங்க விதிகளில் மூச்சுத் திணறி செத்துப் போனான். செத்ததற்குப் பிறகும் சட்டம் விரட்டி விரட்டித் துரத்தியது. உடம்பை 'அகெய்ன்ஸ்ட் மெடிக்கல் அட்வைஸ்' என்று எழுதிக் கொடுத்து விட்டு எடுத்துப் போகச் சொன்னார்கள். நோயாளி உடல்நிலை முற்றி விட்டது. எடுத்துப் போக வேண்டாம் என்று டாக்டர்கள் சொன்னதாகவும், அதை மறுத்து அவனை எடுத்துக் கொண்டு போனதாகவும் இந்த ஆங்கில வார்த்தைக்கு அர்த்தம். முழுதாக ஒருவனை மூச்சுத் திணற கொன்று விட்டு அதை இப்படிப் பூசி மொழுகுவது ஆஸ்பத்திரி வழக்கம். இதற்கு சம்மதிக்கவில்லை என்றால் உடனடியாக உடம்பு கிடைக்காது. போலீஸ் ஸர்ஜெண்ட், போஸ்ட் மார்ட்டம் என்று போய் துண்டு துண்டாக பிணம் திரும்பும். என்ன செய்வதென்று தெரியாமல் காட்டிய இடத்தில் எல்லாம் கையெழுத்துப் போட்டு ரகுவின் அம்மா சடலத்தை எடுத்துப் போனார். அவள் கதறிய கதறல், அதற்குப் பின்னால் தொணித்த அவள் நிர்கதி, எல்லாம் என் காதில் இன்னமும் இருக்கிறது.

ஐந்து மாதம் போயிருக்கும். பதினைந்து, இருபது கதர்சட்டை ஆசாமிகள் உண்டியல் குலுக்கிக் கொண்டு வந்தார்கள். விஷயம் என்னவென்று விசாரித்தேன். "தேசத் தலைவருக்கு கிட்னி பெயிலியர். டயலைஸ் பண்ணுகிறார்கள். ஆயுள் முழுசுக்கும் அது தேவை என்பதால் பல லட்சம் மதிப்புள்ள டயலைஸரை அரசாங்கம் அன்பளிப்பாகக் கொடுத்திருக்கிறது. ஆனாலும் ஒரு நாளைக்கு ஒன்பதாயிரம் செலவாகிறது. உங்களால் முடிந்ததை உதவுங்கள். தொண்ணூறு வயதுத் தலைவரைக் காப்பாற்றிய புண்ணியம்" என்று விவரித்தார் வழுக்கைத்தலை அண்ணாச்சி.

எனக்குள் உடைந்தது என்னவென்று தெரியவில்லை. வயிற்றில் அமிலம் பொங்க உண்டியலைப் பிடுங்கித் தெருவில் வீசினேன். அது உடைந்து விரிய நாலாபுறமும் நாணயம் இறைந்தது.

## அன்று சொன்னவை அர்த்தமுள்ளவை

பத்து மரக்கால் அளவு பேச்சு இந்தப் பூமிக்கு வந்தது. பெண்கள் ஒன்பது மரக்கால் பேச்சை எடுத்துக் கொண்டார்கள்; ஆண்கள் ஒரு மரக்கால் பேச்சை எடுத்துக் கொண்டார்கள்.

—பாபிலோனியன்தால் முத்

* * *

பேசாத வார்த்தைக்கு நீ எஜமான். பேசின வார்த்தை உனக்கு எஜமான்.

—ஆங்கிலப் பழமொழி

* * *

சிந்தித்துப் பார்க்காமல் பேசுவது, குறி பார்க்காமல் சுடுவதைப் போன்றது.

— காஸ்லிட்

* * *

தங்களுக்குத் தெரிந்ததைப்பற்றி ஆண்கள் பேசுகிறார்கள். தங்களுக்குத் திருப்தி தருவதைப் பற்றியே பெண்கள் பேசுகிறார்கள்.

—ரூசோ

தொகுப்பு: பழந்தண்டலம் விநாயகம்

சொல்ல வேண்டியவள் நான்; நீங்கள் இல்லை.ப்ளீஸ் மைண்ட் யுவர் பிஸினஸ்."

"உன்னுடைய சீஃப் கேட்டால் சொல். இதைப் போட்டது செந்தமிழன் என்று."

மருந்து உள்ளே போன கொஞ்ச நேரத்தில் வலிப்பு நின்றது. ரகு நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்தான்.

மறுநாள் காலை கொக்கி கொக்கியாய் கேள்வி விழுந்தது. யாரைக் கேட்டு உள்ளே நுழைந்தாய்? யாரைக் கேட்டு பூட்டை உடைத்தாய்? அனுமதி இல்லாத நேரத்தில் ஆஸ்பத்திரியில் நுழைந்து அமைதியைக் குலைத்ததாக, அரசாங்கப் பொருளைத் திருடியதாக ஏழெட்டு செக்ஷன்களில் வழக்கு பதிவு செய்தார்கள்.செந்தமிழனுக்கு சஸ்பென்ஷன் ஆர்டர் வந்தது. பகல் முழுவதும் ஆர்.எம்.ஓ. விடம், டீன்

# கோடைக்காலத்தில் கவலையின்றி சுற்றித்திரிய D.S.P பனியன்கள்



ஆம்,
எங்களது "குளோப்"
பனியன்களின் சிறப்பே
அதுதான். கோடை காலத்தில்
இயற்கையால் ஏற்படுகிற
வேர்வைநாற்றம்
உங்களைப் போன்றவர்களை
வெறுப்படையச்செய்யும்
ஆனால் எங்களது தயாரிப்பில்
அடங்கியுள்ள
விசேஷ காட்டன், உடலின்
வேர்வையை உறிஞ்சி
துர் நாற்றத்தை கட்டுப்படுத்தும்
நீங்களே,
உபயோகித்துப் பாருங்களேன்!

## D.S.P GLOBE பனியன்கள், ஜட்டிகள்

தயாரிப்பவர்கள்
D.S.P
நிட்டிங்கம்பெனி
திருப்பூர்-2
TEL: HOSIERY.
PHONE: 20035, 22964
.P.B.No.254

விற்பனையாளர்கள் இல்லாத ஊர்களிலிருந்து
விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

# மரணங்கள் ஜனிக்கின்றன

## ஹம்சா தனகோபால்

"என்னங்காணும் மினிஸ்டரெல்லாம் கூட வந்தாச்சு. இவளை இன்னும் காணுமே" வெற்றிலையை மென்று கொண்டே கூட்டத்தைக் கண்களால் துழாவியபடி பேசினார் அங்கிருந்த நிருபர்களிலேயே மிகவும் வயதான 'அறிவொளி' பத்திரிகையின் நிருபர்.

"வருவா. இல்லேன்னு வராமக் கூட இருந்திடுவா. போன மாதம் அவளை சினி ஃபீல்டுக்கே இண்ட்ரடியூஸ் பண்ணின டைரக்டர் நவயுக சுந்தர் மக மேரேஜுக்கு எங்கே வந்தா. வராமே இருந்துட்டாளே. இதுவரைக்கும் எந்தப் பொது பங்ஷனுக்கு வந்திருக்கா?" இளவட்டமான நிருபர் அவளைக்காண முடியவில்லையே என்ற ஏக்கத்தில் பேசினார்.

"நான் கூட டைரக்டர் நவயுக சுந்தர் கிட்டே கேட்டுட்டேன். 'என்னங்காணும் அவ வரலியா'ன்னு."

"என்ன சொன்னார்?"

"நானே நேர்லே போய் இரண்டு தடவை அழைச்சுட்டேன். 'ஏறினவாளுக்குத்தான் ஏணி ஞாபகம் வேணுமே தவிர ஏணிக்கு அவ ஞாபகம் எதுக்கு'ன்னு வாஜிக் பேசினார் மனுஷர்."

"யாரைப் பத்திப் பேசறேள். நம்ம சினிமா நடிகை கலைவாணி ஜெயபாலாவைப் பத்தியா பேசறேள்." என்றார் ஒரு நிருபர், தொலைவிலிருந்த கண்களை மீட்டுக் கொண்டு.

"நன்னா சொன்னேள் போங்கோ. இதுவரைக்கும் எங்கே இருந்தேள்." அவன் முதுகில் செல்லத் தட்டாகத் தட்டிப் பேசினார் கிழ நிருபர்.

"அங்கே பாருங்கோ. நம்ம கவர்ச்சி நடனமணியா இது... இழுத்துப் போர்த்திண்டு ஆளே அடையாளம் தெரியலே."

"சினிமாவிலேன்னா அவளுக்குத் துணிப் பஞ்சம் வந்துடும். இங்கே பார்த்தேளா. இது கூட நடிப்புத்தானா" அங்கலாய்த்தார் ஒரு நடுத்தர வயது நிருபர்.

நிருபர்கள் வரிசையாக சேர்களில் உட்கார்ந்தபடி வருபவர்களை படம் பிடித்தும் பேசியும் இருக்க அங்கே பங்களாவின் பெரிய போர்டிகோவில் உயர்த்திய மேடைமீது நேற்றுவரை சினிமா உலகின் முடி சூடா மன்னனாகத் திகழ்ந்த 'ஸ்ரீ வெங்கடேஷ்'னின் உடல் கிடத்தப்பட்டிருந்தது. மலர் மாலைகளின் குவியல். முகம் மட்டும் வெளியே தெரிந்தது: இது கூட நடிப்பா என்ற பாவம் முகத்தில்.

அவரைச் சுற்றி மனைவி மக்கள். ஒரு புறம் நெருங்கிய உறவினர்கள் கூட்டம். மறுபுறம் வரிசையாக மக்கள் வந்து மரியாதை செலுத்திக் கொண்டிருந்தனர். அதில் மார்பில் அடித்துக் கொண்டு அழும் பட்டிக்காட்டு குமரிப் பெண்களும் கிழவிகளும். கல்லூரிக் கன்னியர்களுக்கோ தங்கள் கனவுக் காதலன் இப்படி அநியாய வயதில் (அவர் மகனுக்கு போன மாதம் திருமணம் நடந்தது) போய் விட்டானே என்ற அங்கலாய்ப்பு. அவரை இமிடேட் செய்யும் காளையர் கூட்டம். உண்மையிலேயே அவர் நடிப்பில் அபிமானம் கொண்ட நடுத்தரவயதினர் கூட்டம். இப்படியாக

நடிக நடிகையர் கூட்டம். இந்
சாக்கில் அவர்களை தரிசிக்கலாமே என்
ஆர்வத்தோடு வரும் மக்கள் கூட்டம்
இப்படியாக அந்தப் பங்களா சோ
களமாக (கோலாகலமாக) இருந்தது.

நிருபர்களின் கூட்டம் அடிக்
கடிவரும் பானங்களை ஒரு கை பார்த்து
விட்டு இதை ஒரு பிக்னிக்காக அனுப
விக்க, அங்கே போர்டிகோவில் நேற்று
வரை சிரித்து பிறரை சிரிக்கவும், சிந்திக்க
வும்,அழவும் வைத்து வேடிக்கை பார்த்த
அந்த மனித ஜீவன் இன்று இந்த உல
கத்திற்கு இல்லை என்று ஆகிவிட்டபோது
அந்த ஆத்மாவிற்காக உண்மையில்
யார் அழுதார்கள் எனத் தேடுவது
கடினமாக இருந்தது.

போதாக் குறைக்குப் பிரபல
பாடகி ஒருவர் அமர்ந்து மீராபஜன்
போன்ற பக்திப் பாடல்களைப் பாடிக்
கொண்டிருந்தார். பேசுபவர்களின்
பேச்சுக்கு அந்தப் பாடல்கள் போர்வை
யாக அமைந்தன.

"எப்படியும் இன்னிக்கு மத்தி
யானம் ஆகாதா." இளவட்ட நிருபர்
இளம் மனைவியை 'ஏ' படத்திற்கு மாலை
அழைத்துப் போவதாக வாக்களித்திருந்
தார். அந்தக் கவலை அவருக்கு.



ஒரு வரிசை பங்களாவுக்கு வெளியே வெயிலில் நீண்டு கொண்டே போயிற்று.

நடுநடுவே சில வி. ஐ. பி.க்கள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். ஸ்ரீவெங்கடேஷனின் மனைவி தலைவிரி கோலமாக கண்ணீர் வராத கண்களை அடிக்கடி துடைத்துக் கொண்டிருந்தாள். துடைத்து துடைத்தே கண்கள் சிவந்துவிட்டன.

"ஆயிடும். ஸ்டேட்ஸிலே இருக்கிற மகளும் மருமகனும் வரணுமுன்னு காத்திருக்கா. அவளும் அங்கேயிருந்து ஸ்பெஷல் பிளேன்லே புறப்பட்டுட்டாளாம்."

"ஆமாம். இந்த ஜெயபாலா வைப் பார்த்திங்களா. இன்னும் வரலை"

"இதிலென்ன அதிசயம்? வந்தாத்தானே அதிசயம்."

"அவ பொண்ணுக்குப் பத்து பன்னிரெண்டு வயசாச்சோன்னோ இல்லியோ. ஒரு நா யாரு பாப்பா உங்க தோப்பனாருன்னு கேட்டேன். 'எங்க டாடி'ன்னா. பேருன்னேன். எதுக்குக் கேக்கறேள். சொல்ல மாட்டேன்னுட்டா. பொண்ணை எப்படி வளர்த்திருக்கா பாருங்கோ"



"அவ புருஷனை யாருன்னு தெரிஞ்சிக்கவே முடியலே பாருங்களேன். நான் ஜெயபாலாவையே கேட்டுட்டேன். 'ஒரு ஆண் பிள்ளை'ன்னு சிரிச்சா. நான் கட்டாயப்படுத்தினேன். நீங்க கவலைப் படாதீங்க, நான் சாஸ்திரப் பூர்வமா கல்யாணம் பண்ணின்டேன். அவருக்கும் இந்த சினிமா உலகத்திற்கும் சம்மந்த மில்லேன்னு சொல்லிட்டா."

"நீர் இப்படியா... நான் என்ன செய்தேன் தெரியுமா. அவ பொண்ணு படிக்குதே கான்வெண்ட், அங்கே போய் அவ அப்பன் பெயரைக் கேட்டேன். பள்ளிக்கூட ஹெட்மிஸ்ட்ரஸுக்குச் சரியான கோபம் வந்திடுச்சி. நாங்க அடுத்தவங்க ரகசியத்தை வெளியே சொல்றதில் லேன்னு சொல்லிட்டா மூஞ்சிலே அடிச்ச மாதிரி."

"அப்படி அவ புருஷன் யாராத் தான் இருக்கும். கண்டவனோடு சுத்தறதும் இல்லே. யாரோடும் தொடர்பு

வெச்சிக்கிறதில்லே. நிருபர்களைக் கண்டா நல்ல மரியாதை தரா.''

"அவா ஆத்திலே வேலை செய்யிற வேலைக்காரங்ககிட்டேயிருந்தும் ஒண்ணும் தெரிஞ்சிக்க முடியலே. அவாளையெல்லாம் நைட் எட்டுமணிக்கே வெளியே அனுப்பிடுரு. கூர்க்கா மட்டும் தான் இருக்கான். அவன் நேபாளி. பணத்தைக் காட்டிக் கேட்டா மூஞ்சிலே அடிக்கிருன்.''

"ஒரு வேளை அவன் தாஞ என்னமோ'' இப்படி இளவட்டம் கூறியதும் எல்லோரும் சிரித்து விட்டனர்.

நடிகருக்கு வேண்டிய மந்திரி ஒருவர் ஆளுயர மாலையுடன் நுழைந்தவுடன் கப்பென வாயை மூடிக் கொண்டு காமிராவில் கண்களைப் பதித்தனர்.

மந்திரி மாலையைச் சூட்டி விட்டு இல்லாத கண்ணீரைத் துடைப்பதாக மேல் துண்டால் பாவனை செய்து நடிகரின் மகனைக் கட்டித் தழுவி ஆறுதல் கூறி சென்று விட்டார்.

பாடகி 'பஜ கோவிந்த'த்தில் திளைத்துக் கொண்டிருந்தார்.

மக்கள் கூட்டம் வெயிலைப் பொருட்படுத்தாமல் மெல்ல மெல்ல வந்து போய்க் கொண்டிருந்தது. மக்களிடையே சலசலப்பு. போலீஸ்காரர்கள் கூட்டத்தை வரிசைப்படுத்தினர்.



பெரிய படகு போன்ற ஃபாரின் கார் உள்ளே நுழைந்து நின்றது. திறந்த ஏஸி காரிலிருந்து மூன்று முறைகள் 'ஊர்வசி' விருது பெற்றும் அதை சொன்னலொழிய தெரிந்து கொள்ள முடியாத நடிகை போன்ற தோற்றமேயில்லாத ஒரு இளம் பெண்ணுகை வயதை கணித்துக் கூற முடியாத — அழகாக சோகமே வடிவெடுத்து வந்ததைப் போல ஜெயபாலா இறங்கிளுள். அதை விட அதிசயம் அவளைத் தொடர்ந்து அவள் நிழலாக அவள் மகள் — முகை அவிழக் காத்திருக்கும் மொட்டாக — பாவாடை தாவணியில் இறங்கியது நிருபர்களை மூச்சடைக்க வைத்தது. காரணம் ஜெயபாலா தன் பெண்ணை எங்கும் அழைத்துச் செல்ல மாட்டாள் என்பதே.

ஏன், இதுவரைக்கும் அவள் மகளின் படம் திருட்டுத்தனமாகப் பிடிக்கப்பட்டு பிரசுரமாகியதே தவிர அவளுடைய விருப்பத்திற்கு இணங்கி அல்ல.

அவள் நடிகையாக இருந்த போதும் அவள் மீது ஒரு உயர்ந்த மதிப்பை எல்லோரும் வைத்திருந்தனர். சொன்ன நேரத்திற்கு வருவாள். சூட்டிங் முடிந்தால் அடுத்த காட்சி வரை அநாவசியமாகப் பேசாமல் புத்தகமும் கையுமாக இருந்து விடுவாள்.

மஞ்சள் பத்திரிகைகள் அவளைப் பற்றிக் கதைக்கும் போதெல்லாம் அதை சட்டையே செய்யமாட்டாள். அவள் கவனத்திற்குக் கொண்டு போனுலும் ஒரு உதாசீனப் புன்சிரிப்போடு நிறுத்திக் கொள்வாள். கர்வம் துளியும் கிடையாது. தான தருமங்களுக்குக் கொடுக்கப்படும் பணத்தொகைக் கணக்கு வெளிவரவே வராது. தெரிந்து கேட்டால் சிரித்து மழுப்பி விடுவாள். ஆபாசமாக நடிக்க மறுத்து விடுவாள்.

மொத்தமாகச் சொல்லப் போனுல் சினிமா உலகத்தில் ஒரு புதுமை. முன் மாதிரி.

அப்படிப்பட்ட ஜெயபாலாவையும், அவள் மகள் நிவேதிதாவையும் ஒருசேரப் பார்த்ததும் நிருபர்கள் கல்லாய் சமைந்ததில் ஆச்சரியம் இல்லை.

குத்துவிளக்கின் சுடர்களாகச் செல்லும் அவளையும் அவள் மகளையும் பார்த்து மக்கள் மட்டுமல்ல. 'ஸ்ரீவெங்கடேஷின்' சொந்தக்காரர்களே சில விநாடிகள் நம்மை மறந்தனர்.

சில நடிகைகள் மட்டும் தோள்

தேனடை சொட்டுக்கள் —காம
தேவனின் மொட்டுக்கள்
மாங்கனி கொத்துக்கள் —இவை
மாதுளை முத்துக்கள் ...

—மஹேசித்ரா, விஜயசாந்தி

படம்: 'மாதுளை முத்துக்கள்

...ட்டையில் முகவாயை இடித்து புறம் பேசிக் கொண்டிருந்தனர், கிசுகிசுத்த குரலில்.

நிவேதிதா கொணர்ந்த ஆளுயர மாலையை 'ஸ்ரீவெங்கடேஷின்' ஆகிருதியான உடலுக்கு அழகாகச் சூட்டி ஒரு கணம் நின்று பார்த்தாள் ஜெயபாலா. அவள் கண்களில் நீர்த் துளிகள் இல்லை. நிவேதிதா மட்டும் விம்மிக் கொண்டிருந்தாள்.

ஸ்ரீவெங்கடேஷின் பாதங்களில் தலை வைத்து வணங்கினாள். விநாடிகள் நிமிடங்கள் ஆயின.

நிவேதிதா அன்னையை அசைத்து குனிந்து மெல்ல ஏதோ சொன்னாள். ஜனத்திரள் வேடிக்கை பார்த்துக் கொண்டே நகர்ந்தது.

நிருபர்கள், சொந்தக்காரர்கள் சினிமா உலகம்...

மீண்டும் ஏதோ குனிந்து பேசினாள்... நிவேதிதா, மீண்டும் அசைத்து வெறும் உடலாக சாய்ந்தாள் ஜெயபாலா.

"ஐயோ அம்மா நீயுமா போயிட்டே... அப்பாதான் என்னை விட்டுப் போயிட்டாருன்னு நினைச்சா நீயுமாம்மா அநாதையா என்னை விட்டுட்டுப் போயிட்டே" தலையில் அடித்துக் கொண்டு கதறினாள் நிவேதிதா.



# மருவத்தூர் ஆதிபராசக்தி ஆலயத்தில்...

# இது ஒரு பொன் மாலைப் பொழுது!

"கூற்பிற் சிறந்த காதல் மனையாள், கயிலாய வெற்புடையாரின் துணைவி பார்வதிக்கு ஒப்பாவாள்! அவளிடம் கணவன் செலுத்துகின்ற அன்பு, அன்னை பராசக்தியிடம் செலுத்துகின்ற அன்புக்கு நேராகும். ஆகவே ஆண் வர்க்கங்களே பெண்ணுக்கு 'இடம்' கொடுங்கள்!" என்று நகைச்சுவையுடன் 'காரைக்கால் அம்மையாரின்' மேதகு சிறப்புக்களை எடுத்துரைத்தார் திருமதி சாரதா நம்பி ஆரூரான் தமது துவக்க உரையில். எங்கே? எப்போது?

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் விளங்கி, அருள்பாலிக்கும் அன்னை பராசக்தியின் அருட்தலமான மேல் மருவத்தூரில்— சென்ற ஜூன் 25ந் தேதி நடைபெற்ற 'மகளிர் ஆன்மீக மாநாட்டில்' திருமதி நம்பி ஆரூரான் உரையையே மேலே குறிப்பிட்டேன். கணவன் தன்னைத் "தெய்வமாக்கிப் புறக்கணித்த பின், அவருக்காகத் தாங்கிய தசை பொதி சுமையை பெருமை சேர் வடிவாம் பேய் வடிவு" ஆக, இறையருளால் மாற்றிக்கொண்ட-புனிதவதியாரின் பெருமைகளை அழகாக விளக்கினார். சேக்கிழார் பாடல்களை, சந்தர்ப்பம் நோக்கித் தமது இனியகுரலில் இசையுடன் பாடியது, இவரது உரைநடைக்கு உயிரோட்டம் தந்தது.






“நாரம்பரத்தில்தான் கல்யாணம் நடக்கிறது. ஞாயிற்றுக் கிழமை முகூர்த்தம்! சாக்குப் போக்கு சொல்லாமல் அவசியம் வந்து சேர வேண்டும்” என்று தன் மகனின் திருமண அழைப்பிதழை என் கையில் வைத்து அழுத்தி விட்டு என் நண்பர் கிளம்பிவிட்டார்.

சாதாரண நண்பர் இல்லை. மிகவும் ஆப்த நண்பர். என் வீட்டுத் திருமணங்களுக்கெல்லாம் வந்தவர். ஆகவே இதைத் தவிர்க்க முடியாது. தவிர்க்கக் கூடாது.

திருமண அழைப்பிதழைப் படித்து முடித்தேன். திருமணம் நடக்கவிருக்கும் ‘வைரம்’ கல்யாண மண்டபம் கிழக்குத் தாம்பரத்தில் இருக்கிறது. முகூர்த்த நேரம் காலை மணி ஆறிலிருந்து ஏழரைக்குள்.

பஸ் பிடித்து எழும்பூர் போய் எலக்ட்ரிக் ரயில் ஏறி தாம்பரத்தில் இறங்கி, கல்யாணமண்டபத்தை நான் விசாரித்துக் கொண்டு போய்ச் சேரும்போது அநேகமாக பிற்பகலில் மாப்பிள்ளை, பெண்ணும் நலங்கு உருட்டிக் கொண்டிருக்கும் வேளையாக ஆனாலும் ஆகிவிடலாம்! ஏன் ஐந்து மணிக்கு முதல் பஸ்ஸில் எழும்பூர் போய் ரயிலைப் பிடித்தால் முகூர்த்தம் முடியும் முன் போய் விடக்கூடாதோ? என்று என்னையே கேட்டுக் கொண்டேன்! அப்படி எல்லாம் நிதானம் தவறி எழுந்திருப்பது எனக்குப் பழக்கமில்லை என்று நானே பதிலும் சொல்லிக் கொண்டேன்!

ஹூம்! நண்பர் வீட்டுக் கல்யாணம் திண்டிவனத்தில் நடக்கலாம். ஒரு வாழ்த்துச் செய்தியோடு தற்காலிகமாகத் தப்பலாம். அல்லது தாம்பரத்திலேயே பத்து மணிக்குமேல் முகூர்த்தத்தை வைத்துக் கொண்டிருக்கலாம். என்றால் நிதானமாகப் போக முடியும்! இரண்டும் இல்லையே!

முதல் கட்டமாக கிழக்குத் தாம்பரத்தில் ‘வைரம்’ திருமண மண்டபம் எங்கிருக்கிறது என்று தெரிந்தவர்களிடையே விசாரிக்க ஆரம்பித்தேன்.

“ஆமாம்! அப்படி ஒரு கல்யாண மண்டபம் இருக்கிறது. நான் கூட ஒரு கல்யாணத்திற்குப் போய் விட்டு வந்திருக்கிறேன். ஆனால் எப்படிப் போனேன்? எப்படித் திரும்பினேன்? என்று இப்போது சரியாக ஞாபகமில்லை” என்று சாமர்த்தியமாக ஒரு நண்பர் பதில் சொல்லி நழுவிக் கொண்டார்.

மனிதர் ஏதாவது ஓசிக்காரில் தன்னைத் திணித்துக் கொண்டு போய் வந்திருக்கலாம். அதைச் சொல்ல தைரியமில்லை. மழுப்பி விட்டார்.

இன்னொரு நண்பர், சைதாப்பேட்டையிலிருந்து வேளச்சேரி வழியாகத் தாம்பரம் போகும் பஸ்ஸில் போகச் சொன்னார். தாம்பரம் ஸ்டேஷனுக்கு மூன்று ஸ்டாப்புகள் முன்னால் இறங்கி நேராக வடக்கில் இரண்டு பர்லாங் நடந்து போக வேண்டும் என்று அழுத்தமாகச் சொன்னார்.

நான் இதுவரை பல்லாவரம் வழியாகத் தாம்பரம் போகும் பேருந்து

கோமதி ஸ்வாமிநாதன்

அரேபியாவில்
கோழி நோய்க்கு புதிய மருந்து கண்டுபிடித்த தமிழ்நாட்டு வாலிபர்!



காரைக்கால் பகுதி கருக்கங்குடியைச் சேர்ந்த வாலிபர் அப்துல் சுக்கூர். இவருக்கு வயது 30 தான் ஆகிறது.

அரேபியாவில் பெரிய கோழிப் பண்ணை ஒன்றை நடத்தி வருகிருர்.

இவர் சொல்கிருர்: "மிக உஷ்ணப் பகுதியான அரேபியாவில் பெரிய கோழிப் பண்ணையை நடத்தி வருகிறேன்.

கோழிகளுக்கு ஏற்படும் நோயைக் குணப்படுத்த புதிய மருந்து கண்டு பிடித்து இருக்கிறேன்.

இந்த மருந்தை கோழிகளுக்கு கொடுத்து பரிசோதித்து வெற்றி கண்டு இருக்கிறேன்.

இதைக் கேள்வியுற்று ஜெர்மன், பிரான்ஸ், பெல்ஜியம் ஆகிய நாடுகள் எனக்கு அழைப்பு விடுத்து இருக்கிறது.

அங்குள்ள கோழிப்பண்ணைகளை விரிவுபடுத்தவும், கோழி நோய்களை தீர்க்கவும் உதவும்படி கேட்டு இருக்கிருர்கள். (அழைப்புக்களை கையில் எடுத்து காட்டினர்.)

இந்தியாவிலும் நமது மத்திய அரசு எனக்கு ஒத்துழைப்பு கொடுத்தால் அந்த மருந்துகளை இங்கே அறிமுகப்படுத்துவேன்" என்கிருர்.

பொறியியல் படித்த வாலிபர் சுக்கூர் தாம் கண்டுபிடித்த மருந்து கலவை விளக்கத்தை இன்னும் வெளியிடவில்லை. "இந்திய அரசு உதவிஞல் வெளியிடுவேன்" என்கிருர்.

—காரை ஏ.ஏ.சலீம்.

களாக பிரயாணம் செய்திருக்கிறேன். வேளச்சேரி வழியாகப் போனதில்லை. அதனுல் தாம்பரம் ஸ்டேஷனுக்கு முந்தியே இருக்கும் மூன்ருவது ஸ்டாப் எது என்று எனக்குத் தெரியவில்லை. அதற்காக நேராக, சைதாப்பேட்டையிலிருந்து தாம்பரம்வரை ஸ்டாப்புகளை எண்ணிக் கொண்டே கடைசிவரை போய், அங்கிருந்து திரும்பும் பஸ்ஸில் மூன்ருவது ஸ்டாப்பை எண்ணிக் கொண்டே கச்சிதமாக வந்து விடலாமே!

முட்டாள்தனமான யோசனை என்று என்னை நானே குட்டிக்கொண்டேன். அதற்காக பஸ்ஸில் பக்கத்திலிருப்பவர்களிடமெல்லாம் 'இன்னும் மூன்று ஸ்டாப்புகள் இருக்கும் போதே சொல்லுங்கள் சார்' என்று கேட்டுத் தொணதொணப்பதும் என் மனதுக்கு நாகரிகமாகப் படவில்லை.

நல்ல வேளை! அடுத்தாற்போல இரண்டு நண்பர்கள், ஒரு வழியையே ஊர்ஜிதம் செய்தார்கள். தாம்பரம் சானடோரியம் ரயில் நிலையத்தில் இறங்கி எதிர்ப்புறமாக இரண்டு, மூன்று திருப்பங்களில் திரும்பி ஒரு கிலோ மீட்டர் நடந்தால் போதுமாம். வழியில் தென்படும் உள்ளூர் ஆசாமிகளை விசாரித்துக் கொண்டே நடக்கலாம் என்றும் பிரயாணக் குறிப்புகளைக் கொடுத்தார்கள்.

இதை நன்கு மனத்தில் பதித்துக் கொண்டு அந்த திருமண மண்டபத்தை ரயில் மூலமாகவே எட்டிப் பிடிக்க திட்டம் போட்டேன்!

என் மனைவியை மதி மந்திரி என்று நான் ஒரு நாளும் ஏற்றுக் கொண்டதில்லை. என்னை ஒரு மதியூகி என்று அவளும் ஒப்புக் கொண்டதில்லை. இந்த பரஸ்பரமதிப்புகள், எந்த விலைவாசி ஏற்றத்தாலும், குடும்ப சூழ்நிலைகளாலும் கொஞ்சம் கூட பாதிக்கப்படாமல் நிரந்தரமாக ஒரே அளவில் நின்று விட்டன.

ஆனல் இந்த தாம்பரம் கல்யாணப் பிரயாணத்தைப் பொறுத்தவரை அவள் எனக்கு அளித்த இலவச யோசனையை நான் அப்படியே ஏற்றுக் கொண்டேன். "இந்த சின்ன விஷயத்திற்குப்போய் ஏன் இப்படி மண்டையைக் குடைந்து கொள்கிறீர்கள். ஒரு கல்யாணத்திலே சுவாரசியமான பகுதி ஜான வாச நேரம்! அபிப்பிராய பேதங்கள், கசமுச, கெஞ்சல்கள், குமுறல்கள், எல்லாம் அப்புறம்தான். அதனுலே



மாலை நேரத்தில் ஜானவாசத்தின் போது தலையை நீட்டி விட்டு வந்து விடுங்கள். ஜானவாச சாப்பாடும் நன்ருகவே இருக்கும்'' என்று அவள் சொன்னதை எந்தவித திருத்தமும் இல்லாமல் ஏற்றுக் கொண்டேன்.

திருமணத்திற்கு முதல் நாள் மாலை. சானடோரியம் ஸ்டேஷனில் நான் இறங்கிய போது மணி ஆறு. லெவல் கிராசைத் தாண்டி ரஸ்தாவிற்கு வந்தேன். நாதஸ்வர இசை ஒலிபெருக்கி மூலம் 'கும்'என்று காதுகளைத் தாக்கியது.

நிச்சயம் வைரம் கல்யாண மண்டபத்திலிருந்துஎன் நண்பர் வீட்டு மங்கள ஒலியாகத்தானிருக்க வேண்டும். இந்தப் பகுதியில் வேறு கல்யாண மண்டபம் இருப்பதாக நான் விசாரணை நடத்திய நேரத்தில் யாரும் சொல்ல வில்லையே! இனிமேல் யாரிடம் வழி விசாரிக்க வேண்டும்? அவசிய மில்லையே...! நாதஸ்வர ஒலிவரும் இடத்தையே இலக்காகக் கொண்டு நடந்தேன்.

ரொம்ப தூரம் நடந்த பிறகு தான் உண்மை புரிந்தது. ஒரு பிள்ளையார் கோவிலில் ஏதோ விழா! நாதஸ்வர ஒலி அங்கிருந்துதான் வந்து கொண்டிருந்தது. இப்போது வழி விசாரிப்பதைத் தவிர வேறு வழியில்லையே!

நான் அங்குவந்த பாதையிலேயே முக்கால் வாசித் தூரம் திரும்பிப் போய், அங்கு விசாரித்துக் கொண்டு வடக்குக்கு பதிலாக தென் கிழக்கே போக வேண்டும் என்று வானிலை அறிக்கையில் புயலின் மையத்தைச் சொல்வது போல சிலர்

சொன்னுர்கள். திரும்பி நடந்தேன். மணி ஆறே முக்கால். இருட்டு வேறு சாலைகளை விழுங்க ஆரம்பித்தது.

மீண்டும் இந்தத் திசைமாறுதல் தவறு நேர்ந்துவிடக்கூடாது என்ற பயத்தில் அகப்பட்ட நபர்களிடமெல்லாம் வழி கேட்டுக் கொண்டு ஒரு வழியாகக் கல்யாணமண்டபத்தைக் கண்டு பிடித்து நுழைந்தேன்.

நான் நுழைவதற்குப் பத்து நிமிடங்களுக்கு முன்னுல்தான் மின்சாரத் தடை ஏற்பட்டதாம்! இருட்டில் என் நண்பர் குரல் மாதிரி பல குரல்கள் ஒலித்தன. சென்னை நகர மின்சார சப்ளையை நம்பி, ஒரு பெட்ரோமாக்ஸ் லைட்டைக் கூட வைக்க ஏற்பாடு செய்யவில்லை. ஜானவாசத்திற்கான ஆறு விளக்குகளை நேராக ஒருகிலோ மீட்டர் தூரத்திலுள்ள கோவிலுக்கு வந்து சேர ஏற்பாடு செய்து விட்டார்கள் பெண் வீட்டார்கள். அந்த விளக்குகளில் ஒன்றையாவது இங்கு கொண்டு வரச்சொல்ல ஒரு ஆசாமி சைக்கிளில் கிளம்பினுர். ஒரு பெண்மணி குத்து விளக்கை ஏற்றி கல்யாண மண்டபத்தின் ஓரத்தில் வைத்தாள். இருட்டு அதிகமானது போல பிரமை.

சமையற்கட்டில் 'பிராப்ளம்' இல்லை. அடுப்பிலிருந்த விறகுகளை தீவட்டிகளாக உபயோகித்து செயல் பட்டுக்கொண்டிருந்தார்கள்.

அந்த இருட்டு வெள்ளத்தில் என் பக்கத்தில் என் நண்பர் அனந்துவின் குரல் கேட்ட மாதிரி இருந்தது. அனந்துதான் மணமகனின் தகப்பனுர். அந்த அனந்துவிற்காகத்தானே இவ்வளவு முயற்சி எடுத்துக் கொண்டு தாம்பரத்திற்கு வந்திருக்கிறேன். நான் வந்திருப்பதை அவர் தெரிந்து கொள்ள வேண்டாமா?

அனந்துவின் குரல் வந்த திசையில் இரண்டு எட்டு முன்னுல் போய் அந்த ஆப்பிரிக்க இருட்டில் "நாராயணசாமி வந்திருக்கேன்! கரண்ட் சப்ளை பின்னுல் வந்துண்டு இருக்கு" என்று என் நகைச்சுவையைப் பொங்க வைத்தேன்.

அது அனந்துவேயில்லை! வேறு யாரோ? நான் சொன்னதை அரை குறையாகக் காதில் போட்டுக் கொண்டு, "நாதஸ்வரக்காரரா? எங்கே ஐயா தொலைந்து போனீர்? கோவிலைச் சுற்றித் தேடிக் கொண்டிருக்கிறுர்கள். அங்கே தவில்காரரை அடிக்கச் சொல்லிட்டு தவிலைத்தேடிப்போய் போய் விட்டீரா?... இப்போ உமக்கு இங்கே வேலை இல்லை! ஜானவாசம் கிளம்பணும் ஐயா...!" என்று என் முகம் தெரியாமல் உலுப்ப ஆரம்பித்தார்.

அவர் முகமும் தெரியவில்லை. மெதுவாகப் பக்கத்து இருட்டில் நகர்ந்தேன். அவரும் தன் கடமையைக் கத்தி முடித்து விட்டதாக அப்பால் போனுர்.

குத்து விளக்கு ஒளியில் அனந்து கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் யார், பெண் வீட்டார் யார் என்று புரிந்து கொள்ள முடியவில்லை. மின்சாரத் தொடர்பும் வரவில்லை. கோவிலிலிருந்து

## இளையவர்

## இனியவர்

நாவல்—நாடகம் நடிப்பாற்றல்—
கவிதை இப்படி எல்லாவித
ஆற்றலும் ஒட்டு மொத்தமாய்—
ஒருவரிடத்தில் ஒட்டிக் கொண்டிருப்பது
என்பது அசாத்தியமான ஒன்று.

இதைவிட அந்த இதயத்தில் மனிதத்
தன்மை மங்காமல் ஈரமேகமாய்
இருப்பதைக் கண்டதும் வியப்பால்
மேகத்திற்கு மேலேயே போய்
விட்டேன்.

என் வியப்பிற்குக் காரணம்: கவிஞர்
ஆர். ஈ. சந்திரசேகரின்
சிந்தனையும் செயல்பாடுமே!

இந்த ஆண்டில் அடுத்த மாதம்
29-ந்தேதியன்று 50 ஏழைகளுக்கு
உணவளிக்கப் போகிறேன் என்கிருர்,
ஒரு தமிழ்த் தினசரி பத்திரிகை
நிருபராய்ப் பணியாற்றும் இவர்.

கடந்த ஆண்டு 1981-ஆகஸ்ட்
மாதம் 29-ந்தேதி சனிக்கிழமை
பேருந்தில் பயணம் செய்து
கொண்டிருந்த இவர், அதே
வண்டியில் பயணம் செய்த ஒருவர்
தவறி கீழே விழ அவரைக் காப்பாற்ற

காஸ்லைட் ஆசாமியையும் காணோம். கீச்சு மூச்சுக் குரல்கள்.

ஜானவாசம் ஆரம்பிக்கும் கோவிலுக்கு நாலைந்து பேர்களிடம் வழியை ஊர்ஜிதம் செய்து கொண்டு போய்ச் சேர்ந்தேன். தவில்காரரின் தனி ஆவர்த்தனம் என்னை வரவேற்றது. நிஜமாகவே நாதஸ்வரக்காரரைக் காணோம். 'இதோ வருகிறேன்' என்று சொல்லிப் போய் முக்கால் மணி நேரமாகி விட்டது என்று அங்கு பேசிக் கொண்டிருந்தார்கள்.

"அவர் இரண்டு கல்யாணங்களுக்கு ஒத்துக் கொண்டிருப்பார்.



இவர் முனைந்து செயல்பட, அவர் பிழைக்க—இவர் கால் ஒன்று பின் சக்கரத்தின் விளிம்பில் மோதப்பட்டு மயக்கமடைந்தார்.

இவரின் இதயம், இந்த விபத்தை இதயம் முழுதும் குறித்து வைத்துக் கொண்டதால் ஒவ்வொரு சனிக்கிழமையும் (இவர் அடிபட்ட நாள்) ஒரு கால் இழந்த பிச்சைக்காரரை ஓட்டலுக்கு அழைத்துச் சென்று உணவு படைக்கிறார்—மூன்றுமாத சிகிச்சைக்குப்பின் உடல் நலம் பெற்ற இவர்.

சமூகத்தின் மீது சரியான பார்வை உள்ள இவர் படைத்த நாவல்கள்: மௌனம் கலைகிறது, குற்றங்கள் மன்னிக்கப் படுவதில்லை, ஏரிக்கரையில் சில ஊமைக்குயில்கள் போன்றவைகள் என்பதோடு 'சிவப்பு ரோஜா' என்ற கவிதை நூலையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

பார்வைகள் வானத்தில் இருப்பதை விட வாழத் துடிக்கும் மனிதர்களிடம் இருப்பது மகத்தான ஒன்றுதானே!

—பாபநாசம் குறள்பித்தன்

ஆலந்தூர் வரத்திலோ, குரோம்பேட்டையிலோ, வாசித்து விட்டு வந்து விடுவார். அங்கே தவில் ஒத்து வேறு செட்! அவர் இங்கே புறப்பட்ட பிறகு இங்கே நடக்கிற மாதிரி அங்கே தவில் தனி ஆவர்த்தனம் நடக்கும்!" என்று ஒரு அனுபவஸ்தர் யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்தார்.

மாப்பிள்ளை புது சூட்டில் தோழர்களுடன் வம்படித்துக் கொண்டிருந்தான். புதுப்புடவைப் பெண்மணிகள், வயதிற்கேற்ற குழுக்களாய் பிரிந்து நின்று விமர்சனம் செய்து கொண்டிருந்தார்கள்.

அனந்துவைக் கண்டு பிடித்து விட்டேன். ஆனால் அன்யோன்யமாக அவருடன் இரண்டு வார்த்தை பேசும் நிலையில் அவர் இல்லை. புராணகால துர்வாசராக மாறி அவர் யாருடனோ கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தார்.

"நாதஸ்வரக்காரர் வந்த பிறகு தான் இங்கிருந்து கிளம்ப முடியும்! என் பிள்ளை கல்யாணம் என்ன அம்மன் கோவில் கொடையா? தாரை தம்பட்டத்துடன் ஜானவாசம் நடத்த...? இரவு இரண்டு மணிதான் ஆகட்டுமே! உங்களுக்கு பசி எடுத்தால் போய்ச் சாப்பிட்டு விட்டு வாங்கள்!" அனந்து அழுத்தம் திருத்தமாகப் பேசினார்.

எனக்கு அனந்துவைத் தவிர அவர் வீட்டு நபர்களை அதிகமாகத் தெரியாது. ஆகையால் ஜானவாசத்திற்கே ஆஜர் கொடுத்த அறிக்கையை யாரிடமும் சமர்ப்பிக்க வழியில்லை. பெண் வீட்டாரிடமும் தெரிந்த முகங்களையே காணோம்.

திரும்பி கல்யாண மண்டபத்திற்கே வந்தேன். மின்சார சப்ளை இன்னும் வந்து சேர்ந்தபாடில்லை. நல்ல வேளையாகப் பந்தலில் ஒரு காஸ் லைட் வந்து சேர்ந்து அவ்வப்போது புகையைக் கக்கித் தன் பிரதாபத்தைப் பறைசாற்றிக் கொண்டிருந்தது. சமையற் கட்டிலிருந்து குங்குமப்பூ பச்சைக் கற்பூர மணம் 'கும்'என்று வீசியது. நல்ல திறமையான சமையல் கோஷ்டியாக இருக்க வேண்டும்!

ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். அங்கங்கே குழந்தைகள்தான் ஓடிக் கொண்டிருந்தன.

முதலில் கல்யாண மண்டபத்திற்கு மின்சாரம் வரவேண்டும். அப்புறம்

ஜானவாசக் கோவிலுக்கு நாதஸ்வரக் காரர் வரவேண்டும். அப்புறமல்லவா சாப்பாட்டைப் பற்றி யோசிக்க வேண்டும்!

அலுப்பில் சற்று கண்ணயர்ந்து விட்டேன் போலிருக்கிறது! திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன்! காஸ்லைட் ஒளியில் கடிகாரம் ஒன்பது மணியைக் காட்டியது. குழந்தைகள் ஓட்டம் கூடக் குறைந்து விட்டிருந்தது. மற்றபடி நான் வந்து உட்கார்ந்த சூழ்நிலைதான்!

எழுந்து வெளியே வந்தேன். சுற்று வட்டாரத்தில் எங்கும் நாதஸ்வர ஒலி கேட்கவில்லை. மனத்தை திடப் படுத்திக் கொண்டு வந்த திருப்பங்களை யெல்லாம் இருட்டில் லெப்ட் ரைட் என்று கணக்கிட்டுக் கொண்டு ஒழுங் காக சானடோரியம் ரயில் நிலையத்திற்கு வந்து விட்டேன்.

எழும்பூர் வந்து வீடிருக்கும் தெருமுனைக்கு பஸ்ஸில் வந்து இறங்கிய போது மணி பத்தே கால். ஒரு பன்னை வாங்கித் தின்று ஒரு கப் பாலைக் குடித் தேன். ஜானவாச சாப்பாட்டை நினைத் துக் கொண்டேன்.

படுக்கையை உதறிப் போடும் போது "சாப்பாடு பிரமாதமோ?" என்று என் மனைவி கேட்டு வைத்தாள். ஒரு கணம் ஹரிச்சந்திர உணர்வு மனத்தில் ஓங்கினாலும் அதை அமுக்கினேன்.

"நிஜமாகவே பிரமாதம்! ஒரு பாயசம் வைத்திருந்தான் பாரு! வொண்டர்புல்...! கோஸ் பொறியல், கத்திரிக்காய் ரோஸ்ட், அவியல், ஜாங்கிரி எல்லாமே உயர் தரம்!"

நான் சாப்பிட விரும்பியதை ஜாபிதா போட்டுச் சொல்லக் கூடாதா என்ன?

"கல்யாணப் பெண் எப்படி யிருக்கிறாள்?" அது அடுத்து வந்த கேள்வி.

அட ராமச்சந்திரா! நான்தான் பார்க்கவேயில்லையே! அட, ஹரிச்சந்திரா! கொஞ்சம் பதுங்கு! "பரவாயில்லை. புதுநிறம்" என்று சமாளித்தேன்! இதை விடப் பொதுப்படையாக எப்படிப் பார்க்காத பெண்ணை வருணிப்பது...?

இரவு முழுதும் எனக்குத் தூக்கமே வரவில்லை. கல்யாண மண்ட பத்திற்கு கரண்ட் சப்ளை வந்ததா? நாதஸ்வரக்காரர் அகப்பட்டு ஜனவாச ஊர்வலம் வந்து சேர்ந்ததா? அனந்து வின் கோபம் தணிந்ததா? பெண் வீட்டார்கூட அப்படிக் கவலைப் பட்டிருக்க மாட்டார்கள்.

காலையில் முதல் வேலையாக என் மனைவிக்குத் தெரியாமல் அனந்து விற்கு ஒரு வாழ்த்துத் தந்தியை அனுப்பி வைத்தேன்!

O



"நானும்... என் மனைவியும் தகராறு இல்லாமல் எப்படி குடும்பம் நடத்து கிறோம் தெரியுமா?"

"எப்படிடா?"

"சின்ன விஷயங்களில் அவள் முடிவும், பெரிய விஷயங்களில் என் முடிவும் ஏற்றுக் கொள்வதாக ஒப்பந்தம் செய்துள்ளோம்!"

"சின்ன விஷயம் எது? பெரிய விஷயம் எது?"

"குழந்தைகளை எந்தப் பள்ளியில் சேர்ப்பது, வீடு வாங்கலாமா, வேண் டாமா? புடவை, துணிமணி வாங்குவது, சம்பள பணத்தை எப்படிச் செலவழிப் பது போன்ற சின்ன விஷயங்களில் அவள் முடிவு செய்வாள்.

ஈரான் ஈராக் போரிடுவது சரியா, தப்பா? பாகிஸ்தான் ஆயுதங்களை வாங்குவது சரியா, தப்பா? இங்கிலாந்து போரிடுவது சரியா, தப்பா? போன்ற பெரிய விஷயங்களில் நான் முடிவெடுப் பேன்!"

—எஸ். என். தங்கராஜன்

முடியாததால், மிகாபர் குடும்பமே சிறைக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

இதற்கு மேல் லண்டன் சூழ்நிலையையும், பயங்கர தனிமையையும் சகித்துக் கொள்ள தன்னால் இயலாது போகவே டேவிட் ஒரு முடிவுக்கு வருகிறான். டோவர் என்னும் ஊரிலுள்ள அவனுடைய அத்தைப் பாட்டி பெட்ஸி டிராட்வுட்டின் ஞாபகம் அவனுக்கு வருகிறது. ஆனால் அவரைப்பற்றி அவனுடைய தாயார் உயிருடன் இருந்த போது அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறான்.

யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், டேவிட் தனது அத்தையை தேடி லண்டனைவிட்டு ஓடிப்போய் விடுகிறான். பல நாட்கள் கால்நடையாக அலைந்து, அல்லல்பட்டு, படாதபாடு பட்டு, எப்படியோ, துளி உயிரே உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் நிலையில் தனது அத்தையின் இருப்பிடத்தைக் கண்டுபிடித்து விடுகிறான்.

அத்தை அவன் மீது கருணை காட்டி, அவனை சுவீகாரப் பிள்ளையாக ஏற்றுக் கொள்கிறார். டோவர் மிகச் சிறிய ஊர். அங்கே நல்ல பள்ளிக்கூடம் இல்லாததால், அத்தை அவனை கேண்டர்பரியில் பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடுகிறார். அங்கே அத்தையின் வக்கீல் திரு. விக்ஃபீல்ட் என்பவரும் அவருடைய மகள் ஆக்னஸ் ஆகியோர் உள்ளனர். அவர்கள் இல்லத்தில் டேவிட் தங்குகிறான். ஆக்னஸின் சிரித்த முகமும் நல்ல பண்பும் அவனுக்கு புத்துயிர் ஊட்டுகின்றன. அவர்களுடன் வக்கீல் விக்ஃபீல்டின் குமாஸ்தாவான யூரையா ஹீப் என்பவனும் இருக்கிறான். அவனைக் கண்டாலே டேவிட்டுக்கு வெறுப்பும் சந்தேகமும் ஏற்படுகின்றன.

கல்லூரி படிப்பில் சிறப்புடன் தேர்வு பெற்ற பின், டேவிட் கல்லூரியில் ஒழுங்கு முதலியவைகளை கவனிக்கும் அதிகாரியாக பணியாற்ற முடிவு செய்கிறான். திரு. ஸ்பென்லோ என்பவரிடம் வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப்படுகிறான். திரு. ஸ்பென்லோவுக்கு டோரா என்னும் அழகிய மகள் இருக்கிறாள். டேவிட்டுக்கும் அவளுக்கும் இடையே உடனே காதல் மலர்கிறது.

(அடுத்த இதழில் தொடரும்)

ஹசீனு மரியம்—

பொருத்தமாகத்தான் பெயர் வைத்திருக்கிருர்கள்!

ஊழியம் புரியும் அழகி என்று அர்த்தம். அழகிதான். சில வீடுகளில் ஊழியம் பார்த்துக் கொண்டுதான் இருக்கிருள்.

இந்த நோன்பு காலத்தில் அவளை சக்கையாகப் பிழிந்து எடுத்து விடுகிருர்கள்.

வேலை... வேலை... ஹசீனு மரியம் சளைப்பதாக இல்லை.

அலுப்பு, சலிப்பு, களைப்பு எதுவுமே இருக்காதா? நோன்பு பிடித்துக் கொண்டு அவளால் எப்படி உழைக்க முடிகிறது?

பிரசவத்திற்காகத் தாய் வீட்டுக்கு வந்திருக்கும் சல்மா, அம்மா விடம் இதைப் பற்றி கேட்கிருள்.

"அது அதை அவுங்க அவுங்களாலேதாம்மா செய்ய முடியும். அவ உழைக்கவும் ஊதியம் பாக்கவும் பிறந்தவ. உன்னைப் போல பெரிய இடத்திலே வாழ்க்கைப்பட்டு அழகழகான பிள்ளைகளைப் பெத்துக்கிற அதிர்ஷ்டம் அவளுக்கு இல்லே. அல்லா இருக்கானே அவன் குடுக்கிறவங்களுக்குத்தான் குடுப்பான். சரி... இப்ப அந்தக் கவலை உனக்கு எதுக்கு? நீ பிள்ளைத்தாய்ச்சிப் பெண்... வேலைக்காரப் பெண்ணைப் பத்தி எதுக்காக விசாரம்?"

சிந்திக்காமல் இருக்க முடியுமா? சல்மாவுக்கும் ஹசீனு மரியத்துக்கும் ஒரே வயது. செல்வச் செழிப்பில் வளர்ந்து பெரிய இடத்தில் வாழ்க்கைப்பட்டு, இரண்டாவது பிரசவத்திற்காக சல்மா இப்பொழுது தாய் வீட்டுக்கு வந்திருக்கிருள். ஹசீனு மரியம் எப்படி? மாநிறத்தில் கண்ணை நிறைக்கும் அழகு இருக்கிறது. அவளுக்கும் ஒரு கணவன் இருக்கிருன்... கழுத்தில் கருமணி மட்டுமே அதற்கு அடையாளமாக இருக்கிறது. எப்பொழுதாவது ஒரு நாள் அவன் தலை காட்டுகிருன். வந்த வேகத்தில் திரும்பிப் போய் விடுகிருன்...

ஹசீனுவின் பேரில் சல்மாவுக்கு அனுதாபம்.

"சல்மா... அவ வந்ததும் சூடா உனக்கு வடை போட்டுத் தரச் சொல்றேன். பத்தே நிமிசத்திலே மாவை ஆட்டி, மணக்க மணக்க சூட்டோட வடை தட்டிக் குடுத்திடுவா, ஹசீனு மரியம்... கொஞ்ச நேரம் பொறுத்துக்கம்மா..." என்ருள் அம்மா.



"அம்மா, நான் நோன்பா

வச்சிருக்கேன்... பசியைப் பொறுத்துக்கிட்டிருக்க?" என்று சிரித்தபடி சல்மா கேட்டாள்.

"பிள்ளைத்தாய்ச்சிக்காரி... நினைச்சதை சாப்பிடணும்... வடை உனக்கு பிடிக்குமேன்னுதான் ஊறப்போட்டிருக்கேன்..."



போது ஹசீனாவின் தலை தெரிந்தது.

யார் வீட்டிலோ வேலையை முடித்துக் கொண்டு வந்திருக்கிறாள் என்பது முகத்தைப் பார்த்ததும் தெரிந்தது. முகத்திலும் கழுத்திலும் வேர்வை மறையவில்லை. இங்கே அவளுக்கு ஆறு மணி வரை வேலை இருக்கும். ஓய்வெடுத்துக் கொள் என்று சொல்லவா முடியும்?

ஹசீனாவைப் பார்க்க சங்கடமாக இருந்தது சல்மாவுக்கு.

துப்பட்டியைக் கழற்றி வைத்துவிட்டு ஆட்டுக்கல் அருகே போனாள் ஹசீனா. நல்ல உயரம். சீரான உடல்வாகு... தன்னைவிட ஹசீனா எந்த விதத்திலும் குறைந்தவள் அல்ல... ஆனால் நசீபுதான் நன்றாக இல்லை. கிட்டத்தட்ட கைவிடப்பட்டவள்தான் அவள்.

சல்மா எழுந்து வந்தாள்.

"ஹசீனா, நான் மாவைத் தள்ளி விடட்டுமா?"

ஹசீனா சிரித்தாள்.

"இது சித்த நேர வேலை... வடை மாவை இன்னொருத்தங்க தள்ளி விட வேணும்...நானே பாத்துக்கிறேன்."

மனம் கேளாமல் நின்றாள்.

"பிள்ளைத்தாய்ச்சிப் பெண்ணுங்க ஓய்வா இருக்கணும்... வேலை பாக்கக் கூடாது. நீ அறைக்குப் போ சல்மா... வடை போட்டு அம்மாகிட்டே குடுத்தனுப்பறேன்..."

சல்மா அறைக்கு வந்தாள். சமாதானப்படாமல் மனம் தவிக்கிறது. நேற்று மாலை ஹசீனா மரியம் வேலையை முடித்துவிட்டு வீட்டுக்குப் புறப்படும் போது, அருகே அழைத்துப் பேசினாள், சல்மா.

"ஹசீனா, நீ செய்து குடுத்த சேமியா பிரியாணி ரொம்ப நல்லா இருந்தது!" என்றாள்.

"ஏதோ எனக்குத் தெரிஞ்சது... பிடிச்சிருந்தா சந்தோஷந்தான்!"

"உன் புருஷன் பெரிய பண்டாரி இல்லே... அதனாலேதான் நீயும் நல்லா சமைக்கிறே போல இருக்கு!" என்றாள் சல்மா.

ஹசீனா மரியம் பதில் பேசாமல் நின்றாள். அவள் கணவன் பக்கீர் முகம்மது, கல்யாண விசேடங்களில்

வெளியூர்களில்...

"அடிக்கடி உன் புருஷன் வர்ற தில்லேன்னு சொல்றுங்களே... ஏன்?"

ஹசீனுவின் முகம் கறுத்து விட்டது.

"பல மாதிரி பேசிக்கிறுங்க... எது நிஜம், எது பொய் அப்புடீங்கிறது உன்னைக் கேட்டா தெரியுமேன்னு தான்...!"

சல்மா தயங்கியபடி கேட்டபோது அம்மா வந்தாள்.

"இதைப்போய் அவகிட்டே கேக்கிறியே... புருஷனைப் பத்தி ஹசீனு சொல்லமாட்டா. அவன் ஒரு விதம். மூணு வருஷமாச்சு கலியாணம் நடந்து. அவனுலே இவ சுகப்படலே... அது பெரிய கதை!" என்றுள் அம்மா.

"அம்மா சொல்றது நிஜந்தானு ஹசீனு?"

"இதுக்கும் ஹசீனு பதில் சொல்ல மாட்டா. அவ வாயாலே எப்புடிச் சொல்ல முடியும்? அடிச்சாலும் உதைச்சாலும் அந்த முரடன் பேர்ல தான் இவளுக்கு பக்தி. நினைச்சப்ப வருவான். இருநூறு முந்நூறு குடுன்னு கேப்பான். இவ சேமிச்சு வைக்கிறது அவனுக்காகத்தான். அப்படியே இருக்கிறதைத் தூக்கிக் குடுத்துடுவா... சந்தடி இல்லாம பறந்து போயிடுவான்... இவளாலே அவனைத் திருத்த முடியிலே. அவனும் திருந்துறதா இல்லே..."



திருடனின் மகன்

என்னப்பா சும்மா சும்மா பிள்ளைகளேயே பிடிக்கிறியே. இரண்டு வாத்தியாரைப் புடியேன்...

—நெ. பாரதிபித்தன்

தலை தூக்காமல் நின்று ஹசீனு மரியம்.

"ஹசீனுவை அந்த ஆளுக்கு பிடிக்கலையா?"

சல்மா சன்னமாகக் கேள்வியை உருட்டி விட்டாள்.

"அவனுக்கு வேற ஒருத்தியைப் பிடிச்சிருக்கு... அதுதான் இவ்வளவுக்கும் காரணம்..."

"புதுக்கதையா இருக்கே?"

"நெருப்பில்லாமெ புகையாது இல்லியா? பக்கீர் முகம்மதை வேலைக்குச் சேத்துக்கிட்ட பண்டாரிக்கு ஒரு மகள்... அவ பேர்ல இவனுக்கு மயக்கம்... அந்த சமையல்கார்ர் மண்டையைப் போட்டதும் அவரோட பெண்டாட்டியையும் மகளேயும் பராமரிக்கிற பொறுப்பை இவன் ஏத்துக்கிட்டான். அந்தப் பெண்ணை இவனுக்கே கட்டி வைக்க நினைச்சிருந்தாராம் பண்டாரி..."

"ஹசீனு, இப்பாவாவது சொல்லு... அம்மா சொல்றது நிஜந்தானு?"

ஒப்புக்கொள்ளும் விதத்தில் தலையை ஆட்டினுள் ஹசீனு மரியம்.

இவ்வளவு நடந்திருந்தும் அவள் பொறுமையாக இருக்கிறுளே, எப்படி முடிகிறது? சஞ்சலமே கிடையாதா நெஞ்சத்தில்?

சல்மாவுக்கு வியப்பாக இருந்தது.

ஹசீனுவை அனுப்பிவிட்டு பெருமூச்சு விட்டாள்.

"பாவமா இருக்கும்மா ஹசீனுவை பாக்கறதுக்கு..."

"நடக்குறதுதான் நடக்கும். நானும் நீயும் கைசேதப்பட்டு என்ன ஆகப்போவுது... அவ தலையெழுத்து அப்புடி..." என்றுள் அம்மா.

"நான் அவளுக்கு ஏதாவது செய்யணும் போல இருக்கு..." அம்மா சிரித்தாள். "என்ன செய்யப் போறே?"

"இந்தப் பெருநாளுக்காக ஹசீனுவுக்கு நூறு இருநூறு பணம் குடுக்கலாமான்னு நினைக்கிறேன்..."

"நல்லா சொன்னியே... பணம்கிற பேச்சை மட்டும் எடுக்கப்புடாது. நீ இவ கையிலே குடுப்பே... அதை

ருஷன் கையிலே அவ தூக்கிக் குடுத்டுவா...வேணுமின்னு ஏதாச்சும் துணி ணி வாங்கிக்குடு...''

சல்மா யோசித்தாள் நேற்றும் இன்றும்...

''சல்மா, சூடா வடை எடுத்திட்டு வந்திருக்கேன். சாப்புடும்மா?''

அம்மா அவள் அருகில் தட்டை வைத்தாள். வடை ஆவியைப் போக்கிக் கொண்டிருந்தது.

''கறி ஆணமும், சட்னியும் இருக்கு... சாப்புடு...''

அம்மா நகர்ந்த பிறகும் சல்மாவுக்கு அதைத்தின்னத் தோன்றவில்லை.

நோன்பாளிப் பெண் அடுப்படி அனலில் உட்கார்ந்து, வாயையும் வயிற்றையும் கட்டிக் கொண்டு வடை தட்டி அனுப்புகிருள். நோன்பு பிடித்த அனுபவமே இல்லாத சல்மா, வகையாக அதைச் சாப்பிடலாமா?

ஹசீனு மரியம் மட்டும் ஏன் இந்தப் பாடுபட வேண்டும்... உழைக்கும் உரிமை ஏழைப் பெண்களுக்கு மட்டுந்தானு?

அம்மா எட்டிப் பார்த்தாள்.

''இன்னும் சாப்பிடலையாம்மா..?''

''வயிறு சரியில்லேம்மா... குமட்டலா இருக்கு...''

''நினைச்சேன்... யாரோ கண்ணை வச்சிருக்காங்க... திருஷ்டி சுத்திப் போடணும் உனக்கு.''

மறுநாள்—

ஹசீனு மரியம் வரக்காணோம். மூன்று மணிக்கு வர வேண்டிய பெண்.

சல்மாவின் அம்மா புருவத்தைத் தூக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

''என்ன ஆச்சு இவளுக்கு? இன்னிக்கு அவளை சமோசா போட்டுத் தரச் சொல்லணும்னு இருக்கேன்...''

''எனக்கு எதுவும் வேணும்மா... சாப்புடணும் போல ஆசை இல்லே...''

''ஹசீனுவை அழைச்சிட்டு வரச் சொல்லி ஆளை அனுப்பட்டுமா?''

''நோன்பாளிப் பெண்— ஒரு நாள் வராமெ போனு என்ன? ஆள் அனுப்ப வேணும்...'' என்ருள் சல்மா.





எதற்கும் அவசியம் இல்லாதபடி ஹசீனு சற்றைக்கெல்லாம் வந்து விட்டாள்.

''இன்னிக்கு என்ன ஆச்சு, ஹசீனு?''

அம்மா கேட்டாள்.

''மத்தியானம் திடீர்னு... அவரு...?''

''புருஷன் வந்திருக்கானு?...''

தரையைப் பார்த்தபடி ஆமாம் என்கிற மாதிரி தலையை அசைத்தாள்.

''நினைச்சேன்... பேங்கிலே இருப்பு எவ்வளவு சேர்ந்திருக்குன்னு பாத்து, இருக்கிறதைச் சுருட்டிட்டுப் போக வந்திருக்கான், இல்லே?'' சல்மாவிடம் கண்ணைக்காட்டியபடி ஹசீனுவைக் கேட்டாள் அம்மா. அம்மாவின் பேச்சைக் கேட்கவும், ஹசீனுவை நிமிர்ந்து பார்க்கவும் சங்கடமாக இருந்தது, சல்மாவுக்கு.

ஹசீனுவுக்குச் சோதனை. எப்படிச் சமாளிக்கப் போகிருளோ?

''புருஷன் வந்திருக்கான்... நேரத்திலே வீட்டுக்குப் போகணுமா?'' என்று அம்மா கேட்டாள்.

''ஆமாம்மா...ஹசீனு வீட்டுக்குப் போகட்டும்!''—சல்மா குறுக்கிட்டாள்.

''அப்படி ஒண்ணும் இல்லே... எல்லா வேலையையும் முடிச்சிட்டுப் போறேன்!'' என்ருள் ஹசீனு, துப்பட்டி

"ஒவ்வொரு பெண்ணுங்க எவ்வளவோ துணிச்சலா புருஷனைத் தட்டிக் கேக்கலையா? தப்பு செய்யிற புருஷனை கண்டிக்கிற கடமை பெண்களுக்கு இருக்கு...ஹசீனாவுக்கு மட்டும் அந்தச் சுரணையே கெடையாது... இருக்கறதையெல்லாம் அவன் கையிலே தூக்கிக் குடுத்திட்டு இவ நிக்கிறதைப் பாக்க எனக்குச் சகிக்கிறதில்லே... என்னமோ இந்த முறையாச்சும் உஷாரா நடந்துக்கிட்டா நல்லது!" என்றாள் அம்மா.

சல்மாவும் அதையே திருப்பிச் சொன்னாள்.

ஹசீனா மரியம், மவுனமாக, வேலைகளில் மூழ்கிவிட்டாள்.

இரவு.

சாப்பாட்டுக்குப் பிறகு பக்கீர் முகம்மது அறையில் உட்கார்ந்திருந்தான்.

பல மாதங்களுக்குப் பிறகு, ஹசீனா மரியத்தைப் பார்க்க வந்திருக்கிறான்.

பாயில் அமர்ந்திருந்தாலும் மனம் அந்த இடத்தில் பதிந்திருக்கவில்லை... சிந்தனை...ஹசீனா மரியத்திடம் எவ்வளவு இருப்பு இருக்கும் என்ற சிந்தனையோ?

அவள் கூடத்தில் இரவுத் தொழுகையை முடித்துவிட்டு, கை உயர்த்தி 'துவா' இறைஞ்சிக் கொண்டிருப்பது, அறையிலிருந்து பார்த்தால் தெரிகிறது.

'உள்ளே வரட்டும், பார்த்துக் கொள்கிறேன்' என்ற நினைப்போ? பக்கீர் முகம்மது பார்வையை விலக்கிக் கொண்டான்...

சற்றைக்கெல்லாம் ஹசீனா உள்ளே வந்தாள். அடக்கமாக நின்றாள்.

"உக்காரு ஹசீனா...!"

அவள் அமர்ந்தாள், பாயின் ஒரு முனையில்.

"ரொம்ப நேரம் தொழுதுக்கிட்டிருந்த மாதிரி தெரிஞ்சதே...!"

"எப்பவும் போல...!"

"என்ன 'துவா' கேட்டே?"

"எப்பவும் போல!"

"நான் இன்னிக்கு வருவேன்னு எதிர்பார்த்தியா?"

"பெருநாளுக்குள்ளே வருவீங்கன்னு..."

"சேமிப்பு நிறைய இருக்கா...?"

"எப்பவும் போல...!"

"பெருநாள் வரைக்கும் நான் இருக்கணும்னு நினைக்கிறியா?"

"உங்க இஷ்டம்... இருந்தா சந்தோஷம்."

மெல்லிய வெளிச்சத்தில் அவளை பக்கீர் முகம்மது நோட்டமிட்டான்.

"ஒரு விஷயம் உன்கிட்டே சொல்ல வேண்டியிருக்கு!"

"சொல்லுங்க...!"

"பண்டாரி பெஞ்சாதியையும் மகளையும் கவனிக்க வேண்டிய பொறுப்பு என் மேலே விழுந்திட்டது..."

"தெரியும்..."

"அந்தப் பெண்ணை எனக்கே கட்டி வைக்கிறதா ஏற்பாடு..."

"கேள்விப்பட்டேன்."

"அந்தப் பெண்ணை நான் விரும்பினேன். அவளும் என்னை..."

ஹசீனா மரியம், கணவனை வெறித்துப் பார்த்தாள்.

"சம்பாதிச்சதையெல்லாம் அவங்களுக்கே குடுத்தேன். அப்பப்ப கொஞ்ச நாளா வருமானம் இல்லே.. அதனாலே.."

"எப்பவும் போல... நான் சேமிச்சி வச்சிருக்கிறதை..."

"குடுத்திடுறேன்னு சொல்றியா?"

"ஆமாம் ரத்த வேர்வை சிந்தி நான் உழைச்சி சேமிக்கிறதெல்லாம் உங்களுக்காகத்தான்... ஏன்னா, இன்னார் மணவின்னு சொல்லிக்கிற அந்தஸ்தை நீங்கதானே எனக்குக் குடுத்திருக்கிறீங்க..."

"ஹசீனா,நான் நல்லா யோசிச்சுப் பாத்தேன்..."

"உங்க இஷ்டத்துக்கு நான் குறுக்கே நிக்கமாட்டேன். அஞ்சு நேரம் தொழுது ஆண்டவன்கிட்டே நான் கையேந்துறதும் உங்க நன்மைக்காகத்தான்... கொஞ்சம் 'இருங்க... இது நோன்பு மாசம் இல்லையா, அதனாலே அவங்க அவங்களும் பணமும், துணிமணியும் தந்திருக்காங்க... புடவைகூட

ருக்கு... அந்தப் பொண்ணுக்கும் காண்டுட்டுப் போய் குடுங்க...''

ஹசீனா மரியம் எழுந்தாள். அவள் கையைப் பிடித்து தன் பக்கம் இழுத்தான். உட்காரச் சொன்னான்.

''முதல்லே இதைப்பாரு... டவை நல்லா இருக்கா?''

''என்னைக் கேட்டா...? அந்தப் பெண்ணைக் கேக்கணும்...''

''எப்பவும் போல இல்லே ஹசீனா...! என்னை நீ தப்பா புரிஞ்சுக் காதே. நான் சொல்றதைக் கேப்பியா...'',

இவள் இணக்க பாவனை காட்டினாள்.

''ஹசீனா, நிழலோட அருமை வெய்யில்லேதான் தெரியும், இல்லையா? உன்னை இவ்வளவு உதாசீனப் படுத்தியும் என்னை நீ வெறுக்கலே. ஆனா, பண்டாரி பெஞ்சாதியும் மகளும் என்ன செய்தாங்க தெரியுமா?

என்னாலே வருமானம் அவங்களுக்குக் குறைஞ்சி போனதும் கவனிப்பு குறைஞ்சிட்டது. நிறைய சம்பாதிச்சுப் போடாதவனுக்கு சாப்பாடு என்ன, சம்சாரம் என்னன்னு நினைச்சி என்னை ஒதுக்கித் தள்ளிட்டாங்க. அந்தப் பொண்ணுக்கு வேற இடத்திலே மாப்பிள்ளை பாக்கறாங்க ... அவளும் என்னை உதாசீனப் படுத்திட்டா...''

ஹசீனா மரியம் தலைநிமிர்ந்தாள்.

''தொழுகை வணக்கம் இல்லாத தோசிப்பயலைக்கூட ஆண்டவன் கை விடறதில்லே... சரியான நேரத்திலே என்னை திசை திருப்பி விட்டிருக்கான். ஹசீனா, உன் உழைப்பு உனக்குப் பயன்படலே...என் உழைப்பும் இது வரைக்கும் எனக்கு உதவாமெ போயிட்டது...இன்னிலேருந்து உன்னை உக்கார வச்சி ரத்த வேர்வை சிந்தி உனக்காக உழைச்சுப் போடுவேன்...'' என்றான் பக்கீர் முகம்மது.

ஹசீனா மரியம் பெருக்கிய மகிழ்ச்சிக் கண்ணீர் அவன் மார்பைச் சுட்டது.

O

## கிசுகிசுப்பட்ட உறைகள்

### பாலகுமாரன் குழப்புகிறார்!

என்றென்றும் பாலகுமாரன் அன்புடன் குழப்புகிறார். 2-ம் அத்தியாயத்தில் எழும்பூரை அடைந்த சபீதா, பழைய நினைவுகளில் சென்று மீண்டும் வந்து மாம்பலத்தில் 14-ம் அத்தியாயத்தில் இறங்குவதாக எழுதியுள்ளதைக் கவனிக்கவும்.

—சுங்கை. முருகன், சென்னை-19.

### ஏன் இல்லை பளபளப்பு?

வாங்கினவுடன் கையில் தங்காமல் வழுக்கிக் கொண்டு போகும் 'தாயின்' வழுவழுப்பான அட்டை, சென்ற வாரம் பளபளப்பே இல்லாமல் வறண்டு போய் இருந்ததே! என்ன காரணம்?

—சிவக்குமார், தஞ்சாவூர்.

### ஹைதர் காலத்து விஷயங்களை ஏனய்யா போடுகிறீர்?

நீங்கள் காதலரா காமுகரா என்ற ஹைதர் காலத்து விஷயங்களை எல்லாம் இப்பொழுது போட்டு எங்கள் பிராணனை ஏன் வாங்குகிறீர்கள்? அநியாயமாக இரண்டு பக்கங்கள் போய் விட்டதே.

—எல். ஆர். விஜயகுமார்,
சென்னை-18.

ஏஞ்சாமி! எப்பவும் வழவழப்பா, கையிலே ஒட்டிக்கிற மாதிரி அட்டை போட்டு வருவியே! இந்த வாரம் சாதாவா போட்டு ஏமாத்திபுட்டியே சாமி!

—திருமதி. நாராயணராவ்,
சென்னை-39.

11-7-82 நாளிட்ட 'தாய்' இதழில் வாசமிகு தமிழில் 'ராசமணி' பருவத்திலே பயிர் செய்யும் பாங்கினை எழுத்து உருவத்திலே வடித்திருக்கும் பாணி மெத்தவும் இனித்தது. ''பணக்கார மருமகள் காபி போட்டுத் தரச் சொல்வாள்; எளிய மருமகள் காபி போட்டுத் தருவாள்'' என்னும் வரிகள் 'தாய்' வழங்கும் புதிய திருமணச் சூத்திரம் அல்லது 'ஃபார்முலா' எனில் மிகையன்று.

—புலவர் நெல்லை. முத்து,
பாளையங்கோட்டை

பெருந்தலைவர் காமராஜரின் புகழுக்கு 'எங்கள் ராஜரிஷியே...' கவிதை முத்தாய்ப்பாய் அமைந்திருந்தது.

—பொ. பொன்ராஜ்குமார், கமுதி

வாரா வாரம் என் போன்ற 'புரூஸ்லீ' ரசிகர்களுக்கு வரப்பிரசாதமாய் இருந்து வந்த அவரைப் பற்றின கட்டுரைத் தொடரை இத்தனை சீக்கிரமாய் முடித்து விட்ட 'ஜே. எம். சாலி' மேல் எங்களுக்கு கோபம் கோபமாய் வருகிறது!

—ர். ஜோதிராமன், நெல்லிக்குப்பம்

காதலரா, காமுகரா செக்ஸ் க்விஸ் போட்டி ஏ ஒன். எனக்கு வந்த மார்க் 32. அதில் எனக்காக கூறப்பட்ட அத்தனையும் உண்மை. தொடர்ந்து இதே போல போட்டிகள் தொடரட்டும்.

—லட்சுமி செங்குட்டுவன்,
வேலூர் (சேலம்)

பூத்தது இங்கே புதுவானம்
பொன்மயமான எதிர்காலம்
பொன் மனச் செம்மலின் இதயம்
வேறு யாருக்கு வரும்.
குழந்தைகளின் சிரிப்புடன்
அவரது சிரிப்பும் ஒரு
குழந்தையைப் போல் உள்ளது.

—கே. நரேந்திரன், காஞ்சிபுரம்.

ஒரு குறள் சிறுகதையில் 'சொக்கி'யைப் பற்றி வர்ணித்த ப. உ. ச.வின் அட்டகாசமான வர்ணனையில் சும்மா 'சொக்கி'ப் போனேன் போங்க!

—செ. ஆசைத்தம்பி, தாரமங்கலம்

'தாய்' புத்தகம் சரியாக வெட்டப் படாமல் ஒட்டிக் கொண்டு வருகிறது. அடுத்த முறை 'தாய்' இதழுடன் பிளேடு ஒன்று வைத்து விடவும்.

—ஆதி. பாலுச்சாமி, மதுரை-1.

கிருஷ்ணா ஸ்ரீனிவாஸையும், அவருடைய டாக்டர் பட்டத்தையும் பேட்டி கண்டு நன்றாக புரிய வைத்த மன்னை சம்பத்துக்கு ஒரு டாக்டர் பட்டம் கொடுக்கலாம். (கிருஷ்ணா ஸ்ரீனிவாஸின் டாக்டர் பட்டம் அல்ல!)

—வெ. லட்சுமிநாராயணன்,
வடலூர்.

# ஹிஜ்ரி இந்துன்னல்

திருக்குர்ஆன்

'முகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்!'

—இறைவன் தன் இறுதித் தூதர் முகம்மது அவர்களுக்கு திருக்குர்ஆனை வேதமாக அருளியதை ஒரே வரியில் பாரதியார் போற்றுகிருர்.

"(நபியே!) முற்றிலும் உண்மை யான இவ்வேதத்தை நாமே (அல்லாஹ்வே) உம்மீது அருளியிருக்கி ருேம்" என்கிறது திருக்குர்ஆன் வசனம்.

அருளப்பட்ட வேதமே குர்ஆன், திரு நபியால் எழுதப்பட்டதல்ல. ஏனென் ருல் முகம்மது அவர்கள் 'உம்மி நபி'. உம்மி என்ருல் எழுதப் படிக்கத் தெரியாதவர்.

"(நபியே!) நீர் இதற்கு முன் எந்த வேத புத்தகத்தையும் வாசிக்க வில்லை. மேலும் உமது வலது கையால் அதை எழுதவும் இல்லை" என்பது இறை வசனம்.

எழுதப் படிக்கத் தெரியாத நபிக்கு வேதம் இறக்கி வைக்கப்பட்டது எப்படி?

'மனிதர்களுக்கு நேர்வழி காண் பிப்பதற்காக மூசா நபிக்கு (மோசஸ்) தவ்ராத் வேதத்தையும், ஈசா நபிக்கு (ஜீசஸ்) இன்ஜீல் வேதத்தையும் வெளி யாக்கியது, போலவே திருக்குர்ஆனை முகம்மது அவர்களுக்கு அருளியதாக குர்ஆன் மொழிகிறது.

'வஹீ' மூலம் நபிகள் நாயகத் துக்கு குர்ஆன் அருளப்பட்டது. இந்த அரபு மொழிச் சொல்லுக்கு 'வேத வெளிப்பாடு' என்று பொருள். வஹீ என்பது துவக்கத்தில் இதயத்தில் இறங்கி பின்னர் செவியில் இறங்கும் என்று சொல்லப்படுகிறது. இவ்விதமே இறைவ னின் அறிவிப்புகள் தூதர்களுக்கு அறிவிக்கப்படும்.

முகம்மது நபி அவர்களுக்கு 'ஜிப்ரீல்' எனும் வானவர் மூலம் திருக்குர் ஆன் இறக்கி வைக்கப்பட்டது,

ஹிரா என்ற மலைக்குகையில் அவர்கள் தனித்திருந்தபோது, முதல் முறையாக ஜிப்ரீல் தோன்றி, இறைவ னின் வேத வெளிப்பாட்டை உணர்த் தினுர்.

'சில சமயங்களில் என்னை நோக்கி மணியோசையைப் போல் வஹீ வரும். இது கடுமையானது. பிறகு ஜிப்ரீல் கூறுவதை நான் மனப்பாடமிட்டுக் கொண்டதும் என்னை விட்டு அவர் விலகி விடுவார். சில சமயங்களில் மனித உருவில் என்னிடம் வந்து பேசுவார். அப்பொழுது அவர் கூறுவதை நான் பாடமிட்டுக் கொள்வேன்' என்று வஹீ அனுபவங்களை நபிகள் நாயகம் விவரித் திருக்கிருர்கள்.

குர்ஆன் ஒரே சமயத்தில் ஒட்டு மொத்தமாக நபிமணிக்கு அருளப்பட்ட தல்ல. இருபத்து மூன்று ஆண்டுகளில் பகுதி பகுதியாக இறக்கி வைக்கப் பட்டது.

'எல்லா தீர்க்கதரிசிகளையும் போலவே தம் குறையைத் தாமே உணர்ந்தவர்களைப் போல், இறைவனின் வசனங்களை உலகுக்கு அறிவிக்கும் பணியைச் செய்ய நபிகள் நாயகம் முதலில் தயங்கினுர்கள். ஆனுல் ஜிப்ரீல், அவர்களிடம், 'ஓதுங்கள்!' என்ருர். முகம்மது அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர். 'இறைவன் ஒருவனே' என்னும் வேதவாக்கை வானவர் வழி யாகப் பெற்று, ஓதிக் காண்பித்தார்கள். உலகில் மிக அதிகமாக எந்த நேரமும் ஓதப்படுவது உண்மையில் திருக்குர்ஆன் தான். அதிகமாக மனப்பாடம் செய்யப் படும் ஒரு நூலும் நிச்சயமாக இதுவே. முதலில் அருளப்பட்ட திருவசனம் அளவற்ற அன்பும், நிகரற்ற அருளும் கொண்ட இறைவன் ஒருவனே என்பதை வலியுறுத்தியது. இந்தச் செய் தியே மக்கள் வாழ்வில் புரட்சியைப் புகுத்தியது'

—அமெரிக்க சரித்திரப் பேராசிரியர் ஜேம்ஸ் மிச்னர் இப்படி எழுதுகிருர்.

இந்த குர்ஆன் இதற்கு முன்னுள்ள வேதங்களை உண்மையாக்கி வைத்து, அவற்றில் உள்ளவற்றை விவரித்துக் கூறுவதாகவும் இருக்கிறது என்பது குர்ஆன் வாசகம்.

குர்ஆனை அடுத்து முஸ்லிம்கள் போற்றுவது ஹதீஸ். ஹதீஸ் என்பது எது? —ஜே. எம். சாலி

நெருக்கமாக—மிக மிக நெருக்கமாக—அவளுடைய மார்பைத் தன் மார்போடு நெருக்கிப் புதைத்துக் கொண்டு படுத்திருந்தான் தினேஷ்.

அவனுடைய கேசத்தில் விரல்களால் விளையாடிக் கொண்டிருந்த ஸ்மிதா, "தினேஷ்...நேரமாகல்லே? எழுந்திருப்போம்." என்றாள்.

"நேரமாகல்லே ஸ்மித் டார்லிங்... நீ பேசாதே!" என்று அவளுடைய அதரங்களில் தன் அதரங்களைப் பொருத்திக்கொண்டான்.

"எவ்ளோவ் ஆசை தினேஷ் உனக்கு! அலுக்கவே இல்லையா?" அவள் முனகினாள்.

"இல்லே... இல்லே... இல்லே..."

"சிரித்தான்... இன்னிக்கி வேலைக்குப் போகில்லியா?"

"எனக்கு இங்கே வேலை இருக்கு!"

"ச்சீ... அசிங்கம்"

அவன் சிரித்தான். "இன்னிக்கு காசுவல் லீவ் போட்டுர்றேன்."

"வேணும்! டூட்டிக்குப் போ தினேஷ். எப்பப் பார்ப்போம்னு காத்திருந்து சுவைக்கிறதுலேதான் த்ரில் இருக்கு..."

"நீ விட மாட்டியே..."

அவன் படுக்கையிலிருந்து எழுந்தமர்ந்தான்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் அவன் ட்ரிம்மாக ட்ரஸ் செய்து கொண்டு வங்கிக்குப் புறப்பட்டான்.

கனவுலகத்தில் லயித்தபடி டிவிஎஸ் மொபெட்டைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

ஸ்மிதாவைக் கைப்பிடித்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. இன்பப் புதையல் அவள். அவனைச் சற்றும் அகலாமல் வசீகரித்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவர்கள்.

மொபெட் நிதானமாக ஓடியது. முன்னால் சென்று கொண்டிருந்த லாரி வழி கொடுக்காமல் ஊர்ந்து கொண்டிருந்தது. பின்னால் பல்லவன் கத்தினான். ஆற்றுப் பாலம் வேடிக்கை பார்த்தது.

ஊர்ந்து கொண்டிருந்த லாரி ஒரே அடியாக நின்று விட்டது. மொபெட் அதன் மேல் மோதி...இமைக்கும் நேரத்திற்குள் பின்னால் துரத்திக் கொண்டிருந்த பல்லவன் லாரியை நெருக்கியது.

உருமாறிய மொபெட்டில் உருவிழுந்த தினேஷ். பல்லவனின் வாயெல்லாம் ரத்தச் சிவப்பு.

குளித்துவிட்டு நிதானமாக சிகையலங்காரம் செய்து கொண்டிருந்த ஸ்மிதா அழைப்பு மணியோசை கேட்டு எட்டிப் பார்த்தாள்.

தினேஷ்!

ரத்தம்...

"என்ன தினேஷ்?" பதறிக் கொண்டே கதவைத் திறந்தாள்.

"ஒண்ணுமில்லே... ஒரு ஆக்சிடெண்ட்." சாதாரணமாகச் சொல்லிக் கொண்டே உள்ளே வந்தான்.

"என்ன ஆச்சு?"

"ஒரு சின்ன விபத்துன்னு சொன்னேனே!"

முன்புற நெற்றியில் சின்னக் காயம். அவள் கட்டுப் போட்டு விட்டாள்.

"மெதுவாப் போகக் கூடாது?"

"நான் மெதுவாத்தான் போனேன். எனக்கு முன்னாடி போன லாரிக்காரன் இன்னும் மெதுவாப் போனான். பின்னாடி வந்த பல்லவன் டொமால்னு இடிச்சுட்டான்."

"சரி படுத்துக்கோ தினேஷ்."

"நீயும் வா."

"இந்தப் பிடிவாதம்தானே வேணாங்கறேன். இப்போ நான் டாக்டர். வலி தெரியாம இருக்க செடேஷன் கொடுத்திருக்கேன். ஊம் படுத்துக்கோ."

அவன் படுத்துக் கொண்டான்.

வாசலில் ஆள் நடமாட்டம்.

வெளியில் சென்று பார்த்தாள்.

வங்கி ஊழியர்கள்!

கறுப்பு பாட்ச் அணிந்து வந்திருந்தார்கள்.

ஸ்மிதாவைப் பார்த்ததும் வங்கி மேலாளர், "எப்படிம்மா உனக்கு ஆறுதல் சொல்றது?" என்றார் துக்கத்துடன்.

"என்ன சொல்றீங்க?" ஆச்சரியத்துடன் கேட்டாள் அவள்.

"ஆக்சிடென்ட்லே தினேஷ் போயிட்டாரம்மா!"

அவள் புன்னகைத்தாள்.

'ஓ'வென்று கதறி அழுவாள் என எதிர்பார்த்தவர்களுக்கு அவள் புன்னகைத்தவாறு நின்றது வியப்பாகவும், குழப்பமாகவும் இருந்தது.

"ஆக்சிடெண்ட் நடந்தது உண்மைதான். அவரே சொன்னுர், ஆனு, அவருக்கு ஒண்ணும் ஆகல்லே. தலையிலே சின்னக் காயம்தான்."

வங்கி மேலாளரும், மற்ற ஊழியர்களும் அவளை அச்சத்துடன் பார்த்தார்கள்.

தினேஷ் மரணமடைந்து விட்டான்.

ஆஸ்பத்திரியில் பிணப் பரிசோதனையும் நடந்து விட்டது.

அப்படியிருக்க...

அச்சத்துடன் அவர்கள் படுக்கை அறைக்குள் எட்டிப் பார்த்தார்கள்.

அங்கே—




விரித்து விடப்பட்டிருந்த மெத்தையின் மேல் போர்வை ஒன்று சரிந்திருந்தது!

ஆள் இல்லே!

மிரட்சியுடன் அவர்கள் வெளியேறினுர்கள்.

அன்று மாலே.

தினேஷின் பெற்றோர் அலறியடித்துக் கொண்டு ஓடி வந்தார்கள்.

"பாங்கிலிருந்து ஆள் வந்து சொன்னுங்க. வந்தோம். நீ ரொம்பக் கல் மனசுக்காரி. அவனைப் பிணமா அவனை ஆஸ்பத்திரியிலே விட்டுட்டு, இங்கே கவலே இல்லாம இருக்கே!"—தினேஷின் தந்தை.

"நெஜம்மா அவர் சாகல்லே. வண்டிதான் ஸ்மாஷ் ஆயிடுச்சு. அவருக்கு நெத்தியிலே சின்னக் காயம் தான். படுத்திருக்கார்......"

ஸ்மிதா பேசிக் கொண்டே இருந்தாள்.

தினேஷின் தாயார் கணவனுக்குப் பின்புறமாக நகர்ந்து தன்னை மறைத்துக் கொண்டு அவளை அச்சத்துடன் பார்த்தாள்.

அவருக்கும் உதறலெடுத்தது.

"வாங்க..." ஸ்மிதா படுக்கையறைக்குள் நுழைந்தாள்.

அவர்கள் அச்சத்துடன் பார்த்தார்கள்.

வெற்றுப் படுக்கையைப் பார்த்துவிட்டு இருவரும் குழப்பத்துடன் பின் வாங்கினுர்கள். குழப்பம்... அச்சம்... இரக்கம்...

அசாதாரணமான அமைதி நிலவியது.

"எங்களைத் திருமணம் செய்ய விடாமல் தடுத்தீங்க. நாங்க ரிஜிஸ்டர் மேரேஜ் செய்துக்கிட்டோம். கல்யாணமாகி சரியா ஒரு வாரம் ஆகல்லே அதுக்குள்ளே அவரைப் பிணமா நினைச்சுப் பார்க்க உங்களுக்கு எப்படி மனம் வந்தது? போகட்டும் வந்துட்டீங்க. சந்தோஷம். இருங்க காபி போடறேன். இப்போ அவர் எழுந்திடுவார்...!"

காபிக் கோப்பைகளுடன் வந்தவள் அறையில் அவர்கள் இல்லாததைக் கண்டு திகைப்படைந்தாள்.

ஸ்மிதாவுக்கு ஆச்சரியம் வந்து ...ட்டது.

'எல்லோருமே தினேஷ் மாண்டு ...ட்டதாகச் சொல்கிறார்களே!'

அவர்களுக்கெல்லாம் பைத்தி...ம் பிடித்து விட்டதா?

ஏன் இப்படி?

'ஆ' வெனக் கொட்டாவி ...ட்டுக் கொண்டே படுக்கையிலிருந்து ...ழுந்தமர்ந்தான் தினேஷ்.

"உங்க அப்பா அம்மா வந்...திருந்தாங்க..."

"அப்படியா! அவங்க கோப...மெல்லாம் தீர்ந்து போச்சா?"

அவள் அதற்கு பதில் சொல்ல...வில்லை.

"உங்க பாங்கு ஊழியர்களெல்...லாம் வந்திருந்தாங்க. எல்லோரும் கறுப்பு ...பட்ச் குத்தி இருந்தாங்க..."

"எதுக்கு துக்கம் கொண்...டாடறாங்க?"

"நான் செத்துட்டேனா? டார்லிங் ...நான் செத்துட்டேனா? இதோ உன்னைக் ...கட்டிப் பிடிச்சுக்கிட்டிருக்கேனே! நான் ...செத்துட்டேனா. இன்னும் என்னவெல்...லாமோ செய்யப் போறேனே! நான் ...செத்துட்டேனா?"

"போதும் ஒரே குறும்பு. காபி...யைச் சாப்பிடுங்க. ரெஸ்ட்லேயே இருக்...கணும்." கண்டிப்புடன் சொன்னாள்.

தினேஷ், ஸ்மிதாவைச் சந்தித்த அந்த நாள்...

அவன் அந்த வங்கியில் ...காசாளர்.

ஸ்மிதா டோக்கனை நீட்டிய ...வுடனே பணத்தை எண்ணிக் கொடுத்து விட்டான். பணத்தைப் பெற்றுக் கொண்டு அவள் அகன்றாள்.

அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான். என்ன அழகு! ஆகர்சிக்கும் அழகு! அவன் இன்னும் ...ன் நினைவுக்கு வரவில்லை.

வேலை முடிந்து கணக்கைச் சரி பார்க்க முனைந்தான். கணக்கு உதைத்தது. டேலியாகவில்லை. முந்நூறு ரூபாய் குறைகிறது! செக்குகளை சரி பார்த்தான். எல்லாம் சரிதான்!

## இளையவர் இனியவர்



**எஸ்-பாஸ்கரன்**

பட்டதாரி இளைஞரான இவர் தற்போது பார்க்கும் தொழில் கண்ணாடி வியாபாரமாகும்.

கோவை அரசினர் கலைக்கல்லூரியில் இளங்கலை பட்டப்படிப்பில் 'அரசியல்' துறையை விருப்பப் பாடமாக ஏற்றுப் படித்த இவர் இதயத்தை 'கலை'யும் தொட்டு விட்டது.

இருபத்தாறு வயது இளைஞரான இவர் 'எஸ்-பாஸ்' என்ற பெயரில் சிறுகதைகளும், ஜெயநேசன், மகரந்தன் — என்ற பெயர்களில் கவிதைகளும் எழுதி வருகிறார் என்பதோடு—

'அவள் ஒரு சாம்ராஜ்யம்' — நாவலும், 'பேசத் தவிக்கும் நட்சத்திரங்கள்' என்ற மேடை நாடகமும் இவரின் சிந்தையில் பூத்த செந்தூரப் பூக்களாகும்.

இவரது அறிவுப் பாசறையில் கருவாகி தற்போது உருவாகிக் கொண்டிருக்கும் நூல், அனைத்து மதங்களிடையே உள்ள அடிப்படை ஒற்றுமையை விளக்கும் ஒன்றாகும்.

இந்நூல் இவரை இனங்காட்டும் என நம்பலாம்.

இவரின் சிந்தனைகளைப் பார்க்கும் போது நமக்கு அந்த நம்பிக்கை உறுதிப்படுகிறது.

—பாபநாசம் குறள்பித்தன்

கையிலிருந்து போட்டுத்தான் கணக்கைச் சரியாக்க வேண்டும்.

அந்த முடிவுக்கு அவன் வந்த போது—

அவள் வந்து நின்ருள்.

வியப்புடன் அவளைப் பார்த்தான்.

"எனக்கு மூவாயிரம் ரூபா தான் வேணும். அதுக்குத்தான் செக் கொடுத்தேன். நீங்க மூவாயிரத்து முந்நூறு ரூபாய் கொடுத்தீங்க. கொடுத்ததுதான் கொடுத்தீங்க நாலாயிரமா கொடுக்கக் கூடாதா?"

அவள் நீட்டிய முந்நூறு ரூபாயை நன்றியுடன் பெற்றுக் கொண்டான்.

அவள் போய் விட்டாள்.

அவள் மறுநாளும் வந்தாள்.

"என்னங்க மிஸ்டர், பணம் தர்றீங்களா?"

"செக் ப்ளீஸ்!"




"செக்குக்குத்தான் பணம் தருவீங்களா? கொடை வள்ளலாச்சே நீங்க?"

"நல்லாவே வார்றீங்க. மே நோ யுவர் நேம் ப்ளீஸ்?"

"நல்லா பேசிறுபேர் கேட்பீங்களோ?"

"நல்லா பேசுற பொண்ணுக பேரை மாத்திரமே கேட்பேன்!"

"அப்படியே பணத்தைக் கோட்டை விடுவீங்க!"

"நான் டூட்டியிலே ரொம்ப கரெக்ட். உங்ககிட்டேதான் கொஞ்சம் கவனக்குறைவா இருந்துட்டேன்..."

அவள் சிரித்துவிட்டு நகர்ந்தாள்.

"மேடம் செக்கை மாத்தப் போறீங்களே?"

"தினமும் செக் கொடுத்துப் பணம் வாங்க நான் கோடீஸ்வரி இல்லே!"

அவன் அசடு வழிந்தான்.

"உங்க பேர்?"

"என் பேர் எதுக்கு?"

"தெரிஞ்சுக்கலாம்னுதான்..."

"தெரிஞ்சுக்க வேணும்..."

காலிங் பெல்லை அழுத்திஞர்.

தினேஷ் வெளிப்பட்டான்.

வெளியே அவள்!

அவன் வியப்பால் அதிர்ந்தான்.

"நீங்களா?"

"நானேதான். இது உங்க வீடா?"

"எங்க வீடுதான். நூத்துக்கு நூறு உண்மை"

"இந்த வெளிப் போர்ஷனை வாடகைக்குக் கொடுப்பீங்களா?"

"அது வீடில்லே...கடை வைக்கிறவங்களுக்காகக் கட்டியது..."

"அப்படியா! நானும் கடை வைக்கத்தான் கேட்டேன்..."

"நீங்களா?"

"சிரிக்க வேணும் மிஸ்டர். இந்தப் போர்ஷன் வாடகைக்கு விடறதுதானே? வாடகை எவ்வளவு? அட்வான்ஸ் எவ்வளவு தரணும்?"

"சரி சரி. சீரியஸாத்தான் பேசு றீங்க. இது நம்ம விவகாரம் இல்லே. அம்மாவோட டிபார்ட்மெண்ட். வாங்க, அம்மாவைக் காட்டுறேன்."

அவர்கள் வாடகையைப் பற்றிப் பேசினார்கள். அவனுக்கு திருப்தியாக இருந்தது. அட்வான்ஸ் கைமாறியது.

அவள் நடந்தாள். அவன் அவளைத் தொடர்ந்தான். "நிஜமாகவே கடை வைக்கப் போறீங்க. ஆமா என்ன கடை?"

"தெரிஞ்சுக்குவீங்க..."

"நீங்க ஒரு புதிர். கடை போட்டு ஓகோன்னு இருங்க. எங்க வீடு ராசியான வீடு..."

"அப்படியா?"

"அப்படித்தான்! உங்க பேர்...?"

"அதையும் நீங்களே தெரிஞ்சுக்குவீங்க..."

அவன் தலையைப் பிய்த்துக் கொண்டான்.

மறுநாள் வங்கியில் வேலையை முடித்துக் கொண்டு வந்தவன் புதிதாக மாட்டப்பட்டிருந்த பெயர்ப் பலகையை வேகமாக வாசித்தான்.

"டாக்டர் ஸ்மிதா, எம்.பி.பி.எஸ்., வேலை நேரம் காலை 9 முதல் 12 மணி வரை"

டாக்டர் ஸ்மிதா. உச்சரித்தான். இனித்தது.

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட நர்சிங்ஹோமில் கூட்டமில்லை.

தினேஷ் தயங்கியவாறே அவள் முன் வந்து நின்றான்.

"உங்க கடையைப் பார்க்க வந்தேன்..."

"உட்காருங்க..."

உட்கார்ந்தான்.

"நீங்க டாக்டரா?"

"சந்தேகமா?"

"எவ்வளோவ் சிம்பிளா இருக்

கீங்க?'' வியப்படைந்தான்.

அவர்களுடைய சந்திப்புக்கள் தொடர்ந்து, காதல் புஷ்பங்கள் இதழ்கள் விரிப்பதற்கு ஏழு மாதங்கள், எட்டு நாட்கள், ஆறுமணி நேரம், ஐந்து நிமிடங்கள், நான்கு விநாடிகள் தேவைப் பட்டிருந்தன.

முந்தின நாள் நடந்த கோர மான விபத்தைப்பற்றி எல்லா பத்திரிகை களிலும் செய்திகள் வந்திருந்தன.

செய்தியைப் படித்த ஸ்மிதா "என்னங்க இது? பேப்பர்காரங்களுக்கும் பைத்தியம் பிடிச்சுடுச்சா? இங்க பாருங்க!" என்றாள்.

தினேஷ் அவள் காட்டிய செய்தியைப் படித்தான். சிரித்தான். "இந்த உலகத்துலே எல்லோருக்கும் பைத்தியம் பிடிச்சிடுச்சு; நம்ம ரெண்டு பேரைத் தவிர." என்றான்.

"அப்படித்தான் இருக்கும்!" ஸ்மிதா ஆமோதித்தாள்.

அந்த அதிகாலையிலேயே சில பைத்தியக்காரர்கள் அங்கே கூடியிருந் தார்கள். தினேஷின் பெற்றோரும், ஸ்மிதாவின் பெற்றோரும்!

தினேஷின் தந்தை பேசினார்: "இவங்க கல்யாணத்தை நம்ம ரெண்டு குடும்பமும் சம்மதிச்சு நடத்தியிருக்க ணும். தடை போட்டோம். அவங்க கணவன் மனைவியா இணைஞ்சு தங்க ளுக்குன்னு ஒரு வாழ்க்கையை அமைச் சாங்க. பாருங்க, இந்தப் பரிதாபத்தை! தினேஷ் ஆக்சிடென்ட்லே போயிட் டான். அந்த துக்கத்தைத் தாங்காம ஸ்மிதா சித்தம் கலங்கிப் போயிட்டா. தினேஷ் சாகல்லேன்னு நினைக்கிரு. என்னவெல்லாமோ பேசுரு."

அந்தப் பைத்தியங்களின் பேச்சைக் கேட்டு ஸ்மிதாவும், தினேஷும் விலாப்புடைக்கச் சிரித்துக் கொண்டிருக்கிருர்கள்.






மூன்று இளைஞர்களின் கூட்டு முயற்சியில் வெளி வந்து கொண்டிருக் கிறது இந்த 'இளைஞன்' மாத இதழ். என். சிம்மமூர்த்தி, ரா. ஸ்ரீனிவாசன், கி. வெங்கட் என்ற இவர்களின் எழுத்தார்வமும், முயற்சியும், எண்ணங் களும் ஒரு நல்ல முன்னேற்றத்தை இலக்காகக் கொண்டு பயணப்பட்டிருக் கின்றன.

அறிமுகத்திற்கென வந்திருந்த இதழ், கவிஞர் கண்ணதாசனுக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டு இதழ் முழுக்க கவிஞருக்கு அஞ்சலிக் கவிதை களாகவே அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. 'திரும்பி வா கவியரசே' என்கிற கவிதை மனசைத் தொடுகிறது.

ஓவியங்களில் இன்னும் கொஞ்சம் சிரத்தை எடுத்தால் சிறப்புற இருக்கும். நாகேஷ் பற்றிய ஒரு கட்டுரை நல்ல அம்சம்.

86, பாலாஜி நகர், அனகா புத்தூர், சென்னை-70 என்கிற விலாசத்தி லிருந்து வருகிற இந்த இளைஞனுக்கு பாராட்டுக்களும் வாழ்த்துக்களும்.

# வாழ்க்கை மாற வேண்டும்; மலர வேண்டும்!

ஒருவனின் வாழ்க்கை மாறுவதற்கு உலகப் போர்தான் நடக்க வேண்டும் என்பதில்லை. சாதாரண நிகழ்ச்சிகள் கூட சரித்திரத்தின் போக்கை மாற்றி விடலாம்.

மாறுகிறவன் தான் மனிதன். தன்னை மாற்றிக் கொள்ளுகிறவன் தான் மனிதன். கடந்த 20 வருடங்களாக நான் மாறவே இல்லை என்று சொல்லுகிற மனிதன் வளரமுடியாமல் இருக்கிறான் என்று அர்த்தம்.

அலெக்ஸாண்டர் சிறந்த மன்னன் தான். இருந்தாலும் நாடு பிடிக்கிற ஆசை அவனுக்கு அதிகமாகவே இருந்தது. அரிஸ்டாட்டில் அவனது ஆசிரியர். எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அவன் கேட்கவில்லை.

ஒருநாள் மாலை நேரம். அலெக்ஸாண்டர் உலவிக் கொண்டிருக்கிறார். உலகம் அவரது காலடிகளில் உருண்டு கொண்டிருக்கிறது.

மயானத்தில் கிடந்த மண்டை ஓடுகளை அரிஸ்டாட்டில் புரட்டிக்கொண்டிருந்தார். அலெக்ஸாண்டர் 'என்ன?' என்று கேட்டார். 'ஒன்றுமில்லை உங்கள் தந்தை பிலிப்பின் மண்டை ஓட்டை தேடிக் கொண்டிருக்கிறேன். இத்தனை மண்டை ஓடுகளில் அவரது மண்டை ஓடு எது என்று கண்டு கொள்ள இயலவில்லை' என்று அரிஸ்டாட்டில் தெரிவித்தார்.

அவர் எவ்வளவோ சொல்லிக் கேட்காத அலெக்ஸாண்டரை இந்த பதில் ஒரே நிமிடத்தில் மாற்றி விட்டது. நாடு பிடிக்கிற ஆசை அலெக்ஸாண்டருக்கு அப்போதே விட்டுப் போயிற்று.

மகாத்மா காந்தி வாழ்விலும் அது தான் நடந்தது. 'உன்னிடத்தில் முதல் வகுப்புச் சீட்டு இருக்கலாம். இருந்தாலும் நீ பார்சல் வண்டியிலே தான் பயணப்பட வேண்டும்' என்று வெள்ளைக்காரன் ஒருவன் சொல்லுகிறான். மகாத்மா இறங்க மறுக்கிறார். விளைவு அவரைத் தூக்கிக் கீழே போடுகிறார்கள்.

இந்தச் சமூக அவலத்தை கண்டிக்க வேண்டும் என்று அவர் முடிவெடுத்துக் கொள்ளுகிறார். ஒரு பெட்டியில் இருந்து தன்னைத் தூக்கி எறிந்த வெள்ளைக்காரனின் பேரரசை பிறகு அவர் இந்தியாவில் இருந்தே தூக்கி எறிகிறார்.

அந்த ஒரு நிகழ்ச்சி அவருக்கு போதுமானதாக இருந்தது.

இப்படி சின்னச் சின்ன நிகழ்ச்சிகள் மகத்தான மனிதர்களை உருவாக்கி இருக்கின்றன. சின்னதான நிகழ்ச்சிகளால் வாழ்க்கை மாற்றப்படாவிட்டால் வாழ்வதில் அர்த்தமில்லாமல் போகும்.

உலகப் பெரும்போர் நடந்த போது இங்கிலாந்து நாட்டின் தெருக்களில் பெர்ட்ரண்டு ரஸ்ஸல் 'சண்டையை நிறுத்து...சமாதானத்தை ஏற்படுத்து' என்கிற அட்டையைத் தூக்கிக் கொண்டு நடந்ததைப் பார்த்தோம்.

ஒரு நாடே தன்னைப் போரில் ஈடுபடுத்திக் கொண்டிருந்தபோது தான் மாத்திரம் போரில் ஈடுபடவில்லை என்று சொல்லுகிற துணிச்சல் அவருக்கு வந்ததைப் பார்க்கிறோம்.

அதற்குக் காரணமாக அமைந்தது அவரது ஆழ்ந்த சிந்தனை தான். வாழ்க்கை முழுவதும் உண்மைதான் பேசுவேன் என்கிற முடிவுக்கு மகாத்மாவைக் கொண்டு வருவதற்கு ஆழ்ந்த சிந்தனை கூட அவசியமாக இருக்கவில்லை. அரிச்சந்திரனின் நாடகம் ஒன்று போதுமானதாக இருந்தது.

நீக்ரோக்களுக்கு நடைபெற்ற கொடுமைகளை எல்லோரும்தான் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இருந்தாலும் ஆபிரகாம்லிங்கனைத்தான் அது தொட்டது. சாலமோன் ஆலயத்தில் புறு விற்கிறவர்களை எல்லோரும்தான் கண்டார்கள். இருந்தாலும் அது இயேசு நாதரைத்தான் தொட்டது.

ஆகவே எத்தனையோ நிகழ்ச்சிகள் நடைபெறுகின்ற வாழ்க்கை, ஒரு மனிதனை மாற்றவே இல்லை என்றால் அந்த மனிதன் வாழவில்லை என்றுதான் பொருள்.

வாழ்க்கை மாற வேண்டும். மலரவேண்டும்.

டாக்டர் உமா மகேஸ்வரி

# ஆர். சி. சம்பத்

ரகு பதினோரு மணிக்கு மேல் போகலாம் என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தான். திடீரென்று ஞாபகம் வந்தது. இன்றைக்கு சனிக்கிழமை.

12 மணிக்கெல்லாம் பாங்க் மூடி விடுவான். அதற்குள் போக வேண்டும். பணம் எடுக்கவேண்டும்.

இவன் கணக்கில் நூறு ரூபாயோ என்னவோதான் இருந்தது. அவசரத் தேவை. ஐம்பது ரூபாய் வேண்டும்.

ஷேவிங்கை அவசரமாய் முடித்தான். முகம் கழுவி, தலைசீவிக் கொண்டு சட்டையை மாட்டியபோது—

"அப்பா...உன் கூட நானும் வர்றேன்."

ரவி வந்து காலைக் கட்டிக் கொண்டான்.

"ம்ஹூம். நான் எங்கேயும் போகலேடா... இங்கே தான் இருக்கேன்."

"ம்... நானும் வருவேன். நீ கடைக்குப் போறே..."

அவனை ஏமாற்ற முடியாது. இவன் சட்டை போடும் போதே அவனுக்குத் தெரிந்து விடும், இவன் வெளியில்தான் போகிறான் என்று.

ரவிக்கு மூணு வயசு. அம்மாவை விட இவனிடம்தான் அதிக ஒட்டுதல்.

# அப்பா நானும் வர்றேன்



ஆபீஸ் போகிற நேரம் தவிர மற்ற நேரத்தில் எங்கேயும் போக முடியாது. போனால், அவனையும் கூட்டிக் கொண்டு தான் போக வேண்டும்.

"சரி. உன்னையும் கூட்டிட்டுப் போறேன். கிச்சன்லே போய் அம்மாவை அழைச்சிட்டு வா."

"ம்ஹூம் என்னை உட்டுட்டுப் போயிடுவே."

அவனை ஏமாற்ற முடியவில்லை. ரகுவுக்கு எரிச்சலாயிற்று.

"கல்யாணீ... இவனை உள்ளே கூப்பிடு..." என்று கத்தினான்.

"விட்டுட்டுப் போய்ட்டீங்கன்னு



அழுது என் பிராணனை எடுத்துடுவான். போறதுதான் போறீங்க; அவனையும் கூட்டிட்டுப் போங்களேன்'' என்றாள், சமையல்கட்டிலிருந்து கல்யாணி!

''சரி. வந்து தொலைடா அறிவு கெட்டப் பய மவனே''

ரேழியில் நின்ற சைக்கிளை எடுத்து வெளியில் நிறுத்தினான். மறக்காமல் சட்டை பாக்கெட்டில் பாங்க் பாஸ் புக்கை எடுத்து வைத்துக் கொண்டோமா என்று பார்த்துக் கொண்டான்.

ரவியை சைக்கிள் கேரியரில் தூக்கி உட்கார்த்தி வைத்தான்.

கடைத்தெரு வழியே தான் பாங்கிற்கு போகணும்.

வழியில் சிகரெட் வேண்டும் போலிருந்தது. ஒரு வெற்றிலை பாக்குக் கடைவாசலில் சைக்கிளை நிறுத்தினான்.

''ஒரு பிளேன் வில்ஸ்!''

பற்றவைத்துக் கொண்டான்.

''அப்பா...''

''ம்...''

''எனக்கு வாலப்பளம்''

''ம்ஹூம் வாழைப்பழம்லாம் சாப்பிடக் கூடாது. வயித்துக்கு ஆவாது.''

''சிகரெட்டு மட்டும் வயித்துக்கு ஆவுமா?''



இந்தப் பேப்பர்காரனுங்க கஞ்சப்பசங்க! இவ்வளவு நெம்பர்களையும் போட்டிருக்காங்க. நம்ப பையன் நெம்பரை போடுறதுக்குத் தானா இடமில்லாமப் போச்சு?

—நெ. பாரதிபித்தன்

ரகுவுக்கு அறையலாமா என்று வந்தது. திரும்பப் போய் ஒரு வாழைப் பழத்தை வாங்கி வந்து அவன் கையில் கொடுத்தான்.

"அப்பா, உனக்கு வாலப்பளம் வாங்கிக்கலே?"

சைக்கிள் பாங்க் வாசலுக்கு வந்த போது மணி பதினொன்று!

உள்ளே கூட்டமில்லை. பத்து பேர்தான் நின்று கொண்டிருந்தார்கள்.

ரவியை ஒரு சேரில் அமர்த்தினான்.

"இங்கேயே உட்கார்ந்திருக்கணும் சீக்கிரம் வந்துடுவேன்."

வாழைப்பழம் முக்கால் வாசி தீர்ந்து போய் கால் பகுதி மட்டும் இருந்தது.

ரகு 'வித்ட்ராயல் ஸ்லிப்' டோக்கன் வாங்கி கொடுத்து, கையெழுத்து போட்டு, பணத்தை வாங்கி நகர்ந்த சமயம்—

"ஹேன்ஸ்... அப்!"

பாங்க் ஸ்தம்பித்தது.

கையில் துப்பாக்கியோடு ஒரு முரட்டு இளைஞன். ஜீன்ஸில் பேண்ட்டும் சட்டையும். தலையில் ஒரு லெதர் தொப்பி. இடுப்பை இறுக்கிக் கொண்டு ஒரு பட்டை பெல்ட்!

கதவை சாத்தியிருந்தான்.

ஆங்கிலம் கலந்த தமிழில் கத்தினான்.

"எல்லோரும் அந்த சுவர் மூலையில் போய் நில்லுங்கள்."

நின்றார்கள்.

அறையிலிருந்து அவசரமாய் வெளியே வந்த மானேஜர் உட்பட எல்லோரும் கைதூக்கி, நிலைத்தார்கள்.

பாங்க் கேசியர் பணத்தை அள்ளி மேஜை மேல் வைத்து விட்டு— துப்பாக்கி முனை காட்டிய திசையில் போய் நின்றார்.

இளைஞனின் கையிலிருந்த சூட்கேஸ் வாயைத் திறந்து பணக்கத்தைகளை விழுங்கிக் கொண்டது.

துப்பாக்கியை அரைவட்டமாய் சுற்றிக்காட்டி சொன்னான்.

"நான் வெளியில் போய் ஐந்து நிமிடம் கழித்துதான் அசையணும். இல்லே..."

வட்டமடித்துத் திரும்பினான்.

வாசலை நோக்கி வேகமாய் நடந்தான்.

முதல் அடி—இரண்டாவது அடி. மூன்று...

தடால்! விழுந்தான்.

இதைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ரகு பாய்ந்தான். கூடவே.. ஒருவர், இன்னொருவர்...

ரவியை எல்லோரும் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு ஆடினார்கள்.

"மிஸ்டர் ரகு. உங்கள் மகன் ரவி மட்டும் வாழைப் பழத்தை தின்னுட்டு தோலை பாதையிலே போட்டு வைக்கல்லேன்னா, அந்த திருடன் வழுக்கி விழுந்திருப்பானா? கொள்ளை போன பணம்தான் பிடிபட்டிருக்குமா?

ரகுவிற்குப் பெருமையாக இருந்தது!

○




"தொலைதூர நோக்கு" அல்லது நோக்கம் என்பதே தீர்க்க தரிசனம் என்று சொல்லிக் கொண்டே நடந்தார் ஞானி.

அரசியல் பொருளாதாரம் சமூக நலத்துறை கடவுட்துறை உட்பட இந்த தீர்க்க தரிசனம் உண்மையாய் இயற்கையாய் அமைவதுதான் அருள்.

இப்படித்தான் மிகப் பெரிய பக்தியை இறைவன் மீது செலுத்தி ஞானி இறைவனைத் தன்னிடமே வைத்துக் கொண்டு விடுகிறான்.

சமுதாயம் இதை மனதில் கொண்டு இறைவனை பக்தியால் கட்டிப் போட்டு விடுதல் வேண்டும்.

விமான வழி மறிப்பில் கொள்ளைக் காரனின் சில சொந்த விஷயங்களும் நிறைவேறுகின்றன.

பக்திக்காக இறைவனைக் கொண்டேன் என்றாலும் பக்தர்களின் அன்றாடத் தொல்லைகளும் கடவுளால் தீர்க்கப்படுகிறது.

இறைவனை ஆகாய விமானத்தைப் போன்று வழி மறித்தீர்களே யானால் உங்களை இறைவன் தண்டிப்ப தில்லை.

இப்படி ஒரு முறை உண்டு என்று பக்தி இன்றி எண்ணுகிறவர் களுக்கு, இறைவன் விமானம் போன்று மிக உயரத்தில் எங்கோ பறந்து கொண் டிருந்தான்.

## ஞானக்கேணியிலிருந்து

இதற்கு கொண்ட துறையிலும் பொருளிலும் கொள்கையிலும் பக்தி இருக்க வேண்டும்.

தீர்க்க தரிசனம் தவறாக அமைவதற்கு மனிதனிடம் உள்ள ஆசையும் குறுகிய நோக்கமும் சிந்தனை யில்லாத தவறான பற்றுமே காரணம்.

இந்த நிலை அகல, தீர்க்க தரிசனம் பெற, நல்ல சிந்தனை கொள்ள, உலக சமுதாயம் புத்தனையே நாட வேண்டும்; இல்லையேல் கடவுளிடம் பக்தி கொள்ள வேண்டும் என்று முணுமுணுத்துக் கொண்டே நடந்தார் ஞானி.

விமான நிலையத்திற்குள் பயணிகள் ஏறும் விமானம் அழகாக நின்று கொண்டிருந்தது.

பார்க்கும் பொருளிலெல்லாம் பரம் பொருளைக் காணும் ஞானி சொல்லு வதைக் கேளுங்கள்.

விமானத்தைத் தரையில் இறக்கும் ஆகாயக் கொள்ளைக்காரன் தனது இஷ்டத்திற்காக விமானத் தைக் கீழே இறக்கி விடுகிறான்.

விமானம் புறப்படும் நேரம் வந்தது. தரையில் நின்று கொண்டிருந்த விமானத்தின் கதவு மனிதனைவிட சற்று உயரத்திலே இருந்தது. இதனால் விமானத்தின் மீது ஏணியைச் சாய்த்தே அனைவரும் விமானத்தினுள் ஏறினர்.

சற்று உயர்ந்த நோக்கம் மனி தனுக்கு வேண்டும்.

எதிலும் உயர்ந்த மனிதனாகவே இரு.

இறைவனை துதியாத மனிதனானா லும் உயர்ந்த மனிதர்களின் உயர்விற்கு இறைவனே ஏணி போன்று உயர்வைத் தருகிறான்.

இல்லையேல் கடவுளிடம் பக்தி வருவதற்கு நீ சற்று உயர்ந்த நோக்கம் கொண்டால்தான் உன்னிடம் பக்தியே வரும்.

பிறகு நீ அவனைக் கொண் டால் என்ன? அல்லது அவன் உன்னைக் கொண்டால் என்ன?

பக்தியில் மிதந்து வெற்றியில் பறக்கலாம். *ஞானிதான் சொன்னது*

# அவா வயிறு எப்படி நிரம்பும்?

இந்த முறை என்னுடைய பொறுமையின் எல்லை மீறிவிட்டது. பல்லைக் கடித்து வார்த்தைகளை அழுத்திக் கொண்டேன். உரியவர்களிடம் சொல்லி உடனே ஏதாவது செய்தாக வேண்டும். இல்லையானால் கிழம் ராத்திரிச் சாப்பாட்டிலும் வந்து கழுத்தை அறுக்கும்.

கல்யாண சமையலுக்கு காண்ட்ராக்ட் வேலை என்னுடையது. காய்கறி, மளிகை வாங்குவது முதல் சமையல் மேற்பார்வை, பந்தி பரிமாறுகிறவரை— எல்லாவற்றுக்கும் நான்தான் பதில் சொல்லியாக வேண்டும். அப்படியே பண்டங்கள் பாழாகாமலும் பார்த்துக் கொண்டால்தான் மரியாதை பிழைக்கும்.

இந்த வழுக்கைத்தலை கிழத்தை இன்றைக்கு நான் பார்ப்பது நாலாவது இடம். ஏற்கெனவே மூன்று கல்யாணங்களில் கவனித்து விட்டேன். எங்கும் இதே மாதிரி அடம்தான்...!

குருவி இரையெடுக்கிற மாதிரி ஒப்புக்கு எதையோ கொறிக்கிற மாதிரி பேர் பண்ணிவிட்டுப் போகிற சவடால் பேர்வழி இவன். இலையில் சாதமும் மற்ற பண்டங்களும் மீந்து கிடக்கிற சுரணையே இல்லாமல் "இன்னும் போடு. இன்னும் போடு" என்று கேட்டு வாங்கி இலையோடு விட்டுவிட்டு எழுந்து விடுகிறதைப் பார்த்தால் மனம்தான் ரொம்பவும் வேதனைப்படும். இப்படிப் பண்டம் பாழ்பண்ணுவது திமிரா இல்லை, அடம் என்று சொல்லலாமா?

சின்ன வயசில் அம்மா சாதம் ஊட்டும் போது சொன்னதெல்லாம் நினைவுக்கு வருகிறது. "சாதம்ங்கறது மகாலக்ஷ்மிடா... சாதத்தை எறிஞ்சம்னா அது பெரிய பாவம்டா... ஒவ்வொரு பருக்கையும் கன்னிப் பொண்ணு மாறி, குளக்கரையிலே போய் உட்கார்ந்திண்டு அழும்... பார்த்துக்கோ...?"

அம்மா மிரட்டுவதற்கு நிஜமாகவே பயந்து போய், ஒரு சின்னப் பருக்கை கூடச் சிந்தாமல் சாப்பிட்ட பழக்கம், பெரியவனான பிறகு மிகவும் தீவிரமாயிற்று. மற்ற நண்பர்கள் கேலி செய்யும் அளவுக்குக் கூடப் போய் விட்டது.





'ராமுவா! இலை ரொம்பச் சுத்தமாயிருக்குமே, ஒண்ணையும் விட மாட்டானே." பண்டங்களைப் பாழ் பண்ணக் கூடாது என்கிற என்னுடைய உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளாதவர்கள்.

இந்த மனுஷன் என்னடாவென்ருல்... எல்லாவற்றையும் வீணடிக்கவென்றே வருகிருன். மனம் கொஞ்சங்கூட வேதனைப்படாதோ?

மறுபடி அந்தக் கிழம் சாப்பிட்ட இலையைப் பார்க்கிறேன். இன்னும் அதிலே மூன்று ஆள் சாப்பிடலாம். அத்தனை குழம்பும், அப்பளமும், சாதமும், பாயசமும் அப்படியே எல்லாம் வீண்!



## சுப்ர. பாலன்

எப்படியாவது இன்றைக்கு அவரிடம் நேரில் கேட்டு விடுவது என்றே தீர்மானம் பண்ணிக் கொண்டேன். ஒரு வழியாய் பந்தி வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு, ஆட்களை ஓய்வெடுக்க அனுப்பிவிட்டு வெளியே வந்தேன்.

அந்தக் கிழம், சுவாரசியமாக வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு நாலைந்து பேர் புடைசூழ அமர்ந்திருந்தது. கொஞ்சம் பெரிய இடத்துப் பேர்வழிபோல இருக்கிறது! உற்சாகமாய் அந்த நாலைந்து பேர் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

"ராமு அய்யர்! சாப்பாடு ஏற்பாடெல்லாம் ஏகப்பிரமாதம். ரொம்பச் சிக்கனமாயும் பண்ணியிருக்கிறீர்...என்னுடைய தனிப்பட்ட பாராட்டுக்கள்..."

'இது வேறயா?' என்று மனசுக்குள் அலுத்துக் கொள்கிறேன். என்னை அவர் முந்திக் கொண்டதால் நான் சொல்ல வந்ததைச் சொல்லச் சுருதி கொஞ்சம் இடறியது.

"ஆமாம்! நீங்கதான் சரியாவே சாப்பிடல்லே... அதையும்தான் கவனிச்சேன்..." மிடுக்கு விடாமல் நான் பேசத் தொடங்கிய போது மற்றவர்கள் கலைந்து போனார்கள். அவர்களுக்கு இந்தப் பேச்சில் அக்கறையில்லை.

மென்று கொண்டிருந்த புகையிலையை உமிழ அந்த மனிதர் வெளியே போன போது நானும் கூடவே சென்று பிடித்துக் கொண்டேன்.

"என்னங்காணும் கொஞ்சமானும் விவஸ்தை வாண்டாமா? காலம் கிடக்கிற கிடப்பில் உம்மைப் போலே யாரய்யா சாப்பாட்டையும் பண்டங்களையும் பாழாக்குவான்? நானும் நாலு கல்யாணமாத் தொடர்ந்து உம்மைக் கவனிச்சிண்டுதான் வரேன். இப்படியா இலையிலே வாங்கி வீணடிக்கிறது?" — என்னுடைய படபடப்பில் வார்த்தைகளைக் கொஞ்சம் வேகமாகவே கொட்டி விட்டேன்.

"ராமு அய்யர்! கோபப்படாதேயும். ஒண்ணும் வீணாயிடல... அங்கே பாரும். அந்த ஜனங்கள் எவ்வளவு



# நாயுடன் விளையாடினால் உயிருக்கு ஆபத்து!

"ஒட்டுண்ணிகளால் மனித இனத்திற்கு வரும் நோய்களில், 'எக்கினோகாக்கஸ் கிரானுலோஸ்' என்ற புழுக்களின் மூலம் ஏற்படும் 'நாய்நாடா புழு கட்டி' நோய் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். இந்த நோயின் மூலம் மூளை, கல்லீரல், நுரையீரல் ஆகிய உறுப்புகளில் கட்டிகள் தோன்றலாம். உடம்பின் பல பாகங்களிலும் இந்தக் கட்டி ஏற்பட வாய்ப்புண்டு. இந்த நோய்க்கு மூல காரணமான 'எகினோகாக்கஸ் கிரானு லோஸ்' என்ற புழுக்கள் நரி, குள்ள நரி, நாய், ஓநாய் போன்ற பிராணிகளில் இருக்கும். இந்தப் புழுவின் முட்டைகள் மலத்தின் வழியாக வெளியேறி ஆடு, மாடுகளை தொற்றிக் கொள்கின்றன. அதிலிருந்து மனிதர்களுக்கு இந்த நோய் தாவுகிறது. குறிப்பாக நாயுடன் விளையாடும் போதும் இந்த முட்டைகள் மனிதர்கள் மீது பரவுகிறது..." என்று மனித குலத்திற்கு வரும் இந்தக் கொடிய நோய் பற்றி ஆராய்ச்சி செய்து வரும் டாக்டர் திருஞான சுப்ரமணியன் கூறினார். குறிப்பாக இந்த நோய் நாய் மூலம் அதிகமாக பரவுவதாகவும், நாயுடன் ஒட்டி உறவாடினால் இந்த நோய் மனிதர்களை தொற்றிக் கொள்ளும் என தனது ஆராய்ச்சியில் கண்டறிந்து உள்ளார். 'நாய் நாடா புழுகட்டி' என்ற இந்த நோய் ஏற்படா வண்ணம் தடுப்பது எப்படி? நோய் ஏற்பட்ட பின்பு காப்பாற்றுவதெப்படி? என்பதைப் பற்றி தனது ஆராய்ச்சியை தொடர்ந்து செய்து வருகிறார்.

பட்டுக்கோட்டைக்கு அருகில் உள்ள காசாங்காடு என்ற கிராமத்தில் பிறந்த இவர், உயிர் வேதியியல் துறை ஆராய்ச்சி செய்து பி. எச். டி. வாங்கியிருக்கிறார். உணவுப் பொருட்களில் ஏற்படும் 'அஸ்பர் ஜிலஸ் டெரியஸ்' என்ற காளானின் நச்சுத்தன்மை பற்றி ஆராய்ச்சி செய்தாராம் 'இந்த நச்சுத் தன்மை கொடியது என்று எப்படிக் கண்டுபிடித்தீர்?'

"பூசனம் பிடிக்கிற பொருட்களால் தான் அஸ்பர் ஜிலஸ் டெரியஸ் காளான்கள் வளருகின்றன... பூசனம் பிடித்த ரொட்டித் துண்டின் சாற்றை கோழிக்குஞ்சு ஒன்றிற்கு கொடுத்தேன் அது இறந்து போய்விட்டது. இதன் மூலம் பூசனம் பிடித்த பொருட்கள் உண்பது தவறு என உணர்ந்தேன். குறிப்பாக குழந்தைகளை விரைவில் இந்த பூசனம் பிடித்த பொருட்கள் சென்று அடையும். எனவே தாய்மார்கள் பூசனம் பிடி[த்த] தவற்றை தூர எறிய வேண்டும்." என ஆணித்தரமாக சொன்ன ஞானசுப்பிரமணியன் புற்றுநோயை அகற்றுவது பற்றி ஆராய்ச்சியில் ஈடுபடப் போவதாக சொன்னார். இந்த 29 வயது வாலிப[ர்] மக்கள் மீது இவ்வளவு அக்கறை கொண்டு செயல்படுவதைப் பார்த்[த] போது பாராட்டாமல் இருக்க முடி[ய]வில்லை.

பேட்டி: சோமு. சுப்பைய[ா]

---

சந்தோஷமா மிச்சங்களையெல்லாம் எடுத்துச் சாப்பிட்டிண்டு இருக்கா. நானே இல்லே மத்தவாளோ சிக்கனம்னு சொல்லி எலையைத் துடைச்சு வெளியிலே போட்டா அவா வயிறு எப்படி நிரம்பும்? லட்சக்கணக்கிலே செலவு பண்ணிக் கல்யாணம் பண்ணறவன் எவன் அவனுக்கு ஒரு வேளைச் சோறு போடப் போறான்?"

அவர் காட்டிய திசையில் என் கண்கள் போன போது—

எச்சில் இலைகளை வழித்து வழித்து அவர்கள் தகர டப்பாக்களிலும் அழுக்கேறிய துணிகளிலும் தங்க[ள்] அடுத்த வேளை உணவுப் பிரச்சினையை சமாளித்துக் கொண்டிருந்தார்கள்.

"மன்னிக்கணும் ஸ்வாமி... இ[னி] மேல் என்னோட இலையிலேயு[ம்] ஏதாவது மிச்சம் வைக்கிறேன்" என்[று] சொல்லி அவரின் கரங்களைப் பற்றி[க்] கொண்டேன்.

O

# வந்தே மாதரம்

கொண்டாட ‘ஒரு நாள்’
குறித்துச் சொன்னவர்க்கு
நாட்டுமக்களே
நன்றி சொல்லுவோம்!

●

எங்கள்
சுதந்திரச் சூரியனின்
சுடுகரம் பட்டதால்
சூம்பிப்போன மழைப்பூக்கள்
அதோ அந்த
சூன்யக் கரைகளில்...

●

ஊட்டும் பாலுக்கேத்த
ஊட்டமில்லா அம்மாக்கள் —
ஈட்டும் ஊதியத்தில்
இடறி விழும் அப்பாக்கள்!

பெயரில்—
பத்தினித் தங்கங்கள்
தங்கி வழியவோ துளித்
தங்கமில்லா
பித்தலாட்டங்கள் ...
நடமாடும் சதைப்
பொம்மலாட்டங்கள்!

மஞ்சப் பொன்னாய்
மேனி மின்னிய காலங்கள்!
கண்ணில் கரைந்துவிட்ட
கனவுக் கோலங்கள்!
இன்றைக்கோ அவர்களின்
மஞ்சக் கயிறும்
மசகேறிப் போன நிலை!

●

வேலைவரம் வேண்டி
இந்த வாலிபத்துறவிகள்
கேள்விக் குறிகளாயினர்...
இவர்களின்
பாதம் தேயவில்லை — அந்தப்
படித்துறைகள்
தேய்ந்து போயின!

●

சூரிய திசை நோக்கிச்
சுற்றுமிந்த
சூரியகாந்திகள்
நம்பிக்கைகளை
வானில் வைத்து
அவநம்பிக்கைகளாய்
மண்ணில் அலைகின்றன!

●

செவிகளில் வாக்குறுதித்
தேன் தடவல்கள்!
ஜீவனிலோ
கருந்தேள்களின் நச்சுக்
கொடுக்குத் தீண்டல்கள்!

●

அவர்கள் கேட்டது
விடியலைத்தான்...!
பெற்றதென்னவோ
இருட்டையே அல்லவா?

●

ஆகாசத்தை
அண்ணாந்திடும்
பயிர்ப் பச்சையாய்
எங்கள் நாட்டு மக்கள்
விடியலை நோக்கி
விகசித்து நிற்கிறார்கள் ...!
விடியல் எங்கே...? விடியல்...
அதோ அந்த
அஸ்தமன மஞ்சள் நதியில்
அஸ்தியாய் கரைவதென்ன
—விடியல் தானா...?
விடியல் நோக்கித்
தொழுகை புரிந்தவர்
அஸ்தமனக் கரையில்
அழுகை புரிகிறார்!

●

இங்கே சுதந்திரமாக
—எழுதலாம்
—பேசலாம்
வாழமட்டும்...
—“வந்தே மாதரம்!”

மணிமொழி



# சீதப் புனல் பாடி

இங்கே ஒரு தரிசனம் தமிழில் வடிந்திருக்கிறது. ஆசாரம், அனுஷ்டானம் இவைகளுக்கப்பால் ஆச்சார்ய சுவாமிகள் ஒரு குழந்தையாக, குதூகலத்தோடு பேசிக் கொண்டிருந்தார்கள். பனிநதி உருகி பழனமெல்லாம் நிறைகிற போது உண்டாகிற சிலிர்ப்பு அவர்களைப் பார்த்தபோது எனக்கு உண்டானது. ஆச்சார்ய சுவாமிகளின் தரிசனத்திற்குத் துணைநின்ற காமகோடி குருக்கள், தமிழ்மாறன் போன்றவர்கள் நினைவில் நிற்கிறவர்கள். பித்தன்போல் பிரகாரத்தையே சுற்றிக் கொண்டே இருக்கிறேன்... இதோ கர்ப்பகிரஹத்தின் கதவுகள் திறக்கின்றன...

கேள்வி: இந்திய இளைஞர் இயக்கம் என்று ஆச்சார்ய சுவாமிகள் தொடங்கியிருப்பதாக அறிகிறோம். அதன் அவசியத்தைப் பற்றி...

பதில்: தங்கள் மொழி, தங்கள் தங்கள் மாநிலம் என்ற உணர்வுகள் அதிகமாகி விட்டன. பாரத தேசம் என்கிற பரந்த உணர்வு மங்கிக் கொண்டே வருகிறது. மற்ற சமயங்களைப் புரிந்து கொள்ளாமையால் சண்டை வளருகிறது. 'இந்தியன்' என்கிற உணர்வு மேலோங்கும் என்றால் இப்படி பிரிவினைகளும், பேதங்களும் வருவதற்கு அவசியமில்லாமல் போகும். ரோட்டரி, லயன்ஸ் கிளப் போன்ற அமைப்புகளுக்கு என்ன நல்ல நோக்கம் உண்டோ அதைவிட இதற்கு நல்ல நோக்கம் உண்டு. சேலத்தில் இந்த இயக்கம் சிறப்பாக நடந்து கொண்டிருக்கிறது. இந்தியாவின் கலாச்சாரம், பண்பாடு இவற்றைப் பாதுகாத்துக் கொண்டே நமது மக்களுக்கு சமூக சேவை பண்ண வேண்டும் என்பதே நோக்கம். இந்தியா காக்கப்பட வேண்டும்.

கே: ஆச்சார்ய சுவாமிகளே, இந்திய கலாச்சாரம், பண்பாடு இவைகள் காக்கப்பட வேண்டும் என்று தாங்கள் சொல்லுகிறீர்கள் —எளியேன் பார்த்த வரைக்கும் தமிழ்நாட்டவரைக் குறுகிய மனப்பான்மை கொண்டவர்கள் என்பதாக வடக்கிலே சித்தரிக்கிறார்கள். கபீர்தாசரைப் பற்றி பேசுகிற போது நாம் பரந்த மனம் படைத்தவர்கள் — திருவள்ளுவரைப் பற்றிப் பேசுகிற போது மாத்திரம் நாம் குறுகிய மனம் படைத்தவர்கள் என்றால் எப்படி?

ப: கபீர்தாசைப் பற்றிப் பேசுகிற போது அப்படி ஒருவரும் சொல்லுவதாக எனக்குப் படவில்லை. இருந்தாலும் இதில் வடக்கு, தெற்கு என்கிற பேதா பேதம் பார்க்க வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக திருவள்ளுவர், கபீர்தாஸ் இருவருமே இந்தியக் கலாச்சாரத்தின்

☆☆☆ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின்
சிறப்புப் பேட்டி

# சிற்றம்பலம் பாடி...

## வலம்புரிஜான்

பிரதிநிதிகள் என்று நாம் நினைக்க வேண்டும். வடக்கே இந்தி மாத்திரமே இருப்பதாக நினைக்கிறோம். நம்மைத் தாண்டி ஒரியா, வங்காளி, பஞ்சாபி பல மொழிகள் — அதிலும் இந்தியில் பல பிரிவுகள் — இந்த மக்களுக்கெல்லாம் நமது திருவள்ளுவரை — இங்கிருக்கிற ஒழுக்க இலக்கியங்களை நாம் தரவேண்டும். நமது முன்னவர்களை அவர்களின் ஞானத்தை எவருக்குமே தராமல் நாமே வைத்துக் கொண்டிருந்தால் எப்படி? திருக்குறளை நாங்கள் இந்தியிலே போட்டிருக்கிறோம். ஆகவே வடக்கிலிருப்பவர்களெல்லாம் அவரது போதனைகளைத் தெரிந்து கொள்ள முடிகிறது. நமது பெருமைகளை நாமே நமக்குள்ளேயே பேசிக் கொண்டிருந்தால் எப்படி? அடுத்தவர்களோடு அந்த ஒழுக்க போதனைகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டாமா?

கே: திருக்குறளுக்கே நமது மடம் எதிராக இருப்பது போல ஒரு பிரமையை உண்டாக்கி விடுகிறீர்களே...





ப: திருக்குறளில் சொல்லப்பட்ட பொருளியல்படி பொதுவாக அரசியல் இல்லை. அறத்துப்பாலில் சொல்லப் பட்டதிலிருந்தும் மக்கள் வெகுவாக விலகிவிட்டார்கள் — இன்பத்துப் பாலை படிக்க வேண்டியதில்லை. காரணம் அதிலே தான் ஏற்கனவே மூழ்கி இருக்கிறார்கள் என்கிற பொருளிலே திருக் குறளைப்பற்றி கருத்துச் சொன்னேன்.

## திருக்குறளைக் கட்டாய பாடமாக்க வேண்டும்!

அதே நேரத்தில் திருக்குறளில் உள்ள முதல் 10 பாடலை கட்டாய சமயப்பாட மாக வைக்க வேண்டும் என்றும், அதன் மூலமாக ஒழுக்கம் நீதி இவைகளை குழந்தைகளுக்கு ஊட்ட வேண்டும் என்றும் சொன்னேன். இதை ஒரு அரசியல் தலைவர் திரித்துப் பேசி விட்டார். ஒழுக்கத்தை, நல்லதைச் சொல்லு கிற நூலுக்கு எதிராக எவராவது பேசு வார்களா?

கே: நமது இந்து சமயத்தில் சின்னச் சின்ன விவகாரங்களுக்குக்கூட சடங்குகளும், ஆச்சாரங்களும் நிரம்ப இருக்கின்றன. அப்படி இருக்கும் போது வேறு மதத்தவரை இந்து சமயத்தில் சேர்த்துக் கொள்ளுவதற்கு குறிப்பிட்ட சடங்காச்சாரங்கள் தொடக்க காலத்தில் இருந்து ஏன் இல்லை? அல்லது இருக்கிறதா? மிகப் பிற்காலத்தில் வந்திருக்கிற தீட்ஷை முறைகளைப் பற்றி சொல்ல வில்லை.

ப: நமது இந்து சமயம் பரந்த விசால மான மனம் படைத்தது. ஆகவே இந்துக் கள் தங்கள் சமயம் உயர்ந்தது, பிற சமயங்கள் தாழ்ந்தவை என்று எப் போதும் எண்ணியவர்கள் அல்ல. எம் மதமும் சம்மதம் என்கிற நிலை இருந்தது. ஆகவே சமணம், பௌத்தம் போன்ற சமயங்கள் வந்த நாட்களில் அவைகள் வேறு சமயங்கள் என்பதற்காக அல் லாமல், வேதநெறிக்கும் குறிப்பாக ஆன் மீகத்திற்கும் விரோதமாக அவைகள் கருதப்பட்டதால் அங்கு சென்றவர்களை இந்து சமயத்தில் மீண்டும் சேர்த்துக் கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட் டது. அப்பர் சுவாமிகளின் கதை உங் களுக்குத் தெரிந்ததுதானே? ஆகவே பிற சமயங்களுக்குச் சென்றவர்கள் திரும்ப வருவதற்கு ஏதோ ஒரு முறை இருந்திருக்கிறது என்பது தெரிகிறது.

## இந்து சமயத்தை அல்ல இந்தியாவைக் காப்பாற்ற வேண்டும்!

கே: பிற சமயங்களிலிருந்து நமது இந்து சமயத்திற்கு ஒருவரை சேர்த்துக் கொள்ளுவதற்கு குறிப்பிட்ட சடங்காச் சாரம் இருந்ததில்லை என்றால் ஆச் சார்ய சுவாமிகள் சொன்னபடி எல்லாச் சமயங்களிலும் உண்மை இருக்கிறது என்று இந்து சமயம் நம்பு கிறது என்று பொருளாகிறதே. அப்படி என்றால் இப்போது சில இடங்களில் நமது இந்து சமயத்தில் பிற சமயத்த வரைச் சேர்க்கிறோமே இது நமது இந்து சமயத்தின் அடிப்படை நம்பிக் கைக்கு எதிரானது என்று ஆச்சார்ய சுவாமிகள் கருதுகிறீர்களா?

ப: நான் அப்படி கருதவில்லை. இந்து சமயத்தை ஒருவரும் காப்பாற்ற வேண் டாம். அது தர்மம். அது தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளும். எனக்கு இந்தியாவைக் காப்பாற்றியாக வேண் டும். அதற்கு இந்து சமயம் சிதையாமல் இருக்க வேண்டும் அல்லவா?

அதற்கான முயற்சி இது என்று வைத்துக் கொள்ளுங்களேன்! அதற்குத் தான் இந்த இளைஞர் இயக்கம் எல்லாம்.

கே: ஆச்சார்ய சுவாமிகளே! அப்படி என்றால் இந்த இளைஞர் இயக்கத்தில் இஸ்லாமியர், கிறிஸ்தவர்களை எல்லாம் சேர்த்துக் கொள்ளுவீர்களா?

ப: ஓ! தாராளமாகச் சேரலாமே! இது இந்திய இளைஞர் இயக்கம் தானே? அதற்கான விதிமுறைகள் எல்லாம் அச்சடிக்கப்பட்டிருக்கிறது நீங்களே படித்துப் பாருங்கள்.

கே: ஆச்சார்ய சுவாமிகள் இந்தியாவைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுவதில் இரண்டு கருத்துக்கள் இருக்க இயலாது. இருந்தாலும் தமிழ் நாட்டில் இருக்கிறவர்களை வடக்கே உள்ள சிலர் அன்னியர்களாகக் கருதுவது போல் தெரிகிறதே?

ப: உங்களை ஒருவரும் அன்னியர் என்று நினைக்கவில்லை. நாமெல்லாம் இந்தியர்கள். இந்த உணர்வுதான் மேலோங்கி வர வேண்டும். நாம் இன்னமும் கொஞ்சம் விசாலமாகப் பார்க்க வேண்டும்.

கே: தமிழ்நாடு, தமிழ்மொழி இவற்றின் மீது வைத்திருக்கிற பற்றை குறுகியது என்று சிலர் குறிப்பிடுகிறார்கள். அதற்கு இருக்கிற காரணங்களில் இந்தியாவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழ்நாடு சின்னதான பூமி என்பதும் ஒன்றாகும். இந்தியாவோடு தமிழ் நாட்டை ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழ்நாடு சிறியது என்றால் உலகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இந்தியாவும் சிறியதுதானே?

ப: சிறிது எது-பெரிது எது? நாமெல்லோரும் இந்தியாவை விடுவிப்பதற்காகப் போராடியவர்கள். ஒன்று போலப் போராடித்தான் விடுதலை பெற்றிருக்கிறோம். இத்தனை வருடங்களாக இது நமது பூமி என்று இதற்கு எல்லை வகுத்துக் கொண்டிருக்கிறோம். இந்தியா நமது பூமி என்று ஆகிவிட்டதே! சின்னதான நாடு



இஸ்ரேல். அந்த பூமி மீது அவர்களுக்கு இருக்கிற பாசம் நமக்கு இருக்க வேண்டாமா?

வெளி நாடுகளில் நமது இந்தியாவின் தலை தாழ்ந்தால் நமக்கு வருத்தம் வர வேண்டாமா?

கே: ஆச்சார்ய சுவாமிகளே இப்போது புரட்சித் தலைவரின் அரசு சத்துணவு திட்டம் என்று கொண்டு வந்து ஏழைக் குழந்தைகளுக்கு எல்லாம் சோறிடுகிறதே — அதைப் பற்றி சுவாமிகள் என்ன சொல்லுகிறீர்கள்?

**தாயை மறந்தாலும் குழந்தைகளுக்குச் சோறு போடுகிறவரை மறத்தல் ஆகாது!**

ப: நல்ல திட்டம். சிறந்த திட்டம். சோறு போடுகிறவர்களை நாம் ஒரு நாளும் மறக்கலாகாது. தாயை மறந்தாலும் இப்படிச் சோறு போடுகிறவரை மறக்கக் கூடாது. தாய்க்கு நன்றி கூறுவது போல இப்படிச் சோறு போடுகிறவருக்கு தலைமுறைக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். இது மாபெரும் புண்ணியம். மறுக்கவே முடியாது. ரோட்டரி, லயன்ஸ் போன்ற பொது ஸ்தாபனங்களின் சேவைகளை பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு என்று ஒரு இலாகாவே உருவாகலாம். இருந்தாலும் இது சாப்பிடுகிற விஷயம். (சிரிக்கிறார்) கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

கே: தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள் ஏற்கெனவே மக்கள் செல்வாக்கைப் பெற்றவர்கள். ஆகவே மக்கள் ஆதரவைப் பெறுவதற்காக இப்படி ஒரு திட்டத்தை அமுல்படுத்த வேண்டிய அவசியம் இல்லாதவர் அவர். ஆகவே குழந்தைகள் பசியாய் இருக்கலாகாது என்று கருதித்தானே தாய் போல இதைச் செய்கிறார்?

ப: அதுதான் சொன்னேனே சிறந்த திட்டம். ஆத்மார்த்தமாக மிக நல்ல திட்டம். செயல்படுகிற முறையைக் கண்காணித்துக் கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அனுகூலம் வருவதற்குப் பதிலாக அவப்பெயர் வந்து விடும்.

(அடுத்த இதழில் நிறைகிறது)

அட்டை வண்ணப்படம்

படங்கள்: எம். கே. ராமமூர்த்தி



**'தாய் சேய்'—**
**புகைப்பட போட்டியின் முடிவு :**

போட்டிக்கு வந்த புகைப் படங்கள் மொத்தம் 1510.

அதில் முதல் பரிசு பெற்ற படம் இது—

படம் அனுப்பியவர்:

திருமதி சி. மாலினி நாயர்
சென்னை-91

'தாய்' சேய்களை அன்போடு வாழ்த்துகிறாள்.

## ஓவியர்கள் கவனிக்க:

சிறந்த ஓவியம் வரைகிற லே-அவுட் செய்ய அறிந்த முன் அனுபவம் உள்ள ஓவியர்கள்—லே-அவுட் ஆர்ட்டிஸ்டுகள் 12—8—82, 13—8—82 ஆகிய தேதிகளில் மாலை 5மணி அளவில் தாய் அலுவலகத்தில் ஆசிரியரைச் சந்திக்கலாம்.

# நீயா? நீங்களா?

## டாக்டர் உமாமகேஸ்வரி



ஆங்கிலத்தில் எல்லாம் 'you' தான். தமிழிலோ நீர், நீ, நீங்கள். ஆங்கிலத்தில் 'He'. தமிழிலோ அவன், அவர், அவர்கள். நம் நண்பர்களை 'நீ' என்று அழைப்பதற்குப் பதிலாக நீங்கள் என்று அழைத்தால் அவர்களுக்கு நிம்மதி.

'வா' 'போ' என்பது மரியாதைக் குறைச்சலாக இருக்கலாம்; இல்லாமல் இருக்கலாம். அது இடத்தைப் பொறுத்தது. சொல்லப்படுகிற சூழ்நிலைக்கும் அதற்கும் கூடச் சம்பந்தம் இருக்கிறது.

ஒரு தடவை கடுமையான காய்ச்சலால் நான் துன்பப்பட்டேன். பால் கொண்டு வந்த நர்ஸ் 'உனக்கு பால் வேண்டுமா?' என்று ஏக வசனத்தில் கேட்ட காரணத்தால் எழுந்து வந்து விட்டவன் நான்.

அன்போடு அழைக்கிற குழந்தை, அப்பாவை நீ என்று அழைப்பது குற்றம் இல்லாமல் இருக்கலாம். ஆண்டவனைக் கூட நீ என்று அழைக்கிறோம். அதில் தப்பில்லை.

இருந்தாலும் நீ, நீர், நீங்கள் என்று மூன்று சொற்கள் வந்து விட்டன. ஆகவே அந்த மூன்றுக்கும் வெவ்வேறு வகையான பொருளும் வந்து விடுகின்றன. பொருத்தமும் வந்து விடுகின்றன.

சிறு குழந்தையாக இருந்தால் கூட நீங்கள் என்று அழைத்தால் அதற்கு ஒரு நிம்மதி. ஒருவரை எப்படி அழைக்க வேண்டும் என்பதற்கு தந்தை பெரியார் மிகப் பெரும் உதாரணமாக வாழ்ந்தவர். வயதிலே மிகச் சின்னவர்களைக்கூட பெரியார் 'அவர்களே இவர்களே' என்றுதான் அழைப்பார். அப்படி அழைப்பதால் நமக்கு எப்போதும் குறை ஏற்படப் போவதில்லை.

நீ என்று அழைப்பதை நீங்கள் என்று நீட்டுகிறபோது நமது அன்பும் பண்பும் வெளிப்படுகிறது என்பதை நாம் மெய்யாகவே உணர வேண்டும்.

எல்லோராலும் நீ என்று அழைக்கப்படுகிற ஒருவரை — நாம், நீங்கள் என்று அழைத்து விட்டால் அவர்மனம் மலர்ப் பூங்காவாகிவிடுகிறது.

இது ஒரு மனிதனை புகழ்ந்து சொல்ல வேண்டும் என்பதற்காக அல்ல. அவனை மகிழ்வித்தாக வேண்டும் என்பதற்காகச் சொல்லப்படுவது. மயக்குவது வேறு; மகிழ்விப்பது வேறு.

மரியாதையோடு பேசுகிறவர்கள் மதிக்கப்படுகிறார்கள். அல்லாதவர்கள் கால வெள்ளத்தில் கரைந்து போகிறார்கள்.

எது மரியாதை? எது மரியாதைக் குறைவு என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்கின்றன.

சிலர் காலுக்கு மேல் கால் போட்டிருப்பதை மரியாதைக் குறைச்சல் என்கிறார்கள். அவன் காலை எடுத்து நம்மீது போட்டிருந்தால் நாம் அப்படிச் சொல்லுவதிலே பொருள் இருக்கும். அவன், அவன் காலை எடுத்து அவன் மேலே போட்டிருக்கிறான். இந்த அடிப்படை உரிமை மறுக்கப்படலாமா?

விசிலடித்தல் மரியாதைக் குறைச்சல் என்று பேசுகிறார்கள். கரம் ஒரு உறுப்பு. அதைத் தட்டுகிறபோது ஒரு ஒலி வருகிறது. உதடு ஒரு உறுப்பு. அதில் காற்றை இழுக்கிறபோது அல்லது விடுகிறதுபோது ஒருவித ஒலி வருகிறது. கரத்தில் இருந்து வருகிற ஒலி வரவேற்கப்படுகிறபோது உதட்டிலே இருந்து வருகிற ஒலி வசை பாடப்படுகிறதே ஏன்?

நாம் சிந்திக்க வேண்டும். சிந்திக்க மறக்கிற காரணத்தால் அல்ல சிந்திக்க மறுக்கிற காரணத்தால் எவ்வளவோ விளைவுகள்! இன்றிலிருந்து நீ என்று அழைப்பதை விட்டு விடுங்கள். மகிழ்ச்சிப்பூ மலர்கிறதா இல்லையா பார்ப்போம்.

# சீதப்புனல் பாடி



கே: மதம் மனிதனுக்கு அபின் என்று சொன்ன பொதுவுடைமை நாடுகளில் கூட இங்கு நடந்தது போல கடவுளுக்கு எதிராக ஒரு இயக்கம் நடக்கவில்லை. இருந்தும், கடவுளுக்கு எதிரான இயக்கம் ஏறத்தாழ இங்கு தோற்றுப்போனது. இந்தச் சமுதாயமோ பாதுகாப்பு இல்லாத சமுதாயம். சமூகப் பாதுகாப்பு இல்லாத நாட்டில் கடவுள்தான் ஒரே சமூகப் பாதுகாப்பு.

ஆகவே இருக்கிற ஒரே பாதுகாப்பான கடவுளை அகற்றுவதால் மக்கள், பாதுகாப்பைக் கருதி கடவுளைப் பிடித்துக் கொள்கிருர்கள் என்று எளியேன் நினைக்கிறேன். இது சரியா?

ப: நீங்கள் சொல்வது ஓரளவு சரியாக இருக்கலாம். கடவுள்-சமயம் இவைகளைத் தாக்கிப் பேசுவதால் ஒழுக்கக் குறைவு உண்டாகிறது. திருடுகிறவனும் கடவுளைத்தான் சொல்லுகிருன். திட்டுகிறவனும் அவனைத்தான் திட்டுகிருன்.

கடவுளிலே கூட கருமாரி அம்மன் இடத்திலே போவது—பிறகு அதை விட்டுவிட்டு மாங்காடு போவது அங்கும் நடக்கவில்லை என்ருல் மருவத்தூர் போவது இப்படி மக்கள் மனம் அலை பாய்ந்து கொண்டிருக்கிறது.

கே. ஒரு வார இதழில் எழுத்தாளர் ஜோதிர்லதா கிரிஜா எழுதியதாக ஒரு செய்தி வந்திருக்கிறது.

'ஆச்சார்ய சுவாமிகள் விதவைகளையும் பார்க்க மறுத்தால், சுவாமிகளுக்குத்தான் இவர்களைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை' என்று எழுதி இருக்கிருர்கள். அதைப் பற்றி சுவாமி என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

ப: இதுமாதிரி கட்டுப்பாடுகள் நல்லதைக்கருதியே வந்திருக்கின்றன.

இதுமாதிரிக் கட்டுப்பாடுகள் பிராமண விதவைகளுக்கு—அதுவும் ஒரு சில பகுதிகளேதான் பொருந்துகிறது.

அப்பேர்ப்பட்ட விதவைகளை அவமானப்படுத்தப்பட வேண்டும் என்ற எண்ணம் எள்ளளவும் இல்லை.

உதாரணத்திற்கு நான் சந்நியாசியாக இருப்பதால் 'கிராப்பு' வைத்துக்

ஜகத்குரு காஞ்சி
காமகோடி பீடாதிபதி
ஸ்ரீஸ்ரீஸ்ரீ. ஜயேந்திர சரஸ்வதி
சுவாமிகளின்
சிறப்புப் பேட்டி—
(சென்ற இதழ் தொடர்ச்சி)

# சிற்றம்பலம் பாடி...

# வலம்புரி ஜான்

கொள்வது இல்லை. அது போலவே விதவைகளுக்கும் ஒரு வாழ்க்கை முறை வைத்து இருக்கிருர்கள். அதைச் சரிவர புரிந்து கொள்ள வேண்டும்.

கே: ஆச்சார்ய சுவாமிகள் கிராமங்களுக்கெல்லாம் செல்கிறீர்களே—இப்போதேனும் மாற்றம் இருக்கிறதா?

ப: கிராமப் புறங்களில் வாழ்கிற தாழ்த்தப்பட்ட மக்களுக்காக இந்த அரசாங்கம் எவ்வளவோ செய்கிறது.

ஆனாலும், எப்போதும் போல முழு அளவிலும் அந்த நன்மைகள் அவர்களை எட்டவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.





ஒரு அரிஜன் தனக்குள்ள எல்லா குறைகளைச் சொல்வதற்காக தனக்கென்று நியமிக்கப்பட்ட அரிஜன இலாகா அதிகாரியையே நேரில் அணுகும்படியான சூழ்நிலை வரவேண்டும். மாவட்ட ஆட்சித் தலைவர் போன்ற, வருவாய்த்துறை அதிகாரிகளை ஒரு அரிஜன் இவ்வளவு எளிதாக அணுகி விட முடியாது.

கிராமங்களில், நமது அரசாங்கம் கவனம் செலுத்திய போதிலும், இன்னமும் நிரம்பக் குறைகள் இருக்கின்றன.

அரசாங்கம் செய்வதில் குறைவில்லை. செய்வது முழுஅளவில் அவர்களை எட்டும் படியாகச் செய்ய வேண்டும்.

கே: நமது இந்து சமயத்தில் முற்போக்கு என்று தங்களைச் சொல்லிக் கொள்கின்றவர்கள் கூட, தாங்கள் வழிபடுகின்ற ஆலயத்திற்குள்ளே தான் அரிஜனங்களை விடுகிறோம் என்று பேசுகிறார்களே அல்லாமல், சேரிகளில் அந்த மக்கள் வழிபடுகிற கடவுள்களை ஏன் இவர்கள் சென்று வழிபடச் கூடாது?

இந்த முற்போக்காளர்கள், அந்த மக்களை மாத்திரம் அல்லாமல், அந்த மக்கள் வழிபடுகிற கடவுளைக்கூட நிராகரிக்கிறார்களே!

ப: சேரி ஜனங்கள் ஊருக்குள் வர முடியாத அவலநிலை சில இடங்களில் நீடிக்கிறபோது நீங்கள் சொல்லுவது எப்போது சாத்தியமாகப் போகிறது?

இருந்தாலும், கிராம தேவதைகளுக்கு வழிபாடு நடக்கிறபோது அவைகள் சேரிக்குள்ளே இருந்தாலும் எல்லா ஜாதிக்காரர்களும் அங்கே வருகிறார்கள்.

உங்கள் கேள்விக்கு பதில் இதிலேயே இருக்கிறது.

கே: ஆர். எஸ். எஸ்.க்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை என்று ஆச்சார்யா சுவாமிகள் சொன்னதாக பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது.

அவருக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை என்றால் 'அந்த அவர்' மோசமானவர் என்று தானே அர்த்தம்?

ப: நான் சர்வோதய சங்க விழாக்களுக்குப் போகிறேன். அப்படித்தான் சேலத்தில் ஆர்.எஸ்.எஸ். விழாவிலும் கலந்து கொண்டேன்,

ஆர்.எஸ்.எஸ். அடிப்படை ஒழுக்கத்தைத்தான் வற்புறுத்துகிறது என்று நான் கருதுகிறேன்.

கே: ஆச்சார்ய சுவாமிகளே! ஒவ்வொரு சாதிக்கும் ஒரு சங்கம் வந்து விட்டதே.

ப: அந்தக்காலத்தில் ஊர் கட்டுப்பாடு என்று ஒன்று இருந்தது. இப்பொழுது ஒவ்வொரு ஜாதிக்கும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள சங்கங்களை ஏற்படுத்துகிறார்கள்.

இந்த ஜாதிய சங்கம் கடவுளைப் பற்றி

பேசவே இல்லை என்பதுதான் வருத்தம்.

ஒரு ஜாதிய சங்கம் வேறு ஒரு ஜாதிய சங்கத்திற்கு எதிராகப் போகக் கூடாது.

நாடு ஒன்று-நாம் ஒன்று என்று எல்லோரும் வேற்றுமையில் ஒற்றுமை காண வேண்டும்.

கே: தமிழ்நாட்டில் ஆலயங்களின் நிர் வாகத்தைப் பற்றி ஆச்சார்ய சுவாமி களின் கருத்து என்ன?

ப: கடவுள்களிலும் பணக்காரக் கடவுள், ஏழைக் கடவுள் என்று சிலர் கிண்டல் செய்யும்படியாக இருக்கிறது. சில கோயில்களுக்கோ அதிக வருமானம். சில கோயில்களோ பூட்டப்படுகிற நிலையில் இருக்கின்றன.

சாப்பிடுவதற்கே இல்லாத போது தங்கத்தேர் பண்ணி என்ன பண்ணு வது?

பெரியார், அண்ணா, பல்லவன் என்று போக்குவரத்துக் கழகங்கள் எல்லாம் இருக்கின்றன. ஒன்றில் நஷ்டம் வரலாம், ஒன்றில் லாபம் வரலாம்.

ஒன்றில் நஷ்டம் வருகிறது என்ப தற்காக அந்த நிறுவனத்தை நிறுத்தி விடுவார்களா?

அதுபோலவேதான் — ஆலயங்களை மண்டலங்களாகப் பிரித்து, வருமானம் உள்ள கோயில்கள், வருமானமில்லா கோயில்களைப் பராமரிக்கும்படி ஏற்பாடு பண்ண வேண்டும்.

---

## வீணை மீட்ட வருமா? இதோ ஒரு போட்டி!

### முதலமைச்சர் புரட்சித் தலைவரின் வீணை—பரிசு பெறப்போட்டி

மாண்புமிகு தமிழக முத லமைச்சர் திரு. எம். ஜி. ஆர். அவர் களுக்குப் பரிசாகக் கிடைத்த வீணை யொன்றை இசைவல்ல இளைஞர் ஒரு வருக்குப் பரிசாக அளிக்குமாறு தஞ்சை யில் உள்ள தமிழ்ப்பல்கலைக் கழகத்தைக் கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

1982 ஆகஸ்ட் 26- ஆம் நாள் காலை 9-மணியளவில் தமிழ்ப்பல் கலைக் கழக வளாகத்தில் இந்தப் பரிசுக் குரியவரைத் தேர்ந்தெடுப்பதற்குத் தேர்வு நடக்கும்.

தமிழ்நாட்டிலுள்ள இசைக் கல்லூரிகளில் பயிலும் மாணவர்களில், கல்லூரிக்கு ஒருவர் வீதம் கல்லூரி முதல் வரின் பரிந்துரையுடன் போட்டியில் பங்கேற்கலாம். 25 வயதுக்கு மிகாத ஆண், பெண் இருபாலரும் கலந்து கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர் அடுத்தநாள் நடைபெறும் இசைக் கருத்தரங்கில் வீணையைப் பரி சாகப் பெறுவார்.

வேலூரில் ஜெய்சங்கர் நடித்த 'பட்டணத்தில் பூதம்' படத்தைத் திரையிட்டிருக்கிறார்கள்! ஆனால், போஸ்டரில் 'எங்க வீட்டுப்பிள்ளை எம். ஜி. ஆர். நடித்த' என்று அச்சிட் டிருக்கிறார்கள். ஒரே ஒரு காட்சியில் எம். ஜி. ஆர். தோன்றுகிறார் என்பது குறிப்பிடவேண்டிய சிறப் பம்சம்!

—ராம்சே, பம்மல்.



### ஸ்கூட்டரோ ஸ்கூட்டர்

இந்தியாவில் தயாரிக்கப்படும் ஒரே 100 c. c ஸ்கூட்டர் மத்திய அரசு நிறுவனமான ஸ்கூட்டர்ஸ் இந்தியா தயாரித்து வெளியிட இருக் கிறது. இந்த ஸ்கூட்டர் ஒரு லிட்டர் பெட்ரோலுக்கு 60 கி. மீ. ஓடக் கூடியது. அக்டோபரில் வெளி வர இருக்கும் இந்த ஸ்கூட்டர் தற்போது நந்தனத்தில் இருக்கும் மதராஸ் ஸ்கூட்டரிஸில் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளது. எரி பொருள் செலவு குறைவாக ஆகக் கூடியது.

---

அட்டையில் சொப்னா வண்ணப்படம் எம். ஆர். பிரதர்ஸ்

எல்லோருக்கும் தெரியறது மாதிரி நான் ஆக வேண்டும். டீச்சராகிப் போயிருந்தால் அது முடியாது. நீ என்ன படிக்கப் போறே என்ன செய்யப் போறேன்னு கேட்பாங்க இல்லே — அப்படி என்னைக் கேட்டபோது எனக்கு டான்ஸ் தெரியுமே டான்ஸராகலாமா— எனக்குப் பாட வருமே பாடப் போகலாமா என்றெல்லாம் இருக்கும். டான்ஸராய் இருந்தாலோ, பாடகியாய் இருந்தாலோ நம்மைப் பத்தி செய்தி வருமே, ரேடியோவில் பாடலாமே அப்படின்னு நினைச்சேன். சந்தோஷம் வந்தது.

இப்படி எல்லோருக்கும் உன்னை தெரியவேண்டுமானல் கதை எழுதலாமேன்னு கேட்டாங்க. சும்மா எழுதிப் பாரேன், மனசிலே என்ன நினைக்கிறியோ அதை எழுதுன்னுங்க. பரவாயில்லை எழுதலாமேன்னும் ஆசை வந்திடுச்சி. ஏன்னு யாராவது ஒன்னை என்கிட்டே சொல்லியாச்சுன்னு—இப்பொழுதும்கூட ஏன் அப்படி பண்ணலாமே — அது தேவை இல்லாத விஷயமாய் இருந்தால் கூட முயற்சிக்கலாமேன்னு தோணும். அதனலே நல்ல ஐடியாதான் இதுன்னு நினைச்சேன்.

ஒரு நாள் சித்தப்பாகிட்டே நான் சொன்னேன் — 'நீ மலைக்குப் போயிட்டு வரும்போது எனக்கு ஒரு மாலை கொண்டாங்க' — சொல்லும்போது எனக்கு இருந்த பயம் — 'அதுக்கென்ன உனக்கில்லாத மாலையா?'ன்னு அவங்க சொன்ன பதில் — இதை வைச்சு எழுதினேன். சித்தப்பா கிட்டே பேசினது — அவங்க பதில் — முக பாவனை, என் மனநிலை வைச்சு எழுத ஆரம்பிக்கையில், சித்தப்பா வேண்டாம் பதிலாக மாமா என்று வைத்துக் கொள்ளலாம் என்று 'மாமா எனக்கொரு மாலை வேணும்' அப்படின்னு எழுதிட்டேன். அடுத்து என்ன பண்ணணும். அம்பிகா பரஞ்னுன்னு எழுதினு கதை மாதிரி இருக்காது. பிந்து மாமனோடு பரஞ்னுன்னு ஆரம்பிச்சு... ஒரே நாளில் எழுதி முடிச்சேன். முடிச்சதும் பெரிய நாவல் ஒன்று எழுதி முடிச்சது மாதிரி நினைப்பு. பரவாயில்லையே, ஸ்டோரி எழுதராரேன்னு நானே எனக்குள்ளேயே சொல்லிட்டேன்.

எழுதறபோது தனிமையாய் இருந்து எழுதணும்... யாருகிட்டேயும் பேசாமல், தோப்புக்குள்ளே உட்கார்ந்து பாதி வரை — அதாவது மலைக்குப் போயிட்டு வாரேன்னு சொன்னதுவரை எழுதியாச்சு. இன்னும் கொஞ்சம் மாற்றம் செய்து எழுதணும்னு எழுதி முடிச்சேன்.

பேட்டி: மெர்ஸி மனே

படம்: சகலகலா வல்லவன்



# இருட்டடிப்புக்கள்



ஆகஸ்ட் பதினைந்து...

அங்கிங்கென்னாதபடி எங்கெங்கும் தேசியக்கொடிகள் சுதந்திரமாகப் பறந்து கொண்டிருந்தன.

தெருவுக்குத்தெரு ஒலிபெருக்கிகள் சுதந்திரதினத்திற்குச் சம்பந்தமில்லாத சினிமாப் பாட்டுக்களை அலறவிட்டுக் கொண்டிருந்தன.

அந்த ராட்சச ஒலிக்குவியலையும் மீறி அந்தந்த பேட்டைத் தலைவர்களின் வீராவேச சொற்பொழிவுகள்... தேசப்பற்றை பறை சாற்றிக் கொண்டிருந்தன.

மூலைக்கு மூலை அன்னதானப் பந்தல்கள்...

பெரிய பெரிய அண்டாக்களில் சமைத்து வைக்கப்பட்டிருந்த சாம்பார் சாத, தயிர்சாத வகையருக்களின் நறுமணம் சுதந்திரக்காற்றில் கலந்து கம்மென்று பரவி தெருவில் போய்க் கொண்டிருந்த அன்னதானக் கியூவில் நிற்க முடியாத 'இருக்கப்பட்டவர்'களுக்குக் கூட சபலத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

நகரத்தில் இரண்டு பெரிய தியேட்டர்களுக்கும் மூன்று ஜவுளிக்கடைகளுக்கும் உரியவரான சொக்கலிங்க முதலியார் நடத்தும் அன்னதான விழா மிகப்பெரிய அளவில் கோலாகலமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அன்றைய விழாவால் ஆயிரக்கணக்கான ஏழைகளின் வயிறு நிரம்புகிறது. என்கிற உண்மையைவிட பொது மக்களிடையே முதலியாரின் மதிப்பு... பெயர்... புகழ்... செல்வாக்கு இன்னும் பலபடிகள் உயரப் போகிறது என்ற உண்மை கனமானது.

ஒலி பெருக்கியில் முதலியாரின் அடிவருடிகள் மாறி மாறி அவர் புகழைப் பாடிக்கொண்டிருந்தனர்.




இதையெல்லாம் கேட்க எந்த ஏழைக்குப் பொறுமை...? பசித்த வயிரு யிற்றே...! கையில் அழுக்கடைந்த அலுமினியப்பாத்திரமும், தகர டப்பாவும் கண்கள் சாப்பாட்டு அண்டாக்களிலும்; கியூ நகராதா...நகராதா என்ற மனம் நிறைந்த ஏக்கமுமாக பன்ருடைத்தன மாக சாப்பாடே குறியாக இருக்கும் அந்த எளியவர்களுக்கு சொற்பொழிவு எப்படி செவியில் இறங்கும்...? எவன் எப்படிப்போருல் என்ன? அன்னதானம் செய்வது யாராக இருந்தால் என்ன...? "இன்னிக்கு வயிருர சாப்பாடு கெடைக் கப் போறது..." இது ஒன்றுதான் அவர் களின் அந்த சுதந்திரநாளின் ஜீவித லட்சியம்.

கியூ நகர நகர காலி அண்டாக் களும் நகர்ந்து சொக்கநாத முதலியார் அமுதசுரபியே வைத்திருக்கிருரோ...! அல்லது அலாவுதீனின் அற்புத விளக்கா...எத்தனை அண்டாக்கள்... ஆயிரம் ஏழைகள்!

அவரைச்சுற்றி பத்திரிகை நிருபர் களின் கூட்டம்...எண்ணற்ற காமிராக் களின் இதயங்களுள் அவர் உருவம் சிறைபிடிக்கப்பட்டன. அன்றைய மாலைப் பதிப்புகளில் அவர் உருவத்தை நகரின் அத்தனை கண்களும் தரிசிக்காதா...!

கொடுத்துக் கொடுத்துக் கை வலிக்க ஆரம்பிக்க...அத்துடன் பொறு மையும் விடை பெற்றுக் கொள்ள... மீதமுள்ள பணியைத் தொண்டர்களிடம் ஒப்படைத்து விட்டு விடை பெற்றுச் சென்ருர் முதலியார்.

ஓட்டேரிக் கிழவன் நிற்க முடி யாமல் தள்ளாடிக் கொண்டிருந்தான். வளைந்து உலர்ந்த தேகம்...குழி விழுந்த கண்கள்...குழிவிழுந்த கன்னம்...குழி விழுந்த வயிறு...வறுமை என்னும் விதி

யால் வாழ்க்கையே குழி விழுந்து...

பசி மிகுதியால் வயிறு முதுகுக்கு இடம் மாறிய விந்தை... அரை வயிற்றுச் சோறுகூட இரண்டு நாளாய்க் காணுத தால் குடல் கர்புர் என்று ஆர்ப்பாட்டம் செய்தது.

நேரம் நகர நகர... கியூவும் நகர்ந்து நகர்ந்து...

அப்பாடா... ஒட்டேரி கிழவனின் முறை ஒரு வழியாக வந்து விட்டது. கால்கள் கடுக்க உடம்பு தள்ளாட, உயிரைப் பிடித்துக் கொண்டு அத்தனை நேரம் தவம் கிடந்தது வீண் போக வில்லை. அவன் கையிலிருந்த சட்டி நிறைந்தது.

அரண்மனை போன்ற ஆடம்பர மான அடுக்கு மாடிக் கட்டடம் சாப்பாட்டு ஹாலை நிறைத்துக் கொண்டு பிரம்மாண்டமான டைனிங் டேபிள்... அதன் மீது கம்மென்று நறுமணத்தைப் பரப்பிக் கொண்டு வெஜிடபிள் புலவு... அவியல் வறுவல் பொரியல் வகைகள்... தயிர்வடை... முந்திரிபகோடா... பாதாம் அல்வா... பால் பாயசம்... ஃப்ரூட் சாலட்... என்று விதம் விதமாக.

லட்சங்களில் திளைப்பவரா யிற்றே... தினப்படி மெனுவிலேயே தவறுமல் ஸ்வீட் இருக்கும். இன்று சுதந்திர நன்னாள்... தேசபக்தி மிகுந்த வரல்லவா... நாட்டு விழாவை வீட்டு விழாவாகக் கொண்டாட வேண்டாமா? ஸ்பெஷல் அயிட்டங்களுக்குக் கேட்க வேண்டுமா!

வைர மோதிரங்கள் டாலடிக்கும் விரல்களால் நாசூக்காய் ஸ்பூனைப் பிடித்து புத்தருக்கு நெய்யால் செய்யப் பட்ட புலவைக் கொறித்துக் கொண்டிருந் தார் சொக்கலிங்கம். சுற்றிலுமுள்ள நாற் காலிகளில் பட்டும் வைரமுமாக தர்ம பத்தினி... புத்திரச் செல்வங்கள்...!

"... ஆயிரம் சொல்லு. முதலியா ருக்கு இருக்கும் பெரிய மனசு யாருக்கும் வராது. இன்னிக்கு எத்தனை ஏழைங் களுக்கு வயிறு ரொம்ப வழி செய்திருக் கார்..."

"இவரைப் போல் ஒரு தர்ம நெஞ்சுடையவரை எங்க பார்க்க முடியும்..." ... வெளியே காத்திருந்த இரு தொண்டர்களின் புகழாரம் தென்ற லென மிதந்து சொக்கலிங்க முதலியாரின் செவிகளில் புக... அவர் சுவைத்துக் கொண்டிருந்த பாதாம் அல்வாவின் சுவையில் நாக்கு இனித்தது போல் மனமும் நிறைந்து இனித்தது. பெருமிதத் துடன் மனைவிமக்களைப் பார்த்தார்.

"ஒட்டேரி... போதும் ஐயா... நீ துண்ணு. அதிசயமா இன்னிக்கி நல்ல சாப்பாடு கெடைச்சிருக்கு..."

"இருக்கட்டும் உப்பிலி. நீ வவுறு நெறைய சாப்பிடு. ஒரு வவுருவது முழுக்க ரொம்பட்டும். என்னைப்பத்திக் கவலைப்படாதே. கைநீட்டிக் கேட்டா எந்த புண்ணியவானுவது, ஒரு பத்து இருபது பைசாவாவது போடாமலா போருன்... பொறையோ பன்னோ வாங்கிண்டா போச்சு..."

ஒவ்வொரு வார்த்தையையும் உள்ளத்தினின்று வந்த உண்மையான கரிசனத்துடன் கூறிய ஒட்டேரிக்கிழவன் கூட்டத்தினிடையே வர முடியாத... வந்தாலும் ஜனங்கள் உடனே விரட்டி யடித்து விடக் கூடிய உடம்பெல்லாம் அழுகி நாற்றமெடுத்துக் கொண்டி ருக்கும் அந்தத் தொழு நோய்ப் பிச்சைக் காரனுக்கு மணக்கும் அன்ன தான சோற்றை கவனமாக ஊட்டிக் கொண்டி ருந்தான்.

'...சொக்கலிங்க முதலியார் எப் படிப்பட்ட புண்ணியவான்...! இப்படிப் பட்ட சேவை மனப்பான்மை லட்சத்தில் ஒருவருக்குத்தான் இருக்க முடியும். தருமதுரை... நல்லாயிருக்கணும்...'

ஹவுஸ்ஃபுல்லாகி விடப் போகிறதே என்கிற பதட்டத்தில் அவசரம் அவசரமாக சினிமாவிற்கு விரைந்து கொண்டிருந்த ஒருவன் அத்தனை அவசரத்திலும் தன்னுடன் வருபவனிடம் சொக்கலிங்கத்தின் அன்ன தானப் பணியைப் பாராட்டியபடி சென்றது மரத்தடியில் படுத்துக்கிடந்த ஒட்டேரிக் கிழவனின் காதிலும் விழத் தான் செய்தது. கியூ நகராதா என்னும் எதிர்பார்ப்பு இல்லை... எதிரில் சூடு பறக்கும் சாப்பாட்டு அண்டாக்கள் இல்லை... காற்றில் மிதந்து வரும் வார்த் தைகளை காது கிரகிக்க முடியாதபடி வேறு என்ன வேலை... பசி காதை அடைக்கும் என்பார்கள். அவன் இதயத்தை நிறைத்திருந்த திருப்தி உணர்வு இரண்டு நாள் பசியைக் கூட விரட்டி விட்டிருக்கிறதே...!

○

# தேகமல்ல..? சந்தேகம்!

## ராஜேஷ்குமார்

பஸ்ஸை விட்டு இறங்கி ஈ.எஸ்.ஐ ஆஸ்பத்திரிக்குள் நுழையும் போதே கணேசனுக்கு படபடப்பாய் வந்தது. மார்புபகுதி பூராவும் ரோடு என்ஜின் மாதிரி தடதடத்தது. முகம் அவனைக் கேட்காமல் வியர்த்து வழிந்தது. இன்செண்டிவ் வார்டையும், எக்ஸ்ரே யூனிட்டையும் கடந்து—ஒதுக்குப்புறமாய் இருந்த அந்தப் புதிய கட்டிடத்திற்குள் நுழைந்தான். எதிரே வந்து கொண்டிருந்த— கடந்த இரண்டு நாட்களில் பழக்கமாகிவிட்ட அந்த இளவயது நர்ஸ் சிநேகபாவமாய்ச் சிரித்தாள்.

"சொன்னபடி கரெக்டா டயத்துக்கு வந்துட்டீங்களே!" கணேசன் சன்னமான குரலில் கேட்டான், "டாக்டர் இருக்காருங்களா...?"

"ம்... இருக்கார்... ஆனா நேத்தைக்கு உங்களைப் பார்த்த டாக்டர் இல்லை... இவருக்கு இன்னிக்கு இந்த வார்டில் டியூட்டி..."

"எந்த டாக்டராயிருந்தா என்ன சிஸ்டர்... ரிப்போர்ட்டை படிச்சு, இருக்கிறதைச் சொல்ல வேண்டியது தானே...!"

நர்ஸ் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள். கணேசனுக்கு மறுபடியும் வியர்க்க ஆரம்பித்தது. ரிப்போர்ட்டைப் பார்த்து டாக்டர் என்ன சொல்லப் போகிறாரோ என்ற எதிர்பார்ப்பில் இதயம் தெறித்து விடுவதைப் போல் துடிக்க ஆரம்பித்தது. வேஷ்டியை மேலே உயர்த்தி கசகசப்பான முகத்தை அழுந்தத் துடைத்தான்.

"உள்ளே போங்க... டாக்டர் கூப்பிடறார்..."

கணேசன் எழுந்து—வேஷ்டியையும் சர்ட்டையும் நீவி விட்டுக் கொண்டு—கலைந்த கிராப்பை கைகளால் கோதிக் கொண்டு, தள்ளு 'கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

"வணக்கம் டாக்டர்..."

"உட்கார்"—என்றார்.

கணேசன் டாக்டருக்கு எதிரே இருந்த ஸ்டூலில் உட்கார்ந்தான்.

"உம் பேரு...?"

"கணேசன்..."

"எந்த மில்லில் வேலை பார்க்கிறே?"

"எஸ்ஸார்பி மில்லில்."

"நேத்தைய டெஸ்ட்டுக்கு என்னென்ன குடுத்துட்டுப் போனே?"—டாக்டர் கேட்டுக் கொண்டே மேஜையின் மேல் இருந்த ரிப்போர்ட் கவர்களை கலைத்து தேட ஆரம்பித்தார்.

கணேசன் ஒரு விநாடி தயங்கி விட்டு மெல்லிய குரலில் முணுமுணுத்தான்.

"ரத்தம்...மூத்திரம்...அப்புறம்..."

"விந்தா?"

"உம்..."

"பேர் என்ன சொன்னே...? கணேசனா?"

"உம்..."

"சி. கணேசனா?"

"ஆமா டாக்டர்..."

கவரை உருவினார் டாக்டர். கவரின் மேல் ஆங்கிலத்தில் கணேசனு

டைய பெயர் அழகாய் அச்சடிக்கப்பட்டிருந்தது. கவரில் இருந்த ரிப்போர்ட்டை எடுத்து—கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டு பார்த்தார் டாக்டர்.

பேயாய் அடித்துக் கொள்கிற மனசோடு டாக்டரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் கணேசன். ரிப்போர்ட்டை விட்டு பார்வையை நகர்த்தாமல்— ஏறக்குறைய அதையே வெறித்துக் கொண்டிருந்தவர்— ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு தலையை உயர்த்தினார். முகத்தில் சப்பிட்டுப் போன ஒரு பாவம்.

"உனக்கு கல்யாணமாகி எத்தனை வருஷம் ஆச்சு...?" டாக்டர் கேட்க-கணேசன் வறண்டுபோன உதடுகளை நாவால் தடவி ஈரப்படுத்திக் கொண்டே சொன்னான்.

"மூணு வருஷம்."

"இந்த மூணு வருஷத்தில் ஒரு தடவை கூட உன் மனைவிக்கு கர்ப்பம் உண்டாகல்லியா?"

"இல்ல டாக்டர்."

"நாள் தள்ளிப் போனது உண்டா?"

"இதுவரைக்கும் தள்ளிப் போனதே இல்லே டாக்டர்... மாசம் தவறும அதே நாளில் குளிச்சுடுவா!" டாக்டர் தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜையின் மீது வைத்தார். கோட்டுப்பையில் இருந்த கர்ச்சீப்பை எடுத்து முகத்தைத் துடைத்தபடியே கேட்டார்.

"மனைவியோடு சேர்ற சமயங்களில் ஏதாவது பிரச்னை இருக்கா?"

"இல்லே... டாக்டர்..."

டாக்டர் ஒரு விநாடி கண்மூடி—உதட்டைக் கடித்தார். பிறகு ரிப்போர்ட்டை எடுத்து கவரில் போட்டுக் கொண்டே சொன்னார்... "கணேசன்! இதைச் சொல்றதுக்காக நான் ரொம்பவும் வருத்தப்படறேன்.. உன்னோட ரத்தம்... விந்து... ரெண்டுலேயும் சரி... குழந்தையை உருவாக்கித் தரக் கூடிய அணுக்கள் இல்லே. உங்களுக்கு குழந்தை பிறக்க நூற்றுக்கு நூறு சாத்தியம் இல்லே. நீயும் உன்னோட மனைவியும் ஒரு குழந்தைக்காக ஆசைப்படறது... ஆகாயத்தில் இருக்கிற நிலாவைப் பிடிக்க ஆசைப்படற மாதிரிதான்..."

"டாக்டர்!" கணேசன் அதிர்ச்சி



யில் உறைந்தான்.

"தேர் ஆர் பர்சன்ஸ்...! உன்ன மாதிரி நிறைய பேர் இப்படி இருக்காங்க... மனசைப் போட்டு குழப்பி கிட்டு, ராப்பகலா தூங்காமே... குழந்தை பிறக்கல்லியேன்னு ஏங்கறதை விட்டுட்டு அநாதை விடுதியில் இருக்கிற ஏதாவது ஒரு குழந்தையை எடுத்து வளர்த்துக்க வேண்டியதுதான்... விஷயத்தை உன்னோட மணவிக்குச் சொல்லி பக்குவமா சமாதானப்படுத்து... போ..."

ரிப்போர்ட் கவரை அவனுடைய கைகளில் வைத்தார் டாக்டர்.

நடைபிணமாய் எழுந்தான் கணேசன்.

"தூலையில ஏந்திரிச்சதும் எங்கடா போயிட்டே கணேசா?"

—கை நிறைய சர்க்கரையை



# இப்பொழுது. சர்வதேச மார்கெட்டில் போட்டியிடும் டிவியை நீங்களும் வாங்கலாம்.



## சாலிடெர் தன் ஏற்றுமதி மாடல்களை அறிமுகப்படுத்துகிறது TS 32(E) & TS 53(E)

டெய்ம்லர், பாஷ் மற்றும் சீமன்ஸ் தயாரிப்புக்களை விற்பனை செய்து வரும், ஸ்ரீலங்காவில் உள்ள டிமோ லிமிடெட் என்ற பல நாட்டு வணிக நிறுவனம், சர்வதேச பிரபல படைப்புக்களோடு போட்டியிட, சாலிடெரைத் தேர்ந்தெடுத்துள்ளது. தரமேன்மைக்கு என்றும் தனிச் செல்வாக்குண்டு என்பதை இது காட்டுகிறது. உலக நாடுகளுக்குகந்த தரத்தினை வழங்கிடும் TS 32 (E) மற்றும் TS 53 (E) என்ற எங்கள் ஏற்றுமதி மாடல்களை இப்பொழுது நீங்களும் வாங்கலாம். அதன் சிறப்பம்சங்களைப் பார்ப்போம்.

## TS 32(E)

எழிலார்ந்த வடிவமும், ஆடம்பர சிறப்பம்சங்களும் இணைந்து இந்த சிக்கன மாடலை பகட்டான செட்டாக பரிமளிக்கச் செய்கின்றன. அழகு மிளிரும் லாமினேடட் காபினெட் பிளாஸ்டிக் முகப்பு, பின்னல் சட்டம் மற்றும் அனடைஸ்டு கண்ட்ரோல் பானல், L.E.D., ஒலி கட்டுப்பாடு மற்றும் ஒலிப்பதிவு செய்து அதைக் கேட்டு மகிழ பிக்-அப் இணைப்பு போன்றவை மற்ற செட்டுக்களுடன் ஒப்பிடும்போது இதை தனிச்சிறப்பு பெற்றதாக எடுத்துக் காட்டும் சில அம்சங்களாகும்.

## TS 53(E)

51 செ.மீ. பிக்சர் டியூப் கொண்ட ஒரு டீலக்ஸ் மாடல். மேலும் 20 செ.மீ. டுயல் கோன் ஸ்பீக்கருடன் ஒரு 10 வாட்ஸ் ஹைஃபை ஒலிப்பெருக்கியினால், மெல்லிய ஒலி அலைகளையும் ஈடு இணையற்ற தெளிவுடன் கேட்க முடிகிறது. ஒரு ஸ்விட்சை தட்டுவதன் மூலம் இதை ஒரு சிறந்த ஹைஃபை சிஸ்டமாக மாற்றி, உங்கள் டேப் ரிகார்டரையோ அல்லது ரிகார்டு பிளேயரையோ இதன் மூலம் இயக்கி உங்கள் மனம் கவர்ந்த இசையைக் கேட்டு மகிழலாம்.

ஒலி ஏற்றத் தாழ்விற்காக 'பாசு'ம் 'ட்ரெபில்' கண்ட்ரோல்களும் தனியாக அமைக்கப் பட்டுள்ளதால் உங்களுக்கு ஏற்றவாறு ஒலியை அதிகப்படுத்தவோ, குறைக்கவோ முடிகிறது. செய்தி வாசிப்பவரின் கண்ணிமைகளையும் தெளிவாகப பார்க்க முடிகின்ற ஈடு இணையில்லாத படத்தெளிவு, வெப்ப வேறுபாடுகளுக்கான தொழிற் நுட்பம், தேவையற்ற ஒலியை நீக்க தானே இயங்கும் சர்க்யூட் போன்ற சிறப்பான சாலிடெர் அம்சங்களைத் தாங்கி வருகின்றன இந்த இரண்டு மாடல்களும்.

இனி, எங்கள் சர்வீஸைப் பற்றி அறிய சாலிடெர் செட் வைத்திருப்பவரைக் கேட்டுப் பாருங்கள். பின்பு இதைத் தவிர மற்ற எதையும் நீங்கள் வாங்க மாட்டீர்கள்.

# சாலிடெர்

HE-541 B



"வரவேற்பு வேலையை அதோ அவருக்குக் கொடுத்ததால் பன்னீர் வாங்குகிற பணம் மீதியாச்சி."

"எப்படி?"

"வர்றவங்களை அவர் 'வாங்க, வாங்க'ன்னு சொன்னால் போதும், பன்னீர் தெளித்த மாதிரி அவங்க மேல விழும்."

—சி. பாஸ்கர்

அள்ளிக் கொண்டு —முகம் நிறைய சந்தோஷத்தை நிரப்பிக் கொண்டு — பாட்டி தன்னை எதிர்கொண்டதும் விழித் தான் கணேசன்.

"என்ன பாட்டி? என்ன விஷயம்?"

"பெரிய விஷயந்தாண்டா... மூணு வருஷத்துக்கப்புறம் உம் பொண் டாட்டி வாந்தியெடுக்க ஆரம்பிச்சி ருக்கா... நீ அப்பாவாகப் போறேடா... மருத்துவச்சி வந்து இப்பத்தான் ஊர்ஜிதம் பண்ணிட்டுப் போறு..." —கணேசனின் வாயைப் பிளக்க வைத்து கையிலிருந்த சர்க்கரையை கொட்டினுள் பாட்டி.

கணேசனுக்கு மூச்சை அடைத் தது.

கமலா முழுகாமே இருக்காளா? இது எப்படி சாத்தியம்? முகம் லேசாய் இருட்டடிக்க வீட்டிற்குள் நுழைந் தான்.

கமலா சுவரோரமாய் பாயில் முடங்கியிருந்தாள்.

கணேசனின் காலடிச் சத்தம் கேட்டதும்—வெட்கம் கலந்த புன்னகை யோடு எழுந்து உட்கார்ந்தாள். முகம் ஒருவித சோபையோடு விகசித்துக் கொண்டிருந்தது.

"கமலா...!"

"உம்..."

"இது எப்படி...?" கணேசன் அடிவயிற்றில் திணறினன். கமலா உர்ரென்று கேலியான சிணுங்கலோடு கணேசனைப் பார்த்தாள். "இது... எப்படியா...? அப்படித்தான்...! ஐயா வுக்கு ஞாபகமில்லையாக்கும்.. பதினேஞ்சு நாள் நான் ஊர்லயிருந்துட்டு இங்கே வந்ததும்... அன்னிக்கு ராத்திரி பூரா என்ன நீங்க... இம்சை பண்ணினதும்... இந்தத் தடவை நீங்க நிச்சயமா அப்பா ஆகப் போறிங்கன்னு நான் சொன்னதும் மறந்து போச்சாக்கும். உங்களை கடைசி யில அப்பா ஆக்கிட்டேன் பார்த்தீங் களா...? என்ன தரப்போறீங்க எனக்கு...?"

"தர்றேன்... தர்றேன்... சாயந்த ரம் வந்து தர்றேன்...ஷிப்ட்டுக்கு நேர மாச்சு... நான் வர்றேன்..."—துண்டை எடுத்து தோளில் போட்டபடி—வாசலில் நிறுத்தியிருந்த சைக்கிளை நோக்கி நடந் தான் கணேசன்.

மனசில் சின்னதாய் ஒரு ஆவேச அலை அடிக்க ஆரம்பித்தது.

கணபதி டெக்ஸ்டுலைத் தாண்டும் வரையிலும் கணேசனுக்கு அந்த வார்த்தையின் உறைப்பு தெரியவில்லை. பிறகுதான் மெதுவாய் புரிய ஆரம் பித்தது.

"உங்களை கடைசியில அப்பா ஆக்கிட்டேன் பார்த்தீங்களா?"

கமலாவைப்பற்றி கணேசனுக்கு நன்ருகவே தெரியும். கமலா தன்னுடைய அத்தை மகனை கட்டிக்க ஆசைப்பட்ட தும்—ஜாதகம் பொருந்தாததால் கணே சனுக்கு வாழ்க்கைப் பட்டதும் எல்லாமே மூன்று வருஷத்திய சமாச்சாரங்கள்.

இந்த மூன்று வருஷகாலத்தில் எந்த ஒரு நாளிலாவது தனக்கு குழந்தை பிறக்கவில்லையே என்று கமலா நெட்டு யர்த்தது கிடையாது.

கமலாவின் உடம்பைப் பற்றி கணேசனுக்குத் தெரியும். பசி அதிகம். ஒரு ஆணின் வேகம் அவளுக்கு. மாதத் தில் திரும்பிப் படுத்துக் கொள்கிற நாட்கள் குறைவு. சேர்ந்தாற்போல் மூன்று நாட்களுக்கு மேல் ஊரில் இருக்க நேர்ந்து — திரும்பும் ராத்திரியில் கமலாவை சந்திக்கையில் மூச்சுத் திணறி விடுவான் கணேசன்.

பதினைந்து நாட்கள் பிறந்த

வீட்டில் இருந்துவிட்டு — கிராமத்துத் திருவிழாவை முடித்துக் கொண்டு— சென்ற வாரந்தான் இங்கே வந்தாள் கமலா.

"இந்த பதினஞ்சு நாளும் எப் படியிருந்தே கமலா?" —குறும்புச் சிரிப் போடு கேட்டான் கணேசன்.

"அதாங்க தெரியலே...எப்படியோ இருந்துட்டேன்..."

"என்னால இருக்க முடியலையே..." அவளை இறுக்கினான் கணேசன்.

"இந்த தடவை நீங்க அப்பா ஆயிடுவீங்க!"

"எப்படி சொல்றே...?"

"உங்க வேகத்தைப் பார்த்து சொல்றேன்..."

"அது சரி... ஊர் திருவிழா வுக்கு உன்னோட உறவு ஜனம் யார் யார் வந்திருந்தாங்க...?"

"எல்லாருமே வந்திருந்தாங்க.."

"எல்லாருமேன்னு?"

"அத்தை... மாமா... பெரிய அத்தான்... சோமு அத்தான்...அப்புறம் நான் கட்டிக்க இருந்த சேகர் அத்தான்.. அவங்க பொஞ்சாதிங்க... எல்லாருமே வந்திருந்தாங்க..."

மில்லை நோக்கி சைக்கிளை அழுத்திக் கொண்டிருந்த கணேசனுக்கு கமலா அன்றைக்குப் பேசியபோது யதார்த்தமாய் தெரிந்த வார்த்தைகள் — இன்றைக்கு அர்த்தமுள்ளதாய் பட்டன. மனசு வலித்தது.

இதயத்தாளில் ஒரு கீறல் விழ, கமலாவை கட்டிக்கவிருந்த சேகர் மனக் கண்ணில் நடை பயின்றான். சேகரை, கணேசன் இரண்டொரு முறை பார்த் திருக்கிறான். ஒரு சினிமா கதாநாயக னுக்குரிய முகவெட்டும்— கோதுமை நிறமும், சுருள் முடியும் எந்தப் பெண்ணை யுமே ஒரு சுண்டு சுண்டும். ஒரே வீட்டில் கடந்த பதினைந்து நாட்களாய்— கமலா வும் அவனும் இருந்திருக்கிறார்கள்... மற்ற வர்கள் வெளியே போயிருக்கிற நேரங் களில்... இவர்கள்...?

'நூற்றுக்கு நூறு உனக்கு குழந்தை பாக்கியம் இல்லை'— ஈ.எஸ். ஐ. ஆஸ்பத் திரியின் டாக்டர் சொன்ன வார்த் தைகள் பொய்யாகுமா என்ன...!— மார்புப் பகுதியில் பத்திரப்படுத்தி வைத் திருந்த அந்தக் கவரை எடுத்தான்.

திடீரென்று மனசுக்குள் அந்த எண்ணம் உதித்தது.

வேறு யாராவது ஒரு நல்ல ஸ்பெஷலிஸ்ட் டாக்டரிடம் இந்த ரிப் போர்ட்டைக் காட்டலாமா...?

மனம் ஆமோதிக்க சைக்கிளைத் திருப்பினான் கணேசன்.

டாக்டர் நடராஜன் எம். டி. எப். ஆர். சி. எஸ்.

குஷன் நாற்காலிகளில் பணக் கார நோயாளிகள் தளதளவென்று உட்கார்ந்திருக்க— ரிசப்ஷனிஸ்ட்டிடம் கன்சல்டிங் ஃபீஸாக இருபத்தைந்து ரூபாயைக் கொடுத்து டோக்கன் வாங் கிக் கொண்டு காத்திருக்க ஆரம்பித் தான் கணேசன்.

ஒன்றரைமணி நேரத்திற்குப் பிறகு— அவனுடைய முறை வந்தது.

உள்ளே போனான்.

கணேசன் ஈ.எஸ்.ஐ. கவரை நீட்டினான். நர்ஸ் ஒருத்தி திரைக்குப் பின்னாலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்ன இது?"— டாக்டர் நடராஜன் கேட்டார்,

கணேசன் தலையைக் குனிந்த படி மெல்லிய குரலில் சொன்னான்.

"ஆபீஸ் முடியற நேரத்தில மாடியிலிருந்து பியூன் எதுக்காக வாசல் பக்கம் தண்ணீர் தெளிக் கிறார்."

"காலையில கொடையைக் கொண்டுவந்தவங்க மறக்காம திரும்ப கொண்டு போவதற்கு ஆபீஸ் ஊழியர்கள் இப்படி ஏற்பாடு செய்திருக்கிறார்களாம்."

—சி. பாஸ்கர்.



"டாக்டர்... இது ஈ.எஸ்.ஐ. ஆஸ்பத்திரியில் என்னுடைய ரத்தம், விந்து எடுத்து சோதனை செய்து கொடுத்த ரிப்போர்ட். இதைப் பார்த்து எனக்கு குழந்தை பிறக்குமா பிறக்காதான்னு நீங்க திட்டவட்டமா சொல்லணும்..."

டாக்டர் நடராஜன் கவரிலிருந்து ரிப்போர்ட்டை உருவினார்.

பார்த்தார்.

ஒரு நிமிஷம். இரண்டு நிமிஷம். மூன்றாவது நிமிஷத்தின் ஆரம்பத்தில் தொண்டையைக் கனைத்தார். ரிப்போர்ட்டை மடித்து கவரில் போட்டபடியே பேச ஆரம்பித்தார். "உங்க மூலமா ஒரு குழந்தை உருவாக சாத்தியமே இல்லை. எதிலேயும் உயிரணு இல்லை... ஸாரி..."

விழிகள் அப்படியே நிலைக்க டாக்டரையே வெறித்தான் கணேசன். உதடுகள் துடிக்க, பொங்கி வந்த அழுகையை மென்று விழுங்கினான்.

"டாக்டர்...! ரிப்போர்ட்டை நல்லா பாருங்க டாக்டர்...என்னாலே என்னோட மனைவியை கர்ப்பம் தரிக்க வைக்கக்கூடிய சாத்தியம் எங்கேயாவது ஒரு மயிரிழை அளவாவது இருக்கான்னு பாருங்க டாக்டர்...ஏன்னா என்னோட மனைவி இப்போ கர்ப்பமா இருக்கா...!'

டாக்டர் நடராஜன் துல்லியமாய் அதிர்ந்தார்— "நிஜமாகவா?"

டாக்டர் நடராஜன் மோவாயை யோசனையாய் தேய்த்தார்... "நீங்க கொஞ்ச நேரம் வெளியே வெயிட் பண்ணுங்க...மத்த பேஷண்ட்ஸை அனுப்பி வெச்சுட்டு அப்புறமா உங்ககிட்ட ஃப்ரீயா பேசறேன்..."

"சரி டாக்டர்..."

கணேசன் எழுந்து—கதவைத் திறந்து கொண்டு வெளியே வர, உள்ளேயிருந்த நர்ஸ் டாக்டரிடம் கேட்டுக் கொண்டிருந்தாள் சிறு சிரிப்போடு.

"எப்படி டாக்டர் இது முடியும்..? ரிப்போர்ட்படி அவராலே முடியாதுன்னு சொல்லிட்டீங்க... ஆனா அவரோ,மனைவி கர்ப்பம்ன்னு சொல்றார்... எது நிஜம்?"

"அவரோட மனைவி அவரை விட்டுட்டு வேற யாரையோ தொட்டுட்டா... அதுதான் நிஜம்..."

உடம்பெங்கும் அனல் கட்டிகளை வீசினாற்போல் சில விநாடிகள் துடித்து-பின்பு துவண்டுபோய்- க்ளீனிக்கில் காத்திருக்கப் பிடிக்காமல்—வெளியே வந்து—



முன்னாகைப் பூப்பந்து—என்
பொழுதுக்கு சுகந்தந்து
பெண்ணெனும் பேருபெற—நீ
பேரின்பம் தனை சிந்து...
—ராஜலட்சுமியை தூக்கி,
விளையாடுவது ரஜனிதான்!
—படம்: 'மூன்று முகம்'



## செய்யும் தொழிலே பாவம்

நான் சென்னை மாநகராட்சியின் தெரு விளக்குகளை பழுது பார்ப்பவன். கம்பத்தில் ஏறி பழுது பார்க்கும் போது, அதன் உடைந்த கண்ணாடி கவரினுள் அணில், குருவி முதலியன தன் குஞ்சுகளை பாதுகாத்து வைத்திருக்கும். கண்ணாடிக் கவரை திறந்தவுடன் குஞ்சுகளை தூக்கிச் செல்ல காக்கைகள் வட்டமிட்டுக் கொண்டே இருக்கும். எவ்வளவு தான் தூரத்திலும், அவைகள் சுற்றிக் கொண்டே வந்து, பழுது பார்த்துக் கொண்டிருக்கும் போது அந்த குஞ்சுகளை எப்படியாவது கொத்திக் கொண்டு பறந்து விடும். வீச், வீச், வீச்சென்று குஞ்சுகள் கத்தும் போது என் மனம் படும் வேதனைக்கு அளவே இல்லை. நான் செய்யும் தொழில் பாவம்தானே?

—எஸ். முத்தப்பா

சைக்கிளையும் எடுத்துக் கொள்ள மறந்து-கால் போன போக்கில் நடையைப் போட்டான் கணேசன்.

ஈ. எஸ். ஐ. ஆஸ்பத்திரி.

நரையோடிய-அந்த வயதான டாக்டரின் முன்னால் அந்த வாலிபன் நின்று கொண்டிருந்தான். ஏறக்குறைய கணேசனின் வயது.

டாக்டர் கேட்டுக்கொண்டிருந் தார்.

"உம் பேரு...?"

"கணேசன்."

"சி. கணேசனா?"

"இல்லீங்க... ஜி. கணேசன்.."

டாக்டர் புருவத்தை நெறித்தார் "சி. கணேசன்னுதானே டைப் பண்ணியிருக்காங்க... ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி சி. கணேசன்ங்கிற பேர்ல ஒருத்தர் வந்து ரிப்போர்ட் வாங்கிட்டு போனாரே! நர்ஸ்...! அந்த டைப்பிஸ்ட் பொண்ணைக் கூப்பிடு..."

நர்ஸ் போய் அழைக்க—

டைப்பிஸ்ட் மேரி வேக வேகமாய் வந்தாள்.

"என்ன டாக்டர்?"

"என்னம்மா... நீ டைப் பண்றே...? G.கணேசன்னு டைப் பண்றதுக்குப் பதிலா C. கணேசன்னு டைப் பண்ணியிருக்கே. C-க்கும் G-க்கும் வித்தியாசம் இருக்கம்மா...!"

டாக்டர் சொல்ல டைப்பிஸ்ட் சிரித்தாள்.

"நம்ம ஹாஸ்பிடல் டைப்ரைட்டரை பொறுத்தவரை C-க்கும் G-க்கும் வித்தியாசமே இல்லை டாக்டர். நம்ம மெஷின்ல 'G' எழுத்தில் அதனோட கால் தேய்ஞ்சு வெறும் 'C'யா மாறிடிச்சு. 'G' யை டைப் பண்ணினா 'C' தான் விழும். G.கணசனோட ரிப்போர்ட்டை டைப் பண்ணின கையோடு கவருக்கு பின்னாடி பென்சில்ல 'G' ன்னு போட்டிருக்கேனே...பார்க்கலையா டாக்டர்...?"

"அட!" நெற்றியைத் தட்டிக் கொண்டார் டாக்டர்.

"அது... ஏதோ கிறுக்கல்னு நினைச்சு... அந்த ரிப்போர்ட்டை C. கணேசனுக்கு குடுத்து ரிசல்ட் வேற சொல்லிட்டேனே..." — சொல்லிக் கொண்டே கையிலிருந்த ரிப்போர்ட்டைப் பார்த்தார்.

குழந்தை உண்டாகக்கூடிய சாத்தியக் கூறுகள் அதில் தெளிவாய் தெரிய—மனம் லேசாக—எதிரே நின்றிருந்த G.கணேசனிடம் சொன்னார்...

"நீ நாளைக்கு வாப்பா... உன்னோட ரிப்போர்ட் அந்த கணேசன் கிட்ட இருக்கு... வாங்கி வைக்கிறேன்..."

அவர் சொல்லிக் கொண்டிருந்த அதே விநாடிகளில்...

ரோட்டில் சென்று கொண்டிருந்த வாகனங்களெல்லாம் ஸ்தம்பித்துப் போய் நிற்க—ஜனங்கள் திட்டு திட்டாய் நின்று கொண்டு 'மேலே போகாதே! மேலே போகாதே!'-என்று கத்த- யாரையும் லட்சியப் படுத்தாமல்— பவர் ஹவுஸுக்கு பக்கத்திலிருந்த எலக்ட்ரிக் டவர் மேல் கொஞ்சம் கொஞ்சமாய் ஏறி —உச்சியை அடைந்து— ஏகப்பட்ட கிலோவாட் மின்சாரத்தை ஏந்திச் செல்லும் அந்தக் கம்பிகளை ஆர்வமாய் அணைத்தான் கணேசன்.

# சென்னை சிரிக்கிறது

மு. மேத்தா



சென்னை நகரத்தின்
தெருக்களை மிரட்டி
வீதியில் நடப்பவர்களை
ஓரத்தில் விரட்டிப்
பாய்ந்து புகுந்து
பறந்து கொண்டிருந்தான்
பல்லவன்.

உள்ளே போ...
நகருப்பா...
படில நிக்காதே...
எறங்குடா சோமாறி...

நடத்துனர் குரலில்
நாகரிகம்...
நாளாக நாளாக
தடித்துக் கொழுத்த
வார்த்தைகள்
மனித நாக்குகளில்
பரத நாட்டியம்
பயிலுகின்றன.

'உள்ளே போப்பா'
—
உள்ளே
எங்கே போவது...?

பெண்களின் கூட்டத்தைப்
பிளந்து கொண்டு
எப்படிப் போவது
எனச் சிலர் திகைக்க...

நல்ல வாய்ப்பென்று
நடைபோடும் வேறுபலர்
முகமெல்லாம் பொய்பூசி
முணு முணுத்து
முன்னேற...

வெளியே
நடமாட்ட நெரிசல்...
உள்ளே
வேர்வை
உரசல்...

கைக்குழந்தையுடன்
தடுமாறிக் கொண்டிருந்த
தையல் ஒருத்தி
கீழ்த் தரமாய்

இடித்துக் கொண்டே
இருந்த
கிருதாக்காரனைக்
கிழித்தாள்:

"தள்ளி நில்லுடா
பொறுக்கி"

"மரியாதையாய்ப் பேசு"
"மரியாதையாய் நில்லு"

அடிபட்ட இளைஞன்
சீறினன்
ஆத்திரத்தோடு—

அவனுக்கு—
இளைஞர் சிலர்
இறுக்க நெருக்கங்களை
அவசர அவசரமாய்
ஒழுங்கு படுத்திக் கொண்டு
உதவிக்கு வந்தனர்.

எகத்தாளமாய் ஒருவன்
அவள்
ஏழ்மையைச் சுண்டினன்:
"ஏம்மா!
கைபட்டாக் குத்தமின்னுக்
காருல போறது..."

பேருந்து நடத்திய
ஊஞ்சல் ஓட்டத்தில்
இராமன் குரல் கேட்டதும்
சுற்றிலுமிருந்த
சுக்ரீவர்களுக்குச்
சுறுசுறுப்பு வந்தது.

கேலியின் கெக்கொலி
கேட்டது:

"பெரிய பத்தினியாட்டம்
பீத்துருனுக...
தெரியாதாக்கும்—"

அடாவடித்தனமான
அந்தக் கோமாளிகளின்
நெருக்க நியாயசபையில்
ஒரு பெண்ணின்
தன்மானக்குரல்
பழைய
கட்டணச் சீட்டாய்
வெளியே தூக்கி
விசிறப்பட்டது.

முணு முணுத்த
பெண்கள் சிலர்—
முகம் சுளித்த
பெண்கள் சிலர்—

ஒரே இருக்கைகளில்
வசதியாய்
உட்கார்ந்து கொண்டபடி
வார இதழ்களுக்குள்
மறைந்த சில தாமரைகள்!

கண்டனக் குரல் கொடுத்த
கைக் குழந்தைக்காரிக்கு
உட்காரத் தன்னுடைய
இடத்தைக் கொடுத்துவிட்டு
இடிபாடுகளிடையே
எழுந்து நின்று கொண்டாள்
ஒரு
எக்ஸ்ட்ரா நடிகை.

பக்கத்தில் ஒருவர்
படித்துக் கொண்டிருந்த
பத்திரிக்கைச் செய்தியில்
நடிகையின்
பார்வை விழுந்தது:

'அடுத்த வீட்டுப் பெண்ணைத்
தொட்டுப் பேசினாராம்.
அரிவாள் வெட்டு'—

இயல்பாக
நடிக்க வேண்டுமென்று
நேற்றுத்தான்
இயக்குநர் அவளை
எச்சரித்திருந்தார்.

பகலில் நடைபெறப் போகிற
படப்பிடிப்பில்
இயல்பாக நடிப்பது
எப்படி என்று
எண்ணியபடியே
பத்திரிக்கைச் செய்தியில்
பார்வை பதித்த
திரைப்பட நடிகைக்குச்
சிரிப்பு வந்தது.

ஏனென்றால்—
ஏ. வி. எம்.
படப்பிடிப்பு நிலயத்தில்
அவளுக்காக
இன்று
காத்திருப்பது
ஒரு
கற்பழிப்புக் காட்சி!

# சில வித்தியாசங்கள்!

## ஸிந்துஜா

பிரபாகர் லேசாக வெட்கப்பட்டான். மாலதி ஆச்சரியத்துடன் அண்ணனைப் பார்த்தாள். அவனுக்கு மீராவைப் பிடித்துவிட்டது என்று அந்த வெட்கம் எழுதிக் காட்டியது.

அதற்கு முன் பிரபு ஏழு பெண்களை நிராகரித்திருந்தான். மூக்கு சரியில்லை, சிரிக்கும்போது அழகாயில்லை, ரொம்ப உயரமாயிருக்கிருள் என்று நிராகரிக்கப்பட்டன. மீராவைப் பார்த்ததும் பண்ணிக் கொள்கிறேன் என்று விட்டான்.

பிரபுக்கு அடுத்தாற் போல் கண்ணன். அவன் பெண் பார்க்க ஆரம்பித்த போது மாலதி பி. ஏ. சேர்ந்திருந்தாள். பெண் பார்க்கும் தினம் விடுமுறையாக இருந்ததால் மாலதியும் உடன் சென்ருள். அப்படி ஒரிரு தடவை போனுள். கண்ணன், பெண் பார்க்கும் விஷயத்தில் பிரபுவுக்கு அண்ணனுயிருந்தான். என்ன ஆர்ப்பாட்டம்! அமர்க்களம்!

பிரபுவாவது அழகோடு நின்ருன். கண்ணன் தான் விரும்பும் பெண்ணிடம் என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும் என்று ஒரு லிஸ்ட்; வேண்டாம் என்று ஒரு லிஸ்ட் போட்டிருந்தான்.

"உனக்கு இந்த ஜன்மத்தில் கல்யாணம் ஆகப் போவதில்லை" என்று பிரபு ஆசீர்வாதம் செய்தான்.

கண்ணன் மொத்தம் பத்தொன்பது பெண்களின் போட்டோக்களை வாங்கிப் பார்த்து, லீவு போட்டு, திரும்பத் திரும்பத் திரும்ப ஷேவ் அடித்து (ஆன்டனி-கிளியோபாட்ரா பாடத்தைக் காலேஜில் வைத்ததின் மோசமான விளைவு!) டாக்ஸியில் போய்ப் பெண் பார்த்து... மைகாட்!

"பெண் பாக்கறதில எதாவது கின்னஸ் புக் ரிக்கார்டில பேர் வரணும்னு ஆசைப்படறியோ?" என்று அப்பா சிரித்தார்.

கண்ணன் இதற்கெல்லாம் மசியவில்லை. ஆனுல் மற்றவர்கள் மீது கருணை காட்ட மன்மதன் தீர்மானித்திருக்க வேண்டும். அடுத்த பெண் திலோத்தமாவைப் பார்த்ததும் கண்ணன் மணம் புரிய இசைந்தான். கல்யாணத்துக்குப் பின் பெயரை மாற்றிவிட வேண்டும் என்கிற கண்டிஷனுடன், (மன்னி கல்யாணமாகி வந்த பின் மாலதியிடம் ஒரு நாள்: "உங்க அண்ணு பேர் கே.என்.கண்ணன் இல்லே; கண்டிஷன் கண்ணன்!") திலோத்தமா மன்னி எம்.எஸ்ஸி. படித்திருந்தும் கண்ணுடி போட்டுக்கொள்ள

வில்லை (நன்ருகப் படித்திருக்க வேண்டும். ஆனால் கண்ணுடி போட்டுக்கொள்ளக் கூடாது — இதுவும் கண்ணனின் ஒரு கண்டிஷன்!) நல்ல செல்வாக்கான குடும்பத்திலிருந்து வந்திருந்தாள். ஸிட்டி பேங்க்கில் வேலை பார்த்தாள் — கண்ணனின் விருப்பத்திற்கேற்ப. அவனைவிட இரண்டங்குலம் குட்டையாக இருந்தாள். அவனை விட வசீகரமாக இருந்தாள். (இது முக்கியம்!)

அதற்கடுத்த வருஷம் மாலதியின் மூன்ருவதும், கடைசியுமான அண்ணன் சங்கருக்குக் கல்யாணம் நிச்சயமாயிற்று. சங்கருக்குச் சிறுவயதிலிருந்தே பெரும் பணக்காரனுக வேண்டும் என்கிற லட்சியம். எதையும் செலவழிப்பதில் சிக்கனமாக இருப்பான். சொன்னுல் அடிக்க வருவீர்கள். ஒரு நாளைக்கு உபயோகிக்க வேண்டிய'கோல்கேட்'டை இரண்டு நாளைக்கு உபயோகித்துக் கொள்வான்.

சங்கர் ஒரு ஆட்டோமொபைல் ஷாப்புக்குச் சொந்தக்காரனுயிருந்தான். பிஸினஸ் நன்ருக ஓடிற்று (ஆட்டோமொபைல் ஆச்சே!) மொத்தம் ஆறு பெண்களைப் பார்த்தான். ஒவ்வொரு இடத்திலும் தகராருனது. வரதட்சணை, சீர், செனத்தி விஷயம்தான். வாஸ்தவத்தில் சங்கர் முதன் முதலாகப் பார்த்த பெண் மாலதியின் உயிர்த்தோழி பிரபாவை. பிரபா செக்கச் செவேல் என்று ரொம்ப அழகாக இருப்பாள். கண்ணைக் கவரும் வனப்பு. நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள். நல்ல குணம் வேறு. 'கிட்டத்தட்ட ஒரு லட்சத்துக்கு எனக்குச் செய்வார்களா?' என்று கேட்டான் கண்ணன். பிரபாவின் அப்பா அவனை ஒரு விநோதமான பிராணியைப் பார்ப்பது போல நோக்கினுர்.

கடைசியில் திரைகடல் ஓடாது, லோக்கலாய், மெட்ராஸிலேயே எக்கச்சக்கமாய் திரவியம் சேர்த்து விட்ட கிருஷ்ண காந்தனின் பெண் சியாமளாவைக் கைப்பிடித்தான். மன்னி வரும் போது தன் பெயரில் ஒரு தி.நகர் வீட்டை எடுத்துக் கொண்டு வந்தாள்.

மாலதி காலேஜ் முடித்த கையோடு அவள் கல்யாணப் பேச்சு வீட்டில் ஆரம்பித்தது. மூன்று பையன்களுக்கு அப்புறம் பிறந்த ஒரே பெண் என்பதால் அவள் மீது அனைவருக்கும் பாசமும், பிரியமும் ஜாஸ்தி. கடைக்குட்டி என்று எல்லோரும் 'மாலு! மாலு!' என்று கொண்டாடினுர்கள். மாலதிக்குக் கல்யாணம் என்றதும் அப்பா, அம்மா, அண்ணன்கள், மன்னிகள் என்று வரிந்து கட்டிக் கொண்டு மாப்பிள்ளை தேட ஆரம்பித்தார்கள்.

ஒரு மாதத்துக்குள் அவர்களின் மும்முரத்துக்கு வெற்றி கிட்டியது.

ஒருநாள் மாலதியின் அப்பா "மன்னுர்குடி விச்சுவோட பையன் ஜக்கு இருக்கானேல்லியோ, அவன் அனுப்பிச்ச ஜாதகம் நன்னு இருக்காம்."

"பிள்ளை என்ன பண்ருனும்?" என்று சங்கர் கேட்டான்.

"சேல்ஸ் ஆபீசராம். பெங்களூர்லயே ஸ்ரீவித்யா அக்ரோ கெமிக்கல்ஸ்ல. இன்னும் மேல வரலாமாம்."

"பையன் நன்னுயிருக்கானுமா?"

"ஜக்கு ஒஹோங்கருன். ஆஜானுபாகுவா, ஆள், அமிதாப்பச்சன் மாதிரி உயரமா, அழகா இருப்பானும்.',

"பேர் என்ன?" என்று சியாமளா மன்னி கேட்டாள்.

"வெங்கட்ராமன்னு பேராம்."

"ஐயோ! என்ன கர்நாடகப் பேர்!" என்ருள் மாலு.

"சீ, ஸ்வாமி பேர்டி!" என்ருள் அம்மா.

அந்த மாதத்தின் கடைசி ஞாயிற்றுக்கிழமை வெங்கட் மாலதியைப் பெண் பார்க்க வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

அந்த ஞாயிற்றுக்கிழமை வீடு அமர்க்களப்பட்டது. மாலுவை மூன்று மன்னிகளும் 'கோட்டா' செய்ய ஆரம்பித்தார்கள்.

"இனிமே ஸம்மருக்குப் பெங்களூர் போனு ஹோட்டல்ல தங்க வாண்டாம்" என்ருள் மீரா மன்னி.

சரியாக மூன்று மணிக்கு வெங்கட் அன்ட் ஃபேமிலி வந்தது. வெங்கட்டைப் பார்த்ததும், பிரபுவுக்கு ஜக்குவின் மீது கோபமாக வந்தது. இவனையா அமிதாப்புடன் ஒப்பிடுவது? வெங்கட், அமிதாப்பை விட இன்னும் சார்மிங் ஆகவும் ஸ்மார்ட் ஆகவும் அல்லவா இருக்கிருன்!

மாலதி அம்மா சொல்படி

நீட்டாக வந்து நமஸ்காரம் பண்ணிருள். வந்தவர்கள் சொஜ்ஜி, பஜ்ஜி சாப்பிட்டார்கள். கண் அகல, மந்தகாசப் புன்னகை இதழில் படர, மாலுவைத் தனக்குப் பிடித்திருப்பதை வெங்கட் வெளியிட்டான்.

மாலுவின் அப்பா சீர்வரிசைகளைச் சொன்னூர். கையில் பத்தாயிரம் வரதட்சணையாக...

வெங்கட் பணிவுடன் குறுக்கிட்டான் "அந்தப் பேச்சு மட்டும் வாண்டாம்."

"என்னது?"

வெங்கட்டின் அப்பா "வரதட்சணை வாங்கும் பழக்கம் கிடையாது. சீர் பற்றியும் நாங்க ஒண்ணும் சொல்லலே. உங்க பெண்ணுக்கு நீங்க எது செஞ்சாலும் சரி. ஒரு கல்யாணத்தில அடிச்சுப் பிடிச்சு கேட்டு வாங்கறதுங்கற விஷயம் எங்களுக்குச் சம்மதமில்லே..."

சங்கர் டேபிள் ஓரத்தில் கிடந்த 'இந்தியா டுடே'யை எடுத்து ஆழ்ந்து படிக்க முயன்ருன்.

சற்றுக் கழித்து அவர்கள் கிளம்பிச் சென்ருர்கள்.

"வெரி ஹான்ட்ஸம் கை" என்ருன் பிரபு சந்தோஷத்துடன்.

"மாலு ரொம்ப அதிர்ஷ்டக்காரி! வரதட்சணை வேண்டாம்னு அவா எத்தனை கட் அண்ட் ரைட்டாகச் சொல்ரு!" என்ருள் சியாமளா கணவனைப் பார்த்தபடி.

"எப்ப கல்யாண தேதி வச்சுக்கலாம்னு நாளைக்கு சாஸ்திரிகளைப் பாருங்கோ" என்ருள் அம்மா.

"அதுக்கு முன்னுல சத்திரத்தைப் பிடிக்கணும். இப்பல்லாம் அதுக்கேத்த மாதிரின்ன கல்யாண தேதி பாக்க வேண்டியிருக்கு!" என்ருன் சங்கர்.

"கங்க்ராட்ஸ் மாலு!" என்ருன் சங்கர்.

"எதுக்கு அண்ணு?"

எதுக்கா! தெரியாத மாதிரி கேக்கரு! எல்லாம் உன் கல்யாணம் நிச்சயமானதுக்குத்தான்!"

"எனக்கு இந்த இடம் பிடிக்கலே. நான் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்!"



உலகிலேயே தலையலங்காரத்திற்கு சிறந்தவர்கள் பாரீஸ் நகர மாடல்கள் தான்,டிசைனர்கள் தான்.

இறகுகளால் ஆன இந்த பிரெஞ்ச் தலையலங்காரத்தை எந்தப் பெண் அணிந்து கொண்டாலும், மயிலைப் போல் கர்வம் கொள்வாளாம்.

—தென்மாப்பட்டு அம்பிகாபதி.

---

"மாலு!" குறைந்தது அரை டஜன் குரல்கள் அதிர்ச்சியுடன் எழுந்தன.

"என்னடி மாலு உளர்றே!" அம்மா சற்று உரத்த குரலில் கேட்டாள்.

"எனக்குப் பிடிக்கலேம்மா."

—அவள் குரலின் உறுதி அனைவரையும் ஸ்தம்பிக்க வைத்தது. 'மேலே பேச ஒன்றுமில்லை' என்பது போல் மாடிக்குப் போய் விட்டாள் மாலு.

சற்றுக் கழித்து திலோத்தமா மாடிக்குச் சென்றாள்.

அவளும் மாலுவும் சம வயதுக்காரர்கள். மன்னி-நாத்தனார் என்று பாராமல் இருவரும் லூட்டி அடிப்பது உண்டு.பிரதாப் போத்தனின் உருண்டை முழி முதல், கமலஹாசன் ஹேர் ஸ்டைல் வரை, டிராமா ஜோக்ஸ் பற்றி, பாஷன்களைப் பற்றி, தெருவில் சைட் அடிக்கும் ஹீரோக்கள் பற்றி... என்று வரை முறை இல்லாமல் பேசிச் சிரிப்பார்கள்.

திலோ அவளருகில் சென்று உட்கார்ந்து கொண்டாள். இப்படிச் சிரித்துக் கொண்டிருக்கிறதே இந்தப் பெண்! மற்றவர்கள் மனத்தில் அதிர்ச்சியை எறிந்து விட்டு...

"என்ன மாலு இப்படிப் பண்ணிட்டே!"

"என்னது மன்னி?"

"நீ ஏன் வெங்கட்டை வேண்டான்னுட்டே! ராஜா மாதிரி இருக்கார்! மனுஷாளும் தங்கமானவாளா இருக்கா. பையனும் நல்ல வேலைல இருக்கறச்சே, உனக்கு எந்த விதத்தில இந்த இடம் பிடிக்கலே?"

"நீங்க என்ன சொன்னாலும் சரி மன்னி நான் மாட்டேன், மாட்டேன், மாட்டேன்!"

"ஏன்னுதான் கேக்கறேன். என்கிட்டச் சொல்ல மாட்டியா? மன்னிங்கிற சொந்தத்தை எல்லாம் தூக்கியெறி. ஒரு பிரெண்டாட்டம் சொல்லமாட்டியா?"

மாலதி யோசனையுடன் திலோவைப் பார்த்தாள்.

"என்ன யோசனை! சும்மா சொல்லு!" என்று தூண்டினாள் திலோ.

"ஓ.கே. மன்னி. சொல்றேன். என்னோட மூணு அண்ணாக்களும் சந்தைக்குப் போய் மாடு பிடிக்கற மாதிரி பொண்களைப் பார்த்து, தட்டிக் கழிச்சு, ஆயிரம் குறை சொல்லி, பேரம் பேசிக் கல்யாணம் பண்ணிண்டா. நான் மூணு கல்யாணத்தையும் பார்த்துண்டே இருந்தேன். எனக்குள்ளேயே ஒரு வைராக்யம் இறுகிப் போயிடுத்து. நாம கல்யாணம் பண்ணிக்கறச்சே, குறைஞ்சது ஏழெட்டுப் பேரையாவது 'வேண்டாம் போ வேண்டாம் போ'ன்னு நிராகரிக்கணும். என்னோட அண்ணா ஒவ்வொருத்தரும் செஞ்சதை நானும் திருப்பிச் செய்யணும். அப்பத்தான் எனக்கு மனசு ஆறும்ன்னு தீர்மானிச்சிட்டேன். இப்ப சொல்லுங்கோ மன்னி, நான் செய்தது தப்பான்னு?"

○

பிரம்மமே நானாக இருக்கின்றேன் 'தத்வமசி' என்று மஹாவாக்யம் பேசுகின்றது. எந்த ஆதிசக்தி எல்லா வஸ்துக்களிலும் மூலப் பொருளாக இருக்கின்றதோ, எதனுடைய சக்தியால் ப்ரபஞ்சம் சீராக இயங்குகின்றதோ, எந்த ஒரு சக்தியானது 'சத்'தாகவும் (Divine Consciousness) 'சித்'தாகவும் (Collective Consciousness) அனந்தமாகவும் (Plural Consciousness) இயங்குகின்றதோ, 'அந்த அறிவே' நம்முள் பரிணமிக்கும் 'அந்த அறிவே' நானாக இருக்கிறேன் என்ற உணர்வு வந்தால் போதும், 'பொறுப்புணர்ச்சியும்', என் போன்ற எல்லா உயிர்கட்கும் துன்பம் வராமல் இருக்க வேண்டும் என்ற (நினைவு) ஒழுக்கமும் வந்து விடும்.

மன்னுயிர்களின் துயரைத் துடைக்க வேண்டும் என்ற பேரார்வம் பிறக்கும் பொழுது அதுவே ஈகை என்ற பண்பாடாகின்றது.

உலகத்தொடு ஒத்து வாழ்வது ஒழுக்கம் எனவும், மற்றவர் துயர் துடைத்து வாழ வேண்டுமென்ற சிந்தனையில் இருந்து ஈகையும் பிறக்கின்றது.

இந்த பண்பைச் சித்தரிக்கும் வகையில் திருவள்ளுவ நாயனார் அழகு படக்கூறுவார்—

"ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது ஊதியமில்லை உயிர்க்கு" என்று.

இந்த முறையில் மனிதன் மனிதனாக வாழக் கூடிய, மனிதனுக்கு மனிதனுடைய மதிப்பை உணர்த்தக் கூடிய ஒரு தத்துவம், தவம் இணைந்த செயல் எதுவோ, முறை எதுவோ பயிற்சி எதுவோ அதுதான் நம் குண்டலினி யோகம்.

இந்த முறையை எளிதிலே பயின்று பயன் பெறலாம். குடும்பத்தோருக்கும் உகந்த யோகம் குண்டலினி யோகம். தாய்க்குலமும் எளிதில் பயிலக் கூடிய யோகமுறை. பயின்று பயன் பெறுவோமாக.

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!

—தீனதயாளன்

## முரண்பாடே நீதான் ஸ்ரீநிவாஸா?

'தாய்' ஆசிரியருக்கு, வணக்கம்.

அஞ்சலில் சேர்த்த மறுப்புக் கடிதம் தங்கள் அலுவலகம் வந்து சேர்வதற்குள் அடுத்த மறுப்பையும் அனுப்பி விட்ட திரு. கிருஷ்ண ஸ்ரீநிவாஸுக்கு நோபல் பரிசே கொடுக்கலாம்.

டாக்டர் கிருஷ்ண ஸ்ரீநிவாஸின் முதல் மறுப்பும்—இரண்டாவது மறுப்புக் கடிதமும் ஆரம்பம் முதல் முடிவு வரை முன்னுக்குப்பின் முரணாகவே இருக்கிறது.

முதல் மறுப்பில் நீதிபதி மோகன் எழுதியது "நீதியின் வெற்றி" என்று குறிப்பிட்டு பலமுறை படித்து டாக்டர் பட்டம் தந்து கௌரவிக்க அமெரிக்காவுக்கு எழுதியதாக ஆனந்தப்பட்டிருக்கிறார். ஆனால் இரண்டாவது மறுப்பில் "நீதி வெல்கிறது" என்ற நூல் என்று குறிப்பிடுகிறார்.—தலைப்பையே தவற விட்டவரா பலமுறை படித்தார்? என்று ஐயப்படுகிறேன்.

இரண்டாவது மறுப்பில் இவர் சிபாரிசு செய்தது பற்றி வாயே திறக்கவில்லை. அடுத்த மறுப்பில் என்ன சொல்வாரோ ஆண்டவனுக்கே வெளிச்சம்!

ஐம்பது லட்சம் என்றதும் சிரித்து மகிழ்ந்தவர் இப்போது இரண்டாவது மறுப்பில் லட்சமே தேவையில்லை என்பது அவருக்கு லட்சணமாக இல்லை. அதே மாதிரி முதலில் 5000 ரூபாய் வருகிறது என்றார். இப்போது 500 டாலர் என்கிறார். அவரது பத்திரிகையில் பிழை திருத்த ஆள் இருக்கிறார்களோ இல்லையோ—அவர் எழுதுகிற கடிதங்களில் பிழை திருத்தம் செய்ய உடனே ஒரு ஆள் தேவை—அவசியப்பட்டால் அனுப்பி வைக்கிறேன் எனச் சொல்லுங்கள்.

அதோடு துண்டு துண்டாக மறுப்பு அறிக்கை அனுப்புவதை இதோடு நிறுத்தச் சொல்லுங்கள்.

ஒரு நல்ல சிறந்த நீதிபதியை இழுத்து வம்பை வளர்ப்பது அவர் தான். இதுவா "நீதியின் வெற்றி?"

தங்கள்

குடந்தை கீதப்பிரியன்
30, முதல் பெருஞ்சாலை,
சென்னை-600 061.

# ஒரு சதங்கை இடம் மாறுகிறது

- லட்சுமி ராஜரத்னம்



திரை இறங்கியதும் மின்னலென வந்து நின்றாள் சந்தியா. சதங்கைகள் குலுங்கின. பளீர் பளீரென்ற கைகள் வீச்சும், கண்ணசைவுகளும், தாமரைப் பாதங்களும்—அவள் ஆடுவதற்கென்றே பிறந்தவள்.

வைத்த கண்களை எடுக்காது பார்த்தான் நவீன். முதல் முதலாகப் பார்த்ததிலிருந்து மனம் ஒரு நிலையில் இல்லை.

முதல், இரண்டு,மூன்று மேடைகளில் அவன் ரஸிகனாக வந்தான். பிறகு ரஸிகனாகப் பாராட்டத் தலைப்பட்டான்.

"உங்க நடனம்னா எனக்கு உயிர்" என்று சொல்லிச் சிரித்தான். அவள் அவனைப் பார்த்தாள்.

ஆண்களில் கூட இவ்வளவு அழகு உண்டா? காந்தக் கண்கள்! கவர்ந்தன.

அவள் ஆடும் மேடைகளின் முன் வரிசையில் அவன் அமர்ந்து கொண்டு ரசித்தான். நடனம் முடிந்ததும் பின்னால் போய் பாராட்டத் தவறவில்லை. அவளுக்கு அம்மா இல்லை; அப்பா மட்டும்தான் என்பதைப் புரிந்து கொண்டான்.

"நான் ஒரு நாள் உங்க வீட்டுக்கு வரட்டுமா?" என்று கேட்டான்.

அவள் கண்கள் விரிந்தன. "ஓ... தாராளமாக" என்றாள்.

அவன் அவர்கள் வீட்டிற்குப் போன பொழுது ஒரு படத்தயாரிப்பாளர் வந்திருந்தார். அவனை அவள் தன் தந்தைக்கு அறிமுகப் படுத்தினாள்.

"நீ படத்தில் ஆடப் போவது எனக்கு எத்தகைய மகிழ்ச்சியாக இருக்கு



"தெரியுமா?" என்று பாராட்டி விட்டு வந்தான்.

அவளுக்கு மேலும் மேலும் படத்தில் ஆடும் சந்தர்ப்பங்கள் குவிந்தன. அவனுக்கும் அது மிகவும் மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

சந்தியாவின் தந்தை ஒரு நாள் அவனை அழைத்தார். அவன் ஓடி வந்தான்.

"உட்கார் நவின்?"

காப்பி கொண்டு வந்து வைத்த சந்தியா உள்ளே போய் விட்டாள். அவள் முகத்தின் பொலிவு அவனுக்கு ஒரு மகிழ்வான கவிதையைத் தந்தது.

"என்ன ஸார், சொல்லுங்கள்."

அவர் நிதானமாகப் பார்த்தார். "சந்தியாவை நீ மணக்க வேண்டும். என்ன சொல்கிறாய்?"

அவன் திணறிப் போனான். "கரும்பு திங்கக் கசக்குமா ஸார்"

"எனக்கு உடம்பு சரியில்லை. ஒரே பெண். நாட்டியம் ஆடி நன்றா சம்பாதிக்கிறாள். எனக்குப்பின் அனாதையா நிக்கக் கூடாது பார்."

கல்யாணத்தை முடித்து இரண்டு மாதங்கள் கூட அவர் உயிரோடு இல்லை. ஒரு சில தினங்கள் அவள் வேதனையில் தவித்தாள். அவன் தேற்றினான்.

"சந்தியா, மீண்டும் நாட்டியம் ஆடும்மா" என்று வற்புறுத்தினான்.

ஆறு மாதங்களில் எந்தவித மாறுதலும் இல்லை. அவளுக்கு வரும் ரசிகர்கள், கடிதங்கள், போன்கள்— அவளை வர்ணிக்கும் சில சொற்கள் அவனைக் குமுற வைத்தன.

"ஒரு கலையை ஆராதிக்கும் பொழுது இதெல்லாம் சர்வ சகஜம்தான் டியர். கல்யாணம் ஆவதற்கு முன்பு இதைவிட மோசமான கடிதங்கள் எல்லாம் வரும்."

அவன் மௌனமாக ஏறிட்டு அவளைப் பார்த்தான். ஒரு சில தினங்களாக அவன் கலகலப்பாக இல்லை. அவளுடைய நடன நிகழ்ச்சிக்கும் வரவில்லை. முதல் தடவையாகத் தந்தையுமின்றி கணவனும் இன்றி தனியாகப் போய் வந்தாள். இனந்தெரியாத தவிப்பு வீட்டிற்கு வந்ததும் இலை நுனியில் கட்டி நிற்கும் பனித்துளி போல கண்களில் நீர் மணிகள் உருண்டன.

இப்படியேதான் இருப்பானோ?

"நீங்க ஏன் வரல்லே? சொல்லுங்களேன்?"

"நான் வந்து என்ன செய்யப் போகிறேன்? ஒரு பொம்மைக் கணவனாக?"

ஓ... வாட் எ காம்ப்ளெக்ஸ்? என்ன நடந்தது? யார் என்ன சொல்லி இருப்பார்கள்? மனைவியின் புகழைச் சகிக்காத ஒரு சராசரிக் கணவனாக இவன் ஏன் இப்படி மாறினான்?

இதற்குப் பிறகு பல நிகழ்ச்சிகளுக்கு 'உதய தாரகை' என்றும் 'மின்மினி' என்றும், 'நர்த்தன நாயகி' என்றும் பட்டங்கள் கொடுக்கப்பட்ட பொழுதும் பொன்னாடைகளைப் பூமாலைகளுடன் சுமந்தபொழுதும் அவள் தனித்தே நின்றாள்.

அவனுக்கும் அவளுக்கும் திரையாக நிற்கும் உணர்வுகளைத் தடுத்து நிறுத்த அவள் முயன்றாள்.

"எனக்கு நீங்கதான் வேண்டும். ஏன் இப்படி ஒதுங்கி ஒதுங்கிப் போகிறீர்கள்?"

அவன் தன் மார்பின் மீது கண்ணீர் மாலையைச் சூட்டிய அவளைப் பார்த்தான்.

"என்ன காரணம்னு சொல்ல முடியாது. ஒரு பொஸஸிவ்னெஸ்னு வேணா வச்சுக்க. உன்னை மற்றவர்கள் பார்ப்பதை — சிலர் கொச்சையாகப் பேசுவதைப் பார்க்கச் சகிக்க முடியவில்லை" என்று குழறினான்.

"ஓ... இதுதானா காரணம்? இவன் ஒரு சாதாரணக் கணவன் தானா? கலைக் கண்ணோட்டம் இல்லை. எலும்புக் கூட்டின் மீது பூசப்படும் சதைக்கு மேல் உள்ள கலை அணியின் சிறப்புத் தெரியவில்லை" அவள் உள்ளுணர்வுகள் அழுதன.

அடுத்த நாள் — ஒரு நிகழ்ச்சிக்காக பேச வந்தவரிடம் சந்தியா ஒப்புக் கொள்ளவில்லை.

"எனக்கு உடம்பு சரியா இல்லை. பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று கூறினாள்.

நவீனுக்கு மனத்தினுள் குரூர திருப்தி ஏற்பட்டது. சந்தியா வீட்டினு ஒடுங்கி, சதங்கைகளைப் பார்த்து குலுங்கினாள்.

தன் அப்பா இருந்தால் எப்படி துடித்துப் போவார்? 'சந்தியா, உ கலையை ஆராதிக்கும் புருஷ அமைந்து விட்டால் என் ஆத்மா சாந் யடையும்' என்று அவர் கொண்ட நிம்மதி பொய்த்துப் போய் விட்டதே

நவீன் இப்பொழுதெல்லா ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தான் சந்தியாவின் சிறகை ஒடித்த மகிழ்ச் அவனுடைய வெற்றி.

மழையும் இடியும் கொண்ட ஒரு முன்னிரவு. பெரிய ரோடில் நவீன் வேகமாக வந்து கொண்டிருந்தான். புயல் வரும் அறிகுறியாகக் காற்று பலத்தது. திடீரென்று விளக்குகள் அணைய, காற்றின் சுழற்சி கண்களை மறைக்க— எதிரே வந்த லாரியை அவன் கண்டு



இடையோடு இடையாட இதயங்கள் உறவாட
தடைநீங்கு மங்கையாகுமோ—வரும் துயரங்கள் நிலையாகுமோ
—கமல், அம்பிகா
படம்: 'சகலகலாவல்லவன்'

ஒதுங்கு முன்—

ஓ... அது நடந்தே விட்டது.

முகத்தைத் துடைத்துக் கொண்டாள் சந்தியா. டாக்டர் சொன்ன செய்தி—நவீன் கால்கள் இரண்டையும் எடுத்து விட்டு—சக்கர நாற்காலியில் உட்கார வைத்து—கடவுளே! அவள் கண்ணீர் வற்றி விட்டது.

நவீன் வீட்டிற்கு வந்து விட்டான். இனிமேல் நிரந்தர ஓய்வுதான் என்று ஓலமிடும் நெஞ்சத்தை அடக்க முடியவில்லை. சந்தியாவின் மௌனம்—கண்கள் என்ன தான் ஆறுதல் சொன்னாலும் தேருத அடியாகப் பட்டு அழுதான்.

அவனுடைய சேமிப்பு ஒன்றும் பெரிதாக இல்லை. மருத்துவமனைச் செலவு வேறு பெரிய தொகையாக இழுத்து விட்டிருந்தது. அவளும் நடனக் கச்சேரியை நிறுத்தி விட்டதால் பெரிய வருமானமாக எதுவும் இல்லை.

நீல ஒளி உமிழும் படுக்கை அறையில் மெல்லப் புரண்டான் நவீன். வலது கரம் அவளது கரத்தைப்பற்றியது.

"என்னை மன்னித்து விடு சந்தியா"

கண்கள் பளபளக்க அவனைப் பார்த்தாள்.

"உன்னை ஆடக் கூடாது என்றதற்கு எனக்குக் கிடைத்த தண்டனையைப் பார்த்தாயா? நீ எனக்காக ஒண்ணு பண்ண வேண்டும்."

"என்ன?"

"நீ காலில் சதங்கை கட்டி மீண்டும் ஆட வேண்டும்."

அவள் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். விரக்தியாக புன்னகைத்தாள்.

"என்னால் முடியாது. எலும்புக் கூட்டின் மீது பூசிய சதைகளை எக்ஸ்ரே கண்களால் பார்ப்பவர்கள் தான் உங்கள் கண்களில் பட்டார்கள். அவர்கள் கண்களுக்கு எந்தப் பெண்களும் அப்படித் தான் படுவார்கள் என்ற நியதி உங்களுக்குத் தெரியவில்லை. கலைக்கண்ணுடி அணியும் திறமை உங்கள் கண்களுக்கும் இல்லாமல் போய்விட்டது."

"என்னை மன்னித்து விடு"

"கல்லால் எழுதப்பட்ட சாசனங்கள் அழியாதது போலச் சொல்லால் தீட்டப்பட்ட காயங்கள் வடுக்களாகவே நின்றுவிடும். வடுக்களுக்கு ரத்தம் கசிய வைக்கும் குணம் உண்டு. மனத்தில் வடுப்பட்டவர்களுக்குத்தான் அது தெரியும்."

"நீ என்ன சொல்றே!"

"ஆரம்பத்தில் இருந்த உங்கள் குணம் போகப் போக மாறி விட்டது. இப்பொழுது சொல்லும் சொற்கள் நாளையே மாறலாம். அதனால் நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்"

"என்ன?"

"புகழுக்கும் பொருளுக்கும் இனி சதங்கை கட்டி ஆட மாட்டேன்"

"அப்ப நம்ம பிழைப்புக்கு வழி?"

"என் கலை உங்களுக்கு நிரந்தரமா சோறு போடும்"

அவள் விளக்கைப் போட்டு விட்டு ஹாலுக்குப் போய் பெரிய போர்ட் ஒன்றைக் கொண்டு வந்தாள்.

'சந்தியா நாட்டியப் பேராலயம்.'

"நாளை முதல் குழந்தைகள் வந்து கற்றுக் கொள்வார்கள். கலையின் ஆராதனை என் ஆத்ம நிவேதனமாகத் தொடங்கும்."

அவன் கண்கள் கலங்கின.

○



"பெரிய தொடர்கதை ஒன்றை படம் எடுக்கப் போனது விஷப்பரிட்சையாயிடுச்சி."

"ஏன்?"

"இருபது ரீல் எடுத்தாச்சி... பாதி கதை தான் வந்திருக்கு... தொடரும்னு போட்டு மீதிக்கதையை இன்னொரு படமா எடுக்கலாம்னு டைரக்டர் சொல்றரு..."

—உடுமலை வடிவேல்

# மாட்டுக்கார வேலன்



## புரட்சித் தலைவர் நடித்த படங்களில் எனக்குப் பிடித்த படம்

புரட்சித் தலைவர் புதிய புதிய நடிப்புக் கலைகளை திரையுலகில் உருவாக்கிய புதிய கலைச் சிற்பி...!

இவரின் அற்புத நடிப்புகள் திரையுலகம் போற்றிப் புகழ வேண்டிய பொன் 'கோப்பு'கள்.

திரையுலகு மூலம் 'போதை' கதைகளைச் சொல்லிக் கொண்டு இருந்தவர்களின் முன் புதிய கீதை சொன்ன கண்ணன்...!

பூத்தொடுப்பவன் கூட இவரின் அற்புத படத்தொகுப்பு கண்டு மிரள வேண்டும்...

எளிமைக்கும், இனிமைக்கும் ஒரு இலக்கியம் படைக்கும் அற்புத படமாக அமைந்துள்ள இப்படத்தினை நான் மிகவும் விரும்புவதுண்டு...

புலவர் ஏ. கே. வேலன் அவர்களின் சிந்தனைப் பூங்காவில் மலர்ந்த இந்த அருமையான கதைக்கு இரு வேடமெடுத்து நடித்து மக்கள் நெஞ்சங்களில் தென்றலாக தவழ்ந்தார் புரட்சி தலைவர்.

வக்கீல் ரகுவாகவும், மாட்டுக்கார வேலனாகவும் தோன்றி தன் நடிப்பால் தமக்குள்ளே போட்டியிட்டு ரசிகர்களைத் திண்டாட செய்தார்.

பெயர் போடாமலேயே எல்லாத் துறையின் பொறுப்புக்களையும் தானே ஏற்று செய்த அந்த புரட்சித் தலைவரது பெருந்தன்மையினை இந்த திரையுலகம் இன்று யாரிடமாவது காண்கிறதா? நிச்சயம் இல்லை.

புரட்சித் தலைவரின் எந்தப் படத்தினை பார்த்து விட்டு வெளியே வந்தாலும் ரசிகர்கள் 'இப்படத்தினில் புரட்சித் தலைவர் ஒளிப்பதிவில் கவனம் இன்னும் செலுத்தி இருக்கலாம். அண்ணனின் எடிட்டிங் அற்புதம்—பின்னணி இசையை நன்றாக செய்துள்ளார் ஆனால் ஒரு பாட்டுல கோட்டை விட்டுட்டார்' என்றெல்லாம் எல்லா பொறுப்பினையும் புரட்சி தலைவர் மீதே சுமத்தி பேசுவதனை கண்டதுண்டு. இது நூற்றுக்கு நூறு உண்மை. அனைத்து பொறுப்பினையும் அவரே கவனிக்கிறார் என்பதை பல சம்பந்தபட்ட கலைஞர்களின் பேட்டி வாயிலாக அறிந்து கொள்கிறோம்.

இப்படத்தில் கே. வி. மகாதேவன் அவர்களின் இனிய இசையமைப்பில் உருவான பாடல்களில் 'பட்டிக்காடா? பட்டணமா? ரெண்டுங் கெட்ட லட்சணமா' பாடல் இளைய தலைமுறைக்கு இனிய விருந்து.

'ஒரு பக்கம் பாக்குறா' பாடலில் கிராமிய மணம் அதிகமுண்டு-'காலாலே நெலத்தில கோலம் போட்டுக் காட்டுறா' வரியும், நடிப்பும் மறக்கக் கூடிய ஒன்றா?

'சத்தியம் நீயே... தர்மத்தாயே' என்ற பாடல் வாயில்லா அந்த கோமாதாவை பாராட்டுவதோடு மட்டுமின்றி கருத்து சுரங்கமாகவும் திகழ்கிறது.

'பூ வைத்த பூவைக்கு பூக்கள் சொந்தமோ' படக் கதையோடு ஒட்டிய இப்பாடல் இலக்கிய நயமுள்ளது.

இப்பட சண்டைக் காட்சிகளில் சில புதிய முத்திரைகள் நெஞ்சை விட்டு அகல மறுக்கின்றன.

தமிழகத்தில் எத்தனையோ பல்கலை கழகங்களை கண்டு கொண்டிருக்கும் கலை பல்கலைக்கழகமாம் புரட்சித் தலைவரின் படங்களில் இந்த படம் தான் எனக்கு பிடித்தது என எடை போட்டு கூறுவது இயலாத காரியந்தான்.

புரட்சி தலைவர் கலை தேவதைக்கு அர்ப்பணித்த ஆயிரம் மலர்களின் ஒரு மலரினை நான் அர்ச்சித்துப் பார்த்தேன். அவ்வளவே...!

ந. இளங்கோ,
23. அழகிரி நகர் 3-வது தெரு,
வடபழனி, சென்னை-600026.

படம் உதவி: ஓவியர் அய்க்கன்





# வானவில்




*பொன்- ஜெயந்திரன்*

அழுத்தி நொறுக்குவதும், ஏதோ ஒரு சிந்தனையில் கைவிரலை சிகரெட் நெருப்பால் சுட்டுக் கொள்ளுவதும் இவரின் சர்வசாதாரண செயல்கள். (விஷய தானம் சத்யகலா) ஆனால் அதே போது ஒர்க் கான்ஷியஸ் உள்ளவராம். வில்லியம்ஸ் பழக இனிமையானவர். ஜாலியாகவும் இருப்பாராம். இவருடைய 'காளியமர்த்தனம்' படத்தின் ரஷ்ஸஸ் பார்த்து மேற்கொண்டு ஏழு படங்கள் ஒப்பந்தம் ஆகி இருக்கிறதாம்.

## தமிழில் சொப்ன

சொப்ன மலையாளப் படங்களில் நடிப்பதை வெகுவாகக் குறைத்துக் கொண்டு தமிழில் கவனம் செலுத்தப் போகிறாராம். முதலிடம் தமிழ்ப் படங்களுக்குத்தானாம்!

## தீர்ப்பை எதிர்பார்க்கும் 'தீர்ப்பு'

விக் மேக்கர் கந்தசாமி தீர்ப்பு படக்கதை தன்னுடையது என்கிறார். இவர் எழுதிய... அச்சில் வெளிவந்த 'கடமையா பாசமா' கதைதான் மலையாளத்துக்குப் போய் தமிழுக்கு உருமாறி வந்திருக்கிறதாம். சொன்னார். படத்துக்கு தடை வாங்கப்போகிறாராம். (இது சமயம் வழக்கு தொடர்ந்திருக்கலாம்)

இது பற்றி பாலாஜியைச் சந்தித்த போது கேட்டேன். அவரும் கதையைப் படித்துப் பார்த்தாராம். "தீர்ப்புக்கும் அந்தக் கதைக்கும் சம்பந்தமே இல்லை. அந்த ஆள் இவ்வளவு நாளாக தூங்கிக் கொண்டிருந்தாராக்கும். வழக்குப் போடட்டும். தீர்ப்பு தன்னுடைய கதை என்று சொல்லுவதற்கு அவர்மீது ஒரு லட்ச ரூபாய் நஷ்ட ஈடு கேட்டு மான நஷ்ட வழக்குப் போட இருக்கிறேன்" என்றார்.

# எழுதப்படாத தீர்ப்புகள்

ஜே.வி. நாதன்

**"அநியாயங்களை இப்படி ஏட்டில் எழுதப்படாத தீர்ப்புகளாலேயே காயப்படுத்த முடியும்..."**



"உம்... ஆரம்பிச்சுற வேண்டியது தானே?"

நடுவளவு தங்கசாமிக்கவுண்டர் ஊர்க் கூட்டத்தை நோக்கிக் கேட்டார்.

பஞ்சாயத்துத் தலைவர்களும், கூடியிருந்தவர்களில் பலரும் தலையசைத்து சம்மதம் தெரிவிக்க, தங்கசாமிக் கவுண்டர் செருமிக் கொண்டு, புங்கனூராரைப் பார்த்துச் சொன்னார்:

"ஏனுங்கோ, பிராது கொடுக்க வந்தவிய நீங்க. உங்க பிராதை சபையில சொல்லுங்க!"

தலை குனிந்து நின்ற புங்கனூர் கவுண்டர் மெல்ல நிமிர்ந்தார். அவருடைய கண்கள் 'ஜிவு ஜிவு' வென்று சிவந்திருந்தன.

தொந்தி முன்னுக்கு வந்ததில் செல்வச் செழிப்பும், தலை முழுவதும் நரையோடியதில் வயதும், உடம்பின் சுருக்கங்களில் அவருடைய முதுமையும் தெரிந்தது. தோளில் இருந்த துண்டை எடுத்து பவ்யமாக இடுப்பில் சுற்றிக் கொள்ள முற்பட்டார்.

ஊரிலிருந்த நாலைந்து பெருந்தனக்காரரில் ஒருவரான அவர், அம்மாதிரிச் செய்ய முற்பட்டத்தில் பலர் அதிர்ச்சியடைந்து, "வேணுமுங்கோ. துண்டு தோள்லயே கிடக்கட்டும்!..." என்று மறுப்புச் சொன்னார்கள்.

"ஊருக்கு ஒரு நாயம். எனக்கு ஒண்ணுங்களா? பஞ்சாயத்துக்கு ஒரு மதிப்பு வேணுமா?"

இடுப்பில் துண்டைச் சுற்றி முடியிட்டுக் கொண்டு கூட்டத்தை பார்த்தார்.

"வெளியே சொல்றதுக்கு நா கூசற விஷயம். ஆனா வேற வழியில லீங்கோ..." என்று தயங்கியவரின் பக்கத்தில் நின்ற அவர் முதல் மனைவி 'புங்கனூர் ஆத்தா' என அழைக்க



..டும் செல்லத்தாயி, "ஊர் சிரிக்குமுன்னு பொத்திப் பொத்தி வெச்சா முடிஞ்சதா...? ஒரு முடிவு காண வேணுமுங்களா?" என்ருள்.

கவுண்டர் விஷயத்தை உடைத்தார்: "என் ரெண்டாவது சம்சாரம் நாகம்மா உண்டாகியிருக்காளுங்கோ!"

"சந்தோஷமான சமாச்சாரம் தானே புங்கனூராரே!" கிழக்கு வளவு எசமான் கேட்டார்.

"என் முதல் சம்சாரத்துக்கு ரெண்டு தடவை வயித்தைக் கிளிச்சு ஆப்பரேசன் பண்ணிக் கொழந்தை பொறந்து—அதுக அப்பப்போ செத்தும்

போச்சுதேன்னு ஒரு வெறுப்புல நா திருப்பூர் கெவர்மெண்டு ஆஸ்பத்திரில குடும்பக் கட்டுப்பாடு ஆப்பரேசன் பண்ணிகிட்டேனுங்கோ!...''

''ஹா!...'' கூட்டம் விதிர்த்து நின்றது.

''இன்னி வரைக்கும் நா யாரிட்டயும் விஷயத்தைச் சொல்லலே. ஆனா கொழந்தைக்காக பெரிய கவுண்டச்சி இன்னொரு கல்யாணம் பண்ணிக்கும்படி கட்டாயப்படுத்தினா. குடும்பக் கட்டுப்பாடு பண்ணிக்கிட்ட எனக்கு இனிமே குழந்தை பிறக்காதுன்னு தெரிஞ்சிருந்தும் பண்ணிக்கிட்டேன். வாரிசுக்குக் குழந்தையில்லேன்னு கல்யாணம் பண்ணிக்கிறதா எல்லோரும் நினைச்சீங்க; இல்லே... சபலத்தாலேயும், சொத்து

## காதலியிடம்





இந்த வாரம் இவர்

## கடைசி வரிகள்...

ஏகமா இருக்கிற மெதப்புலயும்தான் கல்யாணம் பண்ணிக்கிட்டேன்! இப்ப— நாகம்மா உண்டாயிருக்கா... எப்படி? ச்ண்டாளி! என் குடும்ப மானத்தைக் கப்பலேத்தறதுக்குன்னு வந்த கோடரிக் காம்பு...!'' —பற்களைக் கடித்து உறுமினார் புங்கனூர் கவுண்டர்.

கிழவி செல்லத்தாயி, ''இவுங்க அவளைக் கழுத்தை நெரிச்சுக் கொன்னுடறேன்னு கோவப்பட்டாங்க. நாந்தான் அந்தப் பாவம் நமக்கெதுக்குங்க? அவளோட சுய ரூபத்தை உலகத்துக்குக் காட்டி ஊரைவிட்டுத் துரத்திப்புடலாமுங்கோன்னு சொன்னேன். நம்ம சீலக்காம்பட்டியில இத்தினி காலமா இப்பேர்க் கொத்த அநியாயம் நடந்திருக்கறதா எனக்கு நியாபகம் இல்லீங்கோ...! பஞ்சாயத்தார் நல்ல தீர்ப்பு கொடு[க்க]ணுங்கோ...! ஐயனார் சாமி! இந்[த] பாவிக்கு நீதான் கூலி கொடுக்கணும்! எம் புருசனைப் பணத்துக்காகக் கல்[யா]ணம் பண்ணிக்கிட்டு, சொகத்துக்[கு] எவனையோ தேடிக்கிட்டுப் போய் கு[டும்]பத்தை சந்தி சிரிக்க வைச்சுட்டாளே படுபாவிச் சிறுக்கி!'' என்று ஆத்திர[த்]

''உங்களுக்காக நான் எது வேண்டுமானாலும் செய்வேன்!'' என்று நீ சொன்ன போது நான் சந்தோஷப்பட்டேன். ஆனால் 'எது வேண்டுமானாலும்' என்பதற்கு 'வேறொருவரைக் கல்யாணம் கூட செய்து கொள்வேன்' என்ற அர்த்தமும் உண்டு என்பதை உன் திருமணப் பத்திரிகையைப் பார்த்ததும் புரிந்து கொண்டேன். உன்னிடம் ஒரு வேண்டுகோள் — என்னிடம் பேசிய அந்த வார்த்தைகளை உன் கணவரிடமும் பேசி விடாதே!

உன் கடிதங்களை நீ திருப்பிக் கேட்டாய்!... நீ மனைவியாகியதற்குத் தாலி ஆதாரம்; உங்களின் சந்தோஷமான வாழ்க்கைக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆதாரம்; என் காதலுக்கோ அந்தக் கடிதங்களே ஆதாரம்!

இந்த உலகின் எங்கோ ஒரு மூலையில் இறந்து கிடக்கையில் 'நான் அனாதையல்ல; உன் காதலன்' என்று சொல்லப் போவது உன் கடிதங்கள் தான்! என் காதலைக் கொலை செய்ததற்கு நீ விட்டுச் சென்ற சாட்சிகள் அவை தானே?...

அந்தச் சாட்சிகள் உன்னைக் காட்டிக் கொடுக்கும் அந்த நாள் வரை நான் காத்திருப்பேன்! — உன்னைப் பழி தீர்க்க!

—கோவி. கணேசன்

பேட்டி: பித்தன்

படங்கள்: ஜெய்மோகன்

தோடு படபடத்தாள்.

புங்கனூர்க் கவுண்டரின் இளைய தாரம் நாகம்மை இந்த எதிர்பாரா[த] வெடிகுண்டு போன்ற குற்றச்சாட்டை[க்] கேட்டு வெல்வெலத்து நின்றாள். அந்[த] இளம் பூங்கொடி புயற்காட்டில் அகப்பட்[ட]டது போல் நடுநடுங்கிற்று. கண்ணில்

வெள்ளமாய் நீர் குமுறிப் புரண்டது.

"ஐயனாரப்பா! எனக்கு வலுவையும், தைரியத்தையும் கொடப்பா!" என்று மனசுள் பிரார்த்தித்துக் கொண்டாள்.

'இந்த மனுசன் குடும்பக்கட்டுப்பாடு செய்துகிட்டு குழந்தையில்லாக் குறைக்குத்தான் கல்யாணம் செய்துக்கப் போறேன்னு எம்மட அம்மாளை ஏமாத்தி, பணத்தைக் காட்டி எம்மட சாதி சனங்க கண்ணைக்கட்டி, என்னையும் ஏய்ச்சுக் கல்யாணம் பண்ணிகிட்ட ஆளா? ஆனா... நாளெப்படி... நா எப்படிக் குழந்தை உண்டானேன்?'

குழம்பினாள் நாகம்மை.

கூட்டத்தில் தெற்கு வளவு மாப்பிள்ளை சண்முகம் எழுந்து சொன்னார்:

"புங்கனூர் மாமன் மன்னிக்கனுங்கோ. குடும்பக் கட்டுப்பாடு பண்ணிக்கிட்டவங்கள்ல நூத்துல ஓர்த்தருக்கு 'பெயிலியர்' ஆக வாய்ப்பு இருக்குன்னு அன்னிக்கு அவிநாசி ஆரம்ப சுகாதார நிலைய டாக்டர் ஒரு மீட்டிங்கில் பேசினதை நான் கேட்டேனுங்கோ. கட்டுப்பாடு பண்ணின ஒரு மாசத்துல சம்சாரத்தோடு தொடர்பு கொண்டாலோ அல்லது ஆபரேசன் பண்ணின நரம்பு கூடிட்டாலோ குழந்தை பிறக்க வாய்ப்புண்டு. ஆனா நூத்துல-ஆயிரத்துல ஒண்ணுக்குத்தான் இப்படி நடக்கும்னு அந்த டாக்டர் சொன்னாருங்கோ. அதனால மாமன் ஆத்திரப்படாம—அவசரப்படாம யோசிச்சா நல்லது..."



செல்லத்தாயிக் கிழவி ஆத்திரத்தில் கத்தினாள்...

"என்னத்தை ரோசிக்கிறது? குடும்ப மானம் பறிபோகுது... இவ பவுடரும், மையும் பூசிக்கிட்டு மினுமினுக்கறதும், பண்ணையம் பார்க்கிற ரங்கப்பன் பய இவளைப் பாத்துப் பல்லைக் காட்டறதும் எல்லாம் தெரிஞ்சுதான் இருக்கு. நாயை அடிச்சு வெரட்டறதுதான் நல்லதுங்கோ..."

"ரங்கப்பனா...? அவனா...?" கூட்டத்தில் கசமுசா.

'நரம்புகளை இழுத்துக் கட்டிக் கம்பீரமாகச் செதுக்கியது போன்ற கரடு முரடான உடம்புடன் புங்கனூர் வயலில் விவசாயம் பார்ப்பது, மாடு, கன்றுகளைக் கவனித்துக் கொள்வது என்று ஊழியம் பார்க்கும் தாழ்ந்த சாதிக்கார அவனா? ஊர் திருவிழாக்களில் சிலம்பம் ஆடித் திரிவானே அவனா? குழந்தைபோல் சிரித்து எல்லோரிடமும் குழையக் குழையப் பேசுவானே அவனா...? அந்த ரங்கப்பனா...?'

நம்பவே முடியவில்லை ஊராரால். "அடப்பாவி கடங்காரா!" என்றாள் பெண்கள் பக்கமிருந்து ஓர் கிழவி.

உடம்பு கிடுகிடுக்க எழுந்து நின்றான் ரங்கப்பன். எசமான் ஏதோ பஞ்சாயத்துக் கூட்டத்தில் பிராது வைக்கிறாராமே என்று எல்லோரையும் போல் வேடிக்கை பார்க்க வந்தவன் அவன். அவனே குற்றம் சாட்டப்படுவான் என எதிர் பார்த்திருக்கவில்லை...

கூனிக் குறுகிப் போனான். ஊராரின் அனற் பார்வையின் தகிப்பைத் தாளாமல், அந்த நெருப்புப்பழியின் வெக்கை பொறுக்காமல் மனசுக்குள் குமுறினான் ரங்கப்பன். 'ஐயனாரப்பா, ஏழை மேல ஒனக்கு ஏதப்பா இம்புட்டுக் கோவம்? எசமாங்களோட சின்ன சம்சாரத்தை என் தாய் மாதிரி நான் நினைச்சிருக்கேன்கிறதை எப்படி இவங்களுக்குப் புரிய வைக்கப் போறேன்?... தெய்வமே! மாசமாயிருக்கிற சின்னக் கவுண்டச்சியை குத்தவாளிக் கூண்டுல நிறுத்தி வார்த்தையாலக்கூறு போடறாங்களே இது ஒனக்கே நாயமா?'

"லேய் ரங்கப்பா! ஏனிலே ஊமைக் கோட்டான் போல நிக்குறே? எசமாங்க சொல்றது காதுல உளுந்துச்சா? சின்னக் கவுண்டச்சியோட ஒனக்கு...?"

"சாமி!..."

கதறினான் அவன். "நா கும்புடற

## உங்களுக்குத் தெரியுமா?

'பாடகி' திருமதி கே. பி. சுந்தராம்பாள் பாடிய 'ஞானப்பழத்தைப் பிழிந்து' என்ற பாடலைக் கேட்காதவர் யாரும் இருக்கமாட்டார்கள். அப்பாடலை எழுதியவர் 'நாடகத்தந்தை' தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள். பாடலிலேயே "சங்கரன் கும்பிடும்" என்ற வரி உள்ளது.

—'சூப்பர்' நடராஜன்

கன்னியாத்தாவுக்குப் பொதுவா, இம்மா இருக்கிற ஐயனாருக்குப் பொதுவா சொல்றேனுங்கோ. அவங்களை என்னைப் பெத்த தாய்க்குச் சமானமா மதிக்கிறேனுங்க..." குழந்தையைப் போலக் கதறி வாய்விட்டு அழுதான் ரங்கப்பன்.

"படவா ராஸ்கல் எப்பிடி நடிக்கிறான் பார்த்தீங்களா மச்சான்?" என்று ஒருவர் இன்னொருவரிடம் சொன்னது சற்றுத் தெளிவாகவே எல்லோர் காதுகளுக்கும் கேட்டது.

புங்கனூர்க் கவுண்டரின் இளைய மனைவி நாகம்மை ஆஜானுபாகுவாக குத்துக் காலிட்டு அமர்ந்திருந்த ஐயனார் சிலையையும் அந்த உருட்டு விழிகளையும் முறைத்தாள். கையில் பிரம்மாண்டமான வாளை ஏந்தி சுமார் இருபதடி உயரத்துக்குத் தோற்றம் கொடுத்த ஐயனாரைப் பார்க்கவே பயம் கொடுத்தார். சுற்றிலும் நிறைய குட்டி தேவதைகள். குதிரை மீது சேவகர்கள் ஆரோகணித்து சேணத்தைப் பற்றியிருந்தார்கள். முன்னால் நிறைய சூலங்கள் தரையில் நடப்பட்டு காய்ந்த மாலைகளைக் கழுத்தில் சுற்றி நின்றன. வில்வ மரத்தின் அடர்த்தியான கிளைகளும் இலைகளும் குடை பிடித்து அந்த இடத்தைப் பகலிலேயே இரவாகக் காட்டின. ஆந்தைகள் உடைந்து போன மண் சிலைகளின் மேல் உட்கார்ந்து கண்களை உருட்டி விழித்தன.

திடுமென நாகம்மை பேச ஆரம்பித்தாள்.

"என்னைப் பல பேர் பெண் பார்க்க வந்தாங்க. அவிய கேட்ட சீர் செனத்தியை எங்கம்மாவால தர ஏலலைன்னு எல்லாம் தட்டிப் போச்சுது. அதனால ரெண்டாங் கல்யாணத்துக்கு ஒப்பினேம். நாங்க ஏழையானாலும் மானமான குடும்பம். இந்த ஐயனார்சாமி சத்தியமா இவரு ஒருத்தர் தவிர யாருக்கும் முந்தானை விரிச்சது கிடையாது. ஆனா என் வயத்துல வளர்ற குழந்தை தன்னதில்லைன்னு இந்தக் கவுண்டர் சொல்றாரு! குடும்பக் கட்டுப்பாடு ஆப்பிரேசன் ஆயிரத்துல ஒண்ணு தப்பலாம்கிற வாய்ப்பு இருக்குன்னு தெற்கு வளவு மாப்பிள்ளை சொன்னாங்களே — அது மாதிரி இதுவும் ஆகியிருக்கும்னு இவிய ஏன் நம்பலைன்னு நா சொல்றேன். பெரிய கவுண்டச்சி தம்பி மகனுக பேருக்கு சொத்தையெல்லாம் எழுதி வெக்கறதா இருந்தது. இப்ப எனக்குக் குழந்தை பிறந்தால் தடைப்படுமேன்னு கவுண்டச்சிக்கு ஆத்திரம். அவிய ஏத்தின போதனை இவருக்குக் கண்ணு மண்ணு தெரியலை. எம்மேல அபாண்டமா பழிபோட ஊரைக் கூட்டியிருக்காரு."

கண்ணீரைத் துடைத்தெறிந்து நிமிர்ந்து நின்றாள் நாகம்மை. விருட்டென்று நடந்து ரங்கப்பன் அருகில் போய் நின்றாள்.

சிறுபிள்ளை போல் முகத்தில் கைகளை வைத்து மூடிக் கொண்டு அழுத அவனது கைகளைத் தொட்டு விலக்கி, அவனுடைய கையோடு தன் கையைச் சேர்த்துக் கொள்ள முற்பட, அவன் தீயைத் தொட்டவன் போல் விலக—

"அடிப்பாவிச் சிறுக்கி!" கூட்டம் கூச்சலிட்டது. பரபரப்பு காட்டியது.

"அநியாயமா என்னை ஏமாத்திக் கல்யாணம் பண்ணிகிட்டு வந்து, இல்லாத ஒரு பழியை அபாண்டமா எம்மேல போட்டீங்க இல்லையா? அதை நெசமாகவே ஆக்கிட்டா என்ன பண்ணுவீங்க? இதுவரைக்கும் பத்தினியா இருந்தவ இப்ப இன்னொருத்தனைத்



தொட்டுட்டேன். இனிமே இவனோட தான் நா வாழப்போறேன்...''-புங்கனூர் கவுண்டரின் முகத்தைக் கோபத்தோடு பார்த்து மொழிந்தவள், கழுத்தில் கை வைத்து 'படக்'கென்று ஒரே இழுப்பில் தன் தாலியைப் பறித்து அவர் முகத்தை நோக்கி வீசினாள்.

என்ன ஏதென்று புரியுமுன்பே நிகழ்ந்து விட்ட அச்சம்பவம் தந்த அதிர்ச்சியில் ஒரு கணம் கூட்டம் செயலற்று நின்றது. அடுத்த நொடியில்—

ஊர்க் கவுண்டர் ஒருவர் வீராவேசத்தோடு எழுந்தார். "அவளைச் சும்மா விடாதீங்கடா... மரத்தில கட்டி குதிரைச் சவுக்கால விரியலாடினாத்தான் சரிப்படும்!'' அவர் ஓரடி எடுத்து முன்னால் வைக்க,

"சாமி!...'' என்று ஒரு ஆவேசமான குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தார் அவர். எல்லோரும் குரல் வந்த திக்கில் பார்த்துத் திகைத்தார்கள்.

ஐயனார் கோவில் முன்னால் நட்டு வைக்கப்பட்டிருந்த சூலம் ஒன்றைப் பிடுங்கிக் கையில் ஏந்திக் கொண்டு நின்றான் ரங்கப்பன். அவன் கண்களில் நெருப்பு ஜ்வலித்தது.

"எட்டு ஜில்லாவை சிலம்பம் ஆடி ஜெயிச்ச, ரங்கப்பன் நான். யாராவது ஒரு அடி எடுத்து வெச்சீங்க— இங்க சின்னாத்தா மேல எவன் கையாவது பட்டுது அவன் குடலை உருவிக் கழுத்துல மாலையாப் போட்டுக்குவேன்... ஜாக்கிரதை!''

அவன் நின்ற உறுதியான கோலமும், கையில் உயர்த்திப் பிடித்த ஐயனார் கோயில் சூலமும், உக்கிரத்துடன் உதிர்த்த வார்த்தைகளும் அவர்களை நடுநடுங்க வைத்தன. வெலவெலத்து நின்றனர்.

கூட்டத்தை விலக்கி நாகம்மையை அழைத்துக் கொண்டு ஊரை விட்டு வெளிச்செல்லும் பாதையில் நடக்கையில் நாத் தழுதழுக்க ரங்கப்பன் சொன்னான்:

"தாயி!, எம்மாம் பெரிய வார்த்தையெல்லாம் சொல்லிப் புட்டீங்க! எம்மட ஒடம்பை செருப்பாத் தெச்சுப் போட்டு ஒங்களை நா காப்பாத்து வேணுங்கோ! ஆனா என்னைப் பெத்த தாய்க்குச் சமானமா ஒங்களை நான் ஏத்துக்குவேனே தவிர வேற மாதிரி சத்தியமா இல்லீங்கோ...''

"மன்னிச்சுக்க ரங்கப்பா! அந்த மனுசனை மானபங்கப்படுத்தணும்— அவங்களுக்கெல்லாம் ஒறைக்கணும்னு அப்படி ஒரு ஆவேசத்துல பேசிட்டேன் அது தப்புத்தான்! எனக்கும் என் கொழந்தைக்கும் இவங்களோட சொத்து சுகம் எதுவும் வேணாம். இவங்க கீழ்த்தரமான சூதுவாதும் வேணாம். மனுசன் சொத்துக்காக கட்டின பொண்டாட்டியைக் கூட முச்சந்தியில நிறுத்திப் புடறான் பார்த்தியா— இப்ப அவன் முகத்தில கரியைப் பூசின நிம்மதி எனக்கு... இப்பத்தான் ரங்கப்பா மனசு அமைதியா இருக்கு...'' என்று சொன்னவள் உடைந்து 'ஓ'வென்று அழுதபடியே நடந்தாள்.

தூரத்தில் செல்லும் இருவரையும் ஆத்திரத்தோடு பார்த்துச் செயலற்று நின்றது ஊர்க்கூட்டம்.



---

சென்னை — 6-லிருந்து பாரதி கலை இலக்கிய மன்ற வெளியீடாக 'தாகம்' வெளி வருகிறது. ஆசிரியர் குழுவான கலாமணி, தாரா, பேபிதா, சிவா, பிரமநாயகம் ஆகியோரின் திறமைக் கரங்களால் படைக்கப்பட்ட இந்த தாகம் என்றைக்கும் நினைவில் நிலைக்கும் வண்ணம் அதன் படைப்புத் தரங்கள் உயர்ந்து நிற்கின்றன.

'அந்தோன் சேகவ்' எழுதிய 'வான்கா' என்கிற சிறுகதையின் மொழி பெயர்ப்பும், அறிவுமதி, வளவன், தயா, அழகப்பன் கவிதைகளும் மற்ற சிறுகதைகளும் தாகத்திற்கு தனியொரு தரத்தைப் பெற்றுத் தருகின்றன.

'முரண்பாடுகளின் மொத்த உருவம் மதம்', 'நீதி' ஆகிய கட்டுரைகளும் சிறப்புச் சேர்க்கின்றன.

வித்தியாசமான கோணத்திலிருந்து ஒரு சரித்திரம் படைத்திடும் வேகம், தாகத்திற்குள் கிளம்பியிருப்பது புலப்படுகிறது. அது, ஆசிரியர் குழு எழுதியிருக்கிற தலையங்கத்திலே மிக அழகாய் இனங்காட்டுகிறது.

தாகத்திற்கு வாழ்த்துக்களும் வரவேற்புகளும் என்றைக்கும் தொடரும்.

# பிரிக்கப்பட்ட உறைகள்

'தாய்' வாங்கினவுடன் என் கைகள் தானாக 'உமா மகேஸ்வரி'யின் கட்டுரையைத் தேடி பக்கங்களை புரட்ட ஆரம்பித்து விடும். அந்த விதத்தில் இப்போது 'பொ. ம. ராசமணி'யின் கட்டுரை வரிசையும் சேர்ந்திருக்கிறது. உமாமகேஸ்வரியின் கட்டுரைகள் சிந்தனையைக் கிளரும் சொல் வித்துக்கள் என்றால் ராசமணியின் கட்டுரைகள் செயல்படத்தூண்டும் போதனைகளாக அமைந்திருக்கின்றன! தொடரட்டும்.

—ரா.ஜோதிராமன், நெல்லிக்குப்பம்.

'ஊடுகதைகள் புகுத்தி சலிப்பு ஏற்படாமல் சீராக்கி இருக்கிறார் டைரக்டர் சங்கர்' என்று 'தாய் மூகாம்பிகை' விமர்சனம் செய்துள்ள 'தாய்' மற்ற வார ஏடுகளில் இருந்து பிரிந்து தனித்தன்மை பெற்று முன்னணியில் நிற்கிறாள்!

'இதயம் இல்லாதவர்களைக் கூட தமிழ் நிலம் தாங்கும்' என்ற சொற்றொடரின் உண்மை அறிந்து வியந்து போனேன்.

—கு. ப. இரகுநாதன்' பூவிருந்தவல்லி.

## ஜெ... தூங்குகிறாரா?

25-7-82 இதழில் 'மரணங்கள் ஜனிக்கின்றன' கதையில் ஆசிரியர் நடிகையின் மகள் 'முகை அவிழக் காத்திருக்கும் மொட்டாக —பாவாடை தாவணியில் இறங்கினாள்' என்கின்றார் ஆனால் ஓவியர், தனது படத்தில் உள்ள நடிகையின் மகளை அவ்வாறு வரையவில்லையே?

—என். கல்யாணராமன், புதுதில்லி,22.

தூத்துக்குடி 'பனிமய அன்னை' பற்றிய அரிய செய்திகள் — சீரிய முறையில் மாந்தர் வாழ்ந்திட 'ஹிஜ்ரி சிந்தனைகள்' திருவெற்றியூர் 'அன்னை பாகம் பிரியாளின்' தெய்வீக மகிமை பற்றிய விவரங்கள் — மொத்தத்தில் 1-8-82 தேதி 'தாய்' இதழ் முப்பெரும் மதத்தினருக்கும் முக்கனியாய் — கற்கண்டாய் இனித்தது. பாராட்டுகள்.

—என். சண்முகம், கீழ்பென்னாத்தூர்

## என்னை ஏன் நினைக்கவில்லை?

தாங்கள் எத்தனையோ பிரச்சினைகளை எழுதி விட்டீர்கள். ஆனால் வாரம் தோறும் 'தாயை' சுமந்து செல்லும் இந்த சைக்கிள் பையன் ஒருவனையாவது நினைத்து பார்த்திருப்பீரா? தயவு செய்து குறைந்தது நான்கு பேரையாவது பேட்டி கண்டு எழுத வேண்டுகிறேன். 'தாய்' பாசமிக்கவள் என்பதை நிரூபிப்பாள் என நம்புகிறேன்.

—சி. என். வேலுச்சாமி, சின்னாம்பாளையம்

'கவனிப்பாரில்லையா?' என்ற தலைப்பில் சாஹித்ய அகாதமியின் ஓரங்கப் போக்கை பற்றிய கட்டுரையை படிக்க படிக்க தமிழ் வளர்ச்சி பொங்கியது. நாமே தமிழை படிக்க, எழுத, பேச கூச்சப்படும் போது, சாஹித்ய அகாதமி மட்டும் ஏன் தமிழை புறக்கணிக்கக் கூடாது? வங்காளிகளுக்கும், மலையாளிகளுக்கும் இருக்கும் ஆர்வம், கடுமையான உழைப்பு, திறமை... இவைகள் தமிழனிடம் வளர்ந்தால்தான் தமிழ் நூல்கள் பல மொழி பெயர்ப்பைப் பெறும். தமிழ் வளரும். தாயின் இந்த எச்சரிக்கையை கவனத்தில் கொள்வது சிறந்தது.

—எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

ஜெயலலிதா தனக்கு பிடித்த நாவலைப் பற்றி சுவைபட எடுத்துக்கூறி எங்களுக்கும் ஆசையை வளரவிட்டு எழுத்தாளர் டிக்கன்ஸ் எழுத்துக்களை தேட வைத்து விட்டாரே!

—திருமதி. நாராயணராவ் சென்னை-39

## கிராக்கியின் கட்டுரைக்கு கிராக்கி

''சத்துள்ள காய்கறிகள்'' 'கிராக்கி'யின் கட்டுரைக்கு தகுந்தாற் போல், காய்கனிகள் வடிவமைப்பில் வரையப்பட்ட 'ஜெ'யின் படங்கள் சத்தாக இருந்தது! கிராக்கியின் கட்டுரைக்கு கிராக்கிதான்!

—எம். செல்லையா, சாத்தூர்

# அப்பா வரன் தேடுகிறார்...

பாமா கோபாலன்

வட்டமுகம். நடுவகிடு. அழகான கண்கள். நல்ல சிவப்பு. நல்ல பேச்சாளி. கல்லூரியில் படித்தவள். பட்டதாரி. இவையெல்லாம் விட முக்கியமானது—

பணக்கார வீட்டுப் பெண். கேட்க வேண்டுமா? எஸ். கேட்கத்தான் வேண்டும்.

அப்பா எனக்கு வரன் தேடுகிறார். எனக்கு வயது இருபது - மூன்று ண்டுகளுக்குப் பிறகு.

மகாலிங்கபுரம் கோயில், சிவ விஷ்ணு ஆலயத்தில் கண்டெடுத்த தரகர்கள். சிருங்கேரி மடம்... ஜாதக பரிவர்த்தனை நிலையங்கள்...

ஹூம். எல்லாம் பயனற்றுப் போய்விட்டது. வேலை வரவில்லையா? அதெல்லாம் இல்லை. ஏதாவது குறை...

நோ. நோ. கண்பார்வை அபாரம். கண்ணாடி கிடையாது. கை, கால்கள் எல்லாம் ஒழுங்காக, முழுமையாக இருக்கின்றனவே...

கல்லூரியில் படிக்கும் போதே எல்லோரும் என்னைப்பற்றி பேசுவார்கள். நான் மௌனம் சாதிப்பேன். தவறு என் மீது இல்லையே? ஆனால் மனசு கேட்கிறதா? இரவில் அப்பாவிடம் சொல்லியழுவேன். அம்மா கிடையாது.

"லதா, உலகம் பேசற பேச்சைக்கேட்டு மயங்காதே. ஓகோ என்று புகழும்; அடுத்த நிமிடமே அதள பாதாளத்தில் தள்ளும். டோண்ட் ஒர்ரி.."

நான் பெருமூச்சுடன் அப்பாவைப் பார்த்தேன். அருகே வந்து அவர், ஆதரவுடன் தலையைக் கோதிவிட்டார். பாவம் அவர் மனதில் என்ன நினைவுகளோ? எண்ணங்களோ?

சே. அப்பா எவ்வளவு நாட்கள் இப்படி வரனுக்கு அலைவார்? நானே தேர்ந்தெடுத்தால் என்ன?

எல்லோருக்கும் விடியும் பொழுது எனக்கு மட்டும் விடியாதா?

'தெய்வத் திருமணங்கள்' நடைபெறும் நகர தியேட்டருக்குச் சென்றோம். நானும் அப்பாவும்தான்.

இடைவேளையின்போது அவர் என் கண்களில் பட்டார். இவர்தான் எனக்கு கணவனாக...



மனம் குதித்தது. மாப்பிள்ளை அழைப்பு முதல், முதல் இரவு வரை எண்ண ஸ்லைடுகள் மாறிமாறி விழுந்தன.

அப்பாவிடம் நைஸாகச் சொன்னேன். அப்பா அவர் அருகில் சென்றார். ஏதோ பேச்சுக் கொடுத்து, விவரங்களைச் சேகரித்தார்.

வறுமையின் மொத்த வியாபாரி. கூடப்பிறந்த சகோதரிகள் இரண்டு. நோயாளி அம்மா. பள்ளியில் படிக்கும் தம்பி. தற்காலிக வேலையில் இவர்...

அப்பா தயங்கினார்.

"நம்ம பணம் சேர்ந்தால் அவரும் பணக்காரர்தானே அப்பா?..." என் குரலில் இருந்த குழைவு, ஏக்கம்...

அப்பா சம்மதித்தார், வேறு வழியின்றி படம் முடிந்தவுடன் அப்பா தனியே அவரிடம் சென்று, விசிட்டிங் கார்டு கொடுத்து வீட்டுக்கு வரச் சொன்னார். லேசுபாசாக விஷயத்தையும் சொன்னார். பாக்டரி ஒன்றில் நிரந்தர வேலைக்கும் ஏற்பாடு பண்ண முடியும் என்றார். என்னிடம் வந்தார்.

"ஞாயிறு மத்தியானம் தான் மட்டும் வர்றதாச் சொன்னார்."

என் மனத்தில் பூக்கள் மலர்ந்தன.

ஞாயிறு மதிய நேரம். அவர் வந்தார்.

டிபனைச் சாப்பிட்டார். அப்பா என்னை அழைத்தார். காபி கொண்டு தரவேண்டும். பக்கத்து வீட்டுத் தோழி கலா உதவி செய்ய நான் ட்ரேயுடன் சென்றேன். காபி தந்தேன்.

அவர் என்னை அளந்தார். நானும் அவரை கீழ் கண்ணால் பார்த்தேன். சிவப்புதான். ஸ்டைலாக கிருதா. ரஜினி மீசையை இவர் வைத்துக் கொண்டிருந்தார். பாவம் ரஜினி என்ன செய்வாரோ!

அப்பா நமஸ்காரம் செய்ய சொன்னார். அவர் என்னைப் பாட சொன்னார். 'சின்னஞ்சிறு வயதில் பாட்டுப் பாடினேன். ரசித்தார்.

என் மனத்தடாகத்தில் மலர் சிரித்தது. பாட்டு முடிந்து எழுந்து நின்றேன்.

தலை வகிடு முதல் கால்பாதம் வரை அளவெடுப்பதுபோல மீண்டும் ஒரு பார்வை.

நான் விழிகளைத் தாழ்த்திக் கொண்டேன். அப்பாவிடம் உடனே சொல்லி விட்டார்—

பெண்ணைப் பிடிக்கவில்லை.

அப்பா அதிர்ந்தார். நானும் தான். நானே பார்த்து ஸெலக்ட் செய்தவரே—

காரணம் சொன்னார். கூனிக் குறுகிப் போனேன்.

அவரைவிட நான் உயரமாம். ஜோடிப் பொருத்தம் இருக்காதாம்.

இதோ கிளம்பிப் போய் விட்டார். அவர் சொன்ன காரணம்தான் முள்ளாய் உறுத்தியது.

உயரம்! ஓ! கடவுளே! என்னை ஏன் இப்படி படைத்தாய்? அவர் சொல்லிவிட்ட காரணம்:

"இவள் என்னை விட அரையடி உயரம் அதிகம். தெருவில் போகும் போது சிரிப்பார்கள்...! நானோ மூன்று அடி; இவள் மூணரை அடி உயரம்...! ஐம் ஸாரி..."

எனக்காக அப்பா மறுபடியும் வரன் தேடப் புறப்பட்டு விட்டார்...

எனக்குக் கணவர் கிடைத்து விடுவார் ஸார்... உலகளந்தப் பெருமான் மீது நம்பிக்கை ஜாஸ்தி...





"சார் 100 ரூபாய் கடன் கொடுங்கள்!"

"எப்ப திருப்பி தருவீர்கள்?"

"சம்பளம் வந்தவுடன்!"

"எப்ப சம்பளம் வரும்?"

"வேலை கிடைத்தவுடன்!"

—எஸ். என். தங்கராஜன்

அவள் சகிக்கமாட்டாள்.

14. மனைவியின் சமையலையோ அழகையோ அடுத்த பெண்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து குறை கூறுவதை அவளால் தாங்க இயலாது.

15. கணவர் அதிகம் படித்தவராக இருக்கலாம். அதற்காக அடிக்கடி அவளை மூட ஜென்மம் எனச் சுட்டிக் காட்டிப்பேசி, அவளுக்கு வேதனை தரலாகாது.

16. குடும்ப பாரத்தைத் தாங்கி வழி நடத்திச் செல்லும் கணவன் தனது உடல் நலத்தைப் பேணிக் கொள்ள வேண்டும். காலாகாலத்தில் தூங்கி எழ வேண்டும். நோய்களை ஆரம்பகாலத்திலேயே தகுந்த சிகிச்சை மூலம் தடுத்துக் கொள்ள வேண்டும். அடிக்கடி நோயில் படுத்து மனைவிக்குத் தொல்லை தரலாகாது.

இந்தப் பதினாறு தவறுகளையும் ஊன்றிக் கவனித்து இவையில் ஏதாவது ஒன்றிரண்டு தன்னிடமிருந்தால் அவற்றை கணவர் நீக்கி, மனைவியின் பூரண அன்பையும் ஒத்துழைப்பையும் பெற்று மகிழ்ச்சியாக, நிம்மதியாக வாழ வேண்டும்.

வாழ்க்கையை நரகமாக்குவதும் சொர்க்கமாக்குவதும் நம் கையில் தான் இருக்கிறது.

—படம்: ஜெய்மோகன்

---

# இளையவர் இனியவர் சுப்ரியா



படித்த பெண்ணிற்குரிய பாங்கு. படாடோபம் இல்லாத திருத்தமானப் பேச்சு. அலட்டிக் கொள்ளாத எளிமை — இத்தனையும் எனக்கே சொந்தமான ஒன்று என்று கூறுவது போல் இருக்கிறார் இவர்.

பள்ளியில் படிக்கும் போதே இவருக்கு 'கலை' கைகொடுத்ததால் அதிலேயே (மேலே படிக்காமல்) இதயம் துடிக்க ஆரம்பித்தது.

தமிழ், ஆங்கிலம், மலையாளம் மூன்று மொழிகளிலும் இவருக்கு நல்ல பயிற்சி உண்டு என்பதை இவர் பேசும் போது உணர முடிகிறது.

ஒன்றரை ஆண்டிற்குள் இவர் நடித்து இருக்கும் நாடகங்கள் 175 என்பதை அறியும் போது மகிழ்ச்சியாக இருக்கிறது.

இதை விட இந்த 175ல்—170 நாடகத்தில் இவரே கதாநாயகியாக நடித்திருப்பதை அறியும் போது பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

இவர் நடிப்பிற்காக பெற்றுள்ள சான்றிதழ்கள் ஏராளம்...

நடிப்பையும், இவரது தமிழ் உச்சரிப்பையும் உணர்ந்த ஒரு அரசியல்வாதி 'சொல்லின் செல்வி' என்ற பட்டத்தைத் தந்திருக்கிறார்.

இப்போது மூன்று படங்களில் நடித்துக் கொண்டு இருக்கிறார்.

'எதிர்காலத்தில் நான் வெண்திரையில் ஒளி விட்டாலும் — நாடகத்துறையில் என் மனம் நாடாமல் இருக்காது' என்று பதினேழு வசந்தங்களைக் கண்ட இந்த நடிப்புப் பறவை கூறுகிறது.

—பாபநாசம் குறள்பித்தன்

# மின் மினிப் பூச்சிகள்



“இதற்கு முன் நீ யாரையாவது காதலித்திருக்கிறாயா?”

இரண்டு மாதங்களுக்குப் பின்னர் சந்திக்கும்போது பேசுவதற்கு எத்தனையோ விஷயங்கள் இருக்க ‘இதென்ன கேள்வி’ என்பது போல் அவனை நிமிர்ந்து பார்த்தாள் அவள். அவன் ஏதும் பேசாமல் அவளது கண்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவள் மீண்டும் தலைகுனிந்தபடி விர
களால் மேஜையில் சிந்தியிருந்த தண்ண
ரில் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தாள்
அவள் பேசாமலிருந்த அந்த ஒரு சில
நிமிடங்கள் அவன் மனத்தில் பற்பல
கற்பனைகளைத் தோற்றுவித்துக் கொண்டி

## வைகைச்செல்வி



ருந்தன. அவற்றைப் பொறுக்க மாட்டாத வ(ளை)ய் மேஜை மீதிருந்த அவளது கரத்தை அவன் பற்றியவுடன், அவள் சரேலென்று தன் கையை விடுவித்தபடி மீண்டும் அவனைப் பார்த்தாள். 'இந்தக் கேள்விக்கு நான் கட்டாயம்! பதில் சொல்லித்தான் தீர வேண்டுமா? ப்ளீஸ் ரவி வேண்டாம்' என்று அவள் பார்வை அவனிடம் கெஞ்சிக் கொண்டிருக்கையில்... "நமக்குள்ள என்ன ஒளிவு மறைவு கலா?" என்ற அவனின் குரல் அவளைப் பேச வைத்தது.

அவன் கேட்ட கேள்விக்கும், அவள் சாதித்த மௌனத்திற்கும் இடையில் ஏற்பட்ட காலத்தில், அவளின் ஆன்மா எங்கோ பறந்து போய் ஒரு பெரிய சக்தியினைக் கொணர்ந்து அவளிடம் தந்திருக்கிறது. இல்லாவிட்டால் அந்தக் கொடிய வஞ்சகத்தினை மீண்டும் நினைப்பதற்கே அவளுக்குப் பலம் இல்லாத போது, அதனை விவரித்துச் சொல்ல, அதுவும் தான் திருமணம் செய்து கொள்ளப் போகிறவனிடமே எப்படி அவளால் வாய்விட்டுச் சொல்ல இயலும்?




என்ன கிங்கரர்களின் கையில் உள்ள ஆயுதங்களை அபகரித்து அவர்களையே தாக்கிறை!... ம்... இவன் நம் கட்டுக்கடங்க மாட்டான் இவனை அவன் மனைவியிடமே அனுப்பி விடுங்கள்.

—பவித்ரா

---

மெல்ல ஆரம்பித்தாள்...

"காதல் என்றால் என்ன வென்று அந்த வயதில் எனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லைதான். இப்போது நாம் நினைக்கிறோமே இளமையில் ஏற்படும் 'இன்ஃபாச்சுவேஷன்' என்று, அதுவாகத்தானிருக்கும். நான் மிகவும் இனிமையாகப் பாடுவேன். எனவே ஒரு பாடகனை மணக்க வேண்டுமென்பது ஒரு லட்சியம் போலத் தோற்றமளித்த நேரம் அது. அவனை நான் முதலாகப் பார்த்ததே எங்கள் கல்லூரிக்கு வருகை தந்த ஒரு ஆர்க்கெஸ்டிராவில்தான். கல்லூரிப் படிப்பு முடிந்தபின் ஒருநாள் அவனைத் தற்செயலா என் தோழியின் வீட்டில் சந்தித்தேன். அதற்குப்பின் பத்துப்பன்னிரண்டு முறைகள் நானும் அவனும் சந்தித்திருக்கலாம். இந்தக் குறுகிய இடைவெளியில் அவனாக என்னிடம் 'என்னைத் திருமணம் செய்து கொள்கிறாயா?' எனக் கேட்டான். நான் உடனே 'சரி' சொல்லிவிட்டேன். டிரான்ஸ்ஃபர் ஆகி வட இந்தியா போனான். இருவரும் கடிதங்கள் எழுதினோம். திடீரென அவனிடமிருந்து கடிதம் வருவது நின்றது. நான் தொடர்ந்து எழுதியும் பதிலில்லை. ஒருநாள் அவனிடமிருந்து 'இனிமேல் என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்' என்று ஒரு இன்லண்ட் வந்தது...! இதைச் சொல்லும்போதே அவள் குரல் நடுங்கியது.

"நீ அவனை அதற்குப் பிறகு பார்த்தியா?"

'இல்லை' எனத் தலையாட்டியவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

'ரவி என்ன நினைத்திருப்பார்? நானும் அவனும் எப்படிப் பழகினோம் என்று? எந்த எல்லை வரை என்று? அந்த இளம் வயதில் என்னைத் தொடக்கூட அவனை அனுமதித்ததில்லை என அவருக்கு நான் எப்படிப் புரிய வைப்பது'—அவள் மனம் புலம்பியது. சர்வர் பில் தரவே அவன் எழுந்து நின்றான். இருவரும் ஹோட்டலை விட்டு வெளியே வந்தனர்.

"நீ இன்னிக்குக் கட்டாயம் ஊருக்குப் போய்த்தான் ஆக வேண்டுமா?"

"ஆமாம். வீட்லே நாளைக்குள்ளே கட்டாயம் வந்து விடுவேன்னு சொல்லியிருக்கிறேன்."

"அதனாலென்ன? நாளைக்குக் காலைலே புறப்படு. நான்கு மணியில் வீட்டுக்குப் போய்விடலாம். இன்னிக்கு ஒருநாள் என்னோட..."

"ஐய்யய்யோ, வழக்கம் போல ஆரம்பிச்சாச்சா? ஊருக்குப் போய், வீட்டில் பேசி சீக்கிரமா கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்யுங்க."

"அதான் அடுத்த வாரம் போறேனே கலா"

"அப்புறம் ஏன் அவசரம்? எனக்கு இப்படி உங்க ரூமுக்கு வர்றதெல்லாம் பிடிக்காதுன்னு தெரியுமில்ல. தெரிஞ்சும் இப்படி நீங்கள் கேட்கும் போது நான் உங்ககிட்டே மிகவும் ரிஜிட் ஆக நடந்திருக்கிறேனோ என வருத்தமாயிருக்கிறது."

"ப்ளீஸ் கலா. உன்னைத்தானே நான் கூப்பிட முடியும்? 'ஸ்டோலன் ஸ்வீட்ஸ் ஆர் ஆல்வேஸ் ஸ்வீட்டர்' தெரியுமா?"

"ம்ஹூம். முடியாது. முடியாது. முடியாது."

அவன் பேசாமலிருந்து விட்டான். அவளும் சிறிது நேரம் பேசாமலிருந்தாள்.

"எம் மேலே கோபமா இருக்கிறீர்களா?"

"இல்லே. ரொம்ப சந்தோஷம்" அவள் சிரித்து விட்டாள்.

"கலா, அடுத்த வாரம் ஊருக்குப் போய்ட்டு வர்றேன். நீ எதற்கும் ஒரு பத்து நாட்கள் கழித்து உங்க சித்தப்பா வீட்டுக்கு வா, அவரை விட்டே உங்க வீட்டிலே பேசச் சொல்லுவோம்.'

அவளுக்கு மனம் நிறைந்து போகிறது. இப்போதே திருமணம் நடந்து விட்டதைப் போல, அனைத்து கண்களும் பார்க்கும்படி தெருவில் அவனுடன் ஒட்டிக் கொண்டு நடப்பது போல, நினைத்த நேரத்தில், நினைத்தபடி ஊர்சுற்றுவதைப் போல, சிணுங்கலுடன் அவனிடம் கொஞ்சுவதைப் போல... பஸ்ஸில் ஏறக்குறைய அனைவரும் ஏறி விட்டனர்.

"என்ன கலா, என்ன யோசனை, ஏறிக்கிறயா?"

"எனக்குப் போகவே மனசில்லே".

"நானு போகச் சொல்கிறேன். என்னோடு வந்து..." அவள் சட்டென பஸ்ஸிற்குள் ஏறி உட்கார்ந்து கொண்டு கையாட்டினாள்.

இவளுக்கும் வேலை கிடைத்தது. மனத்தில் ஓர் ஆர்கெஸ்டிரா நடந்து போய் விட்டதை மறக்கச் செய்தது. எவரிடமும் தன் மனத்தினைக் கொடுத்து விடக் கூடாது என்பதில் மிக்க கவனமாக இருந்தாள். எத்தனையோ வகைப்பட்ட ஆண்களைத் தன் அலுவலக வாழ்வில் சந்தித்தும் இவள் மனத்தில் துளியேனும் சலனம் ஏற்பட்டதில்லை. திருச்சிக்கு மாற்றலாகி சித்தப்பா வீட்டில் தங்க நேரிட்ட போது, 'தூரத்து உறவினன்' என்று அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டவனே இந்த ரவி. பி. எச். எல்லில் வேலை பார்க்கிறவன். அவனுக்கும் திருச்சி சொந்த ஊரல்ல. சித்தப்பா கூறியது போல பழகுவதற்கு இனிமையானவனாக இருந்தான். இவளுக்கு அவன் மீது ஏற்பட்ட அன்பு 'காதலன்' என்ற அடிப்படையில் என்பதை விட 'உறவினன்' என்ற அடிப்படையில் ஏற்பட்டதே என்பதை இப்போதும் இவள் நினைத்துக் கொண்டாள்.

அந்த வாரம் முழுவதும் வீட்டிலும் அலுவலகத்திலும் அவள் பறவையாகச் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தாள். 'ஊருக்குப் புறப்படுகிறேன்' என்று அவனிடமிருந்து கடிதமும் வந்து விட்டது. தன் ஒருத்தியால் இத்தனை பெரிய மகிழ்ச்சியினைச் சுமக்க இயலாது எனத் தெரிந்தவுடன் தன் அலுவலகத் தோழியுடன் 'அடுத்த மாதமே தனக்குத் திருமணம் நடக்கலாம்' என்ற அந்தப் பெரிய விஷயத்தைப் பகிர்ந்து கொண்டாள்.

கடிதம் வந்து பத்து நாட்களாகி விட்டன. 'இந்நேரம் அவர் வந்திருப்பாரே' மனம் சிந்தித்தபடியே உடல் தாயின் மடியில் குழந்தையாகப் படுத்து விளையாண்டு கொண்டிருந்தது.

"அம்மா, வர்ற ஞாயிற்றுக் கிழமை சித்தப்பா வீட்டுக்குப் போய்ட்டு வர்றேம்மா."

"இப்பத்தானடி போய் வந்தே? ஊரெல்லாம் மழையும், வெள்ளமா இருக்கே. என்னமோ அப்பாவிடம் கேட்டுக்க."

செல்ல மகள் தந்தையின் அனுமதியுடன் புறப்பட்டு விட்டாள்.

"நீங்க முடிவா என்னதான் சொன்னீங்க?"

"நான் என்ன சொல்றது கலா, எனக்கு பணம் பெரிசில்லே. ஆனா எங்க வீட்லே இருபத்தைந்தாயிரமாவது வந்




"என்ன டெய்லர், மீதி துணி கேட்டா... ஸ்வீட் தர்றீங்க...!"...?...

"எனக்கு... குழந்தை பிறந்திருக்கு"...



ஆசை பொங்கும் வெள்ளங்களே
அன்பு பொழியும் நெஞ்சங்களே
பாசத்தேவன் பிள்ளைகளே
பழகும் வெள்ளை அன்னங்களே...
—படம்: 'தசரதனுக்கு 9 பெண்கள்'
பானு-மம்து

தால்தான் தங்கச்சிக்குத் திருமணம் நடத்தலாம்ன்னு நினைக்கிருங்க"

"சொல்ல வேண்டியது தானே நீங்க. அவளும் வேலை பார்க்கிற பெண் தாம்மா என்று"

"சொன்னேன். இருபத்தைந் தாயிரமும் கொடுத்து வேலை பார்க்கிற பெண் ரெடியா இருக்கிறதா அவங்க சொல்ருங்க"

"ஆமாமா, நீங்க பி.எச்.எல்லிலே எஞ்சினியர் இல்லையா?"

"கிண்டலாப் பேசாத கலா. லெட் அஸ் பி பிராக்டிகல்"

"அப்ப இவ்வளவு நாள் என்னிடம் காதல், அன்புன்னு பேசியது..."

"இப்பவும் உன் மேல் அன்பில்லைன்ஞு சொல்றேன். மனுஷனுக்கு கடமைன்னு இருக்கிறதா பெரியவங்களே சொல்லலியா?"

"என்ன கடமை? காதலித்த பெண்ணைக் கைவிடாமல் இருப்பதும் ஒரு ஆணின் கடமைதான். பெற்றோருக்கும், கூடப் பிறந்தவங்களுக்கும் செய்கிற கடமையினைப் போல இதுவும் ஒரு கடமைதான்னு நம்ம பெரியவங்க சரியா எழுதி வைக்கவில்லை போல. இன்னிக்கு ஒரு காதலி போய்விட்டாலும், நாளை உங்களைப் போன்றவர்களுக்கு எத்தனை மனைவிகள் வேண்டுமானாலும் கிடைப் பாங்க. அதனுல காதலித்தவளைக் கல் யாணம் செய்வது கடமையின்னு தோணலை..."

"நீ வேணும்னு உங்க வீட்டிலே கேட்டுப் பாரேன்"

பஸ் திருச்சி மண்ணை எப் போதோ கடந்து விட்டிருந்தும் அவன் கேட்டது மட்டும் மனத்தில் ஒட்டிக் கொண்டிருந்தது. 'நீ வேணும்னு கேட்டுப் பாரேன்' அவளின் பெற்றோர் ஒருவேளை அவளுக்காகத் தங்கள் உயிரைக் கூட அடகு வைத்து இருபத்தைந்தாயிரம் தரலாம். ஆனால் அவளுக்கு நம்பிக்கைத்

துரோகம் செய்யலாம் என்ற நினைவு என்று அவன் மனத்தில் தோன்றி விட்டதோ, அதன் பின்னர் எப்படி அவனை நம்புவது? நம்பிக்கைத் துரோகம் மட்டும் வித்தாக மனத்தில் விழுந்த கணமே ஆலமரம் போல் தலைவிரித்தாடுகிறதே. இன்று அதன் கொப்பினை வெட்ட இருபத்தைந்தாயிரம் போதும். ஆனால் வேருடன் மரத்தினைப் பிடுங்க அவளால் இயலாது. அவளால் மட்டுமென்ன? இறைவனுக்கே இயலாதோ? இருந்திருந்தால் ஒரு யூதாஸ் காரியோத்து உருவாகியிருப்பானா?

ஊர் வருவதற்குச் சிறிது தூரம் வருமுன்னே பஸ் அனைவரையும் இறக்கி விட்டது.

எங்கும் வெள்ளம். ஜில்லென் குளிர்ந்த நீர். 'நானாவது உன்னைக் கொஞ்சுகிறேன்' என்று அலையலையாக அவளைத் தொட்டு ஓடியது. மீண்டும் மீண்டும் அவள் கால்களில் மோதியது. 'அப்பப்பா எவ்வளவு தண்ணீர்' மனம் மயங்கியது. அவள் மனத்தில் ஏற்பட்டிருந்த சோகம், வேதனை எல்லாம் அந்தத் தண்ணீரில் கரைந்தோடிய உணர்வு. நம்பிக்கைத் துரோகத்தினால் அடிபட்ட அந்த மனத்தின் ஆழமான ரணங்களை அந்தக் குளிர்ந்த நீர் மென்மையாகக் கழுவி விட்டதை உணர்ந்தாள். 'எப்படி இந்த நீரைக் கடந்து வீட்டிற்குச் செல்வது' என அவள் யோசிக்கையில் 'மிஸ்' என்ற குரல் கேட்டுத் திரும்பினாள்.

அந்த இருட்டிலும் பளபளக்கும் கண்கள். இந்துமதியின் கதைகளில் வரும் ஹீரோவைப்போல வெள்ளை வெளேரென்று உயரமாக இருந்தான். இவள் மிகவும் கஷ்டப்பட்டு ஒருகையில் குடையுடனும், தோளில் மாட்டிய பையுடனும், தண்ணீரில் நனையக் கூடாதென்று மறுகையால் சேலையைத் தூக்கிப் பிடித்தவாறு திண்டாடுவதைப் பார்த்து, "மிஸ், மே ஐ ஹெல்ப் யூ?" என்று கேட்டான்.

அவனை நிமிர்ந்து, ஆழமாக, தீர்க்கமாகப் பார்த்தாள். இவன் மனத்திலும் அந்த ஆர்க்கெஸ்டிரா அழகன் போல ஒரு ராஜா இருக்கலாம் அல்லது ஒரு ரவி இருக்கலாம். 'மே ஐ ஹெல்ப் யூ' என்று கேட்டு, இருட்டிலே துணையாக வந்து, பின் 'உங்க பேரென்ன மிஸ்?' என்று விசாரித்து, பிறகு தற்செயலாக வருவது போல் அலுவலகத்திற்கும் வந்து, தொடர்ச்சியான சந்திப்புகளில் 'எனக்கும் உங்க மாதிரியே ஓ'நீல் பிடிக்கும், ஃபிராஸ்ட் பிடிக்கும், மழையில் நனையப் பிடிக்கும் என்று பேசி, ஒரு நாள் ஐ லவ் யூ என்று உருகி, 'உன்னைப் போல யாரும்மா கிடைப்பா எனக்கு?' என்று வசனம் பேசி — திருமணம் என்றவுடன் திடீரெனப் பல்டியடிக்கும் சதை போர்த்திய எலும்புக் கூடுகள்' — அவனைப் பார்த்து விட்டு ஏதும் சொல்லாமல் நடக்க ஆரம்பித்தாள்.

ஒரு 'நோ, தேங்யூ' சொல்லியிருக்கலாமோ என்று நினைத்தாள். தேவையில்லை. பெண்களை மயக்குவதற்காக மின்மினிப் பூச்சிகளைப் போல 'பளிச்'சென வேடமிட்டுத் திரிபவர்கள். இவைகளுக்கு உண்மையான ஒளியும் இல்லை. வெப்பமும் இல்லை. இவர்களிடத்தில் நெஞ்சுரமும் இல்லை, ஆண்மையும் இல்லை.

குடையினை மடக்கிப் பையினுள் வைத்தாள். சேலையினைச் சிறிது தூக்கிப் பிடித்தவளாய் மழை தூறுவதையும் பொருட்படுத்தாது, நிதானமாக இருளில் கரைய ஆரம்பித்தாள்.





"என் பெண்டாட்டிக்கு கோபம் வந்துச்சுன்னா ஒரு குடம் தண்ணியை அவ தலையிலே ஊத்திக்குவா, கோபம் அடங்கிடும்!"

"ஹும்... உன் பெண்டாட்டி பரவாயில்லை. என் பெண்டாட்டிக்கு கோபம் வந்துச்சுன்னா ஒரு குடம் தண்ணியை என் தலையிலே ஊத்தினாத்தான் அவ கோபம் அடங்கும்!"

—பாதுஷா

# குண கூந்தல் தைலம்

(GUNA-MEDICATED PERFUMED HAIR OIL)



தலைமயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்குத் தேய்த்து வந்தால் தலைமயிர் நீண்டு கருத்து அடர்த்தியாய் வளரும். மண்டையில் சொரிந்தால் செதில் உரிதல், தலை அரிப்பு, பொடுகு, குணமாகும்.

1 பாட்டில் விலை ரூ. 15. V.P.P. உண்டு. தபால் செலவு இல்லை.

**நவசக்தி வைத்தியசாலை**

தபால் பெட்டி எண் 7, சேலம்-636 001

BANU

குண கூந்தல் தைலம் கிடைக்குமிடங்கள் :

1) ரோலக்ஸ் மெடிக்கல்ஸ், சேலம். 2) கஸ்தூரிபா மெடிக்கல்ஸ், நாமக்கல். 3) முத்து மெடிக்கல்ஸ், ஆத்தூர். 4) ஷண்முகா மெடிக்கல் ஹால், திருச்சி. 5) மூர்த்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ், ஹோசூர். 6) கோபாலகிருஷ்ண மெடிக்கல் ஸ்டோர்ஸ், கிருஷ்ணகிரி.

# நீரிழிவு நோயா? கவலை வேண்டாம்!

மூலிகை மருந்துகளால் சிகிச்சை பெற ஆலோசனைக்கு நேரிலோ தபாலிலோ தொடர்பு கொள்ளவும்.



## இல்வாழ்க்கையில் சோர்வா ?

நரம்பு பலவீனங்களை விசேஷ சிகிச்சை மூலம் நரம்பை சரிபடுத்தி நிவர்த்தி செய்கிறோம்! குழந்தை பாக்கியம் இல்லாதவர்கள், தூக்கத்தில் ஸ்கலிதம், தளர்ச்சி, உடல் பலஹீனம், உஷ்ணஸ்கலிதம், கை, கால் அசதி ஆண், பெண் ரகசிய நோய் (V.D.) உறுப்பு வளர்ச்சிக் குறைவு, படை, பத்து

உங்கள் பிரச்சனைகள் நீங்க, ஆலோசனையும், சிகிச்சையும் பெற
டாக்டர் K. R. ஜெயசிங்

**J. P. கிளினிக்**

1, தாயார் சாகிப் தெரு, மார்க்கட் லேன் (அலங்கார் தியேட்டர் பின்புறம்)
மவுண்ட் ரோடு, சென்னை-600 002. போன் 86877

# ஞானகூஷி ஸ்ரீ ராஜராஜேஸ்வரி

ஜெ. சோமு



அம்மா தாயே ஞானகூஷி
அருள்வாய் காஞ்சி காமாகூஷி
அன்பாய் என்னை ஆதரித்து
அல்லல் களைந்து காப்பாற்று
அன்னை தேவி பராசக்தி
என்னைப் படைத்தது உன் சக்தி
வாழ்வைத் தந்து வளம் தந்து
வாழ்க்கைக் கடலின் கரையேற்று
தில்லைச் சிதம்பரம் பத்தினியே
நெல்லையில் வாழும் உத்தமியே
திருவடிமலரினைத் தொழுதிடுவேன்
திருவருள் புரிந்தெனைக் காப்பாற்று
ஓங்காரப் பொருள் நீதானே
உலகம் என்பதும் நீதானே
காணும் இயற்கைக் காட்சிகளும்
காற்றும் மழையும் நீதானே
அம்மா தாயே உனைவேண்டிய
அழுதிடும் என்னைத் தாலாட்டி
அன்புடன் ஞானப் பாலூட்டி
அகத்தின் இருளைப் போக்கிடுவாய்
உள்ளக்கோயில் உன்கோயில்
உயிரும் மூச்சும் உன்வடிவம்
பேச்சும் செயலும் உன் செயலே
பெருகட்டும் உன் பேருளே.

# கழுதைகளும், குதிரைகளும்



ஜோதிர்லதா கிரிஜா

தினகரன், அலுவலகத்தையடைந்தபோது மணி பத்தேகால் ஆகிவிட்டது. கிளம்பியதென்னவோ எப்போதும் போல் ஒன்பது மணிக்குத்தான். இன்று எதனாலோ அவன் வந்து சேர்ந்த போது பத்தேகால் ஆகிவிட்டிருந்தது. எப்போதும் அதிகமாய்ப் போனால் பத்து அல்லது பத்து ஐந்துக்குள் வந்து சேர்ந்து விடுவான். இன்று பேருந்தில் ஏகக்கூட்டம். தவிர தெருக்களிலும் வழக்கத்தை மீறிய போக்குவரத்து. நடத்துநரும் புதுசு. வண்டிச் சத்தம் எவ்வளவு என்பது கூடத் தெரியாமையால் அவ்வப்போது பயணிகளையே காசு எவ்வளவு என்று கேட்டுக் கேட்டுச் சீட்டுக் கிழித்துக் கொடுத்தார். இத்தனை காரணங்களும் ஒன்றாகச் சேர்ந்து அவனது வருகையைத் தாமதப் படுத்திவிட்டன.

எப்போதும் உரிய நேரத்தில் வந்து என்ன பயன் என்ற சலிப்பு ஏற்பட்டது. எப்போதுமே தாமதமாக வந்து அலுவலரிடம் திட்டு வாங்கும் வழக்கமுள்ள ராமசேஷன் இன்றைக்குப் பார்த்துச் சீக்கிரம் வந்திருந்தான். ஏன்? எல்லோருமே வந்திருந்தனர். அவனைத் தவிர. நல்ல வேளை தலைமை எழுத்தர் காணப்படவில்லை. ஆனால் வந்துவிட்டு எழுந்து போயிருந்தது மேசை மீது திறந்து வைக்கப் பட்டிருந்த பேனாவிலிருந்தும் மூக்குக்கண்ணாடி உறையிலிருந்தும் தெரிந்தது.

வருகைப் பதிவேட்டில் குறுக் கொப்பத்தைப் போட்டுவிட்டு அவன் வேர்க்க விறுவிறுக்கத் தன்னிருக்கையில் போய் உட்கார்ந்து கொண்டான். எல்லார் கண்களும் தன் மீது படிந்ததைத் தலை உயர்த்திப் பார்க்காமலே அவனால் தெரிந்து கொள்ள முடிந்தது. முக்கால் வாசிப் பேர் முகங்களில் புன்னகை—கேலிப் புன்னகை—தவழ்ந்ததாக அவன் எண்ணினான்.

'எப்போதும் தாமதமாக வந்து திட்டு வாங்குகிறவர்கள், என்றைக்காவது அபூர்வமாகத் தாமதமாய் வருபவர்களைப் பார்த்துச் சிரிக்க வேண்டியது தானே? அதை விட்டால் அப்புறம் என்னைப் பார்த்து நக்கலாகச் சிரிப்பதற்கு வேறு சந்தர்ப்பம் கிடைக்காமல் போய்விடுமே, இவர்களுக்கெல்லாம்?' என்று தனக்குள் நினைத்தவாறு தினகரன் மேசையைத் தூசுதட்டி விட்டுத் தன்னிருக்கையில் உட்கார்ந்து வேலையைத் தொடங்குவதற்கான ஆயத்தங்களைச் செய்யலானான்.

வலப்பக்கத்துப் பத்மநாபன், "என்ன? லேட்டா?" என்று விசாரித்த குரலில் ஒலித்த கேலி அவனைத் தாக்கியது. அவன் பக்கவாட்டில் கழுத்தை ஒடித்துத் திருப்பிப் பார்த்து, "ஆமா... நீங்கள்ளாம் ரொம்ப சீக்கிரம் வந்துட்டாப்ல இருக்கு? நான் லேட்டா வந்ததுக்கும் நீங்கள்ளாம் சீக்கிரம் வந்ததுக்குமாச் சேர்த்து இன்னிக்கு மழை பெய்யும்னு நினைக்கிறேன்" என்று தானும் நக்கலாகவே பதில் சொன்னான். தான் சொன்ன பதில் எல்லார் காதுகளிலும் விழும் வண்ணம் இரைந்து பேசினான். பேசிக் கொண்டே பார்வையை ஞாபகமாக நாற்புறங்களிலும் சுற்றினான்.

எல்லார் கண்களுமே கணம் போல் தாழ்ந்து பின்னர் நிமிர்ந்ததையும் முகங்களில் அசடு தட்டியதையும் மனத்தில் வாங்கிச் சிரித்துக் கொண்டான்.

"ஏம்ப்பா அப்படிப் பேசறே...? எப்பவும் நீ சீக்கிரம் வர்றது எங்களுக்குத் தெரியாதா என்ன? அதனாலே தான் இன்னிக்கு லேட்டா வர்றியே, என்ன இடைஞ்சலோன்னு அனுதாபமா விசாரிக்கிறோம். அதுக்கு ஏம்ப்பா சுர்ர்ர்...னு பதில் சொல்றே?" என்று எதிர் இருக்கை ரங்கமணி சற்று ஆத்திரமாகச் சொன்னான்.

"ஓ... அனுதாபமாவா கேட்டாரு? எனக்குப் புரிஞ்சுக்குற சாமர்த்தியம் இல்லேங்கிறது உங்க எல்லாருடைய நினைப்புமா? என்னிக்கும் பங்க்சுவலா வர்ற நான் என்னிக்காவது நீங்கல்லாம் லேட்டா வர்றதைப் பத்தி கமென்ட் அடிச்சதுண்டா? கேலி பண்ணினது உண்டா? என்னிக்கோ ஒரு நாள் லேட்டா வந்திட்டதுக்கு ஏன் கிண்டலாச் சிரிச்சுக்குறீங்க, ஒருத்தரை ஒருத்தர் பார்த்து? எனக்குப்புரியாதுன்னு நினைக்க வாணாம். அடிக்கடி லேட் கமிங்க்காக வசவு வாங்குற உங்களுக்கு என் மேல பொறாமை. அதனாலதான் ஒரு நாள் லேட்டா வந்துட்ட என்னைப் பார்த்து உங்களுக்கெல்லாம் சந்தோஷம்?"

படபடவென்று பொழிந்து தள்ளி விட்டு அவன் கோப்பு ஒன்றை எடுத்துப் பிரித்து முன்னால் வைத்துக் கொண்டு புரட்டத் தொடங்கினான். அவனது

இரைந்த, படபடப்பான பேச்சு அங்கே ஓர் இறுக்கமான மவுனத்தை விளை வித்தது.

'திருட்டுப்பசங்க. தெனமும் லேட்டா வர்ருங்க. தெனமும் திட்டு வாங்கருங்க. இன்னிக்கு இன்ஸ்பெக்ஷன் குறதுலை சீக்கிரம் வந்துட்டு என்னைக் கேலி பண்ற மாதிரிக் கேள்வி கேக் கருங்க. அனுதாபமாம், அனுதாபம். யாரு கிட்ட காது குத்தருங்க...? என் தலையெழுத்து, இன்னிக்குப் பார்த்து நான் லேட்டா வந்து தொலஞ்சேன்...'

'இன்ஸ்பெக்ஷன் பார்ட்டி வந்தாச்சா?' என்று விசாரிக்க முடியாமற் போயிற்று.

ஒரேயடியாக எல்லாரும் சேர்ந்து கொண்டு அவனை மட்டந்தட்டிவிட்டது தப்புத்தான் என்று காட்டிக்கொள்ள விரும்பியவன் போல், "பஸ் கிடைக் கல்லேயா, தினகரன்?" என்ற குரலில் ஒரு செயற்கையான அனுதாபத்தை வர வழைத்துக்கொண்டு, இடப் பக்கத்து இருக்கைக்காரன் தாமோதரன் விசாரித் தான்.

அந்த நேரத்தில் யாராவது தன்னுடன் தோழமையுடன் பேசினால் தேவலே என்றுதான் தினகரனுக்குத் தோன்றியது. ஆய்வுக்குழு வந்து விட்டதா, எங்கே தங்கியிருக்கிறது, தலைமை எழுத்தர் குழுவைச் சந்திக்கத் தான் எழுந்து போயிருக்கிருரா, தன்னைத் தேடினரா, பத்துமணிக்குப் பிறகு போருரா அதற்கும் முன்னமேயா என்றெல்லாம் கேள்விகள் கேட்கத் துடித்துக்கொண்டிருந்த தினகரனுக்குச் சற்று அப்பாடா என்றிருந்தது. தாமோதரன் தன்னிடம் அடிக்கடி கைமாற்று கேட்டு வாங்குகிறவன் என்பதாலும், தன் மனக்கசப்பைத் தேடிக் கொள்ள விரும்பாமலே அவன் போலியான நட்புணர்ச்சியுடன் பேசி ஞன் என்பதும் புரிந்த போதிலும், அந்த நேரத்துக்கு அவனது தோழமை தேவை யாக இருந்ததால் அவன், "ஆமாப்பா.. அதிலே... அதாவது..." என்று உளறி விட்டு, "புது கண்டக்டர். இன்னிக்குப் பாத்து ரோட்ல ட்ராபிக் வேற ஜாஸ்தி... கண்டக்டருக்கு ஃபேர் வேற தெரி யல்லே... அதுதான்... மனுஷாளுடைய பொருமையைப் பாத்தியா? தெனமும் லேட்டா வர்றவங்க என்னிக்கோ ஒரு நாளுக்கு வர்றவனை எப்படிக் கேலி பண்ருங்க!" என்ருன்.

சில நொடிகளுக்குப் பிறகு, "அது சரி, ஹெட் கிளார்க் எங்கேப்பா?" என்ருன்.

"வந்துட்டாரு. பத்துக்கு முன்னடியே வந்துட்டாராம். ஆடிட் பார்ட்டியைப் பார்க்கிறதுக்குப் போயிருக் காரு. இன்ஸ்பெக்ஷன் பார்ட்டி ஃபஸ்ட் ஃப்ளோர்ல எறங்கியிருக்குருங்க..."

"என்னயக் கேட்டாரா?"

"கேட்டாரு."

"எதுஞச்சும் சொன்ஞரா?"

சிறிது தயங்கிவிட்டு, "என்னது இது, இன்னிக்குப் பாத்து தினகரன் வரல்லே? எனக்கும் ஏதோ லேட்டா யிருந்துச்சுன்ஞ, என்ன கதியாறது? அவன் தானே சீனியர் மோஸ்ட் இந்த செக்ஷன்ல? நான் இல்லேன்ஞ எல்லாத்தையும் பாத்துக்க வேண்டியது தினகரன் தானே'ன்னு கொஞ்சம் கத்திஞரு..." என்று தெரிவித்தான்.

"என்னது? கத்திஞரா?" என்று வியப்புடன் கேட்ட தினகரனுக்குக் குரலில் சூடு தெறித்தது.

தாமோதரன் சற்று வருத்த மான குரலில், "ஆமா, தினகரன். கத்தி ஞரு. எனக்குக்கூட எப்படியோ இருந்திச்சு. ஒரு பிச்சைக்காரன் சொன்ஞனமே நெதமும் குடுக்குற மூதேவி இன்னிக்குக் குடுக்கல்லே,

சோவியத் நாட்டில் இப்போது குற்றவாளிகளிடம் நூதன முறையில் ஒப்புதல் வாக்குமூலத்தை வாங்குகின் றனர். அதாவது குற்றவாளியை ஒரு தனி அறைக்குள் தள்ளி, மிகப்பெரிய பாம்பு ஒன்றை அறைக்குள் விடுகின் றனர். பயங்கரமாக சீறி எழும் பாம்பை பார்த்த கைதி அலறித் துடித்து பாம்பிட மிருந்து தப்பிஞல் போதும் என்ற பீதியில் உண்மையை கக்கி விடுகின்ருன். அவன் சொல்வதை அப்படியே டேப்ரிக்கார்டரில் பதிவு செய்து கொள்கின்றனர். காவற் துறையினர் போலீஸாரால் பழக்கப் படுத்தப்பட்ட அந்த பாம்பு சீறுமே தவிர கடிப்பதில்லையாம். இதைத் தெரிந் தால் உண்மை வருமா?

—திசை.முத்து

# கராத்தேக்கு ஒரு கைலாசபதி



இந்திய தபால் தந்தித்துறையில் முதன் முதலாக கராத்தேயில் கறுப்புப் பட்டை வாங்கியவர் இவர்.

இலங்கையைச் சேர்ந்த ஐந்து கறுப்புப்பட்டை பெற்ற திரு.போனிராபர்ட்டின் மாணவரான இவர், சென்ற பிப்ரவரி மாதம் நடத்திய பன்னாட்டு கராத்தே போட்டியில் பங்கேற்றும் சிறப்புப் பெற்றிருக்கிறார்.

ஏழாண்டுகள் இத்துறையில் பயிற்சி பெற்று இருக்கும் இவரின் லட்சியம் 'கராத்தே' பயிற்சியை வசதி படைத்தவர்கள் மட்டுமே கற்கும் நிலை மாறி, வசதியற்றவர்களும் கற்கும் வாய்ப்பைப் பெற வேண்டும்' என்கிறார்.

'சோட்டோ காய்' கராத்தே முதன் முதலாக தமிழகத்தில் இவர் மூலம்தான் உயிர் பெற்று இருக்கிறது என்பதை அறியும் போது நமக்குப் பெருமையாக இருக்கிறது.

—சோனியா

(படத்தில் உதைப்பவர் கைலாசபதி.)

---

ஒரு நாளும் குடுக்காத மகராசி குடுத்தா அப்படின்னு. அந்தக் கதைதான் ஞாபகம் வந்தது. நெதமும் நீங்க பங்க்சுவலா வந்துடறீங்க. நாங்க அத்தனை பேரும் டென்-டென்னுக்கு மேல தான் வர்றோம். ஏன் சில சமயங்கள்ளே பத்தரை, பத்தேமுக்கால்னு கூட அடிக்கடி வந்திருக்குறோம். அப்பல்லாம் முகத்தைக் கடுகடுன்னு வச்சுக்கிட்டு, 'ட்ரை டு கம் அட்லீஸ்ட் ஆன் டைம்'னு சிடுசிடுப்பாரே தவிர; கத்தினது இல்லே. இன்னிக்கு உங்களைப் பத்தித் திட்டிக் கத்தினது அக்கிரமந்தான்'' என்றான்.

''என்ன சொல்றே? திட்ட வேற செஞ்சாரா? என்னன்னு சொல்லித் திட்டினாரு?''

''நீங்க தெரிஞ்சதாய்க் காட்டிக்கக் கூடாது. ப்ராமிஸ்?''

''ப்ராமிஸ்... சும்மா சொல்லுப்பா தாமோதரன்.''

''சமயம் பாத்துக் கழுத்தை அறுக்கறானே. நானும் இன்னிக்குப்பாத்து லேட்டா வந்திருந்தா என்ன ஆகியிருக்கும்? இன்ஸ்பெக்ஷன் பார்ட்டி என்ன நினைப்பான்? அவங்க வந்து எதுனாச்சும் கேட்டாங்கன்னா பதில் சொல்றதுக்கு அட்லீஸ்ட் சீனியர் மோஸ்ட் க்ளார்க்காவது செக்ஷன்ல இருக்க வாணாமா? அவன்கன்னா பின்னான்னு எழுதி வெச்சுட்டா என்னையா பண்றது? வரட்டும் அந்தாளு..அப்படின்னு கூப்பாடு போட்டாரு...எப்பவும் லேட்டா வர்றவங்கள்லாம் இன்னிக்குப் பார்த்துப் பத்துக்கு முன்னாடியே வேற வந்துட்டாங்க''என்ற தாமோதரன் பிறகு குரலைத் தணித்துக் கொண்டு, 'அது மட்டுமா? 'ஏதோ நீங்கல்லாமாவது வந்திருக்கீங்களே — என் காலை வாரி விடாம' அப்படின்னு எங்களைப் பாத்துச் சொன்னாரு. 'ரொம்ப தாங்க்ஸையா உங்களுக்கெல்லாம் அப்படின்னாரு...'' என்று முடித்தான்.

தினகரனின் மூக்கு முனை சிவந்தது. 'நீ சொன்ன பிச்சைக்காரன் கதைதான். தெனமும் நேரத்துக்கு வந்துக்கிட்டிருந்ததுக்கெல்லாம் மதிப்பே இல்லாமப் போயிருச்சே?'' என்று கசப்பும் வெறுப்புமாக அங்கலாய்த்தான்.

''நான் கூடச் சொன்னேன், தினகரன். 'அவர்தானே சார் தெனமும் மொதல்ல வர்றவரு? இன்னிக்குப் பாத்து எதுனாச்சும் தடங்கல் ஏற்பட்டிருக்கும் அப்படின்னு...''

''அதுக்கு என்ன சொன்னாரு?...''

''மத்த நாளெல்லாம் நேரத்துக்கு வந்து என்னையா லாபம்? இன்னிக்கில்லே வரணும்? அதுலயும் எனக்கு அடுத்தபடியான சீனியர்மோஸ்ட் க்ளார்க்காச்சே அவரு? ஹெட்கிளார்க்

குக்கு அடுத்த ஸ்தானமாச்சே? அப்படின்னு என்னய மொறச்சாரு!''

தினகரன் அடிவாங்கியவன் போலானுன். இத்தனைக்கும் முதல் நாள் எல்லாரும் இரவு எட்டு மணிவரையில் தங்கித் தங்கள் கோப்புகளைச் சரிசெய்து வைக்க வேண்டிய அவசியத்தில் எல்லா வற்றையும் ஒழுங்கீனமாகவும் அரை குறையாகவும் வைத்துக் கொண்டிருந்த போது, அவன் மட்டும் ஐந்துக்கே கிளம்பக்கூடிய துப்புரவான முறையில் தனது இருக்கைக்குரிய வேலைகளை முழுமையாக வைத்திருந்தான், இதனுல், தலைமை எழுத்தரின் வேண்டுகோளுக் கிணங்க அவன் தனக்கென்று இல்லாமல் அவருக்காகவே ஏழு வரையில் அலுவல கத்தில் தங்கி மேற்பார்வை வேலையில் அவருக்கு உதவியாக இருந்துவிட்டுப் போனவன். இவ்வளவெல்லாம் செய்தும் கடைசியில் ஒழுங்கீனமும், நேரத்துக்கு அலுவலகம் வருவது என்பதை ஒரு போதும் கடைப்பிடிக்காமையும், வேலை செய்யச் சோம்புதலும், வேலையைக் கற்றுக் கொள்ளும் ஆர்வமின்மையும் கொண்ட மூன்ருந்தர ஊழியர்களுக்கு முன்னுல் தன்னைத் திட்டிவிட்ட தலைமை எழுத்தரின் மீது அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

அலுவலரின் அறையில், ஆய்வுக் குழுவுடன் இருந்த தலைமை எழுத்தர் பதினெரு மணிக்கு அவனுக்குச் சொல்லி யனுப்ப, அவன் போனுன். அங்கேயே அன்று முழுவதும் தங்கி மவுனமாக உதவிகள் செய்தான். தலைமை எழுத்தர் அவனுடன் அலுவலக ரீதியாகப் பேசிய போதிலும் முகத்தில் அதிருப்தி குடி கொண்டிருந்ததைக் கவனித்தான்.

வீட்டுக்குப் போனதும், எல்லா வற்றையும் மனைவியிடம் சொல்லிக் குமுறிவிட்டு, ''இனிமே நீ ஒம்பது மணிக்கு எனக்குத் தட்டு வெச்சாப் போதும். எல்லாரையும் போல நானும் ஒன்பதே முக்கால் பஸ்ஸைப் பிடிச்சுப் பத்தே காலுக்கு மேலே போறேன், ஆபீசுக்கு. என்ன செஞ்சிருவான் அந்த ஹெட் கிளார்க்? தலையையா வாங்கிரு வான்? இன்க்ரிமென்டையா தடுப்பான்? அதொண்ணுமில்லே. கவர்மெண்ட் ஆபீசுல கழுதைக்கும், குதிரைக்கும் ஒரே சம்பளம்தான். ஒரே ப்ரொமோஷன் தான். வேலை செஞ்சாலும் சரி, செய் யாட்டியும் சரி. இனிமே நீ நிதானமாச் சமையல் செய்யி'' என்று அறிவித்தான்.

மனைவி சரோஜா, ''இப்பவாச்சும் அந்த ஞானேதயம் வந்திச்சே உங்க ளுக்கு? எத்தின நாளா நானும் சொல் லிக்கிட்டிருக்குறேன்—இப்படி மாடு கணக்கா வேலை செய்யாதீய, செய்யாதீ யன்னு? என்னமோ ஆபீசே உங்க ளாலதான் நடக்குற மாதிரி எத்தின நாளு எட்டுக்கெல்லாம் கூடப் போயிருக்

---

## ஒரு மைல் ஓடும் வாத்துகள்



ஒவ்வொரு ஆண்டும் இத்தாலியர்கள், எப்பொழுது வாத்துக்களின் ஓட்டப் பந்தயம் நடைபெறும் என்று மிக ஆவலுடன் காத்துக் கொண்டிருப்பார்கள்.

மிலானில் நடைபெறும் நன்கு பழக்கப்பட்ட நூற்றுக்கணக்காக வாத்துக்கள் கலந்து கொள்ளும் இந்த 'டக்ரேஸில்' வெற்றி பெறும் வாத்தின் உரிமையாளருக்கு வெள்ளிக் கப்பும், வெற்றி பெற்ற வாத்திற்கு ஒரு கப் சோளக்கதிர் மணிகளும் பரிசாக வழங்கப் படுகின்றன. பந்தயத்தில் மெல்லிய சிறிய வண்டியை இழுத்துக் கொண்டு ஓடும் இந்த வாத்துக்கள் இடையில் பறந்தால் உடன் தோற்றதாக அறிவித்து போட்டியிலிருந்து விலக்கப்படும்.

ஆண்டுக்கு ஒருமுறை நடக்கும் இந்த டக் ரேஸில் வாத்துக்கள் ஓட வேண்டிய தூரம் ஒரு மைல்.

குதிரைப் பந்தயத்தைப் போல், வாத்துக்களின் மேலும் லட்சக்கணக்கில் பந்தயப் பணம் கட்டுகிருர்கள் பார்வையாளர்கள்.

—ரூபாவதி



தமிழின் மகளே வருக—எங்கள்
தாய்க்குலமே நீ வருக
அமுதாய் அன்பைத் தருக—எங்கள்
அகமும் பாகாய் உருக...

படம்: 'தாய்க்குலமே வருக'
மனோரமா-ஐ.எஸ்.ஆர்.

கீங்க? என்ன பெரயோசனம். கடைசியிலே தெனமும் தப்புப் பண்ணிக்கிட்டிருக்குற சோம்பேறிக் கழுதங்க முன்னாடி அவமானப்படுத்திப் பேசிட்டானே அந்தாளு?" என்றாள்

ஆய்வுக்குழு ஒரு வாரம் போல் அலுவலகத்தில் தங்கித் தனது வேலையை முடித்துவிட்டுக் கிளம்பிப் போயிற்று...

அந்த ஒருவாரம் முழுவதும் பத்துமணிக்கு அலுவலகத்துக்கு வந்து கொண்டிருந்த எல்லாரும், "அப்பாடா இன்ஸ்பெக்ஷன் ஒழிஞ்சுது சனியன். இனிமே நிதானமா ஆபீசுக்கு வந்து போகலாம். விழுந்தடிச்சுப் பத்துக்கெல்லாம் வரவேண்டியதில்லே" என்று விடுதலைப் பெருமூச்சைப் பகிரங்கமாக விட்டார்கள்.

மறுநாள் காலை வழக்கம் போல் ஆறுக்கெல்லாம் எழுந்து கொண்ட தினகரன், எட்டேகாலுக்குச் சமையலறையில் எட்டிப் பார்த்து "என்ன சரோ? சாப்பிட வரலாமா?" என்று கேட்ட போது, "அதான் இன்ஸ்பெக்ஷன் முடிஞ்சு போயிருச்சுன்னிங்களே? நிதானமாப் போகப் போறதா அன்னிக்குச் சொன்னீய? எட்டேகாலுக்கே என்ன கொள்ளை?" என்றாள்.

"இல்லே. சரோ. நீ வழக்கம் போலவே தட்டு வை. நான் ஒன்பது மணி பஸ்ஸையே பிடிச்சுப் போயிர்றேன். அந்தக் கழுதைங்களோட எனக்கென்ன போட்டி?" என்று அறிவித்த அவன் தலைசீவிக் கொள்ள அவசரமாக ஓடினான்.

"ஆமாமா. நீங்கதான் குதிரையாச்சே?" என்று முணுமுணுத்தவாறு சரோஜா அடுப்பின் திரியைத் தூண்டிப் பெரிதாக்கினாள்.

எட்டே முக்காலுக்குச் சாப்பிட்டு எழுந்த தினகரன் உடை உடுத்துக் கொண்டு சரியாக எட்டு ஐம்பதுக்குப் படியிறங்கி வேகு வேகென்று அருகில் இருந்த பேருந்து நிறுத்தத்தை யடைந்து சரியாக ஒன்பது மணிக்குப் பேருந்தின் படிகளில் ஏறினான்.........

●

'பொன்னன்' மணமானவன்! ஆண்—பெண் குழந்தைகள் இரண்டும் உண்டு. அவன் மனைவி மல்லிகா அழகி அல்லவென்றாலும் அருவருக்கத்தக்க உருவத்தாள் அல்ல...! நிறம் பொன் மேனியுமல்ல... நாவற்பழ நிறமுமல்ல! இளஞ்சிகப்பு!

தன்னை அலங்கரித்துக் கொள்வதில் உள்ள ஆர்வத்தைவிட கணவனுக்குச் சுவையானதைச் சமைத்து உண்ணச் செய்வதில்தான் அதிக ஆர்வங்காட்டுவாள்! சுருங்கச் சொன்னால் மல்லிகா குடும்பத்திற்கேற்ற குலமகள்!

பொன்னன் கண்கள் அழகைத் தேடும்! மல்லிகாவின் கண்கள் அன்பைத்தேடும்!

அவன் நெஞ்சம் சபலத்தால் ஆடிக்கொண்டிருக்கும்! அவள் மனம் கடமையை வற்புறுத்திக் கொண்டிருக்கும்!

அவனோ மல்லிகையைக் கையில் வைத்துக் கொண்டு 'ரோஜா' கிடைத்திருந்தால் எப்படியிருக்கும் என்று கற்பனை செய்கிறவன்!

அவள் கையில் கிடைத்தது மருக்கொழுந்துதான்! அதை வெறுக்கவில்லை! அதன் மணமே போதுமென்று இதயக்கதவுகளை இறுகத் தாளிட்டு விட்டாள்!

பொன்னன் வாணிப வேலையாக சென்னை சென்று பத்து நாள் தங்க வேண்டியதாயிற்று! கடல் அலை போல் அவன் மனம் ஓயாது அலைந்தவண்ணமிருந்தது!

வேலையில்லா நேரமெல்லாம் பாதையோரத்தில் நின்று பேருந்துகளில் ஏறிப்போவதும். இறங்கிப் போவதுமாயுள்ள பெண்களை நோட்டம் விட்டவாறே நின்றான்.

இவனைக் கண்டான் தரகன் ஒருவன்! ஆளைப்பார்த்ததும் புரிந்து கொண்டான்!

தரகன் தன் வலையை விரித்தான்! பொன்னன் வலையைப் பலமாகப் பற்றிக் கொண்டான்!

தரகன் தொழில் அவன் எதிர்பார்த்ததைவிட எளிதில் முடிந்தது! தரகன் பின்னால் பொன்னன் நடந்தான்!

இருவரும் ஒரு வீட்டிற்குள் நுழைந்தனர்! தரகனுக்கு வரவேற்பு நல்கிய பெண், பொன்னனை 'தம்பி' என்ற உறவு முறை போட்டு அழைத்தாள்!

உடன் பிறந்த சகோதரிகள் காட்டாத பாச உணர்வைக் கண்டான் பொன்னன்! பாவம்...ஜிகினா தகட்டின் பளபளப்பில் மயங்கினான்!

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பெண் அவன் எதிரில் நடந்து வந்து ஏதோ தேடுவது போல்தேடி எதையோ எடுத்துச் சென்றாள்!

தரகன் மெல்ல பொன்னனை இடித்து "பார்த்தாயா?" என்று கண்களால் கேட்டான்! பொன்னன் திருப்தியைத் தெரிவித்தான்!

பணம் கை மாறியது! பொன்னன் இடம் மாறினான்!

தாளிட்ட அறையுள் நடந்து வந்தது தளிர்க்கொடி!

மஞ்சள் மேனியைச்சுற்றி அவள் உடுத்தியிருந்த அரக்கு வண்ணச்சேலை அவன் கண்களுக்கு வெறியை ஊட்டியது!

அவள் ஆடைகளை ஒவ்வொன்றாய் கழற்றி எறிந்தாள்! இறுதியாகப் பிறந்த மேனியோடு கட்டிலில் சாய்ந்தாள்!

# ஒரு குறள் சிறுகதை

வெறியுணர்வோடு அவளை மீதுத் தாவினான்! வளைத்துப் பிடித்துத் தன் வெறியுணர்வு தணியும் மட்டில் கட்டிப் புரண்டான்...! ஒட்டி உடல் உறவுங் கொண்டான்!

எழுந்தான்! தன் ஆடையைச் சரி செய்து கொண்டு வெளியேறினான்!

இவன் வருகைக்காக தரகன் காத்திருந்தான்!

"எப்படியிருந்தது" என்றான்.

பொன்னன் "சரியான பாடம் பெற்றேன்" என்றான்!

"என்ன?" என்றான் தரகன்!

"பொருளையே விரும்பும் பொது மகளிரின் பொய்யான தழுவல், இருட்டறையில் தொடர்பில்லாத ஒரு பிணத்தைத் தழுவினாற் போன்றது" என்று கூறி பொன்னன் போய் விட்டான்! வள்ளுவர் இதனை:—

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ அற்று"

என்று எழுதினார்.



# ஹதீஸ்

## ஹிஜ்ரி சிந்தனைகள்!

நபிகள் நாயகம் அவர்கள் சொன்னவை, செய்தவை, ஒப்புதல் அளித்தவை, பதிவு செய்யப்பட்டன. அப்படிப் பதிவு செய்யப்பட்ட வாய் மொழிகள், வழி முறைகளின் தொகுப் புக்குப் பெயர் ஹதீஸ்.

இந்த ஹதீஸ் நல்லுரைகளும், நடைமுறைகளும் திருக்குர்ஆனுக்கு விளக்கவுரையாகவும், செயல் விளக்க மாகவும் அமைந்தவை.

தங்கள் வாய் மொழிகளை நண்பர்களும் அறிஞர்களும் பதிவு செய்து வைக்கும் செய்தி நாயகம் அவர்களுக்குத் தெரிய வந்தது. அந்த வேலையைச் செய்ய வேண்டாம் என்று உடனடியாக உத்தரவு பிறப்பித்தார்கள். என்ன காரணம்?

பதிவு செய்து மக்கள் மனங் களில் பதிய வைக்க வேண்டியது திருக்குர் ஆன் தான். தங்கள் உரை களையும் எழுதி வைக்க ஆரம்பித்தால் வேத வசனங்களுடன் இடைச் செருக லாக அவையும் கலந்து விடக்கூடும் என்று நபிமணி கருதினார்கள். அந்த ஆணையை சஹாபாக்கள் எனப்படும் நபி தோழர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

எனவே, எழுதி வைப்பதற்கு பதிலாக நபி மொழிகளை பதம் பதமாக தங்கள் மனங்களில் பாடமாக்கிக் கொண் டார்கள்.

பிற்காலத்தில் அவற்றை எழுதிக் கொள்வதற்கு நபிமணி அனுமதித்ததாக சில குறிப்புகள் கூறுகின்றன.

அவர்களின் மறைவுக்குப் பிறகு —இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர்— ஆறு லட்சம் நபி மொழிகளும், செயல் விளக்கக் குறிப்புகளும் மக்களிடையே வழங்கி வந்தன. அவற்றில் ஆதார பூர்வமான நல்லுரைகளை அறிஞர்கள் ஆராயத் தொடங்கினார்கள். ஐந்து லட்சத்து 90 ஆயிரத்துக்கு மேற்பட்ட வாய் மொழிகளை அவர்கள் நீக்கிவிட்டு, எஞ்சியவற்றை ஹதீஸ் திரட்டாக எழுதினார்கள்.

ஹதீஸ் நல்லுரைகளின் மாண்பு எத்தகையது?

அமெரிக்கப் பேராசிரியர் ஜேம்ஸ் மிச்னர் சொல்கிறார்:

''முஸ்லிம்களின் உயர்ந்த நாகரிகம் நபிகள் நாயகம் நடத்திக் காட்டிய நல்வாழ்விலிருந்து, நல்லுரை களிலிருந்து வந்தது. உண்ணும் போதோ, ஒரு வேலையைச் செய்யும் போதோ, முதலில், 'அல்லாஹ்வின் திருநாமத்தால்' (பிஸ்மில்லா) என்று கூறிய பின்னரே முஸ்லிம்கள் ஆரம்பிப் பார்கள். அது திருக்குர்ஆனின் ஆரம்ப வாசகம். முஸ்லிம்கள் ஒருவரையொருவர் சந்திக்கும் போது, 'உங்களுக்கு சாந்தி உண்டாகட்டும்' (அஸ்ஸலாமு அலைக்கும்) என்றுதான் முகமன் கூறு வார்கள். தொழுகைக்கு மக்களை அழைப் பதும், அணிவகுத்து சேர்ந்து தொழுவதும் அவர்கள் போதித்தவையே ஆகும்.''

ஒரு முறை, மூசா நபியை விட (மோசஸ்) முகம்மது அவர்களே உயர்ந் தவர்கள் என்று கூறி, யூதர்களைக் கோபமடையச் செய்தார், நபிகள் நாய கத்தின் நண்பர் ஒருவர். இதை அறிந்த நபிமணி, 'நீங்கள் அவ்வாறு கூறியது தவறு. பிறர் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும்' என்று சொன் னார்கள்.

கிறிஸ்துவ பிரதிநிதிகள் சிலர், நாயகம் அவர்களிடம் வந்திருந்தனர். வழிபாட்டு நேரம் வந்த போது, 'உங்கள் வணக்கங்களை இந்தப் பள்ளி வாசலி லேயே நிறைவேற்றிக் கொள்ளுங்கள். இது இறைவனுக்கே உரிய இடம்' என்றார்கள்.

இப்படி எண்ணற்ற நிகழ்ச்சிகள்... வாய் மொழிகள்...

அவற்றின் களஞ்சியமே ஹதீஸ்.

அவை இஸ்லாமிய நெறிமுறை களை விவரிக்கின்றன. எப்படி?

○

ஜே.எம். சாலி.

